அனைத்திந்திய நூல் வரிசை

# கன்னடச் சிறுகதைகள்

தொகுப்பு

ஜி.எச். நாயக்

தமிழாக்கம்

டாக்டர். டி.பி. சித்தலிங்கையா



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# முன்னுரை

## I

கி.பி. 1900-ல் பஞ்செ மங்கேசராயர் (1874-1937) "சுவாசினி" பத்திரிகையில் வெளியிட்ட "பாரத ச்ரவண", "கமலபுரத்து ஒட்டலில்", "நன்ன சிக்கதாயி", "நன்ன சிக்கதந்தெயவர உயில்", கதைகளின் மூலம் புதுச் சிறுகதைகள் வரலாறு தொடங்கியது என்று கூறலாம். பஞ்செ அவர்களின் கதைகள் சமூகம் மற்றும் வரலாற்றைப் பொருளாகக் கொண்டிருக்கின்றன. வரலாற்றுக் கதைகளில் லட்சியம் முக்கியமானது ஆகும். அவர் எழுதிய நான்கு வரலாற்றுக் கதைகளும், வீரப் பெண்மணிகளின் தூய காதல் மற்றும் தீரச் செயல்களைப் போற்றுகின்றன; அந்தப் பெண்மணிகளின் சோக மரணங்களில் முடிகின்றன; அவர்களுடைய பெயர் களையே தலைப்புக்களாகக் கொண்டிருக்கின்றன. பஞ்செ அவர்களின் ஒன்பது சமூகக் கதைகளில் பொருளிலும் விளக்கத்திலும் விஞ்சி நிற்பது நகைச்சுவை. மொத்தத்தில் அவருடைய எல்லாக் கதைகளிலும் புதுக் கன்னடத்தின் உரைச் சிறப்பு நிரம்பி இருப்பதைக் காணலாம். பிறகு ஏறக்குறைய ஒரே ஆண்டில், காலம் சென்ற எம்.என். காமத், காலம் சென்ற கெரூர் வாசுதேவாச்சாரியார் மற்றும் மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் (ஸ்ரீ நிவாச) ஆகியோர் சிறுகதைகளை எழுதத் தொடங் கினார்கள் எனலாம். (மாஸ்தி வெங்கடேச அய்யங்கார்- கன்னடச் சிறுகதைகளில் உண்மை இயல்பு-1957). அதிலிருந்து வரலாற்று முறையில் பாாத்தால், கன்னடத்தில் சிறுகதை எழுதியவர்களில் மாஸ்திஅவர்களே முதலாமவர் என்று சொல்ல முடியா விட்டாலும் அவர் கன்னடத்தில் முதலாவது பெருமை மிகுந்த சிறுகதை எழுத்தாளர் என்பது விவாதத்துக்கு இடமின்றி ஏற்றுக்கொள்ளப் பட்டதாகும்.

ஓர் ஆழமான சமயப்பற்றுடன் வாழ்க்கையின் விவகாரங்களை எடுத்துக் கூறும், விளக்கும், மதிப்பிடும்' அமைதியான மனம், மாஸ்தி வெங்கடேசஅய்யங்கார் (ஸ்ரீநிவாச) கதைகளில் வடிவம் கொள்ளும் அநுபவத்தை அமைத்துக் காட்டுவது போல, வழி காட்டுவதைப் போலத் தோன்றுகிறது. பாரம்பரியமாக வரும் பண் பாட்டின் உயிர்ப்பை, அது பொருந்தியிருக்கும் குணத்தை, அதன் மாறாத வியப்பைத் தனி மனிதர்கள், நிகழ்ச்சிகளின் சந்தர்ப்பங்களில் பொருத்திப் போற்றும்முறை காணப்படுகிறது. அதனால், வாழ்வின் கெட்ட, சமய விரோதமான, கொடிய முகங் களை, வழிவழியாக வரும் உயர்ந்த குணங்களைச் சிறப்பித்துக் காட்டுவதற்கு எவ்வளவு தேவையோ அந்த அளவுக்குப் பின்னணியின் வடிவில் பயன்படுத்திக் கொள்ளுகிறார். ஆக, வழி வழியாக வந்த சிரத்தை, நம்பிக்கைகளைப் பற்றிக் கேள்வியெழும் இடங்களும் சந்தர்ப்பங்களும் ஏற்பட்டாலும் அந்தச் சம்பிரதாய மதிப்புக்களின் அமைப்புக்குள்ளேயே அதற்கு விடை தேடும், குறிப்பிடும் தோரணை மற்றும் தன்னம்பிக்கை மாஸ்தி அவர்களிடம் காணப்படுகிறது. அந்த அமைப்பின்

எல்லைக்குள் சாத்தியமாகக் கூடிய அநுபவத்தின் முதிர்ச்சியும் வாழ்க்கை பற்றிய ஞானமும் அவரிடம் மிகுதியாக உள்ளன. அவற்றோடு வேகமற்ற விளக்கத் தன்மையும் பொருத்தமாகச் சேர்ந்து கொள்வதால் அவருடைய கதைக்கு இயல்பான ஒளியும் தனித் தன்மையும் கிடைக்கின்றன.

மாஸ்தி அவர்களின் பெரும்பாலான கதைகளில், முக்கிய பாத்திரத்தின் அல்லது பொதுமக்களின் நம்பிக்கையின் அடிப்படையில் வெளிப்படாத எளிமை நிலைத்திருக்கும். கதையாசிரியர் ஆகிய மாஸ்தி அந்த எளிமை கொண்டுசேர்க்கும் சோகத்தையும், இரக்கம், பரிவு, மனிதத் தன்மை ஆகிய பார்வைகளில் மட்டும் பார்க்காமல் அவைகளுக்கு உயர்வு கொடுப்பதன் மூலம் போற்றுகிற முறையில் அமைக்கிறார். அதனால் கதையாசிரியரின் பிரக்ஞையும் கதையின் பாத்திரங்களைப் போலவே, அவற்றின் வாழ்க்கையில் சோகத்துக்குப் புறம்பான பிற சாத்தியக் கூறுகளைக் காணமுடியாத, சிந்திக்க முடியாத எளிய செயலற்ற தன்மையில் இருப்பது போலத் தோன்றுகிறது. இப்படி இருப்பதால், மாஸ்தி அவர்களின் விளக்கப் போக்கில் காணும் வேகமற்ற தன்மை, படைப்புக்களில் வாழ்க்கையின் அநுபவங்களைச் சோதிக்கும், வாழ்வின் சாத்தியக் கூறுகளைத் தேடும் ஒரு விருப்பற்ற நிலை என்று தோன்றுவதில்லை. மாஸ்தி அவர்களுடைய எழுத்தின் முக்கிய அளவு அமைவது பெரும்பாலும் இங்கேதான்.

மாஸ்தி அவர்களின் வேகமற்ற தன்மைக்கு அவர் பயன்படுத்தும் உத்தி பெரும்பாலான இடங்களில் சிறப்பூட்டுவதாகவே அமைகிறது. என்றைக்கோ நடந்த ஒரு நிகழ்ச்சியை யாருக்கோ சொல்வது போல, இல்லாவிட்டால் யாரோ சொல்லிக் கொண்டிருப்பதைப்போல உத்தி இருக்கும். "தயிர்க்காரி மங்கம்மா"வின் அமைப்பும் இவ்வகை உத்திகளின் ஒரு மாதிரி. இங்கே மாஸ்தி அவர்களுக்கு அவர் கதைகளில் பொதுவாகக் காணும் கதையழுத்தத்தைக் காட்டும் ஆர்வம் இல்லை பாரம்பரிய லட்சியங்களைச் சிறப்பித்துச் சொல்லும் ஆசையும் முக்கியமாக இல்லை. சிறப்பான ஒரு குடும்பத்து மற்றும் சமூகத்துச் சூழலில் ஒரு நிலைமையில் தோன்றும் அநுபவத்தின் இதழ்களை வியப்புடன் அவிழ்த்துக் கொண்டே அர்த்தத்தின் நிழல்களை ஓசைப்படாமல் ஒலிக்கும் செயல் இங்கே இருக்கிறது. கதையைக் கொண்டு செலுத்துபவள் அதன் பாத்திரமாகவும் இருக்கிறாள்; கதையின் உயிர் நிலையைப் பிடித்துக் காட்டும் கதையாசிரியனது பிரக்ஞையின் பிரிக்கப்படாத அங்கமும் ஆகிறாள். படித்த நடுத்தரவர்க்கத்து இல்லத்தரசியான அவள் கடைசியில் சொல்லும் தத்துவ விளக்கம் அந்தப் பாத்திரத்தின் அமைப்பில கொஞ்சம் செயற்கையாக, இயல்பற்றதாகத் தோன்றாவிட்டாலும் கதையாசிரியனின் நோக்கமும் முழுமையாக அதனுடன் சேர்ந்து போகும் வகையின் அமைப்பும் (structure) இருப்பதால் தெளிவாயிருக்கிறது. தத்துவ நிலையை எட்டுவதற்குத் தொடங்கும் போதெல்லாம் மாஸ்தி அதற்குத்தகுந்த அளவில் அறிவு பூர்வமான பொருள் சேர்த்துக் கொள்வதால் சிறப்படைகிறது. இவ்வளவு ஆனாலும் இந்தக் கதையில் சொல்லப்பட்டிருக்கும் சங்கதிகள் கதையின் அமைப்பு முற்றிலும் இயல்பு என்பதை உறுதிப்படுத்தி ஒரு நிகழ்ச்சிக்கும் மற்றொரு நிகழ்ச்சிக்கும் உள்ள தொடர்பைத் திறமையாகக் காட்டி அவற்றின் பொருட்செறிவை மிகுதியாக்குகின்றன. கதை உருவாக்குவதில் காணும் சூட்சுமமான மென்மையான கலைத் திறமை மிக உயர்ந்ததாகும்.

ஏ.ஆர். கிருஷ்ணசாஸ்திரி (ஸ்ரீபதி)அவர்கள் மாஸ்தி அவர்களைவிட வயதில் மூத்தவரானாலும் அவர் சிறுகதை எழுதத் தொடங்கியது பின்னால்தான். இலக்கியம்

என்ற பார்வையிலும் மாஸ்தி அவர்களுடைய சிறுகதைகளுக்கு இருக்கும் பெருமை கிருஷ்ணசாஸ்திரியின் சிறுகதைகளுக்கு இல்லை. இந்தத் தொகுப்பில் மாஸ்தி அவர்களின் கதை முதலில் வந்திருப்பதற்கு அதுவே காரணம். மொத்தத்தில் பதின்மூன்று கதைகளை எழுதியிருக்கும் கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் 1923 லிருந்து 1930 வரை எழுதிய எட்டுக் கதைகளை 'ஸ்ரீபதி' என்னும் பெயரிலும், 1940 லிருந்து 1949 வரை எழுதிய மற்ற கதைகளை முறையே, கமலா, ஆர்.ஏ.குப்பண்ண, சாமண்ண, கோபால, பத்மநாப என்னும் பெயர்களிலும் வெளியிட்டிருந்தார். "கடவுளின் படைப்பு விசித்திரமாய் இருக்கிறது. அதில் ஒவ்வொரு பொருளின் உருவமும் ஒவ்வொரு வகை. அது ஏன் அப்படி இருக்கிறது, அப்படி இருக்க வேண்டுமா என்பது அவனுக்கே தெரியும். செய்தவன் யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும், உடையவன் யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும், அநுபவிப்பவன் மட்டும் உயிர். இப்படியிருக்க, உயிர் உலகத்தைப் படைத்தவனிடம் சண்டையிடுவது சாத்தியமா? சண்டைபோட்டு வெல்லுவது சாத்தியமா? அவன் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளட்டும்! லீலை நடத்தட்டும்! செயலற்ற மனிதன் வேறு என்ன சொல்ல முடியும்?" கிருஷ்ண சாஸ்திரி அவர்களின் இந்தப் பேச்சு (ஸ்ரீபதியின் கதைகள்- முன்னுரை)'குருவின் மகிமை'யைப் புரிந்து கொள்வதற்குத் தகுந்த பின்னணியை உதவுகிறது.

இந்து சமயப் பண்பாட்டில் பரம்பரையாக ஒப்புக் கொள்ளப்பட்ட இத்தகைய தத்துவக் கொள்கைகளை முழுமையாக ஏற்றுக் கொண்டிருக்கும் மனம் இந்தக் கதையைப் படைக்கின்றது. குருவை அந்தத் தத்துவத் தெளிவின் அடையாளமாகவும், பெண்மணியை அந்தத் தெளிவு பெறாது தடுமாறும் ஆன்மாவின் அடையாளமாகவும் நினைத்துக் கொண்டு, குருவின் தெளிவை அந்தப் பெண் உயிருக்கு மாற்றும் செயலிலேயே இந்தக் கதையின் அநுபவம் உருப்பெறுகிறது கதையில் வரும் மகிமைச் சங்கதிகள் மற்றும் அவைகளைக் கதையின் நிகழ்ச்சிகளில் அந்தத் தத்துவ நிலைக்கு ஏற்றவாறு நியாயப்படுத்தும், விளக்கம் கூறும் குருவின் வாழ்க்கை ஞானத்தின் இருப்பு ஆகும். இவைகளைப் பற்றிக் கதையாசிரியனுக்கு எந்தவிதமான வெட்கமும் மனத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. இதனால் வாழ்க்கையின் உண்மைகளைச் சோதிப்பதில் கதை மிகுதியான அறிவின் குறைந்த ஆற்றலுக்கு உட்படுகிறது. ஆனால் மொத்தத்தில் கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் "தமது சமூகத்தின் நம்பிக்கைகளைப் பயன்படுத்திக் கொள்வதில் திறமை உடையவராக இருப்பதால் இந்தக் கதை, பேச்சின் மூலம் வெளிப்படுத்தும் தெளிவுகள் தனிப்பட்டவர்களைப் பொறுத்ததாக ஆகாமல் முழு சம்பிரதாயத்தையே பின்புலமாகக் கொண்டிருக்கின்றன." (எம்.ஜி. கிருஷ்ணமூர்த்தி-புதிய கன்னடக் கதை இலக்கியம், புதிய இந்திய இலக்கியம்) இத்தகைய தத்துவக் கொள்கைகளைக் கதையின் முக்கியப் பொருளாகக் கொண்டு எழுதும் போது மாஸ்தி அவர்களும் ஏறக்குறைய இத்தகைய விமர்சனத்துக்கு ஆளாகிறார். உரையாடல் என்னும் உத்தியின் மூலம் முழுக் கதையும் புனையப்பட்டிருக்கிறது. இந்த உத்தியை இதற்கு முன்னால் 'அத்தெ', 'ஊட்டத உபசார' கதைகளில் கிருஷ்ண சாஸ்திரி அவர்களே பயன்படுத்தியதுண்டு என்றாலும் இப்படி ஆட்கள் இல்லாமல் எழுதும் உத்தியின் ஆற்றலைப் பற்றிக் கதையாசிரியருக்கே போதுமானஅளவு நம்பிக்கை இருப்பதாகத் தெரியவில்லை. அதனால் "தாயின் சங்கடம்", "குருவின் சமாதானம்" இவைகளுக்கிடையே கதையைக் காண்பது கஷ்டமாயிருக்கும் என்று அதன் சுருக்கத்தை முதலிலேயே கொடுத்திருக்கிறார். அந்தச் சுருக்கம் இன்றியமையாதது என்று சொல்வதற்கில்லை.

மாஸ்தி அவர்களை விட்டால் நவோதய தலைமுறையின்* கதையாசிரியர்களில் அஜ்ஜம்புர சீதாராம (ஆனந்த) அவர்கள் மிகுதியாக மக்களின் அன்பையும் புகழையும் பெற்றவர். அவருடைய பெரும்பாலான கதைகள் ஒரு குடும்பத்தின் கட்டமைப் புக்குள் நடைபெறுகின்றன. அதிலும் கணவன், மனைவி, அதிகமாகப் போனால் ஒரு குழந்தை என்கிற அளவுக்கு விரிந்த குடும்பமாய் இருக்கும். நடுத்தரவர்க்கத்தின் போதுமான நிம்மதி, ஒருவருக்கொருவர் காட்டும் அன்பு, ரசிகத்தன்மை உள்ள தம்பதிகளின் குடும்பமாக இருக்கும். அங்கேயும் சரசம், சல்லாபம், காதல் சேட்டைகள் இவற்றுக்கே முதலிடம். இந்தக் குடும்பத்தின் எல்லையிலிருந்து வெளியே போனால் அங்கேயும் திருமணத்துக்கு முந்திய காதல் மற்றும் காதல் விளையாட்டுக்கள் என்றாலும் இல்லறத்தானின்தார்மீக உரிமைக்கு அப்பாலான காதல், அன்பு நிகழ்ச் சிகள் இருப்பது சாத்தியமேயில்லை. கைப்பிடித்த மனைவியிடம் முழு அன்பையும், காட்டாத ஒரு கணவனும் பெரும்பாலும் இல்லை எனலாம். மனைவியும் இதற்கு விலக்கு அல்ல. அப்படி ஏதாவது இருக்குமானால் அது பிரமை அல்லது பைத்தியம் பிடித்த நிலையில் மட்டுமே. அந்தச் சந்தர்ப்பங்களில் இருக்கும் ஆண் உண்மை யானாலும், பெண் கற்பனையையோ கனவையோ சேர்ந்தவளாக இருப்பாள். இத்தகைய எல்லா நிலைமைகளிலும் இருக்கும் ஆண் பொதுவாக எழுத்தாள னாகவோ, ஓவியனாகவோ நடிகனாகவோ அல்லது வேறு ஏதாகவோ இருப்பான். மொத்தத்தில் இனிய தாம்பத்தியத்தின் அல்லது இனிய காதலின் சல்லாபங்களையே மீண்டும் மீண்டும் சுவைக்கும் ஆர்வம் ஆனந்தரிடம் மிகுதியாகக் காணப்படுகிறது. இந்த ஆர்வத்தையே கலையாக மாற்றும் திறமை, ரசிகத்தன்மை மற்றும் அறிவுக் கூர்மை இவருடைய சிறப்புக்கள் ஆகும். இப்படி ஆனந்தரின் ஆர்வம் மிகவும் குறுகிய உலகத்தைச் சேர்ந்தது. மாஸ்தி அவர்களுக்கு இருக்கும் பண்பாட்டுச் சிந்தனை களாவது சமயப்போக்காவது இவரிடம் இல்லை. வாழ்க்கையைக் குறித்து வேறு எந்த விதமான ஆழ்ந்த சிந்தனையும் இவரிடம் இல்லாததால் அனுபவத்துக்கு உள் முகத்து ஆழமும் சேர்ந்து/கொள்ளாமல் கதைகள் ரசிகத்தன்மையாலும் உணர்ச்சியினாலும் உயர்ந்து நிற்கும். ஆனந்தரின் 'நான் கொன்ற பெண்'—அவருடைய கதைகளில் விதிவிலக்கானது என்னும் பெருமையைப் படைத்த கதை. அது மட்டுமல்லாமல், நவோதயச் சிறுகதைகளிலேயே மிகவும்பெருமை பெற்ற கதைகளில் ஒன்றாகவும் இருக்கிறது. மாஸ்தி அவர்களின் 'தயிர்க்காரி மங்கம்மா'வில் இருப்பதைப் போலவே இந்தக் கதையின் வடிவமைப்பில் சமுதாய மற்றும் பண்பாடு காரணமாக மேல் மட்டத்தில் இருப்பவன் கதையின் பாத்திரமாகவும் கதையை எடுத்துச் சொல்பவ னாகவும் அமைகிறான். கதை சொல்வதில், தெரிந்தும் தெரியாமலும் செய்யும் செயல், பேசும் பேச்சுக்கள், கற்பனை வழிகள் ஆகியவை கதையின் சோக முடிவை வலுப்படுத்துவதைக் கதை அழகு மிளிரச் செய்திருக்கிறார். இதில் வரும் சோக முடிவு, சிரத்தை மற்றும் கலப்பட உணர்ச்சிகளின் பின்னணியில் தயாராவதைக் கதை நன்றாகக் காட்டுகிறது. அதனுடன் தன்னுடைய செயல் மற்றும் எதிர்செயல்களுக் கிடையில் உள்ள பொருத்தமின்மையை மீறிச் செல்ல முடியாத மனிதன் மற்றொரு

---

* நவோதய, பிரகதிசீல என்னும் பெயர்கள் இந்த முன்னுரையில் அடிக்கடி ஆளப்படும் சொற்கள், புதிய கன்னட இலக்கியத்தின் காலகட்டங்களைக் (எழுத்துப் போக்கை) குறிக்கின்றன. தமிழில் மணிக்கொடி காலம், பாரதிக்கு முன்னும் பின்னும், முற்போக்கு எழுத்து, என்று கூறுவதைப் போல. இவற்றின் விளக்கம் முன்னுரையின் கடைசியில் தரப்பட்டிருக்கிறது.

மனிதனின் சிரத்தையைப் பற்றித் தீர்ப்புக் கொடுக்கும் திறமையின்மையால் ஏற்படும் சோக முடிவை ஒலிக்கும் அம்சம் இந்தக் கதையில் இருக்கிறது. ஆனால் சங்கதியை மறைவாக அநுபவிக்கும் மனநிலையைக் கதைஅமைப்பு இழந்து விடுவதால் கதை உணர்ச்சிமயமானதாகிறது.

கே.வி புட்டப்பா (குவெம்பு) அவர்கள் காவியம், நாடகம், நாவல் வடிவங்களைப் போல ஆழமாகச் சிறுகதை வடிவத்தைத் தம்முடைய படைப்புத் திறமைக்குச் சாதனமாகச் செய்து கொண்டவரல்ல. லட்சியம்—அதன் அடக்கம், நகைச் சுவை—சோகம், வியப்பு—வியப்பூட்டுதல், பேய் என்று பிரம்மையைத் தோற்று விக்கும் மனிதன்—மனிதன் என்று பிரமையைத் தோற்றுவிக்கும் பேய், புராணப் பாத்திரங்களை பாரத நாட்டில் தேடுதல், மனைவி ஆண் வேடத்தில் வந்து ஆறு மாதங்கள் கணவனுடன் நட்பை வளர்த்துக் கொண்டும் உண்மை தெரியாமல் இருத்தல் இப்படி வெவ்வேறு வகையான விபரங்கள் நிறைந்த கதைகளை இலட்சிய மில்லாமல் எழுதுவது என்று தோன்றும் வகையில் குவெம்பு எழுதியிருக்கிறார். இப்படியாக அவருடைய கதைகள் மொத்தத்தில் ஆழ்ந்ததொரு வாழ்க்கைப் பார்வையை ஒலிப்பதில்லை. தனித்தனியாகப் பார்க்கும்போது பெரும்பாலான கதை களில் வெளிப்படும் நிகழ்ச்சிகளின் அமைப்பு முறை மற்றும் அவருடைய காவிய, நாடகங்களில் அபூர்வமான வகையில் தோன்றும் மொழியின் துள்ளல், மொத்தத்தில் உருவாகும் கலைத்தன்மை-நவோதய காலத்துக் கதைகளின் சூழலில்-வைத்துப் பார்க்கும்போது பெருமையுடையனவாகத் தோற்றமளிக்கின்றன. இரண்டு கதைத் தொகுப்புக்களை வெளியிட்டுள்ள குவெம்பு கடந்த முப்பத்து நான்கு ஆண்டுகளில் கதை எழுதியதாகத் தெரியவில்லை. குவெம்பு அவர்களைப் போலவே வேறுவேறு இலக்கிய வடிவங்களில் புகழ்பெற்று இருக்கும் நவோதயத் தலைமுறையின் த.ரா. பேந்த்ரே, சிவராமகாரந்த, பு.தி. நரசிம்மாச்சார் முதலிய இலக்கியச் செல்வர்களும் சிறுகதைகளை எழுதியிருந்தாலும் இதைப் போல அவர்களுக்கெல்லாம் ஏன் கடைசி வரையில் அமையவில்லையென்பது ஆர்வத்துக்கு உரிய சங்கதியாகவே நின்று விட்டது.

“யாரும் அறியாத வீரன்”. சாதாரண மக்களிலும் வெளிப்படக்கூடிய அசாதாரண மான நன்றி உணர்வு மற்றும் யாகத்தைச் சித்தரிக்கும் கதையாகும். உணர்ச்சி மீறலுக்கு உள்ளாகாமல் கதையாசிரியன் வேகமற்ற தன்மையில் கதையை நடத்திச் செல்வதிலேயே கதையின் கருவைச் சிறப்பாக எட்டுவதில் கதையின் பெருமை அமைந்திருக்கிறது: “யாரும் அறியாத வீரனில், குவெம்பு, கதை அமைப்பின் கடைசி எல்லையைத் தொட்டுவிட்டார்” என்னும் கே.டி.குர்த்தகோடி அவர்களின் கருத்து குவெம்பு அவர்களின் கதைகளுக்கு மட்டுமே பொருந்தும் பேச்சாக அமைகிறது; ஒப்புக்கொள்ளும் நிலையிலும் இருக்கிறது.

மாஸ்தி அல்லது ஆனந்தரைப் போல அச்வத்தருக்கு ஏறக்குறைய அளவுக்குட் பட்ட அநுபவ உலகம் என்பதில்லை. எந்த விதமான சநாதன கட்டுப்பாடும் இல்லாமல் வாழ்வின் எல்லா விதமான அநுபவங்களுக்கும் திறந்து வைத்திருக்கும் மனப் போக்கு இவருடையது. இவ்வாறு குறியில்லாதது, நோக்கமற்றது என்னும் வகையில் காணப்படும் அவருடைய எழுத்துக்களின் பின்னணியில் ஒரு மானுடத்தின் பார்வையுடைய உயிர்த்துடிப்பு இருக்கிறது. மனிதனின் இரக்கத்தை, பலவீனத்தை, சிறுமையை, சம்பிரதாயமான தர்மம் மற்றும் நீதி என்னும் கட்டுப் பாட்டினுள் மட்டும் வைத்துப் பொருள் காணாமல் மனித மனத்தின் மற்றும் மனித குலத்தின் சூழலின் சில சாத்தியக் கூறுகளையும் அச்சமின்றி அடையாளம் கண்டு

கொள்ளும் இரக்கப் போக்கு இவரிடம் காணப்படுகிறது. ஆனால் தனி மனிதனின் எதிர்ச் செயல்களில் ஒரு சாதாரணத் தன்மை (casualness)யின் கூறு ஓரளவுக்கு நெடு கிலும் இருப்பதால் உரிய அளவுடன் கலைப்படைப்பின் முழுமையும் கட்டும் சாத்திய மில்லாமல் போகிறது. மாஸ்தி, ஆனந்த ஆகியவர்களின் அளவுக்கு அச்வத்தரின் கதைகளில் கலைச்சிறப்பு இல்லை. ஆனால் அச்வத்தர் அளவுக்கு நீக்குப் போக்கு (flexibility) பெரும்பாலும் நவோதயச் சிறுகதை ஆசிரியர்கள் யாரிடமும் இல்லை.

"தர்மகொண்டத்துக் கதை"யில் அச்வத்தர் உயிர்ச் சத்தாக அமைய வேண்டிய சமய வாழ்க்கை அழிந்து போவதை மனித வாழ்க்கையில் காட்டி விளக்கியிருக் கிறார். தீர்ப்புக் கேட்பவர், தீர்ப்புக் கொடுப்பவர், தீர்ப்புக்குத் தலைவணங்குபவர் எல்லாரையும் செயலற்று நிற்கச் செய்யும் தர்ம சாஸ்திரத்தின் குரூரம் கதையில் வரும் சோகமுடிவுக்கு முழுவதும் துணை போகிறது. இந்தக் கதையின் தர்மகொண்ட (கொண்ட என்பது குண்ட என்பதின் மரூஉ) என்னும் தலைப்பு, சூரப்ப (சூரம் என்பதின் மரூஉ) காலப்ப (கால—காலம் என்பதின் மரூஉ; காலன்—எமன்) குண்டம்ம (குண்டு-கல்), தேவம்ம, கங்கம்ம—இந்த எல்லாப் பெயர்களும் பெயர் மாற்றங்களாய் அமைந்திருப்பதில் அவைகளுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்கும் கலைத்தன்மையின் கூறு இருந்தாலும் அப்படிச் சிந்திப்பதில் அறிவுக் கூர்மை மிகுந்து காணப்படுகிறது. ஆனால் குடிநீர்க் கிணற்றின் குறியீடு விளங்குமாறு சூட்சுமமாகச் சிந்திப்பதில் உயர் மட்டத்துக் கலை உணர்வைக் காணலாம்.

## II

பிரகதிசீல நெறியின் நான்கு கதைகளை இங்கே சேர்த்திருக்கிறேன்: சதுரங்கரின் 'நாலு முழ நிலம்', பஸவராஜ கட்டேமனி அவர்களின் "தலைமறைவானவன்", த.ரா.சு.வின் "0–0=0" நிரஞ்சனரின் "கடைசிக்கிராக்கி". சதுரங்க, பிரகதிசீல எழுத் தாளர்களிலெல்லாம் உயர்ந்த நல்ல கதைகளை எழுதுகிறார். ஒரு சமுதாயச் சூழ் நிலையில் அநியாயத்துக்கு உள்ளாகும் மனிதனின் வாழ்க்கைத் துன்பங்களைப் பற்றி வருந்தும் மனப்போக்கு இவருடைய எழுத்துக்களில் காணக் கிடக்கின்றது. மற்றைய பிரகதிசீலக் கதையாசிரியர்களிடம் அநியாயத்தைச் சினந்து கொள்ளும், சீறி எழும் ஆரவார எழுத்துக்கள் சாதாரணமாக இருப்பதால் அநியாயத்துக்கு உள்ளாகும் தனி மனிதன் அல்லது வர்க்கத்தைப் பற்றிய அனுதாபத்தில் சினம் மிகுதியாகச் சேர்ந்து கொள்கிறது.

சதுரங்க அவர்களின் 'நாலுமுழ நிலத்தில்' கதைக்குள் ஒரு கதை என்னும் உத்தி இருக்கிறது. கதைக்குள் ஒரு கதை என்பதை மட்டும் பார்த்தால் நவோத யத்து—அதிலும் மாஸ்தி வகை— எழுத்துக்களுக்கு நெருக்கம் என்னும் வகையில் அமைந்திருக்கிறது. ஆனால் இந்த முக்கிய கதை நம் எதிரில் எடுத்து நிறுத்த விரும்பும் அனுபவத்துக்கு அந்த உள்கதை வெளிச்சம் போட்டுக் காட்டிப் பின்னால் நின்று விடுகிறது. வக்கீலின் மனைவி லலிதா சஞ்சீவியின் கதைகளைக் காப்பி அடிக்கிறாள். ஆனால் சஞ்சீவியின் கதையில் காளிங்கையனை வருத்தும் பாவ உணர்ச்சி அவளுக் கில்லை. இந்தக் குறிப்பு இந்தக் கதையின் உள்குரல். வழக்குகளுக்கு முடிவே இல்லையா என்று வருந்தும் வக்கீலுக்குக் கற்பனைக் கதையில் விடை என்னும் வெளிச்சம் தோன்றி அவர் தலையாட்டுவதற்குள்ளேயே அவர் மனைவியின் குற்றம் அவருக்குத் தெரிய வருமாறு அமைத்துக் கடுமையான உண்மையின் ஊசிமுனை குத்துவதில் குறிப்புப் பொருளின் மற்றொரு பக்கம் அமைந்திருக்கிறது. கிராமத்து ஏழை உழவனுக்கு இருக்கும் நியாய புத்தியும் பாவ உணர்வும் நகரத்து வக்கீலின்

மனைவிக்கு இல்லை என்னும் மாறுபட்ட குறிப்பு இந்தக் கதைக்குப் பிரகதிசீலப் போக்கு என்னும் நிறத்தை ஊட்டுகிறது. இந்த வகையான மாறுபாட்டைச் சிந்தித்து தாழ்த்தப்பட்டோரின் பெருமையை எடுத்துக் கூறும் வகையில் அமைந்த எழுத்து பிரகதிசீல எழுத்தாளர்களுக்குள் சாதாரணம். அதற்குச் சதுரங்கரும் விலக்கு அல்ல. ஆனால் அதைச் சதுரங்கர் மற்றவர்களைப் போலக் கோபத்தோடு செய்வதில்லை.

பஸவராஜ கட்டேமனி அவர்கள், மக்கள் மிகவும் விரும்பும் பிரகதிசீல எழுத்தாளர்களுள் ஒருவர். "உண்மையான சூழ்நிலைக்குக் கண்ணையும் காதையும் திறந்து வைத்து நல்வாழ்க்கைக்காகப் போராடும் எளிய மக்களுக்கு ஊக்கமளிக்கும் இலக்கியத்தைப் படைப்பதே பிரகதிசீல நெறி" என்பது அவர் கொள்கை (கட்டேமனியின், வாழ்க்கை—எழுத்து, முழு நோக்குப் பாதை—ஹா.மா.நாயக). 1942 ஆகஸ்ட் போராட்டத்தின் பின்னணியில் எழுதிய ஏழு கதைகளைக் கொண்ட 'ஆகஸ்ட் ஒன்பது' (மே 1947) தொகுப்பிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட 'தலைமறைவானவன்' இந்தக் கொள்கையை நிலை நிறுத்தும் கதைகளில் ஒன்றாய் இருக்கிறது. நவோதயத்தவர்களையும் பிற பிதகதிசீலர்களையும் காட்டிலும் மிகுதியான வெறியுடனும் ஆவேசத்துடனும் சுதந்திரப் போராட்டம், கோவா விடுதலை, பாகிஸ்தான் படையெடுப்பு இவைகளின் பின்னணியில் கதைகளை எழுதியவர் இவர். இப்படிப் பட்ட பொருளை எடுத்துச் சொல்வதில் கன்னடக் கதைப்பரம்பரைக்குச் சாதாரணமாக இருக்கும் போக்கு மற்றும் உணர்ச்சி வேகத்துக்கு இந்தக் கதை பிரதிநிதியாக இருக்கிறது. கன்னடத்து வரலாற்றுக்கதைப் பரம்பரைக்குப் பிரதிநிதியாக அமையும் போக்குக்கும் இது பெருமளவு பொருந்துகிறது. நல்ல கோட்பாடுகளையும் பண்பாட்டின் உட்பிரிவுகளையும் சோதிக்கும் செயல்களைக் கொண்ட மாஸ்தி அவர்களின் வரலாற்றுக் கதைகள் மட்டும் இதற்குக் கொஞ்சம் விதிவிலக்கு. பிரகதி சீல எழுத்துக்குப் பொதுவாக உள்ள ஆர்ப்பாட்டம் Melodramatic. சூழ்நிலை, பாத்திரங்கள் மற்றும் சந்தர்ப்பங்களின் அமைப்பில் காணக் கிடக்கும் கண்ணில் வந்து தாக்கும் வேறுபாடு-இந்தக் கூறுகளெல்லாம் இந்தக் கதையிலும் இருக்கின்றன. மொத்தத்தில் கன்னடக் கதைப்பரம்பரையின் பல்வேறுபட்ட கூறுகளில் ஒன்றை இந்தக் கதை எடுத்துக் காட்டுவதாகும்.

த.ரா. சு. அவர்கள் சதுரங்க அவர்களைப்போலச் சிறுகதை வடிவம் ஒன்றையே தமது தனித்தன்மைக்கு முக்கிய சாதனமாக ஏற்படுத்திக் கொண்டவரல்ல. எஞ்சிய முதன்மையான பிரகதிசீல இலக்கிய கர்த்தாக்களுக்கும் இது பொருந்தும். நாவல் வடிவம் அவர்கள் எல்லாருக்கும் தாய்வீடு. த.ரா.சு. அவர்களிடம் தொடக்க காலத்துத் தொகுப்புகளில் வந்த கதைகளில் இருந்த பிரகதிசீலத்தின் தனித்தன்மை படிப் படியாகக் குறைந்து போயிற்று. 'இதே நிஜவாத ஸம்பத்து' என்னும் தொகுப்பில் உள்ள கதைகளில் பிரகதிசீலப் போக்கின் மிச்சம் மீதிகளும் காணபதற்கு இல்லை. பின்னும் கதைகள் எழுத வேண்டும் என்னும் ஆர்வமும் அவரிடம் மிஞ்சியதாகத் தெரியவில்லை. பத்தாண்டுக்காலத்தில் எழுதியது இரண்டே கதைகள் என்று குறிப் பிட்டு நாவல் எழுதுவதை விடச் சிறுகதை எழுதுவது கடினமான கலை என்னும் உண்மை எனக்குப் புரிந்துவிட்டது என்று சொல்லியிருக்கிறார்.

த.ரா.சு. அவர்களின் 0–0=0 மற்றும் சில கதைகளில் பிரகதிசீலப் போக்கின் கூறுகள் இருந்தாலும் அதையும் மீறிய பொருள் விரிவு, புதுத் தனித் தன்மையைக் காட்டும் சிந்தனை காணப்படுகிறது. கன்னடத்துச் சிறுகதையில் வரலாற்றுப் பொருள் மற்றும் உத்தி ஆகிய கோணங்களில் பார்க்கும் போது 0–0=0. கதையின் வரலாற்றுப் பெருமையைக் குறிப்பிடாமல் மேலே போவதற்கில்லை. நவோதயம்

மற்றும் பிரகதிசீல எழுத்தாளர்களிடம் பொதுவாக இருக்கும் வலுவான கதை, செம்மையான போக்கு இதில் இல்லை. எனக்குத் தெரிந்த வரையில் கன்னடத்தில் நனவோடை (Stream of consciousness) உத்தியைக் கையாண்டிருக்கும் முதல் சிறுகதை இதுதான். சிறுகதைக்கு உணர்ச்சியை உட்படுத்தியிருக்கும் முயற்சியிலும் புதுமை தெரிகிறது. இந்தக் கதையின் பொருள் வாழ்வு-சாவைப் பற்றிய தத்துவச் சிந்தனை. ஒரு பிரமேயத்தை ஒப்புக் கொண்டு அதைக் கோபத்துடன் ஒரு கொள்கைக்கு உட்படுத்துவதில் ஆர்வம் தெரிகிறது. குறியீடு, படிமம் முதலிய தனிமனித சாதனங்களின் சிக்கலில் ஒன்றுக்கொன்று உள்தொடர்பு ஏற்படாமல் கேட்க வேண்டிய தத்துவக் குரல் ஊசலாடுகிறது.

நிரஞ்சன தம்முடைய எழுத்தின் நோக்கத்துக்கு ஏற்ப உரை நடையின் போக்கையும் செயலையும் மாற்றிக் கொள்வது பெருமைக்குரியதாகும். த.ரா.சு. அவர்களின் நடைக்கு தன்னதேயான ஒரு சிறப்பு இருந்தாலும் அது-சம்பிரதாயமான சொற்களில் சொல்லுவதானால்-காவியமயமாக இருப்பதால் நிரஞ்சனரின் நடையைப் போல மண்ணையொட்டி நடப்பதில்லை. பிரகதிசீல எழுத்தாளர்களுக் கெல்லாம் மேல்நிலையில் அமைந்த சிந்தனைப் போக்கில் 'கடுமையான உண் மை'யைப் பார்ப்பதனால் பிரச்சினையின் பிற லட்சணங்களும் நிரஞ்சனருக்குப் புலனாகின்றது. சமூகம் மற்றும் நாட்டில் தோன்றும் ஒரு தனித்துவமற்ற (impersonal) சூழ்நிலை அல்லது தனிமனிதனுக்கு ஏற்படும் சிறப்பான குடும்ப, சம்பிரதாய மறைப் புகள், வெட்கங்கள் அவனுடைய செயலின்மைக்கு, துன்பத்துக்குக் காரணமாக அமையக்கூடும் என்பதையும் நிரஞ்சன அடையாளம் காட்டுகிறார்.இங்கே சேர்ந் திருக்கும் 'கடைசி கிராக்கி', இதற்கு நிதர்சனமாக அமையாது. அது அப்பட்டமான பிரகதிசீலப் போக்குக்கும், அந்தப் போக்கின் அளவு மற்றும் கலையின் சாத்தியக் கூறுகளுக்கும் பிரதிநிதியாக அமையும் கதையாக இருக்கிறது.

உத்தியின் புதுமைக்காகவும் 'கடைசி கிராக்கி' வரலாற்றுச் சிறப்பு உடையது. பத்துப் பதினைந்து பேர் கடந்து போகும் சர்க்கிளுக்கு அப்பால் பரதேசி காணி (பாருங்கள்-இந்தப் பொருளின் மறுபக்கத்தையும் கவனிக்க வேண்டும்), பார்க்காமல் போகிறவர்களையும் விடாமல் சுற்றும் ஊமைக்காணியின் பிணவாடை, கதையின் தொடக்கத்திலும் மீண்டும் கடைசியிலும் வரும் சில வாக்கியங்கள்-மாமூலான சங்கதிகளை எடுத்துச் சொல்வது மட்டுமல்லாமல் தொனிப் பொருளும் பொருந்தி யிருக்கிறது. அப்படியே கடைசியில் வரும் வலிமை மிகுந்த கழுகின் வடிவம் மொத்தத்தில் ஒரே நேரத்தில் மனிதத் தன்மையில்லாமல் இருக்கும் பத்துப் பேரின் சமுதாயத்தை எடுத்துக் காட்டுகிறது; காணியின் உடம்புச் சதையின் மீது கண் வைத்த காமுகர்களின் குறியீடாகிறது. காணியோடு தொடர்புடைய விவரங்களில் தெளி வாகத் தோன்றும் நாய்ப் பிறவியின் நிலைக்குப் பொருள் நிறைக்கிறது. இவ்வள வெல்லாம் இருந்தும் கதையின் சாரம் எளிய சித்தாந்தத்தின் கற்பனையாகத் தோன்று வதால் அனுபவத்தின் வெறிநிலையின் சுமையே கலைத்தன்மையைவிட அதிகமாய் இருப்பது போல் தோன்றுகிறது.

## III

பிரகதிசீலர்களின் சில கதைகளில் புதுமை, முக்கியமாக உத்தியில் காணப் பட்டாலும், கதைக்கரு, உத்தி மற்றும் இலக்கியச் சிறப்பு ஆகியவற்றோடு தொடர் புடையதாய் புதுமை காணப் பட்டது பி.ஸி. ராமச்சந்திர சர்மாவின் கதைகளில்தான். பிரகதிசீல கதைகளைப் போலவே சமூகச் சீர்திருத்தம் மற்றும் சமுதாய நீதியை

நிலைநாட்டுதல் ஆகியவற்றிடமிருந்து கதையின் நோக்கத்தை(focus)த் திருப்பி மனித மனம், மூலப் பொருட்களின் பக்கம் திருப்பியது வரலாற்று அடிப்படையில் பெரிய சங்கதியாகும். ஆனால் உத்தியில் புதுமை காண்பதில் அதிகமான ஆர்வம், குறியீடு படிமங்களை மிகுதியாகக் கையாள்வது, காமம் பற்றிய இளவயது ஆர்வம்- இவைகளால் சர்மாவின் கதைகளில் இந்தக் கூறுகளைச் சிறிது அதிக அளவில் காணமுடிந்தாலும் பெருமை மிக்கது என்று சொல்லும் அளவுக்கு வளர்ச்சி காணப் படவில்லை.

"யார் இனியவர் உனக்கு?"—சர்மாவின் கதைகளுக்கு எடுத்துக்காட்டான ஒன்று. நவோதயம் மற்றும் பிரகதிசீல எழுத்துக்களின் சாதனங்களைக் கொண்டிருந்து, புது நடையைப் பிடிவாதத்தோடு கொண்டு செல்லும் நிலை இக்கதையின் அமைப்பில் காணப்படுகிறது. கதைநெடுகிலும் அசேதனப்* பொருள்களுக்கு சேதன வடிவம் கொடுக்கும் குறியீடு, படிமங்கள், உவமை-உருவகங்கள் வருணனைகள், சிருங்காரச் செய்திகளை நிரப்பி, சேதனச் சூழ்நிலையை உருவாக்குகின்றன. அப்படிச் செய்வதில் தக்க நோக்கு உண்டென்றாலும் சூழ்நிலை பற்றிய அதிகமான பேச்சு, ஆரவாரத்தினால் தொனி முடமாகி விழுந்து விடுவதைப் போலாகிறது. கதையின் முடிவில் மல்லியை, தண்ணீருக்காகத் தவிக்கும் நிலத்தைப் போலக் காட்டி அவளைக் குறைவடிவாக விட்டுவிடாமல், அவளுடைய உணர்ச்சிகளின் உயிர்ப்பை ஏக்கம் நிரம்பிய சோகக் குரலில் படம் பிடித்திருப்பது, கதையின் அனுபவத்தைத் தீவிர மாகக் காட்டுவதாக அமைகிறது.

யசவந்த சித்தாலரின் கதைகளுக்கான மையம் (focal) பொதுவாக வடகர்நாடக மாவட்டத்து ஹனேஹள்ளிபங்கி கொட்ல மற்றும் சுற்றுமுற்றுமுள்ள கிராமங்களின் ஆன்மீகச் சூழ்நிலையில் அமையும் ('பயண' போன்ற விதிவிலக்கான கதைகளும் இல்லாமல் இல்லை). தனிமனிதர்களும் சூழ்நிலையும் தொடர்ந்து அடுத்தடுத்து வெவ்வேறு கதைகளில் வருவதால் நமக்குத் தெரிந்த மக்கள் மற்றும் சூழ்நிலை பற்றிய கதை என்னும் அளவுக்கு ஒரு சொந்தம் வளர்வது போல் தோன்றுகிறது. முதலில் சித்தாலர் மனத்தின் துடிப்பு, சிறிதளவு உத்தி வகைகளில் மாஸ்தி அவர்களின் போக்குக்கு நெருங்கியிருப்பதைப் போல எழுதிக் கொண்டிருந்தார். ஆனால், 'ஆட்ட' தொகுப்பில் வந்த கதைகளில் சித்தாலரின் முத்திரை தனித்த முறையில் வெளிப்படை யாகத் தெரிகிறது. கலை அமைப்பு என்னும் ஒன்றை மட்டுமே நினைவில் இருத்திச் சொல்வதானால் சித்தாலர் அநேகமாகப் புதிய கதை எழுத்தாளர்களிலெல்லாம் சிறந்தவர். சாவு அவரை மிகவும் தாக்குவது போலத் தெரிகிறது. ஆனால் அது அவரிடம் வலுவான புத்தி அல்லது தத்துவக் கருத்தாக இல்லாமல் ஆர்வத்துக்கான காரணமாக மட்டுமே அமைகிறது.

'சிறை'—கதையில் பொருள் சாவாக இராமல் காமமாக அமைந்திருக்கிறது. காமம் புதிய பொருள் அல்ல. அளவுக்கு மீறியது என்று சொல்லும் அளவுக்கு புழங்கப் பட்டிருக்கிறது. ஆனால் சித்தாலரின் 'சிறை'யில் "உள்மனத்தை எல்லாம் நிறைத்து இதயத்தை அழுத்தவரும் காமச் செயலின் ஆர்ப்பாட்டத்தை ஒதுக்கும் முயற்சியில் பிறக்கும் சூடு, கட்டுப்பாடு, நிமிர்பு, தன் மனத்தைப் பிடியில் வைத்திருக்கப் போராடும் பிரம்மச்சாரி, முதலாளியின் கடும் முயற்சி, அந்த முயற்சியின் சகஜ மின்மை, அந்த தவிர்க்க முடியாத தோல்வி ஆகியவை வெளியே நடக்கும் நிகழ்ச்சி

* அசேதனம்—அறிவில் பொருள்; சேதனம்—அறிவுடைய பொருள்

களில், முக்கிய பாத்திரத்தின் ஒவ்வொரு பேச்சு செயலில், பேச்சின் ஒவ்வொரு நடையில், திருப்பத்தில் இயல்பாக வடிவம் கொண்டிருக்கும் இந்த முறை கன்னடத் துக்குப் புதியது என்று தோன்றுகிறது" (கோபால கிருஷ்ண அடிக—'ஆட்ட' தொகுப்பின் முன்னுரை) ராமச்சந்திர சர்மாவின் 'யார் இனியவர் உனக்கு' கதையின் பின்னணியில் 'சிறை' கதையின் போக்கை, அநுபவத்தைச் சோதித்துப் பார்க்கும் வகையை உற்றுப் பார்த்தால் கதைக்கலையின் வளர்ச்சி, சிறப்பு தெரிய வருகிறது.

ஏ.கே.ராமானுஜன் அவர்கள் கதையாசிரியர் என்று பெயர் வாங்கியவர் அல்ல. அவர் அண்மைக் காலத்தில் எழுதிய இரண்டு கதைகளின் மூலம் கன்னடச் சிறுகதை வரலாற்றில் புதிய போக்கைத் தொடங்கி வைத்திருக்கிறார். 'அண்ணய்யனின் மனத் தத்துவம்' கதையமைப்பின் போக்கில் கன்னடத்துக்குச் சிறப்பாக அமைந்தது. இந்தக் கதை பொருத்தமான விளக்கப் போக்கிலேயே ஒரு பொருத்தமற்ற நிலையைத் திறமையாக எதிரில் கொண்டு வந்து நிறுத்துகிறது. அண்ணய்யன் தந்தையின் சாவு இந்து சமயத்தின் செத்தநிலையைக் குறிப்பிட்டால், அவர் தாயின் விதவைக் கோலத்தைப் பற்றிய சித்திரம், செத்ததை நம்பி வாழ்ந்து வரும் உண்மை நிலையின் கொடுமையையும் அதன் பொருந்தாத நிலையையும் குறிப்பிடுகிறது. அதனுடன் அவர் தாயின் கைம்பெண் நிலைமைக்கும் இந்து சமயத்தின் பொருள் இழந்த தர்ம சூத்திரங்களை சிகாகோவில் படிக்கத் தொடங்கியிருக்கும் அண்ணய்யனின் நிலைக்கும் தொடர்பு உண்டாக்கும் உட்குரல் இருப்பதைப் போல் தெரிகிறது. சுந்தர ராயருக்கு இந்து தர்மம் விற்பனைக்குரிய பொருள். சுந்தரராயரின் வியாபார புத்தியைப் பார்த்து அண்ணய்யன் கோபம் கொள்கிறான். ஆனால் அண்ணய்யனும் சுந்தரராயரிடமிருந்து அடிப்படையில் வேறுபட்டவனல்ல. சுந்தரராயன் இந்து தர்மத்தை விற்றால், அண்ணய்யன் வேறு ஒரு பொருளில் இங்கே வாங்குகிறான். எச்சில், மலம் முதலியவை தீண்டத்தகாதவை என்று தர்ம சூத்திரம் படித்து வரும் அவனுக்கு ஃப்ர்கூசனின் விளக்கமும் எச்சில்தான் என்பது தெரிவதில்லை. இந்த எச்சில் மலங்களைப் பற்றி மருத்துவப் போக்குக்கு மாறான கருத்தைக் காட்டிக் கொள்ளும் அவன், எச்சிலைச் சப்பிக்கொண்டிருக்கும் தன்நிலையை அது குறிக் கிறது என்பதை காட்டிக் கொள்வதில்லை. அதில் குறிப்புப் பொருள் இருக்கிறது.

சாந்திநாததேசாய் அவர்களிடம் மனித மனத்தின் சலனங்களின் வகையை மிகவும் சூட்சுமமாய் பிரித்துப் பார்ப்பது முக்கிய நோக்கமாய் இருக்கிறது. புத்தி பூர்வமான அல்லது உணர்ச்சி பூர்வமான சொந்தக் கருத்துக்களைக் கதையின் மேல் ஏற்றாமல் அநுபவத்தின் இதழ்களைப் பொதுவானது என்று சொல்லக் கூடிய மொழி மற்றும் நிலையின் மூலம் அவிழ்த்து சிலை வடிவத்தில் அமைக்கும் போக்கு அவருடையது. அநுபவத்தை எடுத்துச் சொல்வதில், சந்தர்ப்பங்களை விளக்குவதில் கதையாசிரியரின் அறிவுத்திறமை செயல்படுகிறது. ஆனால் அந்த விரிவும் விளக்கமும் தார்மீகப் பொறுப்பையோ கொள்கைப் பொறுப்பையோ ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றன. அல்லது அவற்றிற்கு அந்த விருப்பமே இல்லை. அதாவது, சிறுகதைகளின் மூலம் தெரிய வரும் தேசாய் அவர்களின் படைப்புத்தனித்தன்மை பெரும்பாலும் கூட்டு வாழ்க்கையின் அநுவபங்களைப் பற்றிய சிந்தனை, அதன் மூலம் ஓர் அழுத்தமான வாழ்க்கை நோக்கத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவதாக இல்லாமல் தனித்தனிச் சூழ்நிலைகளில் தன் படைப்புத் திறமையை ஒப்படைத்து அந்த விரிந்த எல்லைக்குள்ளேயே சூட்சுமமாக மலர்வதைப் போலிருக்கிறது.

'அடிவானம்' தேசாய் அவர்களின் கதைகளில் மேலே குறிப்பிட்ட எல்லை களையும் மீறி வெற்றி பெற்றுள்ள கதையாக மட்டும் இல்லாமல் கன்னடத்தில்மிகவும் புகழ்பெற்ற கதைகளில் ஒன்றாகவும் இருக்கிறது. மற்ற கதைசளைப் போலவே ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பம் மற்றும் சூழ்நிலையில் தனிமனிதன் அல்லது மனிதர்களின் மனத்தின் சலனத்தைக் கலை உணர்வோடு பிடிப்பது மட்டும் அல்லாமல் அங்கே தோன்றும் அநுபவத்துக்கு ஒரு பண்பாட்டுப் பிரதிநிதித்துவமும் உண்டாகும்படி செய்யப்பட்டிருக்கிறது. பண்பாட்டில் ஊறியவர்கள் நிமிர்ந்து நிற்கும் அல்லது தளர்ந்து போகும் வகையை,ஒரு குறிப்பிட்ட மனிதன் மற்றும் சூழ்நிலையில் சா[illegible]ற நிலையில் இருந்து கொண்டு, இந்தக் கதை பரிசீலிக்கிறது மந்தாகினியின் மூ[illegible] போராட்டததை உள்ளே மற்றும் வெளியே விவரமாக வடித்துக் காட்டுவதி[illegible] கதையாசிரியர் காட்டும் பொறுப்பும் பரிவும் மிகச் சிறந்து நிற்கின்றன.

மாஸ்தி அவர்களுக்குப் பின்வந்த காலத்துச் சிறுகதை எழுத்தாளர்களில் யு.ஆா அனந்தமூர்த்தியின் பெயா புகழ் வாய்ந்த பெயராகும். நமது எந்தச் சிறுகதை எழுத் தாளரிடமும் காணப்படாத ஆழம் அவருடைய கதைகளில் இருக்கிறது. வாழ்க் கையின் பொருளை மொத்தமாகச் சோதிக்க வேண்டும், அடையாளம் காண வேண்டும் என்னும் பேரார்வம் அவருடைய கதைகளின் அடிப்படையில் இருக்கிறது. அதனால்தானோ என்னவோ அவருடைய கதைகள் கதைப்படைப்பு என்னும் முறை யில் தம்முடைய அளவுக்கு மீறியவையோ என்று தோன்றும் அவற்றைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றன என்று படுகிறது. அதன் மூலம் கதையாசிரியன் ஏற்றுக்கொள்ளும் கலைப்படைப்புக்கான சவால் பெருமை நிரம்பியதாக இருக் கிறது. பொதுவாக பிராமணக் குடும்ப வாழ்க்கை கிராமச் சூழ்நிலையிலேயே அல்லது அதற்குத் தொடர்புடைய நிலையிலேயே அவருடைய கதைகளின் மையம் அமைகிறது. ('கிளிப் ஜாய்ண்ட்'—இல் இங்கிலாந்தில் கதை நடப்பதாக இருந்தாலும் கேசவனின் இறந்த காலமும் கொஞ்சம் எதிர்காலமும் கூட பிராமணச் சூழ் நிலையிலேயே முக்கியமாக வளர்ந்ததாக இருக்கிறது. அண்மையில் வந்த 'ரூத் மற்றும் ரசூல்', 'ஆக்ரமண' கதைகள் இதற்கு விதிவிலக்காகும்). பாரம்பரியமாக வந்த கொள்கைகளை ஆழ்ந்த பரீட்சைக்கும் சோதனைக்கும் உள்ளாக்கும் சிந்தனையுள்ள அவருடைய எழுத்துக்களுக்குப் பிராமணச் சூழ்நிலை பெரும்பாலும் அதனுடைய நிறைகுறை இரண்டின் நோக்கிலும் உண்மையில் மிகவும் உயிர்ப்புடையதாய் இருப்பதும் இதற்கு ஒரு முக்கிய காரணமாக இருக்கலாம். வேற்று ஜாதியைச் சேர்ந்த மனிதர்கள்—முக்கியமாக பெண்கள்- வந்தால் பாரம்பரியமான கொள்கையின் பொருளற்ற தன்மையை எடுத்துக்காட்டும் வகையில் வருகின்றன. அதிலும் முக்கிய மாகக் காமம், காதல் சம்பந்தமான நீதி, அநீதிகளை விளக்குவதற்கு ஏற்ற பொருள் களாகி வாழ்க்கையின் ஆர்வத்துக்குக் குறியீடுகளாக வருகின்றன. அனந்தமூர்த்தி அவர்களின் கதைகளில் இடம் பெறும் பாரம்பரியக் கொள்கைகளில் சோதனை களுக்கு மையமாய் இருக்கும் கிராமத்துச் சூழ்நிலையில் அவர் சோதனைக்கு எடுத்துக் கொள்ளும் கொள்கைகள் இந்தக் காலத்தில் படித்தவர்கள் கூட்டத்தில் மொத்தமாகப் பொருள் இழந்து வருகின்றன. சிரத்தை, ஆசாரம், நம்பிக்கை ஆகிய குணங்களி லிருந்தும் பெருமளவுக்கு அவை பெருமையை இழந்து கொண்டு வருகின்றன. அதனால் நவீனம் என்று சொல்லக்கூடிய போக்குள்ள எழுத்தாளன் அதிக தன்னம் பிக்கை சிந்தனை நிலைகளைப் பற்றி முன்பே முடிவு கட்டிய, மற்றும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு சூழ்நிலையில் கொள்கைச்சோதனை நடத்த வேண்டியிருக் கிறது. ஆனால் இப்படிப்பட்ட நிலையில் பாரம்பரியமான கொள்கைகளைச்

சோதிப்பதில் அறிவுபூர்வமான சவால் அழுத்தமாக இருப்பதில்லை. (கன்னடத்தில் வேறு எவருடைய சிறுகதைகளிலும் காணமுடியாத அளவு அழுத்தமான சிந்தனைக் கூற்றுக்காக உழைத்துக் கொண்டிருக்கும் எழுத்தாளர் அனந்தமூர்த்தி அவர்கள் என்று தெரிந்திருந்தும் அவருடைய எழுத்துக்களைப் பொறுத்தவரையில் வெறுப் பற்ற நிலையில் இதைச் சொல்லுகிறேன்). ஏனென்றால் கதையின் அநுபவத்தை விளக்கும் அறிவு நிலை கதையில் தீவிரமான பரீட்சைக்கு உள்ளாகும் சந்தர்ப்பம் அவ்வளவாக வருவதில்லை. இந்த அளவீட்டைத் தவிர்ப்பதற்கு கதையில் வரும் அநுபவத்துக்குச் சிறப்பைத் தருவதற்காக ஒன்றுக்கொன்று மாறுபட்ட போக்கு, வாழ்க்கைக் கோணத்தில் பாத்திரங்கள் எதிரெதிராக நிற்கும் உத்தியை அனந்த மூர்த்தி அவர்கள் கையாண்டிருப்பது சில கதைகளில் காணப்படுகிறது. (எடுத்துக் காட்டு: 'பிரச்னெ', 'கடசி ராத்த'; அவருடைய பிரபலமான நாவல் 'சமஸ்க்கார'வில் இந்த உத்தி அதிசயிக்கத்தக்க பலனைத் தந்திருக்கிறது.) கிளிப் ஜாயிண்ட்'டிலும் கேசவனுக்கு எதிராக ஸ்வேர்ட்டைத் திறமையாக நிறுத்தி யிருக்கிறார். அங்கே யுள்ள பிரச்சனை நமது பாரம்பரிய கொள்கைகளைப் பற்றிய சோதனையின் அளவுக்கு உட்படாத இரண்டு பண்பாடுகளின் கொள்கை பற்றிய சோதனையாக இருக்கிறது. கேசவனுடைய சிந்தனை தொடருக்கு எதிராக நிற்கும், அல்லது கேசவனுடைய சிந்தனையின் இன்னொரு பக்கமான மாறும், அதன் மூலம் கேசவன் எழுத்தாளனின் குரலாக (mouth piece) ஆகிவிடாது கொண்டு செல்லும் முயற்சி இங்கே பெருமளவுக்குப் பலித்திருக்கிறது ஆனால் இந்தச் செயலின் சிந்தனைக் கூறு சில இடங்களில் நிரம்பி, கரையாமல் நின்றிருப்பதாகத் தோன்று கின்றது. அனந்தமூர்த்தி அவர்களின் 'பிரக்ருதி', 'கார்த்தீக்' 'கடசிராத்த' போன்ற கதைகளின் அளவுக்குக் கலைச் சிறப்பு இங்கே அமையாவிட்டாலும் அவருடைய கதைகளை வைத்துப் பார்க்கும்போது மட்டுமல்லாமல் கன்னடச் சிறுகதைகள் எல்லாவற்றின் வரலாற்றை வைத்துப் பார்க்கும்போதும் 'கிளிப்ஜாயிண்ட்' மிகவும் பெரிய ஆசையோடு கூடியது: கன்னடத்தில் சிறுகதையின்படி பார்த்தால், எல்லா வற்றையும் விழுங்கிச் செரித்துக் கொள்ளும் தன் தன்மையைப் பணயமாக நிறுத்தும் கதையாக இருக்கிறது.

ராகவேந்திர காசநீசரும் ஏ.கே.ராமானுஜத்தைப் போலவே சிறுகதை எழுத்தாளர் என்று மிகவும் புகழ்படைத்தவர் அல்ல. அவர் எழுதிய கதைகளின் எண்ணிக்கை அதிகம் இல்லையென்றாலும் அவருடைய 'அநாதைகள்' கன்னடத்தில் சிறந்த கதை களில் ஒன்றாய் இருக்கிறது. 'அண்ணய்யனின் மனத்தத்துவம்' கதையில் அண்ணய்யனின் நிலையில் பொருத்தமின்மையும் தான்தோன்றித்தனமும் உண்டு. ஆனால் அறிவுபூர்வமானதைத் தக்கவைத்துக் கொள்வதற்கு அதிகமான ஆழம், மற்றும் தீவிரம் அது பெற்றிருக்கவில்லை. ஆனால் 'அநாதைகள்' கதையில் தங்கை, தம்பி, தந்தை, தாய் ஆகியவர்களின் தொடர்பில் உள்ள கட்டாயமான பொருத்த மின்மை, தான்தோன்றித்தனம் என்னும் நிலை கதையில் உணர்ச்சி பூர்வமான செயல்களில் சோக முடிவை நோக்கிச் செல்லும் வகை, ஆகியவை பொருத்த மானதாய் இருக்கின்றன. கதையின் தொடக்கத்தில் பஸ் கெட்டுப்போய் நிற்கும், கடைசியில் தேர் சேற்றில் சிக்கியதைப்போல நின்றுவிடும், தங்கை தேரில் தீப்பிடித்தது என்று கூச்சலிடும், ஒருவரையொருவர் தேடும், ஒருவருக்கொருவர் கிடைத்தும், கிடைக்காமல் போகிற– முதலிய செய்திகளெல்லாம் உண்மையான விவரங்களாகவே நடந்து குறியீட்டு நிலையை ஏற்றிக் கொண்டு கதையின் குறிப் பாற்றலை அழுத்தமாகக் காட்டுவது போல் தெரிகிறது.

கே. சதாசிவ அவர்கள் 'நல்லியல்லி நீரு பந்திது' (1955), 'கிட்டி (1957), கதைகளின் மூலம் ஒரு காலத்தில் நியாயமாகவே மிகவும் புகழ்வாய்ந்த புதிய கதையாசிரியர். அவருடைய எல்லாக் கதைகளையும் மொத்தமாகப்பரிசீலித்தால் பாதிக் கதைகள் தனித் தனிக் கதைகளானால், சரியாக இன்னொரு பாதி கதைகளில் பொருத்த மில்லாத உடைந்த இல்லறம், இல்லாவிட்டால் திருமணத்துக்கு முன்னால் இதமில்லாத தொடர்பில் வேகும் வாழ்க்கையின் நானாவிதமான துன்பங்கள் இரண்டையும் திறந்து காட்டுவது தெரிகிறது. ஆனந்தர் இல்லறத்தின் வெற்றி அல்லது திருமணத் துக்கு முந்திய உறவின் வெற்றி, மகிழ்ச்சி, மகிழ்ச்சியான பக்கங்களைத் தீட்டினால், இவர் அதன் வலி, தோல்வி, தகராறு ஆகிய பக்கங்களைச் சித்திரிக்கிறார். இருவருக்கும் அந்தந்த முகத்தின் பல்வேறு சாயை, சூட்சுமங்களைத திறமையாக எடுத்துக்கூறும் வல்லமை உண்டு. ஆனால இருவரும் அவ்வளவிலேயே திருப்தி யடைந்து கைகழுவி விடுகிறார்களே தவிர முழு வாழ்க்கையின் சூழலில் அவைகளின் பொருள் என்ன என்று இணுக்கிப் பார்க்கிற, தத்துவ சிந்தனையில் குறிப்பாகக் காட்டும் முயற்சியைத தோற்றுவதே இல்லை.

'ராமன் சந்தைக்குப் போனது' கதையில் கே. சதாசிவ அவர்களின் எழுத்தில் பொதுவாகக் காணும் கட்டுக்கோப்பு இருக்கிறது, தாம்பத்தியத்தின் விரசம், விரிசல் ஆகியவற்றை அடககிக கொண்டிருக்கிறது. அவரிடம் அசாதாரணமான பிற கூறுகளும் தெளிவாகத் தெரிகின்றன 1. சிறப்பானது என்று சொல்லத்தக்க உத்தி ஏதும் இல்லாமல் நேரான பாணி. 2. பொருளின் நோக்கில் பார்த்தால் உயிர்த்துடிப்பு நிறைந்த ஒரு பையனின் பார்வைக் கோணத்துக்கு முதலிடம் கொடுத்து, பெரிய வர்கள் வாழ்க்கையின் விரிசலுக்கு சூட்சுமமாக உறைத்துப் பாாத்துக் கேலி செய்வது தெரிகிறது. 3. மகிழ்ச்சி நிரம்பிய தங்கு தடையில்லாத (relaxed) எழுத்து இருக்கிறது, மொதததத்தில் கே. சதாசிவரின் எழுத்தின் இயல்பில் புதியகூறுகளை இந்தக் கதை குறிபபிட்டுக் காட்டுகிறது.

டி.ஜி. ராகவ அவர்களின் சிறுகதைகளில் சமூகச் சூழலில் ஒத்துப் போகாத மனிதனின் தனிமையான எண்ணங்கள், ஆசைகளோடு போராடும்நோய், அந்நியத் தன்மை கொண்ட பலவீனமான நாயகர்களே அதிகம். 'தன்னுடைய மனப்போக்கை இன்னொருவனுக்கு எடுத்துக் கூற முடியாத, பேச்சு வார்த்தைகளுக்குச் சாத்திய மில்லாமல் முறிந்து விழுந்த உலகம் இவர்களுடையது. அதனால் ஒருவரோடொருவர் பேசுவதால் ஏற்படும நாடகச் செயல்களுக்குப் பதிலாக தனக்குள்ளேயே நடக்கும் இருமனப் போராட்ட நாடகம் இவருடைய கதையின் பொருள்". (யூ.ஆர். அனந்த மூர்த்தி-பதினைந்து ஆண்டுகளின் புதிய உரை நடை இலக்கியம்), இத்தகைய அநுபவங்களுக்கு உருவம் கொடுக்கும் போது நனவோடை உத்தியை மிகுதியாக, வெற்றியுடன்அவர் கையாள்கிறார். இவருடைய கதைகளில் பொருள் வெவ்வேறாய் இருப்பது குறைவுதான். ஆனால், சொல்வதை வகைவகையாகப் பிரித்து எடுக்கும் போக்கு சிறப்பானதாகும். அவருடைய 'சிராத்தம்' கதையில் 'சிந்தனை வேறு அல்ல, வர்ணனை வேறு அல்ல, மொத்தமாகவே கதை நடக்கிறது. இரண்டாவதாக, எந்த அன்பை மேலான சிறப்புக்கள் என்ற அறிந்திருந்தோமோ அவற்றைக் கேள்வி கேட்டுத் திணறவைக்கும் ஆர்வமும் தைரியமும் இங்கே காணக்கிடக்கின்றன; மூன்றாவதாக, ஆடைகளை அவிழ்க்கும் ஆசையிலும் செயலிலும் முழுமையாகத் தானே தானாகிற, பிறருடைய தாக்கத்திலிருந்து விலகிப்போகிற ஆசை மிகவும் சுருக்கமான விளக்க வடிவில் வெளிப்படுகிறது; நான்காவதாக, தந்தையின்

அதிகாரம், மிரட்டல் ஆசிரியத்தனத்துக்குக் குறியீடானால், மகன் அவற்றிலிருந்து விடுபட்டுத் தனித்துவத்தை வளர்த்துக் கொள்ளும், சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்குக் குறியீடாகிறான். இவையெல்லாவற்றுக்கும் துணையாக 'சிராத்தம்' கதையில் பழங்காலத்திலிருந்து வரும் ஆசாரத்தைப் பரீட்சித்துப் பார்க்கும், அந்த ஆசாரத்தைப் பற்றிய முரண்பட்ட கருத்துக்களைக் காப்பாற்றும் வகை உற்று நோக்கத்தக்கது" பி.லங்கேஷ் அவர்களின் (களித இப்பத்து வர்ஷகள ஸண்ண கதெ: 'எரடு கட்டகளு') கருத்துக்கள் இந்தக் கதையின் பெருமையைச் சுருக்கமாக வெளியிடுகின்றன. என்றாலும் மொத்தத்தில் "சில சமயங்களில் எழுத்தில் காணும் அநாவசியக் கோபத்தில் தோன்றிய தீவிரத் தன்மையால், ராகவ தமது கருப் பொருளாகிய, இளவயதின் துர்ப்பலத்துக்குக் கொடுக்க வேண்டியதை விட அதிகமான முக்கியத்துவம் தருகிறார்" என்னும் அனந்தமூர்த்தியின் விமரிசனத்தை மறப்பதற்கில்லை.

பி. லங்கேஷ் துன்பம், இம்சைகள் ஆகியவற்றைப் பட்டவர்த்தனமாகவும் உத்தியோடும் கையாண்டு கணத்துக்குக் கணம் குணம் மாறும் மனிதனின் தன்மையை, அல்லது நனவுநிலையில் அந்த மனிதனும் அடையாளம் கண்டு கொள்ள முடியாத அநுபவத்தின் முடிச்சை, அற்பத்தனத்தை ஒவ்வொரு இதழாகப் பிரித்து, உள்ளேயிருக்கும் உண்மையை நிர்வாணமாகவோ, மேலே தோன்றும் தனித் தன்மையை அதன் செத்தநிலையிலோ காட்டி, அச்சுறுத்த, அதிர்ச்சி கொடுக்க முயல்கிறார். இரண்டாவதாக, நிகழ்காலச் சம்பவம், மக்கள் எதிர்எதிராகும் போது உண்மை வெளிப்படும் என்னும் தெளிவு லங்கேஷின் எழுத்தின் பின்னணியில் இருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் கடந்த காலம் மற்றும் பாரம்பரியத்தினால் மிகுதியாக முழக்கப்படாத மனநிலையில் மனிதனின் செயல், எதிர்ச்செயல் நிர்ணயமாகிக் கொண்டே போகின்றன. மூன்றாவதாக, ஆழமான மனிதத் தொடர்புகளின் நிகழ்ச்சிகளே இவருடைய கதைகளில் வருவதில்லை. தந்தை, தாய், அண்ணன், தங்கை, அக்கா, தம்பி, நண்பன், வேறொரு மனிதன்-இவர்களில் ஒருவருக்கொருவர் நெருக்கமான தொடர்பு, கடமைப் பொறுப்புக்கள் ஆகியவற்றின் குறிப்பே இருப்பதில்லை. இப்படியாக லங்கேஷின் கதைகள் மூலம் வெளிப்படும் மனநிலைக்கு மனித மனத்தின் நெருக்கமான கணங்களுக்கு, இயலக்கூடிய சாத்தியக் கூறுகளுக்குப் பொருந்தாத தன்மை காணப்படுகிறது. இப்படிப்பட்ட எழுத்துக்குச் சோகமயமான வேதனை சாத்தியமில்லை. ஆகையால் மனிதனின் சிறுமை, கணத்துக்குக் கணம் மாறும் நிலை ஆகியவற்றை வெளிப்படுத்துவதில் காணக் கிடப்பதாகத் தோன்றும் கதையாசிரியரின் போதனை முயற்சியும் தோற்றம்தானோ என்னும் சந்தேகத்துக்குப் பல இடங்களில் காரணமாகிறது. மாஸ்தி அவர்களின் கதைகளின் முயற்சியும் தர்மம் அல்லது நீதியாகவே இருக்கிறது. ஆனால் அவ ருடையது மனித மனத்தின் மேலான சாத்தியக் கூறுகளைப் பார்க்கும் போக்கு டையதாக இருப்பதால் மனிதனின் சிறுமை, அதர்மத்தின் முகங்களை முக்கியமாகக் கொள்ளாத எழுத்து ஆகிறது. ஆனால் லங்கேஷின் எழுத்து அதற்கு எதிராக மனிதனின் மேல்நிலையை, சிறப்பை முழுவதும் சந்தேகத்தோடும் அவநம்பிக்கை யோடும் பார்க்கும் எழுத்தாக இருக்கிறது. இந்த இரண்டு வகையான போக்கும் தத்தமக்கு இயல்பான அநுபவத்தின் ஒரு பக்கத்துக்குக் கொடுக்கும் அழுத்தம் மற்றொரு பக்கத்துக்கு காட்டும் அலட்சியம் அல்லது முக்கியமின்மை தத்தமக்கே உரிய எல்லைக்குள் அடங்குகின்றன. தத்துவக்குரலை எழுப்ப முயலும்போது இந்த

இரண்டு வகைப் போக்குகளின் மூலமும் உருவம் கொள்ளும் அநுபவங்களுக்கு ஏற்ற அடிப்படை சிந்தனை இல்லாமல் தோல்வி அடைகிறது.

லங்கேஷிற்கே உரிய சிறப்பாக இதுவரை அடையாளம் கண்ட தோரணை யிலிருந்து அவருடைய மனித மதிப்பீடும் பின்பற்ற முடியாதது என்னும் தன்மையுடன் கூடியிருக்கிறது லங்கேஷுடைய எழுத்தின் பிற பொதுவான இலக்கணங்களைக் கொண்டிருந்தாலும் 'ஒய்வு பெற்றவர்கள்' கதை இரண்டு அம்சங்களில் வேறு பட்டிருக்கிறது:

1. இங்கே மனிதனின் சிறுமை பற்றிக் காணும் கதையாசிரியரின் நீதிப்போக்கு, அவருடைய வேறு கதைகளில் இருப்பதைப் போல நீதிக் கட்டுப்பாட்டுக்கு உட் பட்டது என்றில்லாமல் பகைமையின் இழை ஆற்றலுடன் இணைந்திருப்பதால், பண் புடையதாய் இருக்கிறது.

2. தத்துவக் கருத்துக்களை உட்கொண்டிருக்கும் முயற்சி, அதேபோல் அவருடைய வேறு எந்தக் கதையிலும் காணப்படாத அடிப்படையில் உள்முகமும் பண்புடைமை வேண்டாமையும் இங்கே புலப்படுகின்றன.

கே.பி. பூர்ணசந்திர தேஜஸ்வி அவர்களின் முதலாவது கதைத் தொகுப்பான 'ஹுலியூரின ஸரிஹத்து' கதைகள் ஒரு குறிப்பிட்ட போக்குடைய எழுத்துக்கள் அல்ல. அவை தனித்தனிக் கதைகள். ஆனாலும் எதையோ செய்யப் போய் மற்றொன்றாக முடியும் அல்லது பாழாகும் அம்சம் ஒன்று ஏதோ ஒரு அளவில்—எல்லாக் கதை களுக்கும் பொதுவாக இருக்கிறது. இந்த அம்சம் 'அபசூர் போஸ்டாபீஸ்' என்னும் இன்னொரு கதைத் தொகுப்பின் அந்தப் பெயருடைய கதையையும் சேர்த்துக் கொண்டு சுமார் பாதிக்குப்பாதி கதைகளிலும் காணப்படுகிறது. தேஜஸ்வி அவர் களின் தகுந்த நகைச்சுவை கலந்த உரைநடை அதன் சுவையை மிகுதியாக்குகிறது.

தேஜஸ்வி அவர்களின் அண்மைக்கால 'அபசூர் போஸ்டாபீஸ்' கதைத் தொகுப்பின் கதைகள் சிறுகதை வரிசையில் புதியகுறி ஒன்றை வெளிப்படுத்தும், புதிய திருப்பத்தை ஏற்றுக் கொள்ளும் ஆர்வத்தை உடைய கதைகள். "கன்னடத்தின் புதிய சம்பிரதாயத்தை முழுவதுமாகக் கைவிட்டு புதுத்திசையில் நான் இப்போது நோக்க வேண்டியிருக்கிறது". "இயல்பாக, நேராகப் பார்க்கும் எழுத்தாளனின் கதை களில் காணப்படும் புதியதொரு கட்டுப்பாட்டை எழுத்தில்நான் பயில வேண்டிய தாயிற்று. இதற்கு எங்கள் கிராமங்களில் வெறும் பார்வையாளனாக மட்டுமே இருக்க வேண்டி வந்த என்னுடைய வாழ்க்கைச் சம்பவங்களும் ஒரு காரணம்"... இந்த (புதிய) வழியைக் கைவிடுவது மட்டுமல்லாமல் இதற்கு ஆக்கமளித்த மூலங்கள், இதன் சூழ்நிலைகள், இதன் அடிப்படைகள் எல்லாவற்றையும் கைவிட வேண்டியிருக்கிறது. அதாவது அரசியல் ரீதியாக, சமுதாய ரீதியாக, தத்துவ ரீதியாக, மொத்தமாக மாறுவதால் மட்டுமே உண்மையான புதிய இலக்கியம் வெளிவருகிறது. இப்படி யெல்லாம் தேஜஸ்வி அவர்கள் 'அபசூரின் போஸ்டாபீஸ்' கதைத் தொகுப்பின் 'புதிய அடிவானத்தை நோக்கி' என்னும் தலைப்புள்ள முன்னுரையில் சொல்லி யிருக்கிறார். இந்தக் கருத்தை நிறுவுவதற்காக அவர் புதிய இலக்கியத்தைக் குறித்து எடுத்துக் கூறும் இலக்கியம் மற்றும் இலக்கியமல்லா அம்சங்களில் பல சரியல்லாதவை களானாலும் சிறப்பு மிக்க புதிய இலக்கியகர்த்தாக்களில் ஒருவரான அவருடைய கூற்றின் பின்னால் இருக்கும் படைப்புத் தன்மையைப் புறக்கணிப்பதற்கில்லை. அண்மைக் காலத்தில் புதிய இலக்கிய வாதிகளில் முக்கியமானவர்களில் பலர் ஏதோ ஒரு வகையில்– எழுத்து, பேச்சு மற்றும் படைப்பு முயற்சிகளின் மூலம்– புத்தி லக்கியத்தின் எல்லையை விரிவாக்கும், அதில் புதிய ஒளியைத் தோற்றுவிக்கும்

சாத்தியங்களைத் தேடும் கலைச்சிறப்பைக் காட்டிக் கொண்டே வந்திருக்கிறார்கள். என்றாலும் புதிய எழுத்தின் பொதுவானது எனக்கூடிய செறிந்த, தன்னதேயான (சுயமான) எழுத்து மற்றும் சிந்தனைப் பொருளின் சுமை ஆகியவற்றுக்குப் புறம்பான வகையில் சாத்தியங்களைத் தேடிக் கொண்டிருப்பதோடு புறத்தே நின்று சுற்றிலுமுள்ள வாழ்க்கை அமைப்பைப் புகைப்படக்காரனைப்போல ஒரு தனிப் பட்ட கோணத்தில் பிடிக்கும் செயலிலேயே கதையாசிரியன் தன் வேதனையின் சூட்சுமத்தை ஒலிக்கும் வகையான எழுத்து என்று சொல்லுமாறு, 1972க்குப் பின் வந்த தேஜஸ்வி அவர்களின் கதைகள் காட்டுகின்றன.

அந்த வழியில் நடத்திய முதல் முயற்சி 'அபச்சூர் போஸ்டாபீஸ்' என்னும் கதை. அது நவோதயக் கதைகளுக்குப் பொதுவானதான கதைசொல்லும் போக்கு, குற்றத்தை நிலைநிறுத்தும் போக்கிலேயே செல்கிறது. அந்தத் தொகுப்பின் பிற கதைகளின் அமைப்பும் அதே வகையில் இருக்கின்றன. 'அபச்சூர் போஸ்டாபீஸ்' என்னும்கதை நவோதயக் கதைகளிலிருந்து எப்படி வேறுபட்டிருக்கிறது, அந்தத் தொகுப்பின் 'தபரனகதெ' பிரகதிசீலக் கதைகளிலிருந்து எப்படி வேறுபட்டிருக் கிறது என்று கேட்டால் பதில் சொல்வது பெரும்பாலும் எளிதல்ல. அந்தத் தொகுப்பின் 'அவனதி', 'குபி மத்து இயாலா', 'துக்கோஜி' போன்ற கதைகள் முறையே சுற்றிலுமுள்ள வாழ்க்கையில் தேவை, நம்பிக்கை மற்றும் நாகரீகத்தின் ஆர்வம்- இவைகளுக்கும் தனிமனிதனின் சிறப்பு, சிந்தனை மற்றும் இடர்ப்பாடு களுக்கும் இருக்கும் தொடர்பைக் காட்டும் வகையில் அமைந்திருக்கின்றன மாஸ்தி அவர்களின் 'தயிர்க்காரி மங்கம்மா' போன்ற நவோதயக் கதைக்கும் தேஜஸ்வி அவர்களின் இதுபோன்ற கதைகளுக்கும் போக்கு என்னும் நோக்கில் அடிப் படையான வேற்றுமை என்ன என்று கேட்டாலும் விடையளிப்பது பெரும்பாலும் கடினமே. சொல்லக்கூடிய இப்படிப்பட்ட மற்றும் பிற கேள்விகளைப் பெரிதாக் காமல் புதிய ஆட்சிகளின் தொடக்க முயற்சிகளை இரக்கத்தோடு புரிந்து கொள்ள முயல்வது எந்தக் கோணத்தில் பார்த்தாலும் ஏற்றுக் கொள்ளத் தக்கது.

## IV

பூர்ணசந்திர தேஜஸ்வி அவர்களை விட இளவயதினர் பலர் சிறுகதைகளை எழுதி வந்தாலும் ஜி.எஸ். சதாசிவ, ராஜசேகரநீரமான்வி, வீணா எலபுர்கி, ஸ்ரீகிருஷ்ண ஆலனஹள்ளி மற்றும் தேவனூரமகாதேவ-இந்த ஐவரின் கதைகளை மட்டும் இங்கே சேர்த்திருக்கிறேன். இந்த ஐவரும் இப்போதே சூ.ரமாகாந்த, ராமச் சந்திரதேவ முதலிய கதையாசிரியர்களை விட மிகுந்த இலக்கியச் சிறப்புடைய சிறுகதையாசிரியர்களாக இருக்கிறார்கள் என்னும் கருத்து இந்தத் தேர்வுக்குக் காரணம் அல்ல. அப்படிப்பட்ட விமர்சனக் கருத்தை வெளிப்படுத்துவதற்கு இன்னும் கொஞ்சகாலம் காத்திருக்க வேண்டிய அவசியம் இருக்கிறது. ஏனென்றால் ஒருவரை யொருவர் மிஞ்சும் வகையில் இவர்கள் வளரக் கூடிய வாய்ப்பு மிகுதி. இங்கே சேர்த்திருக்கும் கதைகள் புத்திலக்கியத்திற்குப் பின் (நவ்யோத்தர!) என்று சொல்லக் கூடிய தலைமுறையின் சிறுகதையாசிரியர்களின் எழுத்தில் வெவ்வேறு வகை களைத் தெளிவாக எடுத்துக்காட்டுபவை போல இருக்கின்றன என்று எனக்குத் தோன்றியதே இதற்குக் காரணம்.

ஜி.எஸ். சதாசிவ அவர்களின் எல்லாக் கதைகளையும் மொத்தமாகப் பார்த்தால் மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பை, தொடர்பின் உண்மையை உள் நுழைந்து பார்க்கும் நிரந்தரச் சோதனையின் தனித்தனித் துண்டுகளாக அவை

தோன்றுகின்றன. எந்த ஒரு கதையிலும் மனிதத் தொடர்பைக் குறித்த தத்துவக் கருத்தை வெளியிடுவது காணப்படாவிட்டாலும் எல்லாக் கதைகளிலும் மலரும் உண்மையின் இதழ்கள் மனிதத் தொடர்பின் துண்டத்தின் வெவ்வேறு அத்தி யாயங்களைப் போல் இருக்கின்றன. அக்கறை தோற்றுவிக்கும் கதை, ஆர்வத்தை மூட்டும் நிகழ்ச்சி, ஒப்பனைமிகுந்த மொழி-முதலிய சம்பிரதயமான கதைச் சூழ் நிலைகளை வேண்டுமென்றே ஒதுக்கி, மனித மனத்தின் போக்கை அனுசரித்து நடக்கும் தன்னிச்சையான போக்கு சதாசிவரின் எழுத்தின் தனிச் சிறப்பாக இருக் கிறது. அதனால் இப்படிப்பட்ட கதைகளில் தன் மனத்தை இழக்கும் வகையைக் குறித்த பிரச்சனையையே படிக்கிறவன் முதன்முதலில் வகைப்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. சதாசிவ அவர்களின் கதைகளில் சில, பொதுவான இலக் கணங்களைக் கொண்டிருந்தாலும் 'ஹாங்க் ஓவர்' தன்னிச்சையான போக்குடைய கதை அல்ல. கதையின் விவரங்கள் சொற்பொருளால் படிப்பவனின் விருப்பத்தை அளவோடு மிகுதியாக்கி, குறிப்புப் பொருளில் அதிகமாகப் புலப்படுத்தும் வகை போற்றத்தக்கது.

ராஜசேகரநீரமான்வி இதுவரை எழுதியது இரண்டே கதைகள்தாம் என்றாலும் அநுபவங்களைத் தத்துவம் மற்றும் சிந்தனைக் கட்டமைப்பில் பார்க்கும் ஆர்வமுள்ள எழுத்து அவருடையது. 'அன்புச் சிறைக்கு வெளியே'—இல் ஆஸ்பத்திரியில் நோயாளியாக அறுவைச் சிகிச்சைக்காகக் காத்திருக்கும் கதாநாயகனின் அறிவில் அங்கே நடக்கும் நிகழ்ச்சிகளும், தனிமனிதர்களின் செயல்களும், எதிர்ச் செயல்களும் பதிக்கிற விளக்கம் கொள்ளுகிற முறையைப் பற்றிய எழுத்து இது. இந்த எதிர்ச் செயல்களில் அவன் Cynical ஆகும், தத்துவ வாதி ஆகும், உணர்ச்சிப் பெருக்குக்கு உள்ளாகும் வகையில் ஆழ்ந்த கருத்துக்கள் என்னும் குறிப்பு இருந் தாலும், அவையெல்லாம் கதாநாயகனின் பழைய களிம்பைப் பூசிக் கொண் டிருப்பதால் ஒன்று மற்றொன்றைச் சூட்சுமமாகப் போரிட்டு, உணர்ச்சி வெறிக்கு ஆளாகி இருக்கும் அவன் மனத்தின் நிலையற்ற போக்கைக் கூடவே காட்டுவதைப் போல் இருக்கின்றன. அவனுடைய நோய், நடக்க வேண்டிய அறுவைச் சிகிச்சை, ஆஸ்பத்திரி, ஆகியவற்றை வெறும் சங்கதிகளாக மட்டும் பார்க்காமல் அவை களுக்குக் கதை அமைப்பில் துணைவரும் குறியீட்டுப் பொருளாக அமையும் சாத்தியக் கூறுகளையும் கவனிக்க வேண்டும். அப்போது அவனுடைய உடல் நோய்க்கும் உள்ளத்தின் நோய்க்கும் தொடர்பை நிலைநாட்டும் முயற்சி இருப்பதை அறியலாம். கதாநாயகனின் கதையை விளக்கும் உத்தியினால் கதையிலுள்ள அனுபவம், கருத்து, விளக்கங்களை முரண்களின் மூலம் (ironic contemplasion) மதிப்பிடுவது, எடை போடுவது தகுந்த அளவில் சாத்தியமாகவில்லை என்று படுகிறது.

பெண் சிறுகதை எழுத்தாளர்களின் எண்ணிக்கையும் அவர்கள் எழுதிய கதை களின் எண்ணிக்கையும் ஏராளமாக இருந்தாலும் கன்னடச் சிறுகதை வரலாற்றில் இலக்கிய நோக்கில் பார்க்கும்போது மிகச் சிறந்தவை என்று சொல்லக்கூடிய தனிச் சிறப்பை வெளிப்படுத்தியவர்கள் யாரும் இல்லை. இருந்தவர்களிலேயே வேண்டு மளவு நம்பிக்கை ஊட்டியவர்கள், இருபத்தியேழாம் வயதிலேயே மறைந்து போன கொடகின கௌரம்ம (1912-1939) முப்பத்தைந்தாம் வயதில் காலமான திரிவேணி (1928-1963). புதிய சிறுகதைகளின் தொடக்க காலத்தில் தமது 'சங்கம' கதைத் தொகுப்பின் மூலம் மிகுந்த நம்பிக்கையூட்டிப் பிறகு மௌனமாக உள்ள ராஜலட்சுமி என்.ராவ் மற்றும் அவருக்கு இளைய தலைமுறையினரான வீணா எலபுர்கி ஆகியவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். கதைப் பொருள் மற்றும்

விளக்கத்தில் காட்டும்—நமது பெண் எழுத்தாளர்களை வைத்து நோக்கும் போது அபூர்வமான துணிச்சலே—வீணா அவர்களின் கதைகளை ஆர்வத்துடன் பார்க்கத் தூண்டுகிறது.

சமுதாயக் கோட்பாடுகள், கட்டமைப்பு ஆகியவை பற்றி மாறுபட்ட கருத்துள்ள இவரது கதாநாயகிகள் துன்பத்துக்குள்ளானவர்கள்; அதிருப்தியாளர்கள். அவர் களுடைய மனநிலை பற்றிய சோதனை வீணா அவர்களின் கதைகளில் முக்கியமாக இடம் பெறுகின்றது. அதன் எதிர்விளைவில் சம்பிரதாயமான வெட்கம் அல்லது மடி ஆசாரம் பற்றிக் கவலைப்படுவதில்லை. பெண்களைப் பற்றி-விதவை, வேசி, மாமியார் கொடுமை, கணவனின் புறக்கணிப்பு ஆகியவற்றுக்காளானவர்கள், பல காரணங்களால் வழுக்கி விழுந்தவர்கள், விரகதாபம் உடைய வர்கள்-முதலிய பெண் களின் பாடுகளைப் பற்றி, இரக்கம் தோன்றும் வகையில் அல்லது அவர்களுடைய லட்சியம், கட்டுப் பாடுகளைப் போற்றுகின்ற வகையில் அமைந்துள்ளமை நமது சிறுகதைகளில் சாதாரணம். அதுவும் பெண்மக்களின் எழுத்தில் மிகுதி. இந்த வகையான கதைப்பொருள், போக்கு ஆகியவற்றுக்கு விரோதமான நோக்கில் பெண் மனத்தைப் பாாக்கும் வீணா அவர்களின் கதைகள் சம்பிரதாயவாதிகளுக்கு அச்சத்தை ஊட்டுவனவாயுள்ளன. "கடைசி வழி", அப்படிப்பட்ட கதைகளில் ஒன்று. இரண்டாவதாக, எப்போதோ ஏதோ காரணத்துக்காக மனத்தில் நிலைத்து விட்ட ஆண், அவனைப் பற்றிய நினைவு, மனத்தின் ஈர்ப்பு வாட்டும் நிலை முதலிய சங்கதிகளும் வீணா அவர்களின் கதைகளில் வருவதுண்டு. "கடைசி வழி", என்னும் கதை, அப்படிப்பட்ட பிறகதைகளைப் போன்ற ஒன்று என்று சட்டென்று சொல்வது சாத்தியமில்லை என்றாலும், சங்தர கௌடரைப் பற்றிய மனத்தின் ஈர்ப்பில் அது இருக்கவே செய்கிறது. மூன்றாவதாக, கதாநாயகியின் கணவன்மார்களெல்லாம் முழுவதும் லட்சியபுருஷர்களாக இருக்கிறார்கள். எந்த வகையிலும் மனைவியின் விருப்பத்தை—அது விசித்திரமானதாகத் தோன்றினாலும்— எதிர்ப்பவர்கள் அல்ல. "கடைசி வழி"யின் க்தாநாயகியின் முதல் கணவன் கெட்டவனாகக் 'குறிப்பா'கக் கூறப்பட்டிருந்தாலும், அவள் இன்னும் கதையுள் நாயகியென்றும், 'புதிய மனுஷி' யாகவில்லை. இரண்டாம் கணவன் ஆகவிருக்கும் சங்கரகௌட, வீணா அவர்களின் கதைகளில் வரும் மற்ற கணவர்களைப் போலவே இருக்கிறான். நான்காவதாக, இருப்பதிலேயே சுகம் காணாமல் இல்லாததையே தேடும் அந்தக் காரணத் தினாலேயே நோயாளிகளாக மாறும் கதாநாயகியரே எல்லாரும். 'கடைசி வழி'யின் கதாநாயகியும் அப்படிப்பட்டவளே. இந்தக் காரணங்களினால் 'கடைசி வழி' வீணா அவர்களின் கதைகளுக்குப் பிரதிநிதித்துவம் ஏற்கும் கதையாகிறது. இதுவரையில் அடையாளம் காட்டிய சாதாரண அம்சங்களின் ஃபார்முலாக்களை மீறிய, முழு வாழ்க்கையைப் பற்றிய ஆழ்ந்த நோக்கு மற்றும் கலைத்தன்மைகளைப் படைத்துக் கொள்வதன் மூலம் இலக்கிய நோக்கிலும் பெருமை வாய்ந்ததான கதைகளை வீணா அவர்கள் இன்னும் எழுத வேண்டியிருக்கிறது.

ஸ்ரீ கிருஷ்ண ஆலனஹள்ளியின் கதைகளில் வாழ்க்கையைப் பற்றிப் பொங்கி வரும் அன்பு இருக்கிறது. அவருடைய தலைமுறையினர் வாழ்க்கை அநுபவங் களுக்குத் தம்மை முழுவதுமாக ஒப்படைத்துக் கொள்வதில் மிகுதியான வெட்கத்தை வளர்த்துக் கொண்டு முழுப்பக்குவம் பெற்றுவிட்டதாகப் 'போஸ்' கொடுக்கும் இந்தக் காலத்தில், அவர் வாழ்க்கையில் காட்டும் பற்று சிறப்பான தன்மையாகத் தோன்றுகிறது. இரண்டாவதாக, புத்தம்புதியது என்பதான வாழ்க்கையநுபவங்கள் அவருடைய கதைகளில் புலனாகாவிட்டாலும் அவர் சிறுகதைகள் மூலம் சொல்ல

வேண்டியதை, கட்டுக்கோப்பான சிலையாக வடிக்கும் விதம் மனத்தை ஈர்க்கிறது. 'சம்பந்தம்' ஏறக்குறைய நவோதயக் கதைகளைப் போலவே படிப்பவர்களின் உள்ளத்தைத் தொடக் கூடிய கதையாக இருக்கிறது. கதையில் நிகழ்ச்சிகளின் வரிசையில் ஒரு மெல்லிய இழை ஈடுருவி இருக்கிறது என்று தோற்றமளிப்பதே கதையின் நோக்கத்தை நிறைவேற்றுவதனால் கதை சிறப்படைகிறது.

தேவனூர மகாதேவ அவர்கள் தேஜஸ்வியவர்களைப் போலவே 1972-க்குப் பின்னர் எழுதிய கதைகளில் புதியவகை மற்றும் போக்குக்குப் புறம்பான எழுத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது. கதையாசிரியன் பற்றற்ற நிலையில் வெளியே நின்று, கதையைச் சொல்வது, சமுதாய நோக்கில் கதைகளில் இடம்பெறும் நிகழ்ச்சிகளுக்கு விவரங்களுக்குப் பொருள் கூறு வது—இத்தகைய சில அம்சங்களில் தேஜஸ்வி மற்றும் மகாதேவ ஆகிய இருவரின் கதைகளிலும் ஒற்றுமை மிகுதியாகக் காணப்படுகிறது என்றாலும் மகாதேவ அவர்கள் கிராமிய மொழியைக் கதையின் மொழியாகவும் புழங்குவதோடு அந்த மொழிக்குச் சாத்தியமான தனிப்பட்ட சிறப்புக் களைப் பரிசோதிப்பதில் இயல்பான வகையைத் தொடங்கியிருப்பது சிறப்பான அம்சமாக விளங்குகிறது. இரண்டா வதாக பொருள் அளவில் சமுதாய அளவில் கீழ் மட்டத்திலிருப்பவர்கள் மேல் மட்டத்திலிருப்பவர்களால் தமக்குக் கிடைக்கும் அநியாயங்களைப் பற்றிய அறிவே இல்லாமல் அவற்றுக்குப் பலியாகும், அது தெரிந்தாலும் ஏதும் செய்ய முடியாத செயலிழந்த நிலையில் ஏற்றுக்கொண்டு நாள் கழிக்கும், அதிகமாகப் போனால் குடி வெறியில், அதாவது நினைவு மறந்த நிலையில் இருக்கும்போது மட்டும் அதைப் பேச்சின் மூலம் மறைமுகமாக வெளிப்படுத்திச் சும்மாயிருந்து விடும் ஜனங்களின் வாழ்க்கை, உணர்ச்சிகளின் பின்னால் இருக்கும் சோகத்தை, உணர்ச்சி வயப் படாமல் எடுத்துக் காட்டும் மகாதேவ அவர்களின் முறையும் சிறப்பானது என்று சொல்லத்தக்கது. 'அம்மாசி'யில் குரியய்யனின் வாழ்க்கையே அம்மாசியில் மீண்டும் தொடங்கவிருப்பதாகக் காட்டும் குறிப்போடு கதை முடிவது, அநியாயச் சக்கரத்தின் மறுசுழற்சியைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. இந்தக் குறிப்பில் இருக்கும் அழுத்தக் குரலை (affirmative tone)—ரயில்வே காங்மேன் சித்தப்பனின் குடிவெறியில் வெளிவந்த கீழ்த்தரப் பேச்சுகளின் பின்னணியில் பார்த்தால்—கதையாசிரியர் அமைப்பதன் மூலம் அம்மாசியின் வாழ்க்கையின் இன்னொரு சாத்தியக் கூற்றை உள் குரலாக ஒலிப்பது போலிருக்கிறது.

# V

சமுதாய நாகரிகம், சுமுகமான சூழ்நிலையென்னும் கட்டுக் கோப்பிலேயே தாம் விரும்பும் வளர்ச்சியின் அழகை நவோதய எழுத்தாளர்கள் சாதிக்கிறார்கள். சமூகத்தின் ஒப்புக்கொள்ளப் பட்ட கொள்கைகள், லட்சியங்களில் சிரத்தையைப் பலப்படுத்துவது அவர்கள் நோக்கமாக இருப்பதே இதற்குக் காரணம். அவர் களுக்குச் சமூகம் மற்றும் அதன் கொள்கைகளின் மீது வெறுப்பில்லை. சோகத்துக் குள்ளான அல்லது துன்பத்துக்காளான மனிதன் மீது இரக்கம், அதற்குக் காரணமான மனிதன் அல்லது சமூகத்தின் மீது சாத்விகமான கோபம் அல்லது விரோதம் காணப்படுகிறது. சமுதாயம் முழுவதையும் அதன் லட்சியங்களையும் பொறுப் பாக்கும், குற்றவாளியாக நிறுத்தும் ஆர்ப்பாட்டம் அங்கில்லை. (அச்வத்த அவர் களின் 'தர்ம கொண்டத்துக் கதை' போன்ற சில கதைகளில் அந்த அச்சத்தின் மூலம் காணப்பட்டாலும், பிரகதிசீலப் போக்கில் அமைந்த கதையான நிரஞ்சன அவர்

களின் 'கடைசிக் கிராக்கி'யோடு ஒப்பிட்டுப் பார்த்தால் வேறுபாடு தெளிவாகத் தெரியும்). அவர்கள் கருத்துப்படி, மனிதனின் நீதி, தருமம், ஆன்மீக நம்பிக்கைகள் தன்மீது விழும் எத்தகைய லௌகீகத் தாக்குதலுக்கும் தளர்ந்து போகாமல், வளைந்து கொடுக்காமல் இருக்கும் பொறுமை உடையன. பொறுமை சாத்தியமே இல்லை என்னும் அளவுக்குப் புறத் தாக்குதல் தாங்க முடியாது போனால் சமாதானம் செய்து கொள்ளாமல்-சாவின் மூலமானாலும் சரியே-தனது நம்பிக்கை, லட்சியங்களை நிலைநிறுத்திக் கொள்ளும் விதம் காணக்கிடக்கிறது. அதன் சோகமுடிவு, திகில், பயம் ஆகியவற்றை விட, நீதி, தருமம், ஆன்மீகம் பற்றிய லட்சியங்களைக் கடைப் பிடிப்பது அவற்றின் சிறப்பில் நம்பிக்கை வைத்துப் போற்றும் உணர்ச்சியை வளர்ப்பது போல் இருக்கும். அந்த மனிதனின், அவன் நம்பிக்கை கொண்டிருந்த லட்சியங்களின் வெற்றியாக ஆகுமே தவிர உண்மையில் சோகமாகத் தோன்றுவ தில்லை.

1940-ஐ ஒட்டித் தொடங்கிய பிரகதிசீல எழுத்தின் போக்கு அப்படியல்ல. சமூகத்தின் வெளி ஆசாரம், சிந்தனைகளெல்லாம் வேஷம்; வெளியே சௌஜன்யம் நாகரிகம் என்னும் பெயரில் காட்டிக் கொள்ளும் முகம் பொய்யானது. அவைகளை வெளிப் படுத்துவதன் மூலம் சமூகத்தின் குரூரமான உண்மை வடிவம் கண்ணுக்குப் புலனாகும். சமூகத்தின் பணம், நீதி, சமுதாயக் கருத்துக்கள் ஆகியவை ஏழை எளிய மனிதனை அல்லது சமூகத்தை மனிதத்தன்மையோடு காணாமல் குரூரமாகப் பார்ப் பதாக அமைந்திருக்கின்றன. அந்தக் குரூரத்தின் தாக்குதலைத் தாங்க முடியாத ஏழை எளியவர்கள், அவர்களுடைய நம்பிக்கைகள், லட்சியங்கள் எல்லாம் அதனடியில் சிக்கிச் சிதைந்து போகின்றன. சமுதாய நீதி கிடைக்க வேண்டுமானால் சமுதாய அமைப்பு மாற வேண்டும் என்பது அவர்களுடைய அடிப்படைக் கொள்கை. இந்த விஷயத்தில் அவர்கள் காட்டும் ஆர்வம் தீவிரமானது; வேகமானது. அதனால் மனிதத் தன்மையான இரக்கம், கோபமாக, ரோஷமாக மாறிய மனநிலையிலேயே அவர்கள் கதை எழுதுவது பொதுவானதாகும். சமூகத்தைத் தன்னலமுடையதாக, தன்னலவர்க்க மாகக் கருதிக் கொண்டு பார்ப்பதில் மார்க்சியவாதிகளிடமிருந்து இவர்கள் கருத்தைப் பெற்றாலும், முழுச் சமுதாயமும், அடிப்படையாகவே மாற வேண்டும் என்னும் கருத்தில் தாராளமான போக்கையே கொண்டிருக்கிறார்கள். பிரகதிசீலர் களின் கொள்கைகளும் லட்சியங்களும் அடிப்படையில் பாரம்பரியமான கொள்கை, லட்சியங்களிலிருந்து வேறுபட்டவையல்ல. அவர்களுடைய கதைப் பொருள்கள், சில சமயங்களில் பாரம்பரியக் கொள்கை, லட்சியங்கள், நம்பிக்கை களிலிருந்து வேறுபட்ட போக்காக இருக்கலாம் என்னும் எண்ணத்தை ஏற்படுத்து வதாக இருந்தாலும் உண்மை நிலை அதுவல்ல.

இந்த வகையான போக்குகளினால் நவோதய மற்றும் பிரகதிசீல எழுத்தாளர் களின் கதைகளில் ஒரு தெளிவான வேறுபாடு காணக்கிடைக்கிறது; நவோதய எழுத் தாளர்களுக்கு அநியாயத்துக்கும் துன்பத்துக்கும் பலியாகிற மனிதன் ஒரு தனி மனிதனாக மட்டும் படாமல் ஒரு தத்துவத்தின், கொள்கையின், லட்சியத்தின் பிரதி நிதியாகத் தோன்றுகிறான். அதனால் தனிமனிதனாக அவனது அநுபவங்களையும் எண்ணங்களையும் விரோதத்தோடு பரிசீலிக்காமல், ஏறக்குறைய ஒரு கொள்கை யின் பிரதிநிதி என்ற நிலையில் பார்க்கப்படுகிறது. ஆனால், அவனுக்கு அநியாயம் செய்பவர்களை, கஷ்டத்துக்குள்ளாக்குபவர்களைத் தனிமனிதர்களாகப் பார்க்கும் போக்கு இருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்குச் சமுதாய அல்லது தத்துவப் பிரதி நிதித்துவம் இருப்பதில்லை. வாழ்க்கையின் சந்தர்ப்பங்களாக, நிகழ்ச்சிகளாக, தற்

செயலாக வந்து சேர்ந்தவர்களாக மட்டுமே அவர்கள் தோற்றமளிக்கிறார்கள். பிரகதிசீலர்களில் அப்படியல்ல. அநியாயம் செய்பவன், அநியாயத்துக்கு ஆளாகிறவன்- இருவருக்குமே பிரதிநிதித்துவம் உண்டு. அநியாயத்துக்கு ஆளாகிறவன் எளியவர்க்கத்துக்கு, தன்னலத்துக்குப் பலியான வர்க்கத்துக்குப் பிரதிநிதியானால், அநியாயத்துக்கு காரணமானவன் அல்லது சந்தர்ப்பம், சமூகத்துத் தன்னலத்தின் பல்வேறு அங்கங்கள்; பல்வேறு கருவிகள். இத்தகைய போக்கு இருப்பதால் ஒரு தத்துவம் அல்லது லட்சியத்துக்காகப் போராடும் மனிதனுக்கு அவனுக்கே உரிய சிறப்பான தனித்தன்மை மற்றும் உண்மைமதிப்பு இருக்கிறது என்னும் நிதரிசனமான உண்மையை அடையாளம் கண்டுகொள்ளாமல் மேலே சென்றால் நவோதயப் பார்வை இரக்கமானதானாலும் கற்பனைமயமாகிறது; கனவுக் காட்சியாகிறது. ஒரு கொள்கை, தர்மம், நீதி ஆகியவகைகளில் தனிமனிதனுக்கு இருக்கக் கூடிய நம்பிக்கை, சிரத்தை ஆகியவற்றைச் சரளமாக ஏற்று, சமுதாயத்தின் தாக்கு அநியாயம், சர்வாதிகாரத்துக்குத் தனிமனிதனை உள்ளாக்கும் பிரகதிசீலப் பார்வையும் தீவிரமானதாகிறது.

1950-க்குப் பிறகு எழுதத் தொடங்கிய நவ்ய (புதிய) சிறுகதை எழுத்தாளர்களின் நோக்கில் நீதி, தர்மம், ஆன்மீகம் பற்றிய நம்பிக்கைகளும் கொள்கைகளும் தனி மனிதனில் ஸம்ஸ்கார* வடிவில் எவ்வளவு ஊறியிருக்கின்றனவோ அந்த அளவுக்கு அந்தச் சந்தர்ப்பம் உண்மையானது. அந்த உண்மை அவனுடைய செயல்களையும் எதிர்ச்செயல்களையும் உருவாக்குகிறது; நெறிப்படுத்துகிறது. புறத்தேயிருந்து வரும் தாக்கு, சூழ்நிலையின் நெருக்கடி இணைந்து கொள்ளும்போது அந்த உண்மை தளர்ந்து போகும் சாத்தியங்களை ஒட்டிக் கொண்டு, தனிமனிதனின் உள் மனத்திலிருந்து அநுபவங்களுக்கு லட்சிய உருவம் கொடுக்கும் எதிர்ச்செயல் நவ்ய கதைகளில் இடம் பெறுகிறது. அதனால் நவ்ய கதைகள் பெருமளவு உள்முக நோக்குடையனவாக இருக்கின்றன. நவோதயத்தின் 'கற்பனை வாழ்க்கை'யில் தோன்றும் உள்முக நோக்குக்கும், நவ்ய எழுத்தாளர்களின் உள்முக நோக்குக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. அந்த உள்முகநோக்கு கற்பனையின் வெளிப் பாடானால், நவ்ய உள்முக நோக்கு அநுபவத்தின் உள் சூட்சுமங்களின் அறிவினால் ஏற்பட்டதாகும். ஆகையால், நவ்ய கதை, கேவலம் ஒரு மனிதனின், ஒரு சமூகத்தின், ஒரு தத்துவத்தின் ஆராய்ச்சியாக அமையாமல், எல்லாமே ஒரு மையத்தில் ஆழமாக எதிர்ப்படும், போராடும் உயிர்ப்புடைய நேரங்களில் தம்மைத் தாமே பிரிவின்றி ஏற்றுக்கொள்ளும் செயலாகிறது. இப்படியாக, நவ்ய எழுத்தாளர்களிடையே ஒவ்வொரு சிறந்த கதையும் அநுபவத்து உண்மைநிலையின் தோற்றத்தை நடித்துக் காட்டுவதாக அமைகிறது. மொத்தத்தில், கற்பனைத்தாக்கு, அறிவுபூர்வமான தெளிவு, வாழ்க்கையில் குரூரமான உண்மையை மிஞ்சிய கனவுக்காட்சி—இந்த எல்லா அம்சங்களையும் பிரக்ஞையோடு கூடிய மனச் சூழலில் ஒரே நேரத்தில் எதிர்ப் படுவதை அறிவுபூர்வமான நவ்ய கதைகளில் காணலாம்.

நவோதய மற்றும் பிரகதிசீல எழுத்தாளர்களுக்கு எடுத்துச் சொல்வதற்குச் செறிவான கதைப்பகுதி உண்டு. இந்தக் கதைப் பகுதியின் இதயத்தைத் தொடும் நிலை அல்லது நிகழ்ச்சிகளின் சாதுரியமான அமைப்பு, மனத்தில் ஏற்படுத்தும் விளைவே அவர்களுக்கும் முக்கியமானது. இந்த நோக்கத்துக்கு, உரைநடையை அதன்

---

* பிறவிக் குணம் என்று பொதுவாகக் கொள்ளலாம்

விளக்கும் சாத்தியக் கூறுகளைத் தாண்டி அதிகமாகப் பயன்படுத்த வேண்டிய தேவையை அவர்கள் காணவில்லை. ஆனால் நவ்ய கதையாசிரியர்கள், சிறு கதையின் படைப்பும், அது மனத்தில் ஏற்படுத்தும் விளைவும், ஒரு கவிதையின் படைப்பு, அதன் விளைவு ஆகியவற்றிலிருந்து அடிப்படையில் வேறுபட்டவையல்ல என்ற தெளிவோடு எழுதுகிறார்கள். ஆகவே, உரைநடையை அதன் விளக்கச் சாத்தியக் கூறுகளையும் மீறிய குறியீட்டு நிலையில் தேடுகிறார்கள். அவர்களுக்குக் கதைப்பகுதியோ, இல்லாவிட்டால் நிகழ்ச்சிக் கோவையின் சாதுரியமோ முக்கிய மல்ல. அவையெல்லாம் கதையினுள் உருவம் கொள்ளும் அநுபவத்தின் பொருள் விளக்கத்துக்கு வடிவங்களாக மட்டுமே இடம் பெறுகின்றன.

## VI

1. கன்னடச் சிறுகதை வகையின் வரலாற்றுப் பார்வை தெரிய வேண்டும். தொடக்க காலத்திலிருந்து இன்றைய இளைஞர்கள் எழுதுகிற கதைகள் வரை அதன் காலப் பரப்பு இருக்க வேண்டும்.
2. கூடியவரையில் வரலாற்று மற்றும்/அல்லது இலக்கிய மதிப்புள்ள கதையா சிரியர்களை மற்றும்/அல்லது கதைகளின் பிரதிநிதியாக அமைய வேண்டும். அப்படிச் செய்யும்போது பல்வேறுபட்ட உத்திகளை நினைவில் இருத்திக் கொள்ளவேண்டும். அந்தப் பல்வேறுபட்ட தன்மை கதைப் பொருளை விடப் படைப்பாற்றலைப் பொறுத்ததாக இருக்க வேண்டும்.
3. எந்தவொரு கதாசிரியருடையதும் ஒரு கதைக்கு மேல் சேர்க்கக் கூடாது.
4. இந்தத் தொகுப்பில் இருபத்தைந்து கதைகள் இருக்க வேண்டும்.

பொதுவாக இந்தக் கட்டுப்பாடுகளை மனத்தில் இருத்திக் கொண்டு, கதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. இத்தொகுப்பு இந்தக் கட்டுப்பாடுகளுக்கும் அளவுக்கும் உட்பட்டதுதான். எனினும் வரலாறு மற்றும் இலக்கிய நோக்கிலிருந்து கன்னட மொழி முழுவதிலுமான கதைகளின் வளர்ச்சி மற்றும் இலக்கியச் சிறப்பை மொத்தத்தில் அடையாளம் காட்டும் வகையிலேயே உள்ளது. அத்துடன் கன்னட உலகின் முத்திரையையும் இத்தொகுப்பு கொண்டுள்ளது என்பதைத் தனியே சொல்ல வேண்டியதில்லை.

மைசூர்
20.7.1974

ஜி.எச். நாயக்

# கமலபுரத்து ஒட்டலில்

## பஞ்செ மங்கேசராயர்

கமலபுரத்துத் துறைமுகப் பகுதி வசந்த காலத்து மாலை வெயிலின் சுகத்தில் திளைத்துக் கொண்டிருந்தது. வீரபுரத்திலிருந்து வந்து துறையில் நின்றிருந்த ஓரிரண்டு படகுகள் நீரின் மெல்லிய அலைகளில் ஆடிக் கொண்டிருந்தன. படகுக் காரன் அரிவாள்மணையைக் காலில் அழுத்திக் கொண்டு கையிலிருந்த மீனை அரிந்து, பக்கத்தில் இருந்த நீர் நிரம்பிய மண் பானையில் போட்டுக் கொண் டிருந்தான். அவ்வப்போது பறந்து வரும் காக்கைகளை ஒட்டிக் கொண்டிருந்தான். சிறிது தூரத்தில் படகுக்காரர்களின் வீட்டுப் பெண்கள் இடுப்பளவு நீரில் இறங்கி 'டக்' என்று மூழ்கி, சேற்றிலிருந்து கணவாய் மீன்களைக் கைநிறைய அள்ளிச் சேலையின் மடிப்பில் நிரப்பிக் கொண்டிருந்தார்கள். கரைமேல் இருந்த 'மாப்பிள்ளை' இளைஞன், கறுத்த உடலைக் கொண்ட அந்தப் பெண்களைக் கள்ளத் தனமாகப் பார்த்துக் கொண்டே ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்தான். எங்கே பார்த்தாலும் மக்களின் இரைச்சல், வண்டிகளின் ஒசை, சுமை தூக்கிகளின் கூச்சல். இந்தப் பக்கத்தில் மலையிலிருந்து வந்த காப்பி மூட்டைகளைக் கடலிலிருந்த படகு களில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். ஒரு பக்கத்தில் குவித்து வைத்திருந்த அரிசி மூட்டைகளை எண்ணுவதற்கு ஆட்களை அழைத்துக் கொண்டிருந்தான் வியாபாரி. மறுபக்கத்தில் பம்பாயிலிருந்து வந்த சரக்குகளைக் கரையில் இறக்கிக் கொண் டிருந்தார்கள். இந்தப் பக்கம் 'மானிஃபெஸ்ட்" எழுதும் குமாஸ்தாக் கிழவன் கண்ணாடி அணிந்த கண்களை நிமிர்த்தி, காதில் இருந்த பேனாவை அவ்வப்போது எடுத்து, மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தான். வெளுத்த காப்டன் ஒருவன் வெள்ளைப் படகின் சுக்கானைக் கையில் பிடித்து, கடலில் போய்க் கொண்டிருந் தான். படகில் அவனுடைய வேலையாள் துப்பாக்கியைப் பிடித்துக் கொண்டு நின்றி ருந்தான். இன்னொரு பக்கத்தில் காற்று வாங்க வந்து, கும்பலாகச் சேர்ந்தவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அரசாங்கவேலை பார்க்கும் குமாஸ்தாக்கள் மாலை உலா வருவதற்கு இன்னும் நேரமிருந்தது. வந்திருந்தவர்களில் ஓரிருவர் மூன்று பைசா 'ஒட்டலின்' பக்கம் போய்க் கொண்டிருந்தார்கள். ஒட்டலில் வேலையை முடித்துக் கொண்டவர்கள் மீசையைத் துணியால் துடைத்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் சுருட்டுப் புகையைத் தூபமாக்கினார்கள். வேறு சிலர் பீடி புகைப்பதற்காகத் தீக்குச்சியை உரசி, தீபாராதனை நடத்திக் கொண்டிருந்தார்கள். எல்லோரும் முன்னாலேயே பணத்துக்கு நீர்வார்த்திருந்தார்கள்.

ஒட்டலின் முதலாளி பூர்ணசுவாமி அய்யங்கார். இந்தப் பெயரைச் சிலர் பொன்னுசாமி என்று சுருக்கியிருந்தார்கள். சிலர் பெண்ணுசாமி என்றும் பொண் சாமி என்றும் காரணப் பெயரிட்டு அழைப்பதும் உண்டு. ஏனென்றால், இருப

தாண்டுகளுக்கு முன்னால் அய்யங்கார் ஒரு பெண்ணுக்காக ஊரை விட்டுப் போயிருந்தார். பின்பு, சீரங்கம், திருப்பதி, பூரிஜகந்நாதம், ராமேசுவரம் முதலிய புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செய்து எப்படியோ கொஞ்சம் பணம் சேர்த்துக் கொண்டு மீண்டும் கமலபுரத்திற்கே வந்து, இந்த ஒட்டலைப் பிறர் நலனுக்காகவே இங்கே நிலை நாட்டினார். யாத்திரையினால் பயன் உண்டு என்று சொல்லுவார். நம்மூர்க்காரர் என்றாலும் உள்நாட்டு வெளிநாட்டுப் பலகாரங்களைப் பற்றியும், பல்வேறு மொழிகளில் ஒரளவு அறிமுகமும் அதிசயமான பல செய்திகளையும் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தார். அவருக்குக் குழந்தைகுட்டி ஏதுமில்லை என் றாலும் நல்லூர் நீலம்பாளின் சின்ன மகன் மட்டும் இவரை அப்பா என்றும் ஐயா என்றும் அழைத்துக் கொண்டு ஒரு நாளைக்கு இரண்டு முறை இங்கே வந்து காசு வாங்கிப்போய்க் கொண்டிருந்தான். சுயேச்சையாக வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதற்காக அந்த ஒட்டலை நடத்துவதாகவும் அதனால் எந்தப் பயனுமில்லை யென்றும் அவர் ஏனோ அடிக்கடி முணுமுணுத்துக் கொண்டிருந்தார். ஆனாலும் கிராக்கிகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே போயிற்று. ஒரு பைசா காப்பி குடிக்கலாம் என்று வந்தவனும் அய்யங்காரின் யாத்திரை அனுப வங்களைக் கேட்டுக்கொண்டே, என்ன தின்றோம் என்பதையும் அறியாமல் மடியி லிருந்த காசையெல்லாம் அர்ப்பணித்து விட்டுப் போய்க் கொண்டிருந்தான். ஒரிருவர், அய்யங்கார் தம் செய்தி மூட்டையை அவிழ்க்குமாறு செய்து அவர் அந்த ஆனந்தத்தில் மூழ்கியிருந்த சமயம் பார்த்து மெல்ல மாயமானார்கள். அந்தக் கணத் திலேயே அய்யங்கார் திடுக்கிட்டு எழுந்து அவர்கள் பின்னாலேயே போய்ப் பணத்தை வசூல் செய்தார்.

முதன் முதலில் பூர்ணசுவாமி அவர்களுக்குக் கமலபுரத்து இளைஞர்களைப் பற்றி நல்ல எண்ணமே இருந்தது. இப்போதைக்கு அந்த எண்ணம் மாறிவிட்டது. அநேக வாடிக்கையாளர்கள் 'லட்டு' தின்பதற்குப் பதிலாக 'துட்டு' தின்னத் தொடங்கியிருந் தார்கள். இதைத் தடுப்பதற்குப்பல உபாயங்களைக் கையாண்டார். வர வேண்டிய பணத்தைக் கணக்குப் புத்தகத்தில் முன்னதாகவே பதிந்து வைத்தார். ஏதோ காரணங்களுக்காக வெளியூர் போயிருந்த வாடிக்கையாளர்களுக்குத் தம்முடைய க்ஷேம லாபங்களைப் பற்றிக் கடிதம் எழுதிப் பார்த்தார். 'ஏழையின் விண்ணப்பம்' என்று கடனாளியின் பெயரை எழுதி ஒட்டல் சுவரில் மாட்டி வைத்தார். கடைசியில் கணக்கை எப்படியாவது சரி செய்யாமல் விடுவதில்லை. ஆறு ஆண்டுகளாக முயற்சி செய்து பெற்ற கடன்காரர்களின் பெயர்களையெல்லாம் கணக்குப் புத்தகத்தில் சிவப்பு மையால் அடிக்கோடிட்டு வைத்தார்.

இன்றுமாலை ஒட்டலில் பலர் கூடியிருந்தார்கள். கரியூர் சாமராயர் கோதுமை ரொட்டியைக் காப்பி நிரம்பிய பாத்திரத்தில் ஊறப் போட்டுக் கொண்டிருந்தார். மலைநாடு குப்பண்ணா டீ கிளாசை முன்னாலிட்டு உதடுகளால் மெல்ல மெல்ல உறிஞ்சிக் கொண்டிருந்தார். இவர்கள் இருவர் மீதும் அய்யங்காருக்குக் கோபம்.

அய்யங்காருக்குக் கோபம் வரவேண்டும் என்றே இவர்கள் இருவரும் குறும்பு செய்யத் தொடங்குவார்கள். இரண்டு நாட்களுக்கு முன்னால் இந்தப் புண்ணிய வான்கள் ஒட்டலில் வயிறு முட்டத் தின்று, குடித்து விட்டு அய்யங்காரை உசுப்பி விட்டுப் போயிருந்தார்கள். அய்யங்கார் தமது சொந்த அனுபவங்களைப் பற்றி வந்த வர்களிடம் மனங்கவரும்படி சொல்லிக் கொண்டிருந்தபோது, அய்யங்கார் சொல்வ தெல்லாம் பொய் என்றும் பேச்சு சுவாரஸ்யத்தில் வாடிக்கையாளர்கள் தம்மை மறந்து கடையில் வாங்கிச் சாப்பிட அவர் கடைப்பிடிக்கும் வழிதான் அக்கற்பனைக்

கதைகள் என்றும் இந்த முட்டாள்கள் வாதாடினார்கள். அய்யங்கார் தான் சொல்லிய செய்தி எதுவுமே பொய் அல்ல என்று காட்டவும் இந்தக் கொடியவர்களின் கொட்டத்தை அடக்கும் வழியைக் காணவும் முடிவு செய்தார். இன்று குப்பண்ணா கலகத்துக்குத் தொடக்கமாக, "ராயரே! அய்யங்கார் ராமேசுவரக் கடலை நீந்திப் போன சங்கதி உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

பூர்ணசுவாமி அய்யங்கார் வழக்கம் போல, குரல் வெளியே கேட்காதபடி மனத் துக்குள்ளேயே மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார்.

சாமராயர்: "அன்றைக்கு உங்களுடன் யார் இருந்தது, அய்யங்காரே? இந்த ஆபத்திலிருந்து உங்களைக் காப்பாற்றியவர் அந்த குண்டாச்சார்தானே?"

குப்பண்ணா: "அப்படித்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நம்ம அய்யங்கார் அந்தமான் தீவுக்கே போயிருப்பாரோ என்னவோ?"

அய்யங்கார் மவுன விரதத்தை கடைப்பிடிப்பதைப் பார்த்து, சாமராயர் "உங்கள் குண்டாச்சார் இப்போது எங்கிருக்கின்றார்?" என்று கேட்டார்.

இதற்குள் யாரோ ஒட்டலுக்குள் நுழைந்தார். அய்யங்கார் எதற்காகவோ உள்ளே போயிருந்ததாலும் மற்றவர்களை அவருக்கு அறிமுகம் இல்லாததாலும் வந்தவர் ஒரு நிமிஷம் அங்கேயே நின்றார். அய்யங்கார் வெளியே வந்ததும் அந்த ஆளைப் பாாத்து மனம் பூரித்தார். வந்தவரும் பதிலுக்கு நகைத்துக் கொண்டே "என்ன அய்யங்காரே? சௌக்கியமா?" என்று கேட்டார்.

அய்யங்கார் வந்தவரைப் பார்த்து, "எப்ப வந்தீங்க, குண்டாச்சாரியரே?" என்று கேட்டார்.

மற்றவர்கள் வாய்மூடி வநதவரை உற்றுப் பார்த்துக் கொண்டே உட்கார்ந் திருந்தார்கள்.

அவனும் "என்ன சொல்லட்டும் அய்யங்காரே! பத்து வருஷமா உங்களைத் தேடிட்டிருக்கேன். இன்றைக்குத்தான் உங்கள் தரிசனம் கிடைச்சது" என்ற சொல்லி, களைப்பை நீக்கிக் கொள்ள முயன்றான். அய்யங்கார் கொஞ்சம் யோசிப்பவர் போல இருந்து "அதுக்கப்புறம் நீங்களும் நானும் சந்திக்கவே இல்லையல்லவா?" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே குப்பண்ணாவைப் பார்த்தார்.

குப்பண்ணா: "யாருடைய சந்திப்பு?"

அய்யங்கார் அலட்சியமாக "நீங்களும் நானும் அப்புறம் பார்த்துக்கவே இல்லே. நான் ராமேசுவரக் கடலைக் கடந்து, மூழ்கிய படகுக்கு முட்டுக் கொடுத்து அதை மிதக்க வைத்து கன்னியாகுமரி முனையைத் தொட்டபிறகு உங்களைப் பார்க்க வில்லை; உண்மைதான்," என்ற சொல்லி, சாமராயரின் முகத்தையே பார்த்தார்.

அந்த ஆளும் "சரி சரி. அந்த நாட்கள் எல்லாம் போய் விட்டன. இப்போது நம்முடைய பேச்சை நம்புகிறவர்கள் கூட யாருமில்லை" என்று சொல்லி, தன்னையே பார்த்துக் கொண்டிருந்த குப்பண்ணாவைக் குறிப்பிட்டு "இவர் யார்?" என்று அய்யங்காரைக் கேட்டான்.

குப்பண்ணா இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கொஞ்சம் முன்னால் வந்து, "ஆச்சாரே! உங்கள் பெயரை நாங்கள் அய்யங்கார் வாயால் கேட்டுக் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறோம். நம் பூர்ணசுவாமி அய்யங்கார் காவேரியில் குளிக்கறப்போ..."

அந்த ஆள் "ஆமாம்" என்று தலையை ஆட்டி "அவரைக் காப்பாத்தின குண்டாச் சார் நான்தான். நான் இல்லாவிட்டால் அன்றைக்கு நம் அய்யங்கார் முதலைக்குத்

தீனியாகியிருப்பார். என்ன அய்யங்காரே? 50 அடி நீள முதலை எங்கே? நம்முடைய சின்ன தர்ப்பை எங்கே? இவர் யார்?" என்று அய்யங்காரைக் கேட்டார்.

அய்யங்கார் அலட்சியமாக "அவர் தரகர் குப்பண்ணா. நாம் சொல்றதயெல்லாம் பொய் என்று சொல்லக் கூடியவர். நமக்கெதுக்கு அவர் வம்பு. அதையெல்லாம் தெரிஞ்சவங்க இந்த ஊரில் யார் இருக்காங்க?" என்றார்.

சாமராயர்: "இவரா அந்த குண்டாச்சார்?"

குண்டாச்சார்: காவேரியில் குளிக்கறப்போ முதலை வாயிலிருந்து அய்யங் காரைக் காப்பாத்தின குண்டாச்சாரியார் நானே! மலையாளச் சீமையில் அய்யங் கார் படுத்த படுக்கையாகக் கிடக்கும்போது அவரைக் கவனித்து உயிர் கொடுத்த அந்த குண்டாச்சாரியாரும் நானே! 'உன்னை என்றைக்கும் மறக்க மாட்டேன். உன்னை என்றைக்கும் கைவிடமாட்டேன்' என்று அய்யங்கார் எனக்கு வாக்குக் கொடுத்து இருந்தார். நான் தனியாகச் சுற்றிக் கொண்டிருந்தபொழுது எத்தனையோ தடவை அய்யங்காரை நினைத்தேன். ஒரு தடவை அய்யங்காரைப் பார்த்தால் போதும், என்னுடைய கஷ்டங்கள் எல்லாம் தீரும் என்று நினைத்தேன். அந்தக் கண்ணனின் அருளால் இன்றைக்கு அவரைப் பார்த்தேன். அய்யங்காரே! எல்லாம் மறந்திருப்பீர்களே?"

அய்யங்கார்: இல்லை சுவாமி! என் உயிர் பிழைத்தது உங்களால். உங்கள் உதவியைச் சாகும்வரை மறக்க மாட்டேன். அதற்குப் பதிலாக என்னால் முடிந்த எதையும் செய்யத் தயாராக இருக்கின்றேன்."

குப்பண்ணா: "அவர் சாவதாக இருந்தால் நீங்கள் உதவி செய்வதுதான் உப காரம்."

அதற்குள் அய்யங்கார் சொன்னபடி வேலையாள் காப்பி டம்ளர்களையும் உணவுத் தட்டுக்களையும் கொண்டு வந்து வைத்தான். குண்டாச்சார் ஒரு கண்ணைச் சிற்றுண்டியிலும் மற்றொன்றை அங்கே இருந்தவர்களிடமும் நாட்டி, "அதைவிட, சிங்களத்தீவில் மூன்ற காட்டானைகள் இவரைத் துரத்திக் கொண்டு வந்தபோது நான்..." என்று பாதியில் நிறுத்தி, சிற்றுண்டியைப் பார்த்தார்.

தம் டிபனை முடித்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்த குப்பண்ணாவும் சாமராயரும் இவருடைய சமாசாரத்தில் விருப்பம் கொண்டு குண்டாச்சாரியாரின் அருகில் வந்தார்கள். அய்யங்கார் "சாப்பிடுங்கள், சாப்பிடுங்கள்" என்று சொன்னதும் அது தனக்காகத்தான் சொன்னது என்று நினைத்துக் கொண்டு குப்பண்ணா கையைத் தட்டில் வைத்து இடக்கையில் காப்பி டம்ளரை பிடித்துக் கொண்டார். சாம ராயரும் அப்படியே செய்யத் தொடங்கினார். அய்யங்காரக்குத் தேள் கொட்டியதைப் போல் இருந்தது.

ஒரே நிமிஷத்தில் சிற்றுண்டிகளெல்லாம் மாயமாகின. குண்டாச்சார் "உடம்பு அசதி தீரவில்லை" என்று ஆயாசத்துடன் சொன்னார். அய்யங்கார் மற்ற இரண்டு பேரையும் கோபத்துடன் பார்த்தபடி, அரை மனதுடன் இன்னும் கொஞ்சம் சிற்றுண்டியை குண்டாச்சாரியாரின் கையருகே கொண்டு வந்து வைத்துவிட்டு, 'என்னய்யா, பெரிய மனுஷங்களே! நான் முன்னே சொன்ன சங்கதி எல்லாம் முழு வதும் உண்மைதான் என்று இப்போதாவது நம்பறீங்களா?" என்று கேட்டார்.

குப்பண்ணா: "இன்றைய டிபனில் முதலை சமாசாரம் நிச்சயம் என்று தெரிய வந்தது. குண்டாச்சாரே, இங்கே எத்தனை நாட்கள் இருப்பீர்கள்."

குண்டாச்சார்: எங்களுடைய பணம் தீருகிறவரை இங்கேயிருப்பேன்.

அய்யங்காருக்கு இந்தப் பேச்சு பிடிக்கவில்லை. குண்டாச்சார் கையைக் கழுவிக் கொண்டு வந்து பொடி கேட்டார். அய்யங்கார் பொடி டப்பாவைக் கொடுத்தார். குண்டாச்சார் பொடியைக் கையில் கொட்டிக் கொண்டு டப்பியை சாமராயரிடம் கொடுத்தார். இவர் இரண்டு மூன்று தடவை கையிலே எடுத்த போதும் அது சரியாக வராததால் அரை துலாம் பொடியை மூக்குக்குப் பதிலாகத் தம்முடைய டப்பியில் போட்டுக் கொண்டார். அய்யங்கார் பல் பிடுங்கின பாம்பைப் போல் பரிதவித்தார். கடைசியாக, சாமராயரும் குப்பண்ணாவும் அடுத்த நாள் வருவதாக அபயம் கூறி விட்டுப் போய்விட்டார்கள்.

வாடிக்கையாளர்கள் எல்லாரும் ஓட்டலிலிருந்து போன பிறகு குண்டாச்சார் மீசையை முறுக்கியபடியே "அய்யங்காரே, நான் செய்தது எப்படி? அந்தப பாவிகள் உங்களை நம்பும்படி செய்தேனா இல்லையா, சொல்லுங்கள்" என்றார்

அய்யங்கார்: "கொஞ்சம் மீறிப் போய்விட்டது. நான் சொன்ன அளவு சொல்லி யிருந்தால் போதுமாயிருந்தது. நீ பொய்யை அதிகம் கலந்து விட்டாய்".

குண்டாச்சார்: "அப்படிச் செய்யதால்தான் அந்தப் பாவிகள் நம்பினார்கள். நான் கொஞ்சம் பூசியிருந்தாலும்கூட என் பேச்சை யாரும் பொய் என்று சொல்ல மாட்டாங்க"

அய்யங்கார், "என் பொடியை எல்லாம் பங்கிட்டு விட்டு காலி டப்பா வைத்திருக் கிறாய்".

குண்டாச்சார்: "நான் பேசும்போது கொஞ்சம் ஆவேசப் பட்டேன் போலிருக கிறது. நீங்கள் சொன்னதை எல்லாம் மறந்துவிடடேன்."

அய்யங்கார்: "ஆமாம். நீ நாளை மறுநாள் படகேறி கொன்னூருக்குப்போகிறேன் என்று அவர்களிடம் சொல்லாமல விட்டாய்."

குண்டாச்சார்: "நாளைக்குச் சொன்னால் போயிற்று. அது போகட்டும், நாம ஆடிய ஆட்டம் அந்த முட்டாள்களின் கண்ணை மறைத்து விட்டது"

அய்யங்கார்: "நாளைக் காலையிலிருந்தே நீ போவதாக மெல்லச் சொல்லிக் கொண்டிரு. மாப்பிள்ளை வீட்டுக்குப் போகிறேன் என்று சொல். நாளை மறுநாள் போவதானால் நம்முடைய கண்டிஷன்படி ஒரு வராகன் கொடுக்கிறேன்" குண்டாச் சார் சிரிப்பை அடக்கிப் பேசத் தொடங்குவதற்குள் யாரோ ஒருவர் ஓட்டலின் வெளியே நின்று கூப்பிட்டார்கள். அந்தக் குரலைக் கொண்டு குப்பண்ணாவாக இருக்க வேண்டும் என்று நினைத்து "இந்த நேரத்திற்கு இங்கே காப்பி கிடைக்கா தய்யா" என்று சொல்லி உள்ளே போய்விட்டார் அய்யங்கார். குண்டாச்சார் பசி இல்லாததால் அய்யங்காரின் படுக்கையை விரித்துப் படுத்து விட்டார். அய்யங்கார் சாப்பிட்டு முடித்து, படுத்துக் கொண்டிருந்த குண்டாச்சாரைப் பார்த்து மனம் கொதிக்க பல்லைக் கடித்தபடியே உள்ளே போனார்.

ஞாயிற்றுக்கிழமை படகு கமலபுரத்திற்கு வந்தது. அய்யங்கார் அந்தப் படகு வந்திருக்கிறது என்று இரண்டு மூன்று தடவை குண்டாச்சாரிடம் சொன்னார். குண்டாச்சார் இந்தப் பேச்சைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. ஓட்ட லுக்கு வந்தவர்கள் எல்லாரும் குண்டாச்சார் அன்று ஊருக்குப் போவார் என்று அறிந்திருந்தார்கள். ஆனால் குண்டாச்சார் வந்தவர்களுடன் பேசிக் கொண்டிருந்த பொழுது தான் போவதைப் பற்றி ஒரு குறிப்பும் காட்டவில்லை. அய்யங்கார்

அவருடைய பேச்சை நடுநடுவே திசை திருப்பிப் பார்த்தார். அய்யங்கார் கொன்னூர்த் தேர்த் திருவிழாவைப் பற்றிக் குறிப்பிட்டு, புருவத்தை நெறித்த போது குண்டாச்சார் பிளேக் நோய்க்கான மருந்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அய்யங்கார் இதையெல்லாம் மிகவும் பொறுமையாகத் தாங்கிக் கொண்டார். வாடிக் கையாளர்கள் எல்லாரும் இருட்டியபிறகு தம் தம் வீடுகளுக்குப் போனார்கள்.

அய்யங்கார் கோபத்தில் கொதித்துக் கொண்டே "இதற்கு என்ன அர்த்தம்?" என்று சீறினார். குண்டாச்சார் அமைதியாக "எதற்கு அர்த்தம் பொன்சாமி" என்று கேட்டார். "என்னைப் பொன்சாமி என்று கூப்பிடாதே. நாளைக் காலை நீ இங்கிருந்து புறப்படணும், தெரிஞ்சுதா?" என்று அய்யங்கார் கத்தினார்.

குண்டாச்சார்: "புறப்படணுமா? எங்கே புறப்படணும்?"

அய்யங்கார்: "எங்கே வேண்டுமானாலும் போ! நீ இங்கிருந்து போனால்போதும்".

குண்டாச்சார்: "அய்யங்காரே, என்னென்னவோ சொல்றீங்களே, நேற்று ராத்திரி தூங்கவில்லையா என்ன?"

அய்யங்கார்: "நாளைக் காலையில் நீ போனால் சரி, இல்லாவிட்டால் நானே கழுத்தில் கை வைத்துத் தள்ளிவிடுவேன். நான் சொன்ன கண்டிஷன் ஞாபகம் இருக்கிறதல்லவா?"

குண்டாச்சார்: "எந்தக் கண்டிஷன்? கண்டிஷனாவது கடலைக் காயாவது! நாளைக்குத் தலைக்கு எண்ணெய் தேய்ச்சு குளிக்கலாம் என்று இருக்கிறேன்".

அய்யங்கார் கோபத்தை அடக்க முடியாமல் "நீ போகிறாயா' இல்லையா நாளைக்கு? இந்தப் பாவிகளுக்கு நான் சொன்ன தெல்லாம் உண்மையென்று காட்டு வதற்காக, ஒரு குறும்புக்காக உன்னை வரவழைத்தேன். நீ இங்கேயே ஒட்டிக் கொண்டு விட்டாய்".

குண்டாச்சார்: "அன்றைக்கு செய்த உதவி எல்லாம் மறந்து போய் விட்டதா? முதலை கடித்த போது நான் ஒருவனே என் தர்ப்பையினால்..."

அய்யங்கார்: "சும்மா தொந்தரவு கொடுக்காதே. என்னை முதலை பிடிக்கவு மில்லை. குண்டாச்சார் காப்பாற்றவுமில்லை."

குண்டாச்சார்: "நன்றி மறந்தால் அதற்கு மருந்தே இல்லை. நான் உன் உயிரைக் காப்பாற்றினேன் என்பதை மறந்து விட்டாயா?"

இப்படிச் சொல்லி குண்டாச்சார் கண்ணீரைத் துடைப்பது போல விரல்களால் கண்ணைத் துடைத்துக் கொண்டிருந்தார். வெளியே யாரோ பேசுவதைப் போல் கேட்டது.

அய்யங்கார்: "சரி. பதினைந்து ரூபாய் கொடுப்பேன், நீ போய் விடுகிறாயா?"

குண்டாச்சார்: "அய்யங்காரே, நீங்கள் முதலில் படுத்துத் தூங்குங்க. நாளைக்கு பேசலாம். தூக்கமில்லாவிட்டால் புத்தி கெட்டுப்போகும்."

அய்யங்காரும் குண்டாச்சாரியாருக்கும் சண்டை நடந்தது என்கிற பேச்சு ஊரெல்லாம் பரவியது. குப்பண்ணாவும் சாமராயரும் இதைப் பற்றி அய்யங் காரிடமே கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போதெல்லாம் கடன் கொடுக்கும் வழக்கத்தை நிறுத்தி விட்டிருந்ததால் இவர்கள் இருவருக்கும் அங்கே போகும் துணிச்சல் இல்லை. ஞாயிற்றுக் கிழமை வரும் படகில் போகாவிட்டால் இன்னும் நாலைந்து நாட்களில் குண்டாச்சார் தன்னுடைய ஒட்டலையே சாப்பிட்டு விடுவான் என்று பயந்து "டேய் குண்டா, நீ நாளைக்குப்

போனால் சரி, இல்லாவிட்டால் நானே அவர்கள் எல்லாருக்கும் உண்மையைச் சொல்லி உன்னை இங்கிருந்து விரட்டி விடுவேன்" என்றார்.

குண்டாச்சார்: நான் வரும் திங்கட்கிழமை போனால் போதாதோ? கையில் காசு இல்லை. நீ கொடுக்கும் பதினைந்து ரூபாய் வழிச் செலவுக்கே போதாது. உனக்காக இவ்வளவு பொய் சொல்லி நானும் பாழானேன்."

அய்யங்கார்: "இந்தா. நீ போனால் சரி" என்று சொல்லி, அவன் கையில் பதினாறு ரூபாயைக் கொட்டினார்.

திங்கட்கிழமை பத்து மணிக்கு, குண்டாச்சார் போவார் என்று ஊரில் பேச்சு அடிபட்டதும் குப்பண்ணாவும் சாமராயரும் ஒட்டலுக்கு வந்தார்கள். குண்டாச்சார் புறப்படுவதற்குத் தயாராக இருந்தார்.

குண்டாச்சார் இவர்களை எல்லாம் பார்த்ததும் "நான் எத்தனையோ ஊர்களைப் பார்த்திருக்கின்றேன் எவ்வளவோ ஜனங்களைப் பார்த்திருக்கின்றேன். ஆனால் இதைவிட நல்ல ஊரையோ உங்களைவிட நல்லவர்களையோ நான் எங்கேயும் பார்த்ததில்லை."

குப்பண்ணா, குண்டாச்சாரியாரிடம் "எங்களை மறக்கக் கூடாது" என்று கேட்டுக் கொண்டார்.

குண்டாச்சார்: "நான் இந்த வயதான காலத்தில் திக்கில்லாமல ஊர் ஊராக அலையும்போது உங்கள் நினைவு வராமல் போகாது. பசியில் கஷ்டப்படும்போது இந்த ஒட்டலின் ஞாபகம் வரும்."

சாமராயர்: "நீங்கள் மகள் வீட்டுக்கு—கொன்னூருக்குத தானே போகிறீர்கள்?"

குண்டாச்சார் மெல்ல நகைத்தபடியே தலையை ஆட்டி "எனக்கு மகளுமில்லை, உறவுமில்லை. இந்த உலகத்தில் நான் ஒருவனே. என்னால் பலன் அடைந்தவர்கள் பலர் இருககிறார்கள்" என்றார்

இந்தப் பேச்சைக் கேட்டதும் எல்லோரும் இரக்கத்தோடு அய்யங்கார் முகத்தைப் பார்த்தார்கள்.

குப்பண்ணா: "நீங்கள் மகள் வீட்டுக்குப் போவதாக அய்யங்கார்தான் எங்களிடம் சொன்னார்". அய்யங்கார் கோபத்தில் எழுந்து நின்று முகத்தைக் கோணலாக்கிக் கொண்டார்.

சாமராயர்: "அய்யங்கார் உங்களை எவ்வளவோ வற்புறுத்தியும் நீங்கள் தான் பிடிவாதமாகப் போவேன் என்று அடம் பிடித்ததாக அவர் எங்களிடம் சொன்னார்."

குண்டாச்சார்: "சுத்தப் பொய்! அவர் ஒரு பேச்சு சொல்லியிருந்தால் நான் இங்கேயே தங்கிவிட்டிருப்பேன். நான் இங்கிருப்பது அவருக்குப் பிடிக்கவில்லை. எனக்கு ஒருவேளை போடுகிற சாப்பாடு அவருக்கு அதிகமாகத் தெரிகிறது. நான் கொன்னூருக்குப் போவேன் என்ற செய்தியைக் கிளப்பியதும் அவர்தான். அவர் பொய் சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை. சூழ்ச்சியால் வெல்லவேண்டும் என்று அவர் சொன்னார். கடைசியில் நான் எங்காவது போய் விடுவது என்று முடிவு செய்தேன். போவதற்கு முன்னால் உங்களிடம் ஏன் பொய் சொல்லிவிட்டுப் போக வேண்டும்?".

இதைக் கேட்டு எல்லாரும் திகைத்து நின்று விட்டார்கள்.

குண்டாச்சார்: "எனக்குக் குழந்தை குட்டிகள் இல்லை. என்னை வெளியே தள்ளி விடுவேன் என்று அய்யங்கார் மிரட்டியதால் நான் போகிறேன். அவர் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் நான் இங்கேயே தங்கிவிட்டிருப்பேன்!"

குண்டாச்சார் இப்படி சொல்லிவிட்டு, கண்களில் சிரிப்புத் தோன்ற அய்யங் காரைப் பார்த்துக் கொண்டே வெளியே போனார். அவர் எங்கே போனாரோ இதுவரை தெரியவில்லை. குப்பண்ணாவும் சாமராயரும் அவர் போனபிறகு இவருடைய ஜாதகத்தை அலசிப் பார்த்ததில் அவர் நல்லூர் நீலாம்பாளின் தம்பி என்பது தெரிய வந்தது. இப்போதும் சிலர் அய்யங்காரின் வாழ்க்கை வரலாற்றை அவர் எதிரிலேயே அலசும்போது குண்டாச்சார் வந்துபோன சங்கதியை விளக்க மாகக் கொடுப்பதுண்டு.

# தயிர்க்காரி மங்கம்மா

## சீனிவாஸ

மங்கம்மா எங்களுக்குப் பல ஆண்டுகளாக வாடிக்கையாகத் தயிர் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருக்கிறாள். இந்த வாடிக்கை பெங்களூரின் வழக்கம் மற்ற ஊர்களில் வாடிக்கை என்றால் தினமும் தவறாமல் வந்து தயிரைக் கொடுத்து விட்டு மாதக் கடைசியில் பணம் வாங்கிக் கொண்டு போவது என்று பெயர். பெங்களூரில் இப்படிப்பட்ட வழக்கம் இல்லை. சாதாரணமாக எங்கள் பகுதிப் பக்கம் வரும்போது மங்கம்மா எங்கள் வீட்டுக்கும் வருவாள். "தயிர் வாங்கறீங்களாம்மா, நல்ல தயிர் கொண்டு வந்திருக்கேன்" என்று சொல்வாள். எங்களுக்குத் தேவையிருந்தால் நாங்கள் வாங்கிக் கொள்வோம். அன்றைக்கு விலை எப்படி இருக்கிறதோ அப்படியே அவளுக்கு அப்போதே பணத்தைக் கொடுத்து விடுவோம். அல்லது அடுத்த நாள் தருவோம். இதுதான் எங்களுக்கும் அவளுக்குமிடையேயிருந்த வாடிக்கை. அவளது ஊர் அவலூர்ப் பக்கத்தில் ஏதோ ஒரு கிராமம். வெங்கடா புரமோ என்னவோ அதன் பெயர். அங்கிருந்து எங்கள் வீட்டுப் பக்கமாகத்தான் வர வேண்டும். போகும்போதும் இந்த வழியாகத்தான் போக வேண்டும். நான் கொஞ்சம் நல்லவிதமாகப் பேசுகிறேன் என்பதற்காக மங்கம்மா சில நாட்களில் கிராமத்தி லிருந்து வரும் போது ஒரு தடவையும், தயிர் எல்லாம் விற்றுவிட்டுத் திரும்பும் போது ஒரு தடவையும் வருவதுண்டு. வந்து எங்கள் வீட்டு முற்றத்தில் கொஞ்ச நேரம் உட்கார்ந்து எங்களோடெல்லாம் பேசிவிட்டு வெற்றிலை போட்டுக் கொண்டு தேவையிருந்தால் வெற்றிலையோ பாக்கோ கேட்டு வாங்கிக் கொண்டு அதற்கப் புறம் ஊருக்குப் போவாள். அந்த நேரங்களில் நான் கொஞ்சம் ஓய்வாக இருந்தால் அவள் தனது இன்பதுன்பங்களைச் சொல்லுவாள்; என்னையும் ஏதாவது சொல் என்று கேட்பாள். எனக்கு என்ன கஷ்டம்? இப்போதைக்குக் கடவுள் எல்லாம் கொடுத்திருக்கின்றார். ஏதோ வீட்டுச் சமாசாரங்கள்—பூனை பால் குடித்து விட்டுப் போய்விட்டது என்றோ, எலி வந்து பூசணிக்காயைத் தின்றுவிட்டது என்றோ—ஏதாவது ஒரு பேச்சு சொன்னால், 'ஐயோ இந்த உலகமே இப்படித்தான்' என்று அவள் அனுபவத்தின் தத்துவங்களைக் கூறி, உலகத்தைச் சரியாக நடத்துவது எப்படி என்று சொல்லிக் கொடுப்பாள். மொத்தத்தில் மங்கம்மா எனக்கு மிகவும் வேண்டியவள்; எனக்கும் அவளுக்கும் நல்ல நட்பு இருந்தது.

ஏறக்குறைய ஒரு மாதத்திற்கு முன்பு காலையில் "தயிர் வாங்கறீங்களாம்மா?" என்று மங்கம்மா வந்தபோது நான் எங்கோ உள்ளே இருந்தேன். எங்கள் பையன் "வாங்கு வாங்க இரு" என்று சொல்லி அவளிடம் போய் நின்று கொண்டு "கொஞ்சம் தயிர் விடு" என்று கையை நீட்டினான். மங்கம்மா பானையிலிருந்து ஒரு கரண்டித் தயிரை அவன் கையில் விட்டாள். "அம்மாவ சீக்கிரம் வரச் சொல்லுப்பா நான் போவணும்" என்று சொன்னாள். அதற்குள் நானும் வந்து சேர்ந்தேன். மங்கம்மா "அம்மா, தங்கம்

மாதிரி ஒரு பிள்ளையைப் பெத்து 'வச்சிருக்கே. உன் குணம் எப்படியோ அந்தப் பிள்ளையும் அப்படியே இருக்குது. ஆனா எல்லாமே அவன் வளந்து பெரிய ஆளா ஆவற வரைக்கும்தான். வளர்ந்தப்புறம் எவளோ வருவா. இப்ப அம்மா அம்மான்னு இருக்கிற பையன் அப்ப் இருக்கறயா செத்தாயான்னு கூட அம்மாவ கேக்க மாட்டான்" என்றாள். நான் " ஏன் மங்கம்மா? என்ன ஆச்சு? உன் மகன் நீ சொல்றதைக் கேக்கறதில்லையா?" என்றேன். "அதை விடுங்கம்மா. கட்டுன புருஷனே என் பேச்சைக் கேக்கலை. மகன் என்ன கேட்பான்?" என்றாள் அவள். "உன் கணவன் உன் பேச்சைக் கேக்கறதில்லையா, மங்கம்மா?" என்று கேட்டேன் நான். அதற்கு அவள், "நான் நல்ல புடவை கட்டிக்கல. கட்டிக் கொள்ளவில்லை; வேறு எவளோ கட்டியிருந்தா. புடவை அழகுல மயங்கி, அவளோடு போயிட்டான் அவன். எப்படியோ போகட்டும். என் வீடு, என் மனைவி மக்கள் என்று ஆண் பிள்ளை இருப்பது அழகு என்று நான் சும்மா இருந்தேன். ஆனாலும் என்ன, அமிர்தம் மாதிரி யிருக்கேன். ஆனாலும் புருஷனை பிரிஞ்சிருக்கேன். என்னவோ என் தலை எழுத்து. நீ மாத்திரம் நான் சொல்றத நல்லா கேட்டுக்கோ. புருஷன்காரன் வீட்டுக்கு வரும் நேரத்தில நல்ல புடவையா பாத்து கட்டிக்கிட்டு நடமாடணும். ஆம்பளைங்க மனசு ரொம்பவும் சபலமுடையது. அவுங்க கண்ணுக்கு நல்லா இருக்கும்படி சேலை ரவிக்கை ஏதோ ஒன்ன பொம்பளைங்க போட்டிருக்கணும். வாசனை உள்ள பூவை வாங்கி அவுங்களுக்கு திருப்தி உண்டாவற மாதிரி வச்சிக்கணும். நீ இப்போ உடுத்தியிருக்கியே இப்படிப்பட்ட சேலை வேலை செய்யும்போதோ, நீ மட்டும் தனியா வீட்டில இருக்கும்போதோ சரியா இருக்கும். ஆனா சாயந்திர நேரத்திலே ஒரு நல்ல சேலையை உடுத்திக்கணும்." என்றாள். எனக்குக் கொஞ்சம் சிரிப்பு வந்தது. என்றாலும் இவளுடைய அனுபவத்திலிருந்து வந்த அறிவு எவ்வளவு பெரியது என்று தோன்றியது. அந்தப் பேச்சுக்குக் க்காரணமாக அனுபவத்தால் அவள் நொந்து போயிருந்தாள் என்பதையறிந்து கொஞ்சம் வருத்தமும் உண்டாயிற்று. "ஆமாம் மங்கம்மா, நீ சொல்வது உண்மை" என்றேன். பிறகு மங்கம்மா சொன்னாள்: "பாரம்மா, ஆம்பளைங்களை சரியா வச்சிக்க நாலு வழிங்க இருக்குது. மத்தவங்க மருந்தும் மாயமும் வைன்னு சொல்வாங்க. மருந்து வச்சி மயானத்துக்கு அனுப்புன்னு ஒரு பழமொழி இருக்குது. இப்படிப்பட்டவர்கள் பேச்சையெல்லாம் கேட்கக் கூடாது. அப்பப்ப வாய்க்கு ருசியாக ஏதாவது ஒன்று செய்து கொடுப்பது, கண்ணுக்கு அழகாகச் சிங்காரிச்சி, கஷ்டமோ கோபமோ எது இருந்தாலும் சிரிச்சிப் பேசி, அடிக்கடி கேக்காம வீட்டுக்கு வேண்டியதை மொத்தமாக வாங்கி மூணு காசு நாலு காசு சேர்த்து வைத்து சந்தர்ப்பம் வரும்போது ரூபாயாத் தரணும். இதுதாம்மா மருந்தும் மாயமும். ஒரு குடும்பப் பெண் இதைச் செஞ்சா புருஷன் என்பவன் வீட்டு நாயைப் போலக் கிடப்பான். இதைச் செய்யவில்லையென்றால் தெருவில் அலை வான்." மங்கம்மாவின் பேச்சைக் கேட்டு எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இன்னும் ஏதோ பேசி அவளை அன்று வீட்டுக்கு அனுப்பி வைத்தேன்.

பதினைந்து நாட்களுக்கு முன்னால் மங்கம்மா வந்தபோது மிகவும் கவலைப் பட்டிருப்பாள் என்று தோன்றியது. நான் "ஏன் மங்கம்மா இப்படி இருக்கிறாய்?" என்று கேட்டேன். "என்ன சொல்லட்டுமம்மா, இந்த ஜன்மமே யாருக்கும் தேவை யில்லாம போச்சு" என்று சொல்லி மங்கம்மா முந்தானையால் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். "ஏனம்மா, என்ன ஆச்சு? மக்ன் ஏதாவது சொன்னானா?" என்று கேட்டேன்." உம். சொல்லிவிட்டானம்மா. வீட்டுல குழந்தை இருக்குதே, அது ஏதோ செஞ்சிட்டுதுன்னு அவன் பெண்டாட்டி அதை அடிச்சிட்டா. 'ஏண்டி ராட்சசீ,

அறியாக் குழந்தையை அப்படிப்போட்டு அடிக்கறியேன்னு கேட்டுட்டேன். உடனே என் மேல் பாய்ஞ்சிட்டா. தாறுமாறாக என்னைத் திட்டிட்டா. 'என்னடி இது உன் புருஷனைப் பெற்ற அம்மாடி நான். என்னை இவ்வளவு பேச்சுப் பேசுறியே. இருக்கட்டும், அவன் வரட்டும், அவன்கிட்டயே கேக்கறேன்னு சொன்னேன். அந்தப் பெரிய மனுஷன் வீட்டுக்கு வந்தான். பாருடா, சும்மா சும்மா குழந்தையைப் போட்டு அடிக்கிறா. வேணாம்டின்னு சொன்னா என்னைத் திட்டறா. உன் பெண் டாட்டிக்குக் கொஞ்சம் புத்தி சொல்லு, என்றேன். அவள் 'எதுக்காக எனக்குப் புத்தி சொல்வது? பையன் தப்பு பண்ணினா அடிக்கற அதிகாரம் எனக்கு இல்லையா? நீ என் புருஷனைப் பெத்தது போல நான் இந்தக் குழந்தையைப் பெத்தெடுக்கலையா? எனக்கு என்ன புத்தி சொல்ல வேண்டியிருக்குது, என்றாள். என்ன இருந்தாலும் அவள் பெண்டாட்டிதான். நான் தாய். அவளைச் சொன்னால் எதிர்த்துப் பேசறா. என்னைச் சொன்னால் நான் என்ன செய்ய முடியும்? அவன் 'ஆமாம், அம்மா. அவ பெத்த பிள்ளையை அவ அடிக்கிறா. நீ ஏன் அவ பேச்சுக்குப் போறே? என்னை வேண்டுமானா அடி'ன்னு சொன்னான். 'அப்படியானால் நான் செய்தது தப்பாடா?' என்று கேட்டேன். 'தப்போ, சரியோ, பெத்தவ மகனை அடிக்கக் கூடாதுன்னு சொல்ல முடியுமா?' என்றான். எனக்குக் கோபம் வந்தது, வாய் தவறிப் பேச்சும் வந்தது. " என்னடா இது, பெண்டாட்டி போட்ட மந்திரத்தில் உனக்கு அவள் குழந் தையை அடித்தாலும் சரிதான், என்னைத் திட்டினாலும் சரிதானா, நல்லா இருக்குது. நாளைக்கு உங்க அம்மாவை வெளியே அனுப்புன்னு சொன்னா நீ அனுப்பக் கூடிய ஆள்தான்" என்றேன். அவனும் 'வேறென்ன செய்ய முடியும்? பெண்டாட்டியிருந்தால் நானிருக்க மாட்டேன், நான் இருந்தால் அவள் இருக்கக் கூடாதுன்னு சொன்னா திக்கில்லாத பெண் அவளை என்ன செய்றது?' என்று கேட்டான்.

"எனக்கு யாரப்பா திக்கு?" என்றேன்.

"உனக்கென்னமா, மாடு இருக்குது, கன்னு இருக்குது, பணம் இருக்குது, காசு இருக்குது. உன்னை நான் பார்த்துக்கணுமா என்ன?" என்றான்.

"அப்படியானால் என்னைத் தனியாகப் போவச் சொல்றியாடா?"ன்னு கேட்டேன்.

"அது உன் இஷ்டம். போய்த்தான் தீரணும்னா வேணாம்ன்னு நான் தடுக்க மாட்டேன். போதும் உன் பஞ்சாயத்து" என்றான் அவன்.

"ஆவட்டுமப்பா. இன்றைக்கு மத்தியானத்திலிருந்து தனியா இருக்கறேன். நீயும் உன் பெண்டாட்டியும் சுயமா இருங்க" என்று சொல்லிவிட்டு இதோ தயிரை எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்". இதையெல்லாம் சொல்லி மங்கம்மா ஒரேயடியாக அழுதாள். நான் சமாதானம் செய்தேன். "விடு, இதெல்லாம் என்ன பெரிய சங்கதி? இப்போ போனதும் வழக்கம்போல பழைய வீட்டிலேயே இருந்துப்பே. எல்லாம் தானே சரியாவும். விடு, மங்கம்மா." இப்படி தைரியம் சொல்லி, தயிர் வாங்கிக் கொண்டு அவளை அனுப்பி வைத்தேன்.

அடுத்த நாள் மங்கம்மா வந்தபோது முந்திய நாள் அளவுக்குக் கஷ்டப்படவில்லை என்றாலும் வழக்கம்போல மகிழ்ச்சியாகவும் இல்லை. 'சண்டை சமாதானம் ஆகி விட்டதா இல்லையா மங்கம்மா?' என்று கேட்டேன். "சமாதானம் ஆவ அவளா விடுவா? நேத்து தயிர் ஊத்திட்டு வீட்டுக்குப் போனா அங்கே என்னுடைய சட்டி பானையெல்லாம் ஒரு பக்கத்தில எடுத்து வச்சிருந்தா. ஒரு பானையிலே கேழ்வரகு, ஒன்னுல அரிசி, கொஞ்சம் உப்பு மிளகாய் எல்லாம் எடுத்து வச்சிட்டு, தானும் தன்

புருஷனும் சாப்பிட்டாயிற்று என்றது போல காலை நீட்டி உட்கார்ந்திருந்தா. அப்பறம் எப்படியம்மா சமாதானம் ஆவும். நான் கொஞ்சம் களியை வேகவைத்துச் சாப்பிட்டேன். ஏதோ பேச்சுக்குச் சொன்னேன். அவுங்க அதுவே போதும் போதும்ன்னு பிடிச்சிக்கிட்டாங்க. கல்யாணம் ஆனபிறகு மகன் நம்முடையவனா வானா? சரி, அவனுக்கு வேண்டாம் என்ற பிறகு நானாக மேலே விழுந்து ஏன் போகணும்? தனியாவே இருக்கம்மா." தினமும் அந்தக் குழந்தைக்குக் கொஞ்சம் தயிர் கொடுத்துட்டு, அப்புறமா விக்கறதுக்கு வந்துடுவேன். காலையில சரியா அந்த நேரத்துக்கு அவ அந்தக் குழந்தையை அழைச்சிகிட்டு எங்கயோ போயிட்டா. அந்தப் பையன்கூட நான் பேசக் கூடாதுன்னு இப்படியெல்லாம் செய்யறா. எனக்குத் தெரியும்" என்றாள். சிறிய பேச்சு எவ்வளவு பெரிய இராமாயணமாக வளர்ந்து விட்டது என்று வியப்பாக இருந்தது. என்றாலும் நான் இந்த விஷயத்தில் ஏதும் செய்வதற்கில்லை. ஏதோ இரண்டு பேச்சுப் பேசி அவளை அனுப்பி வைத்தேன்.

அப்புறம் இரண்டு மூன்று நாளைக்கு இந்தப்பேச்சை எடுக்கவில்லை. மங்கம்மா தனியாகவே இருக்கிறாள் என்று தோன்றியது. பிறகு ஒரு நாள் மங்கம்மா "அம்மா, நீ போட்டுக்கிறியே அந்த மக்மல் துணி, அது கஜம் என்ன விலை?" என்று கேட்டாள். "எதுக்கு? மங்கம்மா" என்றேன். "இவ்வளவு நாள் மகனுக்கும் பேரனுக்குமாகக் காசு காசாகச் சேர்த்தேன். இனி ஏன் சேர்க்கணும். நான் ஒரு மக்மல் ஜாக்கெட் தைச்சிப் போட்டுக்கப் போறேன்" என்றாள். அந்த ஜாக்கெட் ஏழெட்டு ரூபாயாகலாம் என்றேன். அன்றைக்கு போன மங்கம்மா மக்மல் துணி வாங்கி தையல் கடையில் தைக்கக் கொடுத்தாள். அடுத்த நாள் ஊருக்கு வரும்போது அதைப் போட்டுக் கொண்டே வந்தாள்.

"பாத்தியாம்மா, என் அலங்காரத்தை? புருஷன் இருந்தபோது ஒரு நல்ல சேலை வாங்கிக் கட்ட முடியலை. அவன் எவள் கூடவோ போயிட்டான். மகனுக்காக இன்று பணம் சேர்த்தேன். இந்த மகன் விவகாரம் இப்படி ஆகிவிட்டது. பார், என் அலங காரத்தை" என்றாள்.

மகனைப் பிரிந்த வருத்தத்தில் மங்கம்மாவுக்குக் கொஞ்சம் புத்தி பிசகியிருந்தது என்று எனக்குத் தோன்றியது. கடுங்கோபம் வரும்போது யாருக்குமே இப்படியாகும். நான் ஒன்றும் சொல்ல வில்லை. ஆனால் இந்த ஜாக்கெட்டினால் அவளுக்கு மற்றவர் களுடன் சண்டை ஏற்பட்டது. அவர்கள் ஊரைச் சேர்ந்த ஒரு பையன் பெங்களூரில் படித்துக் கொண்டிருக்கிறானாம். அவன் மேல் நாட்டவர்களைப் போல அல்லது நம்மில் படித்தவர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள் இப்போது போட்டுக் கொள்வதைப் போல டை, காலர் அணிகிற நாகரிகமானவன். அவன் மங்கம் மாவைக் கண்டபோது, "என்னம்மா, மக்மல் ஜாக்கெட் போட்டுக் கொண்டுவிட்டாய்" என்றானாம். மங்கம்மா, "ஏண்டா பையா, ரொம்பவும் திமிராகப் பேசுகிறாய். நீ உன் கழுத்தில டை கட்டிக்கலாம், நான் ஜாக்கெட் போட்டுக்கக் கூடாதோ" என்றாளாம். இருவருக்கும் வாக்குவாதம் நடந்தது. சுற்றியிருந்தவர்கள் எல்லாரும் சிரித்தார்கள்.

அடுத்த நாள் மங்கம்மா எனக்கு இதையெல்லாம் சொன்னாள். மற்றவர்கள் இப்படிச் சொல்வது இருக்க, அந்த மருமகள் மங்கம்மாவின் காதில் விழும்படி மற்றவர் களிடம் "மருமகளுக்கு ஒரு ரவிக்கை தைச்சித் தராம மாமியார் தனிக்குடித்தனம் வைத்து ஜாக்கெட் போட்டுக்கறத பாருங்க" என்றாளாம். மங்கம்மா மருமகளுக்குக் கல்யாணத்தின் போது தோடு, வளையல், கொப்பு, ஜடைபில்லை, சிமிக்கி, அட்டிகை, ஒட்டியாணம் இதையெல்லாம் கொடுத்திருந்தாள். அப்புறம் வருடத்துக்கு ஏதாவது ஒரு நகை வாங்கிக் கொடுப்பாள். அதெல்லாம் மருமகளுக்கு நினைவேயில்லை. மங்கம்மா

இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டு இரண்டொரு தடவை சும்மா இருந்தாள். அதன் பிறகு அவளுக்குத் தாங்கவில்லை. ஒரு நாள் இரவில் மகனிடம் போய் "உன் பெண்டாட்டி என்னைப் பற்றி ரொம்பவும் தாறுமாறா பேசறா. நான் என்னவோ ஜாக்கெட் போட்டுக்கிட்டேனாம். அவளுக்கு ஒன்றுமே வாங்கிக் கொடுக்க வில்லையாம். நான் கொடுத்ததெல்லாம் பொய்யா? வளையல், தோடு, அட்டிகை, ஒட்டியாணம் இதெல்லாம் நான் கொடுத்ததுதானே" என்றாளாம். மருமகள் கணவனைப் பேசவே விடவில்லை. "புருஷன் இல்லாத கிழவி நீ, இப்போது தோடும், ஒட்டியாணமும் போட்டுக் கொள்ளப் போகிறாயா? எடுத்துக் கொண்டு போ, போட்டுக் கொள்" என்றாள். அந்தக் கணவன் "ஏண்டீ, இவ்வளவு பேச்சு" என்று சொல்லி, தாயைப் பார்த்து, "அம்மா, உங்கள் சண்டை எனக்கு வேண்டாம். உன் தோடும் நகையும் வேண்டும் என்றால் வாங்கிக் கொண்டு போ" என்றானாம். மங்கம்மா சொன்னாள்: "பாரம்மா, தெருவில இருக்கறவங்க கூட இப்படிப் பேசா தேன்னு சொன்னதில்ல. வேணுமென்றால் நகையை வாங்கிட்டுப் போன்னு என் மேலேயே தப்பு சொன்னான். இனி எதுக்கு இந்த ஜன்மம்" என்றாள். அதையெல்லாம் கேட்டு எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. இவளோ கிழவி. அவனும் ஒரே மகன். அவன் மனைவி கணவனையும், கணவனின் தாயையும் நன்றாகப் பார்த்துக் கொள்ளக் கூடாதா? இவ்வளவு சண்டையும் எதற்கு? பேரனை அடிக்க வேண்டாம் என்று கிழவி சொன்னதற்குத்தான் ஏன் இவர்கள் எல்லாம் இப்படிச் செய்கிறார்கள் என்று நான் சிந்தித்தேன். பிறகு எனக்குத் தோன்றியது. அதாவது, எங்கே பார்த் தாலும் சண்டைக்குக் காரணம் இப்படியே தானிருக்கும். ஒருவருக்கொருவர் பிடிக்காமல் போவதால் சின்ன விஷயம் பெரிதாக வளர்கிறது. முன்பு இல்லாத சண்டை பிறக்கிறது. அதில் சேர்ந்தவர்களுக்கெல்லாம் அளவில்லாத வேதனை.

இது நடந்த சில நாட்கள் கழித்து மங்கம்மா என்னிடம் வந்து, "அம்மா நீங்க ரொம்ப உண்மையானவங்க. என்னிடம் கொஞ்சம் பணம் இருக்குது. அதை எங்கே யாவது—இந்தப் பேங்க்கின்னு சொல்றாங்களே, அந்த மாதிரி இடத்தில வச்சிடுங்க. அதன் மேல எல்லாருக்கும் கண்" என்றாள். என்ன நடந்தது என்று கேட்டேன். "நேற்று பாரம்மா, எங்கள் ஊர்க்காரன் ரெங்கப்பான்னு ஒருத்தன். அவன் கொஞ்சம் சூது கீது ஆடுவதுண்டு. ஷோக் பேர்வழி. நான் தயிர் எடுத்துக் கொண்டு வரும்போது வழியில எங்கிருந்தோ வந்து சேர்ந்தான்." "என்ன மங்கம்மா சௌக்கியமா?" என்றான். 'என்ன சௌக்கியம் ரெங்கப்பா, உனக்குத் தெரியாமல்' என்றேன். அவனும், 'சரிதான், நீ சொல்வது நிஜம். இந்த நாளில் யாருக்கு என்ன சௌக்கியம். இந்தக் காலத்துப் பையன்கள் வேகமாகப் பேசுவதுதான். நம்மைப் போல வயசானவங்க இப்படி ஆயிடுச்சின்னு சொல்வதுதான். இனிமேல் என்ன செய்றது மங்கம்மா' என்றான். அப்படியே நடந்து வந்தோம். வழியில் ஒரு தோப்பும் கிணறும் இருக்கிறது. அங்கே வருவதென்றால் எனக்குப் பயம். இவன் என்ன செய்வானோ என்று. இந்தப் பையில் அவ்வளவு பணம் இருக்கிறது என்று வைத்துக் கொள். அதற்காக அவன் அவ்வளவு தூரம் வந்தவன் கொஞ்சம் சுண்ணாம்பு கொடுன்னு கேட்டான். கொடுத்தேன் வாங்கிட்டுப் போனான். இன்னைக்கும் நான் வரும்போது அதே இடத்தில் வந்து கூடச் சேர்ந்து கொண்டான். பாரம்மா. அது இது என்று பேசிக் கொண்டே வந்தவன் திடீர்னு 'மங்கம்மா, எனக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருக்குது. கொஞ்சம் கடன் கொடுக்கறயா? இந்தத் தடவை கேழ்வரகு வித்ததும் திருப்பிக் கொடுத்துடறேன்னு கேட்டான். 'என்கிட்ட ஏதப்பா துட்டு' என்றேன். 'விடு, மங்கம்மா எனக்குத் தெரியாதா? பணத்தை அங்கே இங்கே புதைச்சி வைக்கறதால

என்ன லாபம்? எனக்குக் கடன் கொடு. நானும் பிழைத்துக் கொள்வேன். உனக்கும் வட்டி வரும்.' என்றான். கொஞ்சம் நேரம் கழித்து, 'உன் மகனும் நீயும் சேர்ந்து இருந்தால் நான் உன்னைக் கேட்டே இருக்க மாட்டேன். மருமகளுக்கு நகை நட்டு பண்ணிப் போடலாம்ன்னு நீ நினைப்பாய் என்று எனக்குத் தெரியும். இப்போது அதொன்றுமில்லையல்லவா என்பதற்காகக் கேட்டேன்' என்றான். ஒரு பெண் பிள்ளை தனியாய்ப் போனாள் என்றால் எல்லோருக்கும் அவள் மேலேயே கண்" என்றாள். நான் என் வீட்டுக்காரரைக் கேட்டுச் சொல்வதாகச் சொன்னேன்.

என் கணவரிடம் இந்தப் பேச்சை நான் எடுக்கவில்லை. அடுத்த நாள் மங்கம்மா தயிர் கொடுத்துவிட்டு மடியிலிருந்து ஒரு பையை எடுத்தாள். "அம்மா, உள்ளே போகலாம். எண்ணிக் கொள்" என்றாள். நான் "வீட்டுக்காரரை இன்னும் கேட்க வில்லை. இருக்கட்டும். இன்னொரு தடவை கொண்டு வரலாம்" என்றேன். மங்கம்மா "அம்மா, எனக்கு ரொம்ப பயமாக இருக்குது. ரெங்கப்பா இன்னைக்கும் வந்தான். தோப்பில் அதே இடத்திற்கு. 'உக்காரு மங்கம்மா, போகலாம். என்ன அவசரம்?' என்றான். என்னிடம் இந்தப் பணம் வேறிருந்ததா, நெஞ்சு படபடன்னு அடிச்சிகிச்சி. நிற்க மாட்டேன்னு சொன்னா பிடித்து நிறுத்தினால் என்ன செய்றதுன்னு உட்கார்ந்தேன். வீட்டுச் சமாசாரம் எல்லாம் பேசினான். ஊர்க்கதையெல்லாம் பேசினான். அப்புறம் என் கையைப் பிடித்துக் கொண்டு, "மங்கம்மா நீ எவ்வளவு அழகா இருக்கிற தெரியுமா?" என்றான். கேட்டியாம்மா, நல்ல வயசு காலத்திலேயே புருஷனானவன் இந்தக் கையைப் பிடிப்பதை விட்டுட்டான். இன்னொருத்தன் என்னைக்கும் தொட்டதில்லை. இவன் இன்னைக்குப் பிடித்தான். நான் கையை விலக்கிக் கொண்டு, 'என்ன ரெங்கப்பா ரொம்பவும் சரசமாடறே? என் அழகை வருணிக்க நீ என்ன கட்டின புருஷனா, விடு' என்று வேகமாக எழுந்து வந்துட்டேன். நேற்று ரூபாய் கேட்டான், இன்னைக்கு மானத்தையே கேட்டான். மணை மேல் கூட உட்கார்ந்து கொண்டு மாலை மாத்தி நாலு பேர் ஆசிர்வாதத்துடன் கையைப்புடிச்ச அந்த ஆள் எங்கேயோ போனான். நல்ல வயசிலே புருஷன் என்னை வேணாம்ன்னு சொல்லிட்டான். இன்னொருத்தியாக இருந்தா கட்டினவன் கைவிட்டால் கைப் பிடிக்க வாங்கன்னு ஆட்டம் போட்டிருப்பா. நான் என் மானத்த விடவில்லை. இந்தப் போக்கிரி வந்து தாலி கட்டின ஆள் மாதிரி என் கையைப் பிடிக்கிறான் பார்த்தி யாம்மா" என்றாள்.

இவளுடைய நிலை மிகவும் கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறது என்று எனக்குப் பட்டது "இதெல்லாம் என்ன வம்பு மங்கம்மா. சும்மா மகனிடம் போய் ஏதோ நடந்து விட்டது என்று அவனிடமே இருந்து விடுவதுதானே?" என்றேன்.

"நான் இருக்கத் தயாரம்மா. ஆனா அவ இருக்க விடமாட்டா"

"மகனிடத்தில் இதெல்லாம் சொல்"

"ஐயோ, என் கண்ணம்மா! ஒரு பெரிய ரகளையையே உண்டாக்கி என்னைச் சாதியை விட்டே விலக்கி வச்சிடுவா. அந்த மருமகள். எனக்கு நேரமாச்சு, நான் வரேன். ஐயாவைக் கேட்டு நாளைக்குச் சொல்" என்று சொல்லி அவள் புறப்பட்டுப் போனாள்.

மறுபடியும் ஒருமணி நேரத்தில் திரும்பி வந்தாள். "அம்மா, இன்னைக்கு ஒன்னு நடந்தது" என்றாள்.

"என்ன ஆயிற்று?"

"குழந்தைக்குன்னு கொஞ்சம் மிட்டாய் வாங்கிக் கூடையில் வச்சிருந்தேன்" என்றாள். மங்கம்மா முதலில் குழந்தை தன்னிடம் வரவிடாமல் தடுத்தார்கள் என்று சொல்லியிருந்தாள் அல்லவா? இப்போது குழந்தைக்கு என்றதும் எந்தக் குழந்தைக்கு என்று எனக்குப் புரியவில்லை. "எந்தக் குழந்தைக்கு" என்று கேட்டேன்.

"வேறு எந்தக் குழந்தையம்மா? எங்க குழந்தைதான்"

"உன்னிடம் வருவதில்லை என்று நீயே சொன்னாய்?"

"போக வேணாம்னு அம்மா சொல்றா. ஆனா குழந்தை வராமலிருக்குமாம்மா? அவுங்க கண்ணில் படாமல் எப்போதாவது வரும். கொஞ்சம் பால் குடிக்கும். கொஞ்சம் தயிர் கொடுன்னு கேட்கும். ஏதாவது கொடுத்தால் குதிச்சி ஆடும். கலாட்டா செய்தா உங்க அம்மாவுக்குக் கேட்கும் பார், என்றால் வாயை மூடிக் கொள்ளும். குழந்தைகள் விளையாட்டே ஒரு அழகு. அந்தக் குழந்தைக்குத்தான் கொஞ்சம் மிட்டாய் வாங்கிக் கூடையில் வச்சிருந்தேன். இந்த சங்கரபுரம் வழியாக வரும்போது அங்கேயொரு மாமரம் இருக்குதே அதில் உட்கார்ந்திருந்த ஒரு காக்கை வேகமா வந்து அந்தப் பொட்டலத்தை கொத்திக் கொண்டு போயிடுச்சி. இன்றைக்கு இப்படி நடந்து விட்டதே" என்றாள். "ஒரு மிட்டாய் பொட்டலம் போனால் என்ன? மறுபடியும் வாங்கிக் கொண்டால் போச்சு" என்றேன். மங்கம்மா "அதில்லையம்மா, காக்காய் வந்து மனுஷர்களைத் தொடக்கூடாது என்கிறார்களே அதற்காகச் சொன்னேன்" என்றாள். "தொட்டால் என்னவாம்?" என்று கேட்டேன். "உயிருக்கு ஆபத்துன்னு சொல்வாங்க. எனக்கு போகிற காலமோ என்னவோ பயமாய்டுச்சி. அப்புறம் நினைத்தேன். சந்தோஷமாகவே இருந்தது. யாருக்கும் வேண்டாத ஜென்மம், எங்க அப்பன் கடவுளின் பாதத்தில் போய் சேர்ந்துடலாம்னு நெனைச்சிட்டேன். இன்னைக்கு நடந்தது இது" என்றாள். நான், "என்ன பைத்தியக்காரப் பேச்ச பேசுகிறாய்? காக்காய்க்கு எட்டும்படி மிட்டாயை வைத்துக் கொண்டு வருவது, அது வந்து எடுத்துக் கொண்டால் உயிருக்கு ஆபத்து என்பது. இது என்ன புத்தி கெட்ட பேச்சு. போ, சும்மா வீட்டுக்குப் போய்ச் சேரு" என்றேன். "அப்படியென்றால் பயம் இல்லை என்கிறாயா?" என்றாள் அவள். "பயமுமில்லை கியமுமிலலை—சண்டை போட்ட அளவுக்கு ஆயுள் அதிகம். மறுபடியும் அதைப் பற்றி நினைக்காமல் சந்தோஷமாக வீட்டுக்குப் போ" என்றேன் நான்.

மங்கம்மா புறப்பட்டுப் போனாள். நான் இவள் மன நிலையைப் பற்றிச் சிந்தித் தேன். ஆச்சரியப்பட்டேன். மகன் வேண்டும், மருமகள் வேண்டும், பேரன் வேண்டும்; ஆனால் தான் எஜமானி என்று தனக்கு எல்லாரும் மரியாதை காட்ட வேண்டும். மனிதனாகப் பிறந்தவனை இந்த ஆசை விடுவதில்லை. வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டு, சாவதற்கு விருப்பமில்லை என்றாலும் அந்த விருப்பம் இல்லை என்று காட்டிக் கொள்வதற்கு விரும்புவதில்லை. கிராமத்து ஜனங்கள் அறியாத வர்கள் மூடி மறைக்கத் தெரியாதவர்கள் என்று நாம் நினைக்கிற அப்படிப்பட்டவர் களுடைய மன நிலையே இப்படித் திரைக்குப் பின்னால் திரையாய் மறைப்புக்குப் பின்னால் மறைப்பாய் மடிப்புக்குப் பின் மடிப்பாய் இருக்கிறதே, இது என்ன நாடகம் என்று நினைத்துக் கொண்டேன்.

மங்கம்மா திரும்பி வந்தபோதுமற்றொரு செய்தியைச் சொன்னாள். அந்த பேரக் குழந்தை அம்மாவையும் அப்பாவையும் விட்டு இவளிடமே வந்து விட்டதாம். இவளுக்கு மிகவும் சந்தோஷம். அந்தப் பையனுடைய தைரியத்தைப் பார்த்து. "ஒரு

ஆண் உயரம் இருக்கிறான். அந்தப் பையன். அம்மாவை விட்டு வருவது என்றால்? நேற்றுப் பகலில் என் வீட்டுக்கு வந்த பையன் திரும்பி அம்மாவிடம் போக மாட்டேன்னு சொல்லிட்டான். இதுவரையில் ரகசியமா வந்து கொண்டிருந்தான். போகாததால் அவன் தாய் வந்து கூச்சல் போட்டா." 'வா உன்னை அடிக்கிறேன்' என்றாள். பையன், "நான் வரமாட்டேன்" என்று என் காலைப் பிடிச்சபடி நின்னுட்டான். 'போடா'ன்னு எவ்வளவோ சொன்னேன் அவனுடைய அப்பா வந்து கூப்பிட்டான். போகவில்லை. என்னிடமே இருந்து விட்டான். பத்து நாளா வேறு வீட்டில் நான் மட்டும் தனியாகப் படுத்து எப்போதாவது கொஞ்சம் பயப்பட்டுக் கொண்டிருந்தேன். நேற்று இந்த வாண்டு கூட இருக்கிறான் என்பதிலேயே ஒரு தைரியம் வந்து விட்டது. என்ன இருந்தாலும் ஆண்பிள்ளையல்லவா? கடவுளாகப் பார்த்து அவனுக்குப் புத்தி கொடுத்தார். வளர்ந்த மகன் வேண்டாம் என்றான். இந்த வாண்டுப் பேரன் 'நானிருக்கிறேன் பயப்படாதே'ன்னு வந்து விட்டான். ராத்திரி யெல்லாம் ஒரே ராமாயணம்தான், மருமகள் பண்ணியது. என்ன சொல்லியும் இது போகலை. காலையில் நான் இங்கே வந்தால் தனியாக இருப்பானே என்று அவனுடைய தாயின் வீட்டு வாசல் வரை கொண்டு போய் விட்டேன். உள்ளே போனான். நான் இந்தப் பக்கம் வந்தேன்" என்றாள். "அவள் குழந்தையை அடித்தால் நீ என்ன செய்வாய்?" என்று கேட்டேன். "மகன் கொஞ்ச நேரத்திற்காவது வீட்டுக்கு வருகிறான் அல்லவா என்ற சந்தோஷம் இருக்காதா அவளுக்கு? பக்கத்திலேயே இருந்தால் அடிக்கத் தோன்றும். இதோ பாரம்மா, ஒரே வீட்டிலிருந்த வரையில் என் மருமகள் எவ்வளவு கெட்டிக்காரின்னு எனக்குத் தெரியவில்லை. இப்போது தூரத்திலிருந்து பார்க்கிறேன். முகம் மட்டும் ஏதோ மாதிரியாக இருக்கிறது என்று வைத்துக் கொள். மற்றபடி அவள் கெட்டிக்காரிதான். அதனால்தான் என் பையன் அவளிடம் மயங்கி இருக்கிறான். அவனும் அப்படித்தான். அப்போது எப்பொழுது வீட்டுக்கு வந்தான் எப்பொழுது வயலுக்குப் போனான் என்பதை நான் பார்க்க வில்லை. இப்போது என் வீட்டு வாசலில் உட்கார்ந்து கொண்டு? ஏன் இன்னும் வரவில்லை. ஏன் இவ்வளவு சீக்கிரம் புறப்பட்டு விட்டான் என்று பார்த்துக் கொண்டே இருக்கிறேன். அவளுக்கு அப்படித்தானே இருக்கும்? அடித்தால் நாளைக் காலையில் நான் தயிர் விற்க வரும்போது என் கூடவே வந்து விடுவான். பத்து மாதம் சுமந்து நொந்து பெற்ற மகனை விட்டு விடுவாளா தாய்?" இவளுடைய சிந்தனை எவ்வளவு தூரம் சென்றிருக்கிறது என்று நினைத்து எனக்கு வியப்பாயிருந்தது. எப்படியும் இவளுடைய சண்டை நல்ல விதமாக சீக்கிரமாகவே முடியும் என்று எனக்குத் தோன்றியது.

அந்தக் கதை முடிந்தது இப்படித்தான். இரண்டு நாள் கழித்து தாய் வீட்டுக்குப் போன பையன் அடுத்த நாள் பாட்டியோடு பெங்களூருக்கு வருவேன் என்று பிடிவாதம் செய்தான். கிழவி தயிர்க்கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு பேரனை இடுப்பில் வைத்துக் கொண்டு மூன்று மைல் நடந்து வருவது அவ்வளவு சுலபமா? என்ன செய்வது என்று அவளுக்குத் தோன்றவில்லை. மகனும் மருமகளும் கூட வந்து, "ஏதோ நடந்து விட்டதம்மா, நீ கோபித்துக் கொண்டால் எப்படி?" என்றார்கள். ஊரிலும் நாலு பேர் வந்து இவளுக்குச் சமாதானம் சொன்னார்கள். தன்னுடைய கவுரவத்தை இழக்காத வகையில் மங்கம்மா தன் விருப்பப்படியே மருமகளோடு சேர்ந்து கொண்டாள். என்றாலும் இந்தப் பேரன் பாட்டியோடேயே இருக்க வேண்டும் என்ற பிடிவாதத்தை விடவில்லை. அதற்காக ஒரு புதிய ஏற்பாடு உருவாயிற்று. முதலில் இருந்தே பால், தயிர் வியாபாரம் மங்கம்மாவின் கையில்

இருந்தது. மருமகள் வந்த பிறகும் மங்கம்மா இதைத் தன்னிடமே வைத்துக் கொண்டிருந்தாள். வீட்டு மருமகள் என்றதால் பெயருக்கு வீட்டு நிர்வாகம் அவள் கையில். தயிர் விற்றால் கையில் கொஞ்சம் காசு நடமாடும் என்பதுதான் உண்மை. இப்போது இந்தப் பேரப் பையன் பாட்டியுடனேயே இருப்பேன் என்று பிடிவாதம் செய்ததால், மருமகள் 'இந்த வெயிலில் சும்மா போவதும் வருவதும் எதற்கு? வயசான பிறகு எத்தனை நாளைக்கு இந்த வேலையைச் செய்யமுடியும், வீட்டு வேலையைப் பார்த்துக் கொண்டு எஜமானியைப் போல் நீ வீட்டில் இரு. நான் போய் தயிர் விற்றுக் கொண்டு வருகிறேன்' என்றாள். மங்கம்மாவும் 'ஆகட்டும்' என்றாள். "என்றைக்காவது ஒரு நாள் நான் போய் வருகிறேன். தினமும் நீ போய் வா என்று மருமகளிடம் அந்த வேலையை ஒப்படைத்தாள். ஒரு நாள் மாமியார் மருமகள் இரண்டு பேரும் வந்தார்கள். ஒருத்தியின் இடுப்பில் குழந்தை. மற்றொருத்தியின் தலையில் தயிர்க்கூடை." "இவள் தானம்மா என் மருமகள். பாவம், கிழவி தனியே சமைத்துக் கொள்கிறாளே என்று மறுபடியும் வீட்டுக்குவான்னு சொல்லிட்டா. சும்மா வெயிலில் அலையாதேன்னு சொன்னா. சரி என்று சொல்லியிருக்கிறேன். இனிமேல் அவளே தயிர் கொண்டு வருவாள்" என்று சொல்லி மங்கம்மா எங்களை மருமகளிடம் ஒப்படைத்தாள். நானும் மாமியாருடனும் மருமகளுடனும் பேசி, சமாதானமாகப் போக வேண்டும் என்று புத்தி சொல்லி, வெற்றிலை பாக்கு கொடுத்து அனுப்பினேன். இப்போதெல்லாம் அந்த மருமகள்தான் தயிர் கொண்டு வருகிறாள்.

மாமியார் விஷயத்தில் இவ்வளவெல்லாம் நடந்ததல்லவா? மருமகள் பக்கத்தில் என்ன இருக்கக் கூடும் என்று ஒரு நாள் நான் "ஏண்டி நஞ்சம்மா, நீ புத்திசாலியாக இருக்கிறாயே, மாமியாரை வீட்டை விட்டு விரட்டலாமா?" என்று கேட்டேன். நஞ்சம்மா சொன்னாள்: "மாமியாரை விரட்டுவதற்கு நான் என்ன ராட்சசியாம்மா? மாமியாராகப் பட்டவள் எல்லாம் நானே என்று அநத மகனை, வீட்டு ஆண் பிள்ளை என்று பார்க்காமல் அவனை முட்டாளாக்கினால் அவன் புருஷனாவது எப்படி? நான் பெண்டாட்டியாவதும் எப்படி? நான் குடும்பம் நடத்துவதெப்படி. ஏதோ மாமியார் பெற்றாள் வளர்த்தாள், புருஷனை வேண்டுமானால் அவளே வைத்துக் கொள்ளட்டும். என் மகனை நான் அடிக்கக கூடாது என்பது என்ன நியாயம்? அம்மா" என்றாள். "உன்னுடைய மகன் என்பதற்கு அடிப்பதுதான் அடையாளமா?" "அடிக்கிறதோ அணைக்கிறதோ, அடிக்கிறபோது ஏன் அடிக்கறேன்னு கேக்கறவங்க அணைக்கிறபோது ஏன் அணைக்கிறாய்ன்னும் கேக்கலாம். இதற்கெல்லாம் என்ன விபரம் சொல்ல முடியும். என் மகன் என்றால் என் மகன், அவ்வளவுதான். என் புருஷன் என்றால் என் புருஷன்தான். மருமகளாகி வந்தவள் ஏதோ பேசட்டும் ஒரடி அடிக்கட்டும் என்று விடாமல் இருந்தால் நான் சம்சாரம் பண்ணுவது ஏன்?" என்றாள். எனக்கு மங்கம்மா சொன்னபோது அதுதான் சரி என்ற தோன்றியது போல, இவள் பேசும்போதும் இதுவே நியாயம் என்று தோன்றியது. "அப்படி யானால் இப்போது உனக்கு வீட்டில் கொஞ்சம் சுதந்திரம் கிடைத்திருக்கிறது என்று சொல்" என்றேன். "முன்னைக்கு இப்போது மேல். எப்படியாவது அனுசரித்துக் கொண்டு போக வேண்டியதுதான். ஒத்துப்போகாமல் சண்டை போட்டால் எங்கள் மாமியார் காசையெல்லாம் வேறு யார் கையிலாவது கொடுத்து விடுவாள். எங்கள் ஊரில், ரங்கப்பான்னு ஒருத்தன் இருக்கான். எங்க மாமியார் தனிக் குடித்தனம் நடத்தியபோது அவன் அவளிடம் கடன் கேட்டானாம். இவளும் கொடுக்கிறேன்னு சொன்னாளாம். அதன் பிறகு நான் குழந்தையை அழைத்து நீ பாட்டி வீட்டுக்குப் போ, மிட்டாய் தின் பண்டம் எல்லாம் கொடுப்பாள் எங்கள்வீட்டுக்கு வராதே. மறுபடியும்

நானே கூப்பிடுகிற வரை நீ வரக்கூடாதுன்னு சொல்லி அனுப்பி வச்சேன். சண்டை எப்படியாவது தீர்ந்தால் போதும் என்று இப்படியெல்லாம் நாடகம் ஆடினேன்" என்றாள். "அப்படியானா பாட்டியிடம் குழந்தை தானாகப் போகவில்லையா?" என்று கேட்டேன். "குழந்தைதான் போச்சு. ஆனா அனுப்பி வச்சது நான். இதையெல்லாம் சொல்ல முடியுமாம்மா? ஆண்களுக்கு என்ன தெரியும்?" என்றாள்.

மங்கம்மாவைவிட நஞ்சம்மா அறிவில் குறைந்தவளல்ல. அந்த வீட்டில் இப்போது மாமியாருக்கும் மருமகளுக்கும் சுதந்திரப் போர் நடந்து கொண்டிருக்கிறது. அதற்குக் குறிக்கோள் அந்தத் தாயின் மகன், இந்த மனைவியின் கணவன். அவனை விட்டுக் கொடுக்கக் கூடாது என்பது தாயின் எண்ணம். அவனைத் தன் வசத்தில் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்பது இந்த மருமகளின் விரதம். இது எல்லா இடங்களிலும் நடக்கிற வியாபாரம்தான். இதில் வெற்றி தோல்வி இப்படித்தான் அமையும் என்று சொல் வதற்கில்லை. நீரிலிருந்து கொண்டு குழந்தையின் காலைப் பிடித்துக் கொண் டிருக்கும் முதலையைப் போன்றவள் மருமகள்: கரையில் நின்று கொண்டு குழந் தையில் தோளைப் பிடித்து அதைக் காப்பாற்றுகிறேன் என்பவள் தாய். நடுவில் அந்தக் குழந்தையின் பாடுதான் கஷ்டம். கிராமத்தில் தயிர் விற்கிற மங்கம்மாவின் வீட்டில்; பட்டணத்திலோ தயிர் வாங்குகிற தங்கம்மா வீட்டில்; நடந்து கொண்டே யிருக்கிறது இந்த வியாபாரம். கடைசிக் காட்சியைக் காணாத நாடகம்.

# குருவின் மகிமை

## ஏ.ஆர் கிருஷ்ண சாஸ்திரி

"உலகில் மக்கள் தங்கள் செயல்களாலேயே கட்டுண்டு கிடக்கிறார்கள்"
—அத்யாத்ம ராமாயணம்

(ஒரு குடும்பத்தில் பெண் குழந்தைகளேயிருந்தார்கள். தாய்க்கு ஒரே ஒரு ஆண் குழந்தையாவது வேண்டும் என்ற ஆசை இருந்தது. அது நிறைவேறாததால் கடைசி மகளையும் மருமகனையும் வீட்டில் வைத்துக் கொண்டு மருமகனையே மகனாகப் பாவித்து நடந்து வந்தாள் அந்தத் தாய். இப்படி இருக்க, ஒரு சுவாமிகள் வேண்டிய தெல்லாம் கொடுக்கிறார் என்று கேள்விப்பட்டு, அவருக்குத் தொண்டு செய்து தனக்கு ஆண் குழந்தை வேண்டும் என்று விடாப்பிடியாக மன்றாடினாள். வேண்டாம் என்று அவர் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. ஒன்றை நினைக்க வேறொன்று நடந்தது. அவள் வயிற்றிலேயே குழந்தை உண்டாவதற்குப் பதில் மகள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்து உயிர் நீத்தாள். அதைப் பேணி வளர்க்கிற சுமை அந்தத் தாயின் மேல் விழுந்தது. இதுதான் கதை.

தாயின் வேதனை, சுவாமிகளின் சமாதானம் இவைகளின் நடுவில் கதையைப் பார்ப்பது கஷ்டம் என்று கதைச் சுருக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது.)

### I

"ஏனம்மா, இப்படி ஊரைவிட்டுக் குடும்பத்தை விட்டு இங்கே வந்து மாதக் கணக்காக ஒரு பொழுது இருந்து வனவாசத்தில் வாடிக் கொண்டிருக்கிறீர்கள்?"

"எனக்கு ஏது குடும்பம்? நடத்துகிறவர்கள் நடத்திக் கொண்டு போகிறார்கள்".

"ஏன் தாயே அப்படிச் சொல்கிறீர்கள்? நிறைந்த குடும்பம், கணவன், மக்கள், பேரன் பேத்திகள் வேண்டிய அளவு இருக்கிறார்கள் அல்லவா?"

"யார் இருந்தால் என்ன? என்னுடையது என்று சொல்லிக் கொள்ள ஒன்று இல்லையல்லவா?"

"அவர்கள் எல்லாம் உங்களுடையவர்களல்லவா?"

"அதற்கென்ன, உலகம் எல்லாம் என்னுடையதுதான்".

"ஆகா! அது ரொம்பப் பெரிய சமாசாரம். உண்மையான பேச்சு"

"உண்மை என்று கண்ட பிறகுதானே உண்மை ஆகும்"

"இல்லையா, பின்னே?"

"பார்க்கிறவர்கள் எல்லாம் இங்கே பெரிய உண்மை இருக்கிறதென்று சொல் கிறார்கள். அதற்காக வந்திருக்கிறேன். எனக்கும் அந்த உண்மை கண்ணில் பட்டால் தானே உண்மையாகும்?"

"இதிலென்ன தடை? அதற்காக எத்தனை நாளைக்கு வீட்டையும் குடும்பத்தையும் விட்டு இங்கு இருப்பீர்கள்?"

"என் வேலை முடியும் வரை"

"முடிகிற வேலையாய் இருந்தால் எங்கிருந்தாலும் முடியும்"

"அப்படியானால் கடவுள், சுவாமிகள், யாத்திரை, தொண்டு, பூஜை இதெல்லாம் எதற்காக?"

"எல்லாம் வெறும் பிரமை, தாயே."

"அப்படியானால் எத்தனையோ பேர் நான் இங்கே வந்த பிறகு வந்து அவர வர்கள் வேலை முடிந்தது என்று அவரவர் ஊருக்குத் திரும்பிப் போனார்களே?"

"அது அவரவர்கள் ஊரில் இருந்தாலே நடந்திருக்கும்! மரத்தில் பழுத்துக் கொண்டிருந்ததை இங்கே கொண்டு வந்து மூட்டம் போட்டுக் கொண்டு போனார்கள். அவ்வளவுதான்."

"நான் ஊரிலிருந்து கொண்டு செய்ய வேண்டியதெல்லாம் செய்து செய்து போதும் என்றாகிவிட்டது. கேள்விப்பட்ட விரதங்களையெல்லாம் செய்தேன், நோன்பு இருந்தேன். பூஜை செய்தேன். எந்தப் பலனுமில்லை. அதனால் என் வேலை முடிகிற வரையில், எத்தனை நாளானாலும் சரி—இங்கேயே இருந்து விடலாம் என்று உறுதி செய்து கொண்டு வந்துவிட்டேன்."

"தாராளமாக இரு தாயே! இதில் எனக்கென்ன பாரம்! கடவுளுக்குத் தொண்டு செய்வது கெட்டதா என்ன? ஆனால் மனம் நிறைய ஆசையை நிரப்பிக் கொண்டு செய்கிற தொண்டு பலன் தருவதில்லை"

"நன்றாயிருக்கிறது! தொண்டு செய்வதே ஆசையை வைத்துக் கொண்டிருப்பதால் தானே. ஆசையில்லாவிட்டால் யார் உழைப்பார்கள்?"

"நீங்கள் சொல்வது உண்மை. எல்லாரும் உழைப்பது ஆசை காரணமாகத்தான். அந்த உழைப்புக்குப் பலன் என்னவோ கிட்டும். ஆனால் அவர்கள் ஆசை நிறை வேறுகிறது என்ற நம்பிக்கை மட்டும் கொடுப்பதற்கில்லை"

"இதைக் கேட்பதற்கா நான் இங்கே வந்தேன்? இத்தனை நாள் தொண்டு செய்தேன்? இதுவா உண்மை?"

"சத்தியம் என்பது ஒன்றேதான் தாயே, எப்போதும் ஒன்று தான். அது வேண்டாத வர்களுக்கு இதமாக இருப்பதில்லை. பொய் பல வடிவங்களையுடையது. இதமானது"

"உண்மையோ, பொய்யோ, இதமோ அல்லவோ! நான் இந்த வேதாந்த போத னையைக் கேட்பதற்கல்ல இங்கே வந்தது. எனக்கு அது வேண்டாம்"

"வேண்டாம் என்றால் எப்படித் தாயே? கடைசியில் எல்லாருக்கும் கிடைப்பது அது ஒன்றுதான். நாம் வேண்டாம் என்றாலும் அது விடப் போவதில்லை"

"இப்போது எனக்கு வேறெதுவும் வேண்டாம். நான் வேறு எதையும் கேட்க மாட்டேன்."

"அப்படியானால் நீங்கள் கேட்பது என்ன?"

"நான் அப்போதே சொன்னேனே! மறுபடியும் சொல்ல வேண்டுமா? இங்கே வரு கிறவர்கள் எவரும் எதையும் கேட்கவே வேண்டியதில்லை. சுவாமிகளின் பார்வை பட்டாலே போதும், வேலை முடிந்து விடும். சுவாமிகள் யாருடனும் பேசியதே யில்லை—என்று சொல்லியிருந்தார்கள்.

"உண்மை தாயே! நான் இதுவரை யாருடனும் இவ்வளவு பேசியதில்லை. எல்லாரும் அவரவர் வேலையை முடித்துக் கொண்டு பிரசாதம் வாங்கிக் கொண்டு புறப்பட்டுப் போய் விடுவார்கள். என்னால் யாருக்கு என்ன செய்ய முடியும்?"

"அப்படியானால் என் கோரிக்கை நிறைவேறாது என்று சொல்வதற்குத்தான் என்னுடன் இவ்வளவு பேசுகிறீர்களா?"

"நான் என்ன செய்யட்டும், தாயே? கோரிக்கை நிறைவேறுவதும் இல்லாததும் என் கையிலா இருக்கிறது?"

"பின்னே யார் கையில்?"

"கடவுள் கையில்!"

"அவனிடமே இதை முடித்துக் கொடுங்கள்"

"அவன் என் கட்டுப்பாட்டிலா இருக்கிறான்?"

"பின் எதற்காக, சுவாமிகளே சுவாமிகளே என்பது?"

"அது அவர்களுடைய நம்பிக்கை, அவ்வளவுதான்!"

"அப்படியானால் என் சேவைக்கு பலன் இல்லையா?"

"உழைப்புக்குப் பலன் இல்லையா? இருக்கிறது. ஆனால் ஆசையை வைத்துக் கொண்டு சேவை செய்தால மேலும் கர்மா வந்து சூழ்ந்து கொள்ளும். அவ்வளவுதான்"

"அப்படியே ஆனாலும் ஆகட்டும்"

"அதனால் கடவுளுக்கும் தொல்லைதான்"

"ஆகட்டும். அவன் சேவை செய்வித்துக் கொண்டது சும்மாவா!"

"அப்படி வியாபாரம் செய்வதென்றால் அவன் கோமுட்டியாகி விடுவான்."

"ஆகட்டுமே"

"உங்கள் சேவை போதாது, இன்னும் உருப்படியாக ஏதாவது தாருங்கள் என்று கேட்டால்?"

"கொடுப்பது"

"என்ன கொடுக்க முடியும்"

"எது வேண்டுமானாலும்"

"எது வேண்டுமானாலும் கொடுத்தால் ஆகுமாம்மா? நீங்கள் குழந்தை வேண்டும் என்று கேட்கிறீர்கள். உங்களுக்கு எதுவரை தாங்குமோ அவ்வளவும் கடவுள் கொடுத்திருக்கிறான். இப்பொழுது ஒரு மகன் பிறந்தால் அவனைத் தெய்வத்திற்குக் கொடுதது விடுவீர்களா?"

"தெய்வத்திடம விட்டு விடுவதற்கா கேட்டுக் கொண்டிருக்கிறேன்?"

"வேறு என்ன செய்வதம்மா? கடவுள் உங்களுக்கு அளக்க வேண்டிய படியை அளந்து முடித்துவிட்டான்."

"இருப்பதற்குள் எதையாவது ஒன்றைக் கொடுத்தால் போதாதா?"

"இருக்கிற குழந்தைகளில் யாரைக் கொடுப்பீர்கள்? இப்போது அவர்கள் உங்கள் சொத்தா? அவர்களை எல்லாம் அப்போதே தானம் செயது விட்டீர்களே!"

'தானம் செய்திருந்தால் என்ன? அவர்கள் நம்முடைய பொருள்தானே"

"ஆமாம்; ஆமாம்"

"அப்படியானால் என்னுடைய ஆசை நிறைவேறாது, அப்படித்தானே? நான் இங்கேயே இருந்து உயிர் விடுவதே சரியாகும். இனி ஊருக்குப் போய் என்ன ஆகப் போகிறது?"

"நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். அவசரப்பட வேண்டாம். பிறகு நீங்களும் நானும் பச்சாதாபப்பட வேண்டி வரும்!"

"இந்தப் பெண் குழந்தைகளில் ஒருத்தி இல்லாமல் இருந்தாலும் கவலையில்லை. ஒரு ஆண் குழந்தை..."

"ராம ராம! ஏனம்மா அப்படிச் சொல்கிறீர்கள். பெண் குழந்தைகளும் குழநதைகளல்லவா?"

"அவர்கள் எல்லாம் குழந்தைகளா? வேண்டும் என்கிற வரையில் வாங்கிக் கொள் வார்கள். பிறகு புறப்பட்டுப் போய்விடுவார்கள். நம்முடைய தேவைக்கு யாரு மில்லை. முதலில் நம் வீட்டிலிருக்கும்போது குழந்தைகள். பிறகு கணவன் வீட்டிற்குப் போனதும் பெரியவர்கள்! அவர்களுக்குக் குடும்பம். அவர்கள் என்ன மருமகள் களா—வீட்டிலேயே விழுந்து கிடப்பார்கள் என்பதற்கு?"

"ஆண் குழந்தை பெற்றவர்களுக்கெல்லாம் மருமகள் கிடைக்கிறாள் என்பது என்ன நிச்சயம்? அப்படி வந்தவர்களும் கூடவே இருந்து விடுகிறார்களா? இருந் தாலும் அவர்களால் சுகம் உண்டா? அதெல்லாம் பந்தம் அம்மா, யாருக்கு யாரோ?"

"இருப்பார்கள் என்று கேட்பார்களா? இருக்க மாட்டார்கள் என்று கேட் பார்களா?"

"அது நம்முடைய விருப்பமாம்மா?"

"கடவுள் விருப்பமாகவே இருக்கட்டும்! அதற்காகத்தான் அவனைக் கேட்பது; வாங்கிக் கொடுங்கள் என்று உங்களை வேண்டுவது; இல்லாவிட்டால் இங்கே, ஏன் வரவேண்டும்?"

"கடவுளாக இருந்தாலும் புதிதாக எங்கிருந்து கொண்டு வந்து கொடுப்பான்? இருப்பதற்குள்ளேயே பேரம் பேசுகிறான். இப்போது இருப்பது வேண்டாம் என்றால், தலையில் இருப்பதைக் காலில் மாட்டுவான். காலில் இருப்பதைத் தலையில் மாட்டுவான். அப்போது அது அவலட்சணமாக இருக்கும். தொல்லை ஏற்படும். நாம் அதை வேண்டாம் என்று சொல்ல நேரிடும்."

"எனக்கு இந்த வேதாந்தம் எல்லாம் வேண்டாம். என் கோரிக்கை என்னுடையது. என்ன ஆனாலும் சரி!"

"கடவுளே, உன் எண்ணம் இப்படியும் இருக்குமா? இந்தப் பாவத்துக்கு என்னையும் ஆளாக்க வேண்டுமா? எல்லாம் உன் செயல். ஆகட்டும்—வாங்கிக் கொள்ளுங் களம்மா. இந்தக் கிண்ணத்தில் இருக்கும் குங்குமத்தை இட்டுக் கொள்ளுங்கள். அடுத்த வருடம் மகனை எடுத்துக் கொண்டு தெய்வ தரிசனத்துக்கு வாருங்கள்."

## II

"என்ன தாயே, குழந்தை கொண்டு வந்தீர்களா?"

"ஐயோ, அந்தப் புண்ணியம் எனக்கேது!"

"பின்னே இது ஏது?"

"இது அனாதைக் குழந்தை; தாயில்லாத குழந்தை"

"ஏன் நீங்கள் இருக்கிறீர்களே! நீங்களே தாய்" .

"இது என் குழந்தையல்ல, என் மகளுடையது. அவள் இதையும் என்னையும அனாதையாக்கி விட்டுப் போய்ச் சேர்ந்தாள்."

"இதையும் அனாதையாக்கவில்லை. உங்களையும் அனாதையாக்கவில்லை. அதற்கு நீங்களே திக்கு. உங்களுக்கு அதுவே திக்கு."

"இதுவா நான் கேட்டது?"

"வேறு என்னவாம்? மகனைக் கேட்டீர்கள். கடவுள் மகனைக் கொடுத்தான்!"

"மகள் செத்து அனாதைக் குழந்தையை வளர்த்துக் கொள் என்றா?"

"அதையும் நீங்கள் கேட்டீர்களேயம்மா! பெண் குழந்தைகளில் ஒருத்தி இல்லாமல் போனாலும் ஒரு ஆண் குழந்தை பிறக்கக் கூடாதா என்று கேட்கவில்லையா?"

"என்னமோ அப்படி நினைத்தேன். அப்படி நினைத்த நேரத்தில் அவள் செத்துப் போக வேண்டும் என்று என் மனத்தில் இருந்ததா என்ன?"

"கேட்டது அதுதான். கடவுள் கொடுத்ததும் அதையேதான்"

"தாய் செத்த ஏதோ அனாதைக் குழந்தை என்னுடையதாகுமா? இந்த வயதில் இதை வேறு கட்டிக் கொண்டு திண்டாட வேண்டுமா?"

"பின்னே கடவுளும்தான் என்ன செய்வானம்மா? பூவில்லாமல் மரம் எப்படிக் காய்க்கும்? பெற்ற குழந்தையல்ல வளர்ப்புக் குழந்தை. எதுவானால் என்ன? பேரக் குழந்தை வீட்டுக் குழந்தையாகாதோ? பேரக் குழந்தைகளை தத்துக் கூட எடுத்துக் கொள்வார்களே?"

"போதும் இந்த தர்ம சாஸ்திரம்! இந்தக் குழந்தையை நான் பார்க்க மாட்டேன். இதை யாராவது வளர்த்துக் கொள்ளட்டும். உங்கள் மடத்துக்கே வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்! என் மகளை எனக்குக் கொடுங்கள். அவளை நான் மகள் என்றா வளர்த்தேன்? மகள் வேறு அல்ல, மகன் வேறு அல்ல என்றல்லவா வளர்த்தேன்!"

"ஆமம்மா. அதற்கு யார் என்ன செய்ய முடியும்? தாய் இல்லாத குழந்தையைப் பாட்டியைவிட வேறு யார் அன்புடன் வளர்ப்பார்கள்? வேறு யாருக்கு இது வேண்டும்? அந்தக் குழந்தையை வைத்துக கொண்டு நான் என்ன செய்வேன். நான் சந்நியாசி?"

"வேண்டாம் எனக்குத் தேவையில்லை. என் மகள் எனக்கு வேண்டும்!"

"என்ன பைத்தியக்காரத்தனம் அம்மா இது? இப்பொழுது உங்கள் மகள் வந்தால் பேயாக வருவாள், பிசாசாக வருவாள். முன்னால் இருந்ததைப் போல் வரமுடியுமா? வந்தால் நீங்களே பயந்து விடுவீர்கள்! இந்தப் பேயை ஓட்டுங்கள் என்று ஓடி வருவீர்கள்! வேண்டாம் தாயே, வேண்டாம். இந்த துக்கத்தில் உங்களுக்கு அப்படித் தோன்றுகிறது. அப்புறம் சரியாகிவிடும். நாம் எதற்கும் அவசரப்படக்கூடாது. கடவுளிடம் இதைக் கொடு என்று கேட்பதற்குப் போகக் கூடாது. அவன் கொடுப்பதைப் பிரசாதமாக, சந்தோஷத்துடன் திருப்தியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்—என்று நான் போன வருஷமே சொல்லவில்லையா? வேண்டாம் ஒரு தடவை ஆசைப்பட்டுக் கேட்டு தொல்லையாயிற்று இன்னொரு தடவை ஆசைப்பட வேண்டாம். கடவுளின் எண்ணத்தில் செயல்முறையில் எது எது எப்படி எப்படி நடக்க வேண்டும் என்றிருக்கிறதோ அது அது அப்படியே நடக்கட்டும். அவனும் தன்னுடைய இயந்திரத்தில் ஒரு பக்கத்து ஆணியைக் கழற்றித் தானே இன்னொரு பக்கத்தில் மாட்ட வேண் டும்—இருப்பது சரியாய் இல்லை, வேறுவிதமாக வேண்டும் என்றால்?"

"இப்படித்தான் மகன் கிடைக்க வேண்டும் என்றால் முதலிலேயே கிடைத் திருக்கலாம் அல்லவா?"

"அப்படி ஒரு மகனும் இருந்தானேயம்மா"

"இல்லையே! அதற்காகத்தானே வந்து இங்கே உடலைத் தேய்த்தேன்"

"வீட்டிலேயே வளர்ந்த மகனே இருந்தானல்லவா? என்ன இப்படிச் சொல் கிறீர்கள்?"

"எங்கே? யார்?"

"உங்கள் மருமகன்"

"நன்றாயிருக்கிறது. இந்த சாதுரியமான பேச்சைக் கேட்கவா நான் இங்கே வந்தேன். மருமகன் மகனாக மாட்டான், மருமகள் மகளாவதில்லை என்று கேட்ட தில்லையா?"

"அவனை விரும்பித் தேடிக் கொண்டு வந்தீர்கள். வீட்டிலேயே இருக்கக் கூடிய மருமகனாக அமைய வேண்டும் என்று தாய் தந்தை இல்லாத மகனைப் பார்த்துப் பெண் கொடுத்தீர்கள். வீட்டில் மகனை விட அருமையாக வளர்த்தீர்கள். அவனும் நல்ல பையன் என்று பேரெடுத்தான். இன்னும் எந்த மகன் அவனைவிட அதிக விசு வாசத்துடன் நடந்து கொள்வான்? எத்தனையோ பேர் தெரியாதவர்கள் அவனை உங்கள் மகன் என்றே நினைத்தார்கள். மகனை மருமகன் என்று நினைத்தார்கள்!"

"அப்படியானால் அந்த மகன் வேண்டாம். இந்த மகன் பிறக்கட்டும் என்றா கேட்டேன்?"

" அப்படித்தான் ஆயிற்று!"

"அது எப்படி?"

"மருமகனே போக வேண்டியிருந்தது. அவனுக்குப் பதில் மகள் போய்விட்டாள்"

"அவன் ஏன் போக வேண்டியிருந்தது."

"அது அவனுடைய விதி"

"அப்படி என்ன செய்தான்?"

"முன்னாலே என்ன செய்தானோ என்னவோ, இப்போது உங்கள் கண் முன்னாலே செய்யவில்லையா—செய்து கொண்டிருக்கவில்லையா? சிரித்துக் கொண்டே செய்ததை அழுது கொண்டே அனுபவிக்க வேண்டும்!"

"அப்படிப்பட்ட பாவம் எதையும் அவன் செய்ததில்லையே? அவன் போலீசும் அல்ல; ஜட்ஜும் அல்ல. திருடனோ போக்கிரியோ அல்ல. ஒருவரை அடித்ததுமில்லை, துன்புறுத்தியதுமில்லை மற்றவர்களிடம் அதிர்ந்து கூடப் பேசமாட்டான்!"

"உண்மை. அதற்காகத்தான் அவனை நல்ல பையன் என்று சொல்வது. எல்லாரும் சொல்லிக் கொண்டிருப்பது! ஐயோ, குழந்தை அழுகிறது. சமாதானப்படுத்துங்கள் "

"தாய் இல்லாத குழந்தை. நான் எப்படிச் சமாதானப்படுத்த முடியும்? குழந்தையைத் தூக்கிக் கொள்கிற பழக்கம் கூட மறந்து போய்விட்டதே!"

"தூக்கிக் கொள்ளுங்கள். பழக்கமாகிவிடும். இப்போது நீங்கள் எடுத்துக் கொள் ளுங்கள். பாருங்கள், சும்மா இருக்கிறது. அதற்கு நீங்கள்தான் தாய் என்று தெரிகிறது. அது உங்கள் குழந்தை என்ற ஞானத்தை நீங்கள் வரவழைத்துக் கொள்ளவேண்டும். அப்படியானால் கடவுளின் திட்டம் நிறைவேறும்"

"கொஞ்சம் பால் இருந்தால் கொண்டு வரச் சொல்லுங்கள், கொடுத்துப் பார்க் கிறேன்"

"பிச்சைக்காரனிடத்தில் ஏதம்மா பால்! இந்தாருங்கள் இந்தத் தீர்த்தத்தை வாங்கிக் கொள்ளுங்கள். எழுந்திருங்கள், வாருங்கள், வாங்கிக் கொள்ளுங்கள்! அப்படி! குடியுங்கள். குழந்தைக்கு ஊட்டுங்கள். அதுவே பாலாகும். இப்பொழுது குழந்தையைத் தூக்கிச் சமாதானப்படுத்துங்கள். உங்கள் மகளுக்கு எப்படியோ, உங்கள் மருமகனுக்கு எப்படியோ, இந்தக் குழந்தைக்கும் அப்படியே, அதைவிட அதிகமாக நீங்கள்தான் தாய்...! முதலில் நீங்கள் அமைதி அடைய வேண்டும். இப்பொழுது குழந்தையைக் கொஞ்சம் தட்டுங்கள்! பாருங்கள், இப்போது அதற்குத் திருப்தி. இனி தூங்கிவிடும். நீங்கள் சந்தோஷப்பட்டால் அதுவும் சந்தோஷமாகும். நான் அமைதியாக இருந்தால் நீங்களும் அமைதி யாவீர்கள்! எங்கே இப்போது சொல்லுங்கள், ஏதோ சொல்லிக் கொண்டிருந்தீர்களே?"

"என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?"

"குழந்தை அழுவதற்கு முன்னால் ஏதேதோ சொல்லி வருத்தப்பட்டுக் கொண் டிருந்தீர்களல்லவா? இங்கே வந்து என்னை என்ன கேட்க வேண்டும் என்று நினைத் தீர்கள்?"

"என் மகள் ஏன் செத்தாள் என்று கேட்க நினைத்தேன்"

"என்னவென்று சொல்லட்டும்! எத்தனையோ இழைகள் சிக்கிக் கொண்டு முடிச்சு விழுந்துவிட்டது. அதை அவிழ்க்கப் போய் ஒரு நூல் அறுந்துவிட்டது!"

"இங்கே நூல் எங்கே வந்தது. கயிறுதான்!"

"அதையே விதியின் இழை என்று சொல்லுவது!"

"அப்படியென்றால்?"

"அதையும் என் வாயிலிருந்தே வரவழைக்க வேண்டுமா? செய்தவர்களின் பாவம் சொல்லியவர்களின் வாயில் என்பார்களே, அப்படி இருக்கிறது. அதெல்லாம் எதற்கு? முக்கியமாக இறைவனின் திருவுள்ளம் என்று வைத்துக் கொள்ளுங்கள்!"

"நல்ல இறைவன் திருவுள்ளம்! எதையெடுத்தாலும் இறைவன் திருவுள்ளம், இறைவன் திருவுள்ளம்தான். அந்தப் பாழும் கடவுள் எங்கே மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறானோ தெரியவில்லை!"

"ஆம் தாயே! கடவுளின் இச்சை இல்லாமல் ஒரு புல்லும் துரும்புங்கூட அசைவ தில்லை!"

"எனக்கு அது புரியவில்லை. எனக்குப் புரியும்படியான சங்கதி ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்."

"ஆகட்டும். உங்கள் மகள் கணவனுக்காகத் தன் உயிரைக் கொடுத்தாள்!"

"இதற்கா அவனுக்குப் பெண்ணைக் கொடுத்து வீட்டில் வளர்த்தது?"

"வேறொருவருக்கு, அதுவும் தனது கணவனுக்கு தன் உயிரைத் தவிர வேறெதைக் கொடுக்க முடியும்? அவள் இருக்கும் வரை அன்பைக் கொடுத்தாள்; கடைசியில் உயிரைக் கொடுத்தாள். அது தலைகீழாகி, அவள் வீட்டில் வருந்திக் கொண்டிருக்க அவளைப் பார்த்து நீங்கள் ஏங்க, கொடுத்தவர்களும் வாங்கியவர்களும் அடுத்த வர்களும் மற்றவர்களும் பார்த்தவர்களும் கேட்டவர்களும் போனவர்களும் வந்தவர் களும் எல்லாரும் அவளைச் சலித்துக் கொண்டு தொடைகாலி என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு இருந்திருந்தால் அதை நீங்கள் தாங்கிக் கொண்டு இருப்பீர்களா?

"என்ன செய்திருப்பேனோ?"

"ராம ராம! அந்தத் துக்கம் யாருக்கும் வேண்டாம். நம் சமுதாயத்தில் கணவனை இழந்தால் பெண்கள் படும்பாடு யாருக்கும் வேண்டாம். இப்போது இருப்பதைவிட அப்போது இன்னும் கஷ்டப்பட்டிருப்பீர்கள். உங்களுக்குத் துணையாக அந்தப் பெண்ணும் நூறு பங்கு அதிகமாகக் கஷ்டப்பட்டிருப்பாள். பிறந்த பிறகு எல்லோரும் சாகவே வேண்டும். சிலர் முன்னால், சிலர் பின்னால் அவ்வளவுதான். அவள் மஞ்சள் குங்குமத்தோடு இருக்கிறவரையில் எல்லாரிடமும் நல்ல பெயர் வாங்கிக் கொண்டு போனாள். அந்தப் புண்ணியம் எல்லாருக்கும் எங்கே கிடைக்கும்?"

"இவ்வளவு சின்ன வயதில் போக வேண்டுமா? வாழவும் இல்லை, வளரவும் இல்லை!"

"இன்னும் உயிரோடு இருந்திருந்தால் என்னென்ன கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டியிருந்ததோ, நீங்கள் என்னென்ன துன்பம் படவேண்டியிருந்ததோ, யாருக்குத் தெரியும்?"

"உயிரோடு இருப்பது கஷ்டப்படுவதற்குத்தானா?"

"வேறு எதற்கம்மா? சம்சாரத்தில் கஷ்டத்தைத் தவிர வேறு என்ன இருக்கிறது!"

"எவ்வளவோ பேர் சுகமாக இருக்கிறார்கள் அல்லவா?"

"இருக்கிறார்கள். எத்தனையோ பேருடைய சுகத்தைக் கவர்ந்து கொண்டு ஒவ்வொருவர் அனுபவிக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா? இன்னும் சொல்லப் போனால் எந்தப் புற்றில் எந்தப் பாம்போ!"

"தன் கணவனுக்காக இவள் ஏன் உயிரைக் கொடுக்க வேண்டும்? அவன் செய்த பாவம் என்ன? அவன் யாருடைய சுகத்தைப் பறித்துக் கொண்டான்? யாருக்கு அநியாயம் செய்தான்? அவன் செய்து வந்தது வாத்தியார் வேலை. அதில் ஏது வஞ்சனையும் மோசமும், பொய்யும் புனைசுருட்டும், லஞ்சமும், ஊழலும் ஒன்றுமே இல்லையே. வேலைக்கேற்ற கூலி என்று அரசாங்கம் தானாகக் கொடுத்த சம்பளம் எவ்வளவோ அவ்வளவுதான். இதில் அவன் செய்த பாவம் என்ன?"

"நீங்கள் சொல்வது உண்மையம்மா. ஆனால் அவர் சொல்கிற பாடம் என்ன தெரியுமா? பாடம் சொல்லும்போது செய்யும் வேலை என்ன தெரியுமா?"

"எனக்கென்ன தெரியும்? ஏதோ பி.ஏ. முடித்ததும் கல்கத்தாவுக்குப்போய் இரண்டு வருஷம் படித்துவிட்டு வந்தான். இங்கே வேலையில் சேர்ந்தான்."

"உங்களுக்கு வேறு என்ன தெரியும், பாவம்! அவர் அங்கே படிக்கிற போதும் இங்கே பாடம் சொல்கிற போதும் தினமும் உயிர்களைக் கொல்ல வேண்டும், அறுக்க வேண்டும், கிழிக்க வேண்டும்..."

"ராம ராம!"

"ஆமாம் தாயே. வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள். அவைகளின் பலன் எல்லாம் எங்கே போகும்?"

"அப்படியானால் அந்தப் பாடம் வேறு யாரும் சொல்வதில்லையா? அவர்களுக்கெல்லாம் இப்படி ஆகிறதா? கசாப்புக்காரன் தினமும் பசுவைக் கொல்கிறான் அல்லவா, அதைச் சாப்பிடுகிறவர்கள் அதைத் தினமும் சாப்பிடுகிறார்கள் அல்லவா. அவர்களுக்கெல்லாம் இப்படி ஆகிறதா?"

"அது யாருக்கு ஒட்டுமோ அவருக்கு ஒட்டும். அதுவுமல்லாமல் யார் யார் எந்தெந்தப் பாவத்தின் பலனை எவ்வெப்போது எந்தெந்த வகையில் அனுபவிக்கிறார்கள் என்பது எனக்கும் உங்களுக்கும் கண்ணில் படுமா என்ன?"

"அவன் செய்த பாவத்திற்கு அவள் ஏன் சாக வேண்டும்?"

"எத்தனையோ நாட்கள் சாயங்காலம் வீட்டுக்கு வந்து தலை நோகிறதென்று படுத்திருக்கிறான். ஏதேதோ வலி என்று துடித்தான். சரியாகச் சாப்பிடுவதில்லை தூங்குவதில்லை. டாக்டரைக் கேட்டால் 'ஒன்றும் இல்லை. அவர் நன்றாக இருக்கிறார். திடமாக இருக்கிறார் என்று சொன்னார்கள். சரிதானா? அந்தப் பெண் மாத்திரம் கணவன் துடிப்பதைப் பார்க்க முடியாமல் 'இது எனக்காவது வரக் கூடாதா? அவர் சுகமாக இருக்கக் கூடாதா?' என்று வேண்டிக் கொண்டாள். அவள் பதிவிரதை. நல்ல நடத்தையுள்ளவள். கடவுள் அவள் பிரார்த்தனையை நிறைவேற்றினார்."

"இப்படி என்று தெரிந்திருந்தால் அவனைக் கல்கத்தாவுக்கும் அனுப்பியிருக்க மாட்டேன். அவனுக்காக ஆயிரக் கணக்கில் செலவழித்தும் இருக்க மாட்டேன். இந்த வேலை இல்லாவிட்டால் இன்னொரு வேலை!"

"பின்னால் நடப்பதை யார் அறிவார்கள்? கண்ணால் கண்டாலும் யார் வாய் விட்டுச் சொல்வார்கள்?"

"வாயில் வந்தால் கைக்கு வருமோ?"

"உண்மை. பேச்சு வருவது வாயிலிருந்துதான், கையிலிருந்து அல்ல. ஆனால் வாய் தானாக பேசுமோ! அசைக்கிறவர்கள் அசைத்தால்தானே அது பேசும்? அது வெறும் குழல்தான். ஊதுகிறவன் ஊதினால்தான் அது ஊதும்?"

"இந்தச் சாதுரியமான பேச்சுக்கு ஒன்றும் குறைவில்லை!"

"சாதுரியம் அல்ல, அம்மா, யதார்த்தம்! இறைவனின் திட்டத்தை யாரால் மீற முடியும்? இன்னும் பார்க்கப் போனால் சொன்னாலும் அது நம் காதில் விழுமா? நாம் கேட்போமா? கடவுளுக்கு ஆயிரம் வாய்கள். எந்த வாயால் எதைச் சொல்கிறானோ? நமக்கு அதைக் கேட்பதற்குக் காது வேண்டாமா? தெரிந்து கொள்வதற்கு ஞானம் வேண்டாமா? நீங்கள் ஒரு தடவை உங்கள் ஊரிலிருந்து வந்து கொண்டிருந்தபோது சென்னைப் பட்டிணத்தில் ஒருவர் ரெயிலில் ஏறினார்; பேச்சு வளர்ந்து கொண்டே போனபோது, கல்கத்தாவுக்கு ஏன் போக வேண்டும், கொடுக்கிற தெய்வம் எங்கிருந் தாலும் கொடுக்கும் என்று சொல்லவில்லையா? நீங்கள் ஏன் கேட்கவில்லை. இதெல்லாம் பிராமணர்களுக்கு ஏற்றதில்லை என்று உங்கள் புரோகிதர் சொல்ல வில்லையா? அவர் பேச்சை ஏன் எடுத்துக் கொள்ளவில்லை? வண்டி ஒட்டுகிறவர்கள் 'ஹை ஹை' என்று கூவிக் கொண்டே ஒட்டுகிறார்கள். அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லையானால் வண்டியில் மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்... இதோ பாருங்கள். குழந்தை அழுகிறது. எடுத்துக் கொள்ளுங்கள், பாவம், தரையில்போட்டு இருக்கிறீர்கள்!"

"அழுதால் அழட்டும். யாருக்கு என்ன கவலை?"

"இதற்காகவா இதை வேண்டிப் பெற்றீர்கள்?"

"இதையா நான் கேட்டேன்? நானா பெற்றேன்?"

"வேறு யார் கேட்டது? வேறு யார் அடைந்தது? கடவுள் கொடுத்ததை நன்றாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். இல்லா விட்டால் அது நிலைக்காது."

"அப்படியானால் என் மகளை நான் நன்றாகப் பார்த்துக் கொள்ளவில்லையா, அவன் ஏன் இருக்கவில்லை?"

"பார்த்துக் கொண்டீர்கள். இல்லை என்ற சொல்வதற்கு முடியுமா? ஆனால் எவ்வளவு ஆதரவு காட்ட வேண்டுமோ அவ்வளவு இல்லை. அந்தப் பெண் எத்த னையோ நாட்கள் கண்ணீர் விடவில்லையா? எத்தனையோ நாட்கள் இவள் ஏன் பிறந்தாளோ என்று நீங்கள் சொல்லவில்லையா? உங்கள் வீட்டுத் தோட்டக்காரன் செடிகளைப் பார்த்துக் கொள்ளாமல் தண்ணீர் விடாமல் அவைகளை வாடவிட்டால் நீங்கள் சும்மா இருப்பீர்களா?"

"செடிகள் பாழாகப் போகட்டும்!"

"சம்சாரமும் ஒரு தோட்டத்தைப் போலத்தான், தாயே! வளர்ந்த மரங்கள் உயர்ந்து கொண்டே போகின்றன. சிறிய செடிகளைக் கவனிக்காமல் வாடவிட்டால் எப்படி?"

"அப்படியானால் யாரையும் எதுவும் சொல்லவே கூடாதா?"

"ஏன் சொல்ல வேண்டும்? வேறொருவராயிருந்தால் திருப்பிச் சொல்வார்கள். எதுவுமில்லாமல் நம்முடைய எஜமானத்தனம், பெருமை, செழிப்பு இதைக் காட்டிக் கொள்வதற்காக மற்றவர் மனத்தை நோகச் செய்ய வேண்டுமா? தெரிந்தவர்கள் பக்குவப்பட்டவர்கள் நொந்து போவதில்லை, மற்றவர்கள்...? அமைதி அடையுங்கள். குழந்தையை வளர்த்து வாருங்கள். இருக்கிறவர்களைப் பார்த்துக் கொண்டு சந்தோ

ஷமாக இருங்கள். எடுத்துக் கொள்ளுங்கள். குங்குமத்தை வைத்துக் கொள்ளுங்கள். ஊருக்குப் போய்விட்டு வாருங்கள்!"

"எனக்குக் குங்குமமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். ஒரு தடவை வைத்துக் கொண்டதில் இவ்வளவு நடந்தது!"

"சுமங்கலிகள் அப்படிச் சொல்லக் கூடாது. எடுத்துக் கொள்ளுங்கள். அந்தப் பாவத்தையும் என் மீது சுமத்தாதீர்கள். நம்மை நாமே சமாதானப்படுத்திக் கொள்ளா விட்டால் வேறு யார் செய்ய முடியும்? கடவுளே வந்து சமாதானம் சொன்னாலும் நம்முடைய மனத்தில் அது ஏறினால்தானே? நம்முடைய மனம்தானே சமாதானம் அடைய வேண்டும். கடைசியில் யாருக்கு யாரோ? நமக்கு நாமேதான்!"

"ஆமாம்! கேட்டதைக் கொடுக்காமல் எதையோ தலையில் கட்டிவிட்டு, சமாதானப் படுத்திக் கொள் என்றால் எப்படிச் சமாதானம் அடைவது? யாரோ ஒரு ஊமை தனக்குக் கல்யாணம் வேண்டும் என்று கேட்டானாம். அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்காமல், கல்யாணம் செய்து கொள்வது குழந்தைகளுக்காகத்தானே, இதோ உன் குழந்தை! ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று என்று சொல்லி மூன்று செடி களை நட்டு அவன் இடுப்பு முறியத் தண்ணீர் ஊற்றச் செய்தார்களாம். அப்படி இருக்கிறது கதை!"

"உண்மை, தாயே! நானும் அந்தக் கதையைக் கேட்டிருக்கிறேன். ஆனால் நாம் கேட்பதை எல்லாம்கொடுத்து வருவதற்கு யாரோ தயாராகக் கையைக் கட்டி நின்று கொண்டு, எங்கேயோ, வேலைக்காரர்களைப் போலக் காத்துக் கொண்டிருக் கிறார்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? எடுத்துக் கொள்ளுங்கள், குங்குமத்தை. வைத்துக் கொள்ளுங்கள்..."

# நான் கொன்ற பெண்

ஆனந்த

ஆறேழு ஆண்டுகளுக்கு முன்னால் நடந்தது. கோடை விடுமுறையில் எங்கள் (மைசூர்) சீமையை எல்லாம் சுற்றிக் கொண்டு வரவேண்டும் என்று புறப்பட்டேன். நம் நாட்டிலிருக்கிற புகழ் வாய்ந்த சிலைகள், சிற்பங்களின் அழகையெல்லாம் படங்களில் சேகரிக்க வேண்டும் என்று எனக்கு ஒரு பைத்தியம். சோமநாத புரம், பேலூர், ஹளேபீடு முதலிய இடங்களிலிருந்த கோவில்களைப் பற்றிய வருணனை களைப் புத்தகங்களில் படித்தபோது, சாகாமல் பிழைத்திருந்தால் ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் அவற்றையெல்லாம கண்ணாரப் பார்த்துவிட்டு வருவேன் என்று திட்டமிட்டிருந்தேன். அதனால் நான் பிரயாணத்திற்குப் புறப்பட்ட போதெல்லாம் என் ஆசைக் கனவு நனவாகிறதல்லவா என்று பெருமைப்பட்டேன். இனி நான் சொல்லப்போகிற விஷயம்— என் பிரயாணத்தைப் பற்றிய ஒரு கட்டுரை அல்ல. என் சுற்றுப் பயணத்தின் நடுவில் ஒரு கிராமத்தில் நடந்த ஓரிரண்டு நாள் சங்கதி.

அந்தக் கிராமத்தின் பெயர் நாகவள்ளி. நான் அங்கே வருவதற்கு முன்னால் என் பிரயாணம் முக்கால் பாகம் முடிந்திருந்தது என்று சொல்லலாம். அதற்குள் நூறு நூற்றைம்பது படங்களைச் சேகரித்து இருந்தேன். எல்லாம் நானே சொந்தமாக எடுத்த போட்டோக்கள்.

நாகவள்ளியில் கரியப்பா என்பவர் மிகவும் உயர்ந்தவர். அந்தக் கிராமத்துக்கே பெரியவர். நான் அவர் வீட்டில்தான் தங்கியிருந்தேன். கதை இங்கிருந்து தொடங்கு கிறது என்று வைத்துக் கொள்ளலாம்.

நான் அந்தக் கிராமத்துக்குப் போனபோது இரவு சுமார் ஒன்பது மணி இருக்கும். என் சாமான்களையெல்லாம் ஒரு மாட்டு வண்டியில் போட்டு நான் அதன் பின்னாலேயே நடந்து போனேன். இரவெல்லாம் அந்த மாட்டு வண்டியில் பயணம் செய்வது எனக்குச் சரியாகத் தோன்றவில்லை. அன்று இரவு அந்தக் கிராமத் திலேயே தங்கிவிடலாம் என்று தோன்றியது. "தங்குவதற்குச் சரியான இடம் ஏதாவது இருக்கிறதா?" என்று வண்டிக்காரனைக் கேட்டேன். அவன் கரியப்பாவின் பெயரைச் சொல்லி "நீங்க அனுமதிச்சா அவரிடம் போய்ச் சொல்றேன். அவர் எல்லா உதவியும் செய்து கொடுப்பார்" என்றான். 'சரி' என்றேன். மேலே பத்து அடி போவதற்குள் அவர்கள் வீடு வந்தது. நான் வண்டியின் பக்கத்திலேயே நின்றி ருந்தேன். வண்டிக்காரன் இறங்கி அந்த வீட்டுப் பக்கம் போய் இரண்டு நிமிஷம் கழித்து இன்னொருவரை அழைத்துக் கொண்டு வந்து "இவர்தான் கரியப்பா என்பவர்" என்றான். அவர் என் அருகில் வந்து மிகவும் அன்புடன் கைகுவித்து "வாங்க வாங்க! இதை உங்கள் வீடாகவே நினைச்சிக்குங்க" என்று சொன்னார். நானும் கை கூப்பி 'உங்களுக்குத் தொல்லை கொடுக்கிறேன்' என்றேன். அவர் 'சுவாமி, அதெல்லாம் ஒன்றுமில்லை. இதிலென்ன கஷ்டம்? நீங்கள் பெரிய மனது

பண்ணி எங்கள் வீட்டுக்கு வர ஒப்புக் கொண்டீங்களே, அதுவே நான் செய்த புண்ணியம். தொந்தரவு கிந்தரவு என்றெல்லாம் சொல்லாதீங்க. வாருங்கள்" என்று தம் வீட்டைக் காட்டி, வண்டிக்காரனைப் பார்த்து, 'டேய் திம்மா, ஐயாவின் சாமான்களையெல்லாம் திண்ணை மீது இறக்கி வை' என்று சொன்னார்.

நாங்கள் போய் அவர் வீட்டுத் திண்ணையின் மேல் போட்டிருந்த பாயில் உட்கார்ந்தோம். கரியப்பாவினுடைய குடும்பம் மிகவும் பெரியது. நிறைந்தவீடு. நான் போய் உட்கார்ந்த உடனேயே உள்ளே இருந்து மூன்று நான்கு சின்னச் சின்னக் குழந்தைகள் வெளியே ஓடிவந்து மகிழ்ச்சியோடு எங்களைச் சுற்றி நின்று கொண்டன. என்னுடைய தொப்பியும் பூட்சும் அவர்களுக்கு வேடிக்கையாக இருந் திருக்க வேண்டும்.

திண்ணையின் ஒரு பக்கத்தில் ஓர் அறை. வீட்டு வேலைக்காரன் அதன் கதவைத் திறந்து பெருக்கி, பாயை விரித்து ஒரு விளக்கைக் கொண்டு வந்து வைத்துவிட்டுப் போனான். வண்டிக்காரன் என் சாமான்களையெல்லாம் அந்த அறை யிலேயே வைத்து விட்டு வந்தான். அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டேன். கரியப்பா, "சுவாமி, இனி துணியை மாற்றிக் கொள்ளலாமே" என்றார். நானும் எழுந்து அறைக்குள் போய் எல்லாவற்றையும் களைந்து விட்டு ஒரு வேட்டியை உடுத்திக் கொண்டு, சட்டையை மாட்டிக் கொண்டு வந்தேன். அதற்குள் யாரோ வெந்நீர் கொண்டு வந்து வைத்திருந்தார்கள். நான் முகம் கை கால் கழுவிக் கொண்டேன். அரை மணி நேரத்தில் சாப்பாடு முடிந்தது. மீண்டும் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டபடி பேசிக் கொண்டிருந்தோம். என் பிரயா ணத்தைப் பற்றி அவருக்கு விவரமாகச் சொன்னேன். நான் அவர் வீட்டில் தங்கியது அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அது அவருடைய பேச்சிலும் நடவடிக் கையிலும் தெரிந்தது. பேச்சின் இடையில் அவரைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொண்டேன். மிகவும் வசதியானவர். நானூறு ரூபாய் கிஸ்தி கட்டுகிறார். வீடு நிறைய மக்கள்; ஆட்கள், மாடு கன்றுகள் எதிலும் குறைவில்லை. வீட்டைப் பெரிய தாகக் கட்டிக் கொண்டிருந்தார். அந்தக் கிராமத்திற்கு அதுதான் பெரியது. எல்லா வற்றையும் விட என் மனத்தில் பதிந்தது அவருடைய கள்ளமில்லாத அடக்கம். அது அந்தப் பக்கத்து மக்களுக்கு இயல்பானது என்று தோன்றியது. மொத்தத்தில் அவர்கள் வீட்டில் எனக்குப் பெரிய உபசாரம் நடக்கும் என்று நினைத்தேன்.

சாப்பாட்டுக்குப் பிறகு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருக்கவில்லை. நடந்து வந்ததால் கொஞ்சம் களைப்பாய் இருந்தது. அதை அவரிடம் தெரிவித்து விட்டு அறைக்குள் போய் விளக்கை அணைத்து விட்டுப் படுத்து விட்டேன்.

காலையில் விழித்தபோது, ஆறரை அல்லது ஏழு மணி இருக்கலாம். அதற்குள் என் அறையின் வெளியே தண்ணீர் தயாராக இருந்தது. முகத்தைக் கழுவிக் கொண்டு அறையிலேயே உட்கார்ந்திருந்தேன். கரியப்பா தாமே ஒரு பாத்திரத்தில் பால் எடுத்துக் கொண்டு வந்தார். அவர் வீட்டில் காப்பிப் பழக்கம் இல்லை. எனக்குப் பால் குடித்துப் பழக்கமில்லை. எப்படியோ—அவர் அவ்வளவு அன்போடு கொண்டு வந்ததை வேண்டாம் என்று சொல்லக் கூடாது என்று நினைத்துக் குடித்தேன். பிறகு அவரை அங்கேயே உட்கார்த்தி வைத்து நான் பல இடங்களிலும் திரிந்து திரட்டிய படங்களைக் காட்டி அவற்றைப் பற்றி நான் தெரிந்து கொண்டிருந்ததை எடுத்துச் சொன்னேன். அதைக் கேட்டு அவர் அடைந்த மகிழ்ச்சியையும் வியப்பையும் என்னால் சொல்ல முடியாது. அவர் என்னைப் பார்த்து, "சுவாமி, நீங்கள் ஒப்புக் கொண்டால், இங்கே பக்கத்திலேயே ஒரு கோவில் ரெங்கப்பன்—கோவில்—மிகப்

பழையது, மிகவும் அழகானது; அதிக தூரமில்லை" என்றார். நான் செவிகளை நிமிர்த்திக் கொண்டேன். "எங்கே?" என்றேன். "இங்கேயே. இங்கிருந்து மூன்று மைல் தூரத்தில். அதோ பாருங்கள். அதோ தெரிகிறதே அந்தச் சிறிய மேடு. அதற்குப் பக்கத்தில்"

பேலூரில் எடுத்த படங்களில் சிலவற்றுக்குக் குறிப்பும் விளக்கமும் எழுத வேண்டியிருந்தது. மேலும் லட்சுமிக்குக் கடிதம் எழுத வேண்டியிருந்தது. "ஆகட்டும். அப்படியானால் நாளைக் காலை அங்கே போய் வருகிறேன். இன்று கொஞ்சம் எழுதுகிற வேலை இருக்கிறது." என்று சொன்னேன். "உங்கள் விருப்பம். அப்படியே ஆகட்டும்."

அன்று குறிப்பும் விளக்கமும் எழுதுவதிலேயே மணி பன்னிரண்டாகிவிட்டது. சாப்பிட்ட பிறகு லட்சுமிக்குக் கடிதம் எழுத உட்கார்ந்தேன். என்னுடைய பயணத்தில் ஒய்வு கிடைத்த போதெல்லாம் அவளுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தேன். எல்லாவற்றிலும் முக்கால் பங்கு என் பயணத்தைப் பற்றித்தான். நான் பார்த்த கோவில்கள், காட்சிகள், அவற்றின் வருணனை முதலியனவே. என் பயணத்தில் லட்சுமியின் நினைவு இடை விடாமல் என்னைப் பின் தொடர்ந்தது. எத்தனையோ தடவை "ஐயோ! இந்த அழகைப் பார்ப்பதற்கு என் லட்சுமி இல்லையே; அவள் என் அருகில் இருந்திருந்தால் அவற்றின் அழகு இன்னும் அதிகமாகியிருக்கும்" என்று எழுதியதுமுண்டு. அன்று நான் நாகவள்ளிக்கு வந்தது, அங்கே கரியப்பாவின் மரியாதை கலந்த விருந்துபசாரம், அவருடைய குழந்தைகளைப் பற்றிய செய்திகள் எல்லாம் எழுதி, நாளை அந்த மேட்டுக்குப் போகலாம் என்றிருப்பதையும் தெரிவித்து, அதன் பிறகு எங்களுக்கே உரிய சில விஷயங்களை எழுதிக் கடிதத்தை முடித்தேன். இந்தக் கிராமத்தில் தபால் ஆபீசு இல்லை. ஒரு தபால் பெட்டி மட்டுமே உண்டு. வாரத்தில் இரண்டு தடவையோ மூன்று தடவையோ தபால்காரன் வந்து கடிதங்களை எடுத்துக் கொண்டு போவான். விசாரித்ததில் இது தெரிய வந்தது. ஆனால் தபால் பெட்டி எங்கிருந்ததோ தெரியவில்லை. ஆள் யாராவது இருந்தால் அவன் கையில் இதைத் கொடுத்துத் தபால் பெட்டியில் போடச் சொல்லலாம் என்று நினைத்து அறையை விட்டு வெளியே வந்தேன். நான் வெளியே வரும்போது அறையின் எதிரில் கொஞ்ச தூரத்தில் திண்ணையின் மீதிருந்த கம்பத்தில் சாய்ந்து கொண்டு ஓர் இளம்பெண் உட்கார்ந்திருந்தாள். வீட்டுக்காரரின் மகளாக இருக்கலாம் என்று தோன்றியது. வெளியே வந்தவன் ஆள் யாரும் தென்படாமல் போகவே என்ன செய்வது என்று தெரியாமல் நின்றதும் நான் பார்த்த அந்தப் பெண் எழுந்து, "என்ன அய்யா, என்ன வேண்டும்? சொல்லுங்க" என்று சொல்லிப் புன்னகையுடன் நின்றாள். அந்தக் கிராமத்துப் பெண்ணின் நயமும் இயல்பும் கண்டு மகிழ்ந்தேன். "ஒன்றுமில்லையம்மா, இந்தக் கடிதத்தைத் தபாலுக்கு அனுப்ப வேண்டும். தபால் பெட்டி எங்கிருக்கிறதுன்னு தெரியலை. சொல்கிறாயா?" என்று கேட்டேன். அந்தப் பெண் சிரித்துக் கொண்டே இரண்டடி முன்னால் வந்து, "உங்களுக்கு எதற்கு அந்தத் தொல்லை. காகிதத்தை இங்கே கொடுங்கள். நான் போய்ப் போட்டுவிட்டு வரு கிறேன்" என்றாள். அவள் பேச்சைக் கேட்ட பிறகு அவளிடம் இன்னும் கொஞ்சம் பேச வேண்டும் என்று தோன்றியது. "உனக்கு அது தொந்தரவு அல்லவா?."

"ஐயோ, என்ன தொந்தரவு? நீங்க பெரியவங்க"

"அப்படியானா உனக்குத் தொந்தரவு ஏதுமில்லையா?"

"இல்லை ஐயா. இங்கே கொடுங்க அந்தக் கடிதத்தை" என்று சொல்லி இரண்டு கைகளையும் நீட்டினாள். நான் கடிதத்தை அவள் கையில் கொடுத்து, "உன் பெயர்

என்ன?" என்று கேட்டேன். "என் பெயர் சென்னி" என்று வெட்கத்துடன் சொல்லி விட்டுப் புறப்பட்டுப் போனாள். அழகான பெயர் என்று நினைத்துக் கொண்டேன். சென்னி நன்றாகப் பேசினாள். அவள் முகத்தில் தெரிந்த அந்தக் கனிவு—கண்ணில் அவளுடைய களங்கமற்ற இதயத்தின் நிழல்—பேச்சில் கிராமப்புறத்தின் ஒருவித மான அழகு இவை ஒவ்வொன்றும் என் மனத்தில் ஆழப்படிந்தது.

அன்று பகலில் சாப்பிட்ட பிறகு சிறிது நேரம் தூங்கினேன். விழித்தபோது சுமார் நான்கு மணி இருக்கலாம். முகம் கழுவிக் கொள்வதற்காக அறையிலிருந்து வெளியே வந்தேன். மறுபடியும் அதே பெண் நான் முதலில் பார்த்த அந்த இடத்திலேயே கம்பத்தில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். நான் வெளியே வந்ததைப் பார்த்ததும் நீட்டியிருந்த கால்களை மடக்கிக் கொண்டு மனத்தில் ஏதோ சிந்தனை இருப்பதைப் போல முந்தானையின் ஓரத்திலிருந்த நூலைப் பிய்க்க ஆரம்பித்தாள். எனக்குத் தண்ணீர் தேவையாயிருந்தது. அங்கே வேறு யாருமில்லை. அந்தப் பெண் ணிடம் ஒரு முறைதான் பேசியிருந்தேன். அந்தச் சலுகையை வைத்துக் கொண்டு "சென்னம்மா! கொஞ்சம் தண்ணீர் வேணும் முகம் கழுவ" என்றேன். "ஆகட்டும், ஐயா," என்று புன்னகையுடன் வேகமாக உள்ளே போனாள். சென்னம்மா பிறக்கும் போதே புன்னகையை உடன் கொண்டு வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. நான் பார்க்கும் போதெல்லாம் அந்தக் களையான முகத்தில் ஒளி வீசிக் கொண் டிருந்தது. நகரங்களில் இளம் பெண்களின் புன்னகையைப் பல சமயங்களின் பார்த்திருக்கிறேன். ஆனால் அது பொதுவாக, பெரிய பெரிய மரங்களை வீழ்த்திப் புழுதியைக் கிளப்பும் பெருங்காற்றைப் போல, மனத்தில் இரைச்சல் மிகுந்த அலைகளை எழுப்பி அல்லோகலப்படுத்தும் புன்னகை. சென்னம்மாவின் புன்னகை அப்படிப்பட்டதல்ல. அது, மெதுவாக அங்குமிங்கும் தவழ்ந்து தளிர்களில் நுழைந்து பூக்களில் பாய்ந்து நறுமணத்தைத் தாங்கிவரும் தென்றலைப் போல, நெஞ்சில் சிறுசிறு அலைகளை உருவாக்கும் சரளமான புன்னகை. பெருங்காற்றில் சிக்கிக் கொண்டால் வெறும் மண்தான், கண்ணிலும் வாயிலும். அதில் அழகு இல்லை. இந்தக் கிராமத்துப் பெண்ணின் சிரிப்பிலோ? ஓ! அது மல்லிகைப் பூவைப் போல. மல்லிகைப் பூ எவ்வளவு தூய்மையானது, இணையில்லாத மணம். இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கும்போதே சென்னம்மா தண்ணீர் கொண்டு வந்தாள். கை, கால் முகம் கழுவிக் கொண்டு, அறைக்குள் போவதற்குள் சென்னம்மாவே சிறிது சிற்றுண்டியும் ஒரு கிண்ணத்தில் பாலும் கொண்டு வந்து வைத்து விட்டுப் போனாள். அதை முடித்துக் கொண்டு அப்படியே உலாவிவிட்டு வரலாம் என்று என் குழலையும் சிறிய காமிராவையும் எடுத்துக் கொண்டு அறையை விட்டு வந்தேன். அப்போது சென்னம்மா அதே இடத்தில் உட்கார்ந்திருந்தாள். நான் வீட்டை விட்டு நான்கைந்து கஜம் வந்தேன். எந்தப் பக்கம் போகலாம் என்று சிந்தித்தேன். வீட்டுக்குப் பின்னால் அவர்களுடைய தோட்டம் இருந்தது என்பதைக் கேள்விப்பட்டது நினைவுக்கு வந்தது. அங்கேயே போகலாம் என்று முடிவு செய்தேன். ஆனால் வழி தெரியாது. என்ன செய்வது என்று யோசித்து, சென்னம்மாவையே கேட்டு விடலாம் என்று, "என்னம்மா, உங்க தோட்டத்தைப் பார்க்கலாம்னு நினைக்கறேன். வழி எப்படி" என்று கேட்டேன். அவள் "ஆகட்டும் ஐயா" என்று என்னை அழைத்துக் கொண்டு வீட்டுக்குப் பின்புறம் போய் பாதையைக் காண்பித்து, "இதுதானய்யா வழி, எங்கள் தோட்டத்துக்கு" என்றாள். "சரி. போய் வருகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டேன். அந்தப் பாதை வீட்டின் பின்புறமிருந்த காய்கறித் தோட்டத்தைச் சுற்றிக் கொண்டு பெரிய தோட்டத்துக்குப் போயிற்று. அந்த வழியில் சுமார் இருபது கஜம் நடந்தேன்.

அப்போது காற்றடித்ததில் என் மேலிருந்த துண்டின் நுனி தோட்டத்து வேலியில் சிக்கிக் கொண்டது. அதை விடுவித்துக் கொள்வதற்காகத் திரும்பினேன். சென்னம்மா, நான் அவளை எங்கே விட்டு வந்தேனோ அங்கேயே நின்று கொண்டிருந்தாள். நான் வழி தப்பிவிடுவேன் என்று அவளுக்குச் சந்தேகம் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன்.

சுமார் நூறு கஜம் போவதற்குள் தோட்டம் வந்தது. அது மிகவும் அழகான தோட்டம். அதில் அதிகமாகப் பாக்கு மரங்களும் தென்னை மரங்களும் வேறு சில பழமரங்களும் செடிகளும் இருந்தன. உண்மையாகவே அழகாயிருந்த அந்தத் தோட்டத்தின் மெருகு அன்று மாலைக் கதிரவனின் பொன்னொளியில் நூறு மடங்காயிருந்தது. தோட்டத்தில் நுழைந்து பத்தடி போவதற்குள் ஒரு பெரிய கிணறு வந்தது. அது ஏற்றக் கிணறு. ஒரு பக்கத்தில் நீர்மட்டம் வரையில் இறங்கிப் போவதற்குப் படிகள் இருந்தன. கிணற்றைச் சுற்றிலும் சுமார் இரண்டடி உயரத்திற்குக் கல்சுவர். நான் போய் அந்தச் சுவரில் உட்கார்ந்து கொண்டு தோட்டத்தின் அழகைப் பருகத் தொடங்கினேன்.

சிறிது நேரம் என் மனம் அந்தத் தோட்டத்தின் அழகைப் பருகியதால் போதை ஏறி ஏதோ வருணிக்க முடியாத சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது. தோட்டத்தில் குளுமையான காற்று தவழ்ந்து வந்து கொண்டிருந்தது. கிணற்றைச் சுற்றிலும் வகை வகையான பூச்செடிகள். அவற்றின் நறுமணம் எல்லாம் காற்றில் கலந்து கொண்டிருந்தது. பலவகைப் பறவைகளின் ஒலி வானத்திலும், செடிகளிலும், மரங்களிலும் எல்லா இடங்களிலும் ஒலித்தது. என் மனம் பறவைகளோடு பறவையாக மாறியது. பூக்களோடு பூவாகியது. கவிஞர்கள் கண்ணுக்குத் தெரியாத சொர்க்கத்தை ஏன்தான் வருணிக்கிறார்களோ என்று பட்டது. 'எங்கே இன்பமோ அங்கே சொர்க்கம்'. நெஞ்சு மகிழ்ச்சியால் நிரம்பி வழிந்தது. அந்த நிறைவில் குழலை இசைக்க ஆரம்பித்தேன். குழலின் ஒரு சுரம் நூறு சுரங்களாக மாறி, தோட்டம் எல்லாம் நிரம்பியது. என் குழலோசையில் நானே பெருமைப்பட்டேன். இரண்டொரு பாடல்களை இசைத்துவிட்டு, பிறகு வாய் திறந்து பாடத் தொடங்கினேன். தோட்டம் முழுவதற்கும் நான் ஒருவனே என்ற தைரியத்தில் வாய்க்கு வந்தபடி எல்லாம் பாட ஆரம்பித்தேன். திடீரென்று என் பின்னால் 'கலகல' என்ற ஓசை எழுந்தது. நான் சட்டென்று பாடுவதை நிறுத்தி விட்டுத் திரும்பிப் பார்த்தேன். பார்த்தால் அந்தப் பெண் சென்னி, படிகளில் இறங்கி, குடத்தில் நீரை மொண்டு கொண்டிருந்தாள். நான் திரும்பிப் பார்த்த போது அவள் தலையை நிமிர்த்தி என் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள். எனக்கு மிகவும் வெட்கமாகப் போயிற்று. நான் பட்டணத்து நாகரிக மனிதன் என்று இவர்கள் கவுரவமாக நினைத்துக் கொண்டிருந்ததற்கும், இப்போது நான் இடைப்பையனைப் போலக் குழலூதி வாய்க்கு வந்தபடி கத்திக் கொண்டிருந்ததற்கும் சரியாகப் போயிற்று என்று நினைத்துக் கொண்டேன். நான் படிகளின் பக்கம் முதுகைக் காட்டி உட்கார்ந்து கொண்டிருந்ததால் அவள் வந்தது தெரியவில்லை. என்னுடைய சங்கீதக் கூச்சலில் அவளுடைய வளை ஒலியோ காலடிச் சத்தமோ கேட்கவில்லை. அப்போது என் நிலை வெட்கப் படும்படியாக இருந்தது. ஒரு கணம் நானே கவலையில்லை விடு என்று சொல்லிக் கொண்டேன். என்றாலும் மனம் அமைதி அடையவில்லை. எனக்கே சிரிப்பு வந்தது. குழலைப் பக்கத்தில் வைத்துவிட்டு, காமிராவைக் கையில் எடுத்து அதைப் பார்ப்பது போல நடித்தேன். அவள் குடத்தில் நீரை நிரப்பிக் கொண்டு படிகளில் ஒவ்வொன்றாக ஏறிவருவது போலத் தெரிந்தது. படிகளை ஏறிக்

கடந்த பிறகு காலடிச் சத்தம் கேட்கவில்லை. அதற்குப் பதில் வளை ஒலி கேட்டது. மறுபடியும் அவள் முகத்தைப் பார்க்க வெட்கமாயிருந்தது. என்றாலும் திரும்பிப் பார்த்தேன். நன்றாகத் துலக்கியிருந்த இரண்டு பித்தளைக் குடங்களில் நீரை நிரப்பிக் கொண்டு படிகளில் ஏறிவந்து கிணற்றைச் சுற்றியிருந்த திண்ணையின் மேல் அவற்றை வைத்தாள். இந்த சமயத்தில் தான் நான் அவளை மறுபடியும் பார்த்தேன். என்னுடைய விசித்திரமான சங்கீதத்தால் உண்டான சிரிப்பு அவள் முகத்தில் இன்னும் விளையாடிக் கொண்டிருந்தது. எனக்கு மிகவும் வெட்கமாகப் போயிற்று. முகத்தைத் திருப்பிக் கொண்டேன். உட்கார்ந்திருந்தவன் எழுந்தேன். அவள் ஏதோ சொல்லியது போல் இருந்தது. என் மனக் குழப்பத்தில் அது என்னவென்று தெரிய வில்லை. எனவே மறுபடியும் அவள் பக்கம் திரும்பி, "என்னம்மா?" என்ற கேட்டேன். அவள், "பாடுவதை ஏன் நிறுத்திட்டீங்க?" என்று கேட்டாள். அவளுடைய இந்தக் கேள்வியினால் என் மனத்தில் எழுந்த கலவரமும் அவமானமும் கடவுளுக்கே தெரியும். என்ன சொல்ல வேண்டும் என்பது கூடத் தோன்றாமல் ஆ, ஊ என்று சொல்லி உபசாரத்துக்காகப் பல்லைக் காட்டி, பிறகு "முடிஞ்சி போச்சு" என்றேன். அவள் கேட்ட கேள்வியில் கேலி புலப்பட்டாலும் அதனால் எனக்குக் கோபம் வரவில்லை. ஏன் வர வேண்டும்? நான் செய்தது முட்டாள்தனம். என்னுடைய அப்போதைய மனநிலையில் அது கேலியாகத் தோன்றியிருக்க வேண்டுமே தவிர உண்மையில் மலர்ந்த சிரிப்பை உடைய இந்தக் கிராமத்து அழகிக்கு என்னைக் கேலி செய்கிற எண்ணம் இல்லை என்று தோன்றியது. நடந்தது நடந்து விட்டது. இனி இங்கிருந்து போய் விடலாம் என்று நினைத்து குழலையும் காமிராவையும் கையில் எடுத்துக் கொண்டு இரண்டடி நடந்தேன். அதற்குள், "ஐயா" என்று அழைத்தாள். மறுபடியும், 'இதென்ன ஐயா?' என்று நினைத்துக் கொண்டு திரும்பினேன். அவள் ஒரு குடத்தைத் தலையின் மேல் எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். மற்றொன்று திண்ணை மேலே இருந்தது. நான் திரும்பியதைப் பார்த்து அந்தக் குடத்தைக் காட்டி "ஐயா, இந்தக் குடத்தைக் கொஞ்சம் தூக்கி விடுறீங்களா?"என்று வெட்கத்தோடும் கூச்சத்தோடும் கேட்டாள். "கண்டிப்பாக" என்று சொல்லி, கையிலிருந்த காமிரா வையும் குழலையும் கீழே வைத்துவிட்டு, நீர் நிரம்பிய அந்தக் குடத்தை எடுத்து அவள் இடுப்பில் வைத்தேன். இதைச் செய்தது அவளுக்கு வியப்பாக இருந்திருக்க வேண்டும். அவள் முகத்தில் மிகுந்த மகிழ்ச்சி தெரிந்தது. நிறைந்த குடங்களும், சுமைக்கு ஏற்பச் சாய்ந்து சாய்ந்து நடந்துபோன அந்த இளமையும் மாலைச் சூரியனின் பொன்னொளியில் மிகவும் மனோகரமாக இருந்தன. கூடவே என் மனத்தில் அவளை அந்த நிலையிலேயே ஒரு போட்டோ எடுக்க வேண்டும் என்று ஆசையாக இருந்தது. காமிராவைத் தயார்ப்படுத்திக் கொண்டு, அந்தப் பெண் என்ன நினைப்பாளோ என்னும் சிந்தனை கூட இல்லாமல், "சென்னம்மா" என்றழைத்தேன். அவள் அந்தச் சுமையோடேயே மெதுவாகத் திரும்பி "கூப்பிட்டீங்களா" என்று கேட்டாள். நான் "ஆமாம்" என்று சொல்லி, அவள் அருகே போய், "சும்மா, நீ ஒரு நிமிஷம் அப்படியே நிற்கிறாயா?" என்று கேட்டேன். அவளுக்குச் சிறிது வியப்பாக இருந்திருக்க வேண்டும். முகத்தில் அதன் அறிகுறி தெரிய பொன்வெயிலுக்கு எதிராகச் சாய்ந்து நின்றாள். அவள் முகத்தில் குறையே இல்லாத அந்தப் புன்னகை, சிறிது நேரத்தில் மறைய இருந்த பொன் கதிர்களில் மிகவும் அழகாக ஒளிர்ந்தது. நான், படம் எடுத்துக் கொண்டு, "இனி நீ போகலாம்" என்றேன். அவள் ஆர்வத்தோடு

"என்ன செய்தீங்க ஐயா?" என்று கேட்டாள். அவளுக்குத் தெரியும்படி சொல்வது எப்படி? "நாளை சொல்கிறேன்" என்றேன். அவள் திரும்பி மெதுவாக வீட்டை நோக்கி நடந்தாள்.

அன்றிரவு சாப்பாட்டிற்குப் பிறகு அறைக்குப் போய் படுக்கையில் படுத்துக் கொண்டேன். உறக்கம் வரவில்லை. மாலையில் தோட்டத்தில் நடந்த நிகழ்ச்சி இன்னும் மனத்திலிருந்தது. எனக்குள் நானே சிரித்துக் கொண்டு லட்சுமிக்கு இந்த விஷயத்தைத் தெரிவித்தால் என்ன சொல்வாளோ, எவ்வளவு சிரிப்பாளோ என்று நினைத்துக் கொண்டேன். என்னுடைய சிரிப்பு இன்னும் அதிகமாகியது.

அன்று இரவு தூங்கத் தொடங்கும்போது நெடுநேரம் ஆகி விட்டது என்று நினைக்கிறேன். காலையில் எழுந்தபோது மணி எட்டாகி இருந்தது. விரைவாக முகத்தைக் கழுவிக் கொண்டு, சிற்றுண்டியை முடித்துக் கொண்டு அந்த மேட்டுக்குப் போகத் தயாரானேன். வீட்டுக்காரர் ஓர் ஆளை அனுப்பினார். வேண்டிய பொருள்களையெல்லாம் அவனிடம் கொடுத்து எடுத்துக் கொண்டு வரச் சொல்லிப் புறப்பட்டேன். அந்த மேட்டில் எல்லா வேலையும் முடித்துக் கொண்டு திரும்பும் போது மணி பன்னிரண்டாகியிருக்கலாம். திரும்பி வருகையில் அந்தப் பாதைக்கு அருகே பசுக்களும் கன்றுகளும் மேய்ந்து கொண்டிருந்தன. ஆங்காங்கே உழவர்கள் வயல்களில் வேலை செய்து கொண்டிருந்தார்கள். திடீரென்று சிறிது தூரத்தில் இடைப்பையன் ஒருவன் லாவணி பாடத் தொடங்கினான். அவனுக்கு யாரிடம் என்ன பயம்? உரத்த குரலில் பாடத் தொடங்கினான். மிகவும் விந்தையாக இருந்தது. சிறிது தூரம் அங்கேயே நின்று கேட்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் கூடவே அந்த ஆள் இருந்தான். அவன் சிரிப்பானோ என்று கொஞ்சம் வெட்கம். கூடவே முந்தின நாள் மாலை நினைவுக்கு வந்தது. அதனால் நிற்கவில்லை. அப்படியே சென்னம்மாவின் நினைவும் வந்தது. அந்தக் கிராமத்துப் பெண்ணின் இயல்பான இளநகை என் கண் முன்னால் நடமாடியது போல் இருந்தது. தளும்பி வழிந்து கொண்டிருந்த குடங்களைச் சுமந்து கொண்டு அவற்றின் சுமையால் சாய்ந்து நின்ற அவளுடைய அந்த ஒய்யாரம் என் கண்ணில் அப்பிக் கொண்டிருந்தது போலாயிற்று. சென்னம்மா அந்த வீட்டுக்குடையவரின் மகளாக இருக்கலாம் என்று நானாக யூகித்திருந்தேனே தவிர உண்மை என்னவென்று தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில்அந்த ஆளைப் பார்த்து, "உங்கள் எஜமானின் வீட்டிலிருக்கும் அந்தப் பெண் யாரப்பா?" என்று கேட்டேன். அவன் நின்று, திரும்பி, என்னைப் பார்த்துக் கொண்டே, 'எந்தப் பெண் ஐயா' என்று கேட்டான். நான் எந்தப் பெண்ணை நினைத்துக் கொண்டு கேட்டேனோ அது அவனுக்குப் புரிய வில்லை. நான், "சென்னம்மா என்கிற பெண் இருக்கிறாளே, அவள்" என்றேன். என் கேள்வியைக் கேட்டுச் சிரித்துவிட்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டு, "ஏன் ஐயா" என்று கேட்டான். எனக்கு மிகவும் அவமானமாகப் போயிற்று. வெட்கமாய் இருந்தது. அந்த ஆள் என் கேள்வியில் ஏதோ கெட்ட எண்ணத்தைக் காணும்படி யாயிற்றே என்று என் மனத்தில் கணநேரம் கலவரம் உண்டாயிற்று. லட்சுமியை விட்டால் எனக்கு வாழ்க்கையே இல்லை என்பதை இந்த முட்டாளுக்குச் சொல்வ தெப்படி? ஏதோ கிண்டலாகச் சிரித்து 'ஏன் ஐயா', என்று கேட்டு விட்டான். நான் "எதற்கும் இல்லையப்பா, சும்மா கேட்டேன். கேட்டிருக்கக் கூடாதோ?" என்றேன். "ஐயோ, அதனாலென்ன ஐயா? பரவாயில்லை. அந்த அம்மா எஜமானுடைய மகள்" என்றான்.

இன்னொரு கேள்வி வாய் வரையில் வந்துவிட்டது. ஆனால் நிறுத்திக் கொண்டேன். யார் என்று கேட்டதற்கே சிரித்தவன் "கல்யாணம் ஆகிவிட்டதா" என்று கேட்டிருந்தால் இன்னும் என்ன நினைத்துக் கொள்வானோ என்று அச்சமா யிருந்தது. அதனால் சும்மாயிருந்தேன்.

வீட்டுக்கு வந்ததும் குளித்து விட்டு, சாப்பாட்டை முடித்துக் கொண்டு முதல் நாள் மாலையில் எடுத்த சென்னம்மாவின் போட்டோவை நாலைந்து காப்பி எடுத்தேன். படம் மிக நன்றாக வந்திருந்தது. வீட்டாரெல்லாம் அதைப் பார்த்துச் சந்தோஷப் பட்டார்கள்.

பகலில் சாப்பிடுவதற்குக் கொஞ்சம் நேரம் ஆகியது. அதனால் இரவு பசி எடுக்க வில்லை. இரவு சாப்பாடு வேண்டாம் என்று வீட்டார்க்குச் சொல்லிவிட்டேன். உறக்கமும் விரைவில் வருவதாகத் தெரியவில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் கொஞ்ச தூரம் நடந்துவிட்டு வரலாம் என்று புறப்பட்டேன். அறைக்குத் திரும்பி வந்தபோது மணி ஒன்பதாகியிருந்தது. இன்னும் தூக்கம் தூரத்திலேயே இருந்தது போல் தெரிந்தது. விளக்கை ஏற்றி, படுக்கையை விரித்து அதன்மேல் படுத்துக் கொண்டு ஏதோ ஒரு நாவலை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். சுமார் பத்து நிமிஷ நேரம் படித்திருக்கலாம். அப்போது அறையின் கதவில் ஒரு சப்தம் கேட்டது. காற்றாயிருக்கலாம் என்று நினைத்து மீண்டும் புத்தகத்தைப் பார்க்கத் தொடங்கினேன். மீண்டும் அந்தச் சப்தம் வந்தது. இந்தத் தடவை மெதுவாகத் தட்டியது போல் இருந்தது. படுத்தபடியே "யார் அங்கே?" என்று கேட்டேன். பதில் இல்லை. ஒரு நிமிஷம் கழித்து மறுபடியும் யாரோ மெல்லத் தட்டியது போல் இருந்தது. எழுந்து உட்கார்ந்து கொண்டு, "யாரது?" என்றேன். வளை ஒலி கேட்டது. கூடவே மெல்லிய குரலில் "நான்தான், சென்னி" என்று பதில் வந்தது. எனக்கு ஆச்சர்யமாய் இருந்தது. இந்த நேரத்தில் இவளுக்கு என்னிடம் என்ன வேலை? என்னவாக இருந்தாலும் விசாரிக்கலாம் என்று எழுந்து கதவைத் திறந்து தலையை வெளியே நீட்டி 'என்னம்மா?' என்று கேட்டேன். என் அறையின் வெளிச்சம் அவள் உடலின் மீது சிறிதாக விழுந்து கொண்டிருந்தது. அவள் கையில் ஒரு தட்டு, அதில் நாலைந்து வாழைப்பழங்கள். கொஞ்சம் சர்க்கரை, ஒரு கிண்ணத்தில் பால் இவ்வளவும் இருந்தன. நான் என்ன என்று கேட்டதற்கு அவள், "உங்களுக்கு இப்போது சாப்பாடு இல்லை. அதனால் இதைக் கொண்டு வந்தேன் ஐயா" என்றாள். அப்போது கொஞ்சம் கொஞ்சமாகப் பசி எடுப்பது போல் தோன்ற ஆரம்பித்திருந்தது. "ரொம்ப சந்தோஷம் அம்மா" என்று சொல்லி அவள் கையிலிருந்து அந்தத் தட்டை வாங்கிக் கொண்டு படுக்கையின் பக்கத்தின் வைக்கப் போனேன். சென்னம்மா பின்னா லேயே அறைக்குள் வந்தாள். என்னுடைய மனம் திடுக்கிட்டது. அந்த நேரம் அப்படிப் பட்டது. நான் தட்டைப் படுக்கையின் பக்கத்திலிட்டு, திரும்பி "வேறு ஒன்றும் வேணாம் இனிமேல், நீ போகலாம்" என்றேன். அவள் சிரித்துக் கொண்டே, "நானிருந்தால் என்ன ஐயா, நீங்க சாப்பிடக் கூடாதா?" என்று கேட்டாள். நான், "ஓ, சாப்பிடலாமே. நான் சொன்னது அதற்கல்ல. இப்போது எனக்கு வேறு எதுவும் வேணாம். மேலும் இந்த நேரத்தில் நீ ஒருத்தியே இங்கே இருக்..." என் பேச்சு முற்றுப் பெறுவதற்கு முன்பாகவே அவள் என் அறையின் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டு விட்டாள். அவள் என் அறைக்குள் வந்த உடனேயே என் மனத்தில் தோன்றிய மங்கலான ஏதோ ஒரு உணர்ச்சி இப்போது கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவடைய லாயிற்று. அவள் தாழ் போட்டதைப் பார்த்து, திடீரென்று என் உடம்பு நடுங்கிச் சூடேறியது. முகமெல்லாம் வியர்வை படர்ந்தது. வாய் உலர்ந்தது. எச்சிலை விழுங்

தினேன். கஷ்டப்பட்டு "எதுக்காக கதவைத் தாள் போட்டாய்?" என்று கேட்டபடியே அதைத் திறப்பதற்காக இரண்டடி வைத்தேன். சென்னம்மா சர்ர்ர் என்று நகர்ந்து கதவுக்குக் குறுக்காக நின்று கொண்டு மெல்ல சிரிக்கத் தொடங்கினாள். என் முழங்கால்கள் துவண்டதுபோல் ஆகிவிட்டது. எந்தச் சந்தேகமும் மிஞ்சவில்லை. அவள் எண்ணம் என் நெஞ்சில் அழுத்தமாக எழுதுவதைப் போலாயிற்று. மனத் திலேயே நினைத்துக் கொண்டேன். "இவளா கிராமத்து அறியாத பெண்!"

என்னால் நிற்க முடியவில்லை. காலே இல்லை போல் தோன்றியது. போய்ப் படுக் கையில் உட்கார்ந்து கொண்டு இரண்டு கைகளாலும் தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டு சிந்திக்கத் தொடங்கினேன்.

இங்கே, மேலே நடந்த விஷயங்களைச் சொல்வதற்கு முன்னால் வேறு ஓரிரண்டு செய்திகளைச் சொல்லத் தோன்றுகிறது. கேளுங்கள். அன்று இரவு என்னைப் பாவத்தின் வலையிலிருந்து தப்ப வைத்துக் காப்பாற்றியவள் என் லட்சுமி. அவளுடைய அன்பு என்கிற கோட்டை என்னை முழுவதுமாகச் சூழ்ந்து கொண்டது. நானும் அவளும் இணைந்ததிலிருந்து இன்று வரை நான் அவளிடம காணாததை வேறெங்கும் காண முடியாது என்னும்படி செய்து விட்டிருந்தாள். அழகு, குணம், காதல் எல்லாம் நான் அவளிடம் கண்டபிறகு என் பார்வையை வேறிடம் திருப்ப வேண்டியிருக்கவில்லை. லட்சுமி என்னவளாக இல்லாதிருந்து, நான் அன்றிரவு இருந்த சூழ்நிலையில் காவலில்லாத என் மனம் அந்தக் கிராமத்துப் பெண்ணிடம் சென்றிருந்தால் அதில் வியப்பேதுமில்லை என்று எனக்கு இப்போதும் தெளிவாகத் தெரிகிறது. இது நடந்தபோது நான் இளமையின் தொடக்கத்திலிருந்தேன். வலுவான உடம்பு. என் அழகைப் பற்றி நானே சொல்லிக் கொள்வது கஷ்டமாயிருந்தாலும் நான் குரூபி அல்ல என்று நிச்சயமாகச் சொல்வேன். இந்த விஷயம் நன்றாகத் தெரிய வேண்டுமானால் சென்னம்மாவையும் வர்ணிக்க வேணடும். அவளுக்கு இருபது வயதிற்கு மேலிராது. அதிக உயரமோ அதிகக் குள்ளமோ அல்லாத உடம்பு. மாநிறம். முகம் அழகானது என்றே சொல்ல வேண்டும். இளமை நிரம்பிய உடற்கட்டு. அவள் உதடுகளில் நான் பார்த்த போதெல்லாம் புன்னகை மிக இயல்பாகக் காணப்பட்டது. கண்ணில் விளையாட்டுப் போக்கின் சிறு மின்னல் ஒளிவிட்டது. அந்தப் புன்ன கையும் சிறு மின்னலும் ஒன்றோடொன்று கலந்து அபூர்வமானதொரு அழகில் முடிந்தன. மனத்தைத் களவாடுவதற்கு வேண்டிய எல்லாச் சாதனங்களும் அவளிடம் இருந்தனவென்று ஒரே வார்த்தையில் கூறிவிடலாம். இது போதாது என்று அன்றிரவு அவளுடைய செயல்கள், 'கிராமத்து அறியாத இளம் பெண்' என்பதி லிருந்து சிறிது விலகியே இருந்தன.

நான் படுக்கையின் மேல் உட்கார்ந்து கொண்ட உடனேயே சிந்தனைகள் ஒன் றொன்றாக, பத்துப் பத்தாக, நூறு நூறாக வேகமாக வரத் தொடங்கி என் தலை செக்கிலிட்டது போல ஆகிவிட்டது. என் மனம் இருட்கடலில் மூழ்கியதைப்போலத் தோன்றியது. தொண்டையும் வாயும் உலர்ந்து எச்சில் ஊறுவதும் கஷ்டமாயிற்று. நான் இந்தப் பெண்ணிடத்தில் காமக் கிளர்ச்சியைத் தூண்டிவிடுவேன் என்று கனவிலும் நினைக்கவில்லை. என்னிடம் இவளுக்கு ஆசை தோன்றியதானால் அதற்கு நான் எந்த வகையிலும் ஊக்கமளிக்கவில்லை என்பதை எங்கே வேண்டு மானாலும் என்றைக்கு வேண்டுமானாலும் நின்று எந்தச் சத்தியமானாலும் செய்யத் தயார். இவள் அறியாதவள் அல்ல. இதை அவளே காட்டிவிட்டாள். தெரிந்தே இந்த வேலையில் இறங்கியிருக்கிறாளே, இது என்ன பைத்தியம்? இது ஒருவகைப் பைத்தியமேதான்! வீட்டாருக்குத் தெரிந்தால் என்ன கதி? நான் பெரிய மனிதனைப்

போல இவர்கள் வீட்டில் விருந்தாளியாக இருப்பது, இப்படி இந்த மாதிரி இரவில் இவளும் நானும் தனியாக என் அறையில்... மரியாதை மிஞ்சும் என்று தோன்ற வில்லை. வந்த வகையும் சரியில்லை; திருட்டுத்தனமாக வந்திருக்கிறாள். இவளுக்குக் கல்யாணமாகவில்லையோ? என் மனத்தில் மிகுந்த வெறுப்புண்டாயிற்று. இப்போது எனக்கு ஒவ்வொன்றாக அவளுடைய முன்னாள் மாலை நடவடிக்கைகள் புரியத் தொடங்கின. அவள் அந்த நேரத்துக்கு என் பின்னாலேயே ஏன் வந்தாள்?...குடம்.. .ஒரு சாக்கு...குடத்தை ஏன் கையால் தூக்கி விடச் சொன்னாள்?...போகட்டும்...;நான் அந்தக் குடத்தை எடுத்துக் கொடுத்தபோது அதைச் சுற்றி வளைத்துப் பிடித்துக் கொள்ள வேண்டுமானால் என் கைமேல் அவள் கைபடும்படிச் செய்தாள். அப்போது அதுஏதோ தற்செயலாகத் தோன்றியது. மற்றும் அவள் முதல் குடத்தைத் தூக்குவதற்காகக் குனிந்தபோது அவளுடைய முந்தானை நழுவியது. நான் அவளை அந்த நிலையில் பார்த்த போது அவளிடம் வெட்கத்தின் அறிகுறி ஏதும் காணவில்லை. குடத்தைத் தலைமேல் வைத்துக் கொண்டு மெதுவாகத்தான் முந்தா னையைச் சரிசெய்து கொண்டாள். இவற்றில் எல்லாம் அப்போது நான் அவளுடைய கள்ளங்கபடமற்ற தன்மையைக் கண்டேன் என்று நினைத்தேனே தவிர இவையெல்லாம் எனக்காக இவள் பின்னி வந்த வலையின் ஒவ்வோர் இழை என்று அறியாமல் போனேன்.

இந்தச் சிந்தனைகளில் அல்லோலகல்லோலப்பட்டுக் கொண்டிருந்த என் மனத்தை முடிந்த அளவு கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்து இனி இந்த நெருக்கடியிலிருந்து எப்படித் தப்புவது என்று யோசிக்கத் தொடங்கினேன். கோபித்துக் கொள்வது பயன் தராது; ஆபத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும் என்ற அச்சம் உண்டாயிற்று. வேறு ஏதாவது உபாயத்தினால் இவளை மெல்ல வெளியே அனுப்ப வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் என்ன வழி? பேச்சை எப்படித் தொடங்குவது? அல்லது முக்காடு போட்டுக் கொண்டு சும்மா படுத்துக் கொள்ளட்டுமா என்று யோசித்தேன். அது நடவாத காரியம். இவள் இங்கே இருக்கும் வரை என் நெஞ்சின்மேல் ஒரு பெரிய பாறை இருந்தது போலத்தான். இன்னொரு யோசனை தோன்றியது. அதுவே சரியென நினைத்தேன். ஏதாவது செய்து அவளுடைய செயல் மிகவும் கெட்டது. மிகவும் கீழ்த்தரமானது—பெரிய பாவம் என்று அவள் மனத்தில் நன்றாகத் தைக்கும் படி சொல்லி மெதுவாக அனுப்பி விட வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். நகரவாசியாக இருந்த நான் இந்தக் கிராமத்துப் பெண்ணுக்குப் பதிவிரதை தர்மத்தைப் பற்றி சொற்பொழிவு நிகழ்த்தும் சூழ்நிலையைக் கடவுள் உண்டாக்கித் தந்ததற்காக என்னைப் பார்த்து நானே சிரிக்கும்படி ஆயிற்று. தலையை நிமிர்த்தி சென்னம்மாவின் பக்கம் பார்த்தேன். அவள் இன்னும் கதவில் சாய்ந்தபடியே நின்றிருந்தாள். என் முகத்தில் சிரிப்பைக் கண்டதும் அவளும் சிரித்தாள். என் சிரிப்பு அவளுக்கு ஊக்கம் ஊட்டுவதாகத் தெரிகிறதோ என்று நினைத்து பயந்து உடனே என் சிரிப்பை விழுங்கி விட்டேன். மெல்ல "சென்னம்மா" என்று அழைத்தேன். சென்னம்மா "என்ன ஐயா", என்று கேட்டு, இரண்டு மூன்றடி எடுத்து வைத்து எனக்குக் கொஞ்ச தூரத்தில் நின்றாள். நான் "உட்கார்ந்து கொள்" என்றேன். அவள் என் படுக்கையின் மேலேயே உட்கார்ந்து விட்டாள். நான் கொஞ்ச தூரம் நகர்ந்து இரண்டொரு தடவை எச்சிலை விழுங்கிவிட்டு மீண்டும் "சென்னம்மா" என்றேன்.

"என்ன, என் எஜமானே?" என்று மெல்லக் கேட்டாள். அவள் நடவடிக்கை இவ்வளவு விபரீதமாக இருந்தாலும் அவள் குரலில் இன்னும் கள்ளமற்ற தன்மை நிரம்பியிருக்கிறதென்பது தெளிவாகத் தெரிந்தது. நான் தொடங்கினேன்:

"சென்னம்மா, இதோ பார். நீ இப்படிச் செய்யலாமா?"

"எப்படி ஐயா?"

"இப்படி... நடுராத்திரியில்—திருட்டுத்தனமாக... வந்திருக்கிறாய்". நான் பேசி முடிக்கவில்லை. அதற்குள் அவள்—"திருட்டுத்தனமாக வரவில்லை. என் தெய்வமே" என்றாள்.

"அப்படியென்றால்?" அவளிடமிருந்து பேச்சு எழவில்லை.

நானே சொன்னேன்: "பார், உங்கள் வீட்டுக்காரர்களுக்குத் தெரிந்தால் உனக்கும் மரியாதை இல்லை; எனக்கும் அவமானம்"

"அவர்கள் ஒன்றும் சொல்லமாட்டார்கள், ஐயா." எனக்கு இன்னும் அதிக ஆச்சரியம் உண்டாயிற்று. "என்ன சொன்னாய்?"

"அவர்கள்—ஒன்றும் சொல்ல மாட்டார்கள் என்றேன்"

"இதோ பார்! அவர்கள் சொல்லட்டும் அல்லது விடட்டும் இது நான் விரும்பாத ஒன்று. சென்னம்மா, எனக்கு கல்யாணமாகியிருக்கிறது. நான் இன்னொரு மனைவியின் கணவன்..."

"ஐயோ, கடவுளே! ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்? எனக்குக் கல்யாணம் இல்லை, ஐயா—நான் பஸவி."*

"என்ன? என்ன? என்ன சொன்னாய்?"

"பஸவி; பஸவி;—

"அப்படியென்றால்?"

"தெய்வத்துக்காக விட்டிருக்கிறார்கள்"

நான் எங்கேயும் பார்த்ததில்லை. தெய்வத்துக்கென்று விடுவது—பஸவி இதெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறேன். அவ்வளவுதான். ஆனால் அதன் பொருள் எனக்கு விளங்கியதில்லை. எனக்கு முதலிலிருந்த அச்சம் விலகி ஆர்வம் ஏற்பட்டது. இந்த விஷயம் சுவையாக இருக்கிறது. தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆவல் உண்டாயிற்று. "தெய்வத்துக்கு விட்டார்களா? யார்" என்று கேட்டேன்.

"என் அம்மாவும் அப்பாவும்"

"ஏன் அப்படிச் செய்தார்கள்?"

"ஐயா, எனக்கு எட்டு வயதில் உடம்புக்கு வந்தது. அப்போது என் அம்மாவும் அப்பாவும் தெய்வத்திற்கு நேர்ந்து கொண்டார்கள். எனக்கு உடம்பு குணமானதும் அந்த தெய்வத்தின் பெயரால் என்னை பஸவியாக விடுவதாக. எனக்குக் குணமாகி விட்டது."

"அப்படியானால் நீ கல்யாணம் செய்து கொள்ளப் போவதே இல்லை?"

"இல்லையே"

"இப்படியே இருப்பாயா?"

"ஆமாம், ஐயா"

"தாசியைப் போல"

---

* கோவில் மாடு போல, தெய்வத்துக்கு என்று அர்ப்பணித்துவிட்ட பெண்ணை 'பஸவி' என்று சொல்வார்கள்.

என்னுடைய இந்தப் பேச்சைக் கேட்டு அவளுக்கு நெஞ்சில் கத்தியைச் சொருகியது போல ஆகியிருக்க வேண்டும். ஒரே கணத்தில் அவளுடைய புருவங்கள் ஏறி இறங்கின. மூக்கும் உதடுகளும் துடிக்கத் தொடங்கின. கோபம் கொண்ட பெண்ணின் முகத்தில் ஒருவிதக் கடுமை இருக்கும். அவள் முகம் அந்த பயங்கரத்தில் மிதப்பது போல் தோன்றியது. குரூரமான பார்வையால் என்னை நோக்கியபடி "ஐயா, நீங்க அந்த வார்த்தை சொல்லக் கூடாது" என்றாள். அவளிடம் ஏற்பட்ட மாற்றத்தைப் பார்த்து எனக்குள் ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது போலிருந்தது. எச்சிலை விழுங்கிக் கொண்டே "எந்த வார்த்தை?" என்று கேட்டேன்.

"நாங்க தாசிகளல்ல. தெரிஞ்சிக்குங்க." எனக்கு இன்னும் அதிக வியப்பாயிருந்தது. திருமணம் இல்லை. நடவடிக்கையைப் பார்த்தால் விபரீதமாக இருக்கிறது. என்றாலும் "தாசிகளல்ல" என்னும் வார்த்தையால் எனக்குக் கொஞ்சம் கோபம் வந்தது போலத் தோன்றியது. "அப்படி அல்லாமல் வேறு என்ன? நீ எல்லாரையும் போலக் கல்யாணம் செய்து கொண்டு ஒரு குடும்பப் பெண்ணாக இருப்பதை விட்டு இப்படி நடுராத்திரியில் மேல வந்து விழுறியே"

"ஐயா, உங்களுக்கு இன்னும் தெரியலையா? பஸவிகள் கல்யாணம் செய்து கொள்ள முடியாது"

"ஏன் முடியாது?"

"நேர்ச்சியைச் செலுத்த வேண்டுமில்லையா? இல்லாவிட்டால் கேடு வருமே?"

"கல்யாணம் செய்து கொண்டால் நேர்ச்சியை செலுத்த முடியாதா?"

"இல்லை, ஐயா, ஒருவனைக் கல்யாணம் செய்து கொண்டால் உங்களைப் போல உள்ளவர்களுக்கு எப்படிச் சேவை செய்ய முடியும்? அவமானமில்லையா?"

"சரி. இன்னொருவனுக்கு எதற்காக சேவை செய்ய வேண்டும்?"

"என்ன, தெய்வத்துக்கு நேர்ச்சி செலுத்த வேண்டாமா?"

"இப்படியா செலுத்துவது? தெய்வத்தின் பெயரைச் சொல்லிக் கொண்டு தேவடியாள்..."

சட்டென்று அவள் முகம் கருத்தது. "ஐயா, அந்த வார்த்தையை என்னிடம் சொல்லாதீர்கள்—சொல்லாதீர்கள்" என்று அழுத்திச் சொன்னாள்.

"நான் உன் புருஷன் அல்ல. நீ, இந்த ராத்திரியில் என்னிடம் வந்திருக்கிறாய். இது யார் செய்கிற வேலை? தாசி அல்ல என்று மாத்திரம் சொல்லிக் கொள்கிறாய்"

"நாங்க தாசிகள் அல்ல ஐயா. தாசிகளுக்குப் பணத்தின் மேல் ஆசை. அவர்கள் யார் என்று பார்ப்பதில்லை. அவர்களுக்கு நேர்ச்சி என்று ஒன்றும் கிடையாது. அந்தத் தொழிலே அவர்களுக்கு வாழ்க்கை."

"நீங்க?"

"நாங்க பணம், கிணம் தொடுவதில்லை ஐயா. எல்லாரிடமும் சேருவதுமில்லை. உங்களைப் போல உயர்ந்தவர்கள் யாராவது வந்தால் அவர்களுக்குச் சேவை செய்து நேர்ச்சியைச் செலுத்துவது. எங்களைத் தாசிகள் என்று சொல்லாதீர்கள், என் தெய்வமே!"

"அப்படியானால் உன்னுடைய இந்த சேவை உன் தாய்க்கும் தந்தைக்கும் தெரியுமா?"

"இல்லையா பின்னே? அவர்கள்தான் நேர்ந்து கொண்டவர்கள். அவர்களுக்குத் தெரியாமலிருக்குமா?"

"சரி. அவுங்க என்னவோ அனுப்பி வைச்சாங்க. ஆனால் நான் இதற்கு ஒப்புக் கொள்வேனா இல்லையா என்பது அவுங்களுக்கு எப்படித் தெரியும்? எந்தத்

தைரியத்தில் உன்னை என்னிடம் அனுப்பினார்கள்?" இந்தக் கேள்விக்கு உடனே பதில் வரவில்லை. புன்னகையை வீசிக் கழுத்தை ஒருவிதமாகச் சாய்த்து ஓரக் கண்ணினால் பார்த்துக் கொண்டே, "பின்னே, எங்கள் ஆளைக்கேட்டீர்களாமே, நான் யார்—என்ன—எப்படி என்று" என்று சிறிது வெட்கத்தோடு சொன்னாள். இப்போது எனக்குப் புரிந்தது. நான் அவளைப் பற்றிக் கேட்டபோது அவன் கேலியாகச் சிரித்து, 'ஏன் ஐயா' என்று கேட்டது. ஐயோ, கடவுளே என்று நினைத்துக் கொண்டேன். "ஆமாம், சென்னம்மா, கேட்டேன். சும்மா தெரிந்து கொள்ளலாம் என்று கேட்டேன், சென்னம்மா. என் லட்சுமியின் மேல் ஆணை, எனக்கு வேறு எந்த ஆசையுமில்லை."

"ஐயோ, விடுங்கள். இப்பொழுது என்ன நடந்துவிட்டது? இதற்கெல்லாம் நீங்கள் ஆணை, கீணை வைக்க வேணாம்."

"அப்படியல்ல சென்னம்மா. கேள். போன உயிர் திரும்பி வருமா?"

சென்னம்மா சும்மாயிருந்தாள். "சொல்."

"இல்லை ஐயா."

"அப்படியானால் கேள். பெண்ணுக்கு மானந்தான் உயிர். மானத்தை இழந்து விட்டால் பெண் நாயை விடக் கேவலம். உங்களுக்கு இருப்பதே மானம் ஒன்றுதான். நீங்கள் அதை இப்படி விற்கக் கூடாது. மானத்தை இழந்த பெண்ணுக்கு நரகத்திலும் இடமில்லைன்னு சொல்வாங்க. தெரிந்து கொள்."

"ஐயா நீங்க சொல்றதெல்லாம் கல்யாணமாகி புருஷனோட இருப்பவங்களுக்குப் பொருந்தும். அவர்கள் எங்களைப் போல இருந்தா அவர்களை ஜாதியைவிட்டு விலக்கி வச்சிடுவாங்க. எங்களுக்கு அப்படி இல்லை. எங்களைத் தெய்வத்திற்கு விட்டிருக்கிறார்கள். எங்களுக்கு உங்களைப் போல உயர்ந்தவர்களுக்குச் சேவை செய்வதே..."

"ஐயோ, சென்னம்மா, உனக்குத் தெரியாது. இதைக் கேள். தெய்வத்தின் பேரால் ஒரு பெண் மானத்தை இழந்தால் அது அவனுக்குப் பிடிக்குமா? தெய்வத்திற்கு நேர்ச்சி என்றால் அந்தத் தெய்வத்திற்குச் சேவை செய். யார் வேண்டாம் என்று சொல்கிறார்கள். அதை விட்டு இப்படி மானத்தை விற்பதா?"

"ஐயா, உங்களைப் போல உயர்ந்த குலத்தவர்களே எங்களுக்குத் தெய்வம். உங்களுக்குச் சேவை செய்தால் அதுவே எங்களுக்குப் புண்ணியம்." என்றாள். அவள் பேச்சைக் கேட்டு என் நெஞ்சில் 'ஐயோ, கடவுளே உன் பெயரில், உன்னைத் திருப்திப் படுத்துவதற்காக எவ்வளவு அநியாயம்—எவ்வளவு பாவம் நடக்கிறது.' என்ற வேகம் எழுந்தது. கொஞ்ச நேரம் எதுவுமே சொல்லாமல் எனக்குள் நானே யோசிக்கத் தொடங்கினேன்...

என்ன இந்த ஜனங்களின் மூடத்தனம்! உலகத்தில் இப்படிப்பட்ட அசிங்கமான வழக்கமும் உண்டா? கடவுளுக்கென்று விடுவது சரி. கேள்விப்பட்டிருக்கிறேன். அது அவரவர்களுடைய பக்தியைப் பொருத்தது. ஆனால் இந்த வேலை? இப்படியா இந்த மக்கள் தெய்வத்திற்கு நேர்ச்சியைச் செலுத்துவது! கடவுளின் தூய்மையான பெயரில் இந்த ஜனங்கள் இவ்வளவு கேவலமான வேலையைச் செய்து வருகிறார்களே, இவர்களுடைய கதி என்னவாகும். இந்தப் பெண் உண்மையில் ஒன்றும் தெரியாத கிராமத்துப் பெண்தான்; கள்ளங்கபடில்லாதவள்தான். ஒழுக்கங் கெட்டவளின் லட்சணமே வேறு. இவளுடைய நடையே வேறு. இவள் தன்னுடைய ஜனங்களின் வெறுக்கத்தக்க வழக்கத்திற்குப் பலியான கபடமில்லாத குழந்தை. தான் செய்யும் செயலால் தெய்வத்திற்கு நேர்ச்சி செலுத்தப்படுகிறது என்பதே இவளுடைய

திடமான நம்பிக்கை. ஐயோ, கடவுளே, தாய் தந்தையரே தங்கள் கையாலேயே தங்கள் ஒரே மகளின் வாழ்க்கையைப் பாவத்தால் நிரப்புகிறார்களே அவர்கள் கதி என்ன? இவள் கதி என்ன?

அவர்கள் என்னவோ தங்கள் நேர்ச்சியால் மகள் உயிர் பிழைத்தாள் என்று நினைத்திருக்கலாம். ஆனால் இப்படி ஒவ் வொரு நாளும் அவளுடைய செயல்களால் அவள் வாழ்க்கையின் உயிர் நாடியான பெண்மையே செத்துக் கொண்டிருக்கிறதே. இதை அவர்கள் தெரிந்து கொள்வதெப்படி? அப்போது குழந்தையாயிருந்தபோது, ஒரு நாளில் ஒரு கணத்தில் சாவதற்குப் பதிலாக இப்போது ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும், கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துக் கொண்டிருக்கிறாள் அல்லவா? அதை இவள் தெரிந்து கொண்டாளா? இல்லை. அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. தான் செய்வது சரியானது, கடவுளுக்குப் பிடித்தமானது—அவன் காப்பாற்றிய வாழ்க்கையை இப்படிக் கழித்தால் அது அவனுக்குப் பிடிக்கும் என்றெல்லாம் அவள் உறுதியாக நம்புகிறாள். திருமணமான பெண்ணுக்கு எது கெட்டது என்று அவள் சொல்வாளோ அதே செயலைத் தன் வாழ்க்கையின் தர்மம் என்று மேற்கொண்டிருக்கிறாள், இதற்கு அவளுடைய தாயும் தந்தையும் துணை. பாவம், அவர்களும்தான் என்ன செய்வார்கள்? அவர்களும் ஜாதியின் வழக்கத் திற்குப் பலியாகி இருக்கிறார்கள்.

பொறுத்துக் கொள்ள முடியாத இந்தச் சிந்தனைகளினால் என் நெஞ்சு நிரம்பியது போல நீண்ட பெருமூச்சை விட்டேன். சென்னம்மா சும்மா புடவையின் தலைப்பை முறுக்கிக் கொண்டிருந்தாள். நான் பெருமூச்சுவிட்டதைப் பார்த்து என் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவள் முகத்தில் அப்போதே ஏதோ கலவரம் புலப்பட்டது. இதற்குள் எங்கேயாவது கல்யாணம் செய்து கொண்டு நாலு பேரைப் போலத் தானும் சுகமாகப் சம்சாரம் செய்வதை விட்டு இந்த அறியாப் பெண் அவர்களுடைய ஏதோ அருவருக்கத்தக்க வழக்கத்திற்குப் பலியாகிவிட்டாளல்லவா என்ற அடக்க முடியாத ஒரு கவலையினால் என் நெஞ்சு விம்மி, கண்களில் நீர் துளிர்த்தது.

"சென்னம்மா, உன் தெய்வம்தான் உன்னைக் காப்பாத்தணும்." என்று சொல்லி கண்ணைத் துடைத்துக் கொண்டேன். சென்னம்மாவுக்கு என் கண்ணீரைப் பார்த்ததும் கொஞ்சம் பயம் ஏற்பட்டிருக்க வேண்டும். என் அருகே நகர்ந்து வந்தாள். அவள் அப்படி எனக்கு அருகே நகர்ந்து வந்தபோது எனக்கு விலகிப் போக மனம் வரவில்லை. அவள் மனத்தால் பாவம் செய்தவள் அல்ல. அறியாமை என்னும் பாவத் திற்கு அவள் உடம்பு மட்டும் உடந்தையாக இருந்தது. தாமரை இலையின் நடுவில் தனித்து இருந்து வைரத்தைப் போல் ஒளிவிடும் தூய்மையான பனித் துளியைப் போல அவளுடைய ஆன்மாவும் பரிசுத்தமாயிருந்தது. அவளுடைய எளிமையைப் பார்த்து எனக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவளைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் உலர்ந்த என் கண்களிலிருந்து மீண்டும் மீண்டும் நீர் சுரந்து வந்தது. என் கண்ணீரினால் அவளுடைய பாவப்பட்ட உடம்பைக் கழுவ வேண்டும் என்று தோன்றியது. என் உடம்பும் உயிரும் அவளுக் காக மிகவும் இரக்கப்பட்டன. மெதுவாக அவள் கையைப் பிடித்துக் கொண்டேன். என் உடம்பு கொஞ்சம் நடுங்கியது. கையை விடாமல் அப்படியே அவள் விரல்களை வருடியபடி, "சென்னம்மா" என்று மெல்லக் கூப்பிட்டேன். என் அன்பும் என் இரக்கமும் அவள் பெயரைச் சொன்னவுடனேயே அவள் இன்னும் கொஞ்சம்

அருகில் நகர்ந்து தலையைத் தாழ்த்தி மிகவும் மெதுவாக "என் தெய்வமே!_என்ன?" என்று கேட்டாள். அவள் முகத்தில் ஏதோ ஒருவிதமான சிந்தனையும் கலவரமும் தோன்றின. நான் அவள் முகத்தைப் பார்த்தபடியே கேட்டேன்—"பார், சென்னம்மா, நான் உன் தெய்வம் என்று நீ சொன்னாய் அல்லவா?"

"ஆமாம், ஐயா, நீங்களே என் தெய்வம்"

"அப்படியானால் நான் சொல்றபடி நீ கேட்க வேண்டும் இல்லையா?"

"உங்க அடியவள் நான்; சொல்லுங்க தெய்வமே"

"நீ இனிமே இந்தப் பாவச் செயல் செய்யக் கூடாது. புரிந்ததா?"

"அப்படியானால்—நேர்ச்சி? கடவுளுக்கு?"

"ஐயோ, அந்த நேர்ச்சி பாழாப் போகட்டும். பார். இன்றைக்கு நான் தெய்வம் என்று சொன்னாய். அதற்கு முன்னால் வேறு யாருக்கும் சேலை செய்யவில்லை யல்லவா?" சென்னம்மா பேசவில்லை. தலை குனிந்திருந்தாள். "இதோ பார், இதற்கு முன்னால் நீ இன்னும் யார் யாருக்கோ சேவை செய்திருக்கிறாய். இன்றைக்கு நான் தெய்வம் என்று சொல்லி எனக்குச் சேவை செய்ய வந்திருக்கிறாய். ஒருவர் தின்ற எச்சிலை இன்னொருவருக்குக் கொடுக்கலாமா? தெய்வத்திற்கு இந்த எச்சில்தான் நேர்ச்சியா. என்ன, உனக்குத் தெரியாது, இது மிகவும் பாவம் என்று. தெரிந்திருந்தால் நீ என்றைக்குமே இந்தப் பாவகாரியத்தைச் செய்திருக்க மாட்டாய். கொஞ்சம் யோசித்துப் பார். உனக்கும் தாசிக்கும் என்ன வித்தியாசம்? அவளுக்கு அது தொழில். உனக்கு வாழ்க்கையில் எந்தக் குறையுமில்லை. ஆனால் பாவம் என்னவோ ஒன்று தான். கடவுள் இந்தப் பாவத்தை என்றைக்குமே ஏற்றுக் கொள்ள மாட்டார்."

சென்னம்மா மௌனமாகவே எல்லாவற்றையும் கேட்டாள். முதலிலிருந்த பயம் கலவரம் ஆகியவற்றின் அறிகுறிகள் அவள் முகத்திலிருந்து மறைந்தன. சிறிது சிறிதாக முகம் வாடியது. உடம்பு தளர்ந்தது. பார்வை நிலத்திலே நிலைத்தது. மெதுவாக அவள் கையைப் பிடித்து அசைத்து 'சென்னி' என்று அழைத்தேன். தலை நிமிர்த்தி என்னைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் வழி தவறி அலைந்து கொண் டிருந்த ஒரு குழந்தையின் கையாலாகாத்தனம் தோன்றியது. நான் சொல்லியது சரி என்று அவள் உணர்ந்திருக்க வேண்டும்.

"சென்னி, நான் சொன்னது சரிதானே?" என்று கேட்டேன். சென்னம்மா வாயைத் திறக்கவில்லை. தலையை மீண்டும் தாழ்த்திக் கொண்டாள். நான் பார்த்துக் கொண் டிருந்தபோதே இரண்டு துளி கண்ணீர் அவள் கன்னங்களில் உருண்டு விழுந்து கொண்டிருந்தது. அதுவே எனக்கு அவள் கொடுத்த மௌனமான பதிலாயிற்று. அவளுடைய தூய்மையான ஆத்மாவை கவிந்து கொண்டிருந்த அஞ்ஞானத் திரையை அவிழ்த்து எறியும் வேலை என்னுடையதாயிற்று. ஏதோ ஒர் இடத்தை அடைய வேண்டும் என்று ஒரு வழியைப் பின்பற்றி அதில் நடந்து அடியெடுத்து வைத்த போதெல்லாம் அந்த இடம் நெருங்கி வருகிறதென்று நம்பி நெடுந்தூரம் நடந்து போன பிறகு யாராவது வழியில் பார்த்து நாம் போகிற இடத்துக்கு வழி அது அல்ல என்றும் அந்த வழியில் நடந்து கொண்டே போனால் நாம் சேர வேண்டிய இடத்தினின்று விலகிப் போகிறோம் என்றும் சொன்னால் எப்படியிருக்கும். நான் என் பேச்சினால் சென்னம்மாவின் மனத்தில் ஏறக்குறைய அதே நிலையை உண்டாக்கியிருந்தேன்.

சென்னம்மா மிகவும் அழுதாள். நான் அவளைச் சமாதானப்படுத்தினேன். "பார், சென்னி, உன்னைப் பார்த்தா எனக்குக் கோபமோ வெறுப்போ இல்லை. உனக்குக்

கோபமா 'என்ன" என்ற கேட்டேன். மிகவும் நொந்து போன குரலில் அவள் சொன்னாள் "இல்லை, ஐயா!"

"உனக்கு என் மேல் கோபம் ஏதாவது..."

"ஐயோ, என் தெய்வமே அப்படிச் சொல்லாதீங்க. உங்களைப் பார்த்தா உங்க கால்களின் அடியிலேயே விழுந்து கிடக்க வேண்டும் என்று என் உயிர் துடிக்கிறது" என்ற சொல்லி என் காலைப் பிடித்துத் தன்னுடைய நெற்றியை அதில் பதித் தாள்—நான் அதோடு விடாமல் அவளை நிறுத்தி, "சரி, அப்படி யானால் எங்கே, என் மேல் கை வைத்துச் சத்தியம் செய்—இனி மேல் இந்த வேலை செய்ய மாட்டேன்... என்று" என்று சொன்னேன்.

சென்னம்மா என் நெஞ்சின் மேல் கை வைத்தாள். அவளுடைய கபடமற்ற, நொந்த பார்வை என் கண்களைத் துளைத்து நெஞ்சில் இறங்கியது. அடிபட்ட பார்வை...அடிபட்ட குரல் நடுங்கியபடியே மெல்லச் சொன்னாள்—"தெய்வமே—இனிமே இந்த வேலை—செய்யவில்லை"

என் நெஞ்சின் மேலிருந்த ஏதோ பாரத்தை இறக்கி விட்டதைப் போலப் பெரிதாகப் பெருமூச்சு விட்டேன். இரவு நெடுநேரம் ஆகிவிட்டது என்றாலும் தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. மனத்தில் அமைதி பந்தாடியது. சென்னம்மா ஒரு முறை கொட்டாவி விட்டாள். நான் அதுவே சாக்காக, "சென்னி, இனி நீ போய்ப் படுத்துக் கொள்" என்று சொல்லி எழுந்தேன். அவளும் எழுந்தாள். கதவு வரை அவள் கூடவே போய் நானே கதவைத் திறந்தேன். கதவருகில் மீண்டும் அவள் கையைப் பிடித்து என் பக்கமாகத் திருப்பி, "சென்னி, சென்னி, கடவுள் மேல் ஆணையாக எனக்கு உன்மேல் கோபம் இல்லை...எங்கே, பார்" என்று சொல்லி என் இரண்டு கைகளாலும் அவள் முகத்தைப் பிடித்து நெற்றியின் மீது ஒரு முத்தமிட்டேன். சென்னம்மா புறப்பட்டுப் போனாள்.

திடீரென்று விழிப்பு வந்தது. பார்த்தால் கரியப்பா. அவரே என்னைக் கூவி எழுப்பியது அவர் உள்ளே எப்படி வந்தார் என்றே தெரியவில்லை. ஒரு வேளை இரவில் கதவுக்குத் தாழ் போட மறந்து விட்டேனோ என்று நினைத்துக் கொண்டேன்.

"என்ன எஜமானரே?" என்று கண்ணைக் கசக்கிக் கொண்டே எழுந்தேன். 'ஐயோ, என்ன சொல்லட்டும், சாமி? என் கண்ணே, என் சென்னி' என்று பேச்சை முடிக்காமலேயே கீழே விழுந்து உருளத் தொடங்கினார். ஏதோ இனம் தெரியாத ஒரு பயத்தினால் என் இதயம் வெடித்து இரத்தம் கொட்டியதைப் போல இருந்தது. அதற்குள் வேறு யாரோ வந்து, "சுவாமி, சென்னம்மா தோட்டத்துக் கிணற்றிலே விழுந்து..."

அவர்கள் அதை முடிக்கிறவரை என்னுடைய மனம் காத்திருக்கவில்லை. படுக்கை யிலிருந்து எழுந்த நான் தோட்டத்துக் கிணற்றை நோக்கி ஓடத் தொடங்கினேன். கிணற்றின் அருகில் பத்துப் பன்னிரண்டு பேர் கும்பலாக நின்றிருந்தது தெரிந்தது. இன்னும் உயிர் இருக்கலாமோ என்று ஒரு பைத்தியக்கார ஆசைதான். ராத்திரியே அவள் போய் விழுந்திருக்க வேண்டும். இதுவரை உயிர் இருக்குமா என்னும் நிராசை. அருகில் போய் நின்றேன். எல்லாரும் வழிவிட்டார்கள். பார்த்தேன். ஐயோ, கடவுளே இது என்ன காட்சி! நெஞ்சிலிருந்து இரத்தம் கண்ணில் வழிந்தது போல இருந்தது. கண்ணில் இடி விழுந்து இருள் கவ்வியது போலாயிற்று.

அவ்வளவுதான் எனக்கு நினைவிருக்கிறது. மறுபடியும் நினைவு வந்தபோது அங்கே நின்றிருந்தவர்கள் என் தலையிலும் முகத்திலும் தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தார்கள். என் மூக்கிலிருந்து இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. எனக்கு எதுவுமே இலட்சியமாகப் படவில்லை. கிணற்றின் அருகே போய் உயிரின் அறிகுறி ஏதேனும் தெரிகிறதா என்று மிகவும் ஆசையோடு பார்த்தேன். வெறும் பிரமை. என்னுடைய பிரமையைக் கண்டு எனக்கே ஐயோ பைத்தியமே என்று தோன்றியது. அவள் உடம்பில் மறைந்திருந்த அந்த நிர்மலமான பனித்துளி எப்போதோ பறந்து விட்டிருந்தது. புண்ணியம் பாவத்திலிருந்து விலகிப் போய் விட்டது. அமிர்தம் வறண்டு போய் மிஞ்சியிருந்தது நஞ்சின் ஓடு. அதிக நேரம் அங்கே நிற்க முடிய வில்லை. மெதுவாக வீட்டை நோக்கி நடந்தேன்.

அன்று சாயங்காலமே நான் அந்தக் கிராமத்தை விட்டுப் புறப்பட்டேன். புறப்படு வதற்கு முன்னால் சென்னம்மாவின் போட்டோவை அவர்கள் வீட்டிலேயே விட்டு வந்தேன். அப்படிப்பட்ட பெண்ணை இழந்த அவர்களுக்கு அந்த நிழல் என்ன அமைதியைத் தரப்போகிறது.

வழிநெடுகிலும் யோசனை. போலீசார் என்னவோ தற்கொலை என்று "ரிக்கார்டு" செய்து விட்டார்கள். ஆனால் உண்மையில் நானே அவளைக் கொன்றது போல் ஆயிற்று. என்ன செய்தாலும் இந்த எண்ணம் என்னை விடுவதாக இல்லை. நான் சொன்னதெல்லாம் அவள் மனத்தில் பதிந்து, வாழ்வதைவிட் சாவதே மேல் என்று தோன்றியிருக்க வேண்டும். நான் அவளை என் அறையிலிருந்து வெளியே அனுப்பியபோது அவள் மனத்தில் சாவு நிறைந்திருந்தது என்று இப்போது தோன்று கிறது. இந்த எண்ணம் தோன்றியதும் என் இதயத்தைப் பிளந்து கொதிக்கிற ஈயத்தைக் கொட்டியது போலிருந்தது. நான் அந்த நேரத்தில் அவளை வெளியே அனுப்பாமல் இருந்திருந்தால் அவளது சாக வேண்டும் என்கிற முடிவு மாறி யிருக்குமோ என்னவோ—உயிரோடு இருந்திருப்பாளோ என்னவோ; அவள் மனத்தில் வாழ்க்கையை முடித்துக் கொள்ள வேண்டும் என்னும் ஆசையை உண்டாக் கியவன் நான். அதில் சந்தேகமில்லை. எனக்கு என்ன அதிகாரம்? அவர்களுடைய தர்மம்-அதர்மங்களைப் பற்றி எடை போடுவதற்கு நான் யார்? என்னுடைய பேச்சு ஒவ்வொன்றும் அவளைக் கிணறு வரை தள்ளிக் கொண்டு போயிருக்க வேண்டும். அதன் பிறகும் அவளைக் கிணற்றில் தள்ளியதும் என்னுடைய பேச்சுக் களே-நானே. ஐயோ! நானே அவளை என் கையால் கொன்றது போல் ஆகிவிட்டதல்லவா? கடவுள் முன்னால் இதற்கு ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் பதில் சொல்லியே ஆக வேண்டும் என்ன சொல்வேன்?

சிந்தனைக்குத் தடையே இல்லை.

நாளை ஊர் போய்ச் சேருவேன். இந்தக் கதையெல்லாம் சொன்னால் என்ன சொல்வாளோ என் லட்சுமி.

# யாரும் அறியாத வீரன்

குவெம்பு

## I

ஆடி மாதம் இரவு சுமார் எட்டு மணி இருக்கும். இருட்டு கண்ணைக் கட்டி விட்டது போலிருந்தது. அடை மழை ஓவென்று கொட்டிக் கொண்டிருந்தது. சுப்பண்ணக் கவுடர் திண்ணையில் ஒரு சமுக்காளத்தின் மேல் அமர்ந்து கொண்டு லாந்தர் வெளிச் சத்தில் கணக்கு வழக்குப் பார்த்துக் கொண்டிருந்தார்.

லிங்கன் வெளியிலிருந்து கையில் ஒரு லாந்தரைப் பிடித்துக் கொண்டு வந்து, "ஐயா, ஆத்துல ஏழாவது படி வரைக்கும் தண்ணி வந்தாச்சு" என்றான்.

சுப்பண்ண கவுடர் பயத்தோடு சட்டென்று எழுந்து, "எங்கே பார்க்கலாம், வா" என்று கம்பளியைப் போர்த்திக் கொண்டு புறப்பட்டார்.

இரண்டு பேரும் ஆற்றுக்குப் போய் ஐந்தாறு படிகள் இறங்கி நின்றார்கள். நுரைத்து வரும் சிவப்புநிற அலைகள் அவர்கள் காலில் வந்து அடித்தன. துங்கா நதியில் வெள்ளம் பெருகிப் பெருகி நுரை நுரையாக ஓவென்று பாய்ந்து கொண்டிருந்தது. லாந்தர் வெளிச்சத்தில் அலைகள் பளபளவென்ற மின்னின. மழை விடாமல் பெய்து கொண்டேயிருந்தது. அவர்கள் அங்கே நின்று பார்த்துக் கொண் டிருக்கும்போதே வெள்ளம் ஆறாவது படியை மூடியது. ஐந்தாவது படியில் ஏறி நின்றார்கள்.

சுப்பண்ண கவுடர் லிங்கனைப் பார்த்து, "நேத்து எது வரைக்கும் தண்ணி இருந்தது?" என்று கேட்டார். "நேத்து இவ்வளவு தண்ணி வரலை. எட்டாம் படி யிலேயே இருந்தது. இருந்தாலும்கூட நேற்று கொரஹள்ளியெல்லாம் அடிச்சிட்டுப் போயிட்டுது. கீழ்வீட்டு ரங்கப்ப கவுடரின் மகன் ராமு கிடைக்கவேயில்லையாம். ஏராளமான சேதம்" என்றான் லிங்கன்.

கவுடரின் முகத்தில் அச்சத்தின் அறிகுறி தோன்றி, கடுமையாக மாறியது. "இன்னைக்கு மேல்மழை எப்படியிருக்குதாம்? உனக்கு ஏதாவது தெரியுமா?" என்று கேட்டு அந்தக் கும்மிருட்டில் பார்வையைப் பதித்துக் குருடாகி நின்றார்.

"மேல்மழை ரொம்பவும் அதிகமாம். சிருங்கேரி பக்கத்தில ஒரு நிமிடம் கூட விடாம மழைதானாம்" என்ற சொல்லி லிங்கன் லாந்தர் வெளிச்சத்தில் கீழே பார்த்து, "ஐயா, இங்க பாருங்க தண்ணி அஞ்சாவது படிக்கு ஏறிட்டிருக்குது" என்றான். கவுடர் கீழே பார்த்து நெஞ்சு நடுங்கி, முகம் கருத்து, பயந்து நின்றார்.

இருவரும் திரும்பி வீட்டுக்குப் போனார்கள். கவுடர் கம்பளியை எடுத்துப் போட்டு விட்டு, வெந்நீரில் காலைக் கழுவிக் கொண்டு ஜமுக்காளத்தின் மீது உட்கார்ந்து கைகளைப் பின்னால் நிறுத்தி அவற்றின் மீது சாய்ந்தபடி சிந்தனை வயப்பட்டார். லிங்கன் லாந்தர் விளக்கைச் சிறிதாக்கி விட்டுக் கம்பளியை உதறி மூங்கிலின் மேல் பிரித்துப் போட்டு விட்டு சமயலறைக்குள் போனான்.

சுப்பண்ண கவுடரின் மனைவி நாகம்மா "என்ன லிங்கா, லாந்தரோடு வெளியே போயிருந்தீங்களே, வெள்ளம் அதிகமா வந்திருக்கிறதா என்ன?" என்று கேட்டாள். சுப்பண்ண கவுடரின் பன்னிரண்டு வயதுப் பையன் திம்முவும் எட்டு வயதுப் பெண் சீதையும் சாப்பிட உட்கார்ந்திருந்தார்கள். வெள்ளம் ஏறி வருவதைக் கேட்டு, சாப்பிடுவதை விட்டு, திறந்த வாயை மூடாமல் திறந்த கண்ணை இமைக்காமல், வைத்த கையை எடுக்காமல், நாகம்மா– லிங்கன் பேச்சைக் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தார்கள்.

"ஆமாம்மா. வெள்ளம் கண்டபடி ஏறிட்டிருக்குது. மேல் மழையும் அதிகமா இருக்குதாம். நேற்றே கெரெஹள்ளி கிராமம் எலலாம் அடிச்சிகிட்டு போயிடுச்சாம், பாவம். அந்தக் கீழ் வீட்டு ரங்கப்ப கவுடரின் மகன் ராமு இன்னும் கிடைக்கவே இல் லையாம்."

நாகம்மா சாப்பிட்டுக் கொண்டிருந்த குழந்தைகளைப் பார்த்தாள். ஏன் பார்த் தாளோ யாருக்குத் தெரியும்? அவர்கள் சாப்பிடாமல் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து தாமே சென்று அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்து ஊட்டத் தொடங்கினாள். சீதை சாப்பிட்டுக் கொண்டே "அம்மா, ராமு என்ன ஆனான்?" என்று கேட்டாள்.

நாகம்மா "ஒன்னும் ஆகலம்மா. நீ சும்மா சாப்பிடு" என்றாள்.

திம்மு, "என்னம்மா அது, லிங்கன் சொல்வது" என்றான். நாகம்மா "ஒன்னு மில்லப்பா, ஆத்துல தண்ணி ஏறிட்டே இருக்குதாம். அவ்வளவுதான், நீ சாப்பிடு" என்றார். லிங்கனைப் பார்த்து "அவ்வளவுதான். இல்லயா? லிங்கா?" என்றார்.

லிங்கன் தலையை ஆட்டிச் சம்மதம் தெரிவித்து "அவ்வளவுதான். வேறொன்னு மில்ல. நீங்க சாப்பிடுங்க, திம்மைய்யா" என்றான்.

சுப்பண்ண கவுடர் திண்ணையிலிருந்து 'லிங்கா' என்ற ழைத்தார்.லிங்கனுக்கு காது கொஞ்சம் மந்தம். கேட்கவில்லை. மறுபடியும் கூப்பிட்டார். அப்போது நாகம்மா "ஏ லிங்கா, உன்னைக் கூப்பிடுறார், போடா" என்றார். லிங்கன் சட்டென்று எழுந்து குட்டைக் காலைச் சாய்த்துக் கொண்டு போனான். பாவம், அவனுடைய வலது கால் இடது காலை விடக் கொஞ்சம் சிறியதாகவும் மெலிந்தும் இருந்தது. லிங்கன் திண்ணைக்குப் போய் "கூப்பிட்டிங்களா ஐயா" என்று கேட்டான்.

கவுடர் "தண்ணி இப்ப எவ்வளவு ஏறி இருக்குதோ தெரியல, போய்ப் பாத்துட்டு வாடா" என்றார். லிங்கன் லாந்தர் திரியை ஏற்றி விளக்கைப் பெரிதாக்கி, கம்பளியைப் போர்த்திக் கொண்டு ஆற்றின் பக்கம் போனான். அவன் போன கொஞ்ச நேரத்திற்கெல்லாம் கவுடர் "நாகா" என்று கூப்பிட்டார். எட்டு வயதுப் பையன் ஒருவன் தானியம் அவிக்கும் அடுப்பின் பக்கத்திலிருந்து ஓடி வந்து தட்டியின் பின்னால் நின்று கொண்டு "என்னங்க ஐயா" என்றான்.

கவுடர், "மாடெல்லாம் கட்டியிருக்கிங்களாடா?" என்று கேட்டார்.

"ஆமாங்க ஐயா. எல்லாம் கட்டியிருக்கிறோம். துங்கே மாடு, சின்னக் குட்டை இரண்டு மாத்திரம் கொட்டிலுக்கு வரவேயில்ல" என்றான். "போகட்டும் விடு" என்று சொல்லி கவுடர் தலையணையின்மேல் சாய்ந்து கொண்டார். நாகன் மெல்ல குளிர் காய்வதற்காக அடுப்படிப் பக்கம் போனான். அந்த நேரத்துக்கு ஆற்றுக்குப் போயிருந்த லிங்கன் வந்தான். கவுடர் "தண்ணி ஏறியிருக்குதாடா?"

லிங்கன் லாந்தரைக் கீழே வைத்து, கம்பளியை உதறிக் கொண்டு நாலாவது படியைத் தொடுகிற மாதிரி வந்திருக்கிறதென்றான்.

"அப்படியானால் கொட்டிலுக்குப் போய் மாடுகளின் தும்பை அவிழ்த்து விட்டு வா" என்று சொல்லி கவுடர் யோசனையில் ஆழ்ந்தார்.

லிங்கன் தன் மகன் நாகனையும் அழைத்துக் கொண்டு கொட்டிலுக்குப் போனான். அந்த நேரத்தில் நாகம்மா நீர் கொண்டு வந்து வைத்து விட்டு, "தட்டு வச்சிருக்கேன்" என்றாள். சுப்பண்ண கவுடர் எழுந்து, செம்பை எடுத்துக் கொண்டு வாய் கொப்பளித்துவிட்டுச் சாப்பிடப் போனார். திம்முவும் சீதையும் வெளியே வந்து மேல் விளக்கு வெளிச்சத்தில் உட்கார்ந்து கொண்டு அரட்டை அடித்துக் கொண் டிருந்தார்கள். கொஞ்ச நேரத்தில் லிங்கனும் அவன் மகன் நாகனும் கொட்டிலிலிருந்து வந்து கால் கழுவிக் கொண்டு திண்ணையை ஒட்டியிருந்த பலகையில் உட்கார்ந் திருந்தார்கள். லிங்கன், நாகன் ஆகியவர்களிடம் திம்மு, சீதை இருவருக்கும் சலுகை உண்டு.

திம்மு, "லிங்கா, ஆறு முழுக்க ஏறியிருக்குதா?" என்று கேட்டான். லிங்கன், "இல்ல ஐயா, எப்பவும் ஏறுவது போலத்தான்" என்றான். லிங்கன் அருகில் உட்கார்ந்திருந்த சீதை இவர்கள் பேச்சைக் கவனிக்கவேயில்லை. அவள் வேறு எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். ஒரு தடவை லிங்கனின் கணுக்காலைப் பார்த்தாள். ஒரு தடவை மணிக்கட்டைப் பார்த்தாள். அவளுக்கு மிகவும் யோசனையாக இருந்தது.

கடைசியில் வெட்கத்தைவிட ஆர்வம் மிகுதியாக ஆனதால் "லிங்கா, இது என்ன தழும்பு, உன் மணிக்கட்டிலும் கணுக்காலிலும்" என்று கேட்டாள்.

லிங்கனின் முகம் அப்படியே வாடிப் போயிற்று. வாயிலிருந்து பேச்சே வெளி வரவில்லை. கண்ணிலும் நீர் நிரம்பியது. மீறி வந்த பழைய துக்கத்தை அடக்கிக் கொண்டு பணிவாக "அதெல்லாம் உங்களுக்கெதுக்கு சீதாம்மா?" என்றான்.

திம்முவுக்கு லிங்கனுடைய அந்த நிலையைக் கண்டு இரக்கமும் கூடவே வியப்பும் ஏற்பட்டது. சீதைக்குப் பதிலாக அவனே, "லிங்கா, இதிலென்ன வெட்கம்? எங்களிடம் சொல்லக் கூடாதா" என்று கேட்டான். "உங்களிடம் சொல்லாம என்ன திம்மையா?" "இது ஜெயிலில் விலங்கு போட்டதன் அடையாளம்" லிங்கனைப் போன்ற கபட மில்லாதவனுக்கு ஜெயில் தண்டனை கிடைத்ததைக் கேட்டு திம்முவின் பூப்போன்ற நெஞ்சில் இடிவிழுந்ததைப் போல் ஆகி "என்ன! உனக்கு ஜெயிலா? எந்தப் புண்ணிய வான் உன்னை ஜெயிலில் போட்டான்" என்று கேட்டான்.

"நான் முதலில் மாவினஹள்ளி ரங்கே நாயக்கர் வீட்டிலே வேலை செஞ்சிட் டிருந்தேன். அங்க அஞ்சாறு வருஷம் வேல பார்த்தேன். திம்மையா, என்ன செய்வது, யார் யாருடனோ சேர்ந்து கள் குடிக்க கத்துக்கிட்டேன். ஒரு நாள் காலையில கள் குடிச்சேன். தலைக்கு ஏறிட்டுது போதை. போதைக்காக அந்த கள்ளுல கடைக்காரன் எதை எதையெல்லாம் சேர்த்திருந்தானோ! நடந்து வந்துட்டேட் இருந்தேன். ரங்கே நாயக்கர் மகன் சேஷ நாயக்கர்ன்னு ஒருத்தர் இருந்தாரு, அவரும் குடிச்சி அவருக்கும் போதை தலைக்கு ஏறியிருந்திச்சி. எங்கிருந்தோ பின்னாலிருந்து வந்து வாய்க்கு வந்தபடி திட்டினாரு. எனக்கும் குடிவெறியில் எஜமானரின் மகன் என்பது தெரியலை. வாய்க்கு வந்தபடி திட்டினேன். அப்புறம் இரண்டு பேருக்கும் அடிதடி ஏற்பட்டு அவருக்கும் பலத்த காயம். என்மேல் பிராது கொடுத்தார். நான் ஏழை. அதனால ஜெயில் தண்டனை கிடைச்சது."

கடைசி இரண்டு வாக்கியங்களைச் சொல்லும்போது அவனது குரல் தழு தழுத்தது. கண்ணில் நீர் பொங்க, குழந்தையைப் போல விக்கி விக்கி அழுதான். அதைப் பார்த்து அவன் மகன் நாகனும் அழுதான். சீதையின் கண்ணிலும் நீர் நிரம்பித் தத்தளித்தது. திம்மு எதையோ சிந்தித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

லிங்கன் நெஞ்சில் சிறிது அமைதி ஏற்பட்ட பிறகு, திம்மு குழந்தைகளின் பிள்ளை மொழியில், "லிங்கா உன்னை ஜெயிலில் ரொம்பவும கஷ்டப்படுத்தினாங்களா?" என்ற கேட்டான்.

"திம்மையா இப்பொழுது அதையெல்லாம் சொல்லி, அழுறதால என்ன ஆவப் போவுது. நான் ஜெயியிலிலிருந்து வருவதற்குள் என் மனைவி செத்துப் போய்ட்டா. என் மகன் பரதேசியாகி யார் யார் கையிலேயோ வாங்கிச் சாப்பிட்டு அலைய ஆரம்பிச்சிட்டான்."

"அப்படியானால் எத்தன வருஷம் ஜெயிலிலிருந்தே, லிங்கா?"

"ரெண்டு வருஷம் திம்மையா. ரெண்டு வருஷம்! அதற்குப் பிறகாவது சுகம் உண்டா? அதுவுமில்லை. சொந்தக்காரர்களும் நண்பர்களும் ஜெயிலுக்குப் போய் வந்தவன்னு என்ன ஒதுக்கி வச்சிட்டாங்க. மகனையும் அழைச்சிகிட்டு ஊரூரா அலைஞ்சேன். கடைசியில் யாரோ, 'சிவனூர் சுப்பண்ண கவுடரிடம் போ"ன்னு சொன்னாங்க. கடைசியா இங்க வந்தேன். மகராஜன் உங்கள் அப்பா சாப்பாடும் துணியும் கொடுத்து செத்துப் போனவனுக்கு உயிர் கொடுத்தார்.

லிங்கன் தன் கதையைச் சொல்லி முடித்ததும் திம்மு பெருமூச்சு விட்டு "லிங்கா, நீ இனிமேல எங்கள விட்டுப் போகவே போகாதே. நாகனும் அப்படித்தான்" என்றான்.

## II

இடி, மின்னல், காற்று, மழை ஆகியவற்றால் வெறி பிடித்த காளியைப் போலிருந்தது இரவு. வீட்டில் எல்லாரும் படுத்திருந்தார்கள். லிங்கன் சுப்பண்ண கவுடர் இருவர் மட்டுமே உறங்காமல் திண்ணையின் மேல் உட்கார்ந்திருந்தார்கள். இருவரும் அவ்வப்போது போய் வெள்ளத்தைப் பார்த்து வந்தார்கள். கரையில் நீர் வேக வேகமாக ஏறிக் கொண்டிருந்தது. "லிங்கா, படகை எங்க கட்டி வச்சிருக்கே? வீட்டை விட்டுப் போக வேண்டி வரலாம்."

லிங்கன் கொஞ்சம் பதறி, "அந்தப் புளிப்பு மாமரத்தின் வேரில் கட்டியிருந்தேன். தண்ணீர் ஏறியிருக்குதோ என்னமோ? அங்கே போக முடியுமோ முடியாதோ?" என்று சொல்லி லாந்தரை எடுத்துக் கொண்டு வெளியே ஓடினான். சுப்பண்ண கவுடரும் அவன் பின்னாலேயே ஓடினார். போய்ப் பார்த்த போது லிங்கன் எதிர் பார்த்தது போலவே ஆகியிருந்தது. வெள்ளம் மாமரத்தின் அடிப்பகுதியை மூடி யிருந்தது. இருவருக்கும் சிறிது நேரம் ஒன்றும் தோன்றவில்லை. சும்மா ஆற்றைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள். அப்போது வீட்டின் பின்புறத்தில் ஏதோ விழுந்தது போலப் பெருத்த ஓசை கேட்டது. இருவரும் அங்கே ஓடினார்கள். பின் புறத்துச் சுவர் விழுந்து தண்ணீர் முற்றத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தது. இன்னும் தாமதித்தால் எல்லாமே அழிந்து போகும் என்று கவுடருக்குத் தோன்றியது.

ஒவ்வோர் அறையிலும் நுழைந்து வீட்டைச் சேர்ந்தவர்களையெல்லாம் எழுப்பி னார்கள். அவர்கள் அரைத் தூக்கத்தில் பதறி எழுந்து திண்ணைக்கு ஓடினார்கள். கவுடர் அவர்களைப் பயப்பட வேண்டாம் என்று ஆறுதல் கூறி, சுற்றிலும் லிங்கனைத் தேடினார்கள். லிங்கன் அங்கே இல்லை. "லிங்கா! லிங்கா!" என்று கூவினார்கள். பதில் வரவில்லை. அதே நேரத்தில் வேகமாகக் காற்று வீசத் தொடங் கியது. பேய் மழை பெய்தது. கொல்லையிலிருந்த தென்னை மரம் முறிந்து வீட்டின் மீது போட்டிருந்த தகடுகளின் மீது விழுந்து பெருத்த ஓசை எழும்பியது. திம்மு, சீதை, நாகன் மூவரும் அலறினார்கள். நாகம்மா 'கடவுளே' என்று சொல்லிக் கொண்டேயிருந்தார். கவுடர் அவர்களுக்கெல்லாம் தைரியம் சொல்லி, லிங்கனைத்

தேடிக் கொண்டு அவன் பெயரைக் கூவியபடியே ஓடினார். போய்ப் பார்த்த போது லிங்கன் மாமரத்தின் அடியை அடைந்து படகை அவிழ்த்துக் கொண்டிருந்தான். வீட்டின் மேல் ஜன்னலுக்கு ஒரு கயிற்றைக் கட்டி அதைப் பிடித்துக் கொண்டு அதன் துணையில் மாமரத்தின் அருகில் போயிருந்தான். கொஞ்ச நேரத்தில் படகை அவிழ்த்து அதற்குள் தாவினான். ஜன்னலுக்குக் கட்டியிருந்த கயிற்றை மட்டும் கையிலேயே பிடித்துக் கொண்டிருந்தான்.

காற்றின் வேகத்தில் லிங்கன் கவுடரைப் பார்த்து, "ஐயா கயிற்றைப் பிடிச்சி இழுங்க" என்று உரத்துக் கூவினான். அவரும் அப்படியே செய்தார். படகு கரை சேர்ந்தது. அதற்குள் முற்றத்திலிருந்து ஏழெட்டுப் பேர்களின் கூக்குரல் கேட்டது.

கவுடர் "லிங்கா, படகை வாசல் பக்கம் கொண்டு வா, வேகமாக" என்று சொல்லி உள்ளே போனார். தலை வாயிலைத் தாண்டுவதற்குள்ளேயே வேலைக்காரி சோமக்கா ஓவென்று அலறிக் கொண்டு கண்ணை விழித்தபடி பெருமூச்சு விட்டபடி ஓடிவந்தாள்.

கவுடரைப் பார்த்ததும் சோமக்கா கத்தினாள். "மாடிச் சுவர் விழுந்து போச்சு. திண்ணையில் தண்ணி ஏறிட்டிருக்குது."

கவுடர் திண்ணைக்கு வந்து "நீங்க எல்லாம் தலை வாசலுக்கு ஓடுங்க. லிங்கன் படக ஓட்டி வருவான். ஏய், நாகா, நீ இங்கே வாடா" என்றார். நாகன் கவுடருடன் போனான்.

நாகம்மா, திம்மு, சீதை, லோகம்மா, சோமக்காளின் மகள் தாஸம்மா எல்லாரும் தலைவாசலுக்கு ஓடினார்கள். சோமக்கா மட்டும் உள் அறையில் தான் வைத்திருந்த 'சின்ன ஆஸ்தியைக்' கொண்டுவர ஓடியவள் திரும்பி வரவேயில்லை. கவுடர் திண் ணையின் மேலிருந்த தமது பெரிய பீரோவின் கதவைத் திறந்து இரண்டு பெட்டி களை வெளியே எடுத்து வைத்து பீரோவின் கதவை மூடிப் பூட்டினார். அங்கிருந்த இரும்புப் பெட்டியின் கதவையும் திறந்தார். ஆனால் எதையோ நினைத்துக் கொண்டு மீண்டும் அதை அப்படியே மூடிப் பூட்டி விட்டார்.

"நாகா, இந்தப் பெட்டியை எடுத்துக் கொள்" என்றார். நாகன் வந்து ஒன்றை எடுத்துக் கொண்டான். கவுடர் மற்றொன்றைத் தூக்கிக் கொண்டார். லிங்கன் எல்லா ரையும் படகில் ஏற்றிவிட்டு அதன் ஒரு முனையைப் பிடித்துக் கொண்டு நின்றி ருந்தான். கவுடர் ஓடிவந்து அந்த இரண்டு பெட்டிகளையும், நாகனையும் தூக்கிப் படகில் வைத்து, தாமும் அதற்குள் தாண்டிக் குதித்து, லிங்கனைப் படகில் ஏறும்படி சொல்லி, ஒரு துடுப்பை எடுத்துக் கொண்டு படகின் ஒரு முனையில் உட்கார்ந்தார். அப்போது சீதை நாகம்மாவைப் பார்த்து, "அம்மா, சோமக்காள் எங்கே?" என்று கேட்டாள். அதற்குள் வீடு இடிந்து விழுவதைப் போல ஒரு பெரிய ஓசை கேட்டது. சோமக்காள் வருவாள் என்ற நம்பிக்கையை அவளுடைய மகளும் கைவிட்டாள்.

படகு மிகவும் சிறியது. ஐந்தாறு பேர் உட்காரக் கூடியது. வெள்ளத்திலோ இரு வருக்குத்தான் போதும். அப்போது அதனுள் ஏழுபேர் இருந்தார்கள். போதாதற்கு இரண்டு பெட்டிகள் வேறே. லிங்கனுக்கு இடமில்லாமல் வழியும் தெரியாமல், சும்மா நின்று கொண்டு, இந்தப் படகு பத்திரமாக கரை சேருமோ என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

லிங்கன் தாமதம் செய்வதைக் கண்டு "லிங்கா, என்னடா இவ்வளவு நேரம், ஏறடா" என்று பதட்டத்தோடு மிரட்டினார்.

லிங்கன், "ஐயா, இடமேயில்லையே. இப்பொழுதே படகில் பாரம் அதிகமா இருக்குது. நானும் உட்கார்ந்தா படகு கரை சேர்வதெப்படி" என்றான்.

"அப்படியானால் இப்போது என்ன செய்யலாம்? என்ன ஆனாலும் சரி. நீ ஏறு. கடவுள் விட்ட வழி" என்று சொல்லியபடியே கவுடர் ஆற்றைப் பார்த்தார். அவருடைய உடம்பு சிறிது நடுங்கியது.

லிங்கன், "அப்படியானால், ஐயா ஒரு வேலை செய்யுங்கள். நீங்கள் எல்லாம் கரை சேர்ந்தபிறகு யாரிடமாவது படகைக் கொடுத்தனுப்புங்கள். அதுவரை நான் இங்கேயே இருக்கிறேன். உங்களுக்குப் பயம் எதுவும் வேண்டாம்" என்றார்.

கவுடருக்கு கோபம் வந்தது. அவனைப் படகில் ஏறும்படி உரத்த குரலில் கட்டளையிட்டார். லிங்கன் எதுவும் சொல்லாமல் படகின் மற்றொரு முனையில் துடுப்பைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான். கவுடர் தம்முடைய துப்பாக்கியால் பத்துப் பன்னிரண்டு தடவை மேலே சுட்டார்.

படகு புறப்பட்டது. அந்தக் காற்று,அந்த மழை, அந்த இருட்டு இவற்றின் நடுவில் துப்பாக்கியின் 'டம்டம்' ஒசை கம்பீரமாகப் புறப்பட்டு மலை நாட்டின் குன்று களிலும் மலைகளிலும் பாறை களிலும் கம்பீரமாக எதிரொலித்தது. தொலைவில் இருந்த கிராமங்களைச் சேர்ந்த மக்கள் கண் விழித்து தோட்டா ஒலியைக் கேட்டுப் பயந்தார்கள்.

சிவனூருக்கு இரண்டு மைல் தொலைவிலிருந்த நுக்கே ஹள்ளி வீட்டில் திண்ணை மேல் படுத்திருந்த ராமே கவுடருக்கும் அவர் தம்பி சித்தே கவுடருக்கும் துப்பாக்கிச்சத்தம் கேட்டது. விழித்து, பயத்தோடு எழுந்து உட்கார்ந்தார்கள்.

சித்தே கவுடர், ராமே கவுடரைப் பார்த்து, "அண்ணா, அது என்னவோ துப்பாக்கி வேட்டு கேட்டதே" என்றார். ராமே கவுடர் "எந்தப் பக்கத்திலிருந்து கேட்டது?" என்றார். "செம்மண் பாறைப் பக்கத்திலிருந்து என்று தோன்றுகிறது."

"இல்லை எனக்கென்னமோ கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது. சிவனூர்ப் பக்கத்திலிருந்து கேட்ட மாதிரி இருந்தது."

"எங்கேயாவது வெள்ளம் ஏறுகிறதோ என்னவோ?"

"ஏதோ இருக்க வேண்டும். என்ன ஆனாலும் நாலைந்து பேரை அழைத்துக் கொண்டு போவோம்." சித்தே கவுடர் அவசரமாக லாந்தரை ஏற்றினார். ராமே கவுடர் மூலையில் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்த ரங்கனை எழுப்பி, ஆற்றங்கரை ஓரமாக வசிப்பவர்களில் நாலைந்து பேரை அழைத்து வரும்படி சொன்னார்.

## III

"ராமா! ராமா!" என்று பெண்களும் குழந்தைகளும் எழுப்பிய கூக்குரல், வெள்ளத்தின் அலைகளில், சுழிப்பில் சிக்கிக் கொண்டு எழுந்தும் விழுந்தும் மிதந்து கொண்டிருந்த படகிலிருந்து புறப்பட்டு, காற்றின் பேரிரைச்சலில் கரைந்தது. சுப்பண்ண கவுடரும், லிங்கனும் இடைவிடாமல் துடுப்புப் போட்டுக் கொண்டிருந் தார்கள். படகின் நடுவில் இருந்த லாந்தர் வெளிச்சம், இருட்டைக் கண்டு பயந்து மூலையில் உட்கார்ந்து விட்டதோ என்று சொல்லும் வகையில் தன்னைச் சுற்றிலும் ஓரடி மட்டும் ஒளி வீசியது. அதிகமான சுமையினால் படகு இப்பவோ பின்னையோ மூழ்குவது போலிருந்தது.

கவுடர் படகிலிருந்த இரண்டு விலை மதிப்புள்ள அந்தப் பெட்டிகளை எடுத்து வெள்ளத்தில் எறிந்தார் என்றாலும் பாரம் குறையவில்லை. எவ்வளவு சொன் னாலும் கேட்காமல் பெண்களும் குழந்தைகளும் 'ராமா ராமா' என்று கூவி கூக்குர

விடுவதை விடவேயில்லை. திசைசெட்ட பைத்தியக்காரனைப் போல படகு அலையத் தொடங்கியது. ஒரு தடவை அது மூழ்கும்போது கொஞ்சம் தண்ணீரும் உள்ளே வந்தது. மறுபடியும் 'ராமா ராமா' என்று அரற்றினார்கள்.

துடுப்புப் போட்டுக் கொண்டிருந்த லிங்கன், பெண்கள், குழந்தைகளின் கூக்குரலைக் கேட்டு மனம் கலங்கினான். படகு பாரத்தால் மூழ்கிப் போகும் என்றே அவன் திடமாக எண்ணினான். பாரத்தைக் குறைக்கும் வழியை அவன் யோசித்தான். வழி தெரியவில்லை. சிறிது நேரத்தில் இருந்தாற் போலிருந்து அவன் முகம் கடுமையாயிற்று. துடுப்புப் போடுவதை நிறுத்தினான். சுற்றிலும் பார்த்தான். மழையின் வீழ்ச்சியில் ஒருவர் கண்ணுக்கு மற்றவர் தெரியவேயில்லை. அப்படித் தெரிந்தாலும் யாரும் பார்க்கிற நிலையில் இல்லை. தான் வெள்ளத்தில் குதித்தால் பாரம் குறைந்து படகு பத்திரமாக கரை சேரும் என்று அவன் நம்பினான். தன்னை உலகமெல்லாம் திருடன் என்று ஒதுக்கி வைத்த போது சாப்பாடும் துணியும் கொடுத்து வளர்த்த குடும்பத்தை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று மிகவும் சிந்தித்தான். துடுப்பைப் படகினுள் இட்டு வெள்ளத்தில் குதிப்பதற்குத் தயாரானான்.

இன்னும் என்ன குதிக்க வேண்டியதுதான்! அதற்குள் தன் மகனின் நினைவு வந்தது. நெஞ்சு நடுங்கிப் பின் வாங்கியது. அப்படியே நின்றான்.

அதற்குள் படகு மூழ்குவதைப் போலத் தடுமாற "ராமராமா, ஐயோ" என்று கத்தினார்கள்.

லிங்கன் சிறிது தயங்கினான். எல்லாரும் இப்படியே இருக்க, படகு ஏன் கரை சேரக் கூடாது என்று நினைத்தான். ஆனால் அது தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வதாகும் என்று தீர்மானித்தான்.

"ஐயோ" என்று மறுபடியும் அழுதார்கள். லிங்கன் அக்கம் பக்கம் பார்க்காமல் 'ராமராம' என்று கத்திக் கொண்டே வெள்ளத்தில் குதித்தான்.

அவன் குதித்தது அந்தப் கும்மிருட்டில் அந்தக் காற்று மழை வெள்ளத்தின் வேகத்தில் யாருக்கும் தெரியவில்லை. படகின் பாரம் குறைந்து முன்பு இருந்ததை விடச் சிறிது ஒழுங்காகச் செல்லத் தொடங்கியது.

கவுடர், "லிங்கா, படகு கொஞ்சம் ஒழுங்காகப் போகிறதடா! எல்லாம் கடவுள் தயவு" என்றார். லிங்கனின் தயவும் அதில் சேர்ந்திருந்தது என்பது அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

அந்த நேரத்தில் பெண்களும் குழந்தைகளும் 'விளக்கு, விளக்கு' என்று கத்தி னார்கள். சுப்பண்ண கவுடர் திரும்பிப் பார்த்தார். அடுத்திருந்த ஆற்றங்கரையில் ஐந்தாறு விளக்குகள் கண்ணில் பட்டன. விளக்கு வெளிச்சத்தில் பத்துப் பதினைந்து பேர் நடமாடிக் கொண்டிருந்ததையும் பார்த்தார். ஒரு பக்கத்திலிருந்து நாலைந்து துப்பாக்கி வேட்டும் கேட்டது. மெல்ல மெல்ல மிதந்து கொண்டே படகு கரையை அடைந்தது. நுக்கே ஹள்ளியைச் சேர்ந்த ராமே கவுடரும் சித்தே கவுடரும் ஓடிவந்து பெண்களையும் குழந்தைகளையும் ஜாக்கிரதையாகப் படகை விட்டு இறக்கினார்கள். சுப்பண்ண கவுடரும் 'உஸ்' என்று பெரு மூச்சு விட்டபடியே இறங்கினார். எல்லா ருக்கும் கரை சேர்ந்து விட்டோம்; உயிரோடு இருக்கிறோம் என்ற ஒரே சிந்தனை. அந்த மகிழ்ச்சிப் பெருக்கில் லிங்கனின் நினைவு வராமலிருந்ததில் வியப்பில்லை. ஆனால் நாகன் மட்டும் அழுது கொண்டிருந்தான். அதைப் பார்த்து நுக்கே ஹள்ளி சித்தே கவுடர் "ஏன்டா அழுவுறே? என்னாச்சு" என்று கேட்டார்.

அவன் விக்கி விக்கி அழுது கொண்டே "அப்பா" என்றான்.

சுப்பண்ண கவுடர், "என்ன அது, சித்தே கவுடரே" என்ற கேட்டார்.

"இந்தப் பையன் அப்பா என்று அழுகிறான்" என்றார்.

சுப்பண்ண கவுடர் முகம் வெளுத்து, சட்டென்று எழுந்து நின்று 'லிங்கா, லிங்கா' என்று அழைத்தார்.

"லிங்கா, லிங்கா" என்று எதிரொலி கேட்டது. லிங்கனை எங்கேயும் காணோம். படகுக்கு ஓடினார்கள். அங்கேயுமில்லை. ஆழ்ந்த கும்மிருட்டை ஏற்றுக் கொண்டு கம்பீரமாகவும் அச்சம் ஊட்டும் வகையிலும் அகலமாகவும் ஓடிக் கொண்டிருந்த அந்தக் கொடிய ஆற்றை வெறித்துப் பார்த்தார். அவருடைய நெஞ்சு நடுங்கியது. கண்ணீர் வடிந்தது! 'லிங்கா, லிங்கா' என்ற அழுதார். நாகனும் கீழே விழுந்து அழுதான். திம்மு சீதை இருவரும் அழத் தொடங்கினார்கள். "எங்கள் வீட்டின் ஓர் ஒளியே போய்விட்டது" என்று சுப்பண்ண கவுடர் அங்கிருந்தவர்களிடம் சொல்லி அழுதார். லிங்கனின் தற்செயலான எதிர்பாராத மரணத்துக்காக எல்லாரும் வருந்தி னார்கள். கவுடர் நாகனை மிகவும் சமாதானப்படுத்தியும் அவன் அழுதபடியே 'அப்பா அப்பா' என்று அழுவதை விடவேயில்லை.

லிங்கன் வெள்ளத்தில் விழுந்தது எப்படி என்பது மட்டும் ஒரு வருக்கும் புலப் படவில்லை. சுப்பண்ண கவுடரும் லிங்கனின் தடம் எங்காவது புலப்படுமா என்ற ஆசையில் கரையெல்லாம் தேடிப் பார்ப்பதற்குச் சில ஆட்களை அனுப்பினார்.

ராமே கவுடர் எல்லாரையும் நுக்கே ஹள்ளிக்கு வருமாறு கேட்டுக் கொண்டார். வழியில் லிங்கன் திடீரென்று மறைந்து விட்ட விஷயத்தையே பேசி ஆச்சரியப்பட்டபடியே சிறிது நேரத் திலேயே எல்லாரும் நுக்கே ஹள்ளியை அடைந்தார்கள்.

விடிந்தது. மழை இன்னும் நிற்கவில்லை. இரவில் கொந்தளிப்பில் துவண்டு போயிருந்த சுப்பண்ண கவுடர் படுக்கையில் படுத்தபடியே ராமே கவுடரிடமும் சித்தே கவுடரிடமும் முந்தின இரவு நடந்த சங்கதிகளைப் பற்றிப் பேசிக் கொண் டிருந்தார். அவர்களுக்குச் சிறிது தொலைவில் அழுது கொண்டிருந்த நாகனை, திம்மு, சீதை இருவரும் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

சீதை, "அழ வேண்டாம் நாகா. அப்பா வருவார்..." என்று சொல்லி அவன் கண்ணீரைத் துடைத்தாள். நாகன் விக்கி விக்கி அழுதான். திம்மு, "லிங்கன் வருவான், நாகா! ஏண்டா அழுகிறாய். சும்மாயிருடா" என்ற சமாதானப்படுத்திக் கொண்டிருந் தான். அதற்குள் வெளியே ஏதோ இரைச்சல். "லிங்கன் வந்துட்டான்! லிங்கன்!" என்ற கூக்குரல் கேட்டது.

சுப்பண்ண கவுடர் எழுந்து வெளியே ஓடினார். ராமே கவுடர் முதலானவர்கள் அவர் பின்னாலேயே ஓடினார்கள். திம்முவும் சீதையும் நாகனை இழுத்துக் கொண்டு அங்கே ஓடினார்கள். உண்மையாகவே லிங்கன் வந்திருந்தான். நாகன் 'அப்பா' என்று ஓடிப்போய் அவனைச் சேர்த்துக் கட்டிக் கொண்டான். லிங்கனின் துணி மணியெல்லாம் நனைந்து உடம்பெல்லாம் சேறாக இருந்தது. ஓய்ந்து தளர்ந்து நடுங்கிக் கொண்டிருந்த அவனை உள்ளே அழைத்துக் கொண்டு போய் வேறு துணியை உடுத்தி, காப்பியும் சிற்றுண்டியும் கொடுத்து நன்றாகப் போர்த்திப் படுக்க வைத்தார்கள்.

அதன் பிறகு சுப்பண்ண கவுடர் அவனுடைய படுக்கையின் பக்கத்தில் உட் கார்ந்து "லிங்கா, இது என்ன சமாசாரம்?" என்று கேட்டார். லிங்கன் மெல்லிய குரலில் சொன்னான்; "துடுப்புப் போட்டுட்டே இருந்தேன். ஒரு தடவை படகு ஏறி இறங்கிச் சில்லையா. அப்ப தடுமாறி வெள்ளத்தில விழுந்துட்டேன். படகைப் பிடிப்பதற்குள்

அது முன்னால போயிடுச்சி.நான் கொஞ்ச தூரம் நீந்திக் கொண்டும் மிதந்து கொண்டும் போனேன். ஏதோ என் அதிர்ஷ்டம், காலில் தரை தட்டியது. நின்றேன். இடுப்பு வரையில் தண்ணீர். அப்படியே நின்று கொண்டிருந்தேன். விடிந்த பிறகு வெள்ளம் வடிந்தது. ஏதோ உங்க வீட்டுருணம் இன்னும் இருக்குது." அதற்கு கவுடர், "என்னடா, துடுப்புப் போட்டுக்கிட்டிருந்தவன் தடுமாறி விழுந்தா துடுப்பு படகுக் குள்ள வந்ததெப்படி?"

"என்னமோ ஐயா, கடவுளுக்கே வெளிச்சம்!"

பகல் உணவு முடிந்த பிறகு திம்மு சீதை இருவரும் 'நான்தான் முதலில் சொன்னேன், நான்தான் முதலில் சொன்னேன்' என்று சர்ச்சை நடத்திக் கொண்டிருந்தார்கள். நாகம்மா அங்கே வந்து "என்னடா அது?" என்றார். திம்மு, "முதலில் நான்தானம்மா சொன்னேன், லிங்கன் வருவான் என்று" என்றாள். சீதை, "இல்லேம்மா திம்மண்ணன் பொய் சொல்றான். நான்தான் முதலில் சொன்னது. வேண்டுமானால் நாகனையே கேளம்மா"

"யார் வேண்டுமானாலும் சொல்லியிருக்கட்டும். எப்படியோ லிங்கன் வந் துட்டான். அது போதும்!" என்று சொல்லி நாகம்மா உள்ளே போனாள்.

# தர்மகொண்டத்துக் கதை

## அச்வத்த

அன்று இரவு அமாவாசை இருட்டு வெளியே கவிழ்ந்திருந்தது. எங்கும் ஒரே நிசப்தம். எங்கோ ஏதோ ஒரு நாய் குரைத்துக் கொண்டிருந்தது மட்டும் அவ்வப்போது கேட்டது. கிராமம் முழுவதுமே ஓய்வு கொண்டிருந்தது. மணி பதினொன்றரைக்கு மேல் ஆகியிருந்தது. தர்மகொண்டத்தின் மணியக்காரர் சூரப்பன் வீட்டிலும் அவனைத் தவிர எல்லாரும் படுத்து விட்டார்கள். ஆனால் அவன் தன் அறையில் லாந்தர் விளக்கின் முன்னால், தடித்த புத்தகத்தின் பெரிய தாள்களை மெல்லத் திருப்பியபடி கணக்கு எழுதிக் கொண்டிருந்தான். ஜமாபந்தி நெருங்கி வந்து கொண் டிருந்தது. கணக்கெல்லாம் சீக்கிரம் முடிய வேண்டியிருந்தது. சூரப்பன் மிகவும் ஆர்வத்தோடு வேலை செய்து கொண்டிருந்தான். கணக்கில் அவ்வப்போது சிக்கல் ஏற்பட்ட போது கைவிரல்களைத் தலைமுடியினுள் நுழைத்துச் சொரிந்து கொண்டான். பிறகு மேலே வேலை தொடர்ந்தது. கூடத்திலிருந்த பெரிய கடிகாரம் 'டண்' என்று மணியை ஒலித்தது. சூரப்பன் அதைக் கவனிக்காமலேயே மேலும் எழுதிக்கொண்டே வேலையை முடிப்பதற்குப் பெருமுயற்சி செய்தான். என்றாலும் அவன் கண்கள் அப்படியே மூடிக்கொள்வதற்குத் துடித்தன. ஓரிரு தடவை கொட்டாவியும் வந்தது.

'கதவு'. சூரப்பனுக்குக் கனவில் தணிந்த குரலில் யாரோ கூப்பிட்டது போலிருந்தது. பாதி மூடிய கண்களைத் திறந்து அந்த ஒலியை உற்றுக் கேட்டான். அது தன் மனப்பிராந்தி என்று நினைத்து எழுதுவதில் தன் கவனத்தைத் திருப்பினான்.

'கதவு'. மீண்டும் அதே தணிந்த குரல். இப்போது தெளிவாகவே கேட்டது. ஆம். அதில் ஏதும் தவறில்லை. இந்தத் தடவை அவன் அரைத்தூக்கத்தில் இல்லை. சூரப்பன் 'டக்' என்று எழுந்து லாந்தரை எடுத்துக் கொண்டு ஓசைப்படாமல் முன்னங்காலில் நடந்து கூடத்தைத் தாண்டி, தெருவாயிலுக்கு வந்து தாழ்ப்பாளில் கைவைத்தான். அதே நேரத்தில் அவனுக்கு கை வளைகளின் ஒலி வெளியில் கேட்டது. சூரப்பன் மகிழ்ச்சி அடைந்து 'சர்ர்' என்று தாழ்ப்பாளை விலக்கிக் கதவைத்திறந்தான். லாந்தரின் மங்கிய வெளிச்சத்தில் அவனுக்கு அங்கே வாயில் அருகில் ஒரு பெண் நிற்பது தெரிந்தது. லம்பாடிப் பெண். சீட்டிப் பாவாடையும் நீலப்பட்டுச் சட்டையும் போட்டிருந்தாள். தலையில் சிவப்புத் துண்டைக் கட்டியிருந்தாள். 'காரபா' மணியின் சரம் மார்பின் மீது விழுந்திருந்தது. இந்தக் காட்சியைக் கண்டதும் சூரப்பன் பிரமை பிடித்துக் கற்சிலையைப் போல ஆகிவிட்டான். ஆனால் அதே நேரத்தில் அவள் "தெய்வமே" என்று சின்னக் குரலில் அழுத்தமாகச் சொல்லி, கீழே சரிந்து அவன் கால்களைத் தன் இரு கைகளாலும் சேர்த்து அணைத்துக் கொண்டாள். அந்தப் பேச்சையும் குரலையும் கேட்ட சூரப்பனுக்கு வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்பட்டாலும்

கொஞ்சம் சந்தேகத்தோடு சட்டென்று லாந்தரை அவள் முகத்தின் அருகில் கொண்டு வந்து பார்த்தான். அவளுடைய சிறிது உயர்த்திய, கண்ணீர் நிறைந்த சோகம் கப்பிய முகம் தெரிந்தது.

"தேவு!" சூரப்பன் லாந்தரைக் கீழே வைத்து, குனிந்து அந்தப் பெண்ணை இரண்டு கைகளாலும் தூக்கி எடுத்துத் தழுவிக் கொண்டான். "தேவு! தேவு! என் தங்கமே!" என்று சொல்லிக் கொண்டே அவள் தலையிலிருந்த துண்டை விலக்கி கூந்தலைத் தடவினான். அவளோ எதையும் சொல்ல முடியாமல் அவன் தோளை அணைத்தாள்.

சூரப்பனின் மகிழ்ச்சி பொங்கி வழிந்தது. அவன் ஆர்வத்தோடு அங்கிருந்த படியே உரத்து "அம்மா! தேவு வந்திருக்கிறாம்மா. கிடைச்சிட்டாம்மா!" என்று கூடத்தை நோக்கிக் கூறினான். உள்ளே இருமியது கேட்டது. கணவனும் மனைவியும் விலகினார்கள். அந்தப் பெண் பின்னால் நகரும்போது நொண்டியபடி 'ஆ' என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்து விட்டாள். அவன் "என்ன ஆச்சு, என்ன ஆச்சு" என்று கேட்டபடியே அவள் காலின் பக்கம் பார்வையைச் செலுத்தினான். இரண்டு பாதங்களிலும் புழுதி மூடியிருந்தது. பெரிதாக வீங்கியிருந்தன. இடது காலிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவன் தன் துண்டைக் கிழித்து, வராந்தாவில் மாட்டுக்காக வைத்திருந்த தண்ணீரில் அந்தத் துண்டை நனைத்து அவள் காலில் கட்டினான்.

இதற்குள் வயது முதிர்ந்த ஒரு பெண்மணி-சூரப்பனின் தாய் கங்கம்மா தடுமாறிக் கொண்டே வெளியே வந்து அந்தக் பெண்ணைப் பார்த்து சந்தேகத்தோடு "என்னடா இது? தேவம்மா..." என்று சொல்வதற்குள் சூரப்பன் இடைமறித்து "ஆமாம்மா, அவளேதான்" என்றான். அவர் குனிந்து பார்த்து தேவம்மாளின் முகத்தைக் கண்டு, "இதென்ன தாயே? இத்தன நாள் எங்க போயிருந்தே? என்ன வேஷம் இது?" என்று கேட்டாள். சூரப்பனுக்கும் இப்போதுதான் மயக்கம் தெளிந்தது போல் ஆகி அவனும் பதிலை எதிர்பார்த்திருந்தான். ஆனால் அந்தக் கேள்விகளைக் காதில் வாங்கிய தேவம்மாவுக்கு நினைவுகள் கவிந்து வந்து தொண்டை அடைத்துக் கொண்டது. பேச்சு வெளிவரவில்லை. மீண்டும் அழுகை வெடித்தது. பதில் சொல்வதற்குப் பதிலாக அழுதாள். இப்போது உள்ளேயிருந்து இளவயதுடைய ஒரு பெண்— சூரப்பனின் அக்கா குண்டம்மா வந்து, பார்த்து "தேவம்மா!... இப்படியிருக் காளே அம்மா! என்ன ஆச்சு இவளுக்கு?" என்று கேட்டாள். சூரப்பனும் கங்கம்மாவும் கொஞ்சம் பொறுத்துக் கொள் என்பதைப் போல ஜாடை காட்டினார்கள். இதே நேரத்தில் உள்ளேயிருந்து "அம்மா!...பாட்டி!" என்று ஒரு குழந்தையின் குரல் கேட்டது. இதைக் கேட்டதும் தேவம்மாளின் அழுகை நின்றது. அவள் சட்டென்று தலையை உயர்த்தி "அப்பா, சந்து, வா, அம்மா இங்க இருக்கறேன்" என்று சொல்லி எழுந்திருக்க முயன்றாள். அதற்குள் இரண்டு வயதுக் குழந்தை, "அம்மா, அம்மா" என்று கூவியபடியே கண்ணைத் தேய்த்துக் கொண்டு வாயிற்படி தடுத்து விழுவதுகூடத் தெரியாமல் தள்ளாடி நடந்து ஓடிவந்தது. ஆனால் தேவம்மாள் அருகே வந்ததும் அவளை உற்றுப் பார்த்துச் சந்தேகத்தோடு பாட்டியின் பக்கத்திலேயே நின்று விட்டது. அவள் "சந்து, ஏம்மா, வா" என்றவுடன் "அம்மா" என்று ஓடிப் போய் அவள் கழுத்தைத் தன் சிறிய கைகளால் சுற்றி வளைத்துத் தழுவிக் கொண்டது. அவளும் "தங்கம் என் தங்கம்!" என்றபடி குழந்தையை வாரி அணைத்துக் கொண்டு தன் கன்னத்தை அதன் கன்னத்தில் திரும்ப திரும்ப இழைத்தபடி அதன் தலை, உடம்பு, கைகால் எல்லாவற்றையும் தன் கைகளால் தடவிக் கொடுத்தாள்.

தாயும் குழந்தையும் மீண்டும் இணைந்த இந்த மகிழ்ச்சிக்கு இடையூறு ஏற்படாதவகையில் யாரும் சிறிது நேரம் பேசவில்லை. பிறகு கங்கம்மாவே பேச்சைத் தொடங்கினாள்.

"தேவம்மா, உன்னை எவ்வளவு தேடினான் தெரியுமா? அக்கம் பக்கத்தில இருக்கிற எல்லா கிராமங்களுக்கும் ஆள் அனுப்பித் தேடினான். ஊருல இருக்கிற ஏரி, கிணறுகளயெல்லாம் நல்லா துழாவிப் பார்க்கச் செய்தான். போலீசுக்கும் கூட தகவல் கொடுத்து வச்சிருந்தான். இவ்வளவு செய்தும் நீ இருந்த அடையாளமே தெரியலை. அன்று மாலை குடிக்கிற தண்ணி புடிச்சி வர கிணத்துக்குப் போன பிறகு மாயமாய் மறைஞ்சிட்டே. தண்ணி புடிச்ச குடம்கூடக் கிணத்து மேடையிலியே இருந்தது. நீ எங்க கிளம்பிப் போய்ட்டே தாயே?"

"நானா எங்கே போனேன்? அப்படி என்ன அவசியம் இருந்திச்சி எனக்கு?" என்று அவள் நிதானமாகவே பேசினாள்.

"பின்னே?" சூரப்பன் ஆர்வத்தோடு கேட்டான்.

"கடத்திக் கொண்டு—இழுத்துக் கொண்டு போனாங்க—பாவிங்க"

"ஆ! யாரு?"

"லம்பாடிங்க"

"தோட்டத்துக்குப் பக்கத்தில் டேரா போட்டிருந்தாங்களே?"

"ஆம்" என்று தேவம்மா தலையாட்டினாள்.

"அடிப் பாவிகளா! இவுங்களுக்கு என்ன வந்தது கேடு காலம்" கங்கம்மா சபித்தாள்.

"அது எப்படி முடிந்தது? அது... அவுங்க கையில அகப்படற அளவுக்கு நெருக்க மாக..." சூரப்பன் சந்தேகத்தோடு கேடடான்.

"நான் போகலை. அன்றைக்கு தண்ணிபுடிக்கப் போனப்போ சாயங்காலம் ஆயிடுச்சி. நான் வேகமா ஒரு குடம் புடிச்சி தலை மேல வச்சேன். அந்த நேரத்தில ஒரு லம்பாடி ஆம்பளை அங்க வந்தான். எமனைப் போல இருந்தான். எனக்குப் பயமாயிருந்தது. குடத்தை அங்கயே விட்டுட்டு ஒடிடலாமான்னு நெனைச்சேன். ஆனால் கால் வரலை. அவன் கொஞ்சம் தண்ணி கேட்டு, தன்னுடைய தடித்த கைக்குட்டையை அவிழ்த்து கை இடுக்கில் செருகிக் கொண்டு மண்டி போட்டு உட்கார்ந்தான். எனக்கு எதுவும் தோன்றாமல் அப்படியே மேடை மேல் இருந்து குடத்தைச் சாய்த்தேன். குடிச்சப்புறம் எழுந்து கைக்குட்டையால வாயை துடைச்சிகிட்டு அங்கயும் இங்கயும் பார்த்துட்டு யாருமே பாக்கலைன்னு தெரிஞ்சதும் சட்டென்று முன்னால் வந்து தன் கைக்குட்டையால என் வாயை அடைச்சிட்டான். என்னால கத்த முடியலை. முடிஞ்ச வரைக்கும் போராடிப் பார்த்தேன். கூடாரத்துக்குப் போன உடனேயே அவுங்க கூட்டம் பிரயாணத்துக்குத் தயாராகி ஊரை விட்டுக் கிளம்பிடுச்சி."

"ஐயையோ! எவ்வளவு வேகம்! நாங்கள் தேடுவதற்குப் புறப்படுவதற்குள்ளேயே அவுங்களை எங்கயுமே காணோம். எந்த வழியிலுமே அவுங்கள பாக்க முடியல. பகலிலேயே அவுங்க ளெல்லாம் எங்கோ போய்விட்டிருந்திருக்க வேண்டும். அவுங்களுக்கும் உனக்கும் சம்பந்தமே இருக்க முடியாது என்று கூட நினைத்தோம்" சூரப்பன் நினைத்துக் கொண்டு சொன்னான்.

"அவுங்க எந்த வழியிலும் போகலை. காடு மேடுகளெல்லாம் ராத்திரி பூராவும் நடந்தாங்க"

"நீயும் அவுங்களோடு அங்கெல்லாம் நடந்தாயா?"

"ஆமாம். கிராமத்திலிருந்து சுமார் ரெண்டு மைல் வரைக்கும் அவன் என்னை அப்படியே தூக்கிக் கொண்டு நடந்தான். நடுக்காட்டுல என் கட்டுக்களை அவிழ்த்து

விட்டு, பெரிய கத்திகளைக் காட்டியபடி நாலைந்து பேர் சுற்றிலும் நின்று கொண்டு, 'கப்சிப்' என்று அச்சுறுத்தி நடக்கும்படி சைகை காட்டினாங்க. நான் எதிர்த்துப் பேசினாலோ முரண்டு பிடிச்சாலோ கொலை செய்யக் கூட அவுங்க தயங்க மாட்டாங்கன்னு நிச்சயமாகத் தெரிஞ்சது. எனக்குச் சாவதற்கு விருப்பமில்லை. இங்க எப்படியாவது திரும்பி வரணும்ன்னு ஆசை வேறு இருந்தது. வேறு என்ன செய்யட்டும்? நடந்தேன்."

"பாவம்! என்னவெல்லாம் அனுபவித்து இருக்கிறாய்!" கங்கம்மா இரக்கத்தோடு சொன்னாள்.

"பாவிகளே! அங்கு போலீசார் சந்தேகத்தின் பேரில் அவர்களைப் பிடித்த போதும் நீ அவர்களுடன் இல்லையே?" என்று சூரப்பன் கோபமும் வியப்பும் கலந்த குரலில் கேட்டான்.

"அவுங்க ரொம்ப ஜாக்கிரதையா என் கைகால்களைக் கட்டி வாயை அடைச்சி என்னை ஒரு புதரிலோ பாறை இடுக்கிலோ மறச்சி வச்சிட்டு தூரத்தில இருந்தாங்க. அச்சம் தவிர்ந்து மறுபடியும் இரவில் பிரயாணம் தொடங்கும்போதுதான் அந்தக் கட்டிலிருந்து விடுதலை கிடைச்சது."

"சாப்பாடு?"

"நாலு நாள் எதுவுமில்லாம கழிச்சேன். அவுங்க கொடுத்ததை சாப்பிடலை. ஆனால் அஞ்சாம் நாள் பசி, தாகம், தளர்ச்சி அதிகமாகி..."

"சாப்பிட்டு விட்டாயா, அந்த முசல்மான்களின் சாப்பாட்டை?" குண்டம்மா ஆத்திரத்தோடு கேட்டாள்.

தேவம்மா தலை கவிழ்த்து சும்மாயிருந்தாள்.

"ஐயோ பாவம். வேறென்ன் செய்வா?" சூரப்பன் உதவிக்கு வந்தான்.

"ஆனால் ஜாதி, மதம்..." குண்டம்மா தொடங்கினாள்.

"இருக்கட்டும், விடு அக்கா. அதென்ன பேச்சு, பார்க்கலாம்" என்று அக்காவுக்குச் சொல்லி சூரப்பன் மனைவியைப் பார்த்து, "அப்புறம் எப்படி வந்தே இங்கே" என்று கேட்டான்.

"நாங்களென்னவோ உன் ஆசையையே விட்டு விட்டிருந்தோம்" கங்கம்மா சொன்னாள்.

"அஞ்சாம் நாள் சாயங்காலம் ஒரு பெரிய ஊருக்கு அருகில் போனாம். நல்லா இருட்டினப்புறம் ஊருக்குள் நுழைஞ்சோம். சந்தேகம் வரும்போதெல்லாம் அந்தக் கூட்டத்துப் பெண்கள் எல்லாரும் 'புர்க்கா' போட்டுக் கொண்டு எனக்கும் ஒன்று மாட்டினாங்க."

"அப்பப்பா, என்ன ஜனங்கள்? அப்புறம்?"

"அதே ராத்திரி ரொம்ப நேரம் கழித்த பிறகு என்னை ஒரு மசூதிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அங்கே ஒரு முல்லா ஏதோ மந்திரம் சொல்லும்படி சொல்லிக் கொடுத்தான். அது 'கல்மா' 'நமாஸாம்' நான் முதலில் எதிர்த்து நின்று, அதைச் சொல்லலை"

"கடைசியில் சொல்லிட்டியா?" கங்கம்மா கேட்டாள்.

"சொல்லாட்டா பசு மாமிசத்தை வாயில திணிச்சி என்னை ஜாதி கெட்டுப் போகும்படி செய்யப் போவதாக மிரட்டினாங்க. அது விளையாட்டு மிரட்டல் அல்ல. வேறென்ன செய்வேன். அப்படி ஜாதி கெடுவதை விட அதைச் சொல்வதே குறைந்த பாவம் என்று நினைத்துச் சொல்லிவிட்டேன். அவர்கள் எல்லாரும் சந்தோஷப்பட்டு, 'இனி நீ எங்களைச் சேர்ந்தவ' என்றார்கள்."

"அப்படி என்றால் ஜாதி போய்விட்டது?" என்று குண்டம்மா அழுத்திக் கேட்டாள்.

"அது என்னமோ தெரியாது. அவுங்க அப்படிச் சொன்னாங்க"

"என்ன அநியாயம்?" கங்கம்மா கவலைப்பட்டாள்.

"இதற்கு என்ன செய்வது, கடவுளே!" என்று சூரப்பனும் கவலையோடு சிந்திக்கத் தொடங்கினான்.

சிறிது நேரம் இவர்களிடையே பேச்சு இல்லை. தேவம்மா ஒவ்வொருவர் முகத்தையும் மாறி மாறி ஏக்கத்தோடு பார்த்தாள்; குழந்தையை இன்னும் வேகமாக அணைத்துக் கொண்டாள்.

"அப்படியானால் இப்படியெல்லாம் நடந்திருக்கிறது" என்று சூரப்பன் தனக்குத் தானே உரத்துச் சொன்னான்.

"அதோடு முடியவில்லை என் விதி" வற்றியிருந்த கண்ணீர் மீண்டும் பாயத் தொடங்கியது.

"இன்னும் இருக்கிறதா? உம். நீ எப்படித் தப்பித்துக் கொண்டு வந்தாய்" சூரப்பன் பயத்துடனும் ஆத்திரத்துடனும் கேட்டான்.

"நாங்கள் ஒரு முசல்மான் வீட்டில் தங்கியிருந்தோம். அன்னைக்கு ராத்திரி நடந்த பேச்சுக்களிலிருந்து அந்த லம்பாடிகள் என்னை அந்த வீட்டுக்காரனுக்குக் கல்யாணம் செய்து கொள்வதற்காக விற்று விட்டார்கள் என்று தெரிந்தது"

"ஆ!"

"ஆமாம் அப்படித்தானிருந்தது. மறுநாள் காலை ஒரு ஹாஜி வந்தான். எனக்கு 'நிக்கா' நடக்கப் போவுதுன்னு சொன்னாங்க. அதெல்லாம் வேணாம்ன்னு ரொம்ப ரொம்ப கெஞ்சிக் கேட்டுக்கிட்டேன். ஆனா அவுங்க கேட்கலை. என் நெஞ்சு வெடிக்கும்படி அழுகை வந்தது. அழுதேன். ஆனா அவுங்க மனசு இரங்கவில்லை. கடைசியில் கோபத்தில் எதிர்த்து நின்று முரண்டு பிடித்தேன். அவர்களா வளைந்து கொடுப்பார்கள்? முதலில் அன்பாகப் பேசினார்கள். நடக்க வில்லை: ஏதேதோ ஆசை காட்டினார்கள். நான் ஒப்புக் கொள்ளவில்லை. அதன் பிறகு மிரட்டினார்கள். அப்பப்பா, என்னென்ன மிரட்டல்கள்! இங்கே சொல்ல மாட்டேன். ஆனால் நான் சாவதற்குத் தயாராகி அவைகளை யெல்லாம் ஒதுக்கினேன். கடைசியில் அவர்கள் பலாத்காரத்தால் ஹாஜி தன் வேலையை முடிக்க உதவினாங்க."

"கல்யாணமும் நடந்துட்டதா" குண்டம்மா துருவிக் கேட்டாள்.

"உம்"

சூரப்பனின் வாய் அடைத்துப் போய்விட்டது. தேவம்மா மேலே சொன்னாள்: "என் முரண்டைப் பார்தத வீட்டுக்காரன் நான் சரியாற வரைக்கும் அவுங்களுக்கு பணம் தரப் போவதில்லைன்னும் அதுவரையில் அவுங்க அங்கயே தங்கியிருக்கணும்ன்னும் சொன்னான். அவுங்க, தங்கள் வேலை முடிந்து விட்டதென்றும் இனி மேல் அவனே என்னை எப்படி வேண்டுமானாலும் சரிப்படுத்திக் கொள்ளலாம் என்றும் பணம் கொடுத்து விட வேண்டும் என்றும் கேட்டாங்க. சண்டை தொடங்கியது. அப்போ நான் 'இவுங்க சொல்கிறபடி தங்கியிருந்து விட்டால் எனக்கு விமோசனமே கிடையாது' என்று நினைத்து பிடிவாதத்தைவிட உபாயத்தின் மூலம் தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தேன். நான் என் கதியை ஏற்றுக் கொண்டவளைப் போல நடித்து, நான் ஒழுங்காக நடந்து கொள்வதாக ஒப்புக் கொண்டேன். இதைக் கேட்டு அவனுக்கும் அவர்களுக்கும் சந்தோஷம் உண்டாச்சு. அவுங்களும் பணத்தை வாங்கிக் கொண்டு போயிட்டாங்க."

"உம்"

"அவனிடம் அன்பு கொண்டதுபோல நடிச்சேன். அவனுக்குச் சந்தோஷம் ஊட்டினேன். என்னிடத்தில் ஒரு நம்பிக்கையை வளர்த்தேன். என்னைப் பற்றிக் கவலைப்படாமலிருக்கச் செய்தேன்."

"உம்"

"சாயங்காலம் வீட்டுக்கு வெளியே இருப்பதாகச் சொல்லி அன்னைக்கும் அடுத்த நாளைக்கும் இருந்தேன். மூணாம் நாள் அவன் சந்தேகப்படாமல் படுத்துக் கொண்டிருந்தபொழுது தப்பிச்சிட்டேன். பகலெல்லாம் மறைஞ்சிருந்து ராத்திரியில பெங்களூர்— ஹரிஹர பாதையையொட்டி வயல்களிடையே நடந்து நடந்து வழி கண்டுபிடிச்சு வந்தேன்."

"எவ்வளவு பெரிய சாகசம், உன்னுடையது" கங்கம்மா வியந்தாள்.

"எப்படியோ திரும்பி வந்தாயே" சூரப்பன் திருப்தியோடு சொன்னான்.

"ஆனாலும் ஜாதி கெட்டு விட்டாளல்லவா?" குண்டம்மா தடையை எழுப்பினாள்.

"அக்கா!" சூரப்பன் கோபத்தோடு கத்தினான்.

"இருக்கிறதைச் சொன்னேன். அதற்கென்ன? அதென்ன பொய்யா? கல்யாணம் கூட ஆகியிருக்கிறது" குண்டம்மா அழுத்திச் சொன்னாள்.

"அக்கா, நான் வேண்டும் என்றே தப்பு செய்யலையே?" தேவம்மா கலங்கிக் கூறினாள்.

"இருக்கலாம். நானும் அப்படிச் சொல்லலை. ஆனா நடந்தது நடந்ததுதானே. இல்லை என்று சொல்ல முடியுமா?" குண்டம்மா கோபத்தோடு கணக்குப்போட்டுச் சொன்னாள்.

தேவம்மா கணவனையும் மாமியாரையும் பார்த்தாள். அவன் 'கம்'மென்று வாய் மூடியிருந்தான். தானும் தலை குனிந்தாள். தோள்மேல் சாய்ந்து மறுபடியும் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை மடியில் படுக்க வைத்துத் தட்டினாள். சிறிது நேரம் யாரும் பேசவில்லை.

"இப்போ என்ன செய்யலாம்மா?" சூரப்பன் கேட்கக் கூடாத விஷயம் போலத் தாயைக் கேட்டான். வெடிக்கிற தலையைப் பிடித்துக் கொள்வது போல இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

"எனக்கு ஒன்னுமே தோணலை அப்பா" கங்கம்மா சிந்தனையோடு கூறி இன்னொரு தடவை பெருமூச்சு விட்டார்.

"ஏன்? தப்பு செய்யலை. ஆசாரம் கெட்டிருக்கிறேன். அவ்வளவுதான். வேறெதுவும் செய்யவில்லை. அதுவும் நிர்ப்பந்தத்தினால..."

"உம்...உம். தெரிகிறது. அதைரியப்படவேண்டாம்!" சூரப்பன் சமாதானப் படுத்தினான்.

"பிராயச்சித்தம், சுத்தி செய்து என்னை..." அவள் அந்தப் பேச்சை முடிக்கவில்லை.

"ஆகட்டும், ஆகட்டும்" அவன் உற்சாகம் ஊட்டினான்.

"என்னமோப்பா எனக்குச் சந்தேகம்." குண்டம்மா மெல்லத் தொடங்கினாள்.

"அக்கா, நீ கொஞ்சம் சும்மாயிருந்தா..."சூரப்பன் சலிப்போடு கொஞ்சம் மிரட்டியது போலவே சொன்னான்.

"ஏண்டா இப்படிச் சொல்றே? எனக்கென்ன அவள் மீது விரோதமா? அதற்காக ஆசாரத்தைப் பத்தி கவலைப்படாம இருக்க முடியுமா? விட்டு விட முடியுமா? சரி விடு" சூரப்பன் இயலாமை என்னும் வேதனையினால் சும்மா கையைப் பற்றினான். பிறகு சிறிது யோசித்து, "அம்மா, சுத்தியோ, கித்தியோ எல்லாம் நடக்கும். இப்போ இவள் உள்ளே வரணுமே நடங்க, எல்லாரும் உள்ளே போவலாம்" என்று உள்ளே போகக்

கால் எடுத்து வைத்தான். தேவம்மா குழந்தையைத் தூக்கிக் கொள்வதற்குக் கையை நீட்டினாள். ஆனால் அதே நேரத்தில் குண்டம்மா. "இதென்னடா வெட்கக்கேடு? கேட்காம கொள்ளாம என்னென்னவோ செய்றியே! நல்லா இருக்கு இது" என்றாள். அவன் "நீ சும்மாயிரு. போதும்" என்று அவளிடம் சொல்லிவிட்டு மனைவியைப் பார்த்து, "உம், எழுந்திரு வா" என்றான். இப்போது கங்கம்மா வாயைத் திறந்தாள்.

"அவசரப்படாதே. கொஞ்சம் பொறு. உனக்கு உன் பெண்டாட்டிமேல் எவ்வளவு ஆசையோ அப்படியே எனக்கும் என் மருமகளின் மீது ஆசையும் அன்புமிருக்குது. ஆனால் இந்த மாதிரி விஷயங்களில தெரிஞ்சவுங்களை விசாரிக்காம நம் இஷ்டப்படி செய்யக் கூடாது, இல்லையா?" என்று தடுத்தாள். சூரப்பனுக்குச் சலிப்பும் கோபமும் பொங்கின. அவன் பெருங் குரலில் "இன்னும் யார் சொல்லணும் அம்மா" நீ ஒப்புக் கொண்டால் போதும், என்றான்.

"அப்படி அல்ல, மகனே. இந்த விஷயத்தில் நம்மை விடத் தெரிஞ்சவங்க இருக்கிறாங்கள் இல்லையா? பக்கத்து வீட்டு..."

"ஆகட்டும். காளப்ப சாஸ்திரிகளையே கூப்பிடறேன்... என்ன சந்தேகமோ..." என்று சூரப்பன் திண்ணையைவிட்டு இறங்கினான்.

"இப்போ வேணாம் சூரப்பா. காலையில..." என்று கங்கம்மா சொன்னாள். ஆனால் அது அவன் காதில் விழவில்லை. அவன் சரசரவென்று போய் சாஸ்திரிகள் வீட்டுக் கதவை வேகமாகத் தட்டி, "சாஸ்திரிகளே, சாஸ்திரிகளே" என்று கத்தினான். காளப்ப சாஸ்திரிகள் எழுந்து வருவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று. அதற்குள் சூரப்பன் இன்னும் நாலைந்து தடவை கதவைத் தட்டிக் கூப்பிட்டான். சாஸ்திரிகள் கதவைத் திறந்து கொண்டே "யாரு? இதென்ன கலாட்டா?" என்று கோபித்துக் கொண்டார்.

"ஜோசியரே, அவ திரும்பி வந்திருக்கா"

"யாரு, சூரப்பனா? என்ன சொன்னே? உன் பெண்டாட்டி திரும்பி வந்திருக்காளா?" சாஸ்திரிகள் கண்ணைக் கசக்கிக் கொண்டே கேட்டார்.

"அதெல்லாம் பெரிய கதை. அப்புறமா சொல்றேன். வீட்டுக்கு வாங்க"

"இப்போதா?"

"ஆமா. உங்களை நிறைய விஷயங்கள் கேட்க வேண்டி இருக்கு."

"சரி வா" கதவை மூடிக் கொண்டு புறப்பட்டார்.

சூரப்பன் வீட்டுப் படியை மிதிக்கும்போதே சாஸ்திரிகள் தூரத்தில் தேவம் மாவைப் பார்த்து, "தேவம்மா வந்துட்டியாம்மா, சுகமா இருக்கயா?" என்று மகிழ்ச்சி யோடு கேட்டுக் கொண்டே அருகில் வந்து அவளுடைய உடையைப் பார்த்து பதறிப் போய், "இதென்ன, சமாசாரம்" என்று கோபமாக ஒரு அடி பின்னுக்குப் போனார்.

சூரப்பன் கதைப் பகுதியை சுருக்கமாகத் தெரிவித்தான். இடை இடையே கங்கம்மா அவள் பட்ட கஷ்டம், செய்த சாகஸச் செயல்களுக்கான அனுதாபம் மெச்சுதல் முதலியவைகளைக் குறிப்பிடும் சில சொற்களைச் சொன்னாள். சூரப்பன் தேவம்மா மதம் கெட்டுப் போன பகுதியைக் குறிப்பாகச் சொன்னபோதெல்லாம் சாஸ்திரிகள் தடுத்து, கேள்விகளாகக் கேட்டார். அப்போது குண்டம்மா அவற்றுக் கெல்லாம் நீளமான தெளிவாக பதில்களைச் சொல்லி வந்தாள். தேவம்மாவோ நீதி மன்றத்தில் தன் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளைக் கேட்டுக் கொண்டிருக்கும் குற்றவாளியைப் போல மௌனமாய்த் தலை கவிழ்ந்திருந்தாள். கதையைக் கேட்கக் கேட்க சாஸ்திரிகளின் கருணை முகம் இறுக்கமாக முறுக்கிக் கொண்டது. சிவந்த கண்கள் நிலை குத்திய பார்வையில் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தன. புரு

வங்கள் மேலேறின. உதடுகள் ஒன்றையொன்று அழுத்தின. ஜோசியர் பெரும் துன்பத்தில் மாட்டிக் கொண்டவரைப் போலத் தீவிரமாகச் சிந்தித்தார்.

கதை முடிந்த பிறகும் அடுத்து நடக்க வேண்டியதைப் பற்றிப் பேச்சு எழவில்லை. சூரப்பனும் கங்கம்மாவும் சாஸ்திரிகளின் போக்கைப் பார்த்து அந்தப் பேச்சை எடுப்பதற்கே பயப்பட்டார்கள். குண்டம்மாவுக்கு மட்டும் ஆர்வம் அதிகமாயிருந்தது. ஆனாலும் அவள் தம்பியிடம் கொண்ட அச்சம் காரணமாக சும்மா இருந்தாள். தேவம்மாவோ யாகத்தில் கட்டிய பசுவின் நிலையில் பேசுகிற உரிமையையே இழந்து விட்டிருந்தாள். கடைசியில், சில நிமிஷங்களுக்குப் பிறகு சாஸ்திரிகளே பேச்சைத் தொடங்கினார்.

"உம். அப்படியென்றால் முழுக்க முழுக்க ஜாதி கெட்டுப் போய் வந்திருக்கா." நீண்ட பெருமூச்சை விட்டு தம்முடைய தீர்மானத்தை வெளியிட்டார்.

"சாஸ்திரிகளே?" சூரப்பன் பயத்தோடு தடுத்துச் சொல்கிற குரலில் பேசினான்.

"ஆமப்பா. உள்ள விஷயத்தை மூடி வைக்க முடியுமா—அதுவும் இப்படி மதச்சாரம் சம்பந்தப்பட்ட விஷயத்தில்?"

"அப்படியில்லை. ஆனாலும் அவளென்னவோ வேண்டும் என்று அப்படி யெல்லாம் செயயலையே. பயம், பலாத்காரங்களில் சிக்கி, துணையில்லாம, வேறு வழியில்லாம, அவுங்களிடமிருந்து தப்பிக்கற எண்ணத்துடன்..."

"அதெல்லாம் சரிதான். ஆனா தப்பை எப்படிச் செய்தாலும் தப்புதான். தோஷம் இல்லைன்னு எப்படிச் சொல்ல முடியும்?"

"அவ இருந்த சூழ்நிலையில் யாராக இருந்தாலும் வேறு என்ன .."

"உண்மை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நடந்தது நடந்து விட்டதுதானே? இந்து தர்மம் போய்விட்டதே"

"அப்படியானால் உள்ளே அழைத்துக் கொள்வதற்கு முன்னால் சுத்தி சடங்கு செய்ய வேண்டுமே?"

"என்ன சொன்னாய்" சாஸ்திரிகள் மிகுந்த வியப்போடு கேட்டார்.

"அதுதான் பிராயச்சித்தம்"...சூரப்பன் விளக்கத் தொடங்கினான்.

"என்னப்பா இது, இப்படிப்பட்ட சுரோத்திரிகள் வம்சத்தில் பிறந்து விட்டு இப்படிக் கேட்கிறாய்?" சாஸ்திரிகள் தமக்கு அவமானம் ஏற்பட்டது போலக் கேட்டார்.

"ஏன்"

"ஏனா! நன்றாயிருக்கிறது, இந்து மதத்தில் ஜாதி கெட்டவர்களை மறுபடியும் ஏற்றுக் கொள்கிறார்களா? அதிலும் உம்முடையது பிராமண ஜாதி!" சாஸ்திரிகள் ஒரு வெடி குண்டைப் போட்டார்.

"ஆ!" சூரப்பன் நடுங்கிப் போனான்.

தேவம்மா அஞ்சினர்ள். துக்கம் பொங்கி வந்தது. கங்கம்மா 'ஐயோ' என்றாள். குண்டம்மா "இப்படி ஏதாவது இருக்கும்ன்னு எனக்குத் தெரியும். அதனால்தான் அப்போதே எச்சரித்தேன். இவன் சொன்னது போல அவசரப்பட்டிருந்தால் என்ன நாசம் ஆகியிருக்குமோ!" என்ற தன்னைத்தானே மெச்சிக் கொண்டாள். குழந்தை ஆழ்ந்த தூக்கத்திலிருந்தது.

"சாஸ்திரிகளே! இப்படிச் சொன்னா எப்படி? வேறு வழியே இல்லையா?" சூரப்பன் ஒப்புக் கொள்வதாக இல்லை.

"வழி எதுவுமில்லை—மறுபடியும் பிறப்பதைத் தவிர!"

"இவ்வளவு கடுமையாகச் சொல்லாதீர்கள். கொஞ்சம் தயவு காட்டுங்கள்" அவன் அங்கலாய்த்தான்.

"ஐயா, இது எனக்கு என்ன கஷ்டமோ? தேவம்மாவைப் பற்றி நீ எனக்குச் சொல்ல வேண்டுமா? இதில் கடுமை தயவு இதற்கெல்லாம் இடம் ஏது? உள்ள விஷயம் இதுதான். நான் என்ன செய்யட்டும்? யார் என்ன செய்ய முடியும், சொல்? மதத்துக்கு விரோதமாக நடப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். சொல்வதும் பெரிய பாவம். யாருக்காகவும் நான் வேறுவிதமாகச் சொல்ல மாட்டேன். என்னுடைய மகளாவே இருந்தாலும் அவ்வளவுதான். என்ன செய்வதப்பா எனக்கும் துக்கம்தான்—உனக்கு இருக்கிற அளவுக்கு. ஆனால் இப்படிப்பட்ட கஷ்டமான சந்தர்ப்பம் வரும்போது தாங்கிக் கொள்ள வேண்டும். நஷ்டத்துக்கு நெஞ்சை இரும்பாக்கிக் கொள்ள வேண்டும். வேறுவழியில்லை. அப்படியில்லாம மத விஷயத்தில் குருடராக நடந்து மதத்துக்குக் கேடு செய்ய முடியுமா? செய்வதை யாராவது ஒப்புக கொள்வார்களோ? அதற்கு அனுமதி கொடுப்பார்களோ? எல்லாம் விதியின் விளையாட்டு அதிர்ஷ்டம் இருப்பதைப் போல நடக்கிறது. தலை எழுத்து..."

"போதும் சாஸ்திரிகளே, உங்கள் உபதேசம்" சூரப்பன் சலிப்போடு சொன்னான்.

"அப்பா, அவரை அவமானப்படுத்தாதே. மன்னிப்புக் கேள்" கங்கம்மா பயந்தபடி சொன்னாள்.

"எனக்கொன்றும அவமானமில்லை, தாயே! அது அப்படிச் சொல்கிறவர்களுக்கு நல்லதைச் செய்யாது அவ்வளவு தான்—சூரப்பனுககு ரொம்ப துக்கம். இன்னும் சிறியவன். வேகத்தில ஏதோ சொல்றான் சொல்லட்டும் விடுங்க. புத்தி சொலவது என் கடமை அதையே செய்றேன்—அவ்வளவுதான்."

"மன்னிக்கணும சாஸ்திரிகளே, நான் சொன்னதற்கு. ஆனாலும் நான் இந்த முடிவுக்கு ஒப்புக் கொள்ளப் போவதில்லை. அவளை எப்படியாவது சேர்த்துக் கொள்ளத்தான் வேண்டும்."

தேவம்மா நீர் நிறைந்த கண்களை உயர்த்தி சூரப்பனை நன்றியோடு பார்த்தாள். நீரில் மூழ்குகிறவர்களுக்குக் கிடைத்த புணைபோல இருந்தது, அவனுடைய பேச்சு அவளுக்கு.

"அடேய்! என்ன சொல்றே சூரப்பா! கொஞ்சம் நிதானத்தோடு யோசிச்சிப் பேசு அவளைச் சேர்த்துக் கொண்டால் நீங்க எல்லாரும் ஜாதி கெட்டவங்க ஆயிடுவிங்க தெரியுமா?" சாஸ்திரிகள் எச்சரித்தார்

"அப்படி ஆக முடியுமா மகனே?" கங்கம்மா எச்சரிக்கையானாள்

"நான் இங்கே இருக்க மாட்டேன். பிச்சை எடுத்தாவது வாழ்வேன்" குண்டம்மா கண்டிப்பாகச் சொன்னாள்.

"என்ன வேண்டுமானாலும் ஆகட்டும்—எனக்கு". சூரப்பன் விட்டுக் கொடுக்க வில்லை.

"சூரப்பா, உனக்கு ஏதோ பைத்தியம் பிடிச்சிருக்கு. நிதானமா யோசிச்சிப் பார். சும்மா வாழ்க்கையைப் பாழாக்கிக்காதே. நீ தேவம்மாவோடு வாழ்ந்தால் என்ன ஆகும் என்று பார். உன்னை, ஒரு வேளை இந்தக் குடும்பம் முழுவதையுமே, மடத்தார் ஜாதியிலிருந்து தள்ளி விடுவார்கள். உங்கள் பிராமணத்துவம் பாழாகும். உம். பிராமணத்துவம் சாதாரணமானதா? எத்தனையோ ஆயிரம் ஜன்மங்களில் ஒரு

தடவை பிராமணனாகிப் பிறப்பது தெரியுமா? அதையும் இழந்து விட்டுச் சண்டாளன் ஆகிறாய். இங்கே உன்னை யாரும் இருக்க விட மாட்டாங்க. வீடு, வாசல், பூமி, நிலம், ஊர், ஏரி எல்லாம் விட்டு விட்டுப் போக வேண்டும். அது மட்டுமல்ல. இவ்வளவு நல்ல வம்சத்துக்குக் களங்கம் ஏற்படுத்தி நிர்மூலம் ஆக்கிய பழியும் உன்னை எப்போதும் விடாது. மொத்தத்தில் இங்கிருக்கிற ஜனங்களுக்கே அவ மானம். அதுவும் போகட்டும்னா உன்னுடைய வம்சத்தையாவது நினைச்சிப் பார். ரொம்பப் பழைய காலத்திலிருந்து நடந்து வந்த வம்சம். உன்னுடைய முன்னோர்கள் எத்தனைபேர் இருந்திருப்பாங்க? எவ்வளவு உயர்ந்த பிராமணர்கள்—மகரிஷி பாரத்துவாஜ கோத்திரத்தார். ஆசாரம் நிரம்பியவர்கள். பேர் பெற்றவர்கள். அவர் களுடைய தர்மம் இதுவரை தொடர்ந்து நடந்து வந்திருக்கிறது. அவுங்க எல்லாருமே சொர்க்கத்தில சுகமாய் இருக்கிறார்கள். இப்போது நீ அந்த வம்சத்தையே கெடுத்து முடிவுக்குக் கொண்டு வரப் போறாயா? அப்படிச் செய்தா பெரிய யாகத்தைச் செய்து அவிசை நாய்க்கு இட்டது போலாகும். உன்னுடைய தகுதி என்ன ஆகிறது? உனக்கு என்ன தண்டனை கிடைக்கும், யோசித்துப் பார். எல்லாம் எதற்காக? கேவலம் ஒரு பெண்ணுக்காக. அப்படிச் சொல்வதால் அதை ஒழித்து விட வேண்டும் என்பதாக அர்த்தமில்லை. மனிதன் தன்னோட சக்திக்கு ஏற்றபடி தர்மத்துக்கு விரோதமா ஆகாதபடி அதைக் காப்பாற்றவே வேண்டும். ஆனால் இப்படி விதியில்லாமல் வரும்போது என்ன செய்வது? அதற்காக அவ்வளவு பெரிய பாவச் சுமையைத் தாங்கிக் கொள்வதும் தொடர்ந்து கஷ்டத்துக்கு ஆளாவதும் சரியா? நியாயமா? எது மேல் என்று பார்த்து அதற்கு முதலிடம் கொடுக்க வேண்டாமா? இப்படிப்பட்ட நிலையில் பெண்டாட்டி என்கின்ற மோகத்தை விட வேண்டாமா? யோசித்துப் பார். உனக்கே தெரியும்..." என்று உபதேசித்தார்.

இதன் விளைவு முதலில் கங்கம்மாவின் மேல் விழுந்தது என்பது தெரிந்தது. அவள் "குழந்தை, சாஸ்திரிகளின் பேச்சை ஆலோசிச்சிப் பார்க்கணும். பிடிவாதம் வேண்டாம்". என்று சாஸ்திரிகளுக்குத் துணையாக வந்தார். இதுவரை அனுதாபம் காட்டியும் ஆசை தோற்றுவித்தும் வந்த மாமியாரும் இப்படி மாறிவிட்டது தேவம் மாவுக்கு ஊன்றுகோல் ஒடிந்து விட்டதைப் போல ஆயிற்று. அவள் "ஐயோ" என்று கையால் வாயை மூடி, பொங்கி வருகின்ற துக்கத்தை அடக்கிக் கொண்டாள். தாயின் பேச்சைக் கேட்ட பிறகும் சூரப்பன் சிறிது நேரம் எதுவும் செய்யாமல் கற்சிலையைப் போல் நின்றிருந்தான். கடைசியில் "இனி என்ன செய்வதம்மா" என்று மெலிந்த குரலில் கேட்டான். தான் நம்பியிருந்த கணவனும் கூட இப்படி ஒரு பேச்சைச் சொன்னதும், பாவம் அந்தப் பெண்ணுக்குப் பேரிடி விழுந்தது போல் ஆயிற்று. நீரில் விழுந்தாலும் இதுவரை அவள் இந்தப் புணையைப் பிடித்துக் கொண்டு போராடினாள். இப்போது அதுவும் குறைந்து போய் நடுவெள்ளத்தின் வேகத்தில் சிக்கிக் கொண்டதைப் போல் ஆயிற்று. தன் துயரத்தின் வழி தெரியாமல் பைத்தியக்காரியைப் போல முறையிடும் குரலில், "என்னைக் கை விடாதீங்க. காப்பாற்றுங்கள்" என்ற கூவி அவன் பக்கம் கையை நீட்டினாள். அவன் தன் கையை நெட்டி முறித்தபடி "சீ, இது என்ன சங்கடம்" என்று உதறினான். 'கெட்டதுதான் கெட்டாள், அங்கேயாவது ஒத்துப் போயிருந்தால் இந்தத் தொல்லையாவது யாருக்கும் வராமலிருந்திருக்கும்" குண்டம்மா நிர்த்தாட்சண்யமாகச் சொன்னாள்.

"அக்கா!" தேவம்மா ஈட்டியால் குத்துண்ட பிராணியைப் போல கத்தினாள். "உம்.

அப்போ நீயும் ஒரு வழியில் போயிருக்கலாம். இப்போ பாரு! நிஷ்டூரமா சொல்றேன். வருத்தப்படாதே. நம்மவங்கள்ள ஜாதி கெட்டவர்களுக்கு இருப்பது ரெண்டுதான்; புது ஜாதியிலேயே இருப்பது, இல்லாவிட்டால் சாவது"

"ஐயோ! நான் செத்துத் தொலைந்திருக்க வேண்டும். அதுவே சுலபமாக இருந்திருக்கும். மோசம் போனேன். இங்கே வருகிற ஆசையை வைத்துக் கொண்டு உயிர் வாழவேண்டும் என்று விரும்பினேன். அதற்காகச் செய்யக் கூடாதது எல்லாம் செய்தேன். சகித்துக் கொண்டேன். ஐயோ" தேவம்மா கதறினாள்.

"சும்மா இருக்கக் கூடாதா, குண்டம்மா? இப்படி கடூரமாகச் சொல்லி ஏன் எங்களைக் குத்திக் காட்டுகிறாய். ஏதாவது ஒரு சமாதானமான ஏற்பாட்டுக்கு வருவோம்." கங்கம்மா எதையோ நினைத்துக் கொண்டு சொன்னாள்.

"ஆ! கொன்றுவிட்ட பிறகு நல்ல சமாதானம்!" சூரப்பன் ஏளனமாகச் சொன்னான்.

"அப்பா, அதிர்ஷ்டம் கெட்ட பிறகு நாம் விரும்பியதைச் செய்ய முடியுமா, சொல். இப்படியெல்லாம் சொல்ல வேண்டியிருக்கு. வேண்டாததையெல்லாம் செய்ய வேண்டியிருக்கு. என்னுடைய நெஞ்சும் வெந்துட்டிருக்கு தெரியுமா? உனக்குப் பெண்டாட்டியானா எனக்கு மருமகள் அல்லவா? ஒரே மருமகள். அப்படிப்பட்ட மருமகள் நம்முடைய வம்சத்தைக் காப்பாத்துவான்னு நினைச்சேன். என்னுடைய மகள் என்றே நினைச்சிட்டிருந்தேன். இவளைப் பிரிந்திருப்பது எனக்கு மட்டும் கொஞ்சமான துக்கமா? என்ன ஆனாலும் என்ன செய்வது, மதாச்சாரத்தை விட்டு நாம் எல்லாம் பாழாகிப் போக முடியுமா? அதற்கு நாம் தலை வணங்கித்தான் ஆக வேண்டும். வேண்டுமானால் தலையையும் கொடுக்க வேண்டும். அதுவே பெருமை" கங்கம்மா மனம் உடைந்து சொன்னாள்.

"நியாயமான பேச்சு" சாஸ்திரிகள் தலை நிமிர்ந்தார்.

"என்ன நியாயமோ, என்ன தர்மமோ, என்ன மதமோ? எனக்கு ஒன்னும் தெரியலை. புத்திகெட்டுப் போயிருக்குது. என்ன வேண்டுமானாலும் செய்யுங்க. என்னைக் கொண்டு செய்து கொள்ளுங்க. தர்மம், கர்மம் உங்களுடையது. கடவுளே பார்த்துக் கொள்ளட்டும் நியாய அநியாயங்களை. அவர்தான் நம்மீது கருணை காட்ட வேண்டும்" சூரப்பன் செய்வதறியாமல் சொல்லிச் சும்மாயிருந்தான்.

"சாஸ்திரிகளே உங்களுக்கு எந்த வழியும் தோணலையா?" கங்கம்மா கேட்டாள்.

"கடுமையாகச் சொன்னாலும் குண்டம்மா ஒரு வழியைக் காட்டியிருக்கா"

"என்ன, அங்கே போய் வாழ்வதா? சிவசிவ! உங்களுக்கு இப்படிச் சொல்வதற்குத் தான் எப்படி மனம் வருகிறது. என்றைக்காவது போவேனா?" தேவம்மா அடக்கத்தை மீறிக் கத்தினாள்.

"சுத்தப் பைத்தியக்காரத்தனம்." சூரப்பன் கோபித்துக் கொண்டான்.

"போக வேண்டும் என்றல்ல நான் சொன்னது. நடக்கக் கூடிய ஒரு வழியைக் குறிப்பிட்டேன். அவ்வளவுதான். வேறு என்ன செய்ய முடியும், யாராவது சொல்லுங்க பார்க்கலாம்?" சாஸ்திரிகள் சுதாரித்துக் கொண்டு தம்முடைய போக்கில் கோபித்துக் கொண்டார்.

"சாஸ்திரிகளே, இவள் இங்கயே தனியாக இருக்கும்படி ஏற்பாடு செய்தாலோ?" கங்கம்மா தன்னுடைய யோசனையைக் கூறினாள்.

"உம்... அதுவும் ஒரு வழிதான். ஆனால் இங்கே முசல்மான்கள் யாருமில்லை. இவளே வேறெங்காவது வேறு தெருவில் இருக்க வேண்டிவரும்!" சாஸ்திரிகள்

ஆலோசனை செய்து கொண்டும், அதை ஒப்புக் கொண்டும் மெதுவாகச் சொன்னார். "என்ன? தனியாக நான் ஒருத்தி மட்டும் உங்களை விட்டு, இந்தச் சின்னக் கண்ணனை, விட்டு இந்தப் பாழும் வாழ்க்கையை நடத்த வேண்டுமா? வேண்டாம். உங்கள் வீட்டுக்குள் வர முடியாவிட்டால் உங்கள் வேலைக்காரியாகவாவது வைத்துக் கொள்ளுங்கள். இங்கே வெளியே, வெளியிலயே இருக்கிறேன்" கணவனை உருக்கமாக வேண்டிக் கொண்டாள்.

பதிலை எதிர்பார்த்துச் சூரப்பனும் கங்கம்மாவும் சாஸ்திரிகள் முகத்தைப் பார்த்தார்கள். "அது எப்படி முடியும், கங்கம்மா! முசல்மான் பெண் மிலேச்ச ஜாதிக்காரி. வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்துட்டிருந்தா. எந்த ஆசாரம் மிஞ்சும்? இந்தத் தெருவார்தான் ஒத்துப்பாங்களா? என்றைக்கும் இல்லை" சாஸ்திரிகள் கண்டிப்பாகச் சொன்னார்.

"ஐயோ, அது முடியாது, முடியாது. என்னை விட்டு விடாதீர்கள். அப்படி நான் வாழமாட்டேன். எனக்குத் தாய்வீடு இல்லை. எல்லாரையும் இழந்துவிட்ட அனாதை. எனக்கு நீங்களே கதி" தேவம்மா மடியில் கிடந்த குழந்தையோடேயே தவழ்ந்து போய், கணவனைப் பார்த்துக் கை கூப்பினாள்.

"என்ன செய்யலாம் என்கிறாய்? உனக்கோ இங்கே இடம் இல்லை என்பது நிச்சயமாகி விட்டது. நானும் உன் கூடவே வந்து விடட்டுமா? புறப்படு. அப்படியே ஆகட்டும். இந்தப் பாழும் ஜாதி, மதம், தர்மம், ஆசாரம்- மனிதாபிமானத்துக்கு இடம் தராத இதெல்லாம் பாழாகிப் போகட்டும். யாருக்கு வேணும்? என்ன வேண்டு மானாலும் ஆகட்டும். நான் எல்லாத்துக்கும் தயாராக இருக்கேன்." சூரப்பன் கத்தினான். "அப்பா, அப்பா குழந்தை. இதென்ன கொஞ்சம்கூட விவரம் இல்லாம பேசுறே" கங்கம்மா அஞ்சினாள்.

"அவனுக்கென்னவோ பைத்தியம்தான் பிடிச்சிருக்கு. இப்படிப் பேசறான்" குண்டம்மா மிரட்டினாள்.

"இனி உங்க பாடு. நான் சொல்லிட்டேன். புத்தி கெட்டு ஏதாவது செய்தால் அதை நீங்களே அனுபவிப்பீர்கள். ஜக்கிரதை!" சாஸ்திரிகள் கோபம் கொண்டு அங்கே நில்லாமல் புறப்பட்டுப் போயே விட்டார். கங்கம்மா கூப்பிட்டும் பயனில்லை.

"இவனுடைய அறிவு கெட்ட தனத்தைச் சகித்துக் கொண்டு இங்கே இருப்பாரா. போய்விட்டார். இனி இவன் எல்லாவற்றையும் பாழாக்கப் போறான். கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்." குண்டம்மா ஆவேசமாகச் சொன்னாள்.

கொஞ்ச நேரம் எல்லாரும் சும்மாயிருந்தார்கள். யோசித்துக் கொண்டிருந்தார்கள். பிறகு கங்கம்மா தனது மருமகளைப் பார்த்து, "அம்மா, நீ முன்னாலேயே ஒரு தடவை எங்கள் வம்சத்தைக் காப்பாத்தி இருக்கே. ஆனா இப்போ அதைவிடப் பெரிய வகையில் இரண்டாவது தடவையா நீயேதான் காப்பாத்தும் வேளை வந்திருக்கு. என் மகன் நீ சொல்றபடி கேட்கிறான். அது நியாயமாகவும் இருக்கலாம். ஆனால் நீ உன் வம்சத்துக்கு எது தகுந்தது என்று யோசிக்க வேண்டும். பெரிய துரதிருஷ்டம் உன்னைக் கவிந்து கொண்டிருக்கிறது. இது உண்மை. ஆனால் இதிலிருந்து மீள எங்களால் முடிந்ததையெல்லாம் செய்ய வேண்டும் என்பதுதான் எங்கள் ஆசை. ஆனால் உனக்குச் சந்தோஷம் ஏற்படும் வகையிலும் உன்னுடைய வாழ்க்கை சுகமாக அமையும் வகையிலும் செய்வது எங்கள் நிலையில் இல்லை என்கிற வருத்தம் நிறைந் திருக்கிறது. ஆனாலும் என்ன? நாங்கள் ஏதும் செய்ய முடியாதவர்கள். நிர்ப்பந்தத்தில் சிக்கிட்டிருக்கோம். நீயே பார், எப்படி இருக்கிறது என்று. உன் துரதிருஷ்டத்தை இந்த

வீட்டின் மேலும் போடுவது சரியா? உன்னை இழந்து விட்ட துக்கமே அதற்குப் போதாதா? இப்போது நீதான் துணையாக இருந்து எங்களை வாழவைக்க வேண்டும். நான் கேட்பது மிகப் பெரிய விஷயம் என்பது எனக்குத் தெரியும். நானும் மனைவியாகவும் தாயாகவும் வாழ்ந்தவதான். ஆனால் உன் மனம் விசாலமானது. என் இந்த வேண்டுகோளை நடத்தி வைத்துப் புண்ணியம் கட்டிக் கொள். என்னுடைய ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள். முடிந்த வரையில் உனக்கு எந்தவிதமான அநியாயமும் நடக்காதபடி பார்த்துக் கொள்கிறோம். எங்கள் வீட்டை வாழ வைத்த தெய்வம் என்று உன் பெயரில் விளக்கேற்றி வைக்கிறோம். உம் வம்சத்தை நீயே காப்பாற்ற வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

கங்கம்மாவின் பேச்சைக் கேட்டு எல்லாரும் மௌனமானார்கள். தேவம்மா அழுவதை நிறுத்திவிட்டு ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினாள. சில நிமிடங்கள் கழிந்தன. கங்கம்மா, "ஒப்புக் கொள்கிறாயா, தாயே?" என்ற கேட்டாள்.

"ஆ?"

"ஒப்புக்கொண்டு வாழ விடம்மா"

"ஐயோ, எப்படி ஒத்துக்குவேன்?"

"விடு, வேண்டாம்!" சூரப்பன் சொன்னான்.

"இல்லை... இல்லை... இந்த வீடு பாழாகக் கூடாது...ஆகட்டும்.. .என்னவாவது ஆகட்டும்... என் கதி!"

தேவம்மா நம்பிக்கை இழந்து ஒத்துக் கொண்டாள்.

"அடி பைத்தியமே! இதென்ன, உன் தற்கொலை! நான் எப்படி ஒப்புக் கொள்வேன். இதற்கு?" சூரப்பன் வியப்பும் வேதனையும் கலந்து கேட்டான்.

"வேறு எதுவும் செய்வதற்கில்லை" தேவம்மா தன் முடிவைத் தெரிவித்தாள்.

"தாயே! நீயே எங்க வீட்டுத் தெய்வம்! அம்மா, கடவுள் உனக்கு நல்லது செய்யட்டும்." கங்கம்மா அதைச் சொல்லி சமாதானம் அடைந்தாள்.

"எப்படியோ அநாச்சாரம் தப்பியது" குண்டம்மா திருப்தி அடைந்தாள்.

"உம். பார்க்கலாம்" சூரப்பன் உறுதியில்லாமல் சும்மாயிருந்தான்.

மணி இரண்டு. படுப்பதற்கு முயற்சி செய்தார்கள். தேவம்மா அன்றிரவு வீட்டுக்கு விலக்கானவர்கள் தங்கும் வெளி அறையில் படுக்க வேண்டும் என்று முடிவாயிற்று. கங்கம்மா, "துணிகளை அவிழ்த்து விட்டு குழந்தையைக் கொடு" என்றாள். தேவம்மா, "இல்லை. எப்படியோ என்னிடம் வந்திருக்கிறது. இந்த ஒரு ராத்திரி என்னிடமே இருக்கட்டும்" என்று வேண்டிக் கொண்டாள். சம்மதம் கிடைத்தது. கங்கம்மா பாய், பழைய புடவை கம்பளி கொடுத்தார். தேவம்மா குழந்தையை பக்கத்தில் விட்டுக் கொண்டு படுத்த பிறகு மற்றவர்கள் உள்ளே படுத்தார்கள்.

தேவம்மாவுக்குத் தூக்கம் எப்படி வரும்? என்ன என்னவோ சிந்தனைகள் அவளைத் தாக்கிக் கொண்டிருந்தன. தன் பழைய வாழ்க்கை அவள் கண் முன்னால் விரிந்தது. அப்போதுதான் நடந்து முடிந்த பேச்சுக்கள் அவள் மனத்தில் மீண்டும் நிரம்பின. அவள் ஒரு நீண்ட பெருமூச்செறிந்தாள். குளிர்ந்த காற்று வீசியது. குழந்தை நடுங்கியது. அவள் கம்பளியையும் மடித்து வைத்த புடவையையும் சரியாகப் போர்த்திக் குழந்தையைத் தன் நெஞ்சின் அருகே இழுத்துக் கொண்டாள். அப்படியே அந்தப் புடவையின் நினைவும் வந்தது. அது அவள் கணவன் அவளுக்கு முதல் தடவையாகத் தேர்ந்தெடுத்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தது. அதை அவள்

உடுத்திக் கொண்டபோதெல்லாம் அவன் மிகவும் சந்தோஷப்பட்டான். அவன் எப்பொழுதும் அப்படித்தான். அவளைப் பார்த்தால் பித்தனாகிவிடுவான். இப்பொழுதும் அப்படித்தானே? ஊகூம், அந்தப் பித்துக்கு இனி இடந்தரக் கூடாது. உண்மை... அந்தக் கம்பளி? அதைச் சாந்தி முகூர்த்தத்தின் போது தகப்பனார் கொடுத்தார். ஆ! இப்போது அப்பா இருந்திருந்தால்? தாய் இருந்திருந்தால்? அவர்கள் இப்படி விலக்கி வைத்திருப்பார்களா? என்றைக்கு... என்னவோ, யாருக்குத் தெரியும்? மதத்தின் செல்வாக்கு எதுவரையில் போகுமோ! உம் அந்த யோசனை எதற்கு, அவர்களே இல்லாதபோது...அந்தக் கம்பளி எவ்வளவு இன்பங்களைக் கண்டது! ஒரு தடவை, திருடர்கள் வீட்டுக்கு வந்தபோது மற்றவற்றோடு இந்தக் கம்பளியையும் எடுத்துக்கொண்டு போனார்கள். ஆனாலும் அது தெரிய வந்தது. கம்பளிக்குத் தோஷம் இல்லை என்று வெயிலில் காய வைத்து இவர்கள் மறுபடியும் உபயோகித்தத் தொடங்கினார்கள். புண்ணியசாலிக் கம்பளி! ஆஹா, இந்தப் கம்பளியை விடக் கேவலமாகி விட்டேன் அல்லவா...இப்படி ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத்தாவி யோசித்துக் கொண்டிருந்தாள்.

கடிகாரம் மூன்று அடித்தது. அவள் திடுக்கிட்டெழுந்து உட்கார்ந்து கொண்டு பொழுதாகிவிட்டது என்று சொல்லிக் கொண்டாள். ஏதாவது ஓசை கேட்கிறதா என்று உற்றுக் கேட்டாள். எங்கும் ஒரே நிசப்தம். போர்வையை இன்னொரு மடிப்பு மடித்து குழந்தைக்கு நன்றாகப் போர்த்தினாள். அதன் தலையை வருடினாள். இலேசாக முத்தமிட்டாள். தலை நிமிர்ந்த பொழுது அவள் கண்ணீரின் சூடான ஒளி ஒன்று அதன் கன்னத்தின் மேல் விழுந்தது. அதை மெல்லத் துடைத்தாள். "கண்ணா! உன்னைக் கடவுள் பார்த்துக் கொள்ளட்டும்" என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள். மறுபடியும் குனிந்து தலையை வருடிவிட்டு அறையின் கதவைச் சார்த்திக் கொண்டு வெளியே வந்தாள். அவள் படிகளில் இறங்கி வரும்போது அங்கே வராண்டாவில் இருந்த பசு குரல் எழுப்பியது. அவள் அருகே போய் தண்ணீரை இழுத்து அருகில் வைத்துவிட்டு அதன் உடம்பைத் தடவிக் கொடுத்தாள். பிறகு திரும்பிவந்து மறுபடியும் படிகளில் இறங்கி நொண்டிக் கொண்டே புறப்பட்டுப் போனாள்.

மூன்றாம் நாள் காலையில் தர்மகொண்டாவில் ஒரே களேபரம். கிராமத்துக்கு வெளியே குடி தண்ணீர்க் கிணற்றில் தேவம்மாவின் பிணம் கிடைத்தது. அவள் சங்கதி கிராமங்களுக் கெல்லாம் தெரிந்து எல்லார் வாயிலும் அவள் பேச்சுத் தான்—சூரப்பன் தலையைத் தரையில் மோதிக் கொண்டு குமுறி அழுதான். பல தடவை தானும் உயிரை விடுவதற்காக ஓட முயற்சித்தான். பலர் அவனைப் பிடித்து நிறுத்திச் சமாதானம் சொன்னார்கள். கங்கம்மா வாய் மூடிக் கண்ணீரைச் சொரிந்தபடி உட்கார்ந்திருந்தாள். குழந்தை கத்திக் கொண்டிருந்தது. குண்டம்மாவைச் சுற்றிப் பல பெண்கள் கூடியிருந்தார்கள். அவள் அவர்களுக்கு எல்லா விஷயத்தையும் விவரமாகச் சொல்லிக் கொண்டே "எப்படியோ அவளுடைய சிக்கல் தீர்ந்து விட்டது. இந்த வேலையை அவள் அப்போதே செய்திருந்தால் இந்தக் களேபரத்துக்கு வழியில்லாமல் போயிருக்கும்" என்றாள். கூட்டத்தில் சிலர் "என்ன கெட்ட காலம்" என்று மனம் கலங்கினார்கள். கொஞ்ச நேரம் கழித்து யாரோ "அது சரியில்லை; இந்தத் தண்ணீரை எடுத்து விட்டுப் புது நீர் வரும்வரை குடி த்ண்ணீருக்கு என்ன வழி?" என்று கேட்டார். எல்லாரும் கவலைக்குள்ளானார்கள்.

விசாரணையெல்லாம் முடிந்து அது தற்கொலைதான் என்று முடிவான பிறகு காளப்ப சாஸ்திரிகள் சவ அடக்கத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டே, அவள்

வேறு மதத்தைச் சேர்ந்தவள், ஆகையினால் அந்த மதத்தின் விதிப்படி பிணத்தைக் கீழ் ஜாதியார் எங்காவது புதைத்து விட வேண்டும் என்றும் சிராத்தம் முதலானவை எல்லாம் ஆசாரத்துக்கு ஏற்றதல்ல என்றும் முடிவு செய்தார். கங்கம்மா இந்த துர்மரணத்தின் விஷயத்தில் தன்னுடைய பயத்தைச் சாஸ்திரிகளிடம் தெரிவித்தார். இதற்காக, சாஸ்திரிகள் பிற்பகலில் சூரப்பனின் வீட்டில் சுத்தி, பூஜை, சாந்தி முதலிய இன்றியமையாத சடங்குகளையெல்லாம் நிறைவேற்றினார்.

சில ஆண்டுகள் கழிந்தன. சூரப்பனுக்கு இரண்டாவது திருமணம் ஆயிற்று. வேறு குழந்தைகளும் பிறந்தார்கள். முதல் பெண்ணுக்குச் சூரப்பன் தேவம்மா என்றே பெயர் வைத்திருக்கிறான். தேவு என்று அழைக்கிறான். கங்கம்மா என்றைக்கும் தேவம்மாவின் பெயரிலேயே விளக்கு ஏற்றுகிறாள். குண்டம்மா இப்போதும் இந்தக் கதையை வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் எல்லாருக்கும் விரிவாக, தன்னுடைய விளக்கங்களோடு எடுத்துக் கூறி, "கடவுளே அவளுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து எங்களை ஆபத்திலிருந்து காப்பாற்றினார்" என்று சொல்லி முடித்து வைக்கிறாள்.

# நாலு முழ நிலம்

## சதுரங்க

தபால்காரன் "மணிஆர்டர், சார்," என்று கூப்பிட்டது அவனுக்குக் கேட்கவில்லை. அவன் மனம் விரித்த காகிதச் சுருளாக இருந்தது. வீட்டில் மனைவி இல்லை; நெஞ்சில் ஆர்வம் இல்லை. வழக்குக் கட்டுகளை மேஜையின் மீது பரப்பி வைத்துக் கொண்டு அவன் சிந்தனை வியூகத்தில் சிக்கி இருந்தான். 'பாழும் வேலை. இது என்னைக்குத் தான் முடியுமோ?' என்று சலிப்பின் உட்குரல் உரக்க, ஒலித்துக் கொண்டிருந்தது. 'வழக்கு, வழக்கு, வழக்கு...!இந்த வழக்குகளுக்கு முடிவே இல்லையோ? பொழுது விடிந்தால் கோர்ட்டு, கச்சேரி, இந்த விவகாரங்களில் ஊடாடிக் கொண்டிருந்தால் வாழ்க்கையில் ஏது இனிமை?' என்று உள்ளே நிகழ்ந்த தர்க்கத்தின் துருவலில் மனம் காயப்பட்டுக் கொண்டிருந்தது.

'மணிஆர்டர் சார்—!'

"நாலு முழ பூமி...நாலே நாலு முழ பூமிக்காக என்னென்ன கலகங்கள், எப்படிப் பட்ட அக்கிரமங்கள் நடக்கின்றன! மனிதனின் நல்ல குணங்கள் கரைந்து பேய் சுயநலம் என்னும் போய்க்கள்ளி தானாகவே வளர்கிறது...சுயநலம்! நிலத்தின் மேல் ஆசை!...கோர்ட்டுக்கு வரும் வழக்குகளில் அதிகமானவை பூமி சம்பந்தப்பட்டவை தான்...நிலம்-நிலம்-நிலம்...என்ன பைத்தியக்காரத்தனம்?"

'மணி ஆர்டர் சார்'

இப்போதுதான் தபால்காரனின் குரல் தெளிவாகக் கேட்டது. இருந்த இடத் திலேயே கூனியிருந்த முதுகு நிமிர்ந்தது. மணி ஆர்டர்! எங்கிருந்து வந்திருக்கிறது இந்த மணி ஆர்டர்?

எழுந்து போய்க் கதவைத் திறந்தான். முகத்தைப் பூசணிக்காயைப் போல சுளித்துக் கொண்டு தபால்காரன் மணிஆர்டர் பாரத்தை முன்னால் நீட்டியபடி "அம்மா இருக்கிறார்களா சார்?" என்றான்.

ஊகத்தின் அலைகளின் மேல் நடந்தது போலாயிற்று. தன் மனைவிக்கு மணி ஆர்டர். அவளுக்கு எங்கிருந்து வந்திருக்கிறது,

"இல்லையா, சார்?"

"இல்லை, பிறந்த வீட்டுக்குப் போயிருக்கிறா"

"எப்ப வருவாங்க சார்?"

"நாளை வருவதாகக் கடிதம் வந்திருக்கு"

"வருவது நிச்சயமா சார்?"

"அநேகமாத் தவறாது"

"அப்படியானா இதை நாளை மறுநாள் கொண்டு வரேன், சார்?"

"ஆகட்டும்." என்றவன், தபால்காரன் நான்கடி வைப்பதற்குள், எதையோ சிந்தித்துக் கொண்டு, கைதட்டி, "போஸ்ட்மேன், போஸ்ட்மேன்" என்று கூப்பிட்டான். தபால்காரன் முகத்தை இன்னும் அதிகமாகச் சுளித்துக் கொண்டுதான் வந்தான். "அந்த மணிஆர்டர் பாரத்தைக் கொஞ்சம் இப்படிக் கொடு. அது எங்கிருந்து வந்திருக்கிறதென்பதைப் பார்த்துக் கொள்கிறேன்." தபால்காரன் சலிப்போடு எடுத்துக் கொடுத்தான். அவன் கண்கள் பாரத்தில் இருந்த எழுத்துக்களின் மீது உன்னிப்பாக ஓடின. உடனேயே அவனுக்கு அது விசித்திரமாகப்பட்டது. தன் மனைவிக்கு மணி ஆர்டர் வந்திருக்கிறது என்று முதலிலேயே அவனுக்கு வியப்பாய் இருந்தது. அந்த மணிஆர்டர் எங்கிருந்து வந்திருக்கிறது என்று தெரிந்தபிறகு அவன் ஊமை ஆனான். கற்பனை அலை அவனைத் தன் மேல் உட்கார்த்தி வைத்துக் கொண்டு மேலே மேலே தூக்கிக் கொண்டு போய மலை உச்சியில் வீசியதைப் போலாயிற்று.

மனைவிக்கு மணிஆர்டர் வந்திருககிறது. இரு நூறு ரூபாயகள். அதுவும் அவள் எழுதிய ஒரு கதைக்காக! தபால்காரன் புறப்பட்டுப் போய் எவ்வளவோ நேரம் ஆன பிறகும் அவன் அப்படியே கம்பத்தைப் போல நின்றிருந்தான். ஒரு கதைக்கு இரு நூறு ரூபாய்...அதுவும் கன்னட மொழியில் தான் கோர்ட்டில் ஐந்து கேஸ்களை நடத்தினாலும் அவ்வளவு பணம் சேராது. காலம் உண்மையாகவே மிகுந்த வேகத்தில் மாறிக் கொண்டு வருகிறது. சில ஆண்டுகளுக்கு முன்னால் கன்னடம் தாயற்ற அநாதை. அதைக் கேட்பவர்களே இல்லை. ஆயிரம் பிரதிகள் விற்பனை ஆக வேண்டுமானால் ஏழெட்டு ஆண்டுகள் ஆகும். ஆனால் இன்றோ? நாலைந் தாயிரம் பிரதிகளை அச்சடிக்கும் சாகசத்தைக் கன்னட வெளியீட்டாளர்கள் நடத்திக் கொண்டு வருகிறார்களாம். அவ்வளவு பிரதிகளும் அதிகமாகப் போனால் இரண்டே ஆண்டு களில் விற்பனையாகின்றனவாம்...முன்னாலும் கதைப் போட்டிகள் நடந்து கொண்டிருந்தன. அவைகளின் முதல் பரிசு, உபசாரத்துடன் முதுகைத் தட்டிக் கொடுக்கிற சங்கதி. ஆனால் இப்போது நடக்கிற கதைப் போட்டிகள் நூற்றுக் கணக்கான ரூபாய்களைப் பரிசாகக்கொண்டு தருகிற தகுதியைப் பெற்றிருக் கின்றன.

யாரோ கட்சிக்காரர்கள் வந்தார்கள். அவர்கள் சொல்வதைக் குறைகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அவர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி அவர்களை அனுப்பி வைத்து, பாக்கியிருந்த இரண்டொரு ரிக்கார்டுகளை பரி சீலித்து விட்டுச் சாப்பிடுவதற்காக எழுந்தான். ஒட்டல் சாப்பாடு ஏனோ ருசிக்க வில்லை. ஒரு வேளை அடுத்த நாளே வரவிருந்த மனைவியின் வரவே இதற்குக் காரணமாய் இருக்கலாம். எப்படியோ சாப்பாட்டு வேலையை முடித்துக் கொண்டு அறைக்குத் திரும்பினான். அன்று கோர்ட்டுக்கு விடுமுறையாய் இருந்ததால் ஓய்வு முடியாத நெடுவழியாய் இருந்தது. போய்க் கட்டிலின் மீது படுத்துக் கொண்டான். மீண்டும் வேலையற்ற மனம் சிந்தனை ஏரியில் நீந்தத் தொடங்கியது...தன் மனை விக்குப் பரிசு, கதைப் போட்டியில் அவள் எழுதிய கதைக்கு முதல் இடம்! அவன் மனம் கர்வத்தில் மலர்ந்த பூவாயிற்று. மனம் நினைவுக் குதிரையில் ஏறிப் புறப் பட்டது. முன்பு திருமண காலத்தில் அவர்கள் இருவருக்குமிடையில் நடந்த ஒரு சங்கதியின் நினைவு திடீர் என்று விழித்தது.

ஒரு பிற்பகல்-இதே போல் கோர்ட்டுக்கு விடுமுறையான ஒரு நாளின் பிற்பகல்.

சாப்பிட்டுவிட்டு, அவன் தூங்கியிருந்தான். அருகில் படுத்திருந்த தன் மனைவியும் தன்னைப் போலவே தூங்கிவிடுவாள் என்று நினைத்திருந்தான். ஆனால் தூக் கத்தின் ஆலிங்கனத்திலிருந்து விடுதலை பெற்று எழுந்தபோது பக்கத்தில் மனைவி யில்லாததைக் கண்டு வியப்புக்குள்ளானான். ஓசைப் படாமல் எழுந்து வீட்டை யெல்லாம் தேடிப் பார்த்தான். அவள் தன் அறையில் எதோ எழுதுவதில் மூழ்கி யிருந்தாள். அவனுடைய வியப்பு மாளிகையாக எழுந்தது. தூங்காமல் அவள் எதை எழுதிக் கொண்டிருப்பாள்? அப்பாவுக்கோ அண்ணனுக்கோ கடிதம் எழுதிக் கொண்டிருக்கலாமோ?

அவன் கனைக்கிற சத்தத்தைக் கேட்டு அவள் திரும்பிப் பார்த்தாள். தவத்திலிருந்து விழித்ததைப் போல இருந்தது அவள் பார்வை. அங்கே போய், "நீ எங்கயாவது போய்ட்டியோன்னு பயமா இருந்தது"ன்னு சொல்லி சிரித்தான். அவளுடைய கண் களும் சிரித்துக் கொண்டிருந்தன.

"நீங்க ஒண்ணு. நான் எங்கே போவேன்?"

"அதென்ன எழுதிக்கிட்டிருக்கே, கடிதமா?"

"ஆமாம். காதல் கடிதம்" என்று குறும்புத் தனத்தைத் தன் கடைக்கண்ணில் உதிர்த்தாள்.

"காதல் கடிதம்! யாருக்குன்னு கேட்கலாமா?" அவனும் விளையாடினான். அதற்குப் பதிலாக வலது கை விரல்களை மயக்கும் வகையில் சுழற்றிக் கொண்டே அபிநயத தோடு அவள், "யா...ரு...க்கோ" என்றாள். அதோடு பார்த்தும் பார்க்காதது போல் சிரித்த போது அவள் உடம்பு சுழற்காற்றில் ஒசியும் தாமரைத் தண்டைப் போல ஆடியது.

அவளுடைய சிறுபிள்ளைத்தனம் அவனுக்கு எப்போதும் பிடிக்கும். அதற்குத் தகுந்த மதிப்பைக் கொடுத்து என்ன எழுதியிருக் கலாம் என்று மேஜையில் குனிந்து பார்த்தான். "என்ன இது?...காதல் கடிதம்...சிறுகதை.. ஓ..கதை எழுதிக் கொண்டிருக் கிறாயோ. எப்போ பிடிச்சது இந்தப் பைத்தியம் உனக்கு?"

"ஏன் பைத்தியம்னு சொல்றீங்க. கதை எழுதறது பைத்தியமா?"

"ஒரு வகையில் அது பைத்தியம்தான்"

"எப்படி?"

"கதை என்றால் கயிறு. அதனால யாருக்குப் பிரயோசனம்"

"பிரயோசனப்படுவதா இருந்தாத்தான் ஒரு வேலையைச் செய்யலாம். இல்லாட்டா செய்யக் கூடாது என்பது தான் உங்க கருத்தா?"

"ஆமாம். பயனில்லாத வேலை எனக்கு விருப்பமில்லை"

"பேஷ். பேஷ். வக்கீல் தொழிலுக்குப் பொருத்தமான முறையில பேசறீங்க. பரவா யில்லை."

"பார்த்தாயா. என் பேச்சை நீ சரியாகப் புரிஞ்சிக்கவே இல்ல. கதைக்கும் வாழ்க் கைக்கும் நெருங்கிய தொடர்பு வேண்டாமா? நீயே சொல். அர்த்தமில்லாமல் இப்போது வெளிவருகிற கதைகள், கன்னட நாட்டுச் சாதாரண மக்களின் வாழ்க் கையைக் கொஞ்சமாவது தொட்டிருக்கா? அதற்காகத்தான் அப்படிக் கடுமையாக சொன்னேன். அவ்வளவுதான்...என் ராணி கதை எழுதறான்னா எனக்குச் சந்தோஷம் இல்லையா? உண்மையைச் சொல்லணும்னா நான் பெருமையில் பூரிச்சிப் போயிருக்கேன்."

அவனுடைய ராணியும் அதைக் கேட்டு பூரித்துப் போனாள்.

"ஆனால் என் ராணியும் மற்றவர்களைப் போலக் கயிறு திரிச்சா எனக்குப் பிடிக்காது. முதலில் வாழ்க்கையைக் கண் திறந்து பார்த்துச் சீர்தூக்கிப் புரிஞ்சிக் கணும். அப்பறமா எழுதணும். அப்போ கதை வீணாவதில்ல. ஒலியில்லாம குழல் ஆவ தில்லை என்று நான் நினைக்கிறேன்."

"ராஜாவினுடைய கட்டளையை நிறைவேத்த முயற்சி செய்கிறேன்" என்ற போது அவளுடைய மேல் உதட்டின் நுனி புன்னகையால் வில்லைப் போல மேல் எழுந்து வளைந்தது. இது நடந்த பிறகு வக்கீல் தொழில் அவனுடய காலத்தையும் அறிவை யும் முழுவதுமாகப் பயன்படுத்திக் கொண்டது. மனைவி எழுதுகிறாளா? எதைப் பற்றி எழுதிக் கொண்டிருக்கிறாள்? அவள் எழுதி வரும் கதைகளில் ஏதாவது புதுமை, உண்மை அடங்கியிருக்கிறதா என்று கேட்டுத் தெரிந்து கொள்ளவும் அவனுக்கு ஒய்வே கிடைக்கவில்லை...

யோசித்துக் கொண்டே அவன் ஒரு ஓரத்தில் இருந்து மற்றோர் ஓரத்துக்குப் புரண்டான். என்ன செய்தாலும் தூக்கம் வரவில்லை. கடைசியில் சலித்துப் போய் ஏதாவது ஒரு புத்தகத்தைப் படிப்போம் என்று நினைத்து எழுந்து போய், புத்தக அலமாரியில் கையிட்டுத் தனக்குப் பிடித்தமான சீன் கிறிஸ்டப் நாவலை எடுத்துக் கொண்டு பக்கத்திலேயே இருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தான். அந்தப் புத்த கத்தின் பக்கங்களைப் புரட்டிய போது உள்ளே மடித்து வைத்திருந்த சில தாள்கள் கண்ணில்பட்டன. ஆர்வத்தோடு அந்தத் தாள்களைப் பிரித்துப் பார்த்தான். அவை தன் மனைவி எழுதிய கதையின் கையெழுத்துப் பிரதியாக இருந்தது. கதையின் பெயர்: "நான்கு முழ நிலம்"

சீட்டி அடித்தபடியே அவன் கதையைப் படிக்கத் தொடங்கினான்.

* * *

வைகாசி மாதத்தில் நடுவெயிலின் தாண்டவம். அதனுடைய கொதிப்பாட்டத்தில் காலிங்கய்யா தலை கவிழ்த்து உழுது கொண்டிருந்தான். பக்கத்திலேயே அவனை ஒட்டி அடி போடும் அவனுடைய நீங்காத நிழல். அந்த வெளிச்சத்தின் வீச்சுக்குக் கண் இருட்டிக் கொண்டு வந்தது. உடம்பு முழுவதும் வியர்வையில் காவிரிக் குளியல்..

ஏர் மெதுவாக, ஆனால் அழுத்தமாக நிலத்தில் வகிடு எடுத்தபடி, சென்று கொண் டிருந்தது. ஏரில் பூட்டிய இரண்டு வெள்ளை மாடுகள், அவனுடைய கறுத்த உடம்பு; அதைச் சுற்றிக் கட்டியிருக்கிற வெளுத்த துண்டு வேஷ்டி, தலைப்பாகை; பின்ன ணியில் இருந்த மலைத் தொடரின் கருநீல, பச்சைப் பின்னணியில் அந்தக் காட்சி தொலைவிலிருந்து பார்ப்பவர்களுக்கு ஒரு ஓவியத்தைப் போலவும் படத்தில் உள்ள ஓவியம் அசைவது போலவும் தோன்றியது. ஆனால் அந்தக் காட்சியின் ஒரு பகுதி யாய் இருந்த காலிங்கய்யனுக்கு மட்டும் அதன் அழகை ரசிப்பது இயலாததாய் இருந்தது. அவன் கேவலம் உழுகிற இயந்திரமாக இருந்தான். சூரியன் எழுவதற்கு முன்னால் எழுந்து ஏர் கட்டினான். ஆனால் வயலிலிருந்து அவன் திரும்பவும் வீடு திரும்புவது மாலையில் தான்.!

காலிங்கய்யன் உழுதுகொண்டே இருந்தான். அவன் மனம் பொதுவாக நீரில்லாத பானையைப் போல வறிதாய் இருக்கும். ஆனால் இன்று மட்டும் அந்தப் பானையில் சிந்தனை என்னும் சிறிய கல் விழுந்திருக்கிறது. சிந்தனைக்குக் காரணம் நான்கு முழ நிலம்—நாலு முழ நிலம்!

கேவலம் நாலே நாலு முழ நிலம்! .

காலிங்கய்யனின் கிழட்டுக் கண்களின் பார்வை ஏதோ கண்ணுக்குத் தெரியாத ஓர் அச்சத்தின் இருப்பிடமாய் இருந்தது.

அவன் சிறியவனாக இருந்த போது அரிகதை சொல்கிற தாசர் ஒருவர் பக்கத்துக் கிராமத்தில் கதை சொல்லும்போது சொல்லியிருந்தார். பூமியின் மீது அதிகமாக ஆசை வைக்காதீர்கள். அதன் காரணமாகத்தான் குரு வம்சம் அழிந்து போயிற்று. அப்படித்தானே? பாண்டவர்கள் சார்பாக, கண்ண பரமாத்மா கடைசியில் ஐந்தே ஐந்து கிராமங்களைப் பாண்டவர்களுக்கு விட்டுக் கொடுத்தாலும் போதும், சமாதானம் செய்து வைப்பதாக உறுதி அளிக்கவில்லையா. அப்போதும் அறிவு கெட்ட அந்தத் துரியோதனன் ஆணவத்தோடு, ஐந்து கிராமங்கள் என்னும் பேச்சு இருக்கட்டும். ஐந்து அடி பூமியைக் கூடப் பாண்ட வர்களுக்குக் கொடுக்க மாட்டேன் என்று பிடிவாதத்துடன் இருந்து மொத்தமாக அழிந்து போகவில்லையா?

அதே போல அவனுடைய நடவடிக்கையும் முன் நாட்களில் அறியாமை என்னும் வழுக்குப் பாறையில் கால்வைத்திருந்தது. ஆமாம், கேவலம் நான்கு முழ பூமிக்காக, நாலே நாலு முழ பூமிக்காக.

கௌரவர்களின் கதை என்னவோ என்றோ முடிந்து விட்டது. ஆனால் தன் கதை? அதனுடைய முடிவு எப்படியோ? தான் செய்த இந்த வேலை என்ன தண்டனையைப் பெறவிருக்கிறதோ?

காலிங்கய்யன் உழுது கொண்டே இருந்தான். கலப்பை முன்னேறிச் சென்ற அளவுக்கு நிலம் வாய் திறந்தது போல இரண்டு பக்கத்திலும் சிவப்பு மண்ணின் குவியல் விழுந்து கொண்டே போயிற்று அவன் அதைப் பார்த்துக் கொண்டே நடந்து கொண் டிருந்தான். ஓ, குங்குமத்தைப் போன்ற அந்த மண். அவன் கண்ணுக்கு அது எவ்வளவு இதமாய் இருந்தது! அதை உற்றுப் பார்த்தபடியே சில சமயங்களில் தன் வீட்டை, கடைசியில் உலகத்தையும், அவன் மறந்திருந்ததுண்டு. நாலு முழ பூமி! இன்னொருவனுக்குச் சொந்தமான பூமி. அதற்கு இவன் ஆசைப்பட்டான். இன் னொருவன் மனைவிக்கு ஆசைப்பட்டது போல (அகலிகைக்கு ஆசைப்பட்ட இந்திரன்)...பக்கத்து நிலம் தென்னை மரத்துக் குடிசை தேவப்பனுடையது. அதில் அவன் நான்கு முழு நிலத்தை பலாத்காரமாக, அக்கிரமமாக உழுது சாகுபடி செய்தி ருந்தான். தேவப்பனுக்கிருந்த நிலமெல்லாம் மொத்தம் மூன்றும் சில்லரை ஏக்கர் இருக்கும்—ஏறக்குறைய தன்னுடைய நிலத்தைப் போலவே (இது மைசூரின், கன்னட நாட்டின், பாரதத்தின் பெரும்பாலான விவசாயிகளுடைய நிலத்தின் கதை) இவ்வளவு அற்ப நிலத்திலும் நடந்த இந்த ஆக்கிரமிப்பால் தேவப்பா திசை தெரி யாத மாலுமியைப் போல் ஆனான். வசைமாரி பொழிந்தான். கடைசியில் தாங்க முடியாமல், இறக்கத்தில் பிரேக் கெட்டுப் போன மோட்டாரைப் போல் சண்டைக்கு வந்தான். கையும் கையும் கலந்தன (பீமன்-துரியோதனன் சண்டை) காலிங்கய்யா பீமனைப் போன்றவன். அவனுக்கே வெற்றி கிட்டியது. தேவப்பா கிராமப் பஞ்சாயத்திடம் புகார் செய்தான். நமது கிராமங்களில் கிராமப் பஞ்சாயத்து தீர்ப்பு என்றால் அது பலசாலியின் வாயில் விழும் தோசை போலத்தான். நியாயம் காலிங் கனைப் போலவே ஆயிற்று. ஆனால் அதனாலும் கலங்கிவிடாமல் தேவப்பா அமல் தாரிடம் முறையிட்டான். சர்வேயர் அளப்பதற்கு வந்தார். அளப்பதற்காக நிலத் துக்குப் போவதற்கு முன்னால் காலிங்கன் சர்வே தேவதைக்கு உப்புமா, காப்பி பூஜை செய்து ஐந்து ரூபாய் நைவேத்தியமும் செய்தான். இந்த விசேஷ பூஜையினால்

திருப்தியடைந்த சர்வேயர் காலிங்கய்யன் விதைத்திருந்த நான்கு முழ நிலப்பகுதியை நீளமாக அளந்து அவன் வயலோடு சேர்த்து கல் நாட்டி விட்டார்...

காலிங்கய்யா உழுதுகொண்டே இருந்தான். மேலே எரிக்கிற சூழ்நிலை; உள்ளே கொதிக்கிற துன்ப எரிமலைக் குழம்பு.

கல் நட்டு விட்டார்கள். தேவப்பனின் நெஞ்சைக் குறிபார்த்து அடித்த கல். தேவப்பா பிரமை பிடித்தவன் போலானான். சூரியன் சந்திரனைப் போல நிலையானது என்று அவன் நம்பியிருந்த நிலப்பகுதி இனி அவனுடையதல்ல. நாட்டின் சட்டம் அப்படிச் சொல்லி விட்டது. இனி என்ன செய்வது, அறிவு குன்றியது. எதிரில் விசாலமாகப் பரந்திருக்கிற சூனியக் கடல். தேவப்பா கவலையினால் படுத்த படுக்கையானான்.

காலிங்கய்யா உழுது கொண்டே இருந்தான். அவன் கால்கள் மெதுவாக நடுங்கிக் கொண்டிருந்தன... தேவப்பன் படுத்த படுக்கையானான். பிறகு எழுந்திருக்கவேயில்லை.

காலிங்கய்யனின் கால்களும் முளையடித்தது போல, மேலே எழவில்லை. அவன் கண்கள் மின்னலைப் பார்த்தது போல இருள் அடைந்தன. தலை கிர்ர்ர் என்று சுற்றும் நிலை.

"என் நிலத்தை எடுத்துக் கொண்டாயா?...அந்த மண்ணுக்கு என் ரத்தத்தைக் கொட்டியிருக்கிறேனடா, பாவி! கடவுள் உனக்கு நல்லது செய்வானா? என் முறையீட்டை ஒதுக்கிவிட்டு என் உயிரை எடுத்துக் கொண்டிருக்கிறாய். இருக்கட்டும். என் மகன் நிச்சயமாக பழிவாங்குவான். ஞாபகத்தில் வைத்துக் கொள். ரத்தத்துக்கு ரத்தத்தைச் சிந்தி நிலத்தைச் சம்பாதித்துக் கொள்வான்...உஷார்...ஜெயித்து விட்டாய் என்று நினைத்துக் கொள்ளாதே. உன் கதை முடியாம என் கதை முடியாது, தெரிந்ததா?"

செத்துப்போன தேவப்பனின் குரல்தான், சந்தேகமில்லாமல். கிழவன் காலிங்கய்யா தடதடவென்று நடுங்கத் தொடங்கினான். அவன் கண்கள் பயந்து பயந்து பக்கத்து நிலத்திலேயே உழுது கொண்டிருந்த தேவப்பன் மகனுடைய திடகாத்திரமான உடம்பைப் பார்த்தான்..."நான் கிழவனாகிட்டேன், குழந்தைகளுமில்லை, தேவப்பன் மகன் இப்போ பலசாலியாய் இருக்கிறான். அவன் கண்டிப்பாகப் பழி தீர்த்துக் கொள்வான். அந்த நிலத்தை நான் செய்தது போலவே பலாத்காரமாக உழுது தன் வசப்படுத்திக் கொள்வான். வசப்படுத்திக் கொண்டே உழுவான். பலம் இருக்கிறவன் செயல் அது. எல்லாம் முடிந்து போய் விட்டது. அந்த சர்வேயருக்கு அநியாயமாக ஐந்து ரூபாய் அழுதேனே?...ஐயோ ஐந்து ரூபாய் கொடுத்தேனே?...ஐயோ கெட்டேன் கெட்டேன்"

காலிங்கய்யா தள்ளாடித் தள்ளாடிக் கீழே விழுந்ததைக் கண்டு தேவப்பன் மகன் ஏரை நிறுத்தி விட்டு ஓடோடி வந்தான். காலிங்கய்யனுக்கு உணர்வு மங்கியது போல் இருந்தது. உடனே ஏரிக்கு ஓடித் தண்ணீர் கொண்டு வந்து அதைப் போக்க முயற்சி செய்தான். சிறிது நேரம் கழித்து காலிங்கய்யா கண்ணைத் திறந்தான். தேவப்பன் மகனின் முகத்தைக் கண்டு சாவையே நேரில் பார்த்தவனைப் போல் ஆனான். (கருடனைக் கண்ட நாகம்) திறந்த கண் 'டக்' என்று மூடிக் கொண்டது. வாய் பலவீனமாக அசைந்தது; "நாலு முழ பூமி, நாலே நாலு முழ பூமி...கோபித்துக் கொள்ள வேண்டாம். குடும்பத்தைக் காப்பாற்ற அந்த வேலையைச் செய்தேனப்பா—

குடும்பத்தைக் காப்பாற்ற..."தேவப்பன் மகன் ஒன்றும் புரியாமல் திருதிரு வென்ற விழித்தான். மூடிய கண் திறக்கவேயில்லை.

* * *

கதையைப் படித்த லாயர் தலையைத் தொங்கவிட்டான். ஆனால் ஏனோ அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. கையெழுத்துப் பிரதி ஆணின் கையெழுத்தைப் போல் இருந்தது. ஆழ்ந்து யோசித்த போது கடைசியில் சிறியதாக 'சஞ்சீவி' என்று எழுதியிருந்தது. அது மையால் நன்றாக அடிக்கப்பட்டிருந்தது.

லாயரின் சந்தேகம் உறுதியாயிற்று... சஞ்சீவி தன் மனைவியின் தாய்மாமன். அவன் அண்மையில்தான் இறந்து போனான். அவன் லலிதாவிடம் மிகவும் அன்பு கொண்டிருந்தானென்று அவளே அவ்வப்போது சொல்லியதுண்டு. அப்படியானால் அவனுடைய கதைகளையே தன் பெயரில் வெளியிட்டு வந்தாளோ லலிதா?...நாலு முழ பூமி! இது அவன் எழுதிய கதையோ?

# தலைமறைவானவன்

பசவராஜ் கட்டேமனி

மறுபடியும் வந்து கொண்டிருந்தார்கள் அந்தப் போலீஸார்.

எட்டு நாட்களாக இடைவிடாமல் அவர்களுடைய தொல்லை தொடர்ந்து வந்தது. ஒரே விதமாக. ஆனாலும் அவர்களுக்குத் திருப்தி உண்டாகவில்லை.

மறுபடியும் வந்து கொண்டிருந்தார்கள்...!

அவர்களுடைய சித்திரவதையை எதிர்த்து நிற்கத் தயாராக எழுந்து உட்கார்ந்தாள்—நாகம்மா.

எட்டு நாட்களாய் ஒரே விதமாக அவர்கள் அவளை அடித்து வந்தார்கள். லத்திக்கம்பு, பிரம்பு, பூட்ஸ், செருப்பு—கையில் கிடைத்ததைக் கொண்டு அடி கொடுத்தார்கள். அவளுடைய புடவை ரவிக்கையையெல்லாம் இழுத்து எறிந்து விட்டு அந்த நிர்வாண உடம்பைத் தோல்பட்டையினால் இறுக்கிக் கட்டியிருந்தார்கள். அவளுடைய மென்மையான உடம்பின் மீது கொடிய மிருகங்களை விடக் கொடுமையான முறையில் விழுந்து பயங்கரமான முறைகேட்டை நடத்தியிருந்தார்கள். இளம் உடம்பிலிருந்து கொட்டும் சூடான ரத்தத்தை காணக் காண அவர்களுடைய இம்சை வெறி அதிகமாகியது.

அந்த அடி, அந்த முறைகேடு, அந்த ரத்தச் சொரியல், அதைத தாள முடியாமல் அந்த இளம் பெண் போராடிக் கொண்டிருந்தாள். எதனாலும் அந்தப் போலீஸ்காரர்களின் கல்மனம் கரையவில்லை. தினமும் அடியோ அடி! முறைகேடு நடந்தது, நடந்தது. இன்னமும் திருப்தியாகவில்லை அவர்களுக்கு. மறுபடியும் வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தக் குடிசையின் பக்கத்து வீட்டில் தனியாகப் படுத்துப் புரண்டபடியே நாகம்மா. "யாருமே இல்லையா இவர்களைத் தடுப்பதற்கு? யாருமே இல்லையா" என்ற நூறு முறையாவது நினைத்துப் பார்த்தாள்.

ஆயிரம் தடவையாவது அவள் எல்லாரையும் காப்பாற்றும் கடவுளை, தீனக் குரலில் கூவியழைத்ததுண்டு. "கௌரவர்கள் சபையில் பாஞ்சாலியின் மானத்தைக் காப்பாற்றிய கண்ணா, வந்து என்னைக் காப்பாற்று" என்று அந்தக் கடவுளை வேண்டினாள். "அடியார்க்கு எளியவனாகிய சிவனே வா, வேகமாய் வந்து என்னைக் காப்பாற்று. இந்தப் பிசாசுகளிடமிருந்து!" என்று மனங்கரைய முறையிட்டாள். எந்தக் கடவுளும் வரவில்லை அவளுடைய விடுதலைக்காக! ஓ, எமனே! நீயாவது வந்து என்னை இந்த நரகத்திலிருந்து வெளியேற்று என்று சாவை அழைத்தாள். அதற்கும் கூடக் கருணை பிறக்கவில்லை. ஒவ்வொரு நாளும் அந்த பயங்கர இம்சையை எல்லாம் சகித்துக் கொண்டாலும் இன்னும் போகவில்லை அந்த உயிர்.

பூட்ஸ்களின் ஒலி வந்தது. அதே அந்த அறிமுகமான டக் டக் சப்தம்— பூட்டைத்திறக்கும் போது உண்டாகும் கிர்ர் என்னும் சப்தம்-எல்லா சக்தியையும் நெஞ்சில் நிரப்பிக் கொண்டு நாகம்மா அவர்களை எதிர்க்கத் தயாரானாள். கதவு திறந்தது.

அதே, அந்தக் குரூரமான முகங்களே! கரி நிறத்தில் முதலையை விடப் பயங் கரமான முகத்தையுடைய அந்த தஃபேதார். அவன் கூடவே இருக்கும் போலீஸ் காரன்...மூன்று நாட்களாக அவர்கள் இரண்டு பேர்தான் வருகிறார்கள். திரும்பத் திரும்ப அதே கேள்வி. அதே முறை கேடு. எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு கையிலே கொண்டுந்திருந்த ஆறிப்போன ரொட்டித் துண்டை அவள் உடலின் மீது வீசி விட்டு மூலையிலிருந்த பானையில் அழுக்கு நீரை நிரப்பிவிட்டுக் கதவையும் பூட்டிக் கொண்டு சாவியைப் பத்திரமாக எடுத்துப் போய்க் கொண்டிருந்தார்கள். காலையிலும் மாலையிலும் தினமும் இரண்டு வேளை தவறியதில்லை இந்த ஒழுங்கு.

அவளைத் தோற்கச் செய்ய வேண்டுமென்று அவர்கள் கையாண்ட இம்சைகளும் அக்கிரமங்களும் பயன் அற்றுப் போயின. எந்த வழியும் அவள் வாயைத் திறக்கத் திறனுடையதாக இல்லை."பேசு, நாங்க கேக்கறதுக்குப் பதில் சொல். உன்னை விட்டு விடுகிறோம்" என்று அவர்கள் தொண்டை கிழியக் கத்தினாலும், அவள் வாய் மேல் பூட்ஸ் காலால் உதைத்தாலும், அவள் தோல்வியுறவில்லை. பூட்ஸ் ஆணிகளால் உதடு கிழிந்து பல் உடைந்து இரத்தம் கொட்டினாலும் அவள் அயரவில்லை.

அவளுடைய அந்தத் திடமான முடிவு அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தாலும் இன்னும் அவர்கள் பின் வாங்க வில்லை. நம்பிக்கை,இழக்கவில்லை. தினமும் வந்து கொண்டேயிருந்தார்கள். தினமும் அவளை அடித்துத் துன்புறுத்தினார்கள்.

இப்போதும் வந்தார்கள்!

தஃபேதாரின் பூட்ஸ் அணிந்த கால் வேகமாக வீசி வந்து அவள் இடுப்பில் விழுந்தது. அதன் தாக்குதலில் அவள் உடம்பு நொறுங்கியது. கொஞ்ச தூரத்தில் போய் விழுந்தது. இந்த உதையால் அதிகமாக வலியும் தெரியவில்லை. இடுப்பு எலும்பு எப்போதோ அவர்கள் கால் மிதியில் சிக்கி ஒடிந்து போயிருந்தது. கிணற்று நீரில் கல் விழுந்தால் அதில் கொஞ்ச நேரம் அலைகளின் ஆட்டம் நடப்பது போல் அவள் உடம்பில் இரண்டொரு கண நேரத்துக்கு இனந்தெரியாத அலைகள் எழுந்து மறைந்தன. அவ்வளவுதான்.

"இன்னும் இறங்கலையாடி உன் திமிர்? வாயைத் திறக்கறயா இல்லையா" என்றான் தஃபேதார், மறுபடியும் அவள் இடுப்பில் உதைத்தபடியே. "சொல்லடி, முண்டை. எங்கே மறைஞ்சிருக்கான் உன் புருஷன்? ஏன் பேசமாட்டங்கற. இன்னும் எவ்வளவு அடி வாங்கப் போற. ஒழுங்கா சொல்லிட்டு உன் உயிரக் காப்பாத் திக்கோ. சொல்லு. எங்க இருக்கான் உன் புருஷன், சொல்லு. சொல்லுடி"

மறபடியும் உதை...மறுபடியும் அடி...மறுபடியும் அறை...எல்லாவற்றையும் எப்ப டியோ பொறுத்துக் கொண்டு அங்கு மிங்கும் உருண்டு கொண்டே படுத்திருந்தது அவள் உடம்பு. வாயிலிருந்து பேச்சு வருவதாய் இல்லை. பேசுவதற்கும் அவளுக்கு உணர்வு இருக்கவில்லை.

ஐந்தாறு நாட்கள் தொடர்ந்து முயற்சி செய்த பிறகும் அவள் வாய் திறவாததைக் கண்டு தஃபேதாருக்கு பயங்கர கோபம் உண்டாயிற்று. அவள் வாயைப் பலவந்த மாகத்திறந்து உள்ளேயிருந்த நாக்கைப் பிடித்து வேகமாக இழுத்தபடியே, "சொல்லு. எங்க இருக்கறான் அவன்?" என்று கத்தினான்.

நாகம்மாவுககு உணர்வு திரும்பியது. தஃபேதார் செய்த செயல் தெரிந்தது. தன்னில் மிச்சமிருந்த எல்லாச் சக்தியையும் பற்களில் திரட்டி அவன் கையைப் பலமாகக் கடித்து விடலாமா என்று தோன்றியது நாகம்மாவுக்கு. நாகப் பாம்பின் பல்லில் இருக்கும் விஷமாவது தன் பல்லில் இருந்தால் ஒரு கடிக்கே உருண்டு விழுந்து புரண்டு புரண்டு உயிரை விட்டிருப்பான் இந்தப் பிசாசு என்று நினைத்தாள்... எல்லாம் வெறும் எண்ணங்களே...எல்லாம் வெறும் யோசனைகளே...

தஃபேதார் மீண்டும் கத்திக் கொண்டிருந்தான்.

"சொல்லுடி, எங்கடி இருக்கான் உன் புருஷன்? கோழை மாதிரி எங்கடி ஒளிஞ்சிருக்கான் அந்தக் கேடி"

கேடி! பேடி! அதுவும்தன் கணவன்! நாகம்மாவின் தன்மானம் கொதித்தெழுந்தது. வலியைப் பொறுத்துப் பொறுத்துக் குன்றிப் போன- ஆனாலும் மிகக் கடுமையான குரலில் கர்ச்சித்தாள். "யாரைப்பாத்து கேடின்னு சொல்ற தடியா. பொம்பளை கிட்ட வீரத்த காட்டற உங்கள மாதிரியான ஆள் இல்ல! த்தூஉ...உங்க முகத்தில நெருப்பு விழ! வெட்கமா இல்லயா உங்களுக்கு?"

இல்லை. வெட்கம் ஏற்படுவதாய் இல்லை அவர்களுக்கு. அவள் 'த்தூஉ' என்ற அளவுக்கு அந்தப் போலீஸ்காரனுக்கு கோபம் ஏறிக்கொண்டே வந்தது. மறுபடியும் பயங்கரமாக அடிக்கத் தொடங்கினான். இதுவரை பலதடவை இழுத்து இழுத்து உதிர்ந்து போய் இருந்தாலும் இன்னும் கொஞ்சம் மிச்சமிருக்கிற கூந்தலைப் பிடித்து, குடிசையெல்லாம் தரதரவென்று இழுத்துச் சென்றான். மறுபடியும் இழுத்தான். பூட்ஸ் காலால் உதைத்தான். அவள் மறுபடியும் உணர்வு இழந்து விழுந்ததும் முகத்தில் தண்ணீர் தெளித்து, பலவந்தமாக எழுப்பினான்.

இமைகளைத் திறந்து வெளியே பார்ப்பதற்கும் முடியவில்லை நாகம்மாவால். கண்களின் மேல் அடி விழுந்து அங்கிருந்தும் ரத்தம் கொட்டியது. கதவைப் பூட்டிக் கொண்டு புறப்படும் போது தஃபேதார் கத்தியது காதில் விழுந்தது.

"இன்னைக்குச் சாயங்காலத்துக்குள்ள அவன் இருக்கிற இடத்த சொன்னா சரி, இல்லைன்னா கிழிச்சிப் போட்டுடுவேன். கம்பத்தில் கட்டித் தோல உரிச்சிடுவேன்" இதுவரையில் நூறு தடவையாவது அந்தப் பேச்சு வந்திருக்கும் அவன் வாயிலிருந்து. தினமும் கிழிப்பதும் நடந்தது. தோல் உரிப்பதும் நடந்தது. ஆனாலும் உயிர் போக வில்லை. தற்கொலையைச் செய்து கொள்வதற்குக் கூட வழியில்லை. நாகம்மாவுக்கு அதையும் முடியாமல் செய்திருந்தார்கள் அவர்கள். அந்த முயற்சியில் அவள் இறங்கக் கூடாது என்று நினைத்து அங்கே ஒரு துண்டுத் துணியைக் கூட விட்டு வைக்க வில்லை. அவளுடைய புடவை ரவிக்கைகளைக் கூட எப்பொழுதோ எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். குடிசையிலிருந்த கயிறு நூல் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் கொண்டு போயிருந்தார்கள்.

குடிசைக்குத் தீ வைத்துவிட்டு அதற்குள் வெந்தாவது சாகலாம் போலிருந்தது. அதுவும் முடியாது. தீயும் கிடைப்பதாய் இல்லை. தீப்பெட்டியும் கிடைப்பதாய் இல்லை.

இரவு இருட்டில் வெளியே தன்னிச்சையாகத் திரியும் பாம்புகளாவது வரக் கூடாதா தன் குடிசையின் பக்கத்தில்? என்று நினைத்தாள் நாகம்மா.—அவைகளின் கூரிய கண்களின் ஒளியைப் பார்த்து அவள் அடையாளம் கண்டு கொண்டிருப் பாள். தரிசனம் கொடுக்க வந்த தெய்வத்தை வரவேற்பதைப் போல அவள் அவற்றை

வரவேற்றிருப்பாள். மகிழ்ச்சியோடு சிரித்துக் கொண்டே அவற்றின் படத்தின் மீது கையை வைத்திருப்பாள். அவற்றின் விஷம் நிரம்பிய பற்கள் கையில் வைத்த போது மகிழ்ச்சியில் கூவியிருப்பாள்...!

பாம்புகள் வராவிட்டால் போகட்டும், முன்பு ஒரு தடவை அவர்கள் கிராமத்தில் தாண்டவம் புரிந்த பிளேக் நோயாவது ஏன் வரக்கூடாது தன் அருகே?

விவசாயிகளின் குடிசைகளை எரித்துச் சாம்பலாக்கிய அந்த நெருப்புச் சுவாலை ஏன்தான் திரும்பவில்லையோ இந்தக் குடிசையின் பக்கம்?

அந்தச் சுவாலையைத் திரட்டிக் கொண்டு வருவதற்குக் காற்றுக்குக் கூட மனம் வர வில்லையே. சாவுக்கான வழிகளெல்லாம் ஒன்று கூடி ஒரு பயங்கரச் சதி செய் கின்றனவோ தனக்கு எதிராக!

ஒ! என் கணவன்! என் உயிருக்கினிய கணவன். எங்கிருக்கிறானோ அவன், எந்தக் காட்டில் இருக்கிறானோ? எங்கே அலைந்து கொண்டிருக்கிறானோ? எவ் வளவு கஷ்டப்படுகிறானோ? எந்த விதமான வேதனையை அனுபவித்துக் கொண் டிருக்கிறானோ?

தானிருக்கும் அந்தப் பயங்கர நிலையிலும் நாகம்மாவுக்குத் தன் கணவனின் வேதனைகளைப் பற்றிய எண்ணம் வந்து அவள் நெஞ்சு கொதிக்கத் தொடங்கியது. அவனுடைய கஷ்டங்களைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் தன் வலி மறைந்து போகத் தொடங்கியது. எட்டு நாட்களாக ரொட்டி இறங்கவில்லை அவள் வயிற்றில். அந்த நிலையிலும் அவளுக்குக் கணவனின் சாப்பாட்டைப் பற்றி நினைவு வந்தது. அவனுக்கு ரொட்டி கிடைக்கிறதோ இல்லையோ என்று நினைத்து அவள் கண்களில் நீர் பொங்கியது.

அன்று இரவு கிராமத்தை விட்டுப் போகும்போது, தன்னை என்றைக்கும் விடாதது போல இறுக அணைத்துக் கன்னத்தில் கன்னமிட்டு தடவிக் கொண்டே கூந்தலை வருடிக் கொண்டே "பயப்படாதே நாகு, இந்தக் கலாட்டாவெல்லாம் முடிஞ் சப்புறம் திரும்பி வரேன். எனக்காக தைரியமாக காத்திரு" என்று நம்பிக்கை ஊட்டிப் பிரிய முடியாமல் பிரியத் தயாராகி நின்ற அவனுடைய அன்பு வடிவம் மறுபடியும் அவள் கண்ணெதிரில் தோன்றியது.

"என்னைக்கு முடியுமோ இந்த போலீஸ் ராஜ்யம்? என்னைக்கு இவுங்க எல்லாம் இங்கிருந்து போவாங்களோ? என்னைக்கு வருவாரோ என் புருஷன்.நான் என்னைக்கு அவரப் பாக்கப்போறனோ. இல்ல, இப்படியே இந்தப் போலீஸ்காரன் இம்சைக்குப் பலியாகி உயிரை விடப்போறனோ? ஐயோ, என் சாமி, எங்கிருக் கிறாயோ நீ? ஒரு தடவையாவது முகத்தைக் காட்டு. உன் அழகு முகத்தைப் பார்த்து உன் தொடை மேல தல வச்சபடி உயிர விட்டுடறன். இந்த மிருகங்களால கெட்டுப் போன இந்தப் பாழும் உடம்பை விட்டுடறேன்" என்று புலம்பினாள் நாகம்மா.

குடிசைக்குப் பக்கத்திலிருந்த மாமரத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு பறவை யொன்று பாடிக் கொண்டிருந்தது கேட்டது. அந்தப் பறவையின் குரல் வடிவில் தன் உயிருக்குயிரான கணவனின் நம்பிக்கையூட்டும் பேச்சைக் கேட்டது போலிருந்தது நாகம்மாவுக்கு. "பயப்படாதே நாகு, வருகிறேன் நான், வந்து உன்னை இந்த நரகத்தி லிருந்து விடுவிக்கிறேன்" என்று அபயம் தந்ததைப் போலத் தோன்றியது.

அந்தக் கற்பனைப் பேச்சிலேயே கொஞ்சம் அமைதி ஏற்பட்டது அவளுக்கு. மூலையில் கிடந்த ரொட்டித் துண்டை எடுத்து வாயில் வைத்துக் கொள்ள முயற்சி

செய்தாள். எத்தனை நாளைக்கு முன்னால் சுட்டதோ அது! உலர்ந்து உலர்ந்து கல்லாகி யிருந்தது. பலமிழந்த அவளுடைய பற்கள் அதைக் கடிக்கவும் முடியவில்லை.

வாயில் வைத்துக் கொண்டதுதான். ரொட்டியைத் தின்னவும் முடியவில்லை. மறு படியும் திடீரென்று அவளுக்குத் தன் கண் மறைவாய்ப் போன கணவனின் நினைவு வந்தது. போலீஸிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்காகத் தலைமறைவாய், சோறு தண்ணீரில்லாமல் காடும் மலையும் அலைந்து கொண்டிருந்தான் அவன். இப்படிப் பட்ட நரக வேதனைக்கு உள்ளானாலும் கூட உலர்ந்த ரொட்டியாவது கிடைக்கிறது தனக்கு. அவனுக்கு? உலர்ந்த ரொட்டிக்கும் வழியிருப்பதற்கில்லை. எப்படியிருக் கிறதோ அவன் நிலைமை?

ரொட்டியைத் தின்பதற்கும் மனம் வரவில்லை அவளுக்கு. அதைத் தரையில் வீசியெறிந்து விட்டு அப்படியே அங்கே சரிந்து விட்டாள். அவள் மனத்தில் ஒரே எண்ணம். கணவன்! கணவன்! தன் கணவன்!

***

அதே நாள் அதே நேரத்தில் அங்கிருந்து இருபது மைல் தொலைவிலிருந்த காட்டில் அவள் கணவனான அந்தத் தலை மறைவாய்ப் போனவன் ஒரு செடியின் நிழலில் அவள் நினைவிலேயே சாய்ந்திருந்தான்.

சுற்றிலும் அடர்த்தியாக வளர்ந்து நின்றிருந்த செடி கொடிகளின் கோட்டையைப் போன்ற இடத்தில் அவன் விழுந்து கிடக்கிறான். எட்டு நாட்களுக்கு முன்பு கிராமத்தை விட்டு வெளியே வந்ததிலிருந்து அங்குமிங்கும் அலைந்து காட்டில் கிடைத்த காய் பழங்களைத் தின்று உயிரைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். இடை விடா அலைச்சல், பட்டினி ஆகியவற்றின் நிழல் அவன் முகத்தைக் கப்பியிருக் கின்றது. குத்துச் சண்டை வீரனைப் போல வலிமையான அவன் உடம்பு ஓய்ந்து தளர்ந்து போயிருக்கிறது. வளர்ந்து நிற்கும் தாடி மீசைகளால் விகாரமாக, களை யிழந்து தோன்றும் முகம். கல்லையும் முள்ளையும் மிதித்து வெடித்துப் புண்ணான கால்கள், கிழிந்து தொங்கிய சட்டை வேஷ்டி, எப்போதும் கூடவே ஒட்டிக் கொண்டிருந்த அந்தச் சந்தேகம் வேறு.

எப்போது, எங்கே, எத்தகைய சூழ்நிலையில் போலீஸார் அவனைச் சுற்றி வளைப்பார்கள் என்பது நிச்சயமில்லை. மக்களின் கண்ணில் படாமல் திரிவதும் மிகவும் சாகசமான வேலையாக இருந்தது. எங்கேயாவது கொஞ்சம் அஜாக்கிரதை யாக இருந்தால் போதும், அவன் சிக்கிக் கொண்டுவிடலாம். அதன் பிறகு தெரிந்தது தானே—விசாரணை..தூக்குத் தண்டனை... தூக்கு.

தூக்கு மரம் ஏறுவதற்குத் தான் ஒன்றும் அஞ்சவில்லை. அது சரிதான்.

ஆனால் தூக்குமரத்தில் தொங்குவதால் பிரயோசனம் என்ன?

எந்தக் காரணத்துக்காகத் தூக்கில் தான் தொங்க வேண்டும்? அந்தத் தண்ட னையை விதிப்பதற்கு இவர்களுக்கு இருக்கும் அதிகாரம்தான் என்ன?

அன்று அவர்கள் கிராமத்தில் சுதந்திர ராஜ்யம் நிறுவப்பட்டது. கிராமத்து மணியக்காரரும் கணக்கரும் ராஜினாமா செய்தது—சுதந்திர ராஜ்யத்தை உடைப் பதற்காக வந்த போலீஸ் அதிகாரிகள்—கிராமத்தைக் காவல் புரிந்து வந்த பையன் களை அவர்கள் அடித்தது. இதனால் கிராமத்து மக்கள் சீறியெழுந்து பெரிய கலவரம் ஏற்பட்டது. இந்தப் போராட்டத்தில் அதிகாரியொருவன் காயம்பட்டு உயிரை

விட்டது, அந்தச் சமயத்தில் வயலில் வேலை செய்து கொண்டிருந்த தான் கலவரத்தைக் கேள்விப்பட்டு அந்த இடத்துக்கு ஓடி வந்தது—அடுத்த நாள் இராணுவத்தினர் வந்து ஊரையெல்லாம் கொள்ளையடிக்கப் போகிறார்கள் என்று செய்தி பரவியது. அன்று இரவே தாங்கள் எல்லாம் கிராமத்தை விட்டுப் புறப்பட்டது... அப்பா! எப்படிப்பட்ட பயங்கர நிகழ்ச்சிகள் அவை!

தன் விருப்பத்திற்கு மாறாகவே அவன் அங்கிருந்து புறப்பட வேண்டியிருந்தது. ஊரின் பெரியவர்கள் வற்புறுத்தினார்கள். "காங்கிரஸ் அபிமானிங்களுக்கு நீயே தலைவன். உன்னைப் போலீஸ்காரங்க விடமாட்டாங்க. ஒரு அதிகாரியின் உயிருக்காக அவர்கள் நம்ம ஆளுங்க இருபது பேரின் உயிர்களையாவது வாங்காம விடமாட்டாங்க. உன்னை அவுங்க விட்டு வைக்க மாட்டாங்க. வீணாக ஏன் தூக்கில் ஏறப் போறே. ஓடு, ஓடு" என்றார்கள். தான் போகவே வேண்டியதாயிற்று.

இப்போது என்ன ஆகியிருக்கிறதோ அந்தக் கிராமத்தின் கதி?

அந்தப் போலீஸ் ராஜ்யம் அதை எப்படிச் சீரழித்திருக்கிறதோ? எத்தனைப் பேரைப் பிடித்திருப்பார்களோ? எத்தனை பேரை இம்சிக்கிறார்களோ?

நான்?

என் பிரியமுள்ள நாகு?

அவளும் சிக்கியிருப்பாளோ என்னவோ அவர்கள் கையில்? சிக்கியிருந்தால்?

அதிகாரியின் சாவுக்கு அவள் ஒன்றும் காரணம் அல்ல. எந்தக் குற்றத்தையும் அவள் செய்தவள் அல்ல. அதுதான் உண்மை. ஆனால் பழிவாங்கும் வெறி பிடித்த அந்தப் போலீஸார் நியாய அநியாயங்களைப் பற்றி நினைத்துப் பார்ப்பார்களா? கையில் சிக்கியவர்களையெல்லாம் அவர்கள் இம்சிக்கலாம். சொல்ல முடியாத முறைகேடுகளையும் செய்யலாம்...நாகுவையும் அவர்கள் பிடித்திருந்தால்?

அந்த நினைப்பிலேயே அவன் நெஞ்சம் கொதித்தது.

கிராமத்தில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி ஒரு செய்தியும் அவனுக்குக் கிட்டுவதாய் இல்லை. மறைந்து கொண்டிருந்த காட்டுப் பகுதியை விட்டு மக்கள் வாழும் இடங்களுக்குப் போனால்தானே செய்தி தெரிய வரும்? முகத்தில் தாடி போதுமான அளவு வளரும் வரையில், வேஷம் போட்டு மறைக்க முடியும் வரையில் காட்டை விட்டு வெளியேறுவது என்பது ஆபத்தான செயல்.

அதுவரையில் சந்தேகம். பயம் என்னும் விகாரமான, சகிக்க முடியாத காற்றில் சிக்கி மனப் போராட்டம் நடத்த வேண்டியிருந்தது.

அன்றைக்கும் அதே போல பயங்கர கவலை.

—தங்கள் கிராமத்தின் கதி?

—மனைவி நாகுவின் கதி?

எதையுமே தெரிந்து கொள்ள முடியவில்லை!

திடீரென்று அவன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அருகில் மெல்லிய குரலில் யாரோ அழைத்தது போல் கேட்டது. சென்ன பசப்பா...என்று. கடைசியில் போலீஸார் தன் செயலைக் கண்டுபிடித்து விட்டார்களோ, தன்னை சுலபமாக வலையில் சிக்க வைப்பதற்கு இப்படி அழைக்கிறார்களோ என்னவோ என்று நினைத்து சென்ன பசப்பா பக்கத்திலிருந்த தடியை எடுத்துக் கொண்டு அவர்களை எதிர்க்கத் தயாராக நின்றான்.

"சென்னா, சென்ன பசப்பா! வழி எங்க இருக்குதுடா?" மறுபடியும் கேட்டது அதே

குரல்! போலீஸாரின் குரல் அல்ல அது. அவனுக்கு நெடுங்காலமாகத் தெரிந்திருந்த கரியப்பாவின் குரல். தங்கள் பக்கத்து வீட்டுக் கிழவன் கரியப்பா. இந்த இடம் வரையில் எப்படி வந்தானோ என்று நினைத்துக் கொண்டே சென்ன பசப்பா மிகுந்த மகிழ்ச்சியோடு முன்னால் நடந்து புதருக்கு அப்பால் நின்று கொண்டு வழி தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்த கிழவனை அழைத்துக் கொண்டு வந்தான். வெயிலில் நடந்து நடந்து மிகவும் களைத்துப் போயிருந்த அந்தக் கிழவன் செடியின் நிழலில் சாய்ந்து கொண்டு மூச்சு வாங்கத் தொடங்கினான்.

"எங்கிருந்து வந்தே கரியண்ணா?" என்று ஆர்வத்தோடு கேட்டான் சென்ன பசப்பா.

"ஊரிலிருந்தே வந்தேன். மூன்று நாலு நாளாய்த் தேடிட்டிருக்கேன். இன்னைக்குத் தான் கிடைச்சே. தம்பி சென்னா, இப்போதே ஊருக்கு கிளம்புடா. எப்படியாவது செய். ஆனால் ஊருக்குப்போ. அங்க நாகம்மா, செத்துட்டிருக்காடா"

சென்னபசப்பாவின் நெஞ்சு தடதடவென்று அடித்துக் கொள்ளத் தொடங்கியது. "என்ன ஆச்சு அவளுக்கு, கரியண்ணா?" என்று கேட்டான்.

"என்ன சொல்லட்டும் தம்பி, உனக்கு! நீங்க எல்லாம் ஓடிப் போய்ட்ட விறகு நாங்கள்—கிழவர்கள், பெண்கள், குழந்தைகள்—அந்தப் பாறையிலேயே பதுங்கி யிருந்தோமல்லவா? அங்கயே போலீஸ்காரங்க வந்துட்டாங்க. எங்கள எல்லாம் பிடிச் சிட்டாங்க. அடிச்சாங்க. எல்லார் வீடுகளிலும் கொள்ளையடிச்சாங்க. நாகம்மாவும் சிக்கியிருக்கிறா அவுங்க கையில. என்ன சொல்லட்டும் சென்ன பசப்பா. அவளை அடித்துப்புடைத்துப் பிணமாக்கியிருக்கிறாங்களாம் அந்தப் பிசாசுகள். இப்போ அவளைக் காபபாற்றுவது உன்னைத் தவிர வேறு யாராலும் முடியாது. அதுக்காகத் தான் உன்னைத் தேடிட்டு வந்தேன் நான். அந்தப் போலீஸார் கையில் இருந்து எப்படியோ தப்பித்துக் கொண்டு வந்தேன். சென்னா, நாகம்மாவின் கதியை நினைச்சா என் குடலைப் பிழியற மாதிரி இருக்குது. இப்போதே போ நீ, ஒரு வினாடியும் தாமதிக்காதே..."

"அவ என்ன செஞ்சா அந்தப் போலீஸ்காரங்களுக்கு? ஏன் இம்சிக்கிறாங்க அவுங்க" என்று கேட்டான், சென்ன பசப்பா, கலவரம் நிறைந்த, வருத்தம் தோய்ந்த குரலில்.

"ஏன், என்று எப்படிச் சொல்வதப்பா? யார் கேட்பாங்க அவுங்களை?" ஊரில் எல்லாம் அவுங்க வச்சதுதான் சட்டம். நியாயம் நீதி என்பதையெல்லாம் காற்றிலே பறக்கவிட்டுட்டாங்க. உன் மேல அவுங்களுக்கு ஒரு கண் இருந்தது. நீ தப்பி ஓடி விட்டாய் என்பது தெரிந்ததும் அவுங்க வயிற்றில் நெருப்பு. அதற்காகத்தான் நீ இருக்கிற இடத்த சொல்லச்சொல்லி உன் மனைவியைப் பிடித்து அடித்து உதைத்து இம்சிக்கிறாங்க. நீ இங்க இருப்பது அந்த அம்மாவுக்குத்தான் எப்படித் தெரியும்? தெரிஞ்சிருந்தாலும் அந்த அம்மா அவுங்ககிட்ட எப்படி சொல்லுவாங்க? உயிர் போனாலும் சொல்லமாட்டாங்க. இப்போ அவளை அந்தச் சைத்தான்களிட மிருந்து காப்பாத்தனுமின்னா நீயே போகணும். போப்பா, வேகமாய்ப்போ..."

இரண்டொரு கணநேரம் தன் உடம்பில் எல்லா உறுப்புகளும் செயலற்று நின்றுவிட்டதைப் போல இருந்தது சென்ன பசப்பாவுக்கு. தன் அன்பு மனைவிக்கு ஏற்பட்ட இந்தக் கோரமான நிகழ்ச்சியை அறிந்து அவனுடைய நாடி நரம்புகளின் செயலே நின்று விட்டது போலிருந்தது.

தான் தலைமறைவாய்த் தப்பித்துக் கொண்டிருப்பதினாலேயே இந்த நிலை ஏற்பட்டது அவளுக்கு. தனக்காகவே போலீசார் அவளை இம்சிக்கிறார்கள். இப்படி அவளைச் சாக விட்டுத் தான் இங்கே தலைமறைாய் இருப்பதனால் என்ன பயன்? நாடெல்லாம் பரவியிருக்கும் அரசாங்க ஒற்றர்களின் வலையில் சிக்கி இன்று இல்லாவிட்டால் நாளையாவது தான் தூக்கில் தொங்குவது நிச்சயம்...இப்படியிருக்கும்போது இன்று என்ன நாளை என்ன...என்றைக்கிருந்தாலும் தன் உயிர் போவதுதான்! தன் உயிர் ஒன்று போனாலும் போகட்டும். தன் அன்பு மனைவியின் உயிராவது மிஞ்சட்டும். மிஞ்சவே வேண்டும். அதைக் காப்பாற்றியாக வேண்டும். அதைக் காப்பாற்றுவது தன் கையிலிருக்கிறது. ஆம் தன் கையிலேயே இருக்கிறது.

அவன் மனம் மௌனமாகவே முடிவு செய்தது. அதனால் அவனது நெஞ்சின் சுமை பாதி குறைந்தது போலாயிற்று.

கிழவன் சொல்லிக் கொண்டேயிருந்தான்.

"ஒரு விநாடியும் தாமதிக்காதே சென்னப்பா. இப்போதே இப்படியே புறப்படு. அவளைச் சாகடிச்சிட்டிருக்கானுங்க. அந்த ராட்சசனுங்க. போ. இப்போதே புறப்படு. அவளைக் காப்பாத்து."

"போறேன் கரியண்ணா. ஆனா இங்க உன் கதி என்ன? வயசான ஆளு நீ. காட்டில அலஞ்சி அலஞ்சி களச்சிப்போய் வந்திருக்கே. வயிற்றுக்கு என்ன செய்வே?"

அந்தக் களைப்பிலும் அமைதியாகச் சிரித்துக் கொண்டே கிழ விவசாயி சொன்னான்: "என் கவலை எதற்கப்பா உனக்கு. நான் எல்லாம் பார்த்துக்கறேன். இங்க எங்கயாவது பழம் கிழம் கிடைக்கும். சாப்பிட்டுக் காலங்கழிக்கிறேன். இங்கே பக்கத்துல இருக்கிற கிராமத்தில் எனக்குத் தெரிஞ்சவங்க வீடு ஒன்னு இருக்குது. எங்க போறேன். என் கவலையை விட்டுட்டு நீ இப்போதே புறப்படு."

தடியைக் கையில் எடுத்துக் கொண்டு புறப்படத் தயாரானான் சென்ன பசப்பா.

"எங்கே வச்சிருக்கானுங்க நாகுவை? உனக்குத் தெரியுமா?"

"ஊருக்கு வெளிய நாட்டாண்மைக்காரரின் தோட்டத்துக் குடிசையில வச்சிருக்காங்களாம். பூட்டி வச்சிருக்காங்களாம். கிணற்றுக்குப் பக்கத்துல அவுங்க கூடாரம் போட்டுத் தங்கியிருக்காங்க. உஷாராப் போ. அவளை விடுவித்துக் கொண்டு வா"

"உன் வேண்டுகோள் பலிக்கட்டும் தாத்தா" என்று மனத் துக்குள்ளேயே சொல்லிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான். அவன் உருவம் செடிகளின் இடையில் மறையும் வரை கிழவன் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பிறகு நிம்மதியாக மூச்சுவிட்டுத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்: "கடவுளே, என் வேலையை நான் செய்தேன். இனி அவன் வேலையை அவன் செய்யட்டும். அவுங்க ரெண்டு பேரும் அந்த நரகத்திலிருந்து தப்பிக்கட்டும். அவ்வளவு செய்து கொடு. என் அப்பனே, உனக்கு நாலு காய் உடைக்கிறேன்."

***

காட்டுப் பகுதியைப் பின்னுக்கு தள்ளி ஒற்றையடிப் பாதைகளில் நடந்து சென்ன பசப்பா ஊரருகே வந்தபோது நள்ளிரவாகியிருந்தது.

வானில் மின்னிக் கொண்டிருந்த நட்சத்திரங்களின் ஒளியில் நாட்டாண்மைக் காரரின் தோட்டம் மங்கலாகத் தெரிந்தது. தோட்டத்துச் செடி ஒன்றின் மறைவில்

நின்று கொண்டு சென்ன பசப்பா இரண்டு நிமிஷம் சுற்றும்முற்றும் பார்வையை ஓடவிட்டான். மொட்டைக் கிணற்றின் அருகிலேயே கூடாரம் போட்டிருந்தார்கள். அவற்றுக்கு இருபது 'மார்' தொலைவில் குடிசை. அதிலேயே தன் நாகுவைச் சிறை வைத்திருக்கலாம் என்று அவனுக்குப் புரிவதற்கு நீண்ட நேரம் தேவைப்படவில்லை.

அந்தக் குடிசையின் எதிரில் கொஞ்ச தூரத்தில் போலீஸ் சிப்பாய் ஒருவன் துப்பாக்கியைக் கையில் பிடித்தபடியே அரைத் தூக்கத்தில் மூழ்கியிருந்தது தெரிந்தது.

கூடாரங்களிலிருந்த போலீஸாரெல்லாம் தூக்கத்தின் ஆட்சியில் இருந்தார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. எங்கேயும் எந்த விதமான சலனமும் தெரியவரவில்லை.

செடியின் மறைவில் ஒளிந்தபடியே சென்னபசப்பா இதை யெல்லாம் பார்த்தான். சிறிது நேரம் யோசனை செய்து ஏதேதோ கணக்குப் போட்டான். பிறகு ஜாக்கிர தையாக அடியிட்டு, காவல் போலீஸ் படுத்திருந்த இடத்துக்கு வந்தான். தூங்கிக் கொண்டிருந்த அவன் உருவத்தையே சிறிது நேரம் உற்றுப் பார்த்து அவன் உண்மை யிலேயே தூங்குகிறானா இல்லையா என்பதை ஆராய்ந்தான். தூக்கத்திலிருப்பது உண்மை என்பது மனத்தில் பட்டவுடன் அவன் பக்கத்தில் உட்கார்ந்து அவன் கையிலிருந்து துப்பாக்கியை விடுவித்துத் தன் கையில் ஏந்திக் கொண்டான். அகலமாய் வாயைத் திறந்து கொண்டு நீண்ட மூச்சு விட்டபடி படுத்திருந்த அவன் வாயில் பக்கத்திலிருந்த புல்லைத் திணித்தான். பிறகு குழந்தையைத் தூக்குவது போல அவனைத் தூக்கிப் பக்கத்திலிருந்த மாமரத்தில் சாய்த்து வைத்து, அவன் தலையில் கட்டியிருந்த தொப்பித் துணியை அவிழ்த்து அதனாலேயே அவனை அந்த மரத் தோடு சேர்த்து இறுகப் பிணைத்தான். விழிப்பு வருவதற்குள்ளேயே அந்தப் போலீஸ்காரன் முழுவதும் கட்டப்பட்டிருந்தான். அவன் வாயைத் திறந்து கத்துவதோ அல்லது கைகால்களை அசைப்பதோ முடியாத செயலாய் இருந்தது.

அவனுடைய கோட்டில் பைகளிலெல்லாம் சென்ன பசப்பா தேடி அங்கிருந்த குண்டுகளையெல்லாம் எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டான். அந்தக் குடிசையின் சாவியும் அவன் பையிலிருந்தது. அதையும் எடுத்துக் கொண்டான். என்ன அதிர்ஷ்டமோ ஒரு தீப்பெட்டியும் கிடைத்தது. அதையும் எடுத்துக் கொண்டான். பிறகு துப்பாக்கியை இடது கையில் பிடித்துக் கொண்டு, ஓசை எழாதவாறு நடந்து குடிசைக்கு வந்தான்.

பூட்டைத் திறந்து கதவைத் தள்ளி உள்ளே வந்து துப்பாக்கியை ஒரு மூலையில் வைத்து கதவை ஜாக்கிரதையாக மூடினான். தீக்குச்சி ஒன்றைக் கிழித்து அந்த வெளிச்சத்தில் குடிசை முழுவதும் பார்வையிட்டான்.

புதைக்கப்படுவதற்குத் தயாராக இருந்த அவன் மனைவியின் நிர்வாண உடம்பை மங்கலாகக் காட்டியது அந்தக் குறைந்த ஒளி. பல இடங்களிலும் ஏற்பட்ட காயங் களாலும் கட்டிப் போன ரத்தத்தினாலும் அங்கங்கே ஏற்பட்ட வீக்கங்களாலும் புண்களாலும் பயங்கரமாகத் தோற்றமளித்தது அந்த உடம்பு! அது தன் அன்பு மனைவியினுடையது! திருமணமான எட்டு ஆண்டுகளாகத் தான் மிகவும் அக்கறை யோடு காப்பாற்றி வளர்த்த தன் உயிரான மனைவி நாகுவினுடையது.

அவன் உடம்பெல்லாம் நடுங்கத் தொடங்கியது. எப்படிப்பட்ட, மனம் குலைய வைக்கும் காட்சி அது! அவள் அருகில் உட்கார்ந்து கொண்டு சென்ன பசப்பா அவள்

கன்னங்களை உரிமையோடு வருடிக் கொண்டே மெல்லிய குரலில் அழைத்தான்: "நாகு, என் நாகு..." பிணத்தைப் போலச் சலனமற்றுக் கிடந்த அந்த அதிர்ஷ்டங் கெட்டவளுக்கு விழிப்பு ஏற்பட்டது. நெடுங்காலமாக அறிந்திருந்த அந்தக் குரலை அவள் அப்போதே அடையாளம் கண்டு கொண்டாள். மிகுந்த கஷ்டத்தோடு கண்ணைத் திறந்து கணவனின் முகத்தை ஒரு தடவை உற்றுப் பார்த்தாள். அவன் ஒவ்வொரு குச்சியாகக் கொளுத்தி வெளிச்சம் உண்டாக்கினான்.

"வந்துட்டீங்களா! என்று மிகவும் பலவீனமான குரலில் கேட்டாள் அவள்.

"ஐயோ, என் நாகு, என்ன கதியாக்கி விட்டாங்க உன்னை" என்று அழும் குரலில் கூறியபடியே சென்ன பசப்பா அவளைத் தூக்கித் தன் தொடை மீது படுக்க வைத்தான். ஒரு கணம் கணவனின் தொடைமேல் படுத்து நாகம்மா நிம்மதியாக மூச்சு விட்டாள். பிறகு மெலிந்த குரலில் சொன்னாள்: "நீங்கள் என்றைக்கு வருவீர் களோன்னு காத்திருந்தேன். உங்க தொடை மேல படுத்து இந்த உயிரை விடணும்னு உயிரைப் பிடிச்சி வச்சிருந்தேன். எப்படியோ வந்துட்டிங்க நீங்க... இனிமேல் சந்தோஷமா உயிர விடுவேன்...ஆனா...ஆனா..."

"ஆனா என்ன, என் தங்கமே..."என்று சென்ன பசப்பா பைத்தியக்காரனைப் போல அவளை முத்தமிட்டான்.

"ஆனால்...ஆனால்... நீங்க இங்க வந்திருக்கக் கூடாது. இனி இந்தப் பிசாசுகள் உங்கள விட மாட்டாங்க. உங்களைப் பிடிக்கணும்னு காத்துகிட்டிருக்காங்க. உங்கள விட மாட்டாங்க அவுங்க...விட் மாட்டாங்க...தூக்கில் போடுறவரை விட மாட் டாங்க... ஐயோ, எனக்காக நீங்க வந்தீங்களா? அவுங்க கையில் எனக்காக நீங்க அகப்பட்டுக்கறீங்களே..." என்ற சொல்லிக் கொண்டே அவள் ஏதோ ஒரு வேகத்தில் எழுந்து உட்காரத் தொடங்கினாள்.

"நீங்க இங்க இருக்காதீங்க. ஒரு விநாடி கூட இருக்காதீங்க. அவுங்க கையில் மாட்டாதீங்க. இதுவே என் ஆசை..."என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவள் உடம்பு 'டக்'கென்று கீழே சாய்ந்தது.

அவள் உடலை நெஞ்சின் மீது சாய்த்துக் கொண்டு சென்ன பசப்பா பைத்தியக் காரனைப் போலப் பேசத் தொடங்கினான். "அகப்பட மாட்டேன், பார், நாகு! நான் போலீஸ் கையில் மாட்ட மாட்டேன். உனக்கு ஏன் என் கவலை? அவுங்க கையில சிக்கிக்கிறதுக்காக வரலை நான். அவுங்களிடமிருந்து உன்ன விடுவித்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கேன். எழுந்திரு, என் கண்ணே, ஒரு நிமிஷம் கூட இங்க இருக்க வேணாம். இந்த நரகத்திலிருந்து உன்னை அழைத்துக் கொண்டு போறேன். எழுந்திரு..."

எட்டு நாட்களாக நடந்த சித்திரவதையிலும் கூட எப்படியோ அந்த உடம்பில் ஒட்டிக் கொண்டிருந்த அவளுடைய உயிர், கணவனைக் கடைசியாகப் பார்த்ததும் அமைதியோடு பறந்து விட்டிருந்தது.

குளிர்ந்து கொண்டே வந்த மனைவியின் உடலைப் பிடித்துக் கொண்டு கண நேரம் திகைப்புடன் உட்கார்ந்திருந்தான் சென்ன பசப்பா. அவனுடைய வாழ்வின் ஆசைகள், லட்சியங்கள் எல்லாமே அவளோடேயே செத்துப் போய் அந்தச் சவத்தில் ஒடுங்கியதைப் போலிருந்தது. சம்சாரம் என்னும் வலையில் அவனைக் கட்டியிருந்த ஒரே ஒரு மாயக் கயிறும் இப்போது அறுந்து போய்விட்டது.

'இனி அவன் தனி ஆள்!

இனி அவனுக்குக் கடிவாளம் இல்லை!

இனி அவனைத் தடுக்கக் கூடிய சக்தி எதுவும் இல்லை உலகத்தில். ஒரே ஒரு நோக்கத்தோடு இனி அவன் போராடுவான். துணைவியை இழந்த பெரும் புலி பழிவெறியோடு உறுமுவதைப்போல அவன் கர்ச்சிப்பான். தன் அன்பு மனைவியை இப்படிப் பழிவாங்கிய அந்தப் பேய்த்தனமான போலீஸ் ஆட்சியை எதிர்த்து அவன் கடைசி வரையில் போராடுவான்.'

சுடுகாட்டில் விறகுக் குவியலின் மீது பிணத்தைக் கிடத்துவதைப்போல, குடிசையில் இருந்த புல்லின் மீது மனைவியின் உடலைக் கிடத்தினான் சென்ன பசப்பா. அதைச் சுமந்து கொண்டு போய் மண்ணில் புதைப்பதற்கும் அவனுக்கு விருப்பமில்ல. இங்கேயே எரிந்து சாம்பலாகட்டும்-போலீஸார் கைக்குப் பிணமும் கிடைக்காதிருக்கட்டும் என்று நினைத்துக் குடிசையின் சுவர்களின் மீதிருந்த புல்லை இழுத்துக் குவித்துப் பிணத்தின் மேலிட்டான். எல்லாம் தயாரானதும் தீக்குச்சியைக் கொளுத்தித் தீ வைத்தான். குடிசையின் சுவர்களுக்கும் நெருப்பிட்டான். சிறிது நேரம் இருந்த இடத்திலேயே நின்று சுவாலையை உமிழ்ந்து புறப்பட்ட நெருப்பைச் சூன்யமாகப் பார்த்து, பிறகு துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வெளியில் இருட்டில் குதித்து அரைக் கணத்தில் மாயமானான்.

குடிசை தீப்பிடித்து, தகதகவென்று எரியும்போது கூடாரங்களில் படுத்திருந்த போலீஸார் விழித்தெழுந்தார்கள். ஏதோ விபரீதம் நடந்துவிட்டது என்று தெரிந்ததும் அவர்கள் பயந்து எழுந்து துப்பாக்கிகளை எடுத்துக் கொண்டு சுட்டுக் கொண்டே ஓடிவந்தார்கள்.

நாகம்மாவை விடுவித்துக் கொண்டு குடிசைக்குத் தீ வைத்து விட்டுக் கிராமத்துக்கு ஓடியிருப்பதாகவே அவர்கள் நினைத்தார்கள். மரத்தில் கட்டப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்த காவல்காரச் சிப்பாயை மறந்து அவர்கள் எல்லாத்திசைகளிலும் தோட்டாக்களைச் சிதறியபடியே பைத்தியம் பிடித்தவர்களைப் போல ஓடத் தொடங்கினார்கள். இடுப்பில் இருந்த தோட்டாக்களைத் துப்பாக்கியில் நிரப்பித் தயாராக வைத்துக் கொண்டு சென்ன பசப்பா இருட்டுத் திரையின் மறைவில் மாயமானான். யார் தேடினாலும் இனி அவன் சிக்க மாட்டான். கடைசிவரை அவன் தலைமறைவான ஆள்தான்.

போலீஸார் மற்றும் ஒற்றர்களின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு, பட்டி தொட்டிகளில் சுற்றியபடி அவன் அலைந்து திரிவான். மக்களைப் போராட்டத்துக்குத் தயார்ப்படுத்துவான். தன் கிராமத்தைச் சோதனைபோட்டு வேட்டையாடிக் கொள்ளை யடித்த, தன் அன்பு மனைவியையும் அவளைப் போன்ற நூற்றுக் கணக்கான அபலைகளையும் சித்திரவதை செய்து கொன்ற பாதகர்களை அவன் அழிப்பான். முடிவில்லை அவனுடைய தலை மறைவுக்கு; முடிவில்லை அவனுடைய போராட்டத்துக்கு. அடக்கு முறை ஆட்சி தோற்றுப் போய் அழிகிற வரையில் அது தொடரும்; சுதந்திரம் வரும் வரையில் தொடரும்.

சென்ன பசப்பா என்னும் ஒரு தனி மனிதனின் முடிவு மட்டுமல்ல அது. பாரதம் முழுவதன் முடிவு. எப்படிப்பட்ட சங்கடத்திலும் உயிரோடு இருக்கும் ஆண்மை மிகுந்த பாரதத்தின் முடிவு!

# 0–0 = 0

## த.ரா.சு

எத்தனையோ தடவை இப்படி ஆகிறது.

பார்த்தது தெரிவதில்லை...கண் பார்த்தது மனத்தில் பதிவதில்லை..தெரிந்தும் தெரியாத... தெளிவும் தெளிவின்மையும்...தர்க்கத்துக்கு உட்பட்டே உட்படாம லிருப்பது... அந்தக் கிணறு அப்படித்தான்.

சாலையின் பக்கத்து மைதானத்தில் தினந்தோறும் அவன் நடமாடும் வழியில் இருந்தது. இருந்தும் பார்த்ததில்லை, அதிர்ஷ்டத்தைப் போல...தெளிவாகத் தெரிந் தாலும் கண்ணில்படாத கிணறு...முதல் தடவை பார்த்தபோது அந்தப் பெயரை வைத் தான்...முதலில் பார்த்தபோது எவ்வளவு சிரிப்பு வந்தது...திடீரென்று ஒரு நாள் கிணறு அவனைத் தன்னிடம் அழைத்தது...

* * *

மாலை. இருள் மயக்கம்...நரை மூடிய கண்ணைப் போல பகல்...திரும்பி வருகிற அந்த வழியில்...மைதானத்தில் பத்துப் பன்னிரெண்டு பேர் கூடியிருக்கிறார்கள். கூச்சல் போடு கிறார்கள், ஏனோ...? உற்றுப் பார்த்தான்...??? ஆர்வம் மீதூரப் போனான்...கிணறு கண்ணில்பட்டது-கண்ணில் படாத கிணறு.

என்றைக்கோ வாடிக்கை தப்பிப் பயன்படுத்துகிறவர்கள் இல்லாமல், பயன் படுத்தவும் முடியாமல் சுற்றுச் சுவர் மடிந்து போன கிணறு...மரணக் கிணறு... சுற்றிலும் புல்மேயும் பசுக்களுக்குத் தண்ணீர் கொடுத்து...தரை மட்டத்தில் தண்ணீர். பாசி நிரம்பி, கருப்பாக, குளிர்ச்சியாக மங்கலாகத் தெரிகிற தண்ணீர்.

குனிந்து தண்ணீர் குடிப்பதற்காகத் தலையைத் தாழ்த்திய கன்று வழுக்கி நீரில் விழுந்து விட்டது. தாய்ப் பசு தண்ணீரில் சிக்கிய கன்றைக் கண்டு பைத்தியம் பிடித்ததைப் போலச் சுற்றுகிறது. கத்திக் கொண்டே கண்ணை விரித்துப் பார்த்துக் கொண்டே வாலை மேலே தூக்கி...தண்ணீரின் கரைவரையில் பாய்கிறது. தன் னுடைய கன்றுக்குட்டி, பயந்து மெதுவாகப் பின் வாங்குகிறது-தன் உயிர்... "எல்லா உயிரும் தன்னைக் காத்துக் கொள்ள விரும்புகிறது"... (ஜீவன் பத்ராணி பச்யதி)

கருப்பாக குளிர்ச்சியாக இருக்கும் நீரில் சிக்கிய உயிர்; பயங்கரம்; கன்றுக்குட்டி குளிர்ந்து போன...கண் பார்க்கிறது...காலம் நகராமல், நடுங்கிக் கொண்டே நிற்கிறது நீர்க்கரையில். இருள் கவிந்து கொண்டு வருகிறது.

கடைசியில் கன்றுக் குட்டி நீரிலிருந்து வெளியே வந்தது.. தாய்ப்பசு, தரையில் உருண்டு துள்ளிக் குதிக்கிற, தண்ணீரை உதிர்க்கிற, நடுங்கிக் கொண்டிருக்கிற கன்றுக்குட்டியின் அருகில் சட்டென்று பாய்ந்தோடி முகர்ந்து பார்த்து நாவால் நக்கத் தொடங்கியது...சாவு தன் இரையை விட்டுக் கொடுத்து விட்டது.

அவன் உடம்பு நடுங்கி ஆத்திரம் பொங்கி எழுந்தது...கோபம்...எல்லார் மேலும். முட்டாள்கள்...ஏன் இப்படி விட்டு வைத்தார்கள். இந்தக் கிணற்றை முனிசி பாலிட்டிக்காரர்களிடம் சொல்லி மூடியிருக்கக் கூடாதா...கொலை பாதகர்கள்... என்னவோ...யாருக்கும் ஆபத்தில்லை...நெஞ்சில் மரணத்தை வைத்துக் கொண்டு... குளிர்ச்சியாக, கருப்பாக மங்கலாகத் தெரிகிற சாவு...சாவே வரவேண்டியிருந்தது கண்ணைத் திறக்க...குளிர்ந்த கை கண்ணைத் திறக்க வேண்டியிருந்தது...யாராவது சாக வேண்டியிருந்தது.

யாராவது சாக வேண்டும்...மனிதனின் கண்ணைத் திறக்க மனிதன் சாக வேண்டும்...துப்பாக்கியால் சுட்டோ, சிலுவையின் மேலோ, நஞ்சு குடித்தோ, தண் ணீரிலோ... மனிதனின் கண்ணைத் திறக்க மனிதன் சாக வேண்டும்...மனிதனின் கண்...இரக்கம், உதவி எல்லாம் செத்துச் சுயநலம் ஒளிவிடுகின்ற கேவலமான கண். இதைத் திறக்கச் சாக வேண்டும்.

குளிர்ச்சியாய் இருக்கின்ற நீரின் கரையில் நடுங்கிக் கொண்டே நின்ற எமன்... உயிர்...எமன் உயிர் வடிவம்...தெரிந்தும் தெரியாமலும்.

* * *

மைதானத்தில் கிணறு...மனத்தில் கிணறு...அச்சம்... கவர்ச்சி...அச்சம் கவர்ச்சி வாழ்க்கை.

பயந்தவனாக...கவர்ச்சி நிரம்பிய வகையில் வாழ்ந்தான்...குளிர்ந்த நீர்க்கரையில். வாழ்ந்து கொண்டிருந்தான், தினமும் போராட்டத்துக்கும் போய்க் கொண்டிருந் தான். .வந்து கொண்டிருந்தான். பூவை விருமபி, முள்ளை முறித்தது...தினமும் போய் வந்து கொண்டிருந்தான்...தினமும் கிணற்றைச் சந்தித்தான்...

சில நேரங்களில் குரூரம்...தேங்கிய நீர் குளிர்ச்சியாக மங்கலான பச்சை நீல நிறத்தில் மின்னியது...நிராசை நிரம்பிய சிரிப்பு...சில நேரங்களில் பல வண்ணங் களை மின்னலிடும் நீர்ப்பரப்பு...குரூபத்தில் அழகு ..குரூபத்தை அழகாக்கும் சௌந் தர்யம்...தன் விருப்பத்தைப் போல...எல்லார் விருப்பத்தையும் போல...வாழ்ந்து கொண்டிருந்தான், தினமும் போராட்டத்துக்குப்போய்க் கொண்டிருந்தான்... குரூபத்தை அழகாக்கும் சௌந்தர்யம் ..அவன் விருப்பம்...வழியில் கிணறு...

* * *

காதல் கோயில் அன்பு விக்கிரகம், மனிதன் பூஜாரி-பெண் குறியீடு...காதலே அழகு. வாழ்ந்து கொண்டிருந்தான், தினமும் தன் போராட்டத்துக்குப் போய்க் கொண்டிருந்தான்...போராட்டம்...வாழ்க்கையைக் கவிந்திருந்த இருளில் அழகின் சுடரை அணையாமல் காக்க...பயந்து கவலைப்பட்டு...'வா'...போ'...போய்க் கொண் டிருந்தான், வந்து கொண்டிருந்தான்...வழியில் கிணறு...மனத்தில் கிணறு. போய்க் கொண்டிருந்தான், வந்து கொண்டிருந்தான். இரட்டைத் தண்டவாளத்தின் மேலே சீறி வருகிறது இரயில்...இரக்கமின்மை உண்மை...அமைதி, காதல், திருப்தி என்னும் நிலையத்துக்கு... சக்சக்சக்சக்... ஆசை... நிராசை...வெறுப்பு... கவர்ச்சி...இரக்கம் இன்மை...உண்மையின் இணைத் தண்டவாளம்...

வாழ்ந்தான், அன்பு காட்டினான், அன்பு காட்டியவரிடமிருந்து அன்பு பெறு வதற்கு அன்பு காட்டினான்...நிற்குமிடம்...விருப்பத்துக்கு விருப்பமே பிரதிபலன்... தியாகம்...காதலுக்குக் கண்ணீரே உணவு...இன்பத்துக்குத் துன்பமே விலை.

வாழ்ந்தான், அன்பு காட்டினான், அன்பு காட்டியவரிடமிருந்து அன்பைப் பெறுவதற்காக வாழ்ந்தான்.

* * *

எல்லாரையும் போலே அவன் கும்பலில் கோவிந்தா...ஆசையே வாழ்வின் உயிர். சமுதாயத்தின் பாதியமைப்பு, தன்னுடையதான சக்கரத்தில் சிக்கிச் சுழன்றான்... சுழலும் சக்கரம்...வேகமாக, உக்கிரமாக, வெறியோடு சுற்றுகின்ற சக்கரம்...சக்கரத் தினுள் சக்கரம்.

"ஆசையில் விளைவது பெருந்துன்பம்"..."நம்பினோர் கெடுவதில்லை"..."கேள் இல்லையென்பதில்லை..".எதையும் இல்லையென்பதில்லை...என்ன கொடுப்பாயோ.. .என்ன...என்ன... கண் ணில்லாத, பொருளில்லாத என்ன உயிரற்ற வாழ்க்கை...புதிய வாழ்க்கையின் சீற்றம்...வாதத்துக்கு ஒவ்வாத இம்சைப் படுத்தும் சீற்றம்... அன்பு செய்தவர்களின் அன்பே வாழ்க்கை...வாழ்க்கை என்னும் முயற்சியின் பொருள்... "சொல்லாதே, போராடிப் பயனில்லை என்று".

"நீந்த வேண்டும், இருந்து வெல்ல வேண்டும்"..."முயற்சி பலன் தரும்"...பழமொழி களின் பேச்சு வேதத்தின் பேச்சு!...! இறந்த காலத்தைத் தோற்றுவிக்கும் நிகழ்காலம். ..எல்லையற்ற இறந்த காலத்தைத் தோற்றுவிக்கும் எல்லையற்ற நிகழ்காலம்...வாழ்ந்து கொண்டிருந்தான்...ஆசை கொண்ட மிருகம்...உணவு, தூக்கம், பயம், கலவி...ஆசை கொண்ட மிருகம்...பெயர் புகழ்...சாலையோரத்தில் வேலிப்பூ...அசிங்கத்தை அலங் காரப்படுத்தும் அழகு...

சில சமயங்களில், புழங்காத, புழங்க முடியாத பாசி நிரம்பிய நீரின் மேல் பல நிறங் களில் மேகக் குஞ்சுகள்.

* * *

குளிர்ச்சியாக விளங்கும் மங்கல் நீர்..."பகலை ஒதுக்கி மாலை வருகிறது"... ஒளி விடும் சிரிக்கிற கண்கள்...பனி மூடியிருக்கிறது...இருள் இருளான இருளைப் பெற்றெ டுக்கும் இருள்...

பச்சை உண்மையெனும் இரட்டைத் தண்டவாளத்தின் மேல் பாய்ந்து வரும் இரயில்...நிற்குமிடம்...பயன் இன்மை...

மைதானத்தில் கிணறு...

..."கடவுள் இருக்கிறார் சொர்க்கத்தில், எல்லாம் நலமே பூமியில்"..."என்னையே சரண் என்று கொள்!!...?...!"

மைதானத்தில் கிணறு புழங்காமல், புழங்கவும் முடியாமல்...தெரிந்தும் தெரியா மலும்...மரணத்தின் வாய்..."ஏன் இந்தக் கிணற்றை இப்படி விட்டு வைத்திருக் கிறீர்கள்...மூடி வைக்காதது ஏன்...கொலை பாதகர்கள்...மடியிலேயே மரணத்தை வைத்துக் கொண்டு...

"சாவு வரவேண்டியிருந்தது கண்ணைத் திறக்க...மனிதன் கணணைத் திறக்க மனிதன் சாக வேண்டும்...

"மனிதன்" சாக வேண்டும்...யார்?

"சாவு யாரை அழைக்கிறது என்று கேளாதிரு; உன்னையே அழைக்கிறது"...

வெதுவெதுப்பாக இருக்கிறது தண்ணீர்...அன்பு நிரம்பிய கண்ணின் பார்வையைவிட வெதுவெதுப்பாக இருக்கிறது தண்ணீர்...

'விதியின் துணையைப் பெற்ற மன்மதனின் மாயை சாதாரண மனிதனைக் கொன்று ஆரவாரிக்கிறது'... தண்ணீர்... சாக வேண்டும்; கண்ணைத் திறக்க வைக்க வேண்டும்...

* * *

வெளி வெளியைக் கூடி வெளியாகியது.

# கடைசி கிராக்கி

நிரஞ்சன

அந்த சர்க்கிளுக்கு அப்பால் யாரும்போக விரும்புவதில்லை. கட்டிடங்கள் அடைத்துக் கொள்ளாத விரிந்த பூமியின் மேலிருந்து வீசிய குளிர்ந்த காற்று துர் நாற்றத்தைச் சுமந்து கொண்டு வந்தது.மக்கள் குசுகுசுவென்று பேசிக் கொண் டிருந்தார்கள். அதெல்லாம் தெளிவில்லாத கவைரம்.

சூரியன் மேலே ஏறஏறச் சூடு ஏறத் தொடங்கியது. சர்க்கிளைக் கடந்து போயே தீர வேண்டியவர்கள், அச்சத்தோடு ஒரு தடவை இடப்பக்கம் கண்ணைத் திருப்பி மறுபடியும் தலை குனிந்து சரசரவென்று நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். எல்லாரும் போய்க் கொண்டேயிருந்தார்கள். நிற்பவர்கள் யாருமில்லை...மெதுவாக நகரசபைக்குச் செய்தி போயிற்று.

* * *

ஒரு நாள் காலை காணி எழுந்து பார்த்தாள். ராத்திரி பக்கத்தில் கூட படுத் திருந்தவன் இல்லை. பதினாறு வயதான அந்தப் பெண் பத்து நாட்களுக்கு முன்னால் அவன் பின்னாலேயே தலைநகருக்கு ஒடிவந்திருந்தாள் தமிழ்நாட்டின் ஓர் ஊரி லிருந்து பிச்சை எடுக்கும் ஏழை அவன். ஒரு கை நொண்டி. ஆனால் ஒரு ராத்திரி, மற்றொரு தோளினால் அவளை வளைத்து இழுத்தான். நடுங்குகிற நெஞ்சோடு அவள் அவனைப் பார்த்தாள்; அந்த வலுவான தோளைப் பார்த்தாள். இரண்டு கைகளின் சக்தி இருந்தது அதற்கு.

அங்கிருந்து அன்று இரவே அவர்கள் ஒடிப் போனார்கள். அவளுக்குச் சொந்தமாக சிறிய குடிசை இருந்தது. வாரத்துக்குப் பயிரிட்ட நிலமொன்றும் அவள் பெற்றோருக்கிருந்தது. ஆனால் அந்த வருஷம்தான் எல்லாமே போய்விட்டன. தேச பக்தனான அந்தப் பெரிய ஜமீன்தார் அதிகமான பங்கு கேட்டான். கொடுக்கா விட்டால் புதிய வாரக்காரனைப் பார்த்துக் கொள்வதாகச் சொன்னான். அப்படியே நடந்தது. காணியின் பெற்றோர்கள் நிலத்தை இழந்தார்கள். சட்டி பானைகளோடு குடி பெயர்ந்தது அந்தக் குடும்பம். பெரிய மகன் கூலி வேலை பார்க்கச் சென்னைக்குப் போனான். சின்னவன் சண்டை போட்டுக் கொண்டு எங்கேயோ போய்விட்டான். தந்தையும் தாயும் ஊமைப் பெண்ணை இழுத்துக் கொண்டு ஊர் ஊராக அலைந்தார்கள்.

எவ்வளவு அலைந்தாலும் வேலை கிடைக்கவில்லை. கெஞ்சிப் பார்த்து சர்வீஸான பிறகு பிச்சையெடுக்கும் வேலை அவர்களுக்கு நிரந்தரமாக கிடைத்தது.

பெற்றோரை விட்டு வந்த போது அந்த ஊமைக்குச் கொஞ்சம் வருத்தமாயிருந்தது என்பதைக் கொஞ்சம் அழுத்திச் சொல்வது நல்லது. ஏனென்றால் ஏதோ ஒரு வீட்டின்

மாடிக்குக் கீழே தெருவோரமாக அன்றிரவு தன்னோடு படுத்துப் புரண்ட நொண்டிக்கை இளைஞன், பிச்சைக்காரன், அவளுக்கு ஒரு ஆதாரமாக இருந்தான்.

ஒவ்வொரு நிமிஷமும் தகர்ந்து விழும் ஆதாரம் அது.

ஓடிவந்த பிறகு அந்தப் பெரிய நகரத்தில் கழித்தது பத்தே நாட்கள். பதினோராம் நாள் விடிவதற்குள் அவள் தனியாய்ப் போனாள். ஆதரவுக்கு ஒரு துரும்பு கூட இல்லாத பெரிய ஆழத்தில் கைகால்களை நீட்டி அடித்துத் தத்தளித்துக் கொண் டிருந்தாள்.

அன்றெல்லாம் அந்த ஊமையின் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டே யிருந்தது. அவள் வயிற்றைப் பிசைந்து கொண்டு இருந்த இடத்திலேயே சுவரில் தலையை மோதிக் கொண்டு ஓவென்று கத்தினாள், கதறினாள். இங்குமங்குமாக அலைந்தாள். அவன் கிடைக்கவில்லை. எந்த வண்டியில் ஏறி எந்த ஊருக்கு டிக்கட் இல்லாத பயணத்தை மேற்கொண்டிருந்தானோ அந்த மகராஜன்.

இரயில் நிலையத்துக்குப் பின்னாலிருந்த ஏரிக்குப் போனாள் காணி. நீரில் காலை வைத்துக் கொண்டு ரவிக்கையில் செருகியிருந்த சீப்பை எடுத்து, தலைக்கு கையால் நீரைத் தெளித்து அழுத்தி வாரினாள். அந்த ஏரியின் தண்ணீரையே கொஞ்சம் குடித்தாள். அப்படியே அந்தக் காலடித் தடத்தில் நடந்து போனாள்.

அவள் அழகி அல்ல. மெலிந்த உடம்பு ஆனால் வயதுக்கு மிறி உடம்பு நிறைந் திருந்தது. வெறும் உடல் சதையை விரும்புகிறவர்களுக்கு அவள் மனத்தை நிரப்பும் உணவாயிருந்தாள்.

நடந்து போய்க் கொண்டே இருந்த அவள் ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள். யாரோ ஒருவன் புகைத்தபடியே பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். தெரு விளக்குகள் எரியத் தொடங்கின ஏதோ ஒரு புதிய உலகத்தின் கதவுகள் தனக்காகத் திறந்திருப்பதைப் போலக் காணி அந்த விளக்குகளையே மீண்டும் மீண்டும் பார்த்தாள். ஒரு சைக்கிள் எதிர்ப் பகுதியில் தாண்டிப் போயிற்று. போலீஸ் சீழ்க்கை எங்கோ ஒலித்தது...அவள் மற்றுமொரு முறை திரும்பிப் பார்த்தாள். அவன் வந்து கொண்டே யிருந்தான்.

நடை பாதையின் மேலே ஒரு தேவதாரு மரத்தின் அருகே அவள் நின்றாள். அவனும் அருகில் வந்தான். தின்பண்டப் பொட்டலம் ஒன்றை அவள் முன்னால் நீட்டினான். 'ஆ ஆ' என்று அவள் தொண்டையிலிருந்து குரல் வெளிப்பட்டது. பொட்டலத்தைப் பிரித்து அதிலிருந்ததை வேக வேகமாகத் தின்றாள். அவன் இன்னொரு சிகரட்டைப் பற்ற வைத்தான்.

'காலையிலிருந்தே உன்னைக் கவனிச்சிட்டுதான் இருக்கேன்' என்றான் அவன்.

அவள் அவனுடைய உதட்டு அசைவிலிருந்தே எவ்வளவோ புரிந்து கொண்டாள். செவிப்பறையின் மேல் ஒலி விழுந்தது. ஆனால் பொருள் விளங்கவில்லை.

அவள் 'காகக—ஆ ஆ ஆ' என்று என்னவோ சொன்னாள். கண்ணீர் துளிர்க்கத் தொடங்கியது. 'த்சோ த்சோ' என்று அவன் அனுதாபத்தைத் தெரிவித்தான். வா என்று சைகை செய்தான். அவள் தலை குனிந்து அவன் பின்னால் போனாள். நாய் அடக்கத்தோடு பின்னாலேயே போவதைப் போலப் போனாள்.

ஏதோ ஒரு ஆதரவில் அப்படியே அந்த இரவு விடிந்தது.

* * *

அதே விதமாக நான்கு நாட்கள் கழிந்தன. அவளை அவன் சிங்காரித்தான்.

பாதிப் பேச்சிலும் சைகையிலுமாக விளக்கி விளக்கிச் சொன்னான். "நான் புதிய ஆட்களை அழைத்துக் கொண்டு வருகிறேன். நீ சும்மாயிருக்க வேண்டும். வாய் திறக்கக் கூடாது. ஊமை என்று காட்டிக் கொள்ளக் கூடாது".

அவள் 'கூய் கூய்' என்றாள். தன்னை ஊமையென்று அழைத்த அவன் அதைக் குறித்துச் சைகை காட்டியபோது அவளுக்கு மிகவும் கோபம் வந்தது. ஆனால் 'குய் குய்' என்ற ஒலியிலேயே அந்தக் கோபம் முடிந்து போய்விட்டது.

அவன் யாரையோ அழைத்துக் கொண்டு வந்தான். அவர், பணக்காரரைப் போலக் காணப்பட்டார். அவர் முன்னால் அவன் அப்படிப் பல்லைக் காட்டிக் கொண்டிருந்தான். ரொட்டித் துண்டின் மீது நாயின் பார்வை இருப்பதைப் போல அவன் கண் அவருடைய பாக்கெட் மீதே இருந்தது.

வந்தவர்களில் ஒருவன் வெறும் மிருகம். அவளுடைய உடம்பையெல்லாம் பிடித்து நொறுக்கத் தொடங்கினான்.

அவள் வலி தாங்கமாட்டாமல் 'வ்வெ வ்வெ' என்று கத்தினாள். இரண்டு கைகளாலும் பிடித்து அவனைக் கீழே தள்ளினாள். ஒரே ரகளை. அவளுடைய எஜமானன் தெரு நாயை அடித்தது போல அவளை அடித்தான். அவள் கோபித்துக் கொண்டு மூலையில் படுத்துக் கிடந்தாள். வந்தவர்கள் முகத்தைச் சுளித்துக் கொண்டு திரும்பிப் போனார்கள்.

நடு ராத்திரியில் அவன் அவள் கிடந்திருந்த இடத்திலிருந்து அவளைத் தூக்கி பாயின் மேல் படுக்க வைத்தான். 'வலிக்குதா' என்றான். அவள் ஒன்றும் சொல்ல வில்லை. கண்களில் மட்டும் ஏதேதோ உணர்ச்சி மாறுதல்கள் ஏற்பட்டன. ஆனால் அந்த அற்ப மனிதனுக்கு அதன் பொருள் விளங்கவில்லை.

அன்றிலிருந்து அவள் மிகவும் சோர்ந்து போனாள். அவனை அவள் விரும்ப வில்லை. முதல் தடவை நொண்டிக் கையன் மீது ஆசை வைத்த அளவுக்கு அவள் யார் மீதும் ஆசை கொள்ளவில்லை.

'பணத்தின் மதிப்பு' காணிக்குத் தெரியாது. எவ்வளவு வந்ததோ என்னவோ, இரண்டு புடவை ரவிக்கை, ஜம்பர், இரவில் வெளியே போகும்போது போட்டுக் கொள்வதற்காக ஒரு கிழிந்த, ஆனால் கம்பளியாலான பெண்கள் அணியும் கோட்; தலையில் தடவிக் கொள்ள எண்ணெய், சூடிக் கொள்ள பூ, வயிறு நிறைய சாப்பாடு—சிற்றுண்டி...அப்படியே நாட்கள் கழிந்தன. நல்லவேளை. அவள் கருத்தரிக்கவில்லை.

இவ்வளவு இருந்தாலும் ஒரு நாள் அவளுக்கு நெஞ்சு வலித்தது. திண்டாடினாள். புரண்டாள். உருண்டாள். தன் கிராமத்தின், தான் பிறந்த குடிசையின், தன் மொழி பேசும் மக்களின் நொண்டிக் கையனான முதல் கூட்டாளியின் நினைவு வந்தது. ஓகோ ஒ ஒ...என்றெல்லாம் குரல் எழுப்பினாள். இரண்டு பகலும் இரவும் இப்படியே ஆயிற்று. வாடிக்கையாளர்கள் வருவதாக இல்லை. மூன்றாம் நாள் விடியற் காலையில், அங்கிருந்த உணவுப் பொருள்களையும் துணிமணிகளையும் கட்டி எடுத்துக் கொண்டு அவள் ஓடிப் போனாள். நகரத்தின் இன்னொரு கோடியை அடைந்து அதையும் கடந்தாள்.

* * *

கடைசியில் அவள் ஒரு கிராமத்தை அடைந்தாள். நிலத்தை உழுது கொண்டிருந்த ஒரு ஜோடி மாடு. உழவர்கள்...எல்லாவற்றையும் அவள் மௌனமாகவே பார்த்தாள். கலைந்திருந்த கூந்தலை வாரிக் கொள்ள வேண்டும் என்ற நினைவும் எழவில்லை அவளுக்கு. ஓரணா விலையுள்ள சிறிய கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையும் எழவில்லை. சாப்பிடவும் தோன்றவில்லை.

மழை பெய்து சுற்றியிருந்த நிலமெல்லாம் பசுமையாய் இருந்தது. இளம்புல்லின் மேல் ஓரிடத்தில் காணி அமர்ந்தாள்.

இளமையின் நூறு நினைவுகள் எழுந்தன. முகம் வாடியது. மெல்ல, சோர்வடைந்து அங்கேயே தூங்கிப் போனாள்.

மாலையில் 'ஏய் ஏய்' என்று குடியானவப் பெண்கள் சிலர் எழுப்பிய போதுதான் அவள் கண்ணைத் திறந்தாள்.

இருட்டு வந்ததும் அந்தக் கிராமத்தில் அவளுக்கு அச்சம் ஏற்பட்டது. ஓடி வந்து நகரத்தை அடைந்தாள்.

ஒரு மூலையில் பள்ளிக்கூடம் இருந்தது. இரவில் அங்கு யாரும் இருப்பதில்லை. அங்கேயே திண்ணையின் ஒரு மூலையில் அவள் படுத்துக் கொண்டாள்.

* * *

விடிந்ததும் எழுந்து போனாள். போவதற்கு முன்னால் புடவையைச் சரிப் படுத்திக் கொண்டாள். கொஞ்சம் அலங்காரமும் செய்து கொண்டாள்.

அப்படியே சுற்றி வந்தபோது அந்த இடம் கொஞ்சம் கொஞ்சமாகப் புலப்படத் தொடங்கியது. விசாலமான இடம். சுற்றிலும் பசும்புல். அங்கே சர்க்கிள். அதன் நடுவில் ஒரு நீரூற்று. யாரோ ஒருவருடைய சிலை. தொலைவில் ஒரே ஒரு கட்டடம், ஏதோ பெரிய கட்டடம்

மூலையில் வேர்க்கடலை விற்றுக் கொண்டு உட்கார்ந்திருந்தவனிடம் இருந்த சில்லரைகளைக் கொட்டி காசின் மதிப்பு என்ன என்பதை அந்த ஊமை தெரிந்து கொண்டாள்.

பசி தணியவில்லை.

இருட்டிய பிறகு அந்த சர்க்கிளின் அருகே போய் ஒரு மூலையில் உட்கார்ந்தாள். நடுவிலிருந்த ஒரே ஒரு விளக்கின் ஒளியில் மங்கலான வெளிச்சம் விழுந்து கொண்டிருந்தது. அந்தப் பக்கம் போனவர்கள் அவளைப் பார்த்துக் கொண்டே போய்க் கொண்டிருந்தார்கள் பார்த்தவர்களில் இரண்டொருவர் கொஞ்ச தூரம் போன பிறகு திரும்பிப் பார்த்தார்கள்.

பெரிய மனிதனைப் போல் தோற்றமளித்த ஒரு மனிதன் மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டே அந்த வழியாக இரண்டு தடவை போனான். காணி எழுந்து நின்று சர்க்கிளுக்கு வெளியே வெட்ட வெளியை நோக்கி நடந்தாள். எங்கோ ஒரு மரத்தின் அருகில் ஏதோ ஒரு புதரின் பக்கத்தில் அந்த மனிதன் முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டே அவளைப் பின் தொடர்ந்தான்.

மறுநாள் காகிதத் துண்டு ஒன்று கொடுத்தால் சிற்றுண்டியும் கிடைக்கும், சாப்பாடும் கிடைக்கும், கொஞ்சம் சில்லரையும் திரும்பக் கிடைக்கும் என்பதைக் காணி தெரிந்து கொண்டாள். எவ்வளவு திரும்பி வந்ததோ என்னவோ அந்த கணக்கெல்லாம் அவளுக்குத் தெரியாது. அன்று முதல் பகலில் சுற்றுதல், மாலையில்

சர்க்கிளில் ஒன்றோ இரண்டோ அறிமுகம்; அருகிலிருந்த புல் படுக்கையில் ஒரு தடவையோ இரண்டு தடவையோ சாவது—செத்துப் பிழைப்பது.

பிழைத்து மறுபடியும் அடுத்த நாள் சாவது. அப்படியே காலம் கழிந்தது...

எப்படிப்பட்டவர்கள் எல்லாம் அவளிடம் வந்து கொண்டிருந்தார்களோ அவளுக்குத் தெரியாது. குடிகாரன், ரௌடி இருக்கலாம்; வழி தவறிய வண்டுகளைப் போல வாழும் உல்லாசிகளும் இருக்கலாம். பகலில் சம்பிரதாயமான முறைகளை வேடம் போட்டுக் கொண்டிருக்கும் காமுகர்கள் இருக்கலாம். வீட்டின் அதிருப்தியைப் போக்கிக் கொள்ளும் தாகம் எடுத்தவர்கள் இருக்கலாம்... அவளுக்குத் தெரியாது. பேச முடிந்தால் ஏதாவது புரிந்திருக்குமோ என்னவோ. முகத்தைப் பார்த்தால் அவர்களுடைய பாவங்களிலிருந்து கொஞ்சமாவது தெரிந்திருக்கும் அவளுக்கு. ஆனால் அந்த இரவுப் பொழுதில் வந்தவர்களின் முகத்தைப் பார்க்க முடிவது எப்படி?

இது மனிதத் தன்மையா, பாசமா என்பதும் அவளுக்குத் தெரியாது. அன்பு—காமம் விவகாரங்களைப் பற்றி அறியாதவள் அவள். அரும்பு மீசை உடையவர்களாகட்டும்—கிழவர்களாகட்டும், அவளுக்கு இரண்டும் ஒன்று தான். உடம்பு சோர்ந்த போது அவள் துடிப்பாள். நோகும் போது தொண்டையிலிருந்து பொருள் புரியாத செயற்கை ஒலிகளை எழுப்புவாள்...

அவள் ஊமை. ஊமையிடமிருந்து திருப்தி அடைய விரும்புபவர்களின் மனத்தில் என்னென்ன அனுபவங்கள் ஏற்படுகின்றன என்பதுவும் தெரியாது அவளுக்கு. நடப்பதெல்லாம் இயந்திரத்தனமான செயல்கள். அவள் ஒரு மூச்சு விடும் இயந்திரம்.

* * *

மழை வலுத்தது. வாடிக்கையாளர்கள் வரவில்லை. அவ்வப் போது சம்பாதனை குறைந்தது. உடல் மெலிந்தது. காணி வெளுத்துப் போனாள். தானே எழுந்து போய் மக்கள் இருந்த இடங்களில் அவர்களைச் சுற்றி வர ஆரம்பித்தாள்.

கன்னங்களில் குழி விழுந்தது. கண் கீழே சரிந்தது. காய்ச்சல் வரத் தொடங்கியது. இன்னும் கொஞ்சம் சிங்காரித்துக் கொண்டாள் அவள்.

அவள் தொலைவில் மெதுவாக நடந்து போனால், அந்தக் கம்பளிக்கோட்டு அணிந்திருந்தால், தலையில் பூ முடிந்திருந்தால் சுமாராகத் தோற்றமளித்தாள். ஆனால் அருகில் நின்று பார்த்தால் இரண்டு கண்களிலும் இரண்டு பிசாசுகள் கூத்தாடுவதைப் போலத் தெரியும்.

சில ரௌடிகள் அவள் படுக்கும் பள்ளிக்கூடத்துக்கு வந்தார்கள் இரவு நேரங்களில், ஆனால் ஒரு சல்லிக் காசும் பெயராது. அவள் சண்டை போட்டாள். ஆனாலும் துன்புறுத்தி, பலாத்காரம் செய்தார்கள். அவர்கள் சிரிப்பும் அட்டகாசமும் அவள் முயற்சி வீணாவதும் அதிகரித்தன. ஆகவே தேம்பிக் கொண்டே ஆனது ஆகட்டும் என்று தலை குனிந்திருப்பாள்.

காய்ச்சல் ஏறியது. ஏரியில் குளிக்க வேண்டாம் என்று அவள் மனம் சொன்னது போலிருந்தது.

தோலில் ஏதோ நோய் படிந்தது. இளம் பெண் காணி மிகவும் துடித்தாள். உடம்பிலிருந்து துர்நாற்றம் வரத் தொடங்கியது.

காணி இருப்பிடத்தை மாற்றினாள். ஒரு பர்லாங்குக்கு அப்பால் இருந்த பாழடைந்த வீட்டுக்குப் போனாள். அங்கே நடுத்தர வயதுப் பிச்சைக்காரன் ஒருவன் தன் அரண்மனையைக் கட்டியிருந்தான்.

அவன் மூன்று நாட்களுக்கு அவளுக்குக் கஞ்சி ஊற்றினான்.

அவள் திறந்த கூரை வழியே ஆகாயத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டே படுத்திருந்தாள்.

நான்காம் நாள் காய்ச்சல் கொஞ்சம் தேவலை போலத் தோன்றியது. அவள் எழுந்து உட்கார்ந்தாள். அந்தப் பிச்சைக் காரன் ஆசையோடு அவளைப் பார்த்தான். அவள் முகத்தில் எந்த உணர்ச்சியும் இல்லை. இத்தகைய உணர்ச்சிகளை அனுப விக்கும் திறன் எல்லாம் அவளுள் நசித்துப் போயிருந்தது. அவன் அன்றைக்குப் பிச்சைக்குக் கூடப் போகாமல் அவளோடேயே இருந்து விட்டான். நோய்க்கு ஆளாகியிருந்த அவளுடைய உடம்பு பலநாள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளப் புறப்பட்டது.

மாலையில் காணி தன் கறுப்புக் கோட்டைப் போட்டுக் கொண்டு மெல்ல நடந்து புல் தரையைக் கடந்து போய் இருட்டாய் இருந்த ஒரு மூலையில் நின்றாள். அவளுக்கு மயக்கம் வருவதைப் போல இருந்தது. ஊரின் நிலம், தாய், தந்தை, நொண்டிக்கை, கூட்டாளி— இவர்கள் எல்லாம் கண் முன்னால் வந்தது போலிருந்தது. கூலி வேலை செய்வதற்காகச் சென்னைக்குப் போன அண்ணனும் சண்டை போட்டுப் போன தம்பியும் எதிரில் நின்று 'காணி' என்று அழைப்பது போலிருந்தது...நெஞ்சு முழுதும் வேதனை நிரம்பியது.

நீண்ட நேரம் நிற்க முடியாமல் அவள் அங்கேயே சரிந்து உட்கார்ந்தாள். தொலை வில் வேர்க்கடலை விற்றுக் கொண்டிருந் தவனுடைய காகிதம் சுற்றிய விளக்கு வா என்று அழைத்தது. ஆனால் சில்லரை இல்லை. கையை நீட்டி வேர்க்கடலையை வாரிக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. ஆனால் சாமர்த்தியம் இல்லை.

ஒரு மணி நேரம் கழிந்தது—ஒன்றரை ஆயிற்று. அந்த வட்டத்தில் உட்கார்ந்திருந்த வர்கள் எல்லாம் ஒவ்வொருவராக வீட்டுக்குப் புறப்பட்டார்கள். காணி ஒவ்வொரு வரையும் ஆசைப் பார்வையோடு நோக்கினாள்.

கடைசியில் ஒருவன் தூரத்தில் நின்றான். பெரிய உடம்பு. ரௌடியைப் போலத் தோற்றம். தோளைக் குலுக்கிச் சைகை செய்தான். அவள் எழுந்து நின்று பெரு முயற்சியோடு காலை எடுத்து வைத்து அவனைத் தொடர்ந்தாள். அவன் யாரோ புதியவன். அங்கேயே புதரின் மறைவில் அவளை அவன் வீழ்த்தினான். 'உக்' என்றாள். காணி...

கோபத்தோடு அவன் எழுந்து நின்று உடம்பை உதறினான். 'த்தூத்தெரி' என்று அவள் மேலேயே உமிழ்ந்தான். காணி எழுந்து உட்காருவதற்கு முயற்சி செய்தாள். ஆனால் சக்தியே இல்லை.

அவன் இன்னொரு தடவை 'த்தூ' என்று சொல்லிப் புறப்பட்டான்.

காசு கொடுக்கவில்லை.

காணி அவலக்குரல் எழுப்ப வாய் திறந்தாள். ஆனால் ஒலி வரவில்லை. எழுந் திருப்பதற்கு மறுபடியும் முயன்றாள். முடியவே இல்லை.

அவன் வேகமாக நடக்கத் தொடங்கினான்.

கடைசியாக அவள் துள்ளி எழுந்தாள். பெற்ற குழந்தையைத் திருடிக் கொண்டு போகும் பாவியைப் பிடிக்கப் போவது போல அவள் ஓடினாள். 'லவோ லவோ' என்று கத்தினாள், 'யவ தத ஆ' என்று வீறிட்டாள்.

அவன் காசு கொடுக்காமல் ஓடுகிறான். அவள் தன் பேச்சில் நியாயந் தவறி நடக்க வேண்டாம் என்று வேண்டுகிறாள். நாளைய ஒரு பிடிசோற்றில் மண்ணைப் போட வேண்டாம் என்று மன்றாடுகிறாள்.

இவன் பயந்து போய் நின்று பார்த்தான். ஜனங்கள் இன்னும் இருந்தார்கள். அவர்களுக்குக் காதில் விழலாம். யாராவது தன்னைப் பிடிக்க வரலாம்.

அந்த ஆள் சட்டென்று திரும்பினான். அவள் கழுத்திலே கையை வைத்து அழுத்தித் தரையில் உருட்டினான். 'மோசமான தேவடியாள்' என்று திட்டினான். அவளுடைய வயிற்றில் பூட்ஸால் உதைத்தான்.

காணி அப்படியே விழுந்து கிடந்தாள்... தொண்டையில் ஏதோ ஒலி எழுந்தது. ஆனால் அது வெளியே கேட்கவில்லை.

மூச்சு ஆடிக் கொண்டிருந்தது...மெல்ல மெல்ல...நின்று நின்று...அடங்கிய மூச்சு.. கடைசியான இரண்டொரு மூச்சு ஓட்டம்.

***

விடிந்தது

...சூரியன் மேலே ஏற ஏற சூடு ஏறத்தொடங்கியது. சர்க்கிளைக் கடந்து போயே தீர வேண்டியவர்கள், அச்சத்தோடு ஒரு தடவை இடப்பக்கம் கண்ணைத் திருப்பி மறுபடியும் தலை குனிந்து சரசரவென்று நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

எல்லாரும் போய்க் கொண்டேயிருந்தார்கள்...நிற்பவர்கள் யாருமேயிருக்க வில்லை.

...நகர சபையின் வேன் வந்து பிணத்தை எடுத்துக் கொண்டு போகும் என்று யாரோ சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

காணியின் உடம்புக்கு மேலே உயரத்தில் கழுகு ஒன்று சுற்றிச் சுற்றி வந்தது.

அதையே பார்த்துக் கொண்டிருப்பது போலக் கண்ணைத் திறந்து கொண்டு காணி படுத்திருந்தாள்.

சுற்றிச் சுற்றி வந்து கொண்டேயிருந்தது கழுகு, கீழே பார்த்தபடி.

கடைசி கிராக்கி.

# யார் இனியவர் உனக்கு

## பி.ஸி. ராமச்சந்திர சர்மா

அவர்களுடைய தவறல்ல...

அந்த மாலை நேரத்துக்கு அப்படிப்பட்ட மயக்கும் சக்தி- யாராக இருந்தாலும் அவர்களை அசைத்து நடனமாட வைக்கும் மயக்கம். உடம்புக்கு வெளியே நின்ற பெரிய கண்களால் பார்த்து, உடற்கொடியை ஒசித்துக் காட்டும் மோகினியைப் போல வருத்தியது மாலை. தீர்க்கமான கண்கள் இமையைத் திறந்தபோது உடம் பினுள் புகுந்து ரத்தத்தில் கலந்து சிரித்த மாலைப் பொழுது. கண்ணுக்குத் தெரியாத விரல்களாய் நினைத்துப் பார்க்க முடியாத இடங்களில் கிசுகிசு மூட்டியது வெட்கத்தை விட்ட அந்த மாலைப் பொழுது.

அவர்களுடைய தவறல்ல.

அவன் சொன்னதும் அதுதான். மாலை நேரம் பேசிய பேச்சு அது, "பேண்ட் சர்ட்டுகளை எடுத்து எறிந்து விட்டு வெறும் உடம்பில் போக வேண்டும் என்ற தோன்றுகிறது!" இரு நண்பர்களும் சிரித்தார்கள். ஒன்றும் சொல்லவில்லை...மனம் மட்டும் அசை போட்டது. வெறும் உடம்பில் தெருவில் நடப்பதிலிருந்த இன்பத்தை...

கல்பாதையில் இடப்புறமிருந்த நெற்பயிர் அவன் சொன்னதை பக்கத்திலிருந்த வயலுக்குக் கிசுகிசுத்தது. வெட்டியாகச் சிரிக்க முடியாத பயிர் குறுநகை புரிந்தது. மாலை நேரத்துக்கு அவன் பேச்சுக் கேட்டது. அவர்கள் மூவருடைய ஆடைகளையும் பற்றி எறிந்து வெற்றுடம்பில் நடக்கச் செய்த மாலை உடனே வெட்கியது. முகம் செவ்வண்ணத்துக்கு மாறியது.

அவர்கள் கணக்குப்படி அவர்கள் இந்த நேரத்திற்கு மேல்கோட்டையின் அருகில் இழுக்க வேண்டும். அவர்கள் இருந்தது போகாதி என்னும் இடத்திலிருந்து ஒரு மைல் அந்தப் பக்கம். போகாதியிலிருந்து மேல்கோட்டைக்கு நாலு மைல் நடை. அவர்களுக்கு அது நினைவில் இல்லை...மாலை வீசிய அழகின் மாயையில் அவர்கள் பரவசமடைந்திருந்தார்கள். இருபதை ஒட்டிய வயதில் மட்டுமே இயலக்கூடிய பரவசம்.

மே மாதத்துச் சூரியன் சுட்ட அந்த நிலத்துக்கு நீர் வேட்கை ஏற்பட்டிருந்தது. நெஞ்சின் தாகத்தை மண் வாசனையாக்கி வானத்துக்கு வீசியிருந்தது. இரண்டு கைகளையும் வானை நோக்கி உயர்த்தி அங்கலாய்த்தது. நீருக்காக, இரக்கத்துக்காக. அறுபதடி உடம்பை படிப்படியாகக் குறைத்து உருவத்தை இழந்து கேவலம் கல்லாகி நின்றிருந்தான், கோமட*. இவர்கள் போகாதியின் பக்கம் திரும்பியபோது அவன் கண்ணில் படவில்லை. மேற்கு நோக்கி நடந்த அவர்கள் எதிரில் நின்றது மேல்

---

* கோமடேசுவரர் சிலை. சிரவணபௌளகொளவில் உள்ளது

கோட்டையின் மலைத்தொடர். மலையின் பக்கத்திலிருந்த உச்சு கெரே (ஏரி) வெள்ளியாகி ஒளி வீசியது... "அதுவே மேல் கோட்டை. அதுவே மலை மேலிருக்கும் கோவில்" ஒருவன் சொன்னான்.

"இன்னுமென்ன! போய்ச்சேர்ந்த மாதிரிதான்"— இன்னொருவன் சொன்னான். சந்தைத் திடலுக்கு அப்பாலிருந்த கள்ளுக் கடையின் சொந்தக்காரன் குதிரை ஏறி, சந்தைத் திடலுக்கு அருகில் வரும் நேரத்துக்குச் சரியாக இவர்களும் அங்கே வந்தார்கள்- அவனுக்கு அன்றைய வியாபாரம் முடிந்திருந்தது. மூன்று மைல்களுக்கு அப்பாலிருந்த பாளேஹள்ளிக்குப் போய்க் கொண்டிருந்தான். பார்க்கிற மாதிரியே வழி படுத்துக் கிடந்தது. யாரையும் வழி கேட்க வேண்டிய தேவையே இருக்கவில்லை என்றாலும் ஒருவன் கேட்டான்:

"இதுதானே கௌடரே, மேல்கோட்டைக்குப் போறவழி?"

"ஆம் தம்பி. என்ன! மேல் கோட்டைக்கா?"

"ஆமாம்"

"இந்த நேரத்திலா? அதுவும் மழை வரும் போலிருக்கிறதே!" ஆச்சரியத்தோடு கேட்டான்.

"எங்களுக்கென்னய்யா பயம்? ஆண்களுக்கு?" ஒருவன் சிரித்தான். "என்றாலும்..." கௌடர் ராகம் இழுத்துக் கொண்டே தனக்கென்ன என்று நினைத்து குதிரையின் மேல் ஏறிப் போனான்.

பிற்பகல் மூன்று மணிக்குப் புறப்பட்டு மே மாதத்தில் பத்து மைல் தூரம் நடந்த உடம்பு அப்போது களைத்திருந்ததா? சந்தைத் திடலில் உள்ள பெரிய மரங்களின் புகலிடத்துக்குத் திரும்பியிருந்த கிளிக்கூட்டம் மாலை நேரத்தின் பேச்சுக்கு உயிர் ஊட்டியது... தூரத்திலிருந்த உச்சுகெரே வெள்ளியைப் போல மின்னியது. தன் பெருமையை இழந்து, மங்கலாகப் படுத்திருந்தது. மலையின் மறைவிலிருந்து பின் தொடர்ந்த சாபத்தைப் போல, கரிய நினைவைப் போல, முன்னறிவிப்பு இல்லாமல் நெருங்கிவந்து தழுவிக் கொள்ளும் மூப்பைப் போல, எழுந்து வந்த மேகம் ஆகாயம் வரையில் கருப்பாக தடிப்பாக மூடியிருந்தது.

சந்தைத் திடலில் வெள்ளைப் பாறையின் மேல் ஓய்வு கொள்வதற்காக உட்கார்ந்த அவர்களுக்கு நிறம் மாறியதைப் பார்த்ததும் அச்சம் ஏற்படவில்லை. பிற்பகலில் அவர்கள் சிரவண பௌகொளவிலிருந்து புறப்படும்போது வானக் கூடத்தில் மலர்ந்திருந்த பூ மேகங்கள் இப்போது புகை நிறத்துக்கு மாறியிருந்தாலும் தடையென்று தோன்றவில்லை. கண்டு இமைக்காமலிருப்பதே நல்லது என்று தோன்றியது. தூரத்தில் மேல்கோட்டைக் கோவிலின் முடிமணியாகி சமமானவர்கள் யாருமில்லாத ஜம்பத்தில் ஒளி வீசியது.

சொந்த பங்களாவுக்குள் முதல்முதலாகப் போன குழந்தையின் மெய் மறந்த நிலை அவர்களுடையது. முதல் தடவையாக மைசூரை விட்டு, ஒளிவு மறைவுமில்லாமல் நின்ற அந்த அழகைக் கண்டு மயங்கியிருந்த அவர்கள் மீது அந்த மாலை நேரம் வலை வீசியது. அவர்கள் பரவசமடைந்திருந்தார்கள். இருபதை யொட்டிய வயதில் மட்டுமே இயலக் கூடிய பரவசம்...மலையின் மேல், வான விளிம்பின் மின்னல் கண்ணைத் திறந்து மூடிக் கொண்டிருந்தது.

"தேவதைகள் நம்மைப் போட்டோ பிடித்துக் கொண்டிருக்கிறார்களடா. வெளிச்சம் போதாது என்று ஃப்பிளாஷ் பல்ப்"— ஒருவன் சொன்னான். மற்ற இருவரும் நகைத்தார்கள்.

துக்கம் நிரம்பியிருந்த வானத்தின் நெஞ்சு திறந்தது. தாங்க முடியாமல் இடி இடித்து வானம் தேக்கி வைத்த சூட்டைக் கொட்டியது. தகதகவென்று மின்னியது மின்னல். காலில் முள் தைத்த சிங்கத்தின் குரலில் கோபம் கொண்டதைப் போல் இடி இடித்தது.

"எழுந்திருங்கடா"—ஒருவன் சொன்னான்.

"ஐயோ, பெண்ணே" மற்றொருவன் கேலி செய்தான். அவன் சிரிப்பு எழுந்து ஆகாயத்தின் நெஞ்சைத் தடவியது. கொதித்துப் போன நிலத்தின் நீர் வேட்கை மண் வாசனையாகி மேலே எழும்பி நீருக்காக இரக்கத்துக்காக அங்கலாய்த்தது. அந்தப் பையன்களின் கேலியினால் கோபம் கொண்ட வானம் கிழிந்த பையாகக் கொட்டியது...நிலத்தின் தவத்துக்கு மனமிரங்கிய கொடையாக ஆகாயம் நீராகக் கொட்டியது.

***

அவர்களுடைய தவறல்ல...

அரைமணி நேரம் வரை 'சோ' என்று பெய்த மழை நின்றது. நெடுந்தூரம் ஓடியவன், நின்று மூச்சை கட்டுக்குள் கொண்டு வருவதைப் போல. அவர்கள் சந்தைத் திடலின் புகலை விட்டு வழியில் நடந்திருந்தார்கள்.

மறுபடியும் வந்தது மழை, அவர்கள் வழியில் இறங்கி நடப்பதற்காகவே காத்தி ருந்ததைப் போல. நின்ற மழை மறுபடியும் வந்து ஒரு தடவை மின்னி, மந்திர வாதியின் கையில் உள்ள கோலாக மாறி பர்லாங் தூரத்திலிருந்த கிராமத்தை அவர் களுக்குக் காட்டியது. மக்கள் இல்லாத சந்தைத் திடலைவிட கிராமமே மேல் என்று நினைத்துக் கொண்டே அவர்கள் வந்தார்கள். இருந்த ஒரே தெருவின் கோடியில் உள்ள கோவிலையொட்டி நின்றிருந்தார்கள்..."யாரப்பா அது?" அசரீரிக் குரல் ஒன்று தெருவை ஒட்டிய திண்ணையிலிருந்து எழுந்து வந்தது.

கண்ணைப் பிளந்து பார்த்தாலும் பேசிய ஆள் தென்படவில்லை. கறுத்த உடம்பு, போர்த்தியிருந்த கறுப்புக் கம்பளி.

"மைசூரிலிருந்து டூர் வந்தோம். சிரவணபெளகொளவிலிருந்து மேல்கோட் டைக்குப் போய்ட்டிருந்தோம். திடீர்னு மழை வந்துட்டுது."

குரல் வந்த திசையை நோக்கி ஒருவன் சொன்னான்.

"அங்க ஏன் நிக்கறீங்க? பூச்சி பொட்டு இருக்கும். உள்ள வாங்க." அதுவே போது மாயிருந்தது. அவர்கள் வீட்டுக்குள் போய் விட்டார்கள்.

"உள்ளே போங்க." என்று சொன்னவன் "ஏய் மல்லி!" என்று யாரையோ அழைத்தான்.

"பரவாயில்ல. மழை நின்னப்புறம் போயிடறம். உங்களுக்கு நாங்க ஏன் தொல்லையா இருக்கணும்" என்று ஒருவன் உபசாரமாகச் சொன்னான். வீட்டுக் குரியவன் சிரித்தான். அவன் சிரிப்பு வீட்டுக்கு வெளியே நடந்து மேலெழுந்து இடியாகி வானம் வரையிலான பெரிய கல்லாகி உருண்டது. அவன் சிரிப்பை நிறுத்திய பிறகு மிஞ்சிய மௌனம் கத்தியினால் பிளக்கும் அளவுக்குக் கெட்டியாய் இருந்தது.

அந்த மௌனத்தில் அவர்களுக்குத் தண்ணீர் பாயும் ஓசை கேட்டது. நிறைந்த நீரின் ஓசை. இளவயது இரத்தத்தைப் போல ஓடுகின்ற நீர் அந்தப் பெரிய மௌனத்தில் மழைப்பொழிவோடு இணைந்து ஒரே நாதமாக கிராமத்துக்குத் தாலாட்டுப் பாடியது.

"என்ன அது?"

"ஓடை. எங்க ஊர் ஓடை ஏரிக்குப் பாயுது. மேல்கோட்டைக்கு நீங்க போகணும்ன்னா அதைத் தாண்டணும்"

"அப்போ?"

"காலையில போங்க"

எஜமானும் முடிவு செய்தான். அவர்கள் ஒப்புக் கொள்ளவே வேண்டியதாயிற்று.

* * *

அவர்களுடைய தவறல்ல...

"ஏய் மல்லி!"

பதினெட்டு வயதுப் பெண் மாட்டுக் கொட்டகையிலிருந்து கூடத்துக்கு வந்தாள். அவளுடைய கண்கள் இன்னும் நின்று கொண்டேயிருந்த மூவரையும் பெருக்கியது. "உலை வைக்கும்படி அவளுக்குச் சொல், இவுங்க சாப்பிடறதுக்குள் பரணில படுக்கை போடு..."

கிராமத்து மக்களின் அன்பு அவர்களையும் அவர்கள் மனங்களையும் கள வாடியது. கிராமத்து மக்களின் நல்ல குணத்தை அவர்கள் புகழ்ந்தது நகரத்து மக்களை இகழ்வதன் மூலம்...

சாப்பாட்டுக்குப் பிறகு வீட்டு எஜமானருடன் உட்கார்ந்து அவர்கள் கொஞ்ச நேரம் ஊர் விவகாரங்களைப் பேசி அரட்டையடித்தார்கள். தங்கள் விஷயத்தையெல்லாம் அவனுக்குச் சொல்லி, அவனுடைய ஊரின் செய்திகளைத் தெரிந்து கொண்டார்கள்...

மல்லியின் விஷயம் பேச்சுக்கு வரவில்லை, வருவதும் சாத்தியமில்லை...மனம் ஆர்வத்திலேயே பரண் ஏறியது. படுக்கையில் படுத்தது.

எஜமானன் பிராமணன். மல்லி ஒக்கலிக வகுப்பைச் சேர்ந்த பெண். எஜமானனுக்கு மனைவி இருந்தாள். குழந்தைகள் இல்லை. மல்லி எடுபிடி வேலைக்கு இருக்கலாம்...அல்லது...அவளுடைய பதினெட்டு வயது அழகு; கிராம வாழ்க்கையில் வளர்ந்த உடம்பு. கண்ணில் ஏதோ வருத்தம். ஓரத்தில் மட்டும் வெள்ளை-கருப்பு. மேகத்தின் விளிம்பின் மின்னும் வெள்ளிக்கோடு. அவளுக்கு மணமாகவில்லையோ? அல்லது கணவன் கைவிட்ட பெண்ணோ? கணவன் இருந்து வீடு என்பதும் ஒன்று இருந்தால் இந்த வீட்டில் ஏன் படுக்க வேண்டும்? கூடத்துக்குப் பின்னாலிருந்த அறையில் எஜமானன். கூடத்தில் ஒரு மூலையில் மல்லி. இன்னொரு மூலையில் படி, பரண். அங்கே தாங்கள்...

"மல்லி ரொம்ப அழகா இருக்கறா, இல்லையா" மனத்திலும் அந்த நேரத்தில் அதே கேள்வியை எழுப்பும் ஆசை.

"பட்டணத்துப் பெண்களை இவள் முன்னால் நிறுத்தினால் அவர்கள் எதற்கும் பிரயோஜனம் இல்லை என்று தோன்றுகிறது...படுக்கலாமா? நேரமாகிவிட்டது."

படுப்பதாக முடிவு செய்தாலும் நெடுநேரம் தூக்கம் வரவில்லை. மழை பெய்யும் ஓசையையும் ஓடை பாய்கிற ஓசையையும் கேட்டுக் கொண்டே மல்லியைப் பற்றி நினைத்துக் கொண்டே படுத்திருந்தார்கள்...இரண்டு பேருக்குத் தூக்கம் வந்திருந்தது. மூன்றாமவன் அவர்கள் பெயரை மெல்லக் கூப்பிட்டான். பதில் வரவில்லை... அவன் படி இறங்கி எதிர் மூலையை நோக்கி நடந்தான்.

* * *

மூன்று பேரும் ஏறக்குறைய ஒரே மாதிரி இருப்பதாகத் தோன்றியது மல்லிக்கு. என்ன செய்தாலும் அவர்களை வேறு பிரித்துக் குறிப்பிட்ட அடையாளம் கொடுத்துப் பார்ப்பது கஷ்டமாய் இருந்தது அவளுக்கு.. ஒவ்வொரு நாளையும் போலவே படுத்தவுடன் தூக்கம் வரவில்லை. என்றைக்கும் அனுபவித்திராத துக்கம் குமுறிக் கொண்டு வந்தது. வாழ்க்கை, மண்ணில் எழுந்த புற்றாகி உயர்ந்து நின்றது. அவளுக்கும் மணமாகியிருந்தது... கணவன் இருந்தான்... அன்போடு வளர்த்த தந்தை; வாழ்க்கையில் அன்பைத் தோற்றுவித்த கணவன்...

இரண்டு பேரும் இருந்தார்கள் அன்று வரை. அன்றிலிருந்து...? மண்டையின் வலது முழங்காலுக்குப் பக்கத்தில் குன்றி மணி அகலத்துக்குப் பல நாட்களாக இருந்து வந்த வெள்ளைப் புள்ளி-எத்தனையோ நாட்களாக யார் கண்ணிலும் படாதபடி மறைத்து வைத்திருந்த புள்ளி கணவன் கண்ணில் பட்டது...தன் வாழ்க்கை கெட்டது.

வெண் குஷ்டம்...கணவன் கைவிட்டான். வேறு ஒருத்தியோடு சேர்ந்து கொண்டு, நிலத்தையும் வீட்டையும் விற்று பெங்களூரில் கடை வைத்துக் கொண்டான். வெண் குஷ்டம்...தந்தை குமுறிக் குமுறிக் கண்ணை மூடினார். வெண் குஷ்டம்...எல்லாருடைய இரக்கத்துக்கும் ஆளாக்கியது. அன்பு...?

இந்த வீட்டுக்காரனின் வயலில் எத்தனையோ வருஷங்களாய் வேலை செய்த தந்தை கண்ணை மூடினார் வீட்டுக்காரர் இரக்கமுடையவர் தன்னை வீட்டுக்குள் அழைத்துக் கொண்டார். ஆனால் அந்த அன்பு...? கணவனிடமிருந்து பெண்ணுக்குக் கிடைக்கும் அன்பு...முரட்டு உடம்பு தன் உடம்பில் படும் அந்த நேரத்தின் சிலிர்ப்பு? அவளுடைய தனிமை அந்த நேரததில் மனத்தில முள்ளாகத தைத்தது மனம் காலியாகக் கிடக்கிறது. அந்தக் காலி இடத்தை நிரப்புவர் ஒருவருமில்லை. உடம்பு வெடிக்கும் பக்குவத்திலுள்ள மாதுளையாக இருக்கிறது. பறிக்க விரும்பும் கையில்லை. அன்பு வீணாய் மண்ணாகிறது. எடுத்துக் கொஞ்சுபவர்கள் இல்லை.

மழையில் நனைந்து வந்த பையன்கள் ஒரே வயதில் ஒரே மாதிரியான மூன்று பையன்கள். வளர்ச்சி. வேண்டிய அளவு நடநது சிரித்து நிற்கும் வயது. சரியான வயது. அன்புக்கு. தன்னைப் போன்ற பெண்ணின் ஒதுக்கப்பட்ட அன்பை ஏற்றுக் கொள்பவர்கள்...

அவளுக்குத் தூக்கம் வரவில்லை. மழை பெய்யும் ஓசையையும் ஓடை பாயும் ஓசையையும் கேட்டுக் கொண்டே அவர்களைப் பற்றி நினைத்துக் கொண்டே படுத்திருந்தாள்.

படி இறங்கும் ஓசை...யாரோ அருகில் வந்தார்கள்...காட்டு இருளின் நடுவில் ஒளி தேடிக் கொண்டு வந்தது.

***

நன்றாக மழை பெய்த மறுநாள் காலை-எண்ணெய் குளித்து வெயிலில் கூந்தலை விரித்து இருக்கும் பெண்ணைப் போல இருந்தது அந்த விடியற்காலை பூமி... அவர்களுக்கு விழிப்பு ஏற்படும்போது கிழக்கே பொன் வெள்ளியாகியிருந்தது. முகம் கழுவி உணவு அருந்தினார்கள். வீட்டு எஜமானி சொன்னாள்: "வயலுக்குப் போயிருக்கறாரு. ஓடைக்குப் பக்கத்துலதான் வயல் இருக்குது. நீங்க போற வழியிலே தான் இருக்குது அது."

"சரிம்மா, நாங்க போவும்போது அவரைப் பார்க்கிறோம்!" அவர்கள்

புறப்படும்போது மல்லி வீட்டுக்குப் பின்னால் தோட்டத்தில் இருந்தாள். தோட்டத்தை ஒட்டியே ஓடைக்குப் போகும் பாதை இருந்தது.

அவள் அவர்களுடைய முகங்களை வெட்கத்தை விட்டுப் பார்த்தாள். நேரமாவதால் அவள் கண்ணில் அச்சம் ஏற்பட்டு கண்கள் மருண்ட மானைப் போலாயின.

புன்னகை புரிந்த அவர்கள் திரும்பி நடந்தார்கள்.

அவள் கண்ணின் கடையில் வழிந்த நீர், கீழ்த்திசையின் பொன்கிரணங்கள் பட்டுப் பொன்னாய் ஒளி வீசியதை அவர்கள் பார்க்கவில்லை.

"அந்த மூன்று பேரில் அவன் யார்? ஒ, யார்? யாரந்த தெய்வம்? வறண்ட நிலத்தில் மழை பொழிந்த அந்தத் தெய்வம்?" பதில் தெரியாமல் மல்லி வைக்கோல் போரில் முகத்தைப் புதைத்து அழுதாள்...

# சிறை

## யசவந்த சித்தால

பொன்னப்பாச்சாரியின் வீட்டுக்குப் போய் "சாயங்காலம் வரை கொஞ்சம் ரம்பம் வேண்டியிருக்கிறது" என்ற சொல்லி வாங்கிக் கொண்டு அப்படியே ஏகநாத செட்டியின் கடையில் கால் சேர் ஆணி வாங்கிக் கொண்டு அந்த பழைய வீட்டை அடைவதற்குள் பொழுதுசாய்ந்து விட்டது. வீட்டில் பித்ருபட்சம் சாப்பாட்டுக்கு நேரம் ஆயிற்று. சாப்பிட்டு முடிந்ததும் வைதீகரிடமிருந்து அட்சதையும் ஆசீர் வாதமும் பெற்றுக் கொண்டு தலை வலிக்கிறது என்று அறைக்குப் போய், கட்டிலின் மீது படுத்தவன் காதில், வைதீகருடன் அம்மா பேசத் தொடங்கிய தன் திருமணப் புராணம் விழுந்ததும் ஆடிப் போய்விட்டான். சே! அம்மாவுக்குப் புத்தியே இல்லை. இந்தப் புரோகிதம் பண்ணுகிற வைதீகனுக்கு வேறு வேலையில்லை என்று நினைத்துக் கொண்டு கட்டிலை விட்டெழுந்து வெளியே போக உடைகளை மாற்றத் தொடங்கினான். தாய் "எங்கேடா புறப்பட்டாய்?" என்று கேட்ட போது, "பழைய வீட்டுக்குப் போய் வரேம்மா" என்றான்.

"சமையமலறையின் கதவுத் தாழ்ப்பா சரியல்ல முந்தா நாளு உள்ளபோய் மாட்டி டுச்சி. அந்த பொன்னப்பாச்சாரிக்குச் சொல்லி சரிப்படுத்தறேன்னு சொன்ன யேடா." "அதுக்காகத்தான் புறப்பட்டேன். பொன்னப்பாச்சாரிக்கு நேரமே இல்லை யாம். நானே போய் ஏதாவது செய்ய முடியுமான்னு பாக்கறேன்."

"இவ்வளவு நேரம் கழித்து தனியா போறயா?" என்று சொன்னதை முழுவதையும் காதில் வாங்கிக் கொள்வதற்கு முன்னாலேயே அவன் இறங்கி விட்டான். ஆனால் கூடத்தை தாண்டுவதற்குள், "போன வாரம் எங்க பழைய வீட்டில் தோட்டத்து மூலையில் இருக்கற மூங்கில் புதரில் பாம்பு நுழைந்திட்டுது, பட்டரே" என்று அம்மா தொடங்கிய ராகம் மட்டும் கேட்காமல் இருக்கவில்லை...

பழைய வீட்டின் தோட்டத்தில் கால் வைத்ததும் சட்டென்று கண்ணில் பட்டவள் சங்கரராயர் வீட்டு வேலைக்காரப் பெண் தேவி. அங்கே விழுந்து கிடந்த மாமரத்தின் சுள்ளிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தவள் இவன் காலடி ஓசையைக் கேட்டு, தலையைத் தூக்கிப் பார்த்து, "ஓ! பிரம்மச்சாரி முதலாளி" என்று சொல்லிக் குறும்பாகச் சிரித்தாள். வெறும் மார்பில் ஓரமாகச் சரிந்திருந்த முந்தானையைச் சரிபடுத்திக் கொண்டு வெட்கத்தோடு, "அதென்ன இவ்வளவு நேரம் கழிச்சி வந்திருக்கிங்க, முதலாளி தனியா?" என்று கேட்டாள். வேண்டாம் என்று ஒதுக் கினாலும், கண்ணில் பட்ட தேவியின் வெறும் மார்பில் தடுமாறிப் போனவன் அவளிடம் பேச்சுக் கொடுக்காமல் சரசரவென்று வீட்டுப் படியில் ஏறினான். வெளித்திண்ணையை அடைந்து கதவுக்குப் போட்ட பூட்டைத் திறப்பதற்காக சட்டையின் பக்கவாட்டுப் பையிலிருந்து சாவிக் கொத்தை வெளியே எடுக்கும்

போது, இன்னும் அங்கேயே இருந்த தேவி படி அருகில் வந்து, "காலி வீட்டில் தனியா இந்த நேரத்துல எதுக்கு போறீங்க முதலாளி?" என்றாள். தன் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவன் பூட்டின் துளையில் சாவியைப் போட்டுத் திருகிக் கொண்டிருந்தபோது, "சங்கர் முதலாளி அம்மாவுக்கு ரொம்ப சீக்கு, முதலாளி. ஒரு நாலு நாளைக்கு வீட்டுல வந்து படுத்துக்கோன்னு சொல்றாங்க. அங்கயே சாப்பிட் டுக்கச் சொல்றாங்க. அவுங்க வீட்டுல மீன் சாப்பிடறதில்லை. உங்க வீட்டுக்குப் பின்னால திண்ணமேல அடுப்பு வச்சிருக்கேன். சங்கர் முதலாளி உங்க அம்மாவிடம் சொல்லிக்கறேன்னு சொன்னாங்க. நானும் சொல்லணும்னு தான் வந்தேன். நீங்க இல்ல" என்றாள். அவன் இன்னமும் தன் பக்கம் பார்க்காமல் தயங்கியதைக் கண்டு ஒரு தடவை மெல்லச் சிரித்தாள். பூட்டைத் திறந்தாலும் துருப்பிடித்த தாழ்ப்பாளை உடனே திறக்கமுடியவில்லை. அவன் தாழ்ப்பாளைத் திறக்க முயன்று கொண்டிருந்த போதே கைவளைகளைக் குலுக்கியபடி "வீடெல்லாம் எவ்வளவு தூசியா இருக்குதோ? சொல்லியிருந்தா நானே வந்து பெருக்கிட்டுப் போயிருப்பேனே முதலாளி" என்றாள். அவன் அவளை இலட்சியமே செய்யாமல் உள்ளே நுழைந்து வெளிக் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டு நடு அறைக்குள் போய் உள்ளேயிருந்த கும்மிருட்டில் மறைந்து போனான்.

ஒரு மாதத்துக்கு முன்னால் செத்துப் போன அவனுடைய அத்தையின் மரண வேளை மிகவும கெட்டதாயிருந்ததாம். மூன்று மாதங்களுக்கு அந்த வீட்டில் இருக்கக் கூடாது என்று பட்டர் சொல்லியிருந்ததால் அந்த வீட்டைக் காலி செய்திருந்தார்கள். மூன்று மாதங்களுக்குப் பிறகு சாந்தி, ராட்சச ஹோமம் இன்னும் என்னென்னவோ ஆன பிறகு அந்த வீடு வசிப்பதற்கு ஏற்றதாகுமாம். நான்கு ஆண்டுகளுக்கு முன்னால். அவன் தந்தை இறந்த நேரமும் கெட்டாதாய் இருந்தது. ஆனால் வீட்டைக் காலி செய்ய மனம் இருந்தாலும் அப்படிச் செய்ய முடியாதிருந்ததால் வெறும் சாந்தியை மட்டுமே செய்து அங்கேயே வசித்தார்கள். தந்தை இறந்த ஆறே மாதங்களுக்குள் அவனுடைய ஒரே தங்கை அம்மை நோயில் இறந்து போனாள். வீட்டைக் காலி செய்யாமலிருந்ததுதான் இதற்குக் காரணம் என்று பேசிக் கொண்டார்கள். அம்மா, அத்தை, அவனும் கூட பயந்து விட்டார்கள். அதேபோல இப்போது அத்தை இறந்த வேளையும் மிகவும் கொடியது; வீட்டை விட்டு வெளியே போக வேண்டும் என்று பட்டர் யோசனை சொன்னதும் அதைச் செய்வதற்கு முன்பின் யோசிக்கவில்லை. சில மாதங்களுக்கு முன்னால்தான் கிராமத்துத் தபாலாபீசு நடத்துவதற்கு வாட கைக்கு விட்டிருந்த அவர்களுடைய இன்னொரு வீடு காலியாகியது. அதை மறு படியும் யாருக்கும் வாடகைக்கு விட்டிருக்கவில்லை. அத்தை இறந்து பன்னிரண்டு நாட்கள் கழிந்ததும் புது வீட்டுக்குக் குடி போனார்கள். விட்டு வந்த வீடு பழைய தாகவும் இருந்ததால் சூதகம் தீர்ந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு திரும்பி அங்கே போவதற்கு மனம் இல்லை. சாந்தி, ராட்சஸ ஹோமங்கள் ஆன பிறகு அந்த வீட்டை ரிப்பேர் செய்து யாருக்காவது வாடகைக்கு விடலாம் என்று நினைத்துக் கொண் டிருந்தார்கள்.

முந்தா நாள் அந்த வீட்டின் மூளியான பின் கதவை தள்ளிக் கொண்டு பசு உள்ளே நுழைந்ததாம். ரிப்பேருக்காகப் பொன்னப்பாச்சாரியை வரச் சொன்னபோது 'கொஞ்சங்கூட நேரமில்லை, ஒரு வாரம் கழித்துப் பார்க்கலாம்' என்று சொல்லி யிருந்தான். அவன் அப்படிச் சொன்னபோது தானே போய் ரிப்பேர் செய்ய

வேண்டும் என்ற எண்ணம் இவனுக்குக் கொஞ்சம் கூட இல்லை. கட்டில் மீது படுத்த பிறகு வெளியே அம்மாவும் புரோகிதரும் தன் கல்யாணத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்ததைக் கேட்டதும் நடுங்கிப் போய் எங்கேயாவது இங்கிருந்து தூரமாகப் போய்விட வேண்டும் என்று தோன்றியதே தவிர இன்ன இடத்துக்குத் தான் போக வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவில்லை. ஆனால் அம்மா "எங்கடா கௌம் பிட்டே?" என்று கேட்டவுடனேயே பழைய வீட்டுக்குப் போகும் எண்ணத்தில், முன்பு தாய் சமையல் வீட்டுக் கதவை நினைவூட்டியபோது, கதவு ரிப்பேரைத் தானே செய்ய வேண்டும் என்ற முடிவு அவனுக்குத் தெரியாமலே உருவாயிற்று. அடுத்த கணம் பொன்னப்பாச்சாரியின் வீட்டுக்குப் போய் ரம்பத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டு வரவேண்டும் என்று தோன்றியது. இரம்பம் கொண்டு வந்தால் குளியல் அறையில் குவியலாகக் கிடந்த சட்டங்களில் ஒன்றை மூன்று துண்டுகளாக்கிக் கதவின் வெளிப்பக்கத்தில் அடித்து விட்டால் பொன்னப்பாச்சாரியின் கைக்கு ஒய்வு கிடைக்கும் வரையிலாவது மறுபடியும் மாடு வீட்டுக்குள் போவதைத் தடுக்கலாம் என்று தோன்றியது. ஆனால், 'எங்காவது தூரமாக வெளியே போக வேண்டும் என்னும் வேகத்தில் முந்தைய யோசனைகள் எவ்வளவு வேகமாக மாறின என்றால் மறுபடியும் எப்போதும் பொன்னப்பாச்சாரியின் வீட்டுக்கு தான் ஒருவனே போவ தில்லையென்று தான் ஆணையிட்டு முடிவு செய்து கொண்டதுகூட மறந்து விட்டது. பொன்னப்பாச்சாரியின் வீட்டுக்கு முன்னால் போய் நின்றவனை அவன் மனைவி முகத்தைச் சுழித்து, 'ஐயா, நீங்களா' என்று கேட்ட போதுதான் வந்தது. அவன் மனைவி "தினமும் காலையில் எழுந்து கங்காவளிக்கு வேலைக்குப் போனா ராத்திரி ரொம்பநேரம் கழிச்சித் தான் வீட்டுக்கு வராரு" என்று மற்றொரு தடவை ஒய்யாரமாகச் சொல்லி, வீட்டு முன்னால் உட்கார்ந்து குழந்தையின் கூந்தலை வாரிக் கொண்டிருந்தவள், "நீ இப்போ விளையாடப் போடீ" என்று அதை விரட்டிவிட்டு இவன் பக்கம் திரும்பி "என்ன வேணும்" என்று கேட்ட போது, 'சே! பொன்னப் பாச்சரியின் மனைவி ரொம்ப மோசமான பெண்பிள்ளை, ஊரின் இரண்டொரு ஆண்களை (...)த்தூஉ எப்படித்தான் தனக்கு இதெல்லாம் மறந்து போயிற்றோ; ஏன்தான் இங்கே வந்தேனோ?" என்று நினைத்தான். உடம்பெல்லாம் முள் குத்தின. தலையெல்லாம் ஒரே குடைச்சல், தான் எதற்காக வந்தோம் என்பது கூட மறந்தே போய் விட்டது போலிருந்தது. இன்னும் பேசாமலே இருந்தவனைச் சீண்டி பொன்னப்பாச்சாரியின் மனைவி, "ஏதாவது வேணுமா?" என்று கேட்டாள். அப்பா, அவள் கண்கள்! ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி அப்படியே அங்கிருந்து திரும்ப வேண்டியவன், நல்ல காலம், அந்த நேரத்திற்குத்தான் எதற்காக வந்தோம் என்பது நினைவுக்கு வந்தது. இல்லாவிட்டால் பொன்னப்பாச் சாரியின் மனைவி தன்னைப் பற்றி என்ன நினைத்திருப்பாளோ, "ஒருநாள் பொழுதுக்குக் கொஞ்சம் ரம்பம் வேண்டும்"என்றான் தடுமாறிக் கொண்டே. பொன்னப்பாச் சாரியின் மனைவி உள்ளே போய் ரம்பம் கொண்டு வந்து கொடுத்து, "இவ்வளவுதானா?" என்ற கேள்வியைப் பார்வையிலேயே வீசி, "உங்கள் பழைய வீட்டுப் பின் திண்ணையில் தேவி அடுப்பு வச்சிருக்காளாமே? கொஞ்சம் நேரத்துக்கு முன்னால் ஏகநாத செட்டி கடைக்குச் சாமான் வாங்கப் போனபோது பார்த்தேன். அவள் தைரியமே தைரியம். அப்படி விட்டு விட்டு வந்த வீட்டின் திண்ணையில்..." என்றபடி குறுநகை புரிந்தாள்.

பொன்னப்பாச்சாரியின் மனைவி தேவியைப் பற்றிப் பேசும்போது புன்னகை

செய்தது நினைவுக்கு வந்தது. பழைய வீட்டின் பின்பகுதியில் நுழைந்து கொம்பு களைப் பொறுக்கிக் கொண்டிருந்த தேவியைக் கண்ட பிறகே நேற்றிரவு தான் கடை யிலிருந்து திரும்பியபோது அம்மா சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. தான் கடைக்குப் புறப்பட்டுப் போனதும் தேவி வந்திருந்தாளாம். பின்னால், திண்ணையின் மேல் அடுப்பு வைத்ததும் சமையல் அறைக்குள் போய் மாட்டை ஓட்டி விட்டுக் கதவைக் குறுக்கே சாத்தி...அடடா, எல்லாமே இப்போது நினைவுக்கு வருகிறது. சீச்சீ என் மறதி, பாழாகிப் போக...தேவியைப் பார்த்தது அவனுக்குப் புலனாவதற்குள் அவனுடைய முதல் எண்ணத்தில் மாறுதல் ஏற்பட்டது. வீட்டுக்குப் பின்னால் போய் சமையலறையிலிருந்து சட்டத்தைக் கொண்டு வந்து கதவுக்கு வெளியிலிருந்து அடித்தால் போதும் என்று நினைத்திருந்தான். ஆனால் அந்த எண்ணத்தில் மாறுதல் ஏற்பட்டது அவன் நினைவுக்கு வந்தது. விட்டுச் சென்ற வீட்டில் நுழைந்து வெளிக்கதவுக்கு உள்ளேயிருந்து தாழ்ப்பாள் போட்டு நடு அறையின் கதவைத் திறந்ததும் உள்ளே இருட்டிலிருந்து 'பட்பட்' டென்று இறக்கையடித்துக் கொண்டு வௌவால்கள் மேலே விழுந்து போன போதும், அத்தை சாகும்போது படுத்திருந்த அறையைக் கடக்கும் போது, 'கும்' என்று வந்த விசித்திரமான வாசனையும் தொப்புளைச் சுற்றிலும் நடுங்க வைத்தது. அவசரம் அவசரமாக அடியெடுத்து வைத்து சமையல் அறைப்பக்கம் போனான். பூஜை அறையில் இருளோ இருள்; அதைக் கடக்கும்போது காலடியிலிருந்து எலியோ சுண்டெலியோ கீச்கீச் என்று கத்தியபடியே ஓடியபோது துள்ளி விழுந்தான். சமையல் அறைக்குப் போய்ச் சேர்ந்த பிறகுதான் மனம் கொஞ்சம் அமைதி அடைந்தது. பின் பக்கத்து மூளிக் கதவின் சந்து பொந்துகளிலிருந்து கொஞ்சம் வெளிச்சம் உள்ளே வந்தது. எப்படியோ மேற்குப் பக்கத்துச் சன்னலை அடைந்து கதவைத் திறந்தான். இன்னும் கொஞ்சம் வெளிச்சமும் காற்றும் உள்ளே வந்தன. இங்கு எங்கோ மூலையில் மேல் பலகையில் டப்பாக்களை வைக்கவும் எடுக்கவும் உபயோகப் படுத்திய ஸ்டூல் இருந்தது நினைவு வந்தது. இருட்டில் தேடிக் கொண்டு வந்து அதன் மேல் உட்கார்ந்தான்.

அத்தை இறந்த வேளை கெட்டது என்று விட்டுச் சென்ற பழைய வீடு, மாலை நேரத்தில் கவிந்து வந்த இருட்டு; மாதக் கணக்காகக் கதவுகளை மூடி, காற்றுப்புகாத அந்த வீட்டில் நிரம்பியிருந்த ஏதோ ஒரு பழைய நெடி; காலிட்ட இடமெல்லாம் தூசி; தானிருந்த நிலைமையை இப்போது தான் புரிந்து கொண்டதைப் போல ஸ்டூலின் மேல் உட்கார்ந்தபடியே நடுங்கினான். இவ்வளவு நடந்தது அந்தப் பாழும் தேவியால் தான். முன்பின் தெரியாத பெண். தோட்டத்தில் விவரமாகப் பேசிய (மார்பைக் காட்டிய) அவளுக்குப் பயந்தல்லவா தான் இங்க வந்து மாட்டிக் கொண்டது. இல்லாத ஒய்யாரத்தைக் காட்டிய அந்தப் பெண். பொன்னப்பாச்சாரியின் மனைவி தேவியைப் பற்றிச் சொல்லும் போது அப்படிப் புன்னகை செய்யாமல் இருந் திருந்தால் ஒரு வேளை இப்படி எல்லாம் ஆகியிருக்காதோ என்னவோ! சிராத்த சாப்பாட்டுக்குப் பிறகு அம்மாவும் பட்டரும் தன் கல்யாணத்தைப் பற்றிப் பேசாமல் இருந்திருந்தால் வெளியே போவதைப் பற்றியே நான் நினைத்திருக்க மாட்டேனோ என்னவோ! அல்லது இன்று வீட்டில் பித்ருபட்சமே இல்லாதிருந்தால் நான் இந்த நேரத்துக்கு ஹாயாகக் கடையில் உட்கார்ந்திருப்பேனோ என்னவோ...அம்மா, பட்டர் மேலும், அன்று பிற்பகலில் பிண்டங்களை ஏற்றுக் கொண்ட பித்ருக்கள்

மேலும் அவனுக்குக் கோபம் வந்தது. அம்மாவுக்கு தன் கல்யாணத்தைப் பற்றிப் பேசுவதற்கு நேரம் பொழுது என்பதேயில்லை. நாள் முழுவதும் எள், கருப்பு எள், தர்ப்பை, பிண்டம், சவ்யம், அபசவ்யம் முதலியவற்றில் சிக்கிக் கொண்டிருந்த போது அந்தக் கதையை அவிழ்க்கவில்லை. "இவனுக்கு இப்போது என்ன குறைஞ்ச வயசா?, பட்டரே? இவன் வயசுப் பசங்களுக்கெல்லாம் கல்யாணம் ஆகி இரண்டிரண்டு குழந்தைங்க இருக்கு. கேக்கறப்பல்லாம் நான் பிரம்மச்சாரியாகவே இருப்பேன். எனக்குக் கல்யாணம் வேணாமின்னு சொல்வான். முதலில் நாங்க வெறும் விளை யாட்டுக்காக அப்படிச் சொல்லியிருக்கலாம்ன்னு நினைச்சிட்டிருந்தோம். அந்தச் சாமியார் இந்தச் சாமியார்ன்னு யார் யாரோ எழுதின புத்தகங்களை எல்லாம் படிக்கிறானாம். தினமும் சூரிய நமஸ்காரமும் ஆசனங்களும் செய்றான். இவனுடைய இந்த வேண்டாத பைத்தியத்தை விரட்டியடிக்கற பெண் எங்க இருக்கறாளோ? மருமகளின் முகத்தைப் பார்க்கணும், பேரனைப் பார்க்கணும்ன்னு ஆசையை மனசில வச்சிகிட்டே இவர் கண்ணை மூடினார். அதே ஆசையை வச்சிட்டிருந்த அத்தையும் செத்துப் போனா. இவன் கல்யாணம் பண்ணலேன்னா எங்க வம்சம் எப்படித் தொடரும், பட்டரே? எங்களுக்கு வேறு குழந்தைங்களா இருக்கு?" அம்மாவின் குரலில் அழுகையும் சேர்ந்து கொண்டது. அதைக் கேட்டதும் எழுந்தேன். ஆனால் எழுந்ததும் இப்படியெல்லாம் ஆகுமென்று யாருக்குத் தெரியும். இருட்டுக் கவியும் வேளையில் இந்தப் பாழான வீட்டில் மாட்டிக் கொண்டேனே. இப்படியே இங்கிருந்து புறப்பட்டுப் போனால் என்ன? நாளை பொன்னப்பாச் சாரிக்கு ஒழியும்போது அவனைக் கொண்டே ரிப்பேர் செய்தால் போயிற்று. நான் செய்ய வேண்டிய வேலையா இது என்று நினைத்தான். மறு கணமே அப்போதே விழித்தெழுந்த தன்மானம் குறுக்கே வந்தது. இதுவரையில் வந்தாகிவிட்டது. இவ்வள வெல்லாம் கஷ்டப்பட்டு (மாலை நேரம் பொன்னப்பாச்சாரி வீட்டில் இல்லாத நேரத்தில் அவன் மனைவியைப் பார்ப்பதென்பது அவ்வளவு லேசான வேலையா?) ரம்பம் கொண்டு வந்தாயிற்று. தேவி இந்த குடி இல்லா வீட்டைப் பற்றிப் பயங் காட்டிய போதும் அதன் சுவடே இல்லாதவனைப் போல் வீட்டுக்குள் நுழைந்தா யிற்று. கொண்டு வந்த ரம்பத்தைத் திருப்பி எடுத்துக்கொண்டு போகும் போது தேவி பார்த்தால் தனக்குப் பயந்தே திரும்பி விட்டான் என்று நினைக்க மாட்டாளா? இதற்கு மேல் வீட்டுக்குப் போன பின் அம்மா கேட்டால் அல்லது நாளை பொன்னப்பாச் சாரி ரம்பத்தை எதற்காக வாங்கிக் கொண்டு போனீர்கள் என்று விசாரித்தால் என்ன சொல்வது? கதவுக்குச் சட்டம் அடிக்கலாம் என்று போனேன்;ஆனால் அங்கிருந்த தேவிக்குப் பயந்து அப்படியே திரும்பி விட்டேன் என்று சொல்லலாமா? கதவுக்குக் குறுக்குச் சட்டம் அடித்து முடித்தால் அல்லாது திரும்பிப் போவதற்கில்லை. அவ்வளவுதான். முதலில் வெளியே இருந்து அடிக்கலாம் என்று நினைத்தான். இப்போது சட்டங்களை உள்ளேயிருந்து அடித்தால் போதும் (பின்பக்கத்துத் திண்ணையில் அடுப்பு மூட்டியிருக்கின்ற தேவியின் கண்ணில் மறுபடியும் படுவதும் தப்பு) என்று நினைத்தான். இந்த முடிவுக்கு வந்ததும் உள்ளுக்குள்ளிருந்த பயம் அந்த நிமிஷத்தில் கொஞ்சம் விலகிப்போனது போல் தோன்றியது. பின் திண்ணையின் மேல் காலடி ஓசை, வளையல் ஒலி, தேவி வந்திருக்கலாம் என்று தோன்றியது. மறு கணமே புதிதாக ஒரு கேள்வி முன்னால் வந்து நின்றது. அடடா, இன்று எனக்கு என்னதான் ஆகிவிட்டது? கதவுக்குக் குறுக்கே அடிக்கச் சட்டத்தைக் கொண்டு வர

வேண்டுமானால் குளியலறைக்குள் போக வேண்டும். குளியலறை இருந்தது பின் திண்ணையின் வலது கோடியில். அப்படியானால் தேவியின் கண்ணில் படுவது என்பது தப்பாது, சே! ஏன்தான் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இங்கே வருகிற எண்ணம் தோன்றியதோ? கொஞ்ச நேரத்துக்காகவாவது கடையைத் திறந்து உட்கார்ந்து கொண்டு இருந்திருக்கலாம். இப்போதும் போகலாமே. சாவிக் கொத்து சட்டைப் பையிலேயே இருந்தது. ஆனால் இந்த ரம்பத்தை என்ன செய்வது? இதை எடுத்துக் கொண்டே கடைக்குப் போனால் சே!சே! நல்ல வேளை, தெய்வம் அவனைக் கைவிடவில்லை. ஸ்டூலிலிருந்து எழுந்து சமையலறையில் அடுப்பு விறகைப் போட்டு வைக்கும் மூலையில் தேடியபோது கனத்த பலகைத் துண்டு ஒன்று கையில் கிடைத்தது. 'ஆ!' என்றான். இதையே ரம்பத்தினால் அறுத்து மூன்று கட்டைகளாகத் தயாரிக்கலாம் என்று தோன்றியது. இப்படித் தோன்றியதும் என்றுமில்லாத சுறுசுறுப்புடன் பலகையை அறுக்கத் தொடங்கினான். அறையின் இருட்டில் பலகையின் கனமும் நீள அகலங்களும் கைக்குத் தட்டுப்பட்டனவே தவிர பலகையை இனம் கண்டு கொள்ள முடியவில்லை. என்றைக்கோ பிள்ளையாருக்கு மனை செய்ய உதவும் என்று கொண்டு வந்து வைத்திருந்த அந்தப் பலகை பொன்னப்பாச்சாரி பல நாட்களாக உபயோகப்படுத்தாமல் மழுங்கிப் போன ரம்பத்துக்குச் சுலபமாக அசைந்து கொடுக்கவில்லை. அதனால் என்ன, கதவுக்குக் குறுக்குச் சட்டம் அடிக்காமல் திரும்பிப் போவதில்லை என்னும் முடிவு பொய்யாகாதல்லவா.

இந்த விஷயத்தில் அவன் மனத்தில் எழுந்த கோபம் ரம்பத்தின் மழுங்கிய பற்களுக்குக் கீழே பலகை எழுப்பிய கரகர சத்தத்தில், உடம்பில் பனியாகத் துளிர்த்த வேர்வையில், உள்ளங்கையில் கிளம்பிக் கொண்டிருந்த கொப்புளங்களில் தெளிவாகத் தெரிந்தது. வெளியே இருந்து தேவி ஏதோ சொல்லி இருக்க வேண்டும். ஆனால் ரம்பத்தின் கரகர சத்தத்தில் சரியாகக் கேட்கவில்லை. கேட்கும் பொறுமையும் இருக்கவில்லை. கடைசியில் அறுக்கும் வேலை முடிந்ததும் 'உஷ், அப்பா' என்றான். ஆனால் அந்த முட்டாள் தனத்தில் தனக்கேற்பட்ட களைப்பைப் பற்றி எள்ளளவும் அவனுக்குத் தெரிந்ததாகப் புலப்படவில்லை. உடம்பில் வாய்க்காலாக வழியத் தொடங்கின வியர்வையைப் பற்றிக் கூட அவனுக்குத் தெரியவில்லையோ என்னமோ! அதைத் துடைத்துக் கொள்ளும் பொறுமையும் இல்லாதவனைப் போல அறுத்துத் தயார் செய்த சட்டங்களில் ஒன்றையெடுத்து, கதவின் மேல் குறுக்காக வைத்து ஆணி அடிப்பதற்குத் தயாராகும்போது சட்டத்தைப் பிடித்துக் கொள்வதற்கு யாராவது இருந்தால் நன்றாய் இருக்குமல்லவா என்று நினைக்கும் போதே வெளியிலிருந்து தேவியின் கம்மிய குரலும் வளை ஒலியும் கேட்டன. பாழாய்ப் போனவள் இன்னும் இங்கேயே இருக்கிறாளோ, மூளியாகிப் போன கதவின் சந்து வழியே உள்ளே இணுக்கிப் பார்க்கவில்லையல்லவா? வெட்கங் கெட்டவள், யாராவது பார்த்து விட்டால்?

"விளக்கு வைக்கற நேரம். இப்படி குடியில்லாத வீட்டில நுழைந்து உள்ள என்ன செய்றாரோ? இந்த பிரம்மச்சாரியின் தைரியமே தைரியம்!" தேவியின் இந்தப் பேச்சினால் அவனுக்குக் கோபம் வருவதற்குப் பதிலாகச் சொல்ல முடியாத பயத்தில் உடம்பு நடுங்கியது. தான், இன்னும் குடி இல்லாத வீட்டின் உள்ளே இருக்கிறோம் என்பது இப்போதுதான் அறிவுக்கு எட்டியதைப் போல. வெளியே மறுபடியும் வளைகளின் சிணுங்கல். ஏனோ இப்போது தேவி இன்னும் அங்கேயே இருக்கிறாள்

என்ற எண்ணத்தில் கொஞ்சம் தைரியம் வந்ததுபோல் இருந்தது. கதவுக்கு வெளியே இருந்தால் என்ன, இன்னொரு மனித உயிர் அருகில் இருக்கிறது என்ற எண்ணத்தில் ஒரு சமாதானம். சட்டத்தைக் குறுக்கே வைத்து ஒரு முனையில் ஆணி அடிக்கத் தொடங்கினான். "இதோ, பொன்னப்பாச்சாரியின் வேலைய இவரே செய்கிறாரு. கதவுக்கு ஆணி அடிக்கறதா இருந்தா வெளியிலிருந்து அடிச்சா ஆகாதா? இப்படி இருட்டு நேரத்தில குடி இல்லாத வீட்டில் நுழையணுமா?" தேவி முணுமுணுத்தாள். ஆணி அடிக்கும் சப்தத்தைக் கேட்டு, பக்கத்துத் தோட்டத்தில் சங்கரராயர் வீட்டுத் திண்ணையிலிருந்து அவர் வீட்டுச் சமையல்காரி, ஆள் உயர வேலிக்கு அப்பால் நின்றுகொண்டு, தேவி தனக்குச் சரியாகத் தெரியாவிட்டாலும் உரத்த குரலில், "அது யாரடி, தேவி, குடியில்லாத வீட்டின் உள்ளே ஆணி அடிககிற சத்தம்?" என்று கேட்டாள்.

"பிரம்மச்சாரி முதலாளி வந்தாரு. முந்தா நாளு கதவை உடைச்சிகிட்டு மாடு உள்ள நுழைஞ்சிட்டுதில்லையா? அதைச் சரி செய்றதுக்காக வந்திருக்காரு" என்று சொல்லிய தேவி காரணமில்லாமல் 'உக்கும்' என்றாள் இந்தப் அதிகப்பிரசங்கத் தினால் மட்டும் அவனுக்குக் கோபம் வரவில்லை. அவள் கொஞ்சம் கூட மரியாதை இல்லாமல் தன்னை 'பிரம்மச்சாரி முதலாளி' என்பது எள்ளளவும் அவனுக்குப் பிடிக்கவில்லை. அதற்காக அவளைக் கோபித்துக் கொள்ளும் தைரியமும் அவ னுக்கு இதுவரை ஏற்படவில்லை. என்ன இருந்தாலும் தேவி வெட்கங்கெட்ட பெண், அவள் வாயில் விழும் வெட்கங்கெட்ட வேலையை அவன் ஏன் செய்தான்? கொஞ்ச நாளைக்கு முன்னால் நடந்த சங்கதி இந்த வீட்டிலிருந்து போவதற்கு இரண்டொரு மாதங்களுக்கு முன்னால் நடந்தது. குளியல் அண்டாவுக்குத் தண்ணீர் கொண்டு வருவதற்காகக் கிணற்றுக்குப் போன போது தேவி கிணற்றுக்கருகில் கல்மறைவில் நின்று கொண்டு தண்ணீரில் நனைவதற்காகப் போட்டிருந்த துணிகளைக் காலினால் மிதித்துக் கொண்டிருந்தாள். ஈரமாகக் கூடாது என்று புடவையை முழங் காலுக்கு ரொம்ப மேலே தூக்கிப் பின்னால் முடிந்திருந்தாள். தேவியை அவன் அந்த வேஷத்தில் முன்னால் எப்போதும் பார்த்ததில்லை. மழமழப்பான சதை நிரம்பிய வெறுந்தொடைகளை ஆச்சரியத்தோடு இமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்ற வன் தன் உணர்வு பெற்றது, "இதா, அதென்ன அப்படிப் பார்க்கறீர்கள்" என்று தேவி கேட்ட பின்புதான். தேவியின் இந்தக் கேள்விக்குச் சங்கரராயர் வீட்டின் சமையல் வேலையிலிருந்த யாரோ "யார் கூடடி பேசிட்டிருக்கே, தேவி?" என்று எதிர்க் கேள்வி கேட்டார்கள். தேவி, 'பிரம்மச்சாரி முதலாளி' என்னும் போது இவன் 'ஐய்யோ' என்று சொல்வது போல தன் உதட்டில் கையை வைத்துக் கொண்ட போது தேவி 'களுக்' என்று சிரித்தாள். தேவி எப்போதும் இப்படித்தான். இப்போது மட்டுமல்ல. முன்னால் சிறிய வயதிலிருந்தே அவன் அவளை அறிவான். சங்கர ராயர் வீட்டிலேயே பெரியவள் ஆனவள் அவள். அப்போது உடம்பில் வயது நிரம்பி தளதளவென்ற சொல்லும்படி அவளுக்கு- சங்கரராயரே முன்பு ஒரு தடவை அவளைத் திட்டும்போது சொன்னது- இரண்டு வருஷங்களுக்கு முன்னால் தான் கல்யாணம் நடந்தது. ஆனால் கல்யாணம் நடந்த சில நாட்களிலேயே கணவன் ஓடிப் போனான். எங்கே போனானோ எதற்காகப் போனானோ யாருக்குமே தெரிய வில்லை. இராணுவத்தில் சேர்ந்திருக்கிறான் என்று கொஞ்ச நாளைக்கு முன்னால் யாரோ செய்தி கொண்டு வந்தார்கள். இராணுவத்தில் சேரட்டும் அல்லது மயானத்

துக்குப் போகட்டும் எனக்கென்ன. தேவியின் மேல் காரணமில்லாமல் ஏற்பட்ட கோபம் ஆணியின் மேல் விழுந்த கல்லின் அடியில் சரியாகத் தெரிந்தது. "இதோ, இப்படியெல்லாம் ஆணி அடிச்சா அப்புறம் கதவைத் திறக்கவே முடியாது" என்று தேவி சொன்ன பேச்சுக் கேட்ட பிறகு முதலில் நினைத்ததை விட இரண்டு ஆணிகள் கூடுதலாகச் சட்டத்தில் இறங்கின.

அப்புறம் கொஞ்ச நேரம் ஒவ்வொரு சட்டமாகக் குறுக்கே வைத்து ஆணி அடித்து ஒழுங்காக அமைத்துக் கொண்டு இருக்கும் போது கதவுக்கு வெளியே இருந்து கொண்டு ஏதேதோ முணு முணுவென்று பேசிக் கொண்டிருந்த தேவியின் மேல் வந்த கோபம்; இப்படிப்பட்ட வேளை கெட்ட வேளை, குடியிராத வீட்டுக்குப் போகும்படி செய்த பொன்னப்பாச்சாரி மனைவி மீது வந்த கோபம்; இதெல்லா வற்றுக்கும் மூலகாரணங்களான அம்மா, புரோகித பட்டர், செத்துப் போன பித்ருக்கள் மேல் உள்ள கோபம். எல்லாமாகச் சேர்ந்து, ஏகநாத செட்டியின் கடை யிலிருந்த வாங்கி வந்த கால் சேர் ஆணிகளையும் கதவில் அடித்துச் சட்டங்களில் இறக்கி விட்டான்.

கடைசியில் அணி அடிக்கும் வேலை முடிந்து 'உஸ் அப்பா' என்று சொல்லிக் கொண்டே ஆணி அடிப்பதற்காக எடுத்த கல்லைக் கீழே வைக்கும்போதுதான் வீட்டினுள் இருந்த இருட்டு மிக அதிகமாக ஆகிவிட்டது என்பது தெரிந்தது. உடனே குளிர்ச்சியான பயத்தில் நடுங்கினான். தாழ்ப்பாள் உடைந்து போய் மூளியான கதவை ஜோடித்துச் சட்டம் அடிக்கும் வரையிலிருந்த தைரியம், சட்டத்தை அடித்துக் கதவைப் பத்திரமாகச் செய்தவுடனே கரைந்து போய்விட்டது. ஏதோ கோபத்தின் வேகத்தில் ஏற்பட்ட தைரியம். கோபம் தன் இலக்கைக் கண்டவுடனேயே இனம் தெரியாத பயத்துக்கு இடம் கொடுத்தது. வீட்டின் உள்ளே நுழைய அஞ்சாமல் இருந்தவன் உள்வேலை முடிந்து வெளியே எப்படிச் செல்வது என்று பயப்பட்டான். இருட்டு நிரம்பிய பூஜை அறை, அத்தை சாகும் போது படுத்திருந்த அறை இவற்றை யெல்லாம் தாண்டி, உள் திண்ணை வெளித் திண்ணை எல்லாவற்றையும் கடந்து எப்படி வெளியே போவதோ? ஏதோ ஆவேசத்தில் சமையல் அறை வரை வந்தவன் இப்போது திரும்பிப் போகும் வழியின் நீளம் திடீரென்று எப்படியோ அதிகமாகி இருக்கிறது என்ற எண்ணத்தில் நடுங்கினான். பூஜை அறையைக் கடக்கும்போது காலடியில் முன்பு போலவே எலியோ அல்லது சுண்டெலியோ ஓடுமோ; (தோட்டத் தின் மூலையில் மூங்கில் புதரில் பாம்பு நுழைந்தது உண்மைதான், பட்டரே) அதற்கடுத்த அறையைத் தாண்டும்போது அத்தையே கண்முன்னால் நின்றாள்; கல்யாணமான ஒன்று அல்லது இரண்டு வருஷத்தில் கணவன் செத்து விதவையான அத்தை, குழந்தை குட்டி இல்லாமல் கடைசி வரையில் தம்பி வீட்டிலேயே கழித்து வயதான காலத்தில் மூட்டு வலியினால் மாதக் கணக்காகப் படுக்கையில் கிடந்து, அந்த இடத்திலேயே நைந்து நைந்து செத்தாள். துர்நாற்றம் பிடித்த அந்தக் கிழவி செத்த வேளையும் நல்லதல்ல என்று விட்டுப் போன வீடு-சமையல் அறையில் நின்ற இடத்திலேயே அவன் தன் உடம்பு வியர்ப்பதை உணர்ந்தான்.

"கதவுக்கு ஆணி அடிச்சிதக்கப்புறமும் இவர் உள்ள தனியாக என்ன செய்றாரு" சட்டத்தை அடித்துப் பத்திரமாக்கிய கதவைத் தள்ளிப் பார்த்தாளோ என்னவோ தேவி. கைமுட்டியால் டக்டக் என்று தட்டியதைப் போல் கேட்டது. இவன் திடுக்கிட்டு விழித்துக் கழுத்தில் வழிந்த வேர்வைத் துளிகளை சட்டையின் நுனியிலேயே

துடைத்துக் கொண்டான். ரம்பத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அடி யெடுத்து வைத்துப் பூஜை அறைக்கு வந்ததும் 'ஆ' என்றான். பயத்தில் கத்திவிடக் கூடாது என்பதைப் போல வலக்கையால் வாயை மூடிக்கொண்டான், பூஜை அறையி லிருந்து அடுத்த அறைக்குப் போகும் வாயிலில் இவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தது குரங்கைப் போன்ற ஓர் உருவம். குரங்குதான். அல்ல அல்ல, செத்துப் போன அத்தை, அவனுடைய அத்தை படுக்கையில படுத்துப் படுத்துச் சலித்துப் போனால் வெளியில் உள்ள வெளிச்சத்தைப் பார்ப்பதற்காக இப்படித் தான் வாசற்படியின் பக்கத்தில் இப்படித்தான் கூனி உட்கார்ந்திருப்பாள். மொட்டைத் தலையின் மேல் வெள்ளை முக்காடு இட்டுக் கொண்டு. ஆமாம் ஆமாம். அத்தை தான்.

இவன் காலடிச் சத்தம கேட்டதோ என்னும்படி அவன் வழியில் குறுக்கே உட்கார்ந்திருந்த மிருகம் திடீரென்று விலகி இவனைப் பார்க்கும் வகையில் திரும்பி 'கெக்' என்றது. ஒ, ஆமாம்.. ஆண் குரங்கு இந்த இரவு நேரத்தில், இப்படிக் குடியில்லாத வீட்டில் இந்தக் குரங்கு எப்படி வந்ததோ? ஏன் தன் வழியில் குறுக்கே உட்கார்ந்திருக்கிறதோ? இல்லாத தைரியத்தை வருவித்துக் கொண்டோ அல்லது பயம் முன்பு இருந்ததை விட அதிகம் ஆனதாலோ 'தத்' என்றான். அதை ஒட்ட நினைத்து, அது இருந்த இடத்திலிருந்து அசையவில்லை. இன்னொரு தடவை கீச் என்று பல்லைக் காட்டியது அவ்வளவுதான். அவன் நெஞ்சு படக் என்றது. இருட்டு வேளை; பாழ் மனை; பூஜை அறையிலிருந்து மேலே போகும் வழியை அடைத்துக் கொண்டு எங்கிருந்தோ ஓடிவந்த குரங்கு உட்கார்ந்திருக்கிறது. தன்னைப் போலவே ஏதோ ஒரு விருப்பம் இல்லாத காரணத்தினால் இந்த வீட்டில் சிக்கிக் கொண் டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் விரட்டப் போனால் முதலிலேயே பயந்திருக்கிற குரங்கு இன்னும் கொஞ்சம் மிரண்டு தன் மேலேயே பாயுமோ என்னவோ? குரங்கின் நகம் பட்டால் பைத்தியம் பிடிக்குமாம். கேர்கர்ணத்து அப்பண்ணபட்டரின் மக னுக்குப் பைத்தியம் பிடித்ததே அப்படித்தானாம். அவசரம் அவசரமாகப் பின்னாலேயே போய், சமையல் அறையை அடைந்தான். அடைந்ததும் சரசர வென்று பூஜை அறை—சமையல் அறைக்கு நடுவிலிருந்த கதவை மூடிக் கொண்டான். தாழ்ப்பாள் போடலாம் என்றால் அந்தக் கதவுக்குத் தாழ்ப்பாளே இல்லை (பழைய வீட்டின் பாழும் கதவுகள்). தன் உடம்பெல்லாம் ஏராளமாக வியர்த்து இருக்கிறது என்ற நினைப்பிலேயே இன்னும் நடுங்கினான். பொழுது ஏற ஏற உள்ளறையின் வாசற்படியில் உட்கார்ந்திருந்த குரங்கு 'குக்' என்றது. நெஞ்சில் அச்சத்தின் அலை எழும்பியது. ஜன்னல் அருகே ஒடோடி வந்தான். ஜன்னலுக்கு வெளியே பலா மரத்துக்குக் கீழே இவன் பக்கம் முதுகைக் காட்டி உட்கார்ந்து கொண்டு தேவி ஏதோ செய்து கொண்டிருந்தாள். இவன் முன்பின் யோசிக்காமல் 'தேவி' என்றழைத்தான். அப்படி அழைத்த பிறகுதான் அவள் தேவி என்பதை உணர்ந்தவனைப் போல உடனே அவள் பார்வையிலிருந்து தப்புவதற்காகத் தலையைத் தாழ்த்திக் கொண்டான். தன்னுடைய இந்த செயலுக்காகத்தானே வெட்கமுற்றான். தேவியை அழைத்து என்ன சொல்லட்டும்? முன் அறையில் குரங்கு வந்து உட்கார்ந்திருக்கிறது, என் வழியைத் தடுத்திருக்கிறது அதற்குப் பயந்து நான் வெளியே வர முடியாமல் இங்கேயே இருக்கிறேன் என்று சொல்வதா என்று எண்ணி தன் செயலை ஆமோதித்துக் கொண்டான். ஜன்னலிடமிருந்து ஒடி வந்து சட்டம் அடித்துப் பத்திரமா

யிருந்த கதவுக்கு அருகிலிருந்த ஸ்டூலின் மீது உட்கார்ந்தான். தான் அழைத்ததை, தேவி உண்மையில் கேட்டிருந்தால், தான் அவளை அழைத்து விட்டுத் தலை தாழ்த்தி மறைந் ததை உண்மையில் பார்த்திருந்தால், இல்லை இல்லை .கேட்டிருக்க மாட்டாள். ஆனாலும் ஸ்டூலிலிருந்து எழுந்து மறுபடியும் ஜன்னல் அருகே போய் சுவர் ஓரமாக நின்று ஜன்னல் கதவை இழுத்துக் கொண்டான். அறையினுள் இருந்த இருட்டு உடனே அதிகமாயிற்று. அதேபோல உயிரைப் பிடித்த பயமும் கூட. முன் பக்கத்துக் கதவு வழியாகப் போகலாமா? குரங்கு வழி மறித்திருக்கிறது. இப்போது வெளியே போவதற்கு ஒரே வழிதான். அரைமணி நேரம் வரை வியர்வை வடிய ஆணி அடித்துக் கெட்டியாக்கி யிருந்த கதவுகளைத் திறப்பது. ஆனால் அப்போது ஏதோ கோபத்தின் வேகத்தில் கதவில் அடித்த ஆணிகளை எடுப்பது அவ்வளவு சுலபமாக இல்லை. அதை எடுப்பதற்கு வேண்டிய சாமானையும் கொண்டு வரவில்லை. மிச்சமிருப்பது ஒரே வழி, இரண்டு கதவுகளும் ஒன்றுக்கொன்று பொருந்திக் கொள்ளும் சந்திப்பில் சட்டங்களை ரம்பத்தினால் அறுப்பது. அப்படியே செய்யத் தொடங்கினான்.அப்படி அறுத்துக் கொண்டிருந்த போதே பின் வீட்டில் அதே திண்ணையில் ஏறிவந்த சங்கரராயர் தமது மனைவிக்கோ வேறு யாருக்கோ சொன்னது காதில் விழுந்தது: "இந்தப் பாழ்வீட்டில் இன்னைக்குக் குரங்கு நுழைஞ் சிருக்குதுன்னு நினைக்கறேன். அவுங்க தோட்டத்தைத் தாண்டி வரும்போது வலையைப் பிரிச்சிட்டு மாடிவழியே வெளியே வருவதைப் பார்த்தேன்" என்றார். ஓகோ, உள்ளே பார்த்தது அப்படியானால் குரங்குதான், அப்படியானால் அத்தைப் பிசாசு அல்ல; ஆமாம், தான் அந்தச் சட்டங்களுக்கு ஆணி அடித்துக் கொண்டிருந்த போது, "இந்தக் குரங்குகளுக்கு வந்த கேடு என்ன? ஓட்டின் மேல் விளையாடுகின்றன" என்று தேவி சொன்னது இப்போது மெல்ல நினைவுக்கு வந்தது. உள்ளே வரும் போது திண்ணையின் கூரையில் தென்னை மட்டையோ காயோ விழுந்து ஓடு முறிந்து ஓட்டையாகியிருந்ததும் இப்போது ஞாபகம் வந்தது. வீட்டுக் கூரையின் மேல் விளையாடிக் கொண்டிருந்த குரங்கு இந்த ஓட்டை வழியாக எப்படியோ உள்ளே விழுந்திருக்க வேண்டும். ஆகா, வீணாகப் பயந்தேன் அல்லவா? என்று நினைத்துக் கொண் டிருக்கும்போதே கதவுக்கு அடித்திருந்த மூன்று சட்டங்களும் துண்டாகி யிருந்தன. அப்போதிலிருந்து பத்திரமாக மூடிக் கொண்டிருந்த கதவுகள் மெல்லத் திறந்தன. குளிர்ச்சி, காற்று இவை உள்ளே நுழைந்தன. அதன் பின்னாலேயே தேவி உள்ளே வந்தாள். "அப்பவே நீங்க ஜன்னல் வழியாக கூப்பிட்டப்பவே எனக்குத் தெரிஞ்சிட்டுது முதலாளி" என்று சொல்லிக் கொண்டே தன் பின்னாலேயே கதவை மூடிவிட்டாள்.

# அண்ணய்யனின் மனத்தத்துவம்

ஏ.கே. ராமானுஜன்

அவனுக்கு ஆச்சரியம். மிகுந்த ஆச்சரியம்.

இந்த அமெரிக்க மானிட இயல் அறிஞன், இந்த ஃபர்கூ சனைப் பாருங்கள். மனு நீதியைப் படித்திருக்கிறான். இவனுக்கு நம்முடைய சூதகங்களைப் பற்றி எவ்வளவு தெரிந்திருக்கிறது, தான் பிராமணன். தனக்கு இதெல்லாம் தெரியவில்லை.

அமெரிக்காவுக்கு வர வேண்டும் ஆன்ம ஞானத்துக்கு. மகாத்மாக்கள் சிறையில் உட்கார்ந்து கம்பிகளுக்கிடையில் சுயசரிதம் எழுதியதைப் போலே. நேரு இங்கிலாந் துக்குப் போய் சொந்த நாட்டைப் பற்றித் தெரிந்து கொண்டதைப் போலே, தூரத்தி லிருந்தால் பச்சை.

நம் உடம்பின் பன்னிரெண்டு திரவங்களிலிருந்து நமக்கு நோய்கள் ஏற்படு கின்றன. உடம்பின் அழுக்கு, வீரியம், இரத்தம், மூளையின் நிணநீர், சிறுநீர், மலம், கொழுப்பு, காதுக்குறும்பி, கண்ணீர், கண்ணில் பீளை, தோலின் வியர்வை (மனு 5. 135)

சிகாகோவிலிருந்தாலும் நினைப்பதெல்லாம் கன்னடத்தில்தான். ஒன்று, இரண்டு, மூன்று, நாலு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று, பதினொன்று, பதினொன்று. முதல் தடவை எண்ணியபோது பதினொரு மலங்களே கிடைத்தன. திரும்பவும் எண்ணும்போது பன்னிரண்டு, சரியாகப் பன்னிரண்டு அவனுக்குத் தெரிந்த இந்தப் பன்னிரெண்டில் எச்சில், ஒன்று, இரண்டு சிறு வயதிலேயே சொல்லியிருந்தார்கள். எச்சில் பண்ணக் கூடாது. கக்கூஸுக்குப் போனால் சரியாகக் கழுவ வேண்டும், சிறுநீர் கழித்தால் கழுவ வேண்டும். அவ னுடைய அத்தை கக்கூஸுக்குப் போகும் போது ஒரு பிடி மண் கூடவே எடுத்துக் கொண்டு போவார். அவர் இருந்த வரையில் தோட்டத்தில் ஒரு மண் குழி எப்போதும் இருக்கும்.

தென்னாட்டில் வாயில் வைத்து எச்சில் பண்ணி ஊதுகிற நாதஸ்வரம் முதலியவை தொடக் கூடாத பொருள், எச்சில்—தொடக்கூடாதவர்கள் மட்டுமே வாசிக்கக் கூடிய வாத்தியம். வீணை பிராமணர்களுக்கு, முக வீணை கீழ்ச்சாதி யினருக்கு.

பானையை விட வெள்ளிப் பாத்திரமும், பருத்தியை விடப் பட்டும் உத்தமம். காரணம் அதற்கு இந்தப் பன்னிரண்டு மலங்களும் அவ்வளவு சுலபமாக ஒட்டுவ தில்லை. பட்டு, பட்டுப் புழுவின் உடம்பிலிருந்து வந்த மலம் என்பது உண்மை. ஆனால் அது மனிதர்களுக்கு மடி (உயர்ந்தது) பாருங்கள் எப்படி இருக்கிறது?

இந்த அமெரிக்கர்களுக்கு எவ்வளவு விஷயங்கள் தெரிகின்றன-. எந்தெந்த நூல் நிலையத்துக்கோ போய்ப் பார்த்திருக்கிறார்கள், எந்தெந்த காசிப் பண்டிதர்

களையோ பிழிந்தெடுத்து புலமை ரசத்தை இறக்கியிருக்கிறார்கள். எங்கெங் கேயோ ஒலைச் சுவடிகளையும் கையெழுத்துச் சுவடிகளையும் தூசு தட்டி விஷயங்களாகச் சேகரித் திருக்கிறார்கள். ஆச்சரியம். பரம ஆச்சிர்யம்.

இந்திய நாட்டைப் பற்றிக் கற்க வேண்டுமானால் பிலடெல்பியா, ஃபர்க்லி, சிகாகோ அப்படிப்பட்ட இடங்களுக்கு வர வேண்டும். நமக்கு எங்கே இருக்கிறது இவர்களுடைய அக்கறை? விவேகானந்தரும் கூட சிகாகோவிற்கு வந்தாரல்லவா? அவர் நம்முடைய தர்மத்தைப் பற்றிப் பேசிய முதல் பேச்சு இங்கேதான். சூதகம் உண்டாக்கும் மூன்று செயல்களில் மாதவிலக்கு முத லானது. குழந்தை பெறுவது அதைவிட ஒரு டிகிரி மேலானது. எல்லாவற்றையும் விட பலமான சூதகம் சாவின் சூதகம். சாவின் சாயல் இருந்தால் போதும். என்னென்ன சூதகம் கொண்டு வரும்! எரியும் கட்டையின் புகைபட்டால் போதும். பிராமணன் தலை முழுக வேண்டும். புலையர்களைத் தவிர வேறு யாரும் செத்தவன் உடுத்திய துணியை உடுத்து வதற்கில்லை (மனு 10-39)

மங்கலமானவற்றில் மங்கலமான பசு இறந்தால் அதன் மாமிசத்தைத் தின்பவர்கள் எல்லாரையும் விட இழிந்த ஜாதி, காகமும் பருந்தும் கூட இந்தக் காரணத்துக்காகவே பறவைக் கூட்டத்தில் கீழ் ஜாதி. பல நேரத்தில் சாவுக்கும் தீண்டாமைக்கும் இருக்கும் தீட்டு மிகவும் நுண்மையானது வங்காளத்தில் வாணிய ஜாதியில் இரண்டு உட் பிரிவுகள்: எண்ணெய் விற்பவர்கள், உயர்ந்தவர்கள். ஆனால் செக்கு ஒட்டி, கொட்டை அரைத்து எண்ணெய் எடுப்பவரின் ஜாதி கீழ் ஜாதி. காரணம், அவர்கள் விதையைக் கொல்பவர்கள். சாவோடு தொடர்புடையவர்கள் (ஹட்டன் 1946: 77-78) இதெல்லாம் இவனுக்குத் தெரியவே தெரியாது.

அவன் ஒன்றும் படிக்காதவன் அல்ல. மைசூரில் ஒவ்வொரு நாளும் பல்கலைக் கழக நூல் நிலையத்துக்கு நடந்து நடந்து செருப்பைத் தேய்த்திருந்தான். அங்கே தெரிந்த கிளார்க்குகள் ஐந்தாறு பேர், அதிலும் ஷெட்டி அவன் கூடவே எக்னா மிக்ஸ் வகுப்பில் படித்துப் போன வருடம் பெயிலாகி, நூல் நிலைய வேலையில் சேர்ந்திருந்தான். அண்ணய்யன் வரும்போதெல்லாம் ஷெட்டி அவனிடம் நூல் நிலையத்தின் சாவிக் கொத்தையே கொடுத்து வேண்டிய புத்தகத்தைத் தேடி எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி விடுவான்.

கனமாக சாவிக் கொத்து. கையாண்டு கையாண்டு, கைக்குக் கைமாறி தேய்ந்து மழ மழப்பாக மின்னிக் கொண்டிருந்த இரும்புச் சாவிகள். அவற்றின் நடுவில் சிறிதாக இருந்த மஞ்சள் நிறத்துப் பித்தளைச் சாவிகள். பித்தளைப் பூட்டுக்குப் பித்தளைச் சாவிகள். பெண் பூட்டுக்கு ஆண் சாவி; ஆண் பூட்டுக்குப் பெண் சாவி. பெரிய தற்குப் பெரியது. சிறியதற்குச் சிறியது. சில மட்டும் பெரிய பூட்டுக்குச் சிறிய சாவிகள், சிறிய பூட்டுக்குப் பெரிய சாவிகள். இப்படி வேறுபாடு. மாற்றம், கலப்பு—இந்தப் புத்தகத்தில் மனு சொல்லியிருந்த திருமணங்களைப் போலே. சில பீரோக்களுக்குப் பூட்டு பெரிதாக இருந்தாலும் பூட்டுப் போட முடிவதில்லை. தொட்டால் விட்டுப் போகும். சில குரங்குப் பிடி. உடைத்துதான் திறக்க வேண்டும். அதற்குப் பின்னால் அவன் கண்ணில் படுகிற ஆனால் கைக்குக் கிடைக்காத புத்தகங்கள். எப்படிப்பட்ட கதைகள், சமூக இயல், நிர்வாணப் படங்கள் இருக்கின்றனவோ அத்தகைய புத்தகங் களில்!

மைசூரில் இவன் படித்ததெல்லாம் மேலை நாட்டைப் பற்றி. ஆங்கிலம், கன்னடம்

படித்தாலும் அன்னா கரினாவின் மொழி பெயர்ப்பு, மூர்த்தி ராயர் ஷேக்ஸ் பியரைப் பற்றி எழுதிய புத்தகம். அமெரிக்காவுக்குப் போய் விட்டு வந்தவர்கள் எழுதிய கடல் கடந்த தலபுராணங்கள், அபூர்வமான மேல்நாடு அமெரிக்காவில் நான் —இப்படி.

மலசுத்திக்கு மனு 11 வழிகளைச் சொல்லியிருககிறான். பிராமண விதிகள், நெருப்பு, பிரசாதம், மண், அந்தக் கரண சம்யமம், தண்ணீர், சாணத்தை எடுத்து இட்ட நீர், காற்று, கருமா கிகள், சூரியன், காலம்—இவை உடலை உடைய உயிர்களைத் தூய்மைப் படுத்துகின்றன. (மனு 5 105)

இந்த வெள்ளைக்காரர்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது? இவ்வளவு தூரம். பத்தாயிரம் மைல்கள். தண்ணீர், சூரியன், காற்று, நிலம் காலங்களையெல்லாம் தாண்டிவநது இவன் இந்தக் கெட்ட நாற்றத்தின் சிகாகோவில், அண்ணய்ய சிரௌதிகளின் விதையில் முளைத்த அண்ணய்யன் இங்கே வந்து இதை யெல்லாம் படிக்க வேண்டியதாயிற்று. இந்தக் குளிரில் இந்த வெள்ளைப் பனியில். அநத வெப்பம் அந்த வெயில அந்தக் கறுத்த ரகசியங்களையெல்லாம் இந்த வெள்ளை ஜனங்கள் எப்படித் தெரிந்து கொண்டுவிட்டார்கள்! இந்த மந்திரத்தை இவாகளுக்கு யாா காதில் ஒதினார்கள்? ஜெர்மானிய மாக்ஸ்முல்லர் சமஸ்கிருதம் படித்து மோட்ச முல்ல பட்டனாக நமக்கே வேதத்தைக் கற்பித்தானே!

இந்தியாவில் இவன் அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பா என்று படித்ததைப் போல இங்கே இந்த அமெரிக்காவில் இவன் திரும்பத் திரும்ப இந்தியாவைப் பற்றிப் படித்தான். பேசினான். கிடைத்தவர்களுக்கெல்லாம் காப்பி கொடுத்து அவர்கள் கொடுதத பீரைக் குடித்து, வெள்ளைக்காரப் பெண்களின் கையைப் பிடித்துத் தனக்குத் தெரியாத கைரேகைகளைப் பறறிச சொன்னான்

இங்கே மானிட இயலில் (ஆந்த்ரோ பாலஜீயில்) ஆாவம். காமாந்தகாரனைப் போல இந்தக கலவியில் நாட்டம்—வெட்கமில்லை பயம இல்லை இதற்கு. இந்திய நாட்டின் மரபுகளைப் பற்றி மானிட இயல் அறிஞாகள எழுதிய, கையில் கிடைத்த எல்லாவற்றையும் படிததான். இரண்டாவது அடுக்கின் மேல் அந்தப் புத்தகம் கந்தல் கந்தலாக இருந்தது. அதன் எண். பி. கே 321. ஏணி ஏறி பழமையாகிப் போன மரத்தில் அமைத்துக் குழாய்க் கைப்பிடி போட்ட அடுக்கு. இந்த மேல் நாட்டில் இந்தக் கீழை நாடு வந்து சோந்தது. தூரததுப் பச்சையோ? இன்டா நேஷனல் ஹவுசில் அறிமுக மான வெள்ளைப் பெண்கள்.

"உங்கள் வீட்டுப் பெண்கள் நெற்றியில் சிவப்புப் பொட்டு வைத்துக் கொள் கிறார்கள் அல்லவா, அது ஏன?" என்று கேட்ட போது அந்த ஆாவத்துக்குப் பதில் தர வேண்டும் என்றோ மைசூரில் அவனுடைய தகப்பனார் எவ்வளவு சொன் னாலும் கோபித்துக் கொண்டாலும் செய்யாத கீதைப் பாராயணத்தை அமெரிக் காவில் செய்தது! பீர், விஸ்கி, மாட்டு இறைச்சி. கக்கூ ஸுக்குப் போனால் சுத்தம் செய்ய நீரில்லாமல் காகிதத்தால் துடைத்துக் கொள்ளும் இழிவு. பிளேபாய் பத்திரி கையின் நிர்வாணமான முலை, தொடை, ரூபாய் அகலத் தொப்புள் இவற்றில் சிக்கி விடுவித்துக் கொண்ட விடுதலையில் அவன் பொருளாதாரத்தின் (எக்னாமிக்ஸ்) இடையில் இந்த இரண்டு ஆண்டுகள் இந்து சம்பிரதாயங்களைப் பற்றிப் படித்தான். ஸ்டாடிஸ்டிக்ஸில் எண்களுக்கு இடையில் இராமகிருஷ்ண ஆசிரமத்துப் புத்தகப் பட்டியல். இந்து கலாச்சாரத்தைப் பற்றி அறிய அமெரிக்க வர வேண்டும் என்று

சொல்லிக் கொண்டு இருந்தான். எங்கள் சிகாகோ நூல் நிலையத்துக்கு 'பிரஜா வாணி' கூட வருகிறது பாருங்கள். இந்து கலாச்சாரத்தின் கதவுகளுக்குப் போட்ட பூட்டுகள் பலவற்றுக்கு அமெரிக்கச் சாவி கிடைத்தது. சாவிக் கொத்தே கிடைத் திருக்கிறது.

அவன் அன்று அந்தப் புத்தக அலமாரிகளின் நடுவே நடந்து சென்றபோது சட்டென்று ஒரு புதிய புத்தகம். நீல நிறத் துணியில் பைண்ட் செய்த புத்தகம். கைநிறையும் அளவு பெரிய புத்தகம். நீல முதுகின் மேல் பொன் எழுத்துக்களில் Hinduism: custom and ritual என்று எழுதியிருந்தது. ஸ்டீபன், ஃபர்கூஸன் எழுதியது. இப்போதுதான் 1968ல் அச்சானது. சுடச்சுடச் சமாசாரம். சீமந்தம், நாமகரணம், முதல் தடவை மொட்டையடித்தல், அன்னப் பிராசனம், உபநயனம், கலியாணத்தில் சப்தபதி, சாந்தி முகூர்த்தத்தில் கொடுக்கும் பால் பழம் பாதாம்.

புது மனைவிக்கு ஏலக்காய் பாதாம் பொருள் தின்னக் கொடுத்து நேராக பாதாம் பாலைக் குடிப்பான் ரசிகன் என்று ஏதோ ஹீணசூர் சாந்தி முகூர்த்தம் ஒன்றில் யாரோ ஒருவன் கீழ்த்தரமான ஜோக் சொல்லியிருந்தான்.

கணவன் மனைவிக்குச் சொல்லுகிற சமஸ்கிருதப் புணர்ச்சி மந்திரம், சஷ்டி அப்த பூர்த்தி, சாந்திகள், பிராயச் சித்தங்கள் தானங்கள், உத்தரக் கிரியைகள் முதலிய சடங்குகள் எல்லாம் விவரமாகத் தனித்தனியாக பட்டியல் போட்டு வெளிப்படை யாகவே எழுதியிருந்தார்.

163ஆம் பக்கம் பிராமணர்களின் உத்தரகிரியையின் வர்ணனை படங்களுடன் எவ்வளவு விஷயங்களைச் சொல்லியிருந்தான்! ஃபர்கூஸன் என்கிற இந்த ஆள்? பித்ருமேர சூத்திரம், சபிண்டம், யார் ஏற்றவர்கள் யார் அல்லாதவர்கள். சந்நியா சிக்கும் பல் முளைக்காத குழந்தைக்கும் சூதகமில்லை; பல் முளைக்காத குழந்தை செத்தால் ஒரு நாள் தீட்டு, மொட்டையடித்திருந்தால் மூன்று நாள்: சிராத்தத்துக்கு ஏழு பேர் வேண்டும்; மகன், பேரன் அவன் மகன் சிராத்தம் செய்யக் கூடியவர்கள். தந்தை, பாட்டனார், கொள்ளுப் பாட்டனார் செய்வித்துக் கொள்கிறவர்கள். மூன்று தலை முறை மேலே, மூன்று தலைமுறை கீழே; நடுவில்தான். ஏழு பிண்டங்களில் நடுப் பிண்டம். இத்தகைய விவரங்கள் எத்தனையோ கூடவே எந்த ஜாதியில் யாருக்கு எத்தனை நாள் என்பதற்குப் பட்டியல்கள். அது மட்டுமல்ல, வேறு நாட்டில் சபிண்டம் செத்தால் கேட்பவர்களுக்குச் சூதகமில்லை. செய்தி கேட்டதும் சூதகம் சுற்றிக் கொள்கிறது. அதற்கேற்ற நாள் கணக்கும் குளியல்களும் முடிக்க வேண்டும். இவனுடைய அக்கறையும் ஆர்வமும் வாக்கியத்துக்கு வாக்கியம் மிகுந்து கொண்டே போயிற்று.

புத்தகங்களின் நடுவில் அப்படியே உட்கார்ந்து கொண்டு படித்தான். சிராத் தத்தின் நான்கு பாகங்களையும் புத்தகம் கூறியது. அவனோ யாருடைய சாவையும் பார்த்தவன் அல்ல. மூன்றாவது தெருவில் வண்ணார் பிணத்துக்கு அலங்காரம் செய்து ஊர்வலமாக எடுத்துக் கொண்டு போனதை இரண்டொரு தடவை பார்த் திருக்கிறான். அவ்வளவுதான். பெரியப்பா செத்தபோது அவன் பம்பாய்க்குப் போயிருந்தான். வீட்டில் தந்தைக்குக் கொஞ்சம் சிறுநீர்க்கோளாறு இருந்தாலும் நாக்கைக் கட்டுப்படுத்தி வைத்தால் உயிருக்கு ஆபத்து இல்லை என்று சொன்னார் டாக்டர். ஒன்றரை ஆண்டுக்குப் பிறகு பாரிச வாயு அடித்துக் கை விழுந்துவிட்டது. முகத்தின் இடப்பக்கம் கோணியது என்றாலும் சௌக்யம் என்று அம்மா இரண்டு

வாரங்களுக்கொரு தடவை எழுதிக் கொண்டிருந்த உற்சாகமற்ற கடிதம். அங்கே சனிக்கிழமை சனிக்கிழமை எண்ணெய் தேய்த்துக் கொள்ளாமல் இருந்து விடாதே, சூடு ஏறி விடும். சீயக்காய் அனுப்பப்பட்டுமா? என்றெல்லாம் நடுங்குகிற கையெழுத்தில் கடிதங்களில் எழுதிக் கொண்டிருந்தார்.

ஒரு பிராமணனுக்குச்சாவு நெருங்கியதும் அவனைக் கட்டிலிலிருந்து எடுத்து தர்ப்பை பரப்பிய நிலத்தின் மேல் கால் தெற்குப் புறமாக இருக்கும்படி படுக்கவைப் பார்கள். உடம்பு நிலத்துக்கும் ஆகாயத்துக்கும் நடுவில் தடையாக கட்டிலின் மேல் இராமல் பூமியின் மேல் கவலையின்றிக் கிடத்த வேண்டும் தர்ப்பையோ பூமியிலிருந்து ரசத்தை உறிஞ்சிய ரசவாதி நெருப்புக்கும் விருப்பமானது. தெற்கு யமனுடைய திக்கு, பித்ருக்களின் திசை.

அதன் பிறகு வலது காதில் வேத மந்திரம். வாயில் பஞ்ச கவ்யம் மனிதர்கள் செதத உடல் தீட்டு. உயிரோடு இருக்கும் பசுவின் சாணம மடி (உயர்ந்தது) பத்து தானங்கள், எள், பசு, பூமி, நெய், பொன், வெள்ளி, உப்பு, துணி, தானியம், சர்க்கரை. சாகிற வன் செத்தவுடனேயே அவனுடைய மக்களில் ஆண்கள் எல்லாம் குளித்து, மூத்த மகன் பூணூலை வலது தோளுககு மாறறி அசுபததைக குறிக்கும் வகையில் போட்டுக் கொள்கிறான் அந்த உடம்புக்கு மடி உடுத்து விபூதி அணிந்து பூமித்தாய்க்குச சுலோகம் சொல்லுவார்கள்.

இநதப் பக்கததை அடுத்து ஒரு மெல்லிய காகிதத்தில் படம் இருந்தது. மைசூர்ப் பக்கத்தில் இருப்பது போன்ற வீட்டின் முன் பக்கத்து வராந்தா. பின் சுவரில் கம்பி போட்ட ஜன்னல். வராந்தாவின் தரையின் மேல் மடி உடுத்து சிங்காரித்துப் படுக்க வைத்திருந்த சவம்

செத்தவன் தெய்வம் அவன் தேகம் விஷ்ணு அவள் ஆனால் அது லட்சுமி. தெய்வத்திற்குச் செய்வது போலவே அதற்கும் பிரதட்சணம், கற்பூரம் காட்டுதல் எல்லாம் நடக்கிறது.

யமனுக்கு இப்போது தீ வளர்த்து அதில நெயயை அவிசாகச் சொரிகிறார்கள். சவத்துக்கும் நெருப்புக்கும் தொடர்பு ஏற்படுவது போல ஒரு நூல் இழை. சவத்தின் கால் கட்டை விரலகளைக் கட்டி அதன் மேல் புதிய வெள்ளைத் துணியைப் போட்டு மூடுகிறார்கள்.

இதனுடைய படம் ஒன்றும் அங்கே இருந்தது. அதே மைசூர் வீட்டைப் போன்ற வீடு. அதே கம்பி போட்ட ஜன்னல். ஆனால் இரண்டொரு விபூதி அணிந்த பிராமணர்கள் படத்தில் இருந் தார்கள் எங்கேயோ பார்த்தது போலவும் இருந்தது. இவ்வளவு தொலைவில் மைசூரின் விபூதி அணிந்த பிராமணர்கள் எல்லாம் ஒரே சாம்பல் முகத்தோடு காட்சி தந்தார்கள்.

நான்கு பேர் பிணம் தூக்குபவர்கள். பாடை கட்டி வீட்டுக்கு எதிர்ப்புறமாக பிணத்தின் முகத்தைத் திருப்பிக் கடைசி ஊர்வலம் புறப்படுகிறது

இங்கே மற்றொரு படம். மைசூரிலிருப்பதைப் போலவே தெரு சந்தேகமில்லை. நாலைந்து வீடு. நன்றாகத் தெரிந்தது போலிருந்தது. மூன்று இடங்களில் ஊர்வலம் நின்று பாடையை இறக்குகிறார்கள். அதை வலம் வந்து அசுப தெய்வங்களுக்கு அரிசியை இறைக்கிறார்கள்.

சுடுகாட்டிற்கு வந்த பிறகு தெற்குமுகமாகச் சிதையின் மேல் உடலை இட்டு, கட்டை விரலின் கட்டை அவிழ்த்து மூடியிருந்த வெள்ளைத் துணியை எடுத்து, சுடுகாட்டைக்

காக்கும் தோட்டிக்கு அதைத் தானம் செய்கிறார்கள். மகனும் உறவினரும் பிணத்தின் வாயில் நீரில் ஊறிய அட்சதையைப் போடுகிறார்கள். பொன் நாணயம் ஒன்றால் அதன் வாயை மூடுகிறார்கள். இடுப்புக்குக் கீழே சிறிய வாழை இலையோ துண்டோ தவிர பிறந்த மேனியாகவே இப்போது இருக்கிறது அது.

பொன் இந்தக் காலத்தில் எங்கே கிடைத்ததோ தெரியவில்லை. பதினான்கு காரட் ஆனாலும் பரவாயில்லையோ? வேதம் ஒப்புக் கொள்ளுமோ?

மூத்த மகன் புதுப் பானையில் நீர் நிரப்பி, அதன் பக்க வாட்டில் ஒரு ஓட்டை போட்டு தோளின் மேலிட்டுக் கொண்டு சிதையைச் சுற்றி பிரதட்சிணம் செய்து நீரை நிலத்தில் சிந்துகிறான். மூன்று தடவை ஆன பிறகு தோளின் பின்னால் அதை வீசி உடைக்கிறான்.

சுடுகாட்டின் படம் ஒன்றும் இருந்தது. அதைப் பார்த்து இவன் மனம் கலங்கியது. எதனாலோ இது முன்பே அறிமுகம் ஆனது போலத் தோன்றியது. நல்ல காமிரா வினால் எடுத்த படம். சிதை, உடல், முன் தலையை மழித்து, கிராப் வைத்துக் கொண் டிருந்த நடுவயது மனிதன். தோளின் மேல் நீர் சொட்டும் பானை. தொலைவில் மரங்களும் மற்றவர்களும்.

அடே, அந்த நடுவயதுக் காரனின் முகம் தெரிந்த முகம். தாயாதி சுந்தர ராயரின் முகம். ஹுணசூரில் ஸ்டுடியோ வைத்திருந்தார். இது ஏன் இங்கே வந்தது? இந்தப பாவி இங்கெங்கே வந்தான். அடுத்த பக்கத்தில் இருந்தபடத்தில் சிதை எரிந்து கொண் டிருந்தது. அதன் கீழே அக்னி தேவனுக்குச் சொன்ன மந்திரங்கள்,

"ஏ அக்னியே, இந்த மனிதனின் தேகத்தைச் சுட வேண்டாம். இவன் தோலைச் சுட வேண்டாம். இவனைப் பக்குவம் செய்து பித்ருக்களிடம் சேர்த்து விடு.

ஏ அக்னியே, நீ இந்த எஜமானின் யாகத்தில் பிறந்தாய், இப்போது உன்னிட மிருந்து மறுபடியும் இவன் பிறக்கட்டும்."

மந்திரத்தைப் பாதியில் நிறுத்தி திரும்பவும் முன் பக்கத்தைத் திருப்பி, தாயாதி சுந்தர ராயரின் முகத்தைப் பார்த்தான். தெரிந்த முகம். கண்ணாடியைக் கழற்றி வைத்திருக்கிறார். பாதி நரைத்த முழு கிராப்புக்குப் பதில் சாஸ்திரத்துக்காக கொஞ்சம் வெளுத்த அரைக் கிராப்பு. புதிதாகச் செய்த சர்வாங்கச் சவரம். மார்பின் மீதிருந்த முடியும் இல்லை. தொப்புளுக்குக் கீழ் அகலக் கரை மடி வேட்டி. இவன் ஏன் இங்கே? இந்தப் புத்தகத்தில்?

முன்னுரையைத் திருப்பினான். அதில் இந்தப் ஃபர்கூஸன் என்பவன் போர்டு நிறுவனத்தின் மாணவர்களுக்கான நிதி உதவியுடன் மைசூருக்கு 1966-68ல் போன தாகத் தெரிந்தது. மைசூரில் திரு சுந்தர ராயரும் அவருடைய குடும்பமும் செய்திகளைச் சேகரிப்பதில் மிகவும் உதவி புரிந்ததாகவும் சொல்லியிருந்தது. அதனாலேயே மைசூர் வீடுகள், முன்னாலிருந்த போட்டோக்களை மறுபடியும் திருப்பிப் பார்த்தான். அந்தக் கம்பி ஜன்னல் வீட்டுக்குப் பக்கத்து வீடுகள் கோபியின் வீடும் சம்பங்கி மரத்து கங்கம்மாவின் காலி வீடும். தங்கள் வீடு இருந்த தெரு. அந்த வராந்தா தன் வீட்டு வராந்தா. அந்தச் சவம் தந்தையின் சவமாக இருக்கலாம். முகம் தெளிவாகத் தெரிய வில்லை. பாரிசவாயு தாக்கிய முகம், தெளிவாகப் பார்க்க முடியவில்லை. உடம் பெல்லாம் வெள்ளையாகப் போர்த்தியிருக்கிறது. அந்தப் பிராமணர்களும் தெரிந்த வர்களைப் போலிருந்தார்கள்.

மறுபடியும் முன்னுரையைப் படித்தான்.

சுந்தர ராயர் மிகவும் உதவி செய்திருந்தார். தன் உறவினர்களுடைய வீட்டுத் திரு மணம், உபநயனம், சீமந்தம், உத்தரகிரியை முதலிய எல்லாவற்றுக்கும் அழைத்துக் கொண்டு போய் போட்டோ எடுத்து, எடுப்பதற்கு உதவி செய்து, கேள்வி கேட்டுப் பதில் எழுதிக் கொள்வதற்கும் மந்திரங்களை டேப் ரிக்கார்டரில் பதிவு செய்து கொள்வதற்கும் உதவி செய்திருந்தார். வீட்டில் சாப்பாடு போட்டார். அவருக்கு இந்த மிலேச்சன் அளவில்லாமல் நன்றி செலுத்தியிருந்தான்.

மறுபடியும் சிதையின் போட்டோவைப் பார்த்தான். எரிந்து கொண்டிருந்தது. அதன் கீழே அக்னிக்குச் சொன்ன மந்திரம். மரமும் செடியும் மைசூர் சுடுகாட்டில் இருந்ததைப் போலவே இருந்தன. கீழே சிறிய எழுத்தில் "நன்றி: சுந்தரராயர் ஸ்டுடியோ" அவனே எடுத்த படம்.

அவன் தந்தை இறந்து அவன் பங்காளியான சுந்தரராயன் கர்மாவைச் செய்தான். மகன் வெளி நாட்டில். அவன் தாய் சொல்ல வேண்டாம் என்று கூறியிருக்க வேண்டும். தூரதேசத்தில் தனியாக இருக்கிறான். தந்தையில்லாத அனாதை. கெட்ட செய்தி. எப்படியோ போன வேலையை முடித்துக் கொண்டு வரட்டும் என்று சொல்லியிருக்க வேண்டும். இல்லை, இவனே, இந்த சுந்தரராயனே யோசனை கூறி யிருக்க வேண்டும் வழக்கம்போல. அவன் பேச்சென்றால் கிணற்றில் குதிப்பதற்கும் தயார்தான் அம்மா பாரிச வாயு பிடித்து கை விழுந்து போய் தந்தை கடிதம் எழுத வில்லை என்று சொல்லியிருந்தார்கள். இரண்டு வருடங்களுக்கு முன்னால்—இவன் வந்த மூன்று மாதங்களில அம்மாவுக்கு இன்னும் என்ன செய்தார்களோ, தலையை மொட்டை அடித்தார்களோ எல்லாருமாகச் சேர்ந்து கொண்டு, ஆசார சீலர்கள். சுநதர ராயன் மீது நெருப்பைப் போலக் கோபம் வந்தது நீசன், சண்டாளன் மறு படியும் மறுபடியும் மறுபடியும் சிதையின் படத்தைப் பார்த்தான். கம்பி ஜன்னல், அந்தப் பிணம் சுந்தரராயரின் பாதிக் கிராப்பு, தொப்புள் எல்லாம் பார்த்தான். விளக்கமும் படித்தான்

முன்னும் பின்னுமாகப் பக்கங்களைத் திருப்பினான். கலவரத்தில் புத்தகம் நிலத்தில் முகம் கீழாக விழுந்தது அந்தப் பக்கங்கள் மடிந்து போயின.

அச்சத்தோடு அதையெடுத்துப் பக்கங்களை நீவிப் புரட்டினான், புரட்டினான். அதுவரை எதுவுமே காதில் விழாத அவனுக்கு அந்த காரிடாரின் கோடியில் அமெரிக்கக் கக்கூஸில் யாரோ ஃப்ளஷ் செய்து நீர் வீழ்ந்த சப்தம் ஓ வென்று எழுந்து அடங்கியது கேட்டது.

பக்கங்களைப் புரட்டினான். சீமந்தத்தைப் பற்றிய அத்தியாயத்தில் சீதையைப் போலவே வேடம் போட்டுக் கொண்டு தலையில் கீரிடம் வைத்துக் கொண்டு பல சுமங்கலிகளுக்கு நடுவே கொஞ்சம் உம்மணா மூஞ்சியாக உட்கார்ந்திருந்தாள் அவனுடைய தாயாயதியின் மகள் தமயந்தி அவள் வயிறும் ஏழு மாத கர்ப்பத் தோடு காணப்பட்டது. இந்த சுந்தரராயன், அமெரிக்கன் வந்திருக்கிறான், இதே சமயத்தில் போட்டோ எடுத்துக் கொள்ளட்டும் என்று காத்திருந்து மகளுக்குச் சீமந்தம் செய்திருக்க வேண்டும். உத்தரகிரியை எல்லாம் காட்டலாம் என்று காத்திருக்க வேண்டும். பெரியப்பாவின் வீட்டிலேயே வசதியாக அது கிடைத்தது. காட்டி விட்டான். எவ்வளவு பணம் கொடுத்தானோ அந்த ஃபர்கூஸன் என்கிற ஆள்?

அந்த சுமங்கலிப் பெண்களின் இடையில் தாயின் முகத்தைத் தேடினான். கிடைக்கவில்லை. செண்பக மரத்துக் கங்கம்மாவும் அதற்கடுத்த வீட்டு லச்சம்மாவும் இருந்தார்கள்.

அதே முகங்கள், அதே தட்டை மூக்குகள், தோடுகள், மூக்குத்திகள், காசு அகலத்தில் குங்குமங்கள்.

அவசரம் அவசரமாக வகரம் விகரம் ஆகிய எழுத்து வரிசைகளைக் கடந்து வேதம், வேஷம் இவற்றைத் தாண்டி வைகாநசம், வைதீகம் எழுத்துக்களின் வரிசையில் வைதவ்யம் கிடைத் தது. அதைப் பற்றி ஒரு முழு அத்தியாயமே இருந்தது. இருக்காதோ பின்னே? அதில் இருநூற்றி முப்பத்தி மூன்றாம் பக்கத்துக்கு எதிரில் ஓர் அழகான போட்டோ.

இந்து விதவை. சில சைவ சம்பிரதாயங்களின் படி தலை மொட்டையடிக்கப் பட்டிருக்கிறது.

எல்லாவற்றையும் போலவே தலைப்பு, நன்றி: சுந்தரராயர் ஸ்டுடியோ ஹுணசூர் அம்மாவின் படமா? தெரிந்த முகமானாலும் அறிமுகம் இல்லை. மொட்டையடித்த தலை. மேலே இழுத்து விட்ட முக்காடு. அது கறுப்பு வெளுப்புப் படமானாலும் இவனுக்குத் தெரியும். அது சிவப்புப் புடவை, அழுக்குப் புடவை. சுந்தரராயர் பசிபிக் கடலுக்கு அப்பால் பத்தாயிரம் மைல் தூரத்திலிருந்த ஹுணசூரின் செலுவாம்பா அக்ரஹாரத்தின் பின் தெருவிலிருந்த வீட்டில் குடியிருந்த காரணத் தினால் அன்று உயிர் பிழைத்தார்.

# அடிவானம்

## சாந்திநாத தேசாய்

'பி' டெககின் மேல் தனியாக நின்று கொண்டு மந்தாகினி கடலின் அலைகளையும் ஒரே இடத்தில் நிற்பது போல் காணப்பட்ட அடிவானத்தையும் எவ்வளவோ நேரமாகப் பார்ததபடியே நின்றிருந்தாள். சுற்றிலும் நீரோ நீர்! எந்தப் பக்கம் பார்த்தாலும் ஒரே மாதிரியாக கருப்பு நிறத்தில் பொங்கி எழும் தண்ணீர். மேலே ஆகாயம். அதுவும் மேகங்களால் போர்த்துக் கொண்டிருந்த கரிய வானம். பார்த்துப் பார்த்துச் சலித்துப் போயிற்று. அதே 'டெக்' கின் மேற்புறத்திலிருந்த அழகிய நூல் நிலையத்தின் மெத்தென்ற சோபாவின் மேல் ஏதாவதொரு புத்தகத்தைப் பார்த்துக் கொண்டு உட்காரலாமா அல்லது தன் "காபி"னுக்குப் போய் மாலை ஏழரை மணிக்கு 'டின்னர்' மணி அடிக்கும் வரை குழாய்கள் மூலம "புஸ்" என்று வரும் குளிர்ந்த காற்றில் கால் நீட்டிப் படுததிருக்கலாமா என்று யோசனை செய்தாள். நேற்று இரவு சரியாகத் தூக்கம் வரவிலலை. படகு மிக அதிகமாக ஆடி அசைந்ததன் காரணமாக இருக்கலாம். இன்று பகல் உணவு முடிந்த பிறகு படுக்கலாம் என்றால் அவளுடைய புதிய 'டேபிள் மேட்' திருமதி மொஹித்தேயுடன் முதல் அறிமுகத்துக்குப் பிறகு நடந்த பேச்சுக்கள் திருமதி மொஹித்தேயின் மகன் லண்டனில ஏதோ ஒரு தொழிற் சாலையில் வேலை செய்கிறானாம் பம்பாயில் தான் ஒருத்தியே ஏன் இருக்க வேண்டும்-கணவன் இறந்து பத்தாண்டுகள் ஆகிவிட்டனவாம். வா, வா என்று வற் புறுத்திக் கொண்டிருக்கிறானாம். போனால் போயிற்று, பம்பாய் ஆனால் என்ன, லண்டன் ஆனால் என்ன, எல்லாம் ஒன்றுதான், அங்கேயும் மராத்தி ஜனங்கள் இருக் கிறார்கள்—என்று புறப்பட்டாளாம் அந்தத் தாய். அவளுடைய இரண்டு மணிநேரப் புராணத்துக்குப பிறகாவது போய்ப்படுக்கலாம் என்பதற்குள் அவளுடைய காபின் மேட் மிஸ் ஜோசப் வநது விட்டாள் "மந்தா, கமான்—'சி' டெக்கில் நீச்சல் பார்க் கலாம்"— என்று இழுத்துக் கொண்டு போனாள். ஆஸ்திரேலியப் பெண்களும் பையன்களும் அரை நிர்வாணத்தில் தண்ணீரில், சிரித்தும் விளையாடியும் கூடியும் தமாஷ் செய்ததைப் பார்த்துப் பொறாமை அடைந்த மிஸ் ஜோசப் சொன்னாள்: "மிஸ் பாட்டே, அவர்களுடைய சுதந்திரம் அவர்களுடைய சிரிப்பு, ஆட்டபாட்டம் எல்லாம் பார்த்தால் நம்முடைய வாழ்க்கை வாழ்க்கையே அல்ல என்று தோன்ற வில்லையா உனக்கு? எங்களுக்கு—கிறிஸ்தவர்களுக்கு—ஏதோ கொஞ்சம் ஆர்வம் இருக்கிறது வாழ்க்கையில். உங்களுக்கு? உனக்கு டான்ஸ் தெரியாவிட்டால் எப்படி?" மேலும் அவளுடைய அரட்டை தொடர்ந்தது. "இன்று இரவு டான்ஸ் இருக்கிறதே! அந்த தாடிக்கார சர்தார்ஜி இருக்கிறான் அல்லவா, அவன் காலையிலிருந்து இரண்டு தடவை கேட்டுவிட்டான். தன்னுடன் டான்ஸ் ஆட வேண்டும் என்று. மனம் விரும்பா விட்டாலும் ஆகட்டும் என்று சொல்லியிருக்கிறேன். அந்த முட்டாள் முகர்ஜிக்கு

டான்ஸ் தெரிந்திருந்தால் நன்றாயிருக்கும்." "முகர்ஜி யார்?" மந்தாகினி கேட்டாள். "நேற்று சாயங்காலம் என்னோடு இரண்டு மணி நேரம் அரட்டை அடித்தானே, அந்த கண் சின்னதாக, உயரமாக ஸ்மார்ட் குரங்கு. அவன்தான். கல்கத்தாவில் டாக்டராக இருக்கிறான். எஃப். ஆர்.ஸி.எஸ் படிப்பதற்காக எடின்பரோ போகிறான். ஐ லைக் ஹிம்—ரொம்ப ஜாலி மனிதன். "ஓ, அவனா? இன்றைக்குக் காலையில், டாக்டர் சரோஜா இருக்கிறாளே அவளோடு பாரில் உட்கார்ந்து ஏதோ குடிச்சிட்டிருந்தான். " "ஓ, அப்படியா, உம்...ஸ்பீக் ஆஃப் தி டெவில்ஸ்... அவள் தானே டாக்டர் சரோஜா? அப்பா, எவ்வளவு பருமன்! யானையைப் போல இருக்கிறாளே..." "ஆனால் அவள் நல்லவளாகத் தெரிகிறாள். நேற்று நீ முகர்ஜியுடன் பேசிக் கொண்டிருந்த போது அவள் தானாகவே பேசத் தொடங்கி என்னுடன் அறிமுகம் செய்து கொண்டாள்..." என்று மந்தாகினி சொல்லி முடிப்பதற்குள், டாக்டர் முகர்ஜி, டாக்டர் சரோஜா, இருவரும் அவர்கள் இருந்த இடத்திற்கே வந்து, "மிஸ் ஜோசப், இவர் டாக்டர் சரோஜா, லண்டனுக்கு மேலே மெடிசன் படிப்பதற்காகப் போகிறாள்—இவர் மிஸ் ஜோசப் இவர் லண்டனுக்கு.. இந்தியா ஹவுசில் ஒரு வேலை கிடைத்திருக்கறது, லக்கி" என்ற முகர்ஜியும், இது "மிஸ் பாட்டே, இவர் டாக்டர் முகர்ஜி" என்று டாக்டர் சரோஜாவும் அறிமுகப்படுத்தி வைத்தார்கள். டாக்டர் முகர்ஜியின் கண்கள் மந்தாகினியைப் பாதாதிகேசம் பரீட்சித்தன. பிறகு அவை அவள் மார்பின் மீது நிலைத்த போது அவளுக்கு எப்படியோ இருந்தது. நான்கு மணி அடிப்பதற்கு ஐந்து நிமிஷங்களே இருந்ததால் எல்லோரும் டீ குடிக்கப் போனார்கள். டீ குடிக்கும்போது காளையைப் போல் தோற்றமளித்த சர்தார்ஜி வந்து சேர்ந்து கொண்டான். டீ குடித்த பிறகு, சர்தார்ஜி மிஸ் ஜோசப்புடனும் (ஜோசப் கருப்பாக இருந்தாலும் ஸ்மார்ட்டாக இருக்கிறாள்; சர்தாஜியின் மனத்தில் அவளைப் பற்றி என்ன நினைப்போ!) டாக்டர் முகர்ஜி (உண்மையிலேயே ஸ்மார்ட்டான இளைஞன்! கல்யாணம் ஆகி இருக்காது..) டாக்டர் சரோஜா ஆகியவர்களுடன் கலந்து கொண்டான். மந்தாகினி மெல்லத் தன் காபினுக்குப் போய் பத்து நிமிஷம் சஞ்சல மான மனத்தோடு தன் முகத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். நீண்ட நேரம் உட்கார முடியாமல் கூந்தலைப் பிரித்து, நன்றாக வாரி, தனக்கு மிகவும் பொருத்தமாக அமையும் உயர்ந்த கொண்டையைப் போட்டுக் கொண்டு, முகத்தை நன்றாகக் கழுவி பவுடர் போட்டுக் கொண்டு புடவையையும், ரவிக்கையையும் மாற்றிக் கொண்டு கண்ணாடியில் தன் நிழலுக்கு ஒரு புன்னகையைத் தந்து, "நீ அப்படி ஒன்றும் மோசமில்லை—ஏன், இந்த நீலப் புடவையில் உண்மையிலேயே அழகாய் இருக்கிறாய்..." என்று சொல்லி 'பி' டெக்கின் மேல் வந்து நின்றாள்.

இனி காபினுக்குத் திரும்பி படுத்துக் கொள்வதே நல்லது என்று முடிவு செய்வ தற்குள் அவளது இடப்பக்கத்திலிருந்து சிரோடி* வாசனையோடு ஓர் ஆண் குரல் அவளிடம் ஆங்கிலத்தில் கேட்டது: "இன்று மாலை மிகவும் டல்லாக இருக் கிறது—அல்லவா?"

மந்தாகினிக்குச் சந்தேகம்; இந்த ஐரோப்பியச் சிகப்புக் கிழவன் கேள்வி கேட்டது தன்னிடமா அல்லது எதிரில் உள்ள கடலினிடமா?

"பார்டன், என்னையா கேட்டீங்க?"

---

(மைசூர்ப் பக்கத்தார் விரும்பி உண்ணும் ஓர் இனிப்புப் பண்டம்)

"எஸ். குட் ஈவினிங். நான் ஹாரி மகார்த்தி, கலிபோர்னியாவைச் சேர்ந்தவன். வியாபார விஷயமாக சிட்னிக்குப் போயிருந்தேன். இப்பொழுது திரும்பிக் கொண்டிருக்கிறேன்."

"சிட்னியிலிருந்து விமானத்தில் போயிருந்தால் நன்றாய் இருக்குமல்லவா?"

"இது என் பிளெஷர் ட்ரிப். எனக்கு ஒரு மாதம் லீவ் கிடைத்திருக்கிறது. அதைக் கப்பலில் சுகமாக அனுபவிக்க வேண்டும். கொஞ்சம் உலகத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று...நீங்கள் இந்தியர்தானே!"

"ஆமாம். நான் பம்பாயைச் சேர்ந்தவள். அதாவது பம்பாய்க்கு அருகில். கொஞ்ச தூரத்தில் ஓர் ஊர் இருக்கிறது. அஹமத் நகரம்—அதைச் சேர்ந்தவள். என் பெயர் பாட்டே."

"மிஸஸ் பாட்டே, நீங்கள்..."

"மிஸஸ் பாட்டே அல்ல. மிஸ் பாட்டே!"

"ஓ, சாரி, நான் ஒரு முட்டாள்! மிஸ் பாட்டே நீங்க எங்கே போறீங்க? லண்டனுக்கா?"

"உம். அங்கே அருகில் சிசல் ஹர்ஸ்ட் என்னும் ஊர் இருக்கிறது. அங்கே டி.டி. அதாவது டிப்ளமா இன் டீச்சிங் படிக்க"

"சொந்தச் செலவிலா?"

"இல்லை. நான் வேலை செய்யும் மிஷினரி ஸ்கூல் ஸ்காலர்ஷிப் கொடுத்து அனுப்புகிறது"

"ஸ்காலர்ஷிப்! உம்—நீங்கள் மிகவும் புத்திசாலியாக இருக்க வேண்டும்."

"அதென்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் பி.ஏ.யில் ஃபர்ஸ்ட் கிளாஸ் கிடைத்தது உண்மை—பாடம் வரலாறு பிறகு பி.டி.யிலும் ஃபாஸ்ட் கிளாஸ் கிடைத்தது.."

"அப்படியா? அப்படியானால் நீங்க அமெரிக்காவுக்கு வரணும். அங்கே ஏதாவது ஆராய்ச்சி செய்யலாம். என் குடும்பத்தின் சரித்திரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்தாலும் உங்களுக்கு பி.எச்.டி கிடைப்பது நிச்சயம்" என்று சொல்லி மகார்த்தி சிரித்தான்.

"வெல், இந்தக் கப்பல் வாழ்க்கையை எப்படி உபயோகப் படுத்திக் கொள்கிறீர்கள்? இன்டெரெஸ்டிங்காக இருக்கிறது அல்லவா?"

"நாட் பேட். முதலிரண்டு நாட்கள் கொஞ்சம் தமாஷாக இருந்தது. இப்போது சலிப்பாக இருக்கிறது. வேளைக்குச் சரியாகச் சாப்பாடு, உடுத்துவது. பிறகு சும்மா உட்கார்ந்திருப்பது. அப்புறம் இந்தத் தண்ணீர். ஒரே தண்ணீர். எங்கே பார்த்தாலும் அதே தண்ணீர்..." "தண்ணீர்! கடல்! இந்தக் கடலில் ஒரு தனி உலகமே இருக்கிறது. மிகவும் இன்டெரஸ்டிங்! முந்தா நாள் ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தேன். கடலைப் பற்றி. கடலிலிருக்கிற அளவு உயிர்களும், மீன்களும், அங்கிருக்கும் அளவுக்கு பல வண்ண, பலவகையான வாழக்கையும் மண்ணின் மேலும் இல்லை என்று தோன்றியது. ஆனால் கடலில் மூழ்கும் கலையை அறிந்தவர்களுக்கு மட்டுமே அந்த வாழ்க்கையில் ரொமான்ஸ் தெரியும்..."

"அப்படியோ? நானும் படிக்கணுமே அதை. கடல் வாழ்க் கையைப் பற்றி ஒன்று அல்லது இரண்டு படம் மட்டும் பார்த்திருக்கேன். நீருக்கடியில் உள்ள அந்த உலகம் மிகவும் பயங்கரமானதாக எனக்குத் தோன்றியது."

சிறிது நேரம் இருவரும் கடல்அலைகளையே பார்த்துக் கொண்டு நின்றார்கள். தூரத்தில் சூரியன் சிவப்பாக மாறத் தொடங்கியது. மகார்த்தி அணைந்து போன தனது சுருட்டை மீண்டும் பற்ற வைத்தான்.

"மிஸ் பாட்டே, இரண்டு நாட்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்— இந்தியர் களில் பல பேருக்கு வாழ்க்கையைப் பயன் படுத்திக் கொள்வதற்கே தெரியவில்லை என்று தெரிகிறது. கூச்சம், வெட்கம், அதைரியம், நடுக்கம் இவற்றை விட்டு ஆடுவது சிரிப்பது இதெல்லாம் தெரியவே தெரியாதோ? உங்களையே எடுத்துக் கொள் ளுங்கள். இரண்டு நாட்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் அழுத்தம், தனிமை, ஒதுங்கிக் கொள்ளுதல் இதையெல்லாம் பார்த்து எனக்கு எப்படியோ இருக்கிறது. ஒய் டோண்ட் யூ என்ஜாய் யுவர்செல்ஃப்? ஏன்?"கிழவனின் குரலில் ஒரு நேயம் இருந்தது.

"அப்படியென்றால்?" மந்தாகினியின் பெரிய கேள்வி.

"அப்படியென்றால்—வாழ்க்கையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்...யூ ஷுட் ஹேவ் எ குட் டைம் பிஃபோர் இட் இஸ் லேட்...காலம் கழிவதற்கு முன்னால்"

"அதாவது டான்ஸ், ட்ரிங்ஸ் மற்றும்...மற்றும் லவ் இதுதானே?" என்று சிரித்தாள் மந்தாகினி.

"ஆம். அவையும் சில முக்கிய வழிகள், உண்மை..."

"பாருங்கள், நான் ஒரு இந்தியப் பெண், இந்துப் பெண். நாங்கள் இப்போதுதான் சமையலறையைவிட்டுக் கொஞ்சம் வெளியே வந்திருக்கிறோம் இதெல்லாம் எங்க ளுக்கு ஒரு புதிய உலகம், வெறும் புத்தகங்களிலும் படங்களிலும் கற்பனையிலும் காணும் உலகம்..."

"ஓ! அப்படியானா இங்கிலாந்துக்குப் போன பிறகு என்ன செய்வீங்க? ரோமா புரியில் ரோமானியர்களைப் போல இருக்கணும், தெரியுமா?"

"ஏன்? எங்கே இருந்தாலும் இந்தியர்கள் இந்தியர்களேதான் அல்லவா? ரோமாபுரியில் இந்தியர்களைப் போல இருக்க முடியாதா?"

"வெல் வெல் வெல்—உங்கள் முயற்சிக்குப் பலன் கிடைக்கட்டும்...இஃப் யூ டோன்ட் மைண்ட், உங்கள் வயது என்ன? இது பேட் மேனர்ஸ், தெரியும் என்றாலும் ஆர்வம்—கிழவனின் ஆர்வம். உங்கள் இந்தியர்களின் வயதே எங்களுக்குத் தெரிவ தில்லை."

"இருபத்தைந்து"

"ஓ. கிரேட். சந்தோஷமாயிருப்பதற்குச் சரியான வயது? ஒகே...மறுபடியும் சந்திக் கலாம்...பை, பை" என்று சிறிதாக நகைத்துக் கொண்டே புறப்பட்டுப் போனான். மகார்த்தி.

வயது 28-29 ஆகியிருந்தாலும் 25 என்று சொல்லும் பழக்கம் ஏற்பட்டிருந்தது மந்தா கினிக்கு. தான் உண்மையில் கிழவியாகி விட்டதாகவே அவள் எண்ணம். முழு வாழ்க்கையும் படிப்பதிலும் பிறகு வேலையிலும் தாயையும் தம்பிகளையும் பார்த்துக் கொள்வதிலும் காலம் கழிந்து போய்விட்டது! பி.ஏ. முடித்தவுடனேயே கரந்தி கரிடமிரருந்து அழைப்பு வந்தது. பிறகு அவளுடன் வேலை பார்த்த தேஷ் பாண்டே தொடர்ந்து வீட்டுக்கு வந்து அப்புறம் தன் காதலைத் தெரிவித்து, அவளிடமிருந்து இல்லை என்பதைப் பதிலாகப் பெற்றான். அவளுக்கு வேலையிலிருந்த அக்கறை, பள்ளிக் குழந்தைகளின் மேல் இருந்த அன்பு, பள்ளியின் மேலிருந்த பக்தி

எல்லாவற்றையும் பார்த்து மிஷினரிக்காரர்கள் அவளுக்கு ஸ்காலர்ஷிப் ஏற்பாடு செய்து சிசல் ஹர்ஸ்ட்டுக்கு அனுப்ப முடிவு செய்தார்கள். மூன்று வருஷம் பாண்ட் எழுதி வாங்கிக் கொண்டு. இனி என்ன, வேலையைக் கல்யாணம் செய்து கொண்டது போலத்தான். தப்பென்ன..ஒரு வகையில் அவள் மிகவும் அதிர்ஷ்ட சாலி; எல்லாருக்கும் இப்படி ஸ்காலர்ஷிப்பில் இங்கிலாந்துக்குப் போகும் வாய்ப்புக் கிடைக்குமா? அவள் அசாதாரணமானவள் என்றே இதெல்லாம் கூடி வந்திருக் கின்றன. அவளுக்கு இப்போது ஒரே யோசனை: இங்கிலாந்துக்குப் போக வேண்டும், அங்கே டி.டி.யில் ஃபர்ஸ்ட் கிளாஸ் வாங்கி நல்ல பெயரோடு திரும்ப வேண்டும். இப்போதுள்ள பள்ளிக் கூடத்தில் 3-4 வருஷம் வேலை செய்துவிட்டுப் பிறகு ஏதாவதொரு ஹைஸ்கூலின் பிரின்ஸிபாலாக வேண்டும். நல்ல திறமையான லட்சிய பிரின்ஸிபால் ஆகி விட்டால் அதைவிட அதிகமாக வேறென்ன வேண்டும், வாழ்க்கையில்? எத்தனையோ மிஷினரிப் பெண்கள் கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இருக்கவில்லையா? அவர்கள் பள்ளிக் கூடத்துப் பிரின்ஸிபால் மிஸ் டெய்லர் இல்லையா? அதே போல சுயநலமில்லாத தொண்டுக்கு வாழ்க்கை முழுவதையும அர்ப்பணிப்பதில் ஓர் உயர்ந்த மகிழ்ச்சி இருக்கிறதல்லவா? இப்போது மந்தா கினிக்குக் கொஞ்சம் பசி எடுப்பதைப் போலிருந்தது. சாப்பாட்டு மெனு கார்டிலிருக்கிற கேப்ஸிகம் கறி, சிலோன் ஸ்பன்ஞ், ட்செஃப் சலாட் முதலிய ரொமாண்டிக் பெயர்கள் நினைவுக்கு வந்தன. இன்று வரும் இப்படிப்பட்ட எல்லாப் பெயர்களையும் குறித்து வைத்துக் கொண்டு நாளை தம்பிக்கு எழுதும் கடிதத்தில் அவைகளைப் பற்றி எழுத மறக்கக் கூடாது என்று முடிவு செய்த அவள் படியில் இறங்கும் போது அடிவானம் கருத்தது.

* * *

பயங்கரமான வெப்பம். இன்னும் இரண்டு நாட்களில் கப்பல் செங்கடலை அடையும். எத்தனையோ பேர் வெளியே ஒபன் டெக்கில் கேம்ப் கட்டில்களில் படுத் திருக்கிறார்கள். சிலர் ஈஸிச்சேரில் அமர்ந்து பாரிலிருநது ஏதேதோ பானங்களை வரவழைத்துக் குடித்துக் கொண்டிருக்கிறார்கள் பேசிக் கொண்டே உரத்த குரலில் சிரிக்கிறார்கள், கையில்லாத மெல்லிய ப்ளவுசையும், பெரிய பெரிய தடித்த தொடைகளைக் காட்டும் சிறிய கால்சட்டையையும் அணிந்த பார்சிப் பெண் ஒருத்தி நடுவயதினனான அவளுடைய கூட்டாளியுடன் 'எ' டெக்குக்கு— அதாவது லவ்வர்ஸ் டெக்—போகும்போது, குடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த ஜனங்கள் கண்களை அகல விரித்துப் பார்த்தார்கள். கொஞ்ச நேரம் கழித்து தாய்லாந்தைச் சேர்ந்த, சப்பை மூக்குடன் ஸ்கர்ட் அணிந்த குள்ளமான பெண் குச்சிபோல் உயரமாக இருந்த ஆஸ்திரேலியப் பையனுடன் 'எ' டெக்கிற்கு வேகமாகப் போன போது அந்த ஜனங்கள் ஏதேதோ கிசுகிசுத்துக் கொண்டு 'கக்கக்'கென்று சிரித்தார்கள். அவர் களுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு தூரத்தில் இருட்டில் உட்கார்ந்திருந்த மந்தா கினிக்குத் திடீரென்று தன் காபினுக்குப் போக வேண்டும் என்ற விருப்பம் உண்டா யிற்று. ஆனால் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்திருந்த முகர்ஜி அவளை விடத் தயாராக இல்லை!

"மந்தா, என்ன இவ்வளவு சீக்கிரம்? சீ, இது அநியாயம்..."

"இப்போது பதினொன்றாகிறது. ஹௌசி ஹௌசி ஆட்டம் முடிந்தே ஒரு மணி

நேரம் ஆயிற்று. நீங்கள் முன்னாலே போங்கள். இதோ வருகிறேன் என்று மிஸ் மொஹித்தேவுக்குச் சொல்லியிருந்தேன். பாவம், அவர் 'டி' லௌஞ்சில் வழி பார்த்துக் காத்திருந்து காத்திருந்து இப்போது படுக்கப் போயிருப்பார்."

"உன்னுடைய ரூம் மேம் ஜோசப் எப்படியிருக்கிறார்? சர்தார்ஜியை நன்றாக ஏமாற்றி விட்டாள். நேற்று அவரைக் கப்பலின் செகண்டு இன்ஜீனியர் அறையில் பார்த்தேன்... என்னமோ சொல்வார்களே—காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்று. ராத்திரி எப்போது திரும்பி வந்தாள்?"

"ராத்திரி காபினுக்கு எப்பொழுது திரும்பி வந்தாளோ எனக்குத் தெரியாது. காலையிலிருந்து ஆளைக் காணோம். எங்கேயாவது உட்கார்ந்து கடிதம் எழுத வேண்டும் என்றோ என்னவோ சொல்லிவிட்டுப் போனவள் இதுவரையில் அவளைப் பார்க்கவில்லை. என்னோடு முன்போல அன்போடு பேசுவதே யில்லை.. "

"அது ஏன் தெரியுமா? ஏடனில் ஷாப்பிங் போகும் போது அவளை விட்டுவிட்டு உன்னை அழைத்துக் கொண்டு போனேன் அல்லவா?அதற்காக அவளுக்கு உன்மேல் கோபம்...!"

"அப்படி என்றால் அவளுடைய மீனை நான் வலையில், போட்டுக் கொண்டே னென்பது அவள் கற்பனையோ...?"

"போட்டுக் கொள்ளவில்லையா பின்னே?"

மந்தாகினி தடுமாறிப் போனாள். "உங்களோடு நேற்று ஷாப்பிங்குக்கு வந்தால் அதற்கெல்லாம் அர்த்தம் தேட வேண்டுமா? நீங்கள் தப்பாக நினைக்கவில்லை யல்லவா" "சீ, தப்பாக நினைத்துக் கொள்வதென்றால் என்ன? அதில் என்ன தப்பு? வெளிப்படையாகச் சொல்ல வேண்டிய தேவை உண்டா—நான் உன்னை மிகவும் 'லைக்' செய்கிறேன் என்று..."

"உங்களுக்கு முதலில் டாக்டர் சரோஜா 'லைக்' ஆகியிருந்தாள். பிறகு ஒரு நாளைக்கு மட்டும் நர்ஸிங் செய்த கேரளத்துப் பெண்ணும் 'லைக்' ஆனாள்.."

"ஓ! அந்தக் கேரளத்துப் பெண் பேச்சே வேண்டாம். அவள் ரொம்ப சீப். இங்கிலீஷ் நன்றாகப் பேசுகிறாள். கொஞ்சம் ஜாலி என்று கொஞ்ச நேரம் அவளுடன்...இல்லை அவளுடன் 'ஏ' டெக்கிற்கு ராத்திரி போனதுதான் தப்பாகி விட்டது. அதிலிருந்து என்னென்னவோ வீண் பழிகள் ஏற்பட்டிருக்க வேண்டும். இனி, டாக்டர் சரோஜாவோ ராட்சசி. பிசாசு...அவளை இரண்டு நாட்கள் சகித்துக் கொண்டதே பெரிது..."

"ஏன்? அவள் என்ன செய்தாள் அப்படி? எனக்கென்னவோ அவள் சுபாவத்தி லேயே நல்லவள் என்று தோன்றுகிறது"

"அவள் சுபாவத்தில் தீயை வை. உன்னை அழைத்துக் கொண்டு போனதில் அவளுக்கு எவ்வளவு கோபம் தெரியுமா? அவள் என்ன என் மனைவியா அல்லது தாயா? எப்போதும் அவள் விரலைப் பிடித்துக் கொண்டு முந்தானையைப் பிடித்துக் கொண்டு திரிவதற்கு? எனக்கு வேண்டியவர்களை என்னுடன் அழைத்துக் கொண்டு போவதற்கு எனக்கு அதிகாரமில்லையா? என்னுடைய அசல் பெண்டாட்டி கூட என்னுடைய இந்த அதிகாரத்தை பறிதுக் கொண்டதில்லை!"

"அப்படியென்றால்...? அல்ல...ப்ளீஸ், ரொம்ப நேரம் ஆகிவிட்டது. நான் காபினுக்குப் போகணும்..."

"வா. இன்று நீ சொன்னதயெல்லாம் கொஞ்சம் கூடத் தட்டாம கேட்டேன். நீ குடிக்க வேணாம்ன்னு சொன்னே, நான் விட்டுட்டேன். உனக்கு சிகரெட் வாசனை சேராதுன்னு நான் இன்றைக்குச் சிகரெட்டையே தொடலை..."

"நான் சொல்றபடி நீங்க எதுக்காக கேக்கணும்?"

"நான் சொல்வதை நீ கேக்கணும்ங்கறதால" ஹாஹா என்று சிரித்தான். "உன்னோடு இருப்பது குடியை விட அதிகமாக போதைாய் இருக்கிறது, மந்தா. அங்கிருந்த ஜனங்கள் எல்லாம்போய்ட்டாங்க. நட, நாம் 'ஏ'டெக்குக்குப் போவோம். நீ எவ்வளவு நைஸ் தெரியுமா? ஐ லவ் யூ..."

"ஐ ஆம் சாரி...நீங்க உண்மையிலேயே என்னைப்பற்றித் தப்பாக நினைச்சிட்டிருக்கீங்க, குட் நைட்" என்றவள் உடனே அங்கிருந்து எழுந்தாள். முகர்ஜி சட்டென்று அவள் கையைப் பிடித்து இழுத்தான். தடுமாறி, அவன் மேல் சிறிது சாய்ந்தவள் எப்போதுமில்லாத பலத்துடன் அவன் பிடியிலிருந்து தப்பித்துக் கொண்டு சரசரவென்று அருகிலிருந்த படிகளில் இறங்கி 'சி' டெக்கை அடைந்தாள். பிறகு அந்தப் பக்கத்திலிருந்த 'டி'டெக் குக்குப் போகும் படிகளின் பக்கத்தில் இருட்டில் ஒருவர் தோளில் ஒருவர் சாய்ந்தபடி ஒரு ஜோடி நின்றிருந்தது. காபின் களின் இடையிலிருந்த வழியே அடுத்த கோடியிலிருந்த மற்றொரு படிக்கு ஓடத் தொடங்கினாள். ஆனால் இடையில் ஒரு பாரும் லவுஞ்சும் இருந்ததால் வேகம் குறைந்து அந்தப் பக்கம் நுழைவதற்குள் ஹாரி மகார்த்தி அவளை அழைத்தான்:

"மிஸ் பாட்டே, எங்கே போறீங்க இவ்வளவு அவசரமா?"

"என் காபினுக்கு"

"ஒரு ஐந்து நிமிஷம் என்னுடன் உட்காரக் கூடாதா, ப்ளீஸ்?"

மந்தா பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்தாள் கையிலிருந்த விஸ்கி கிளாஸைச் சுழற்றிக் கொண்டே 'உன் அனுமதியிருந்தால்' என்று சொல்லி அவள் சம்மதம் பெற்று ஒரு மடக்குக் குடித்தான். "எப்படி இருக்கிறது உன் வாழ்க்கை?"

"சகிக்கலை... ஆண்கள் என்றாலே ஓநாய்கள்!"

"ஏன், என்ன நடந்தது, நேற்றிலிருந்தது உன் கூட இருந்த அந்தக் கல்கத்தா டான்ஜுவான் நன்றாய் இருக்கிறான் அல்லவா?"

"அந்த ஓநாயின் பிடியிலிருந்து இப்பதான் தப்பி ஓடி வந்தேன்"

"ஏன்? என்ன செய்தான்அவன்?"

"நான் தெருவில் திரியற பெண் என்று நினைச்சிட் டிருக்கான் அவன்! எவ்வளவு தைரியமா, கொஞ்சம் கூட வெட்கமில்லாம கேட்கிறான் என்றால் என்ன அர்த்தம்? எங்கள் தேசமா இருந்தால் செருப்பால் அடித்திருப்பேன். போலீஸார் கையில் பிடித்துக் கொடுத்திருப்பேன்."

"கடவுளே இப்படிப்பட்டவர்களையெல்லாம் இவ்வளவு சீரியஸாக எடுத்துக் கொள்கிறார்களா உங்கள் தேசத்தில்? அப்படியானால் வாழ்க்கை அங்கே பயங்கர மானதாக இருக்க வேண்டும். அங்கிருந்து இங்கேயும் இங்கிருந்து அங்கேயும் நடமாடும் பூட்ஸ்கள், சீழ்க்கை ஒலித்துக் கொண்டே திரியும் போலீஸார்..."

"அப்படி ஒன்றுமில்லை..."

"மிஸ் பாட்டே, நீ மிகவும் எக்ஸைட் ஆகி இருக்கிறாய்...ஒரு ட்ரிங்க் எடுத்துக் கொண்டால் நல்லது—நரம்புகளுக்கு..."

"நோ தேங்க்ஸ்"

"ஒரு கிளாஸ் பீராவது?...கொஞ்சம் சுதாரிப்பு கொடுக்கும்— தளர்ந்த நரம்புகளைக் கொஞ்சம் அமைதிப்படுத்தும். ட்ரை! பிடிக்கவில்லையென்றால் விட்டுவிடலாம். வெய்ட்டர், ஒரு லாகர்"

மந்தாகினி சொல்லத் தொடங்கினாள்: "எங்கள் நாட்டில் இளைஞர்கள் மட்டுமே இப்படிப் பைத்தியக்காரத்தனமாக ஏதாவது செய்வாங்க. ஆனா இப்படி எல்லாரும்..."

வெய்ட்டர் கொண்டு வந்து கொடுத்த பீரை மந்தாகினி ('மந்தா, இங்கிலாந்தில் பீர், ஜிஞ்சர், ஏல், கொஞ்சம் ஒயின் சேர்த்துக் கொள்ளலாம். தப்பில்லை' என்று பிரின்சிபால் மிஸ் டெய்லர் சொல்லியிருந்தார். 'சளி பிடிக்கும்போது பிராந்தியைவிடச் சிறந்த மருந்து வேறில்லை' என்றும் சொல்லியிருந்தார்.) பயந்து கொண்டே, முகத்தைச் சுளித்துக் கொண்டு குடித்தாள். "அவ்வளவு ஒன்றும் மோசமா இல்லை, இது"

"இங்கே இந்தக் கப்பல் பிரயாணிகளை வெறி பிடித்தவர்களாகச் செய்யலாம் அல்லவா?" மக்கார்த்தி சிரித்தான். "எங்கள் நாட்டில் இவ்வளவு சின்னச் சின்ன விஷயங்களுக்கு நாங்கள் முக்கியத்துவம் கொடுப்பதில்லை."

"ஆ? இருக்கலாம்.நான் சொல்வது என்னவென்றால் ஐரோப்பியர்கள் செய்றாங்களே என்று நாங்களும் ஏன் அவர்களுடைய நடவடிக்கைகளை, குரங்குகளைப் போல மேற்கொள்ளணும்?"

"அப்படின்னா? உன்னுடைய அந்த கல்கத்தா நண்பன் இன்று எங்க நடவடிக்கைகளை வெறும் குரங்கைப் போலச் செய்து காட்டினானா? அல்லது எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல் இயல்பாவே அவன் தன் உணர்ச்சிகளை வெளிப்படுத்தினானா?"

"அப்படிக் கட்டாயமில்லாமல் இஷ்டப்படி நடக்கவிட்டால் ஜனங்கள் நாய்களா மாறிடுவாங்க, ஓநாய்களா மாறிடுவாங்க. அப்புறம் வாழ்க்கையென்றால்..."

"வெய்ட்டர், இன்னொரு பீர்!"

"வேணாம். உண்மையிலேயே வேணாம்.."

"ஏன், பிடிக்கவில்லையா உனக்கு? துணைக்கு ஏதாவது சாப்பிடணும். இனிப்பாக இருக்கும்... அல்லது இனிப்பாக ஒரு ஒயின் சொல்லட்டுமா?"

"தயவு செய்து ஒன்னும் வேண்டாம். இதையே சாப்பிட்டிருக்கக் கூடாது."

"என் இனிய பெண்ணே! நீ இங்கிலாந்துக்குப் போகிறாய். அப்படியெல்லாம் அது வேணாம், இது வேணாம் என்றால் அங்கு இருப்பது கஷ்டமாகிவிடும். அங்கே பார், அந்த அடிவானத்தில். ஒரு கப்பல் புறப்பட்டிருக்கிறது கிழக்கே நோக்கி—பாரதத்துக்குத் திரும்பிப் போவதாக இருந்தால் சொல். நான் கேப்டனிடம் சொல்லி உன்னை அந்தக் கப்பலுக்கு டிரான்ஸ்பர் பண்ணச் சொல்றேன்." என்று சிரித்துக் கொண்டே அவளுடைய முதுகைத் தட்டினான்.

மந்தாகினியும் மனம் விட்டுச் சிரித்தாள். மற்றொரு தடவை ஜன்னல் வழியாக சாய்ந்து வெளியே பார்த்தாள். இரவில் விளக்குகளால் மின்னிக்கொண்டிருக்கும் தூரத்துக் கப்பல் அழகாகக் காட்சி அளித்தது. "தேங்க்ஸ்! குட்நைட்!" என்று எழுந்தாள்.

"ஸ்லீப் வெல்" என்றான் கிழவன் ஹாரி, புன்னகையோடு.

* * *

மத்திய தரைக்கடலின் தூய நீலநிறத்து அலைகளைத் தழுவி வரும் குளிர்ந்த காற்று மிகவும் இதமாக இருந்தது. வடக்கின் அடிவானத்தில் கிரீஸ் நாட்டு நிலப்பகுதி எங்கேயாவது கொஞ்சமாவது கண்ணுக்குப்படுமா என்று ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள் மந்தாகினி. அங்கங்கே கடலின் மக்களைப் போலக் காட்சி அளித்த சிறுசிறு தீவுகள் மேலைச் சூரியனின் இனிய ஒளியில் சிரித்தபடி படுத்திருந்தன.

"கிரீடுக்கும் கிரீஸுக்கும் நடுவே போகுமாம் நமது கப்பல்!" அவளுடைய இரண்டு நாள் நண்பன் சஞ்சீவ் சப்ரூ சொன்னான். "நாஸோ, நவரினோபே எப்ப வருமோன்னு ஆர்வமா பாத்துட்டிருக்கேன்...கிரீஸின் ஒரு சிறு துண்டு நிலத்தைக் கண்டாலும் போதும், நான் புண்ணியசாலி! கிரேக்கப் பண்பாட்டைப் போல நிறைந்த உன்னதமான பண்பாடு வேறு இல்லை. பைரன் சும்மா கிரீஸ் நாட்டுக்காக வாதாடி மடியவில்லை அது இருக்கட்டும் பிரமிட்டைப் பற்றி நான் எழுதிய கவிதை எப்படியிருந்தது? நீங்களும் கெய்ரோ ட்ரிப்புக்கு வந்திருக்கணும்?"

ஏனோ மந்தாகினி கெய்ரோ ட்ரிப்பில் கலந்து கொள்ளவில்லை. நல்ல வேளையாக போர்ட்செயிட் வரை மிஸஸ் மொஹித்தேயின் பாதுகாப்பான துணையில் கழித்தாள் மந்திரவாதி, பருத்த தொடையையுடைய பார்சிப் பெண்ணின் சட்டைக் குள்ளிருந்து கோழிக் குஞ்சை எடுத்த பிறகு, மந்தாவின் புடவைக்குக் கீழேயிருந்து கோழிக் குஞ்சை எடுத்த போது மட்டும் அவள் வெட்கத்தினால் வியர்த்துக் குறுகிப் போனாள். இந்த பயங்கரமான ஒரு கணத்தை விட்டால் வேறு எந்த விபரீதமும் நிகழவில்லை. அந்த விளையாட்டுக்குப் பிறகு தொடங்கிய நாட்டியத்தின் போது ஆஸ்திரேலிய இளைஞன் ஒருவன் (ஒருவேளை குடித்திருக்கலாம்) 'மேடம், உங்களோடு நடனமாடலாமா?' என்று கண்ணோடு கண் பார்த்துக் கேட்டான். 'எனக்கு நடனமாட வராது!' என்று எவ்வளவு சொன்னாலும் அவன் அவளை விடத் தயாராக இல்லை. அப்போது அவளை மிஸஸ் மொஹித்தே காப்பாற்றினாள். 'அவளை, ஏன் தொந்தரவு படுத்துறே? போ இங்கிருந்து' என்று கத்தினாள் தன்னுடைய அரைகுறை ஆங்கிலத்தில். போர்ட் செய்ட் விட்ட பிறகு கேம்பிரிட்ஜுக்குத் தந்தையின் செலவில் தத்துவம் படிக்கப் புறப்பட்ட தான் தத்துவ ஞானி மட்டுமல்லாது கவியும் கூட என்று சொல்லிக் கொண்ட இளைஞன் சஞ்சீவ்சப்ரூ எப்படியோ அவளுடன் ஒட்டிக் கொண்டான். அவன் எவ்வளவுதான் அவளைச் சுற்றி வந்தாலும் எவ்வளவு பேசினாலும் அடிப்படையில் சாது; தொந்தரவு செய்யாதவன்—மிஸஸ் மொஹித் தேயைப் போல அவனும் மிகவும் "ஸேஃப்" என்றே அவள் அவனை ஒட்டிக் கொள்ள விட்டாள். ஆனால் இன்று மட்டும் அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருப்பது சலிப்பாக இருந்தது. ஆகவே மனம் விரும்பாவிட்டாலும் அவள் பதில் சொன்னாள்:

"அந்தக் கவிதை எனக்குப் புரியலை...எனக்குக் கவிதையைப் பத்தி எதுவும் தெரியாது. இருந்தாலும் அது நன்றாகத்தான் இருந்திருக்க வேண்டும், விடு..." ஏதாவது பேசிக் கொண்டே யிருக்க வேண்டும், நேரத்தைக் கழிக்க என்று, "மிஸ்டர் சப்ரூ, (மிஸ்டர் என்பதை வேண்டுமென்றே சேர்த்துக் கொண்டாள்) இதோ பார், உனக்கு மனத்தத்துவம் தெரியுமல்லவா? நேற்று எனக்கு ஒரு கனவு வந்தது! அதற்கு என்ன அர்த்தம் சொல்கிறாயா? நான் அரேபியாவில் காட்டில் ஒரு சிவப்புக் குதிரை மீது ஏறிப் போய்க் கொண்டிருந்தேன்..."

"தெரிந்து விட்டது, மந்தாபஹுன், தெரிந்து விட்டது...குதிரை என்றால் பிராய்டின் கணக்குப்படி—செக்ஸ்."

"அப்படியானால் நான் மேலே சொல்ல மாட்டேன் போ...அது போகட்டும்—நான் அகமத் நகரில் இருந்தபோது ஒரு விசித்திரமான கனவு வந்தது. அதில் எங்கே செக்ஸ் இருக்கிறது பார்க் கலாம்? அந்தக் கனவில் ஒரு பைத்தியக்காரி என்னைத் துரத் தினாள். நான் தப்பி ஓடத் தொடங்கினேன். தப்பித்துக் கொண்டு ஏதோ ஒரு வீட்டில் நுழைந்து..."

"இதோ பாருங்கள், பைத்தியக்காரி என்றால் உங்களுடைய அல்லது நீங்கள் பைத்தியம் என்று சொல்கிற உள்மனத்து ஆசைகளின் அடையாளமே—அதாவது செக்ஸ்."

"நீ உண்மையிலேயே புத்திசாலிதான்!"

"இதோ பாருங்கள் மந்தாபஹுன், நேற்று எனக்கும்ஒரு கனவு வந்தது. ரொம்பவும் ரொமாண்டிக்! அதில் நீங்க இருக்கிறீங்க..."

"சேச்சே...என்னைப் பற்றிக் கனவு காணக் கூடாது நீ. உன்னைப் போல இளை ஞர்கள் அதே மட்டத்தில் இருக்கிற சின்ன வயதுப் பெண்களோடுதான் போகணும், ஆடணும், பழகணும். தெரியுதா? அதோ அங்கே சேரம் ஆடிக்கொண்டிருக்கிறாளே அந்த மலையாளத்துப் பெண்—அப்படிப்பட்டவளைப் பிடி, போ—என்ன?"

"எனக்குத் தெரிஞ்சவங்க எல்லாம் இப்பவே என்னைக் கிண்டல் செய்றாங்க, நான் உங்களைக் காதலிக்கிறேன்னு..."

"நீ என்னை! ஆகா! ஜனங்களுக்குத்தான் எவ்வளவு கற்பனை! இனிமேல் நான் பேசாமல் இருப்பதே நல்லது..."

மந்தாகினிக்குத் தன் கையில் இருந்த புத்தகத்தை படிக்கலாம் என்று தோன்றியது. அதற்குள் "மே ஐ ஜாயின் யூ? நான் உங்க பக்கத்தில் உட்காரத் தடையில்லையே?" என்றான் ஓர் ஐரோப்பியன், தலை தாழ்த்தி, முகத்தில் இனிய புன்னகை காட்டியபடி.

"என் பெயர் பால்லெக்வி. பாரிஸ்தான் என் ஊர். இப்ப நான் இருப்பது லண்டனில். லிமோஜின்னுக்கு வியாபாரத்திற்காகப் போயிருந்தேன். இப்போது லண்டன் திரும்பிக் கொண் டிருக்கிறேன். நீங்கள் இந்தியர் அல்லவா? எனக்கு இந்தியா ரொம்பவும் பிடிக்கும். ஒண்டர்ஃபுல் நாடு! நேரு மிகவும் பெரிய மனிதர். ஒண்டர்ஃபுல் மேன்! உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளும் மகிழ்ச்சி எனக்குக் கிடைக்குமா?"

சப்ரூவும் மந்தாவும்தங்கள் பெயர்களைச் சொல்லி தாங்கள் எதற்காகப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் சொன்னார்கள்.

"வெரிகுட் மிஸ்டர் சப்ரூ. நீங்கள் தத்துவக் கடவுள் எங்களுக்கு. பாவம் புண் ணியம் முதலிய விஷயங்களெல்லாம் என் தலைக்கு மிறிய சமாசாரங்கள். மேடம் போட்டே—வரலாறு—அது எனக்குப் பிடித்த விஷயம். டாம்பர்லேன், மகா அலெக் ஸாண்டர், நெப்போலியன், பிரெஞ்சுப் புரட்சி, மொகலாய மன்னர்கள், கிளியோ பாட்ரா, ஆண்டனி, சீஸர்—ஒண்டர்புல்! கிப்பனின் டிக்கிளைன் அண்ட் ஃபால் ஆஃப் தி ரோமன் எம்பயர்— புத்தகத்தை நான் ஒரு வருஷம் முழுவதும் படித்தேன். அதைப் படிக்கும் போதுதான் நான் என் இங்கிலீஷைச் சரிப்படுத்திக் கொண்டேன். உங்களுக்கு என்ன ட்ரிங்க்ஸ் கொண்டு வரச் சொல்லட்டும்."

"நாங்கள் குடிப்பதில்லை—மந்தாகினி குரலில் மன்னிப்புக் கேட்கும் சாயல் இருந்தது."

"நோ ட்ரிங்க்ஸ்! ஒண்டர்ஃபுல்! பிரான்சில் ஒயின் இல்லாமல் வாழவே முடியாது. இது அநியாயம்—நான் ஒருவன் மட்டும் எப்படி குடிப்பது? வெல், வெல், ஜிஞ்சர் ஏலாவது எடுத்துக் கொள்ளுங்கள்...என்ன?"

"ஆகட்டும்" என்று மந்தாகினி சொல்ல வேண்டியதாயிற்று. அவனுடைய சிரிக்கும் கண்களில் பிடிவாதம் உருவாகியிருந்தது.

இரண்டு ஜிஞ்சர்களோடு லெக்வி தனக்காக ஏதோ ஒரு மாணிக்கம் போல் ஒளி விட்ட சிவப்புப் பானத்தை வரவழைத்தான். "இதன் ருசியை நீங்கள் பார்க்க வேண்டும். கோன்யாகவின் ஒரு காக்டேல் இது.. இது உங்களுக்காக...சியர்ஸ்!" என்று ஒரு முழுங்கு குடித்தான். பேசும்போது அவனுடைய பார்வை மந்தாகினியை விட்டு ஒரு நிமிஷம் கூட அகலவில்லை.

மந்தாகினிக்குத் திடீரென்று எங்கிருந்தோ ஒரு வேகம் தோன்றியது. பால் லெக்வியை தைரியமாக கண்களை உருட்டி, ஆர்வத்தோடு அவனுடைய கைகால்களின் மீது பார்வையைச் செலுத்தினாள்.

"நீங்கள் மார்ஸேல்ஸில் இறங்கி, பாரிஸைப் பார்த்து விட்டுத்தானே லண்டனுக்குப் போவீர்கள்?" லெக்வி மந்தாகினியைப் பார்த்துக் கேட்டான்.

"இல்லை. ஜிப்ரால்டர் வழியாக நேராக லண்டனுக்கு"

லெக்வியின் முகத்தில் திடீரென்று துக்கத்தின் நிழல் கவிழ்ந்தது. "ஜிப்ரால்டரிலிருந்து லண்டனுக்கா? ஓ, இதைக் கேட்டு எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது.. .செப்டம்பரில் பிரான்ஸ், அதிலும் பாரிஸ் என்றால், ஆகா, சொர்க்கமேதான். மேடம்! என்னோடு வந்தால் பாரிஸ் எல்லாம் சுற்றிக் காட்டியிருப்பேன்...பாரிஸின் அழகையெல்லாம் எடுத்துக் பிழிந்து உங்கள் கோப்பையில் நிரப்பியிருப்பேன்..." என்று இரக்கம் நிரம்பிய சிரிப்பைச் சிந்தினான். இரண்டு முழுங்கு காக்டேல் குடித்தான்.

"என் டிக்கட்டை மாற்ற முடியுமா? இப்போது?" என்று மந்தாகினி சின்னப் பெண்ணைப் போலக் கேட்டாள்.

இருவராலும் ஒதுக்கப்பட்டு, தான் மட்டும் ஜிஞ்சர் குடித்து சும்மா உட்கார்ந்து இருந்த சப்ரூ திடீரென்று எழுந்து, "மிஸ்டர் லெக்வி, தேங்க்ஸ், நான் போகணும். பை, பை" என்ற புறப்பட்டான். லெக்வியும் நாற்காலியிலிருந்து பாதி எழுந்ததைப் போலப் பாவனை செய்து, "மெர்ஸி மான்சூர், ஆரிவா" என்று சொல்லி மந்தாகினியின் பக்கம் திரும்பி மறுபடியும் பேசத் தொடங்கினான். மந்தாகினியும் "மறுபடியும் பார்க்கலாம்" என்று மட்டும் சுருக்கமாகச் சொல்லி, லெக்வியின் பக்கம் தன் நகை முகத்தைத் திருப்பினாள். சப்ரூ போவதற்காகவே காத்துக் கொண்டிருந்தாள் என்பதைப் போல அவன் போன உடன் மந்தாவின் இதயம் ஜில் என்று நடுங்கியது.

* * *

லெக்வி மந்தாகினியை அன்றைக்கெல்லாம் விடவே இல்லை. டின்னர் முடிந்த பிறகு 'பார்' மூலை ஒன்றில் அவளை உட்கார்த்தி வைத்துக் கொண்டு அரட்டை அடித்துக் கொண்டே இருந்தான். முகர்ஜி—ஜோஸப் ஜோடி தூரத்திலிருந்தே கண்ணைச் சிமிட்டிவிட்டுப் போயிற்று. ஜோடியாக அறிமுகம் இல்லாதவர்களும் கூட மந்தாகினி இருந்த பக்கம் பார்த்த போதெல்லாம் ஆர்வத்தோடு கண்ணை விழித்துப் பார்த்தார்கள். மந்தாகினியை வெட்கத்தோடு ஆனந்தமும் இடுப்பில் கை

வைத்துக் கிசுகிசு மூட்டியது. லெக்வியின் கூட்டுறவில் மாணிக்கத்தைப் போல் ஒளிவிடும் இனிமையிருந்தது. மந்தாகினிக்கு லெக்வியோடு சோபாவில் உட்கார்ந்து நண்பர்களைப்போல அரட்டையடிப்பதில் தப்பேதும் தோன்றவில்லை. இந்தப் புதுமாதிரியான, நடுவயது பிரெஞ்சுக்காரனுடன் சிறிது ஃப்ரீயாக உட்கார்ந்து பேசினால் என்ன? வெவ்வேறு நாடுகளின் அனுபவமும் தேவையல்லவா வெளி நாடு போகிறவர்களுக்கு? இல்லாவிட்டால் இவ்வளவு தூரம் ஏழு கடல்களைத் தாண்டி ஏன் போகவேண்டும், ஜனங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். அந்த முட்டாள் சப்ரூவைப் பற்றிக் கூடச் சொல்லவில்லையா? லண்டன் போய்ச் சேர்ந்த பிறகு இவர்கள் எங்கேயோ அவர்கள் எங்கேயோ. மேலும் நாளைய மறு நாள் காலையில் லெக்வி மார்ஸேல்ஸில் இறங்கிப்போகப் போகிறான். அவளிடம்—மற்றவர்களை விட்டு, மூடி மறைக்காமல் இவ்வளவு அக்கறை காட்டு கிறான் என்றால், வகைவகையான கதைகளைச் சொல்லி அவளை எப்போதும் சிரிக்க வைக்கிறான் என்றால்—இந்த இன்பத்தை, இந்த அனுபவத்தை, வெட்கப்பட்டு உள்ளுக்குள் சுருங்கிக் கொண்டு கூச்சப்பட்டு இழந்து விட வேண்டுமா?...

இரவு பதினோரு மணிக்குப் பிறகு மந்தா தன் கேபினுக்குப் போவதற்காக எழுந்தாள். லெக்வி தானும் எழுந்து அவள் கையைப் பற்றி முத்தமிட்டு, "ஏன்! களைப்பாய் இருக்கிறதா? உங்களை இவ்வளவு தூரம் உட்கார வைத்து உங்கள் தூக்கத்தைக் கெடுத்து விட்டேன்—மன்னிக்கணும்...இந்தப் புடவையில் நீங்கள் எவ்வளவு அழகாகத் தெரிகிறீர்கள்—ராஜகுமாரியைப் போல...! குட்நைட். நாளை சந்திப்போம்" என்றான். அவனுடைய பிரெஞ்சு நாட்டு அடக்கம், அவனுடைய இனிய ஆன்மநேயம், அவன் உதடுகளின் பட்டுப் போன்ற ஸ்பரிசம், அவளுடைய மனத்தை மீட்டின; கலக்கின. கேபினுக்குப் போகும்போது அவளுக்குத் தான் கனவு உலகத்தில் மிதந்து கொண்டிருப்பதாக (இதெல்லாம் லெக்வி ஒரு வேளை குடிப்பித்த போர்ட் ஒயினின் விளைவோ என்னவோ?) தோன்றியது. கேபினுக்குப் போய், கண்ணாடியில் தெரிந்த சிவப்புப் பட்டுப் புடவையில் கண்ட ராஜகுமாரியை எவ்வளவோ நேரம் பார்த்து, புடவையை அவிழ்க்கவும் மனம் வராமல், பாதி திறந்திருந்த போர்ட் ஹோலில் தலையை வைத்து மத்திய தரைக் கடலின் இசையைக் கேட்டபடியே நின்றாள். மிஸ் ஜோஸப் வந்து கதவைத் தட்டும்வரை.

அடுத்த நாள் காலையில், பகலில் லெக்வி இருந்த இடமே தெரியவில்லை. மந்தாகினி பைத்தியக்காரியைப் போல இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்குமாக எல்லா டெக்குகளிலும், லவுஞ்சுகளிலும், பார்களிலும், நூல்நிலையங்களிலும், நடை பாதைகளிலும் அலைந்து திரிந்து பார்த்தாள். எங்கேயும் அவனுடைய அடையாளத்தையே காணோம். நாலரை மணிக்குக் காப்பி குடித்த பிறகு ஒரு பக்கம் படிக்கட்டில் எதிர்ப்பட்ட சப்ரூ, "மந்தா பஹன், என்ன என்னைத் தேடிக்கொண்டிருக் கிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை, மிஸஸ் மொஹிதேயைத் தேடுகிறேன்."

"அவர் 'இ'டெக்கில் உட்கார்ந்திருந்தார்—குழந்தைகளின் ஃபேன்ஸி டிரஸ் போட்டியைப் பார்ப்பதற்காக!".

"ஓ, நான் மறந்தே போய்விட்டேன்" என்று அங்கே ஓடினாள்.

அன்று விளையாட்டுத் தினம்! எல்லாம் விளையாட்டுக்களும்—போட்டிகள், ஃபேன்ஸி டிரஸ் போட்டிகள், இசைக் கச்சேரி எல்லாம் உண்டு...கப்பல் முழுவதும்

திருவிழாக் கலகலப்பு. இங்கேயும் மந்தாகினியின் மனம் ஒட்டவில்லை. இனி விருந்துக்குத் தயாராகலாம். தான் விரும்பும் மஞ்சள் பட்டுப் புடவையை உடுத்திக் கொள்ளலாம் என்று நினைத்துத் தன் கேபினுக்குத் திரும்பி தயாராகத் தொடங்கினாள். ஏழு அடிக்க ஐந்து நிமிஷங்கள். இனி புறப்பட வேண்டியதுதான் என்று அழகிய செருப்புக்களை மாட்டிக் கொள்ளத் தொடங்கினாள். அதற்குள் கேபினின் கதவைத் தட்டுகிற சத்தம். "யார்?"... "நான் லெக்வி" அவளுடைய சக்தியெல்லாம் போய்விட்டது. மற்றொரு செருப்பை மாட்டிக் கொள்ளாமலே போய்க் கதவைத் திறந்தாள்.

"ஐ ஆம் ஸாரி. இன்றைய டின்னருக்கு எங்கள் டைனிங் ரூமுக்கு என் விருந்தாளியா நீங்க வரணும்... வருவதற்குத் தடை ஏதும் இல்லையே?" லெக்வியின் குரலில், கண்ணில் அழைப்பின் மந்திரம் இருந்தது. "ஐ ஆம் ஸாரி. கேபினில் எல்லாம் அலங்கோல மாக இருக்குது."

"நீங்கள் என் கேபினைப் பார்க்க வேண்டும். இதோ பாருங்க. நீங்க அவசரத்தில் செருப்பைச் சரியாக மாட்டவில்லை. சுமான், நான் உதவி செய்கிறேன்" என்று சொல்லி, குனிந்து அவள் காலில் செருப்பை மாட்ட முனைந்தான் "வேண்டாம். ப்ளீஸ்" என்று மந்தா கூறினாள்.

"லவ்லி சாண்டல்ஸ், மேடம் மந்தா...உங்கள் கால்களின் வடிவம் பர்பெக்டாக இருக்கிறது. நீங்கள் பிரெஞ்ச் பெண் மணியாக இருந்தால் நான் உடனே அவைகளை முத்தமிட்டிருக்கலாம்..."என்று சொல்லிக் கொண்டு அவள் புடவையைக் கொஞ்சம் மேலே தூக்கி சாண்டலின் கொக்கியை மாட்டினான்.

"தேங்க்ஸ்". மந்தா வியர்த்து விட்டிருந்தாள். லெக்வி எழுந்து நின்று மந்தாகினியின் கையைப் பிடித்து அவள் முகத்தைப் பார்த்து, "புறப்படுங்கள், என் இந்திய ராஜ குமாரியே!" என்றான்.

"என் கேபினை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

"இதில் என்ன இருக்கிறது? ஆபீசுக்குப் போய் மேடம் பொத்தேயின் நம்பரைக் கேட்டேன்."

"நீங்கள் இன்று எப்படிக் கழித்தீர்கள்?" கேள்வி கேட்பதிலேயே ஒருவகைப் பாதுகாப்பு இருப்பதாக மந்தாவுக்குத் தோன்றியது

"அதுவா, பத்து மணிக்கு எழுந்தேன்...நேற்றைய காக்டேயில்ஸ்... ஹாங்க் ஓவர்.. என்னுடையது ஒற்றை அறையானதால் எந்தத் தொந்தரவும் இல்லை. என்னுடைய ஸ்டுவர்ட் பிரேக் ஃபாஸ்ட் கொண்டு வந்து கொடுத்தான். பிறகு படுக்கையிலேயே கொஞ்ச நேரம் கழித்தேன். பிறகு சாப்பாடு...அதற்கப்புறம் ரெஸ்ட்...இன்றைய மகத்தான இரவுக்குத் தயார்ப்படுத்திக் கொண்டேன். பாரிஸ் அல்லது லண்டனில் என்னுடைய விடுமுறை நாள் இப்படித்தான். சாயங்காலம் வரை ரெஸ்ட்...பிறகு ராத்திரி ஒரு மணி இரண்டு மணி வரை கவலையில்லாமல் சாப்பாடு...ட்ரிங்க்ஸ், டான்ஸ், லீலை..மற்றும்...(அமூர்).. ஹா ஹா ஹா ஹா."

மந்தாவிக்கு பிரெஞ்ச் தெரியாது என்றாலும் அமூர் என்றால் என்ன என்று கேட்கும் வம்புக்கே போகவில்லை.

"சி" டெக்கின் சாப்பாட்டு அறை மிக அழகாக அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. வண்ண வண்ணப் பூக்களால் ஆன மாலைகள், பலூன்கள், வண்ண வண்ண ஆடை தரித்த மக்கள், அவர்கள் கூக்கூ என்றும் கலகல வென்றும் கெக்கே என்றும் ஹா ஹா

என்றும் சிரித்த சிரிப்பு, உட்கார்ந்திருந்தவர்கள் தலை மேல் நீண்ட மடிந்த குறுக்காக இருந்த காமெடியன் தொப்பிகள், பட்பட்டென்ற கைதட்டல்கள், சீட்டிகள், பாம் என்று முழங்கும் வண்ண வண்ணக் குழல்கள், மேஜை மீது வகை வகையான சிறு பரிசுகள், ஒயின் கிளாசுகள், மது வகை நிறைந்த பெரிய பெரிய புட்டிகள்... அந்த மாய நகரத்தின் பாதாளத்தில் விழுந்த குழந்தையைப் போல மந்தாகினி பயந்தாளோ என்னவோ, ஆனால் அவுள் இடுப்பைச் சுற்றி வளைந்திருந்த லெக்வியின் வலது கையின் துணை ஆதரித்தது, தைரியத்தைக் கொடுத்தது. பலர் இவர்களை ஆர்வத் தோடு பார்த்தார்கள். மகிழ்ச்சியில் அவள் நெஞ்சு விம்மியது. சரிந்த முந்தானையைச் சரிப்படுத்தி உடம்பைப் போர்த்திக் கொண்டாள்.

"இதோ இருக்கிறது நம்முடைய மேஜை!"

அந்த மேஜையில் இருந்தவர்கள் அறிமுகமானார்கள். ஆனால் அந்த அறிமுகம் லெக்வி- மந்தாகினியின் தனிமைக்குத் தடையாக இல்லை. காமெடியன் தொப்பி ஒன்றை அவள் தலையில் இட்டு அவள் எப்படிக் காட்சி அளிக்கிறாள் என்று அவள் மோவாயைப் பிடித்து முகத்தைத் திருப்பிப் பார்த்தான் லெக்வி. "நீ முட்டாள்களின் ராஜ்ஜியத்து மகாராணியைப் போல இருக்கிறாய்" என்று அவள் தோளை அழுத் தினான். அதற்குள் மேஜைகளுக்கு அப்புறத்திலிருந்து யாரோ ஒருவர் கை ஆட்டி யதைப் போலத் தெரிந்தது. தோளை அழுத்தியதும் மங்கிய அவளுடைய பார்வைக்கு அது யார் என்று உடனே தெரிய வில்லை. கொஞ்ச நேரத்தில் கையை ஆட்டியவர் அவளை நோக்கி வரத் தொடங்கினார்...அதற்குள் அவள் பார்வையும் தெளிவா யிற்று. "குட் ஈவினிங், மிஸ்டர் மகார்த்தி" என்று வரவேற்றாள். இப்போது மிக அருகில் வந்துவிட்ட மகார்த்திக்கு லெக்வியை அறிமுகம் செய்து வைத்தாள்.

"மிஸ் மந்தா, நீ இன்றைக்கு மிகவும் அழகாக இருக்கிறாய். திடீரென்று மத்திய தரைக்கடல் காற்றுக்குப் பூ மலர்ந்து விட்டதாகத் தெரிகிறது...மிஸ்டர் லெக்வி, நீங்கள் உண்மையிலேயே அதிர்ஷ்டசாலிதான்."

"உங்களுக்குப் பொறாமையாக இருந்தா வாங்க! இங்கயே! நாம ரெண்டுபேரும் சண்டை போடலாம். ஜெயிப்பவர்களுக்கு இந்த ராஜகுமாரி..." என்று லெக்வி சிரித்துக் கொண்டே சொன்னான். எல்லோரும் சிரித்தார்கள்.

"ஒற்றைக்கு ஒற்றையாக நின்னு சண்டை போட முடியாது. நான் வயசானவன்—இல்லாவிட்டால்...நல்லது. என் கூட்டாளி மிஸஸ் ஜோன்ஸ் எனக்காக காத்திருக்கிறாள். நான் போறேன். உங்கள் டின்னர் நன்றாக நடக்கட்டும்...இதோ பாருங்கள் லெக்வி, நீங்கள் உஷாராக இருக்க வேண்டும் இல்லாவிட்டால் இந்த ராஜகுமாரியின் செருப்பு...ஹா ஹா ஹா" என்று சிரித்துக் கொண்டே போனான் மகார்த்தி.

"நானே அதைக் கெட்டியாகக் கட்டியிருக்கிறேன்" என்றான். லெக்வி; மகார்த்தி யின் பொருளை விளங்கிக் கொள்ளாமல்.

மந்தாகினி செருப்பின் கதையை விளக்கினாள். லெக்வி அவளுடைய கதையைக் கேட்டு ஒரேயடியாகச் சிரித்துக் கொண்டேயிருந்தான். "நீ என்னை உன் செருப்பால் அடித்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் தெரியுமா? ஒண்டர்ஃபுல்...ஆனால் தனியாக இருக்கும்போது மட்டும், ஆமாம், பப்ளிக்காக அல்ல...ஹா ஹா ஹா..."

மந்தாகினிக்கு ஷாம்பெயின் மிகவும் பிடித்தது. ஆனால் ஏனோ சாப்பாடு சரியாக இறங்கவில்லை. அவளுடைய புத்திசாலித்தனம் லெக்விக்கு மிகவும் பிடித்தது.

"எனக்கு மென்மையான இனிய ஒல்லியான பெண்கள் என்றால் மிகவும் பிடிக்கும். So ethereal, so spiritual அதேபோல அவர்களுடைய மிருதுவான புதிய செருப்பும் கூட மிகவும் பிடிக்கும்."

அந்த சூழ்நிலையில் உற்சாகம் பொங்கி வழிந்தது. உல்லாசம் பீறிட்டது. ரத்தத்தைச் சுண்டி இழுக்கும் சிரிப்பு, கலகலவென்ற வெறி ஒளிவிடும் சிவப்பு, வெள்ளை, மஞ்சள் நிற கிளாஸ்களை ஆட வைக்கும் பேண்டு இசை. ஆண்—பெண், கட்ஃபிராக், சூட்— ஸ்கர்ட், சூட்—புடவை. வானவில்லின் எல்லா நிறங்களும் நாட்டியமாடி இணைகின்றன. சில யட்சர்களும் யட்சினிகளும் தலை வைத்து கன்னத்தோடு கன்னத்தை தோளில் இழைத்து, உடம்போடு உடம்பை ஒட்டி, காலை மட்டும் அசைத்து அடி வைக்கிறார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் டெக்கு முழுவதும் ஆடுகின்ற கால்கள், குறுக்கு நெடுக்காக ஒன்றின் மீது ஒன்று விழும் கால்கள். 'ஹாய், ஓ, ஹி ஹி, ஹா ஹா ஹோ ஹோ'. பேண்ட் இசைக்கு வெறி ஏறுவது போல் தோன்றுகிறது. பேண்ட் வாசிப்பவர்களும் கையையும் உடல்களையும் அசைத்து ஆடி அடிவானத்தைத் தொடும் வகையில் ஆவேசமாக இசைக்கத் தொடங்கினார்கள். ஆடத் தெரியாதவர்களும் ஆடத் தொடங்கினார்கள். அந்தக் குழப்பத்தில் யாரை யார் கேட்பது, யாருக்கு யார் இல்லை என்பது?

"ப்ளீஸ், மிஸ்டர் லெக்வி, ப்ளீஸ்...தலை சுற்றுகிறது.."

"ஸாரி, உன் ஷு என் காலை மிதிக்கிறது ... நான் காலை எடுத்து வைப்பதைப் போல் இழுத்து வை, போதும்..."

"என்னால் இது முடியாது, விடுங்கள்..."

"உடம்பை ஏன் அவ்வளவு இறுக்கிக் கொண்டிருக்கிறாய்? ரிலாக்ஸ்.. கொஞ்சம் கிட்டே வா.. இன்னும் கொஞ்சம்.."

"வேணாம் விடுங்க .ஓ .ஓ.. உண்மையிலேயே தலையைச் சுற்றுகிறது...தலை.." என்று மந்தா திடீரென்று தலையைப் பிடித்துக் கொண்டாள.

லெக்வி மந்தாகினியின் கையைப் பிடித்துக் கொண்டு அந்த கலாட்டாவுக்கு இடையிலே நுழைந்து நுழைந்து வழி செய்து கொண்டு அவளைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வந்து இரைச்சலில்லாத ஒரு மூலையில் ஒரு நாற்காலியில் உட்கார வைத்தான்

"டார்லிங், உனக்கு வேண்டியது ப்ரெஷ் காற்று.. இப்ப எப்படி இருக்கிறது?"

"தலை இன்னும் கிர்ரென்று சுற்றுகிறது. இங்கே ஏதோ 'ஜிவ்' வென்று ஒலிப்பது போல் இருக்கிறது" என்று காதை மூடிக் கொண்டாள்.

"கொஞ்சம் இரு. இப்போது காப்பி கொண்டு வருகிறேன்" என்று ஓடினான் லெக்வி. லெக்வி வருவதற்குள் மந்தா குனிந்து வாந்தி எடுத்துக் கொண்டிருந்தாள்.

"இட் இஸ் ஆல்ரைட்...ரிலாக்ஸ்...இப்பொழுது எப்படி இருக்கிறது, பார்? கொஞ்சம் நேரம் நீ ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். இப்போதைக்கு நீ காப்பி குடி" என்று அவளை காப்பி குடிக்க வைத்து அவளை இரண்டு கைகளால் அணைத்துப் பிடித்து, படிகளில் இறக்கி அழைத்துக் கொண்டு போனான்—'சி' டெக்கில் இருந்த தன் கேபினுக்கு.

* * *

மூன்று நாட்கள் காய்ச்சல், இரண்டு நாட்கள் ஓய்வு—இன்று விழித்திருக்கிறாள்

மந்தாகினி. மார்ஸேல்ஸ் ட்ரிப் தவறிவிட்டது. ஜிப்ரால்டர் ட்ரிப்பும் தவறிவிட்டது. மிஸஸ் மோஹிதே வந்து வந்து மார்ஸேல்ஸைப் பற்றிச் சொன்னதுதான் அவளுக்குத் தெரியும் "அது ஒரு வேறு உலகம். எவ்வளவு சுதந்திரமான வாழ்க்கை அங்கே! உடம்பை நன்றாக வளர்த்துக் கொண்டு குளிர் விட்டுப் போய் ஒடியாடுகிற மக்கள். கேஸி கிராமத்துக் கடற்கரையை நீ பார்த்திருக்க வேண்டும். ஆணும் பெண்ணும் அரை நிர்வாணமாக...சீ...மணலில் தண்ணீரில் விளையாடுவதைப் பார்த்தால் என் உடம்பில் முள் குத்துவதைப் போல் இருந்தது..." ஜிப்ரால்டரில் பெரும் பாறையை தூரத்திலிருந்து போர்ட்ஹோல் வழியாகப் பார்த்து, 'ஆகா! இப்படி இருக்க வேண்டும் வாழ்க்கையில் ஒரு கல்லைப் போல' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். 'கப்பல்கள் வரும் போகும். ஆனால் இந்த ஜிப்ரால்டர் மட்டும் அலுங்காமல் குலுங்காமல் தலைநிமிர்ந்து நிற்கிறது... சுற்றிலும் உள்ள சமுத் திரங்களை எதிர்த்து...' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டாள்.

அவள் ஸ்வெட்டர் பின்னிக் கொண்டே உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு அருகே தடுப்புக் கம்பிகளில் சாய்ந்து கொண்டு முகர்ஜி தன் கேரளத்துத் தோழியுடன் பைத்தியக்காரனைப் போல் சிரித்துக் கொண்டே நின்றிருந்தான். அவன் பார்வை மந்தாகினியின் மீது பட்டதும் சிரிப்பதை விட்டுக் கேட்டான்:

"ஹலோ மிஸ்பாட்டே, மார்ஸேல்லில் இருந்து உன்னைப் பார்க்கவில்லையே? அங்கேயே இறங்கி பாரிஸ் வழியாக நீ போயிருக்கலாம் என்று நினைச் சிட்டிருந்தேன்.

மந்தாகினிக்குத் தெரியும். அவன் பேச்சில் அடங்கியிருந்த அர்த்தம். அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள். "அப்படிப் போயிருந்தாலும் நன்றாய் இருந் திருக்குமோ என்னவோ?"

"உன் நிறம் கொஞ்சம் வெளுத்திருக்கிறது! வெள்ளைக்காரர் களின் சகவாசமா?" என்று அட்டகாசமாகச் சிரித்தான்.

"ஆனால் உங்கள் முகம் கருத்திருக்கிறதே! அது யாருடைய சகவாசத்தால்? அல்லது உள்ளேயிருக்கிற நிறம் வெளியே வருகிறதோ?"

"நீ மிகவும் witty ஆகிவிட்டாயே, கொஞ்ச காலத்திற்குள்ளேயே!"

"தேங்க்ஸ்!" என்றாள். அவள் தன் கையிலிருந்த ஸ்வெட்டரைப் பின்னிக் கொண்டே.

"நீ பின்னுவது குழந்தையின் ஸாக்ஸ் அல்ல, இல்லையா?" சிரித்துக் கொண்டே சொன்ன முகர்ஜி அங்கே நில்லாமல் கேரளத்துப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டு சரசர வென்று போய் விட்டான்.

மந்தாவிற்கு அவமானமாகப் போய்விட்டது. உள்ளே ஏதேதோ எரிந்தது. மனம் யாரையோ சபித்தது. கண் சூனியமாக அட்லாண்டிக் சமுத்திரத்தைப் பார்த்தது. தன்னைப் பற்றி மற்றவர்களிடையே என்னென்ன பேச்சு எழுந்து விட்டதோ என்று பயந்தாள். அப்படி எழுந்தால் அதற்கு என்ன செய்ய முடியும். இவர்கள் நாளை அதைப் பேப்பரில் போடுவார்களா, அல்லது தன் தாய்—தம்பிகளுக்கு எழுதித் தெரி விப்பார்களா, அல்லது தன் தலையெழுத்திலேயே இல்லாத கணவனுக்கு முன்னால் பழி சொல்வார்களா? அந்த நல்லவன் சப்ரூவைப் பிடித்தால் எல்லாம் தெரியவரும் என்று நினைத்து, அவனைத் தேடியது போலவும் ஆகும், காற்றில் கொஞ்சம் உலாவப் போவதும் ஆகும் என்ற, 'இ' யிலிருந்து 'டி'க்கும் 'டி'யிலிருந்து 'சி'க்கும் ஒரு ரவுண்டு

அடுத்து 'பி' டெக்கில் ஏறினாள். 'பி' டெக்கின் லைப்ரரியில் சப்ரூ இருந்தான். ஓர் அழகிய ஆஸ்திரேலியப் பெண்ணின் துணையோடு. மந்தாவைக் கண்டவுடன் சப்ரூ எழுந்து அழைத்தான். "மந்தா பஹன், இங்க வாங்க. நாலைந்து நாளாகவே உங்களைக் காணமே! உங்களுக்கு ஏதோ உடம்பு சரியில்லன்னும், உங்களைப் பார்க்க போகணுமின்னும் மிஸஸ் மோஹிதே சொல்லிட்டிருந்தார். நானும் வரணும் வரணுமின்னு பல தடவை தீர்மானித்தேன். ஆனா..." என்று தன் தோழியின் பக்கம் ஓரக் கண்ணால் புன் சிரிப்புடன் பார்த்தான். "இவள் என் பிரண்ட் மிஸ் லேக்ஃபீல்டு. மெல்போர்னிலிருந்து ஆக்ஸ்போர்டிற்குப் போறா. அங்கே பி.ஏ., படிக்கப் போறா. அவளுடைய அத்தை இருக்கிறாளாம் ஆக்ஸ் போர்டில்...இவர் மிஸ் பாட்டே" என்று அறிமுகப்படுத்தி வைத்தான். மிஸ் லேக்ஃபீல்டு 'ஹலோ' என்று சொல்லிவிட்டு தன் கையிலிருந்த பத்திரிகையில் மூழ்கிவிட்டாள். "அப்படியானால் என் கேபினுக்கு ஏன் வரலை? எனக்கு மிகவும் போர் அடித்தது. மார்ஸேல்ஸில் மிஸ் ஜோசப் இறங்கிப்போன பிறகு நான் தனியாளாய் ஆகிவிட்டேன். அதிலும் காய்ச்சல்—ஃப்ளூவாக இருக்கலாம். டாக்டருக்கு தெரியலை..." மூலையில் இருந்த ஒரு சோபாவில் சரிந்த படியே சொன்னாள் மந்தா

"உண்மையைச் சொல்லணுமின்னா உங்களிடம் எனககிருந்த இன்ட்ரெஸ்ட் எல்லாம் போய்விட்டது. அந்த Gala day அன்று." என்று தன்னுடைய வழக்கமான பாணியில் வெளிப்படையாகச் சொன்னான், அதே சோபாவில் உட்கார்ந்து கொண்டே.

"லெக்வி உங்களை மோனோபொலைஸ் செய்து விட்டான். அன்று இரவு டான்சின் போது இவளப் பிடிச்சேன். இவள் மிகவும் 'அக்லி' யாக இருக்கிறா. இல்லையா? அதனாலதான் எனக்குக் கிடைச்சாள்... 'அக்லி' யாக இருந்தா என்ன, அவள் மிகவும் புத்திசாலி" என்று படபடவென்று பொழிந்தான்

அவனுடைய வெளிப்படையான போக்கை உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும் என்று மந்தா உடனே கேட்டாள்— "இந்த நாலைந்து நாட்களா ஜனங்கள் என்னைப் பற்றி என்னென்ன பேசறாங்க?"

"ஓ, ஜனங்களுக்கு எங்கே நேரம் இருக்குது உங்களைப் பற்றிப் பேச? எல்லாரும் தங்கள் தங்கள் வழியில் புரள்றாங்க...ஆனந்தமா இருக்கறாங்க."

"அது எனக்கும் தெரியுது— ஆனா..."

"முகர்ஜி மட்டும் என்னென்னமோ சொல்லிட்டுத் திரியறான். நீங்க அன்னைக்கு லெக்வியின் கேபினுக்குப் போனீங்க. அப்படி இப்படியென்று.. எனக்கென்னவோ அதில நம்பிக்கையில்லை விடுங்க, கடைசியில் அவனிடம் ஒரு தடவை சண்டையே போட்டேன். உனக்கேனப்பா இல்லாத வயிற்றெரிச்சல்? உனக்கு சான்ஸ் கிடைக்கலைன்னான்னு கேட்டுட்டேன். அது இருக்கட்டும். பை தி வே நீங்க உண்மையில் போயிருந்தீங்களா?"

"உம்"

சப்ரூ நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"அன்றைக்குச் சாப்பாடு ஒத்துக்கலை. பித்தம் அதிகமாகி விட்டது என்று தோன்றுகிறது—தலை சுற்றியது—பயங்கரமாகக் குளிர் எடுத்தது என்று லெக்வி தன் கேபினுக்கு அழைத்துக் கொண்டு போய் மருந்து கொடுத்தான். கொஞ்சம் சரியான பிறகு என் கேபினுக்குக் கொண்டு வந்து விட்டான். இதற்கே— அப்பா!"

"பாருங்க, ஜனங்கள் எவ்வளவு மூடர்களாக இருக்கிறார்கள்!"

"இங்கிலாந்து!...இங்கிலாந்து! இங்கிலாந்து தெரிகிறது!" என்று யாரோ கத்தி னார்கள். ஜனங்கள் எல்லாம் குடுகுடு என்ற ஓடினர்கள். கப்பலின் இடப்பக்கத்துக் கம்பிகளை நோக்கி. மிஸ் லேக்ஃபீல்டு 'கமான்' என்ற சப்ரூவை அழைத்துக் கொண்டு போனாள். மந்தாகினிக்கு எழுந்திருக்க மனம் இல்லை. இங்கிலாந்துக்குப் போய் அங்கே தங்குவதற்குத் தனக்கு மனம் இல்ல என்ற எண்ணம் அவளைக் கவிந்திருந்தது. என்ன செய்வது அங்கே போய்? பெறும் டி.டி.? வாழ்க்கையில் சுவையை ரசிக்கும் நாக்கு இல்லை. உதடுகள் இல்லை, கைகள் இல்லை...வெறும் கண்ணால் மட்டும் தின்பதற்கு என்ன இருக்கிறது? Gala ராத்திரி அவளுக்குத் தன்னுடைய தனித்தன்மையை வெளிச்சம் போட்டுக் காட்டியிருந்தது.

அன்றைக்கு லெக்வி அவளை அவளுடைய கேபினில் விட்டு விட்டுப் போகும் போது, 'மிஸ் போத்தே, நம்முடைய மாலை நேரம் இப்படிப் பாழாகி விட்டது எனக்கு மிகவும் வருத்தமாய் இருக்கிறது. டஸின்ட் மேட்டர். உங்களுடைய அழகான நட்புக்கு தேங்க்ஸ். நீங்கள் உண்மையிலேயே ஒண்டர்ஃபுல். நான் ஃபேர்வெல் சொல்லு வதற்கு முன்னால் ஒரு முத்தம் கொடுக் கலாமா?' என்ற மரியாதையோடும் உரிமையோடும் கேட்டான். ஆனால் அவனுடைய பட்டு உதடுகளுக்கு அவள் கொடுத்தது வெறும் வறட்டுக் கன்னம்தான். அவன் தோள்களுக்குத்தான் தந்தது வெறும் கற்சிலை...வெறும் கூச்சம். பயம். தலைக்கு மேல் கண்ணுக்குத் தெரியாமல் செத்த அப்பாவின் (தான் என்றும் அனுபவிக்காத) பயங்கரப் பழி... இல்லா விட்டால், லெக்வியின் கேபினில் அவனுடைய அன்புக்கை அவளை, மிருதுவாகப் பிடித்த போது மறுபடியும் 'ஓ' வென்று வாந்தியாக வேண்டுமா? அவன் அங்கேயே படுத்துக்கொள் என்று அன்போடு சொன்ன போது, 'ஏன் உங்களுக்குத் தொந்தரவு? நீங்க டான்சுக்கு திரும்பிப் போங்க. நான் என் கேபினுக்குப் போறேன். உங்களுக்குத் தொந்தரவு கொடுத்து உங்க மாலை நேரத்தையும் இரவையும் வீணாக்கிட்டேன். நீங்க டான்சுக்கு போகவே வேண்டும். தயவு செய்து போங்க..." என்று பைத்தியக் காரியைப் போலக் கத்தியிருப்பாளா?

"ஹலோ, மிஸ் பாட்டே, நீ இங்கயா இருக்கிறே? நூல் நிலையத்தின் கதவுக்கருகில் நின்ற மகார்த்தியின் குரல்—திடுக்கிட்டாள் மந்தாகினி."

"மிஸ் பாட்டே, எப்படி இருக்கிறே? உனக்கு உடம்பு சரியில்லைன்னு கேள்விப் பட்டேன். இப்பொழுது நன்றாக இருக்கிறாய் அல்லவா? அதோ இங்கிலாந்து வந்து விட்டது. எல்லோரும் இங்கிலாந்தின் கரையோரத்தைப் பார்த்து மகிழ்ந்து கொண் டிருக்கிறார்கள்....நீ இங்கே தனியாக...வா. பார்க்கலாம்"

"வாருங்க"

இருவரும் கம்பியின் மேல் முழங்கைகளை ஊன்றி அடிவானத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே நின்றார்கள். பனி மூட்டத்தில் இங்கிலாந்தின் கரிய பாறைகள் தெளிவற்றுக் காட்சியளித்தன.

"எப்படியிருக்கிறது இங்கிலாந்து?" மகார்த்தி கேட்டான்.

"எப்படியென்றால்...பூதத்தைப் போல!" தன்னுடைய நாக்கைத் தானே கடித்துக் கொண்டாள்.

"வெல். எப்படியே கடைசியில் வந்து சேர்ந்து விட்டோம் அல்லவா? ஆம், எப்படி இருந்தது பொதுவாக இந்தப் பிரயாணம்? மிகவும் நன்றாய் இருந்ததல்லவா?" மக்கார்த்தி வாயில் சுருட்டைக் கடித்தபடி கேட்டான்.

"உம் நன்றாய் இருந்ததே..."

"எதைப் பற்றியும் வருத்தமோ கோபமோ இல்லைதானே?"

"வருத்தம்! கோபம்! சீ...எல்லாமே இன்ட்ரெஸ்டிங்காக இருந்தது" என்று மகார்த்தியின் சிரிக்கும் கண்களைப் பார்த்தபடியே மந்தா சிரித்தாள்.

"இன்டரெஸ்டிங்! ... ஆஹா, அதுவே சரியான வழி. எல்லாவற்றையும் இன்ட்ரெஸ்டிங்காகப் பார்க்க வேண்டும்...குட், வா. இங்கிலாந்தைப் பார்ப்பதற்காக ஒரு சிறிய விழா நடத்தலாம்...கொஞ்சமாக காக்டேல் குடித்து குட்ஒல்ட் இங்கிலாந்தை வர வேற்கலாம்..."

"ஒகே"

இங்கிலாந்தின் அடிவானத்தில் பனி விலகியிருந்தது.

# கிளிப் ஜாயின்ட்

## யு.ஆர். அனந்த மூர்த்தி

### I

"வாழ்க்கையில் ஒரு நோக்கம் இருக்க வேண்டும்" என்று பைப்பை இழுத்து, யோசித்து, சொற்களைத் தேடி, "என் வாழ்க்கையில் அது இல்லை" என்று சொல்லும் போது ஸ்டூவர்ட்டின் நீலக் கண்கள் சிந்தனையில் மூழ்கி ஆழமாகக் காட்சி யளிப்பதில் நடிப்பு எவ்வளவு? உண்மை எவ்வளவு? இவனும் மோசமானவன் தானோ? என்னைப் போல?

கேசவன் கீழே பார்த்தான்: மின்சாரம் நிரம்பி குளிர்ச்சியாகக் காணும் டியூப் ஸ்டேஷனின் (பாதாள ரயில்) தண்டவாளங்கள், பாய்ந்தால்—

"பாய்ந்தால் ஒரே கணத்தில் சாவு" என்று ஸ்டூவர்ட் கன்னத்தைச் சொரிந்து, கொட்டாவி விட்டு, "எக்ஸ்கியூஸ் மி" என்றான்.

எங்கோ படித்த நினைவு; எல்லா அனுபவங்களின் முடிவும் மரணத்தைப் போல இருக்கும். "இரண்டாவது டிரெயின் நம்முடையது."

அணைந்து போன பைப்பைப் பையில் வைத்துக் கொண்டு ஸ்டூவர்ட் சூடேறி கரகரத்துப் போன குரலில் சபித்தான். பப்ளிக் ஸ்கூலில் படித்து விட்டு வந்த உண்மையான அரிஸ்டோகிராட்டிக் லிபரல் இவன்—ஒரம் தைக்காத உல்லன் டை, அழுக் கேறிய சாம்பல் நிறப் பிளானல் கால்சட்டை, ஹாரிஸ் ட்வீட் கோட், பைப், நீளமாக வளர்ந்த எண்ணெய் படாத கிராப், தாடி, உயர்ந்த உடல். ஆனால் தன்னு டையது குட்டையான தடித்த உடம்பு. ஆடையில்லாமல் குளிக்கும் போது யுனிவர்சிடி "ஜிம்"மில் பார்த்திருக்கிறான்; இந்திய இளைஞர்களுக்கெல்லாம் பொதுவாக இடுப்பைச் சுற்றித் தொப்பை.

கேசவன் பேடிங்டன் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் உலாவினான். இங்கே? பவுண்டின் கவிதையிலா? இந்த இரண்டு வரிக் கவிதை— 'பனி மூடிய மங்கிய வெளிச்சத்தில் இந்த முகங்கள், உலர்ந்த கொம்பில் எரிந்த பூவின் இதழ்கள்' ஸ்டூவர்ட்டைக் கேட்டால் கேலி செய்வான்: 'கேசவ், இந்தியராகிய நீங்கள் இலக் கியங்களில் படித்ததை இங்கே நேரில் காணவும், ஒப்பிட்டுப் பார்க்கவும் இங்கி லாந்துக்கு வருகிறீர்கள்.' உண்மை. யூனிவர்சிட்டிக்கு போய் திரும்பும் போதெல்லாம் தினமும் பார்த்து வந்த பூ டஃப்போடில்ஸ் என்று தெரிந்த பிறகே வொர்ட்ஸ்வொர்த் என்று மனதில் மணி அடித்தது. கை கட்டிய படி நடந்து கொண்டே பிளாட்பாரம் முழுவதும் ஆர்வத்தோடு பார்த்தான்— பெஞ்ச்; அட்வர்டைஸ்மெண்ட் போஸ்டர், சிகரெட், சாக்லெட், பால், பழ ரசம், சூடான காப்பி இவற்றுக்கான ஸ்லாட் மெஷின்; பெஞ்ச்; உள்ளாடைகளை விளம்பரம் செய்யும் அரை நிர்வாணப் பெண்ணின்

உடம்பின்மீது பென்சில்கோடுகளால் விபசாரம். இண்ட்ரெஸ்டிங். இந்தியாவில் கல்லூரிகள் கக்கூஸ் சுவர்கள். இந்தியக் கல்லூரி மாணவர்களைப் போல அதிருப்தி யடைந்த ரகசிய காமுகர்கள் உலகத்தில் எங்குமே இல்லை. என்னைப் போல. கல்லூரியில் யாராவது ஒரு பையன் ஒரு பெண்ணோடு மரத்தின் கீழே எதிரெதிராக நிற்கும் அளவுக்குத் துணிவு காட்டினால் போதும்; அறிவு வளராத பையன்களை விட்டு விடுவோம். எவ்வளவோ அறிவாளியான ஆசிரியர்களின் கண்களும் அவன் மேல்தான். என் தம்பி பக்கத்துவீட்டுப் பெண்ணுடன் ஜன்னல் வழியாகக் கண் களாலேயே பேசினான் என்பது தெரிந்து நான் எவ்வளவு கோபித்துக் கொண்டேன், கலாட்டா செய்தேன்.

ஏப்பம் வந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள் என்று சொல்லும் இந்த ஜனங்கள், பொதுவான இடங்களில் பெஞ்சுகளின் மேல்— அந்தப் பக்கமே நடந்தான்.

பெஞ்ச் ஒன்றின்மேல் பீட்டில்ஸ்கிராப் வைத்திருந்த ஒரு பையன் சிவப்பு உடையணிந்த ஒரு பெண்ணை அணைத்துக் கொண்டு அவள் காதுகளைக் கடித்த படியே ரகசியம் பேசிக் கொண்டிருந்தான். கேசவன் நின்றான். அவள் நெளிந்த படியே அவனுடைய ஸ்வெட்டருக்குள் கையை விட்டுத் தடவினாள். கேசவன் அங்கிருந்து கண்ணை எடுக்க முடியாமல் நின்றான். புரட்டாசி மாதத்தில் நாய்கள் மாத்திரமே...அந்தப் பெண்ணின் மூடிய கண்களை விரல்களால் திறந்து நாக்கு நுனியால்..கலகல வென்று சிரித்துக் கொண்டே தள்ளினாள் கேசவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான் கள்ளத்தனமாகப் பார்த்தான் வெட்டுப் பட்ட பல்லியின் வால் துள்ளிவிழுந்து செயலற்றுப் போனதைப் போல, உள்ளேயிருந்து கலக்கியதைப் போல, "திஸ் இஸ் நோ கன்ட்ரி ஃபார் ஓல்ட்மேன் "

"எனக்கு இப்போது வயது 32, ஸ்டூவர்ட். தலைமுடி நரைக்க ஆரம்பிச்சிட்டுது. இளமையில் சிறுவயதில் இருந்த வியப்பும் உற்சாகமும் மறைஞ்சிட்டே வருது. இன்னும் ஒரு பெண்ணின் கையைக் கூட நான் தொட்டதில்லை. அதற்கு என்ன சொல்றே? "கேசவன் ஸ்டூவர்ட்டுக்கு சிகரெட் பாக்கெட்டை நீட்டினான்.

"தேங்க்ஸ். வேண்டாம். நான் பைப்பையே பிடிக்கிறேன் நீ சொல்வது வியப்பாக இருக்கிறது.." என்று பைப்பைக் கடித்தபடி கேசவனுடைய சிகரெட்டைப் பற்ற வைத்து, பிறகு தன்னுடைய பைப்பைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை இழுத்து, "நீ மிகவும் அதிகமாக சிகரெட் பிடிக்கிறாய், கேசவா" என்றான். அவர்கள் இருவரின் ஐந்து, ஆறு மாத நட்பில் இதுதான் ஸ்டூவர்ட்டின் முதலாவது பர்சனல் ரியாக்ஷன். "நாக்கு எப்போதும் எதையாவது சுவைத்துக் கொண்டே இருக்கணும் அரைமணி நேரம்கூட சும்மா இருக்க மாட்டேன்; யாரோடாவது எப்போதும் இருக்க வேண்டும். தனியாக, எதுவும் செய்யாமல், பிடிக்க சிகரெட் இல்லாமல் ஒரு நாள் கழிக்க வேண்டி வந்தால் அநேகமாக, நான் தற்கொலை செய்து கொள்வேன்."சிவப்பு உடையணிந்த அந்தப் பெண் தன் நண்பனின் முகத்தைக் கைகளில் ஏந்தி ஆராதிக்கும் கண்களால் பார்த்தாள்.

"ஏன்?"

"தெரியாது. பயம்—ஒருவித விசித்திரமான அச்சம்"

தாவி.ஒரு ட்ரெயினில் ஏறப்போன கேசவனைத் தடுத்து நிறுத்தி, "நம்முடையது இரண்டாவது வண்டி, இது அல்ல" என்றான் ஸ்டூவர்ட். "இது என்னுடைய முதல் டியூப் ரயில் பிரயாணம்" என்றான்-கேசவன்.

"வாழ்க்கையில் ஒரு நோக்கம் வேண்டும் என்று அதனால்தான் சொன்னேன். நோக்கம் இல்லாவிட்டால்..."

"எனக்கு நோக்கத்திலும் நம்பிக்கை இல்லை. நோக்கமுள்ள கதைகளிலும் நம்பிக்கை இல்லை, ஸ்டூவர்ட்..."

வண்டியின் கதவுகள் அலிபாபாவின் கதையில் வருவதைப் போலத் திறந்து கொண்டன. ஜனங்கள் உள்ளே நுழைந்தவுடன் மூடிக் கொண்டன. சிகரெட்டை விட்டுவிட்டால் மாதத்துக்கு 10 பவுண்டுக் கர்சு மிச்சப்படுத்தலாம். பத்து பவுண்டுக் காசை அந்த கள்ளச் சந்தை பஞ்சாபிக்குக் கொடுத்தால் இந்தியாவில் இருக்கும் தன் தாயாருக்கு அவன் இருநூறு ரூபாய் கொடுக்கச் செய்வான். ஒரு மாதம், வாழ்க்கை ஒட்டுவதற்கு அது அவருக்குப் போதும். வறுமைத் துன்பம், தங்கைகளின் திருமணக் கவலை தீர்வதற்கு எடுத்து வைக்கும் முதல்அடி—நான் சிகரெட்டை விடுவது. ஆனால் விட மாட்டேன். 'நான் இருக்கிறேனா செத்தேனா என்று நீ கவலைப் பட வேண்டாம். இந்த வீட்டை விட்டு நான் போகிறேன்' என்று மாது எழுதியிருக்கிறான் என்னுடைய வாழ்க்கையைப் பற்றி இப்படி அவன் தீர்ப்புக் கூறியிருக்கிறான். ஆனால் இன்று அந்தக் கவலை வேண்டாம், எல்லாவற்றையும் மறக்க வேண்டும் என்று ஸ்டூவர்ட்டோடு லண்டனுக்கு வந்திருக்கிறேன்...

"குறைந்தது கேன்சர் வரும் என்ற பயத்திலாவது சிகரெட்டை விட்டால்..." தனக் குள்ளேயே கவலைப்படுவதைப் போல ஸ்டூவர்ட் பேசினான்.

"அப்படி நான் எதையும் விடுவதில்லை, ஸ்டூவர்ட். நீ உன் கையில் பிடித்துக் கொண்டிருப்பது ஒரு பாம்பு என்று தெரிந்தால் என்ன செய்வாய் சொல்? டக்கென்று அதை அங்கேயே வீசி விடுவாய் அல்லவா? தர்ம சங்கடம், உள்ளேயே தப்பு, சரி என்னும் போராட்டத்திற்குப் பிறகு ஒரு தீர்மானத்துக்கு வருவதில்லை அல்லவா? அப்படி வர வேண்டும் ஆன்ம ஞானம்"

"ஆன்ம ஞானம், ஆன்மாவை விமர்சிக்கும் சக்தியினாலும் சக்தியிலிருந்தும், பண்பாட்டில் இருந்தும் வருகிறது என்று நான் நினைக்கிறேன், கேசவ்..."

"தப்பு, இதோ பார்! எனக்கு ஆன்ம ஞானம், ஆன்மாவை விமர்சிக்கும் சக்தி இருக்கிறது என்ற நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் இந்த ஆன்ம ஞானமும் நான் முதலிலேயே நிச்சயப்படுத்திக் கொண்ட ஆன்மாவின் ஞானம். வீட்டிலிருந்த போது சில தடவை நினைத்தது உண்டு; இப்படி நான் வேண்டிக் கொள்வதும், தாய் மேலும், தம்பிகளின் மேலும் கோபத்தைக் காட்டிக் கொண்டிருப்பதும் எனக்கு விபரீதமான ஸெல்ஃப்—லவ் இருப்பதால்தான், இது தப்பு—என் வாழ்வு முழுவதும் விஷத்தை நிரப்பிக் கொண்டிருக்கிறேன் என்று. அப்படிப் பார்த்தால் ஒரு வாரத் திற்கு எல்லாம் சரியாக நடக்கும். அனால் ஏதாவது கொஞ்சம் மீறினாலோ, குறைந் தாலோ போதும், என்னுடைய சுபாவம் மறுபடியும் படம் எடுத்துச் சீறும். அதற்காகத் தான் கையில் இருப்பது பாம்பு என்று தெரிந்து கொண்டவனுடைய உதாரணத்தைச் சொன்னேன். ஆன்ம ஞானம், டக்கென்று வரணும். உயிர் தலைகீழாகி, புதிதாக ஆவது அப்படித்தான். இல்லாவிட்டால் நாம் எப்போதும் முன்பே நிச்சயமானதைப் பற்றிக் கொண்டு சுற்றிக் கொண்டிருப்போம்; ஆன்ம ஞானம் என்னும் மயக்கத்தில் திண்டாடிக் கொண்டிருப்போம். அதனால்தான் எனக்கு லட்சியத்திலோ, லட்சியம் பற்றிய கதைகளிலோ நம்பிக்கை இல்லை என்று சொன்னேன் எல்லா லட்சியமும் முன்னதாகவே நிச்சயிக்கப்பட்டதுதான்...என் சொற்பொழிவை மன்னித்துக்

கொள். இந்தியர்கள் முடிவில்லாமல் பேசுவதில் நிபுணர்கள்"—திடீரென்று முழுவதும் தனிப்பட்டதான தன் அனுபவத்தைப் பற்றிய பேச்சு வெளியிட்டதில், கூச்ச சுபாவ முடைய அந்த ஆங்கிலேயன் என்ன நினைத்தானோ? கேசவன் ஆர்வத்தோடு ஸ்டுவர்டைப் பார்த்தான்."

"தேங்க்ஸ் ஃபார் த அட்வைஸ்" என்று ஸ்டுவர்ட் குப்பைத் தொட்டி அருகே போய் தன் பைப்பை வீசி எறிந்துவிட்டு வந்து "என்னுடைய நாடகத்தை மன்னித்துவிடு" என்றான்.

"இப்பொழுது உனக்கு பைப் விஷயத்தில் தோன்றியதைப் போல எனக்குத் தோன்றியதைச் செய்வதானால் ஒன்று, அதோ அங்கே சிவப்பு ட்ரெஸ் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாளே அந்தப் பெண்ணை அணைத்துக் கொண்டு முத்தம் கொடுக்க வேண்டும் அலலது இந்த தண்டவாளங்களில் பாய வேண்டும்" என்று சொல்லி, கேசவன் சிரித்தான. மற்றொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, பல நாட்களாகத் தான் யோசித்து வநததைப் பற்றிச் சொறகளைக் கூட்டிக் கூட்டி "எனக்கொரு சித்தப்பா இருந்தார். ஒரு நாள் அவர் வீடு வாசலை எல்லாம் விட்டு பத்ரிகாசிரமத்திற்குத் தவம் செய்யப் போனார்...உன்னுடைய கதையே வேறு; நீ இங்கிலாந்தின் உயர்ந்த நாகரீகத்தின் சிறந்த விளைச்சல். என் சித்தப்பா இந்திய நாகரீகத்தின் மிகச் சிறந்த விளைச்சலாக இருந்ததைப் போலவே. ஒருவன் தவசி. இன்னொருவன், நாகரிகமுடையவன். நாகரீகமுடையவன் தன் வாழ்க்கையின் குற்றங்குறைகளைத் திருத்திக் கொண்டு வாழ்க்கையை ஒரு கட்டுப்பாட்டில் மகிழ்ச் சியில் நடத்திக் கொண்டு போவான். நான் சொல்லிக் கொண்டிருப்பது எனக்கே இன்னும் தெளிவாகவில்லை...என்றாலும் இப்படித் தோன்றுகிறது. நீ நாகரிகமுடை யவன், அவன் தவசி, நான்.."

"நீ" என்று ஸ்டுவர்ட் சிரித்துக் கொண்டே, "ஓ, ஐ மிஸ் மை பைப்" என்றான்.

"நான் வாழ்க்கையில் எந்த மகிழ்ச்சியும் இல்லாத, முழுமை யான இயல்புடைய, நாகரிகமுடையவனாகவும் ஆக முடியாமல், தவசியும் ஆக முடியாமல் தவிக்கிறவன்" என்றான் கேசவன் சிகரெட்டை இழுத்து புகையை வெளியே விட்டபடி. "ஒரு சிகரெட் எடுத்துக் கொள்" என்று ஸ்டுவர்ட்டுக்குக் கொடுத்து தீக்குச்சியைக் கிழித்துப் பற்ற வைத்தான். ஸ்டுவர்ட் மௌனமாக இருப்பதற்கு விரும்பலாம் என்று அவ னுடைய முக பாவத்திலிருந்து தெரிந்து கொண்டு கேசவன் பாய்ந்து வருகிற பேச்சுக்களை எல்லாம் விழுங்கிக் கொண்டான்.

* * *

அம்மா சொன்னபடி கேட்டு, சொந்த அக்கா மகள் பாகீரதியைக் கல்யாணம் செய்து கொண்டு, நான்கு தங்கைகளுக்கும் வரன் தேடிக் கல்யாணம் செய்து வைத்து, அதில் ஏற்பட்ட கடனை டியூஷன் மூலமாகவும் பரீட்சைப் பணத்தின் மூலமாகவும் தீர்த்து, குடும்பத்தின் லட்சியமே குழந்தைகள்தான் என்று பாகீரதி மூலம் நல்ல குழந் தைகளைப் பெற்றெடுத்து—த்தூ! அது வாழ்க்கையே அல்ல—அல்ல. அதோடு அம்மாவைக் கோபித்துக் கொண்டு, தம்பியோடு போய்ச் சண்டை போட்டுக் கொண்டு, வளர்ந்து நிற்கும் தங்கைகள் எல்லார் கண்ணுக்கும் விருந்தாக வீடு பாழாக வேண்டும். அதுவும் அல்ல. இப்போது மாது அச்சுறுத்தி இருப்பதைப் போலத் தற் கொலை செய்து கொண்டு, அம்மா அந்தத் துக்கத்திலேயே செத்து, நான் ஊருக்குத்

திரும்பும்போது தங்கைகள் போக்கிரிகளின் சொத்தாகி, வாசல் தெளிக்காமல் கோலம் இல்லாமல் பூசை அறையில் விளக்கு இல்லாமல் இழவு வீடு மாதிரி இருந்தால்...

"என்ன யோசிக்கிறாய், கேசவ், அவ்வளவு தீவிரமாக? இதோ நம்முடைய வண்டி" என்றான் ஸ்டுவர்ட். கதவுகள் திறந்து கொண்டன. அவர்கள் நின்ற இடத்தில் வந்து நின்ற பெட்டியின் கண்ணாடியின் மீது சிவப்பு எழுத்தில் "நோ ஸ்மோக்கிங்" என்னும் போர்டு இருந்ததால் ஒடி இன்னொரு பெட்டியின் எதிரில் நின்று பிரயாணிகளெல்லாம் இறங்கிய பிறகு ஏறிக் கொண்டார்கள். கதவு மூடிக் கொண்டது. இரண்டே கணத்தில் இருட்டுக் குகையில் நுழைந்தார்கள். பத்திரிகையில் கண்ணை ஒட்ட வைத்து உட்கார்ந்திருந்த, களைப்பினால் கண்ணை மூடிக் கொண்டிருந்த, தங்கள் வேலைகளிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த முகங்களைக் கேசவன் பார்த்தான்—இவர்கள் எலியட்டின் காப்பியப் பாத்திரங்கள். வண்டியின் உள்ளே இருந்த விளம்பரங்களையெல்லாம் ஒரு பக்கத்திலிருந்து படித்துக் கொண்டே வந்தான். இந்தப் பழரசத்தைக் குடித்து குடித்து இளைத்து விடு, வால்ஸ், ஸாஸேஜ்களை உட்கொள்ளுங்கள், நீங்கள் விரும்பும் ஆண்களெல்லாம் பிரிட் டனில் தயாராகும் உடைகளையே அணிகிறார்கள்...

"ரஷ்யாவில் இப்படிப்பட்ட விளம்பரங்களுக்குப் பதிலாக கம்யூனிசப் பிரச்சாரம் செய்யும் போர்டுகள் இருக்கலாம் அல்லவா ஸ்டுவர்ட்? கட்சியில் சேர், இளைஞர்களின் முன்னணியில் நில், சந்திர மண்டலத்துக்கு வா..."

"லட்சியம் மனிதனுக்கு முக்கியம் என்று அதற்காகத் தான் சொன்னேன், கேசவ். ஆனால் நான் சொன்னதை நீ ஏற்றுக் கொள்ளவில்லை. கம்யூனிஸம் ஒரு லட்சியம். கத்தோலிக்கர் மதம் இன்னொரு லட்சியம். நான் இந்த இரண்டையும் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் லட்சியம் இல்லாமல் இருப்பதைவிட இந்த ஸாஸேஜ் தின்று, அந்தப் பழரசத்தைக் குடித்து, இந்த பிரிட்டன் ஆடைகளை அணிந்து, அதற்காக உழைத்து, இப்படிப் பாதாளத் திலிருந்து மேலேயும் மேலேயிருந்து பாதாளத்துக்கும் அலைந்து கொண்டே இருப்பதைவிட ஏதாவது லட்சியம் இருப்பது முக்கியம்."

"இங்கே உட்கார்ந்திருக்கும் இந்த ஜனங்கள் கஷ்டப் படுகிறார்கள் என்று உனக்கு எப்படித் தெரியும்? நீ உன்னுடைய பார்வையிலிருந்து அவர்களுடைய வாழ்க்கை பயனுள்ளதா இல்லையா என்று சொல்ல முடியுமே தவிர, அவர்களுக்கு அவர்களுடைய வாழ்க்கையில் சுகம் இருக்கிறதா இல்லையா என்று சொல்ல முடியாது அல்லவா? சுகம், துக்கம் என்பதெல்லாம் இந்த நிமிஷத்தில் தோன்றுகிறது, பயன் உள்ளது இல்லாதது என்பது இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் வைத்து அளந்து பார்ப்பது, இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பற்றிச் சிந்திக்காதவனுக்குச் சுகமும் துக்கமும் மட்டுமே உண்டு, பயனைப் பற்றிய கேள்வியே இல்லை. இங்கே இப்படிக் குழம்பிக் கொண்டிருக்கிறவர்கள் என்னையும் உன்னையும் போன்றவர்கள்."

"எண்ணம், கற்பனை என்னும் இரண்டு செயல்கள் மனத்துக்கு இருக்கும் வரையில், கற்பனை எண்ணத்தின் மற்றொரு வளர்ச்சியாக இருக்கும் வரையில், மனிதனுக்கு இறந்த காலத்திலிருந்தும் எதிர்காலத்திலிருந்தும் விடுதலை இல்லை, கேசவ். ரத்தத்தின் சூடு குறைந்து கொண்டே வரும்போது இறந்தகாலம் எதிர்காலம்

என்கின்ற தொல்லையே தீர்ந்து விடும். ஒரு சிகரெட் கொடுக்கிறாயா? இறங்கியதும் கொடுத்து விடுகிறேன்."

"ஓ! டோண்ட் பாதர்" என்று கேசவ் அவனுக்குச் சிகரெட்டைக் கொடுத்து, "லட்சியம் என்பது ஓல்ட் ஏஜ்ஜுக்காக செய்கிற ஒருவகை ஸேவிங்க்ஸைப் போல என்று சொல். என்னைப் பொருத்தவரையில் எனக்கும் உன்னைப் போலத்தான் தோன்றுகிறது. ஆனால் எனக்குப் படுவது சரி என்கின்ற நம்பிக்கை எனக்கு இல்லை"

வண்டி நின்றது. "நாம் இங்கே இறங்க வேண்டாம்" என்று ஸ்டுவர்ட் கேசவனைத் தடுத்தான். அவர்கள் பெட்டியில் பிரயாணிகள் நிரம்பி இருந்ததால் சீட்டெல்லாம் நிறைந்து பலர் நிற்க வேண்டியிருந்தது. கேசவனும் ஸ்டுவர்ட்டும் எழுந்து இரண்டு கிழவிகளுக்குத் தங்கள் சீட்டைக் கொடுத்தார்கள். எதிரில் நின்ற ஒரு பெண்ணின் சேவல் கொண்டை போன்ற கூந்தலின் அமைப்பை உற்றுப் பார்த்துக் கொண்டே யிருந்தான் கேசவ்.

இந்தப் பெண்கள் சரியானவர்கள், என் தங்கைகளைப் போல அல்ல. தனி யாகவே போய் வருகிறார்கள், வேலை செய்கிறார்கள், பையன்களைத் தாங்களே தேடிக் கல்யாணம் செய்து கொள்கிறார்கள். நம்முடைய பெண்களோ! அவர் களுடைய குலுக்கல் என்ன, அவாகளுடைய கூச்சம் என்ன, மேலேமேலே முந்தா னையை இழுத்து விட்டுக் கொண்டு காட்டும் மதர்ப்பு, ஒய்யாரம் என்ன! இந்தப் பெண்கள் தங்கள் மார்பைக் கொடிகளைப் போல் எடுத்துக் காட்டி தங்கள் கவர்ச்சியை வெளிப்படுத்திக் கொண்டு நடக்கிறார்கள் நேர்மை, அச்சமில்லாமை. நம்முடைய நாட்டில் நடுத்தர மேல் மட்டத்துப் பெண்களுக்கு அவர்களுடைய உடம்பின் பகுதிகள், மறைத்து வைத்த பிரம்மாஸ்திரம். என் தங்கைகள் ஏன் வீட்டாரையெல்லாம் இப்படிக் கஷ்டபபடுத்த வேண்டும், தங்கள் கணவர்களைத தாஙகளே ஏன் தேடிக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்றும் நினைத்த துண்டு. ஆனால், அது வெறும் எண்ணம்தான் அப்படி ஏதாவது அவர்கள் நடந்து கொண்டிருந்தால் முதலில் கோபித்துக் கொள்பவன் தானேதான். ஒவ்வொரு இந்திய இளைஞனும் வீட்டில் பழமைவாதி. வெளியில் புரட்சிக்காரன். இப்போது ஸ்டுவர்ட் டோடு பேசும் பேச்சுக்கள் வேறு, நரகத்தின் மேலே கட்டும் தத்துவக் கட்டிடம். பாகீரதியை மணந்து கொண்டு விருப்பமில்லாமலே குழந்தை பெற்றுக் கொள்ளட்டுமா? அம்மா தன் பேத்தியை மிகவும் புகழ்ந்திருக் கிறாள். "அவளுக்கு என்னடா, மூக்கும், முழியுமா பார்க்க லட்சணமா இருக்கா, சிவப்பாய் இருக்கறா. எஸ்.எஸ். எல்.ஸி படிச்சிருக்கா, வேண்டுமானா மேலே படிக்கவை, நான் ஒன்றும் வேணாமின்னு சொல்ல மாட்டேன். வீட்டு வேலைகள் நல்லபடி பார்த்துச் செய்யறா. எனக்கும் வயசும் கூடிட்டே போறது. பெரியவன் போக்கு வீட்டையே பாதிக்கும் என்பதைப் போல நீயே வழிசெய்து கொடுக்காட்டா எப்படி?" பாகீரதி வீட்டிற்கு வந்தால்—ஆறுபேர் தம்பி தங்கைகளுடன். எனக்கு ஒரே எரிச்சல். இப்போது இதைவிடப் பெரிய பிரச்சினை என் தம்பி மாதுவி னுடையது. அவனிடம் நான் சரியாக நடந்து கொண்டேனா? அவன் எஸ்.எஸ்.எல்.ஸியோடு படிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டான். சின்னவன் சுசீந்திரனாவது மேலே வந்தான் என்று பார்த்தால் அவன் பி.எஸ்ஸியில் கஜனி முகம்மதுவைப் போலப் படையெடுத்துக் கொண் டிருக்கிறான். சாயங்காலம் இஸ்திரி போட்ட பேண்ட் மாட்டிக் கொண்டு சிவப்பு டை கட்டி, வாக்கிங்: ஓட்டலில் ஒன் பை டு மசால் தோசை, ஒன் பை டு காப்பி:

சீட்டாட்டத்தில் காசு கிடைத்தால் சினிமா: ராத்திரி பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தால் அம்மா பாத்திரங்களைக் கழுவாமல், துடைக்காமல் காத்திருக்க வேண்டும்... 'உபயோகமில்லாத இந்தச் சோம்பேறிகளுக்காக நீ ஏன் காத்திருந்து சாப்பாடு போடுகிறாய், அம்மா? நீ ஏதாவது சொல்லக் கூடாதா? சாயங்காலமானால் ஒரு ஐம்பது ரூபாயும் அதிகமாகக் கிடைக்கும் என்பதற்காக 4 செட் பையன்களுக்கு டியூஷன் எடுத்து நான் ஏன் இங்கே சாக வேண்டும்? இந்தத் தான்தோன்றிகளின் வயிற்றை நிரப்பு வதற்கா...?'

அம்மா சாப்பாட்டுப் பாத்திரங்களையெல்லாம் எதிரிலே வைத்துக் கொண்டு தலையில் கைவைத்தபடி மௌனமாக உட்கார்ந்திருப்பாள். இரண்டு தம்பிகளும் பிசைந்த சோற்றை எடுக்காமல் தலை குனிந்து உட்கார்ந்திருப்பார்கள். தாங்கள் தவறு செய்து விட்டோம் என்று அவர்களுக்குப் படும் வரை கேசவன் திருப்தி அடையமாட்டான். வண்டைப் போலக் கோபம் உடம்பெல்லாம் ஊர்ந்து நெருப்பாகி, சூடேறி, சொறியைப் போல இன்னும் கொஞ்சம், மேலும் கொஞ்சம் கோபம் கொள்ள வேண்டும் என்று உள்ளே இருந்து ஒரு ஆசை தோன்ற, கோபம் இன்னும் மீறுவதற்கு அம்மா ஏதாவது சொல்லக் கூடாதா, மாது எதிர்த்துப் பேசக் கூடாதா என்று எண்ணி, அந்த எரிச்சலில் தன்னுடைய அகராதியிலிருந்து சொல்லக் கூடாத பேச்சுக்களையெல்லாம் தேடி எடுத்துப் பேசுவான். அம்மா ஏதும் பேசாமல் பெருமூச்சு விட்டால் மாதுகண்ணில் நீர் நிரம்பிச் சாப்பிடாமல் எழுந்து விட்டால், வெட்கப்பட்டு ஏமாற்றமடைந்து கை கழுவிக் கொண்டிருக்கும் மாதுவிடம் போய், "சாப்பிடக் கூடாதா? சாப்பிடாமல் என்மேல் கோபத்தைக் காட்டுகிறாயா?" என்பான். கோபம் தன்னிரக்கமாகி புண்ணாகிச் சீழ்பிடிக்கும். சில சமயங்களில் தாய்: "ஏன் கெட்ட வார்த்தைகளைச் சொல்றே? எல்லா நேரமும் ஒரே மாதிரி இருக்காது. இது விஷக்கடி நேரமாக இருகலாம். கெட்டதை எண்ணிப்பேசக் கூடாது. நல்லதையே நினை" என்பாள். தெய்வத்துக்குக் காணிக்கை முடிந்து நெய் விளக்கு ஏற்றுவாள். அல்லது மாதவன், "அந்தப் பாழும் பாக்டரியில் நான் கூலிக்காரனைப் போல வேலை செய்ய மாட்டேன். தெரியுதா? எனக்கு அது ஒத்துவராது. உனக் கென்ன? எம்.ஏ. படித்து விட்டு காலேஜில் லெக்சரராக இருக்கிறாய் என்ற திமிர். அப்பா உனக்கு செய்த அளவு எனக்குச் செய்யவில்லை...நீ எனது அண்ணன் என்பதற்காக உன் வீட்டில் சாப்பிடுகிறேன்.இஷ்டமில்லை என்றால் சொல், போய் விடுகிறேன்" என்பான்.

"நான், நான், நான்..."கையை ஓங்கி முன்னாலே போய், பேச்சு வெள்ளமாகப் பாயும். "உங்களைப் போலச் சோம்பேறிகளா திரியலை. நான் உங்களுக்குச் செய்த அளவு அப்பா எனக்குச் செய்யலை...இலவச ஆஸ்டலில் தங்கி, கக்கூஸ் கழுவி, பெருக்கிக் கூட்டி, படிச்சி முன்னுக்கு வந்தேன்..."—எல்லா விஷமும் வெளியே வரும். அப்படி நடக்கும் நாட்களில் கேசவனுக்கு கோபத் திருநாள். தீபாவளி! யட்ச கானத்தில் ராவணனுக்குப் பூசும் வர்ணமும் போடும்வேஷமும் இல்லையென்பது தான் குறை. உள்ளேயிருந்த ஒரு ஆசை—காமத்தைப் போல ஆழமான ஆசை—நிறைவேறியதைப் போல, கடைசியில் ஒரு வகையான சுகத்திலோ சூனியத்திலோ ஆழ்ந்து விட்டவனைப் போல உட்கார்ந்து விடுவான். இப்போ தெல்லாம் கோபம் ஒன்றுதான் நான் அடையக் கூடிய ஆழமான ஓர் உணர்ச்சி என்று திடீரென்று மனத்தில்பட்டு அஞ்சுவான்.

"நாம் பேக்கர்லூ லைனில் உட்கார்ந்திருக்கிறோம். இது பேக்கர்ஸ்ட்ரீட் ஸ்டேஷன்" என்றான் ஸ்டுவர்ட்—வண்டி சிறிது காலியானதால் இருவரும் தங்கள் சீட்டுக்குத் திரும்பினார்கள். ஸ்டுவர்ட் நின்று கொண்டே பிரயாணம் செய்தபோது தன்னைப் பற்றியே தொடர்ந்து நினைத்துக் கொண்டு இருந்திருப்பான் என்று கேசவனுக்குப்பட்டது. விட்ட இடத்திலிருந்து மறுபடியும் தொடர்ந்தான்:

"நான் லட்சியம் பற்றி ஏன் சொல்லத் தொடங்கினேன் என்றால், இந்த நாட்டில் ஜனங்கள் தங்களுக்கே உரிய சுயநலமான ஒரு சிறிய உலகத்தில் இருந்து வருகிறார்கள். கூட்டுக் குடும்பங்கள் இருக்கின்றன. உங்களைப்போன்ற நாடுகளில் இன்னமும் தனி மனிதர்களிடையே ரத்த சம்பந்தம் மிஞ்சி இருக்கிறது. ஆனால் எங்களைப் பார்? பதினாறாம் வயதில் ஒரு பையன் உழைக்கத் தொடங்குகிறான். பதினெட்டில் கல்யாணம் செய்து கொள்கிறான். வேலை கிடைக்காவிட்டால் அவனுக்கு வேலையில்லாப் பென்ஷன் கிடைக்கிறது. வயதான பெற்றோரைப் பார்த்துக் கொள்ள வேண்டும், இளமையில் முதுமையின் அனுபவத்தோடு தொடர்பு வேண்டும் என்னும் கட்டாயமில்லை. பெற்றோரைப் பார்த்துக் கொள்ளும் ஓல்ட் பியூபள்ஸ் ஹோம் இருக்கின்றன. மொத்தத்தில் வாழ்க்கையில் பக்குவப்படுத்தும் சிந்தனைத் தீ இல்லை. தவணை முறையில் அவன் மனைவி வீட்டுக்கு வேண்டிய டி. வி., வாஷிங் மெஷின், ஃபிரிட்ஜ் எல்லாம் வாங்கிக் கொள்கிறாள். இவன் ஒரு கார் வாங்குகிறான் சாயங்காலம் தாங்கள் தினம் போகும் 'பப்'புக்குப் போய் இரண்டு மணி நேரம் தன்னைப் போலவே வாழ்க்கை நடத்தும் இன்னும் சிலருடன் அரட்டை அடித்துவிட்டு வீட்டுக்கு வந்து டெலிவிஷனைப் பார்த்து வருஷத்துக்கு ஒரு தடவை விடுமுறையில் போய், கடற்கரையில் அரை நிர்வாணமாக ஆயிரம் பேரோடு படுத்திருந்து உடம்பை 'டியூன்' செய்து கொண்டு...இதை வாழ்க்கை என்கிறாயா? இவர்களுக்கும் மொத்த வாழ்க்கைக்கும் என்ன சம்பந்தம்? என் வாழ்க்கை இதிலிருந்து வேறானதல்ல, கேசவ் வாழ்க்கையில் எதிர்ப்பு வேண்டும். சிக்கல் வேண்டும், சுகதுக்கங்கள் வேண்டும்—சல்லிசாக நழுவி வருவது அல்ல. ஓ! ஐ ஆம் போர்ட், டெரிபிளி போர்ட். இங்கிலாந்தில் உயிரே இல்லை—இந்த சுகப்பட்ட சமுதாயத்தின் வாழ்க்கையில், லட்சியமே இல்லை. நீ சொல்கிறாய் உன் வாழ்க்கை ஏழ்மையை எதிர்த்துப் போராடியதிலேயே பாழாகிவிட்டது, காமம் என்கிற அனுபவமே இல்லாமல் வாடியிருக்கிறது என்று. என்னை எடுத்துக் கொள். எனக்கு ஏழ்மையின் அனுபவம் இல்லை. பசி என்றால் என்னவென்று தெரியாது. பதினாறாம் வயதிலிருந்து இதுவரை ஒரு பெண் தேவை என்று தோன்றும் போதெல்லாம் பெண்ணின் சுகம் கிடைக்காது என்று ஏற்பட்டதே இல்லை—குடும்பக் கட்டுபாடு எல்லாருக்கும் தெரிந்திருக்கும் இந்த நாட்டில் பெண்களோடு சேர்வது என்பது பயப்பட வேண்டிய விஷயமே அல்ல. எல்லாம் ஆகிவிட்டது. தின்றேன், உண்டேன், தூங்கினேன், பெண்க ளோடு படுத்தேன், இன்னும் கொஞ்சம் தின்றேன், தூங்கினேன், பெண்களோடு இருந்தேன்—அப்புறம்? வாழ்க்கையில் இன்னும் என்ன திரில் இருக்கிறது?"

"உன்னைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாய் இருக்கிறது, ஸ்டுவர்ட்" கேசவன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

"இந்த வண்டியில் உட்கார்ந்திருக்கும் ஜனங்களைப் பார். எங்கள் சமுதாயத்தின் ஒரு கிராஸ் செக்ஷன் இங்கே இருக்கிறது. பௌலர் தொப்பி, பின்ஸ்டல் கருப்பு சூட் அணிந்து 'டைம்ஸ்' படித்துக் கொண்டிருக்கும் அந்த ஆள் பேங்கிலோ அரசாங்க

வேலையிலோ இருக்க வேண்டும். அவன் எஸ்டாபிளிஷ்மெண்டைச் சேர்ந்தவனாக இருக்கலாம். க்ரீம் போட்டுத் தலைமுடியைப் படிய மேலே வாரி காலர் இல்லாத சட்டை போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கும் அந்த ஆள் உழைப்பாளர் குடும்பத்தில் பிறந்தவன்—எங்கோ சேல்ஸ்மேனாக இருக்கிறான். இதோ புன்னகை புரியும், கூந்தலுக்குச் சிவப்பு வண்ணம் பூசி இருக்கும் இந்தப் பெண் பெரும்பாலும் உல்ஸ்வோர்த்தில் சேல்ஸ்கேர்ல். அநேகமாக எ பிக்-அப் கேர்ல். அதோ இன்னொருத்தியின் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. அவள் ஸ்டெனோ டைபிஸ்ட். அவர்கள் உபயோகப்படுத்தும் செண்டிலிருந்தே சொல்லலாம். எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவள், என்ன முடி உடையவள் என்று. வருமானம் பதவி இவற்றைப் பார்த்து அவள் கல்யாணம் செய்து கொள்வாள். ஒல்லியாக இருப்பதற்காக தினமும் உடற் பயிற்சி செய்வாள். சாயங்காலம் பிரெஞ்ச் படிப்பாள். போனில் அப்பாய்ண் மெண்ட் ஃபிக்ஸ் செய்து கொண்டு ஹேர்—ஸ்டைலிஸ்ட்டிடம் சென்று முடிவெட்டிக் கொண்டு வருவாள். பீட்டில்ஸ்டைலில் தலைமுடியை நீளமாக வளர்த்துக் கொண்டு டைட் பேண்ட் போட்டு, கையில் ஒவ்வொரு டிரான்ஸிஸ்டரைப் பிடித்துக் கொண்டு, உட்கார்ந்திருக்கும் இந்த இளைஞர்கள் இன்னும் இரண்டு வருஷங்களில் கல்யாண மாகி, தவணை முறையில் வாங்கிய சாமான்களுக்கு வாராவாரம் பணம் திருப்பிக் கொடுக்கத் தொடங்குவார்கள். நானும் கூட இன்னும் ஒரு வருஷத்தில் யுனிவர்சிடி படிப்பை முடித்துக் கொண்டு, அந்த பௌலர் தொப்பி போட்டுக் கொண்டிருக் கிறான் அல்லவா? அவனுடைய எஸ்டாப்ளிஷ்மெண்ட்டில் ஒரு சாதாரண ஆனால் ஒரு முக்கியமான சக்கரமாக ஓடுவேன்...எப்படிப்பட்ட புரட்சிக்காரனுக்கும் இங்கே லார்ட் பட்டம் கிடைத்து எஸ்டாப்ளிஷ்மெண்டின் அங்கமாக மாறுகிறான். சார்த்ரே இங்கிலீஷில் எழுதியிருந்தால் அவன் இங்கே ஹவுஸ் ஆஃப் லார்ட்ஸ்ஸில் மெம்ப ராக ஆகியிருப்பான். இல்லை. இங்கிலாந்து பெரியதாக, தன்னுடைய உள்ளுறுப்பு களை இழந்து விட்டிருக்கிறது. ஆல் ஆஃப் அஸ் நீட் ஸ்லிம்மிங், ஸஃபரிங்... எங்கள் அங்க்ரி எங் மென் என்ன ஆனார்கள் பார்; பி.பி.சியும் எங்கள் முக்கியமான பத்திரிகைகளும் அவர்கள் வலுவானவர்கள் என்று சீக்கிரம் அடையாளம் கண்டு கொண்டு எங்களுடைய அபாரமான எஸ்டாபிளிஷ்மெண்டில் சேர்த்துக் கொண் டார்கள். இங்கே எங்களுக்கு எதிர்காலம் இல்லை. இந்த நாட்டில் எந்தப் புதிய அனுபவமும் இல்லை. எங்களுடைய நல்ல எழுத்தாளர்களெல்லாம் அதனால்தான் வேறு வேறு நாடுகளைப் பற்றி எழுதுகிறார்கள். ஃபார்ஸ்டர், லாரன்ஸ், கிரீன், டர்ரெல்—இங்கிலாந்தில் எழுதுவதற்கு என்ன இருக்கிறது? நத்திங் பட் அவர் ஸ்டுபிடிட்டி, ஸ்நாப்பரி...என்னுடைய இந்த நீண்ட சொற்பொழிவை மன்னித்து விடு. நீண்ட பேச்சுக்களை இந்தியராகிய நீங்கள் எங்களிடமிருந்துதானே கற்றுக் கொண்டீர்கள். டிட் ஃபார் டேட்?"

இப்படிச் சொல்லிச் சிரித்து, ஸ்டூவர்ட் பேச்சை முடித்தான். சிவந்து போன அவன் முகத்தைப் பார்த்த கேசவனுக்கு அவன் உணர்ச்சி வசப்பட்டுப் பேசுகிறான் என்பது தெரிந்தது. கூட்டுக் குடும்பத்தைப் பற்றி அவன் சொன்னதிலிருந்து அதைப்பற்றி அவனுக்கு அனுபவம் இல்லை என்று தோன்றியது கேசவனுக்கு. தனக்கே அந்த அனுபவம் போதும் போதும் என்று ஆகிவிட்டது. ஒரு வேளை எந்தச் சமுதாய அமைப்பிலும் மனிதனுக்குச் சுகம் இல்லை; தடுமாறிக் கொண்டிருப்பது மனிதனுடைய அநாதியான, முடிவில்லாத தேவையாக இருக்கலாம். என்

வாழ்க்கையும் திறமையும் பாழாகிறதே என்று நான் கத்திக் கத்தி வீட்டாருக்கு அது பழகிப் போய் இப்போது யாரும் கவனிப்பதே இல்லை. எனது நான்கு தங்கைகளும் அரைவயிற்றுக்குச் சாப்பிட்டு, பருத்திப் புடவை உடுத்தி வெறுங்காலில் நடந்தாலும் வசந்த காலத்துக் காட்டு மரங்களைப் போல உயிர்த் துடிப்பு நிறைந்து, கவலையில் இளைத்துக் கொண்டிருக்கும் அம்மாவின் கண்ணுக்கு வெடி குண்டைப் போலத் தென்படுகிறார்கள். மார்பு நிமிர்ந்து தெரியாதபடி துணியில் தைத்த பிரேஸியரில் இழுத்துக் கட்டி முந்தானையால் மூடிக் கொண்டு முதுகை வளைத்து தலை கவிழ்த்து புத்தகமும் ஜாமெட்ரி பாக்ஸும் பிடித்தபடி அவர்கள் கல்லூரியிலிருந்தும் பள்ளிக் கூடத்திலிருந்தும் நடந்து வருவதைப் பார்த்தால் கேசவனுக்குச் சங்கடமாக இருக் கிறது. வாழ்க்கை ஒரு சுமை என்று தோன்றுகிறது. ஆனால் தன் சுகத்தைப் பற்றிய சிந்தனையைப் பெண்ணுக்கு யாரும் கற்றுத் தர வேண்டிய தில்லை, இரவு பதினொன்றரை வரையில் படித்து, காலையில் மறுபடியும் நாலு மணிக்கு எழுந்து படித்து, வீட்டுவேலையில் அம்மாவுக்கு கொஞ்சம் உதவி செய்து, முதல் வகுப்பில் தேறி, முழுச் சம்பளச் சலுகை பெற்று, படித்துக் கொண்டுவருகிறார்கள்; தம்பி களுக்கு வெட்கம் ஏற்படும் வகையில். மாதுவுக்கோ தன்னைப் பற்றிய கவலை எள்ளளவும் இல்லை. போனஸில் அவனுக்கு ஒரு தடவை பணம் ஒரே நேரத்தில் கிடைத்தது. நான்கு தங்கைகளுக்கும் தாய்க்கும் புடவை, தனக்கும் கேசவனுக்கும் சுசீந்திரனுக்கும் பேண்ட் துணி வாங்கி, ஒருவாரம் வரை மகிழ்ச்சியோடு, தங்கை களுக்குச் சினிமா காட்டி, வந்த பணத்தை தீர்த்து விட்டான். அப்படிப் பார்த்தால், மாது தன்னை விட அதிகமாக வாழ்கையில் வெற்றி படைத்த, இளமை நிரம்பிய, தன்னைப் போல வருந்தி பொறுப்பினால் பொறுப்பு என்று நினைத்து, பொங்கி வரும் அன்பை இழக்காத ஒரு பையன். அதற்காகவே பெண்கள் அவனை விரும்பிய அளவுக்குத் தன்னை விரும்புவதில்லை. குடும்பம், குடும்பம் என்று சண்டைபோட்டு நான் உலர்ந்து விட்டேன். கடமை என்னும் கவலையில் அன்பை இழந்து விட்டேன். கடமை, நீதி, நியாயம் என்னும் குறியே இல்லாத மாதுவின் நெஞ்சில் பயனில்லாத, ஆசை அற்ற அன்பு நிறைந்திருக்கிறது. இவைகளுக்கிடையில் தங்கைகள் அசாதா ரணமான புத்திசாலிகள்; ஒருவேளை தன்னலம் என்ற கோணத்தில் மோசக் காரர்கள். இந்தவீடு கடைசிவரையில் தன்னுடனும், மாதுவுடனும், அம்மாவுடனும் ஒட்டிக் கொண்டிருப்பதற்காகக் கஷ்டப் படுகிறார்கள். கல்யாணம் ஆகி, நல்ல கணவன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததும் அவர்களுக்கு இந்தத் தகராறு இருக்காது—அதற்காகவே நல்ல கணவனுக்காக அவர்கள் காத்துக் கொண்டிருக் கிறார்கள். அவர்களுக்கு நல்ல கணவன் கிடைப்பதற்கு தான் ஒரு சாதனம் என்பதால் அண்ணனிடம் பிரியத்தோடு நடந்து கொள்கிறார்கள். ஒரு லெக்சரரின் தங்கைகள் என்று அவர்களுக்கு மதிப்பு கூடுதல் அல்லவா? அதுவும் அவர்களுக்குத் தெரியும்—அப்பா செத்த பிறகு, கடனெல்லாம் போக, தோட்டத்தை விற்று மிச்சமான பணம் ஐயாயிரம் இருக்கிறது பேங்கில். இன்னும் ஐயாயிரமாவது வேண்டும், அந்தப் பெண்களுக்குத் தகுந்த கணவன்மார்களைத் தேடிக் கொண்டு வர. அதற்காக நான் பாடுபட வேண்டும்—வீட்டின் மரியாதைக்குத் தகுந்தபடி ஆடம்பரம் இல்லாமல் கல்யாணம் செய்து கொடுக்க. அம்மா கேட்டதால்தானே—தன்மடி மீது விளையாட வீட்டில் பேரக் குழந்தைகள் இல்லாததால் நீயாவது கல்யாணம் செய்து கொள் என்கிறாள் அம்மா. முதலில் தங்கைகளுக்கு ஆகட்டும் என்கிறேன் நான். உன்

அக்காள் மகள் இருக்கிறாள் அல்லவா...மறுபடியும் தொடங்குகிறது பழைய கதை. அவர்களுடையது பெரிய சம்சாரம், கொஞ்சம் உதவி செய், கன்னிப் பெண் என்கிற சுமையை இறக்கு...நான் கோபித்துக் கூறி, சீறி, செருப்பைப் போட்டுக் கொண்டு வெளியே போகிறேன்—"இன்றைக்கு பையன்கள் வந்தால் டியூஷன்" இல்லை என்று சொல்லிவிடு. இந்த வீட்டிற்காக உழைத்து உழைத்து ஓடாகிவிட்டேன்."

எனக்கும் தெரியும், அம்மாவுக்கும் தெரியும்—பாகீரதியைத் தவிர வேறு பெண்ணை நான் கல்யாணம் செய்து கொள்வது சாத்தியமில்லை என்று. கல்யாண மாக வேண்டிய நாலு தங்கைகள், உபயோகமில்லாத இரண்டு தம்பித் தடியன்கள் இருக்கிற வீட்டிற்கு வேறு வீட்டுப் பெண், படித்தவள் வந்து சேர்ந்தால் கண்டிப்பாகச் சண்டை எழுப்புவாள். கணவனை வீட்டாரிடமிருந்து பிரித்து தன்னுடையது என்று ஒரு சிறிய குடும்பத்தை உருவாக்குவதற்கு முயற்சி செய்வாள். பாகீரதியைச் செய்து கொண்டால் அம்மா மிரட்டி கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க முடியும். என் தங்கை களுக்கு இது தெரியும். என்னிடத்தில் இவ்வளவு பிரியமாக நடந்து கொள்ளும் அவர்கள் தங்கள் நலத்தைக் கருதி தாங்கள் நல்ல இடத்தில் போய்ச் சேர வேண்டும் என்ற ஆசையில் மிகவும் சூசகமாக நான் அக்கா மகளை விரும்பும்படி செய்வதற்கு பெரும் பாடு படுகிறார்கள். அவள் கையால் எனக்கு ஒரு ஸ்வெட்டர் பின்னிக் கையில் கொடுக்கச் செய்வது, வேலை இருப்பதாகச் சொல்லி அவளை என் அறையில் விட்டுவிட்டுப் போவது ஒவ்வொரு சமயம் விடுவித்துக் கொள்வதற்குத் திண்டாடுகிறேன். எப்படி...எப்படி...அதற்காகவே இங்கிலாந்துக்கு வந்தேன்.

## II

இருட்டிலிருந்து மீண்டும் வெளிச்சத்துக்கு. கதவுகள் சரிந்தன. பிரயாணிகளை உமிழ்ந்து, விழுங்கிக் கொண்டன. முதன் முதலில் இந்தப் பேய் நகரத்தில், வீட்டாரிடமிருந்து ஐயாயிர மைல் தூரத்தில் தெரிந்து கொள்ள வேண்டியது: எனக்குள் எல்லா சூட்சுமங்களையும் விழுங்கிக் கொள்ளும் ஒரு ராட்சதக் கோபம் கொதித்துக் கொண்டிருக்கிறது என்று. அது வலுவில்லாத பெண்மையின் கோபம். அன்பைப் பகிர்ந்து கொள்ள முடியாத, யாரிடமிருந்தும் பெற்றுக் கொள்ள முடியாத ஒரு கஞ்சத்தனம் உள்ளே இருக்கிறது. சில பசுங்கனவுகளை அவ்வப்போது காண்கிறேன்: "ஒன்று—நான் உழைத்து உழைத்து ஓடாகி, செத்து சுண்ணாம்பாகி, கல்யாணமில்லாமல் வறண்டு போய், அம்மாவும் மாதுவும், தங்கைகளும் வெறுத்து நன்றி கெட்டவர்களாகி, இன்னும் என் மேல் போர் தொடுத்து, நான் இந்த உலகத்தின் இரக்கத்துக்கு ஆளாவது; மற்றொன்று எதிர்பாராதவிதமாக, தாய், தங்கை, தம்பிகள் செத்து நான் ஒருவனே ஆழ்ந்த துக்கத்தில் மிஞ்சுவது. கோபத்தால் பலமின்மை; பல மின்மையால் இன்னும் கொஞ்சம் கோபம். காமம், குரோதம், மோகம், மயக்கம், புத்தி கெடுதல் அதனால் அழிவு. கல்லை உடைக்க வேண்டும், மண்ணைச் சுமக்க வேண்டும், ரம்பத்தைப் பிடித்துக் கொண்டு மரங்களை அறுக்க வேண்டும். விடுதலை. எஸ்கலேட்டர் மேலே ஏறி நின்று, மேலே திரும்பி வரும்போது ஸ்டூவர்ட்டுக்குச் சொன்னான்:" "எனக்கு இதெல்லாம் எவ்வளவு விசித்திரமான அனுபவங்கள் தெரியுமா? பதினாறு வயது ஆகும் வரையில் நான் ரயிலையோ, எலக்ட்ரிக் விளக்கையோ பார்த்ததில்லை. கிராமத்து வீட்டிலிருந்து இன்னொரு பெரிய கிராமத்திலிருந்த ஹைஸ்கூலுக்கு வெறும் காலில் நடந்து வந்து படித்தேன்."

"உன்னைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாய் இருக்கிறது"

ரோஷம். என்னுடன் இப்படியே 15 நாட்களுக்கு ஸ்டூவர்ட் இருந்தானானால் பரஸ்பரம் வெறுப்பு ஏற்பட்டு இந்தச் சிநேகிதம் முடிவுக்கு வரும். நான் உள்ளே நுழைந்து தொட்டதெல்லாம் மண். நடந்த இடமெல்லாம் மணல்காடு. உள்ளே இருக்கும் ஆசை;

பயங்கரமான சித்திரவதையைச் செய்ய வேண்டும். அல்லது அப்படிப்பட்ட சித்திரவதையை அனுபவிக்க வேண்டும். விஷக் கன்னி ஒருத்தியின் நிர்வாண நெருப்பில் விழ வேண்டும். அவளுடைய உதட்டிலும் இமையிலும் மார்பிலும் உள்ள நெருப்புக்கு ஆவியாகி அவள் கர்ப்பத்தினுள் நுழைந்து, வெந்து பொன் சிலையாக, அவள் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வர வேண்டும். பாரதத்தில் போர் நடக்க வேண்டும்; அதில் நாமெல்லாம் சிப்பாய்களாகிக் கொல்ல வேண்டும்; சாக வேண்டும்; எதிரியின் நகரத்தை முற்றுகையிட்டு, பெண்களை மானபங்கம் செய்து கொள்ளையடித்து, மீசை வளர்த்து...

"பர்ஸை ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டு வா" என் றான் ஸ்டூவர்ட். ஆண் பெண் உடம்புகளைக் கொண்ட ஒரு பெரிய கூட்டம் ஒன்றையொன்று உரசித் தாக்கி, தள்ளினாலும் வேறு வேறு உணர்ச்சி கொண்ட உலகங்களாக நின்று, அடிமேல் அடிவைத்து நடந்து வெளியே வந்ததுதான் தாமதம், காற்றில் பறக்கும் சருகுகளைப் போல...பவுண்டின் கவிதையைக் கேசவன் மறுபடியும் நினைத்துக் கொண்டான். இங்கிலாந்தின் ஜூன் மாதத்து நீலக்கண்ணுடன் மெதுவாகச் சிரிக்கும் பச்சைக் குழந் தையின் அபூர்வமாக வெயில் வீசும் மாலை நேரம்—இரவு 9 மணி வரை வெயிலில் இருந்து பீர் குடித்து, கால்நீட்டி டெலிவிஷன் பார்த்து, திரைச் சீலைகளை இழுத்து குட்நைட் சொல்லி, பார்க்குகளில் காதலைப் பரப்பும் அந்த அற்புத மாலை நேரம். ஸ்டூவர்ட்டையே பின் தொடர்ந்து நடந்து ஆரஞ்சு நிறத்தில் ஒளிவிடும் விளக்குகள் இருந்த ஜீப்ராகிராஸிங்கில்—'வந்த புதிதில் இது தெரியாமல் சாலையில் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை அநாதைப் பறவையைப் போலப் பறந்து கொண்டிருந்தேன்—கடந்தான். அவர்கள் கடந்து செல்வதற்காக நிறுத்தியிருந்த காரின் டிரைவருக்கு ஸ்டூவர்ட்டைப் போலத் தானும் அவசரமாகக் கையைத் தூக்கி வணக்கம் சொன்னான்.

* * *

இங்கிலாந்துக்கு வந்தவன் மூன்று மாதங்கள் வரை அசிங்கமான தனி வாழ்க்கை நடத்த வேண்டியதாயிற்று. யூனிவர்சிட்டியிலிருந்து டிக்ஸிக்கும், டிக்ஸியிலிருந்து யூனிவர்சிட்டிக்கும் பல நாட்கள் வீட்டுக் காரியிடம் குட்மார்னிங், குட்ஈவினிங் தவிர வேறும் ஏதும் பேசாமல் தன்னுள்ளிருந்த நரகத்திலேயே வாழ வேண்டியிருந்தது. யூனிவர்சிட்டியிலிருந்த சில இந்திய மாணவர்களோடு அறிமுகம் ஏற்பட்டாலும் அவர்களோடு பழகுவது பொறுத்துக் கொள்ள முடியாது என்று தோன்றியது. எந்த ஒரு புது வாழ்வையும், புது நோக்கங்களையும் தேடி இங்கிலாந்துக்கு வந்திருந்தேனோ அது அவர்களிடமிருந்து கிடைக்காது என்பது தெளிவாயிற்று. இவ்வளவு நாள் நட்புக்குப் பிறகும் ஸ்டூவர்ட் தன்னைக் கேட்ட கேள்வியை இந்திய மாணவன் அறிமுகமான உடனேயே கேட்டான். "உனக்கு எவ்வளவு ஸ்காலர்ஷிப் கிடைக் கிறது...?...இவ்வளவு", "பாதிக்குப் பாதி அதில் மிச்சம் பிடிக்கலாம்!" மிச்சம் பிடித்து?

மனைவி கட்டிக் கொண்டு வந்த ஒவ்வொரு இந்தியனுக்கும் இருக்கும் ஆசை: ஒரு பாப்-அப் டோஸ்டர், ஒரு வாஷிங் மெஷின், ஒரு ரெப்ரிஜிரேட்டர், ஒரு டிரான்ஸிஸ்டரை எப்படியாவது எக்ஸ்போர்ட் டூட்டியை ஏமாற்றி ஊருக்குக் கொண்டு போக வேண்டும். ஸ்டூவர்ட் தன் இனத்தவர்களில் காணும் மெட்டீரியலி ஸத்தை விட, பயங்கரமான மெட்டீரியலிஸத்தைக் கேசவன், இந்தியர்களிடம் கண்டான். இங்கே படிக்கும் இந்தியர்கள் சொந்த நாட்டிற்குத் திரும்பிய பிறகு எந்த அளவுக்குப் பேராசைக்காரர்களாக அங்கே நடந்து கொள்கிறார்கள் என்பது கேசவனுக்கு அனுபவத்தில் தெரியும். ஆனால் இந்த இந்தியர்களை விட்டால் எந்த இங்கிலீஷ்காரனுடைய சிநேகிதமும் கேசவனுக்குக் கிடைக்கவில்லை. மாணவர் களில் முக்கால்வாசிப் பேர் தங்கள் சிநேகிதிகளுடன் ஓய்வு நேரத்தில் ரிஃபாக் டரியின் பெஞ்சுகளின்மேல் காதல் செய்வதிலேயே இருந்ததால் யாருடனும் நட்பை வளர்த்துக் கொள்வது முடியாத காரியமாக இருந்தது. நகரத்திலும், வழியிலும் பார்க்கும் வெள்ளைக்காரர்களோ தான் ஒரு கருப்பன் என்னும் சந்தேகத்துடனும், அலட்சியத்துடனும் பார்த்தார்கள்.

வந்து மூன்று மாதங்கள் ஆனபிறகு யூனிவர்சிட்டியின் நிறவெறிக் கொள்கைக்கு எதிரான கூட்டம் ஒன்றில் கேசவனுக்கு ஸ்டூவர்ட்டின் அறிமுகம் கிடைத்தது. எல்லா ஆங்கிலேயர்களையும் போலவே, "இந்தப் பருவநிலை உனக்கு ஒத்துக் கொள்கிறதா?" என்று பருவநிலையை ஒட்டியே பேச்சு தொடங்கியது. "ஓ! போன வருஷம் நீ இங்கே இருந்திருக்கணுமே. அப்படிப்பட்ட குளிர் காலத்தை நான் என் வாழ்க்கையிலேயே கண்டதில்லை" என்று நாடகத்தனமாக கைகளைத் தூக்கி ஸ்டூவர்ட் முகத்தைக் குலுக் கினான். கேசவன் அதற்கு "எனக்குப் பனி விழுவதைப் பார்க்கப் பிடிக்கும். கண் பார்த்த இடத்தில் எல்லாம் பனி நிரம்பி வெண் மையாக இருப்பதைப் பார்ப்பதற்குக் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லியிருந்தான். இப்படியே பேச்சு வளர்ந்து அவன் தன் டைரியை எடுத்து "அடுத்த வியாழக்கிழமை சாயங்காலம் என் டிக்ஸிக்கு வருகிறாயா? சேர்ந்து சாப்பிடலாம்" என்று சொல்லியிருந்தான். ஸ்டூவர்ட்டின் நட்பு அவனுக்கு நிலவைப் போல இதமாக இருந்தது. அதிகமான நெருக்கத்தைக் காட்டித் தழுவிக் கொள்ளும் நட்புஅல்ல அது. நெருக்கம் என்றாலே கேசவன் பயப்படுகிறான்-மித ஆழமாக இணைந்து கொள்வது இனிமேல் தன்னால் முடியாது என்று நினைத்துக் கொண்டிருக் கிறான். தனக்குள்ளிருப்பது கொஞ்சமும் பிடிக்காத, தன்னிரக் கத்தில் நாறுகின்ற, புதைக்கப்படாத இறந்த காலத்துச் சவங்கள். சகஜமான நாகரீகத்தின் மேலோட்டமான வாழ்க்கையே மேல். கேசவனுடைய அறிமுகம் நன்றாக ஆனபிறகும்கூட அவனை வந்து பார்ப்பதற்கு முன்னால் ஸ்டூவர்ட் "வரட்டுமா, உனக்கு ஓய்வு இருக்கிறதா?" என்று கேட்பான். பேச்சு பொதுவாக ஸ்டூவர்ட்டுக்குப் பிடித்தமான இந்தியாவின் ஆன்மீகம், யோகம், பின் தங்கிய நாடுகளுக்கு நிதியுதவி, முதலியவை பற்றியே நடக்கும். கேசவனுக்குத் தெரியும்: ஸ்டூவர்ட் அடிப்படையாக ஐரோப்பியன்-அவனுடைய ஆன்மாவின் வளர்ச்சி நாகரீகத்தின் பாதையிலேயே நடக்க வேண்டும். நாசூக்காக, மென்மையாக, அறிவு பூர்வமாக ஆரோக்கியத்துடன் வாழ்க்கையை நடத்த முயலும் அவர்களுடைய கடைசிநிலை, மிகவும் நாகரீகமான மக்கள் தொடர்பில் கட்டாயமாகத் தோன்றும் நோய், அழுக்கு, சேறு, பசுவின் மூத்திரம் முதலியவை களை முழுவதும் துடைத்துப் போட்ட, ஆன்டிசெப்டிக் சமுதாயம். இந்தியாவில் மக்கள் தொடர்பு பசுவின்

மூத்திரத்தில், சேற்றில் முளைக்கிறது. கால் புதைந்தும் போகலாம், பூ மலர்ந்தும் விடலாம். அதனால் ஸ்டுவர்ட் எவ்வளவுதான் உணர்ச்சி பூர்வமாக இந்தியாவை நேசித்தாலும் அதற்கு முன்னால் சிறுநீர், சேறு ஆகியவற்றின் நாற்றத்தில் விளைந்த வாழ்க்கையின் ஆழத்தை உணரமாட்டான். கேசவனுக்குத் தெரியும், தான் கால்புதைந்தவன் என்று. ஆனால் பாரதத்தின் நிலத்தில் உறுதியாக நிற்பவர்களும் இருக்கிறார்கள்; எரிகிற கல்லின் மீது உட்கார்ந்து புழுபூச்சி உட்பட உலகத்தை எல்லாம் அன்போடு பார்த்து ஊமை யானவர்களும் இருக்கிறார்கள். எல்லா வற்றையும் இயந்திரமயமாக்கிய, நிர்மலமான ஸ்டுவர்ட் வளர்ந்த பூமியில் மகாத் மாக்கள் பிறப்பதில்லை-நாகரீகம் மிகுந்த நல்லவர்களும் மனித இனத்தின் மீது இரக்கம் கொண்டவர்களும் பிறக்கிறார்கள்.

ஸ்டுவர்ட் தனக்கு எவ்வளவுதான் அதிருப்தி என்று சொன்னாலும் வாழ்க்கையில் ஒரு நியதி இருக்கிறது. தன்னைப் போலவே அவனும் பித்துப் பிடித்து அடுத்தடுத்து சிகரெட் பிடித்து என்ன செய்வதென்று தெரியாமல் சபிக்கப்பட்டவனைப் போல் உட்கார்ந்திருப்பதைக் கேசவன் பார்க்கவில்லை. தன் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் டைரியில் முன்னதாகவே எழுதி வைத்தவன் போல யோசித்து வாழ்கிறான். ஒவ்வொரு வருஷமும் கோடை விடுமுறையில் மலைகளில் ஏறு வதற்காக ஐரோப்பாவுக்குப் போகிறான். நாகரீகமுடையவனின் முக்கிய நோக்கம்: தன்னால் பிறருக்குத் துன்பம் ஏற்படக் கூடாது அநியாயம் நடக்கக் கூடாது; பங்கு கொள்வதும் வேண்டாம், கொடுப்பதும் வேண்டாம். முதலாவது பீரைக் கேசவன் வாங்கிக் கொடுத்தால் இரண்டாவது ஸ்டுவர்ட் வாங்குவான். சாப்பாட்டுக்கு அழைத்தால் திருப்பிக் கூப்பிடுவான். யாரையாவது கடந்து போக வேண்டி வந்தால், 'மன்னியுங்கள்' என்கிறான். ஏப்பம் விடுவதில்லை. கெட்டியாகப் பேசுவதில்லை. பேச்சின் நடுவில் இருக்க வேண்டி வந்தால், மூக்கைச் சிந்த வேண்டிவந்தால், 'மன்னித்து விடு' என்று சொல்வான். பெண் இன்பத்தில் ஈடுபடும்போது இந்த ஜனங்கள் நாகரீகத்தின் எல்லையைத் தாண்டுகிறார்களோ இல்லையோ. ஸ்டுவர்ட் அதற்குக் காரணம் தங்களுடையது வியாபாரிகளுடைய நாடு என்பதால்தான் என்கிறான். இந்த நயமும் இந்த நாகரிகமும் சேல்ஸ்மேன்ஷிப் என்று தன்னுடைய நாட்டையே கிண்டல் செய்கிறான். இவர்கள் ஜம்பமடித்துக் கொள்வதை அவன் பார்த்ததில்லை. ஒருநாள் யூனிவர்சிட்டியின் " மர்மெய்ட்" பாரில் பீர் குடித்தபடியே ஸ்டுவர்ட் சொன்னான்:

"ஆன்மீக ஞானமே மிக உயர்ந்த லட்சியம் என்று உலகத்துக்கு முதன்முதல் சொன்ன நாடு பாரதம்தான்"

கேசவன் அதற்கு "ஆன்மஞானம்—உண்மை—மகாத்மாக்களுக்கு, அனுபூதிமான் களுக்கு மட்டும். ஆனால் நாகரிகத் தன்மைக்குத் தேவையான சுயவிமர்சனம் எங்களில் இல்லை. சமுதாயத்தின் நன்மை என்ற கோணத்தில் இருந்து பார்த்தால் ஆன்ம ஞானத்தைவிடச் சுய விமர்சனம் முக்கியமானது...எங்களுடையது உலகத் தொடர்புடையவர்களுக்கு ஒருவித சத்தியம் என்றால் தொடர்பில்லாதவர்களுக்கு மற்றொரு விதம்" என்று சொல்லியிருந்தான்.

பேச்சு ஆழமான சிந்தனையைப் பற்றித் தொடர்ந்து சென்றாலும் ஒரு கணம் டிராஃப்ட் பீரின் இதமான, தாகத்தை முழுவதும் தணிக்கின்ற குளிர்ச்சியில் உயிருக்கு ஒரு சுகம் ஏற்பட்டது. கணப்பில் நெருப்பு, சிவப்புப் பூக்களை வரைந்த திரைச்சீலை

களை இழுத்துமூடி, மங்கிய வெளிச்சம் கொண்ட சிறிய பார். மூலையில் இருந்த சோபாவில் இளைஞன் ஒருவனின் மார்பின் மீது கை வைத்து அரைக்கண் மூடியபடி சிகரெட் குடிக்கும் பெண்ணைப் பார்த்தால் ஆசையோ, பொறாமையோ இன்று ஏற்படவில்லை. பார்மேன் துணியினால் கிளாசுகளைத் துடைத்துக் கொண்டே மெதுவாக விசில் அடிக்கிறான். புட்டிகளில் ஷெர்ரி, ஒயின்களை நிரப்பிய, விஸ்கி, ஜின், பிராந்தி புட்டிகளைத் தலைகீழாக நிறுத்திய பாரில் மீன் உருவம் கொண்ட பெண் பொம்மை மெலிந்த கயிற்றின் நுனியில் சுற்றிக் கொண் டிருக்கிறது. ஸ்டூவர்ட் இரண்டு கிளாசுகளையும் எடுத்துக் கொண்டு போகிறான். பார்மேன் கண் சிமிட்டுகிறான். ஸ்டூவர்ட் 'இரண்டு பிட்டர்' என்கிறான். பார்மேன் பம்ப் செய்து பீரை நிரப்பிக் கொடுக்கிறான்.

பாரை விட்டு வெளி வந்ததும் உயிர் மறுபடியும் உலர்ந்து விடுகிறது. குளிர், இருட்டு, மூடுபனி எல்லாமே. இந்தியாவில் வழியெங்கும் பிச்சைகேட்டு நிற்கும் பிச்சைக்காரர்களைப் போலத் தோற்றமளிக்கும், கருப்புக் கொம்புகளாகி உலர்ந்த துரதிருஷ்ட மரங்கள், தெருவிளக்கில். ஈரம், குளிர், மூடுபனி. கேசவன் கையுறை அணிந்து கோட்டின் பையில் கையை விட்டு நடுங்கிக் கொண்டிருக்கிறான். "யூ ஆர் கேச்சிங் எ சில். பை, ஸீ யூ" என்று சொல்லிவிட்டு ஸ்டூவர்ட் தன் டிக்ஸீக்கு வேகமாக நடந்து போகிறான். சேவனுக்குத் தன்னுடைய வாழ்க்கைக்கும் அவனுடைய வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடு திரும்பத் தோன்றி வருத்தம் மேலிடுகிறது. பொறாமையாக இருக்கிறது. இவனுடைய சக்தி சண்டையில் வீணானதில்லை. வீட்டில் தாய் தந்தையரோடும் அவனுடைய உறவு இதே போல நாகரீகமுடையதாக இருக்க வேண்டும். காலையில் எழுந்ததும் 'குட்மார்னிங்' இரவு படுக்கும் போது 'குட்நைட்'. தன்னுடையது வீட்டில் தினமும் சண்டையும் ரகளையும். காலேஜுக்குப் போனாலும் அது தவறுவதில்லை. லெக்சரர்கள் உட்காரும் கிழிந்த சோபா, மூன்று கால்களைக் கொண்ட நாற்காலிகளையுடைய அந்த ஸ்டாஃப் ரூம் மற்றொரு நரகம். அங்கே லிங்காயத், பிராமணன், ஒக்கலிக, மற்றவர்கள் என்று பொறாமைத் தீ எரியும் நரகங்கள். எவ்வளவுதான் வேண்டாம் என்று ஒதுக்கினாலும் ஒவ்வொருவனும் இவற்றில் ஏதாவது ஒரு நரகத்தில் வேகவே வேண்டும். இரண்டு பேர் சேர்ந்தால் மூன்றாமவனைப் பற்றி ஏதாவது துர்ப்பிரச்சாரம் நடத்த வேண்டும். ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டே உட்கார்ந்திருந்து எழுந்து சிறிது தூரம் போவதற்குள் தனக்கே தெரியும்—யாரோ முதுகுக்குப் பின்னால் தன்னைப் பற்றிப் பேசுகிறார்கள் என்று. அதனாலேயே தனக்குத் திரும்பித் திரும்பிப் பார்த்து நடக்கும் வழக்கம் வந்து விட்டது. இங்கிலாந்துக்கு வந்த பிறகும் அது விடவில்லை. கூட்டத்திலிருந்து எழுந்து போகும் போதும வழியில் நடக்கும் போதும் தன்னைப் போலத் திரும்பித் திரும்பிப் பார்த்து நடக்கும் யாரையும் இங்கே அவன் கண்ட. தில்லை. வீட்டிலும் காலேஜிலும் அவன் தன்னிரக்கமுள்ள, பரஸ்பரம் பொறாமை கொண்ட, போராடுகின்ற, பல்லைக் கடிக்கிற ஒரு நரகத்தில் வாழ்கிறான்; அதிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டு மென்று—தவம் செய்து, இடைவிடாமல் முயற்சி செய்து வீட்டில் இருப்பவர்களை அளவில்லாத கஷ்டத்திற்கு உள்ளாக்கி அப்பட்டமான சுயநலம் காரணமாக இங்கிலாந்துக்கு வந்திருக்கிறான்.

"அரசனாக ஆனாலும் பிறவிக் குணம் நீங்குமா?" என்னும் தந்தையின் தந்தையின் சொல் அடிக்கடி நினைவிற்கு வந்தது.

* * *

"நாம் இப்போது ஆக்ஸ்போர்டு தெருவில் இருக்கிறோம்" என்றான் ஸ்டுவர்ட். சாலையின் இரண்டு பக்கங்களிலும் வரிசையாக இருந்த கடைகளின் அழகு கேசவனிடம் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. வெஸ்ட் மினிஸ்டர் அப்பே, செயின்ட்பால் கதீட்ரல், ஹைட்பார்க், புளூம்ஸ்பரி, செல்ஸீ—இங்கே எங்கேயாவது போயிருந்தால் ஆங்கில இலக்கியத்தின் மணி ஒலித்து கண்ணை ஈர்த்திருக்கும். தன் மனம் முன்பே நிச்சயமானதைப் பற்றி மட்டுமே ஏற்றுக் கொள்கிறது. முன்பு காணாத கதவைத் திறந்து புதிய உலகத்தைக் கண்டு ஆச்சரியத்தில் ஊறிய அனு பவமே இல்லை. கொலம்பஸ், தான் கண்ட புதிய உலகத்தை, தான் தேடிக்கொண்டு புறப் பட்ட இந்தியா என்றே கண்டானல்லவா? ஸ்டுவர்ட்டுக்குச் சொல்ல வேண்டும். தேடினால் கிடைப்பது நாம் தேடியது, நம் மனத்தில் ஏற்கனவே நிச்சயமானது. நாம் அறியாததும் காணாததும் நமது உள் உலகத்தில் புகுந்து அடைத்துக் கொண்ட கதவுகளைத் திறந்து இன்னொரு விடியல், இன்னொரு மாலையைப் பார்த்து வியப்பில் தன்னை மறப்பது வேறு வகை. முன்பு தெரியாதது எதிர்ப்பட்டாலும் நாம் நமக்கு முன்பே தெரிந்த அளவுக்கு மாத்திரம்தான் காண்கிறோம். தெரியாததைக் காண்பேன் என்று நான் இங்கிலாந்துக்கு வந்தேன்— முடியவில்லை கெஸ்லர் இந்தியாவுக்கு வந்து ஒரு யோகியைப் பேட்டி கண்ட போது அங்கே மூக்கைத் தோண்டிக் கொண்டிருந்த ஒருவனைப் பார்த்ததைப் போல இங்கே எனக்கு காமச் சித்திரங்கள் மட்டுமே கண்ணில் படுகின்றன ஆமை தனது ஒட்டைச் சுமந்து கொண்டு திரிவதைப் போல என் கடந்த காலத்துடனேயே நான் ஆக்ஸ்ஃபோர்டு தெருவில் அலைந்து கொண்டிருக்கிறேன். ஸ்டுவர்ட் இந்தியாவுக்கு வந்து யோகிகளைப் பார்த்தாலும் தன்னுடைய நாகரிக உலகத்தின் எல்லையைக் கடக்க மாட்டான். கெஸ்லரைப்போலவே—"இந்தப் பேட்டியை நான் எழுந்து நின்று முடிப்பதா அல்லது யோகி தானே எழுந்து நேரமாகிவிட்டது என்று சொல்லி முடிப்பாரா? இங்கே விருந்தினருக்கான விதிகள் என்ன?" என்று பேச்சின் இடையில் இருந்த மௌனங்களின் போது சிந்தித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பான். இது ஓர் டிராஜெடி. நான் எங்கே போனாலும் என் தம்பியின் எதிர் காலம்—சாவு ஆகட்டும் முன்னேற்றமாகட்டும்— என் முழு வாழ்க்கையின் மீதான தீர்ப்பைப் போலத் தாக்கிக் கொண்டிருக்கிறது.

நேற்று தம்பியிடமிருந்து கடிதம் வந்த பிறகு மாட்டு ஈ வருத்தும் எருதைப் போலத் திண்டாடத் தொடங்கிவிட்டேன். கண்ணைத் திறந்து இந்தப் புதிய பிரச்சினையை ஆழமாகப் பார்க்க முடியாமல் ஆகிவிட்டேன். அதிலிருந்து தப்பித்துக் கொள்ளலா மென்று ஸ்டுவர்ட்டுடன் லண்டனுக்கு வந்தேன். இப்படிப்பட்ட விஷயங்களைப் பகிர்ந்து கொள்ளும் அளவுக்கு நெருக்கம் எனக்கு ஸ்டுவர்ட்டிடம் இல்லை. இங்கிலாந் துக்கு நான் புறப்படும்போது மாது தன் இச்சைப்படி செருப்புக் கம்பெனி ஒன்றில் சேல்ஸ்மேனாகச் சேர்ந்து கொண்டான். மாதச் சம்பளம் இருநூறு ரூபாய். போயும் போயும் 'செருப்புக் கடையில் என் மகன் வேலைக்குச் சேரவேண்டியதாகிவிட்டதே. நல்ல குலத்தில் பிறந்து யார்யார் காலுக்கோ செருப்பை மாட்டிவிடணுமா' என்று அம்மா வருத்தப்பட்டாள். நான் அவளைக் கோபித்துக் கொண்டேன். பெரிய தங்கை நடுத்தரப் பள்ளியில் ஆசிரியையாகச் சேர்ந்தாள் என்று எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இத்தனை நாட்கள் திரும்பிப் பார்க்காமல் இருந்த சியாம் சித்தப்பா வீட்டுக்கு வந்து வைதீகர்கள் வீட்டில் பிறந்த பையன் செருப்புக் கடையில் வேலை

பார்க்கக் கூடாது என்று சண்டை போட்டார். நான் கோபத்தை விழுங்கிக் கொண்டு சும்மாயிருந்தேன். இதில் எங்கும் எதிலும் என் தப்பு இல்லை. நான் இங்கிலாந்துக்குப் போகிறேன் என்று சொன்னபோது அம்மாவும் சியாம் சித்தப்பாவும் நான் சுயநலவாதி என்று நினைத்தால் அது அவர்களுடைய தப்பு— என்னுடையதல்ல. இவ்வளவு நாள் நான் உழைத்தேன். இப்போது மாது தன் தகுதிக்கு ஏற்ற வேலை செய்து வீட்டாரைப் பார்த்துக் கொள்வதில் என்ன தப்பு இருக்கிறது என்று எனக்குள் நானே வாதிட்டேன். அம்மா பூஜை அறையின் இருட்டு மூலையில் உட்கார்ந்து தினமும் அழுதாள். தெய்வத்துக்குத் தூங்காவிளக்கு ஏற்றி, மகனுக்கு நல்ல புத்தியைக் கொடு என்று வேண்டிக் கொண்டாள். போவதற்கு முன்னால் கல்யாணம் செய்து கொள் என்று வற்புறுத்தினாள். நீ திரும்பி வருவதற்குள் நான் உயிரோடு இருக் கிறேனோ, செத்து விடுவேனோ என்று புலம்பினாள்.

ஒரு நாள் திடீரென்று அம்மாவிடமிருந்து கடிதம் வந்தது. மாதவன் வேலையை விட்டுவிட்டான் என்று., பிறகு மாதவனிடமிருந்து கடிதம் வந்தது—தன்னால் இனிமேல் இப்படிப்பட்ட வேலைகளைச் செய்ய முடியாது, இவ்வளவு நாள் மறைந்த தன் தகுதி வெளிச்சத்திற்கு வரும் காலம் வந்து விட்டது என்று. "நீ நம்பாமல் இருக்கலாம், அண்ணா. நான் ஒரு நாவல் எழுதி யிருக்கிறேன். ஒரு பப்ளிஷர் அதைப் படித்துப் பார்த்து மிகவும் நன்றாய் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார். அது வெளியாகி வரும் பணத்தை அம்மாவிடம் கொடுக்கிறேன். இனிமேல் இப்படியே எழுதிப் பிழைக்கப் போகிறேன்." கடிதத்தைப் படித்ததும் எனக்கு விசித்திரமான உணர்ச்சிகள். கடுங்கோபம் முதலியன... ஆனால் உள்ளுக்குள்ளேயே பொறா மையும் ஏற்படாமல் இல்லை. என்னில் இல்லாத மறைவான ஒன்று மாதுவினிடத்தில் இருக்கலாம், அவனுடைய வாழ்க்கை, என்னுடையதை உலகத்துக்குப் பயனற்றது என்று எடுத்துக் காட்டலாம் என்று. சிலநாட்களுக்குப் பிறகு தங்கை விமலாவிட மிருந்து ஒரு கடிதம்: "அண்ணா மாது அம்மாவை மிகவும் தொல்லைப் படுத்துகிறான். தோட்டத்தை விற்று வந்த பணம் அம்மாவின் பேரில் பேங்கில் இருக்கிறதே, அந்த ஐயாயிரம் வேண்டும். அவனுடைய இரண்டு நண்பர்கள் ஐயாயிரம் ஐயாயிரம் கொடுக்கிறார்களாம். மாது பதினைந்தாயிரத்தில் ஒரு பிரஸ் வைத்தால் லாபம் இருக்கிறது என்று தொந்தரவு செய்கிறான். அம்மா என்ன செய்வது என்று தெரியாமல் உனக்கு எழுதுவதற்கும் பயந்து சும்மா இருக்கிறாள். மாதுவினுடைய திட்டம் தனது நாவல்களைத் தன் பிரஸ்ஸிலேயே அச்சிட வேண்டும் என்பது. இப்போது அவனுடைய நாவல் அச்சாகி இருக்கிறது. இப்போது அவனுக்கு ஜிப்பாவும், பைஜாமாவும் போட்ட எழுத்தாளர் நண்பர்கள், அவர்களோடு சேர்ந்து குடிக்கிறான் என்றும் ஒரு பேச்சு"... முதலியன.

நான் தகதகவென்று கொதித்து அம்மாவுக்கு எழுதினேன். மாதுவுக்குக் காசு கொடுக்க வேண்டாம் என்று. மாது அதற்குப் பதில் எழுதினான்: "நீ வீட்டிலிருந்த வரை என்னுள் அடங்கியிருந்த சக்தி உன்னுடைய விஷம் நிறைந்த வெறுப்பு மிகுந்த விதிகளின் கீழ் வாடியது, உலர்ந்தது. நான் புழுவைப் போல உயிர் வாழ்ந்தேன். எனக்குப் பிடிக்காத வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன். நீ போன பிறகு என் வாழ்க்கை துளிர்த்தது, பூ விட்டது. என் இரண்டு நண்பர்கள் நான் முன்னுக்கு வரவும் அம்மாவுக்காக உழைக்கவும் வேண்டிய வழியைக் காட்டினார்கள். என்னுடைய கற்பனை மலர்ந்து ஒரு நாவல் எழுதினேன். உன்னுடைய வறண்ட கஞ்சத்தனம்

நிரம்பிய மனத்தில் இதனால் அளவில்லாத பொறாமை ஏற்பட்டிருக்க் வேண்டும். உயிர்ப்புடையது எதுவாயிருந்தாலும் நீ கொன்று விடுகிறாய். பக்கத்து வீட்டுப் பெண் என்னிடம் அன்பாய் இருக்கிறாள் என்று நீ எழுப்பிய புயலை நான் மறக்கவில்லை. ஆனால் நீ மட்டும் சுயநலமில்லாதவனா? எனக்குத் தெரியாது என்று நினைத்துக் கொள்ள வேண்டாம்; வீட்டில் யாருக்கும் தெரியாமல் பேங்கில் தனியாக நீ ஐந்நூறு ரூபாய் சேர்த்து வைத்துக் கொள்ளவில்லையா? உன் புத்தி எனக்கில்லை. வந்தது எல்லாவற்றையும் மற்ற இளைஞர்களைப் போலவே நான் பாழாக்கினேன் என்பது உண்மை. எல்லார் கண்ணுக்கும் நான் கெட்டவன்; நீ நல்லவன். ஆனால் உனக்கு ஆத்மா என்று ஒன்று இருக்குமானால் உன்னை நீயே ஒரு கேள்வி கேட்டுக் கொள்—நீ நடந்து கொண்ட முறை சரியா என்று? அது பாழாகட்டும். இந்தக் கடிதம் வந்து சேர்வதற்குள் நான் இந்த வீட்டைவிட்டுப் போயிருப்பேன். என் வாழ்வைப் பற்றியோ, சாவைப் பற்றியோ நீ சிந்திக்க வேண்டாம். நீ சுகமாய் இரு. உன்னைப் போன்ற பெரிய மனிதனின் புகழுக்கு இழிவு தேடித் தரும் தம்பி இருக்கிறான் என்னும்பழி உனக்குக் கிட்டாமல் இருக்கட்டும்.."

அம்மாவிடமிருந்து கூடவே ஒரு கடிதம். முதலில் இருந்து கடைசி வரை ஒரே அழுகை...பெற்ற வயிறு .. முதலியன.

இப்போது சரியான நேரம் வாய்த்திருக்கிறது. ஒப்புக் கொள், என் தம்பி மாது என்னைப் பற்றி எழுதியது முற்றிலும் உண்மை. ஆனாலும் அந்த ஐந்நூறு ரூபாய் விஷயத்தில் மாது என்னைப் பற்றி இரக்கமில்லாமல் சொல்லுகிறான் என்று தோன்றுகிறது...சொந்த சுகம் எதையும் காணாமல் வீட்டுக்கு இவ்வளவு உழைத்த நான், கன்னியாகுமரியிலிருந்து இமயமலை வரை சுற்றி எல்லாக் கோயில்களையும் பார்த்துவிட்டு வர வேண்டும் என்னும் ஒரு ஆசைக்காக ஐந்நூறு ரூபாயை மறைத்து வைத்தேன்—ஆனால் மாது, முன்னேறட்டும் அல்லது சாகட்டும், இந்த ஐந்நூறு ரூபாய் என்னுடைய ஆழமான அற்பத்தனத்துக்கும், கீழ்மைக்கும் அடையாளம் என்று நினைத்திருக்கிறான். என்னுடைய தனிப்பட்ட எதிர்காலத்தைப் பற்றிய ஓவியங் களில் இது மிகவும் இழிந்ததாக இருக்கும். என்ன செய்வேன், என்ன செய்வேன்...

கேசவன் கையைப் பிசைந்து கொண்டான். மனக்கொதிப்பு உள்ளவனுக்கு அமைதி இல்லை. கொதிப்படைகிறவன் முதலில் தன்னுடைய நாகரிகத்தை இழக் கிறான்; பிறகு துறவியாகிற தகுதியை இழக்கிறான். சண்டை சச்சரவுகளில் அகவாழ்க்கை முதலில் தன்னுடைய மென்மையை இழந்து முரடாகிறது. கரடு தட்டிப் போகிறது. அவன் சுயநலவாதி ஆகிறான், கருமி ஆகிறான், வீட்டாருக்குத் தெரியாமல் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்துக் கொண்டு சொந்த சுகத்தைப் பற்றிக் கனவு காண்கிறான். மாதுவுக்கு அது தெரிந்து போய் எனக்கு எழுதினால் அதைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அப்பட்டமான உண்மை தெரிவ தில்லை—என்னைப் பற்றி எனக்கு இருக்கும் இரக்கம் முரட்டுத் தனத்தையும் மூடி மறைத்து அழகாக்கிக் காட்டுகிறது. மாது இப்போது வீட்டைவிட்டுப் போனவன் முன்னேறட்டும் அல்லது சாகட்டும்—என் இயல்பிலிருந்து எனக்கு விடுதலை அநேகமாகக் கிடைக்கப் போவதில்லை. பொறாமையாக இருக்கலாம், வருத்தமாக இருக்கலாம், ஆனால் இந்த இரண்டு உணர்ச்சியிலும் நான் என்னைச் சுற்றிச் சுற்றி இன்னும் கொஞ்சம் முடிச்சைப் போட்டு, இன்பத்துக்கு இது வழி அல்ல என்றும் தெரிந்து கொள்ளும் நல்லவனின் நுண்ணிய பார்வையை இழந்து, சுகத்தைக்

காணாமல்—எப்போதும் சுகத்தைக் காண முயலும் கற்பனைகளை வளர்த்துக் கொண்டு மிஞ்சியிருக்கும் சக்தியை அழித்துக் கொள்ளும், மனமயக்கத்தில் உழலும், தயங்கும், வீறிடும், தன்னவர்களை அரித்து அரித்துத் தின்னும் கிடைக்கும் அன்பை இழந்து கொண்ட தன்னைத் தானே விரும்பும் நரகத்தில் வாழ்கிறேன். நாகரிக முடையவனும் துறவியும் இருவருமே தம்முள் தாம் இன்பம் அனுபவிக்கிறவர்கள். ஆத்ம திருப்தியுடையவர்கள். எனக்குத் தனக்குள் தானே தேடும் இன்பம் மட்டுமே உண்டு; நான் என்னிலேயே முடிவாகி, முதலாகி கயிறுகளைச் சுற்றிக் கொண்டு போராடி, உள்ளே இருப்பதை வெட்டி வெளியே தந்து திறந்து பரீட்சித்து உள்ளே வைத்து, மறுபடியும் வெட்டி வெளியே தந்து பரீட்சித்து, மறுபடியும் உள்ளே வைத்து, முதலில் பரீட்சிக்கும் என் சுயவிமர்சன சக்தியை மெச்சுபவனாகி, பரீட்சிக்கும் மனமே தானாகி, அம்மா சொன்னது போல் பாகீரதியைக் கல்யாணம் செய்து கொண்டு முணுமுணுத்துக் கொண்டே வாழ்க்கை நடத்தி, எப்போதும் தன்னைப் பற்றிய விமர்சனத்தில் ஆழ்ந்து, பிறந்த குழந்தைகள் வளர்வதற்காக உழைத்துக் கொண்டு, அவர்களைத் திட்டிக் கொண்டு, பணம் சேர்த்து வீடுகட்டி, வேலை யிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு அரசாங்கத்தை இன்னும் இரண்டு வருடம் எக்ஸ் டென்ஷன் வேண்டுமென்று வேண்டிக் கொண்டு...

மாது சாகாமல் இருந்தால் அவன் பெரிய அல்லது சாதாரண நாவலாசிரியனாகி, ஊர்ஊராகச் சுற்றி, விலை மாதரைச் சேர்ந்து, குடித்து, மக்கள் விரும்பும் எழுத்தாளனாகி, அல்லது ஆகாமல், காசுக்காக என்னை எப்போதும் அரித்துக் கொண்டு, இப்போது செத்த பிறகும் பேயாக என்னைப் பிடித்துக் கொண்டு...

ஸ்டுவர்ட் லேபர்பார்ட்டியில் சேர்ந்து, பின் தங்கிய நாடுகளுக்காக உழைத்து, எம்.பி.ஆகி, இந்தியாவிற்கு வந்து ஏர்கண் டிஷன் ஹோட்டலில் தங்கி, ஏர்கண்டிஷன் காரில் சுற்றி, சாதுக்களையும் துறவிகளையும் சந்தித்து, இந்திய நாட்டின் மெய்ஞ்ஞான— தன்னுடைய ஆன்மீக வாழ்க்கைக்குத் தேவையான ஒருபுது அனு பவம் என்று தெரிந்து புத்திசாலித்தனமாக எந்தச் சிக்கலிலும் மாட்டிக் கொள்ளாமல் அதைத் தெரிந்து கொண்டு, அதைப் பற்றி ஒரு அழகிய புத்தகம் எழுதி, பி.பி.சியில் அதைப் பற்றிப் பேசி, வயது ஆனாலும் கூடத் தொந்தி போடாமல் உயரமாக மெலிந்து நிமிர்ந்து இருந்து...

"இன்றைக்குச் சனிக்கிழமையாகையால் ஆறுமணி வரை கடைக்கதவு திறந் திருக்கும். அங்கே பார், எத்தனை பேர் ஷாப்பிங் செய்றாங்க" என்று ஸ்டுவர்ட்தான் ஸ்லாட் மெஷினிலிருந்து வாங்கிய பேக்கிலிருந்து மறக்காமல் கேசவனுக்கு ஒரு சிக ரெட்டைக் கொடுத்தான். தன்னைவிடச் சிறியவனான ஸ்டுவர்ட்டிடம் கேசவனுக்கு ஒரு கண நேரம் மிகுந்த கௌரவம் உண்டாயிற்று.

## III

பெரிய பெரிய கண்ணாடிச் சன்னல்களின் மூலம் விலை ஒட்டப்பட்டிருக்கும் சீட்டுக்களைத் தாங்கிக் கொண்டு நின்ற பொருள்களையும் அவற்றை அடுக்கி வைத்திருக்கும் அழகையும் பார்த்தபடியே "விண்டோ ஷாப்பிங்" செய்வதில் கேசவனுக்கு மிகுந்த விருப்பம். இப்போது வேனிற்காலமாதலால் கண்ணாடிகளின் மேல் சிவப்பு எழுத்துக்களில் ஸேல்ஸ் என்று எல்லா இடங்களிலும் சீட்டை ஒட்டி வைத்திருக்கிறார்கள். 'கலா ஸேல்ஸ்' பதினைந்து பவுண்டு சூட் 9 பவுண்டு.

பெண்களின் ஆடைகளை விற்கும் கடைகளில் நிர்வாணமாக நின்ற பொம்மைகள், அவைகளுக்கு அடுத்த நாள் ஃபாஷன் துணிகளை உடுத்திக் கொண்டிருக்கும் பெண்ணொருத்தி. பொம்மை எது, உண்மை எது என்று கணநேர மயக்கம், ஆசை, நிராசை. அது ஐரோப்பாவின் பெரிய கடைகளில் ஒன்று என்றான் ஸ்டுவர்ட். "பஸ்ஸில போகலாமா, நடக்கலாமா?" என்றதற்குக் கேசவன், 'நடக்கலாம்' என்றான். கோட்டுப் பையில் கைவிட்டு எவ்வளவு நீளமாக நேராக ஸ்டுவர்ட் நடக்கிறான். தன் கால்களைப்போல அவன் கால்கள் வளைந்திருக்கவில்லை. இவனுக்குப் பின்னால் ஆக்ஸ் ஃபோர்ட் ஸ்ட்ரீட் இருக்கிறது. செல்ப் ரீஜஸ் போன்ற கடைகள் இருக்கின்றன. உணர்ச்சிகளை மிகநுண்மையாகத் தெரிவிக்க வல்ல ஆங்கிலமொழி இருக்கிறது—திரும்பிப் பார்க்காமல் நேராக ஹாரிஸ் ட்டுவிட், ஜாக்கெட், ஸ்காட்டிஷ் டை, கிரேஃபிளானல் கால்சட்டையில் அச்சாக இங்கிலீஷ்காரனைப் போல ஆகி எதிர்காலத்தை நோக்கி நடக்கிறான் சமையல் காரமானால் காரம் அதிகமாகி விட்டது என்றும, குறைவாய் இருந்தால் காரம் தேவையாய் இருந்தது என்றும் அம்மா விடம் சண்டை போடவும், மாதுவுடன் போராடவும் எனக்குக் கன்னடம்—அழகான நுண்ணிய உணர்ச்சிகளை விவாதிப்பதற்கு ஸ்டுவர்ட்டின் காதில் சகிக்க முடியாமல் விழும் இங்கிலீஷ், நான் இரட்டை வேடக்காரன். வெளியே வெட்கம் மிகுந்தவன்; உள்ளே தோல்வாயன்; நிகழ்காலச் சேற்றில் நின்று கொண்டு கடந்த காலத்தின் சிறப்பை நினைத்துப் பார்க்கும் இருமொழி வல்லுநனை—என்னை— எனக்கு முழு வதுமாகக் காட்டக் கூடிய மொழி இல்லை—தரையை நோக்கிக் கூரிய நுனிகளை நீட்டி, மேலே அவிழ்க்கமுடியாத முடிச்சைப் போல வளரும் ஆலமரத்தின் விழுதுகள், வெள்ளையனும் அல்ல, கறுப்பனும் அல்ல—களிம்பு கட்டிய செப்பு.

"அதோ அங்கே விம்ப்பி பார் இருக்குதில்லையா? அது இரவு முழுக்க திறந் திருக்கும். காலையில் இரண்டு மணிக்கு இந்தப் பக்கம் வந்தால் எங்கள் நாகரிக சமுதாயத்தின் சிறிய பகுதியினர் இங்கே கிடைப்பார்கள்—ஹோமோ செக்ஷிவல்ஸ் மற்றும் லெஸ்பியன்ஸ்"

சிறிதாகத் தூற ஆரம்பித்தது. "லண்டனின் பாழாப்போன பருவநிலை" என்றான் ஸ்டுவர்ட்.

"எங்கள் நாட்டு வெயில் தூசிகளை விட இந்த நாட்டுக் குளிர் மேல் என்று தோன்றுகிறது எனக்கு" என்றான் கேசவன்.

"ஓ, எனக்கு வெயில், வாழ்க்கை, சூரியன் வேண்டும்".

"அனுபவமில்லாமல் நீ பேசுகிறாய். ஸ்டுவர்ட், சூரியன் தலைக்கு மேலே எரிப்பது என்றால் என்ன என்று உனக்குத் தெரியாது. தலைக்கு மேலே எரிக்கும் சூரியன் என்னிடமிருந்து சொல்லக் கூடாத வார்த்தைகளையும் சொல்ல வைத்திருக்கிறான். சிந்திக்கக் கூடாத எண்ணங்களைச் செய்ய வைத்திருக்கிறான். வெயிலில் ஒரு விதமான அறியாமை ஏற்படுகிறது. எங்களுடையது துறப்பவனுக்கு ஏற்ற பருவ நிலை, அனுபவிக்க வேண்டும் என்பவனுக்கு அல்ல. என் தந்தை இறந்த அன்று அவரை மயானத்தில் சுடுவதற்குக் கொண்டுபோன போது கோடைக் காலம். மேலே தகதகவென்னும் நடுப்பகல். அந்த மௌனத்தில் அங்கொன்றும், இங்கொன்றுமாகக் காக்கை கூவிய குரல். அவ்வளவுதான். கொதிக்கும் மணலில் மூன்று கவடாக ஓடும் வெதுவெதுப்பான நீர் ஓடும் ஆற்றங்கரையில் தந்தையின் உடலைச் சடசடவென்று நெருப்பு எரிக்கும்போது என் நெற்றியிலிருந்து ஒரு நரம்பு காதுவரை படபடவென்று

துடித்து, வியர்வை வழிந்து கண்ணும் உதடும் நனைந்து, சுகமோ துக்கமோ, எனக்கு எந்தவிதமான மனித உணர்ச்சியும் தோன்றவில்லை. வெயில் முற்றி, சுற்றிக் கொண்டு எல்லா உணர்ச்சிகளையும் விழுங்கிவிடுகிறது. இங்கே குளிர் மிகுந்த நாட்டில் வெது வெதுப்பாக நெருப்பின் எதிரில் உட்கார்ந்து, அழகாக மனிதத் தன்மையோடு நாகரிகமாக உலகத்தைப் பற்றிச் சிந்திக்கலாம்"

"தாகமாய் இருக்கிறது. கொஞ்சம் பீர் குடிக்கலாமா? எனக்கு சாவைப் போன்ற பயங்கரமான அனுபவமே இல்லை— ஆன்டிசெப்டிக், ஸ்டெரிலைஸ்ட், ஸென்ட்ரலி ஹீட்டட் சமுதாயம் எங்களுடையது."

ஒரு சந்திலிருந்த, கருப்பு வெள்ளைக் கோடுகள் காட்டிய 'கன் பேரல்ஸ்' என்ற போர்டு இருந்த 'பப்'பை நோக்கி நடந்தான்; கதவைத் திறந்து உள்ளே போய், உட்கார்வதற்காக ஒரு மூலையைக் கேசவன் தேடினான். சிகரெட் புகை நிரம்பிய விசாலமான ஹாலில் ஜனங்கள் நெருக்கியடித்து உட்கார்ந்திருந்தார்கள்—சாய்ந்து கொள்ளும் சாதா பெஞ்சின் மீதும் வட்ட மேஜையைச் சுற்றிப் போட்டிருந்த ஸ்டூல்களின் மேலும், ஐந்து, ஆறு இளைஞர்கள் நின்று கூர்மையான சிறிய அம்புகளைப் போர்டுகளை நோக்கி வீசி 'டாம்ட்ஸ்' ஆடிக் கொண்டிருந்தார்கள். ஒரு கிழவன் சீமைச் சுண்ணாம்பால் ஸ்கோர் எழுதிக் கொண்டு நின்றிருந்தான். மூலையில் ஒரு தடித்த பெண்மணி அழுத்திப் பிடிக்கும் உடையணிந்து பியானோ வாசித்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் டீக்கேப் அணிந்து உட்கார்ந் திருந்த வற்றிப் போன முகமும், சிவந்து நீண்ட மூக்கும் கொண்ட கிழவர்கள் பழங் காலத்து டியூன் ஒன்றைக் குரல் எடுத்துச் சேர்ந்து பாடிக்கொண்டே தலையசைத்துக் கொண்டிருந்தார்கள். பியானோ நின்றது. அந்தப் பெண்மணி எழுந்தாள். எல்லோரும் கைதட்டினார்கள். அவள் தலைகுனிந்து அதை ஏற்றுக் கொண்டு ஒரு தட்டைக் கையில் ஏந்திக் கொண்டு புறப்பட்டாள். அவள் தட்டில் மூன்று பென்னிகள், ஆறு பென்னிகள் விழுந்தன. கேசவன் தன்னுடைய பையில் இருந்து ஒரு ஷில்லிங் எடுத்துப் போட்டான். "யூ ஆர் பீயிங் ஓவர் ஜெனரஸ்" என்ற ஸ்டுவர்ட் "இங்கே கலாட்டாவாக இருக்கிறது. வேறே அறைக்குப் போகலாம்" என்று அழைத்தான்.

இன்னொரு சிறிய அறை. பல்கலைக்கழகத்தின் மர்மெய்ட் பாரைப் போல மெத்தென்ற நாற்காலிகளோடு இதமாகத் தெரிந்தது. அங்கே உட்கார்ந்திருந்த வர்களின் எண்ணிக்கையும் குறைவு.

கணவன் மனைவியர் மேஜைகளில் எதிரும் புதிருமாக உட்கார்ந்து, பீர் குடித்துக் கொண்டே மாலைத் தினசரி படிப்பதில் மூழ்கியிருந்தார்கள்.

"தினசரி படிப்பதற்கு கணவனும் மனைவியும் இங்கேதான் வரணுமா?" என்று கேட்டான் கேசவன்.

"நடுத்தர வர்க்கத்து மக்கள் இந்த அறைக்கு வருவார்கள். நாம் போன அறையில் இருந்தவர்கள் ஒர்க்கிங் கிளாஸ்.இங்கே பீருக்கு ஒரு பென்னி அதிகம். அவர்களுக்கு ஒரு பென்னி அதிகம் கொடுத்து இங்கே வருவது முடியாது என்பதல்ல. பீர் மிச்சப் படுத்திய பென்னியை அவர்கள் பியானோ வாசிப்பவளுக்குக் கொடுத்து அவளைக் குடிக்கச் செய்கிறார்கள். காரணம், இங்கே அவர்களுக்கு மகிழ்ச்சி இல்லை, தங்கள் ஆட்கள் வருவதில்லை. வர்க்க பேதத்தை எங்கள் மக்கள் மகிழ்ச்சியோடு கசப் பில்லாமல் இகழ்கிறார்கள். அதனால் இந்த நாட்டில் மார்க்சிஸம் கூடத் தேவை யற்றது" என்றான் ஸ்டுவர்ட்.

கேசவன் கெளண்டருக்குப் போய் இரண்டு பைண்ட் 'பிட்டர்' வாங்கினான். "அந்த பாரில் பீர் பம்ப் செய்து கொடுப்பதற்குக் கட்டுமஸ்தான ஒரு பெண்பிள்ளை இருந்தால், இங்கே ஒல்லியான ஒரு பெண் இருக்கிறாள், பார்." அவள் பணத்தைப் பெற்றுக் கொள்ளும் பொழுது 'தாங்க் யூ, லவ்!' என்றாள், இவள் 'தாங்க் யூ சார்!' என்கிறாள் இல்லையா? என்று சொல்லி ஸ்டுவர்ட் சிரித்தான். "நான் ஒர்க்கிங் கிளாஸையே அதிகமாக விரும்புகின்றவன்" என்று கேசவன் சொன்னான்.

"நானும் கூடத்தான். ஆனால் அவர்களுக்கு ப்ரிஜுடிஸ் நிறைய இருக்கிறது. உன்னைப் பார்த்தால் அவர்கள் கறுப்பன் என்று நெருங்க விடமாட்டார்கள். ஆனால் படித்தவர்கள்..."

"படித்தவர்கள் என் பேச்சுக்கு வருவதே இல்லை. இரண்டும் ஒன்றுதான். இரண்டில் ஒர்க்கிங் கிளாஸே உத்தமம்"

இருவரும் பீர் குடித்துக் கொண்டே சும்மாயிருந்தார்கள். கிளாஸ் காலியானதும் ஸ்டுவர்ட் எடுத்துப் போய் அவற்றை நிரப்பிக் கொண்டு வந்தான். இரண்டாவது பைண்ட் முடிகின்ற தருவாயில் டிராஃப்ட் பிட்டரின் ஆதிக்கம் உள்ளிருந்து மெது வாகப் பரவி, கேசவனின் மனம் லேசாகத் தொடங்கியது. ஸ்டுவர்ட்டுடன் மனம் விட்டுப் பேச வேண்டும் என்று தோன்றியது.

"உனக்கு ஒரு விஷயம் சொல்ல வேண்டும், ஸ்டுவர்ட். என் தந்தை திடீரென்று இறந்த போது நான் இண்டர்மீடியட் படித்துக் கொண்டிருந்தேன். கிராமத்திலிருந்த எங்கள் வீட்டிலிருந்து இரு நூறு மைல் தொலைவில். குடும்பம் நடத்துவது சிரமம் ஆகி என் தாய் 'நீ படித்தது போதும், வேலைக்குப் போ' என்றாள் எங்கள் நாட்டு மாணவர்கள் இரண்டு வகை. ஒன்று: புத்தகப் புழு; படித்துச் சமூகத்தில் முன்னுக்கு வர வேண்டும், ஏழ்மையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்னும் விருப்பமே இவர்கள் வாழ்க்கையில் எல்லாம். விளையாடாமல், கூடிப் பேசாமல், குழந்தைப் பருவ, இளமைப் பருவங்களின் சுகங்களைக் காணாமல் இந்த வர்க்கம் பாடுபடுகிறது. இன்னொரு வகை மாணவன்— பொறுப்பே இல்லாதவன். ஸ்டிரைக், விளையாட்டு, ஊர்சுற்றுதல் இதில் மகிழ்ச்சி கண்டு காலத்தைக் கழிக்கிறான். என் தம்பிகளைப் போல. படிக்கும்போது நான் முதல் வகையைச் சார்ந்திருந்தேன். முதல் வகுப்பில் தேறுவதே என்னுடைய கடைசி லட்சியமாக இருந்தது. வீட்டிலிருந்து பணம் வரா விட்டாலும் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்று பெங்களூருக்கு வந்து ஓர் இலவச ஹாஸ்டலில் சேர்ந்தேன். அதைநடத்தி வந்தவர் ஒரு சமூகத் தொண்டர். அவர் புகழ் எல்லாப் பக்கங்களிலும்பரவி இருந்தது. தோளில் ஒரு பையை மாட்டிக் கொண்டு, தினமும் வீடுவீடாக ஏறி இறங்கி அரிசியும் பணமும் வேண்டி வாங்கி வந்து ஹாஸ்டல் நடத்தி வந்தார். எனக்கு அவர்மீது அளவில்லாத மதிப்பு—காந்தியின் லட்சியத்தை முழுமையாக நடத்தி வந்தவர் என்று. ஹாஸ்டலும் கூட மிகவும் அமைதியான முறையில் நடந்து வந்தது. எங்களுக்குச் சமையல் செய்து போட்ட வர்கள் கூடச் சம்பளம் வாங்கிக் கொள்ளவில்லை. தினமும் காலையிலும் மாலை யிலும் பிரார்த்தனை. பிரார்த்தனையில் எல்லா மதங்களும் இணைந்திருக்கும்— கீதை, குரான், பைபிள் படிப்போம். பிரார்த்தனைக்கு மாணவர்கள் போகாவிட்டால் அன்றைக்கு அவர்களுக்குச் சாப்பாடு இல்லை. தினமும் மாணவர்கள் முறை போட்டுக் கொண்டு கக்கூசைச் சுத்தப்படுத்தி, ஹாஸ்டலைக் கழுவிச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். தினமும் காலையில் எங்களுக்குச் சோறு போட்ட

புண்ணியவான் தானே எழுந்து இரண்டு பசுக்களைக் கறந்து அதைக் காய்ச்சித் தயிர்கடைந்து வந்தான்..."

" நீ சொல்வது ஐடியலாகத் தெரிகிறது."

கேசவன் எழுந்து நின்று "இரு, வருகிறேன். மேலே இன்னும் இண்ட்ரெஸ்டிங்காக இருக்கும். முதலில் பீர் கொண்டு வருகிறேன்" என்று எழுந்து போய் இன்னும் இரண்டு பைன்ட்டுகளை நிரப்பிக் கொண்டான். கௌண்டரில் இருந்த பெண் அவனையே பார்த்துச் சிரித்து ஷில்லிங்குக்குச் சில்லரை கொடுத்தாள். கேசவன் பீரைக் கொண்டு வந்து முன்னால் வைத்துவிட்டுச் சொன்னான்: "ஹாஸ்டலில் இடம் குறைவாக இருந்ததால் நாங்கள் மூன்று நான்கு பேர் ஒரே அறையில் படுத்துக் கொள்வோம். நான் சேர்ந்து ஒரு மாதம் ஆனபிறகு எங்கள் சாப்பாட்டு வள்ளல், 'ஒரு நாளைக்கு நீ என் அறையில் வந்து படுத்துக் கொள், படிக்கவும் எழுதவும் வசதியாக இருக்கும்' என்றான்"

"மேலே சொல்ல வேண்டாம், தெரிந்து விட்டது. அவன் ஹோமோசெக்ஷுவல் தானே?"

ஸ்டுவர்ட்டின் சாதாரணமான அந்தப் போக்கு கேசவனுக்கு ஏமாற்றதை அளித்தது. தன் கடந்த காலத்தைப் பற்றிய தனது வெறுப்பை ஸ்டுவர்ட்டுக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டும் என்ற அவனுடைய ஆசை பங்கப்பட்டது.

"நான் பப்ளிக் ஸ்கூலில் படித்தவன், கேசவன். உனக்கு ஆச்சரியமாக இருக்கலாம். நான் அங்கே படித்துக் கொண்டிருந்த போது நானும் ஹோமோசெக்ஷுவலாக இருந்தேன். எனக்கு இப்போது அதைப் பற்றி வெறுப்பு ஏதுமில்லை. அங்கே நான் அனுபவித்த நட்பின் அருமை என் சிறந்த அனுபவங்களில் ஒன்று என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். யூனிவர்சிட்டியில் சேர்நத பிறகு பெணகளின் கூட்டத்தில் எனக்கு அந்தப் போக்கு குறைந்து கொண்டே வந்தது. இது காம வாழ்க்கையில் சுகாதாரம், அதன் எதிர்மறை பற்றிய பிரச்சினை. இதற்குச் சரியான எதிர் விளைவு—எ க்ளினிக்கல் அட்டிடியூட். நோய்க்குச் சரியான மருந்தைத் தேட வேண்டும். எனக்கு கிறிஸ்தவர்களைப் போலப் பாவத்தில் நம்பிக்கையில்லை. வாழ்க்கையில் 'நோய், ஆரோக்கியம்' என்று இரண்டு நிலைகள். முக்கியமானது என்னவென்றால் வாழ்க்கை பயனுள்ளதா இல்லையா? என்கிற பிரச்சினை. ஹோமோ செக்ஷுவாலிட்டியால் ஒருவனுடைய வாழ்க்கை பயனுள்ளதாக ஆகு மானால் அப்படிப்பட்ட காம வாழ்க்கை நோய் அல்ல. ஷல்டென்டன் ரிப்போர்ட்டைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம். எனக்கொரு ஆசை— யூனிவர் சிட்டியில் ஒரு போராட்டம் தொடங்க வேண்டும்; இப்போது நாட்டிலிருக்கும் ஹோமோசெக்ஷுவாலிட்டி பற்றிய சட்டம் இனி மாற்றப்பட வேண்டும் என்று. அதற்கு உன்னுடைய ஒத்துழைப்பை வேண்டுகிறேன்" என்று சொல்லி ஸ்டுவர்ட் சிரித்தான். கேசவன் கண நேரம் சும்மாயிருந்து பிறகு கோபத்தோடு சொன்னான்: "உனக்கு இங்கே புரியாமல் இருப்பது என்னவென்றால் நான் எவ்வளவு அவமானத்தச் சகித்துக் கொண்டு படித்தேன் என்பது. அவன் வற்புறுத்தலுக்கு நான் ஒப்புக் கொள்ளாதிருந்தால் ஹாஸ்டலை விட்டுப் போக வேண்டியிருக்கும். இரண்டு வருஷங்கள் அங்கே எனக்கு நரகமாக இருந்தது. பையன்கள் கக்கூஸ் சுவர்களில் என் பெயரையும் அவன் பெயரையும் கூட்டல் குறி போட்டு எழுதினார்கள், சமையல் செய்து கொண்டிருந்தவனும் அப்படிப்பட்டவனாகையால், அவனுக்கும் எங்கள்

வள்ளலுக்கும் முதலில் தொடர்பு இருந்ததால் அவன் பொறாமையில் கொதித்தான். விட்டு விட்டுப் போய் விடுகிறேன் என்று சண்டைபோட்டான். இரண்டு நாட்கள் வெளியே போய் இருந்து விட்டுத் திரும்பி வந்து அழுதான். என்னுடைய சுயமரியாதை, ஆண்மை எல்லாம் அங்கே நாசமாகிவிட்டது, ஸ்டுவர்ட். நீ மன இயல் படித்துவிட்டுச் சொல்வதைப் போல இது வெறும்நோய் நிவாரணப் பிரச்சினை அல்ல."

"ஐ ஆம் ஸாரி கேசவ்...வற்புறுத்தல் எங்கிருந்தாலும் நான் அதை வெறுக்கிறேன். பாவம் என்று ஒன்று இருந்தால், அது நம் முடைய இன்பத்துக்காக இன்னொருவரைத் துன்பத்துக்கு ஆளாக்குவதுதான். அந்த நேரத்தில் நீ சொல்வதை ஒப்புக் கொள் கிறேன். ஆனால் ஹோமோ செக்ஷுவாலிட்டியிலேயே பயங்கரமான ஒரு நரகம் இருக்கிறது என்பதை நான் ஒப்பவில்லை."

ஸ்டுவர்ட் இவ்வாறு சொல்லியபடியே சிகரெட் பாக்கெட்டைக் கேசவனிடம் நீட்டினான். கேசவன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, என் வாழ்க் கையில் எந்தப் பயங்கரமான விஷயத்தைச் சொன்னால் ஸ்டுவர்ட்டின் அமைதியான மன நிறைவுக்கு அதிர்ச்சி ஏற்படும் என்ற நினைத்துக் கொண் டிருந்தான்.

"சாதாரணமாக இருக்கிறாள். பட் தேட் இஸ் தி ரைட் அட்டி டியூட்" என்று ஸ்டுவர்ட் சொன்னான், புன்சிரிப்புடன்.

"வெள்ளைத் தோல் அழகின் மிகச் சிறந்த அடையாளம் என்று நினைக்கும் நாட்டிலிருந்து நான் வந்திருக்கிறேன் என்பதை மறக்க வேண்டாம்"

"யூ அமேஸ் மி"

"கண்ணனின் இளமைப் பருவத்தில் ராதை அவனுடைய காதலி. ராதை பால போன்ற நிறமுடையவள். ஆனால் அவனுக்குப் பக்குவம் வந்த வயதில் திரௌபதி அவனுக்கு விருப்ப மானவள் ஆகிறாள். காமத்தின் சுவடே இல்லாத பிளாடோனிக் தொடர்பு அது. திரௌபதி, கிருஷ்ணனைவிடக் கருப்பாய் இருப்பாள். நிறத்துக்கும் அனுபவத்தின் பக்குவத்திற்கும் சம்பந்தம் இருக்க வேண்டும். நான் இப்போதைக்கு வெள்ளைத் தோலில் மயங்கி இருக்கிறேன். எங்களுடைய ஜனங்களுக்கு ஐரோப்பாவே காசி, ராமேசுவரம், புனித யாத்திரை ஸ்தலங்கள். விவேகானந் தருக்கும், தாகூருக்கும் உங்களிடமிருந்து சர்ட்டிபிகேட் கிடைக்கும்வரையில் எங்கள் நாட்டில் மதிப்பில்லை".

"எனக்குப் புடவை உடுத்திய மாநிறத்து இந்தியப் பெண் என்றால் பிடிக்கும்.. அப்படியானால் காமம் என்கிற விஷயத்தில் நான் உன்னைவிடப் பக்குவம் உடையவன்..."

"நிச்சயமாக... பெண் என்பது நான் இன்னும் காணாத உலகம்... என் தலை எப்படி நரைத்திருக்கிறது. வயது முப்பதைத் தாண்டியிருக்கிறது—மறக்க வேண்டாம்!"

"இன்னொரு ட்ரிங்க்?" ஸ்டுவர்ட் கேட்டான்.

"ரைட், ஆனால் பீர் வேண்டாம். நான் இன்னும் ஒட்கா குடிக்கவில்லை." "டு ஸ்மால் வோட்காஸ்"

"பொது அனுபவத்துக்காக நான் இங்கிலாந்துக்கு வந்திருக்கிறேன்" என்று சொல்லி, கேசவன் டாய்லெட் பக்கம் போனான்.

"மிக்ஸ் பண்ணுவது நல்லதல்ல.ஆல்ரைட்... வோட்கா, தென்" என்று சொல்லி ஸ்டுவர்ட் எழுந்து கௌண்டருக்குப் போனான்.

டாய்லெட்டில் இருந்த போது கேசவனுக்குத் தோன்றியது: "என் வாழ்க்கை யிலிருந்து எதைச் சொன்னால் ஸ்டுவர்ட்டுக்கு அதிர்ச்சியாக இருக்கும். எல்லா வற்றையும் விழுங்கிக் கொள்ளும் சமமான அந்த மனநிலையின் ரகசியம் என்ன? தான் யாருக்கும் சொல்லாத அந்த ஒரு கனவை ஸ்டுவர்ட்டுக்குச் சொல்லலாமா? ஆனால் தானே மறுபடியும் நினைக்க விரும்பாத அந்தக் கனவை எந்தச் சொற்கள் எடுத்துச் சொல்லும்? ஸ்டுவர்ட் உனக்கு மட்டும் இதை இன்றைக்குச் சொல்லுகிறேன். ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னால் எனக்கு ஒரு கனவு வந்தது:

கனவில் நான்...

...ஆனால் சொல்ல மாட்டேன். சொன்னால் ஸ்டுவர்ட் என்னோடு மன இயல் கொள்கையை வைத்து முழக்கத் தொடங்குவான். சொல்லிய பிறகு எனக்கும் ஸ்டுவர்ட்டைக் கண்டால் மிகுந்த வெறுப்பு ஏற்படலாம். எனக்குள் அவ்வளவு ஆழமாக யாரும் வரவேண்டாம். நானும் அங்கே போக விரும்பவில்லை. கருப் பையில் உறக்கத்திலிருப்பதே பாதுகாப்பு...

ஒட்கா குடித்த பிறகு, 'இனி போகலாமா?' என்றான் ஸ்டூவர்ட்.

"எங்கே?" கேசவன் கேட்டான்.

"எங்கேயாவது.—இது உன்னுடைய மாலை நேரம். நீயே சொல்" என்று ஸ்டூவர்ட் கதவை இழுத்துத் திறந்து "ஆஃப்டர் யூ" என்றான். கேசவன் 'தாங்க்ஸ்' என்று சொல்லி வெளியே குளிர்ந்த காற்றில் வந்து— "ஒரு நைட் கிளப்புக்குப் போகலாம், ஸ்டூவர்ட். எனக்குப் பெண்களைப் பார்க்க வேண்டும்—முடியுமானால்..." என்று குறிப்பாகச் சொன்னான். "ரைட். நான் வர்ஜெல், நீ டான்டே. லண்டனின் நரகங்களைக் காட்டு கிறேன், வா" என்று ஸ்டூவர்ட் நடித்துக் காட்டுபவனைப் போல ஏர் இந்தியா பொம்மையைப் போல் கை நீட்டி, தலை தாழ்த்தி வணங்கினான்.

## IV

"அனுபவத்தைத் தேடிக் கொண்டு போனால் கிடைப்பது முன்பே முடிவான ஒன்றுதான் என்று நீயே சொன்னாய்..."ஸ்டூவர்ட் கேசவனைக் கேலி செய்தான். "நான் அனுபவமில்லாதவன், என் எந்தப் பேச்சுக்கும் மதிப்பில்லை!"

"பிக்காடெலியின் ஒரு மூலையில் எங்கோ, 'ரோலிங் ட்வெண்டீஸ்' என்னும் கிளப் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன், போகலாம், வா. லண்டனின் பாதாள லோகத்தைப் பார்ப்பாய்"

"பாதாளத்தில் என் இனிஷியேஷன் ஆக வேண்டும். இனிஷியேஷன் என்றால் எங்களில் உபநயனம்—பிராமணன் ஆவது அப்படித்தான். செத்து, புது அனுபவத் துக்காகப் பிறப்பது"

நியான் விளக்குகளின் வெறியில் ஒளிவிடும் பிகாடெல்லியை நெருங்கும்போது கேசவனின் மனம் கூத்தாடத் தொடங்கியது. இது யட்சர்களின் உலகம். இங்கே எல்லாமே ஏற்றுக் கொள்ளப்படுகிறது. நடன விழாவின் பாட்டு நினைவுக்கு வந்தது. 'மிதந்து வரும் ஜாஸ் இசை, நம் நாட்டியத்துக்காக அல்லவோ?' பீர் குடித்து மேலே ஒரு ஒட்காவையும் போட்டு வெறியேறிய கண்கள் பரவசமடைந்தன.

இங்கிலாந்தில் இளைஞர்கள் தம் நண்பர்களின் கையைப் பிடித்துக் கொண்டு, தோள் மேல் கைபோட்டுக் கொண்டு நடப்பதில்லை என்பதை மறந்து ஸ்டூவர்ட்டின் தோள் மேல் கைபோட்டு நடந்தான். தர்மபுத்திரனும் திரௌபதியும் நிர்வாணமாக

இருப்பதைப் பார்த்து அந்தப் பாவத்தைத் தீர்ப்பதற்காகத் தீர்த்த யாத்திரை புறப்பட்ட அர்ச்சுனனைப் போல நான் வழியில் சித்ராங்கதை...முதலியவர்கள் என்று தன் கற்பனைக்குத் தானே பெருமைப்பட்டுக் கொண்டான். பிகாடெல்லியில் ஒருவன் ஒரு போஸ்ட்டரைப் பிடித்துக் கொண்டு வழியில் போய்க் கொண்டிருக்கிறவரை நோக்கி உரத்த குரலில் கூவிக் கொண்டிருந்தான்: 'இதோ, கடவுளின் கடைசித் தீர்ப்பு நாள் நெருங்கி வருகிறது. பாவிகளே விழித்து எழுங்கள். ஏசுவை நம்பி உய்தி பெறுங்கள்." "எ க்ராக்..." என்று சொல்லி ஸ்டுவர்ட் சிரித்தான். மேலே சென்ற போது இன்னொருவன், மிலிட்டரி உடை அணிந்த ஸால்வேஷன் ஆர்மியைச் சேர்ந்தவன், கையில் ஒட்டை போட்ட டப்பா ஒன்றைப் பிடித்துக் கொண்டு பெருமிதத்தோடு பணம் போடும்படி வேண்டிக் கொண்டிருந்தான். 'நோ என்ட்ரி', போர்டு போட்ட குறுக்கு வழிகளில் ஹாட்டாக்ஸ், ஹாம்பர்க்கர் ஆகிய வற்றை வண்டிகளில் கொண்டு வந்து விற்கும் கடைக்காரர்கள். கேசவனுக்கு ஊரின் நினைவு வந்தது. இந்திய, சீன, இத்தாலிய, பிரெஞ்சு வகை வகையான ரெஸ்டாரெண்டுகள். எந்த நாட்டுச் சுவை வேண்டும, எந்த வகை ஆடை வேண்டும், எந்த பேஷன் வேண்டும்—அமராவதி. ஸ்டுவர்ட் ஒரு மூலையில் நுழைந்து சொன்னான்: "இந்தச் சந்தில்தான் எங்கோ 'ரோலிங் ட்வென்டீஸ்' இருந்த நினைவு. தேடலாம் வா."

ஒன்று மட்டும் நிச்சயம்: ஆங்கிரச ரிஷியை மூல புருஷனாகக் கொண்டு, ஆங்கீரச அம்பரீஷ யவ்வனாசவ, த்ரேயார்ஷேய ப்ரவரத்தை உடையவனாய், ஆச்வலாயன சூத்திரத்தைச் சேர்ந்தவனாய் ரிக்வேதியாய், ஒரு யோகியைச் சிததப்பனாகக் கொண்டு, சாப்பாட்டுக்கு ஒரு ஸ்பூன் நல்லெண்ணெய் இல்லா விட்டாலும் தெய்வத் துக்கென்று நெய் விளக்கு ஏற்றுவதை மறவாதவளான ஒருத்தியைத் தாயாகப் பெற்று, நான் இப்போது வெள்ளையன் ஒருவனுடன் புது அனுபவத்துக்காக ரோலிங் ட்வென்டீஸைத் தேடிக் கொண்டிருப்பதன் உட்பொருள் எனக்கு வேலை இலலை என்பதுதான். பாரதத்தின் கணக்கற்ற இளைஞர்களைப் போலவே எனக்கும் உறுதியான பிடிப்பு இல்லை என்பதுதான்...

சந்நியாசி, உணர்ச்சி மிகுந்தவன், அடக்கமானவன் ஆகியவர்களைப் பற்றியும் அனுபவம், அனுபவமின்மை பக்குவம் பற்றியும் சிந்தித்ததும், ஸ்டுவர்ட்டுடன் குறிக் கோளைப் பற்றி வாதிட்டதும் மீண்டும் நினைவுக்கு வருகின்றன. என் தகப்பனும் அநுபவம் பெறாமல் கொதிப்புடையவனாகியே செத்தானோ? சுப்பண்ண சித்தப் பாவும் அநுபவம் இல்லாமல் கொதிப்புடையவனாய் பத்ரிகாசிரமத்தில் அலைந்து கொண்டிருக்கிறானோ? ஸ்டுவர்ட்டுக்கு முழுக் கதையையும் சொல்லி அவனுடைய நாகரிக லிபரல் மனத்துக்கு இதெல்லாம் எப்படிப்படுகின்றது என்ற கேட்க வேண்டும்.

"என் தந்தை வீட்டுக்குப் பெரியவனாய் இருந்தும் ஏன் வீட்டு நிர்வாகத்தைத் தன் தம்பி சியாம் சித்தப்பாவிடம் கொடுக்கணும்? அம்மா அடிக்கடி சொல்லிட்டே இருப்பாங்க. 'தோட்டத்தில் எவ்வளவு பாக்கு விளைஞ்சது, விளைச்சல் எப்படி? சேதம் எவ்வளவு? மொத்தம் எவ்வளவு வருமானம், எதையும் இவர் நினைத்துப் பார்த்ததே இல்லை. அதை ஏற்றுக் கொண்டிருந்தால் நீங்கள் ஏன் இப்படிக் கஷ்டப் பட வேண்டியிருக்கும்? சுகமாக காலை நீட்டி சம்சாரம் நடத்தியிருக்கலாம்" பூசை நமஸ்காரம், பாரதம், பாகவதம் படித்தல்; ராமநவமியில் கோவிலின் திண்ணையில் உட்கார்ந்து, வால்மீகி ராமாயணத்தைப் படித்து கன்னடத்தில் விளக்கம் சொல்வது;

ஊரில் பிறந்த குழந்தைகளுக்கெல்லாம் ஜாதகம் எழுதித் தருவது; ஆவணி அவிடடத்தின்போது ஊரில் உள்ளவர்களுக்கெல்லாம் பூணூல் அணிவிப்பது; கௌரி பூசை அன்று ஊரில் உள்ள பெண்களைமெல்லாம் வீட்டுக்கு அழைத்து விரதம் செய்து வைப்பது; அக்கம்பக்கத்தார் வீட்டு மாடுகள் காணாமல் போய் விட்டால் பலகை மந்திரித்துக் கொடுப்பது; வேர், மூலிகைகளைக் கொண்டு வந்து நோயாளிகளுக்கு வைத்தியம் செய்வது, எப்போதாவது நேரம் கிடைத்தால் பூணூல் திரித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது. அம்மாவுக்குப் புடவை வேண்டுமென்றாலும் அப்பா, தன் தம்பியிடம் போய் அதையும் இதையும் பேசி, கொஞ்சம் இருமி, 'இதோ பாரப்பா! இவளுக்குப் புடவை வேண்டுமாம், கையில் பணம் இல்லா விட்டால் பெரிய கடையில் கடன் எழுதி வைத்தாவது வாங்கிக் கொண்டுவா, ரொம்ப விலை உள்ளதுதான் வேண்டும் என்பதில்லை" என்று நிறுத்தி அளந்து கேட்பதைப் பார்த்தால் அம்மாவுக்குக் கோபம் பற்றிக் கொண்டு வரும்.

அப்பாவுக்கு இப்படி வைதீகம் தொழிலானால், சியாம் சித்தப்பாவுக்கு முழுவதும் லௌகிகம். ஊரில் என்ன கலாட்டா நடந்தாலும் சரி, பாகம் பஞ்சாயத்து நடந்தாலும் சரி, அங்கே சியாம் சித்தப்பா கண்டிப்பா இருப்பார். கோர்ட் கச்சேரி என்று அவர் எப்போதும் சாகர, சிவமொக்க என்று அலைந்து கொண்டே இருந்தார். எங்களுக்கு இருந்த ஆஸ்தி கொஞ்சம்தான் என்றாலும் எப்போதும் நாலைந்து கேசுகள் சாகர கோர்ட்டில் இருந்து கொண்டிருக்கும். இப்படியாக வெளியே எப்படியோ அதே போல் சமையல் அறையிலும் அதிகாரம் செய்வாள் சித்தி. பெரியவள் என்றாலும் அம்மாவுக்கு அங்கே வாய் இல்லை. "துளி நெய்க்காகவும் உங்களுக்குக் கொஞ்சம் பாலுக்காகவும் அவளை நான் கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தது" என்பாள் அம்மா. இது நீண்டநாள் தொடரவில்லை. அம்மாவுக்கும் சித்திக்கும் இடையில் விரோதம் பெரிதாகி வீடு பாகம் பிரிந்தது. அப்பா அதற்கும் 'உம்' என்றும் சொல்ல வில்லை. 'ஊகூம்' என்றும் சொல்லவில்லை. அப்பாவின் பங்கோடு சித்தப்பாவின் அளவுக்கு மீறிய தர்பாரினால் கடனும் தலையில் விழுந்தது. பாகம் பிரிந்த பிறகும் அப்பா சுத்த வைதீகராகவே இருந்து விட்டார். பாக்கு வியாபாரம் முதலிய வேலைக் காக சாகரத்துக்கோ சிவமொக்காவுக்கோ போக வேண்டிவந்தால் என்னுடைய தையும் கொஞ்சம் விற்று விட்டு வா என்று சித்தப்பாவிடம் விட்டு விடுவார்.

ஆனால் இதில் விசித்திரம் என்னவென்றால் அப்பா சாவதற்கு முன்னால் தன் னுடைய கிழவயதில் இருந்தாற்போல் இருந்து மாறியதுதான். எப்போதும் அமைதி யாக இருந்தவர் நெருப்பில் விழுந்த உப்பைப் போல வெடிக்கத் தொடங்கினார். வைதீகத்தில் தன்னை மறந்த மனம் பணத்தை நோக்கித் திரும்பியது. தடித்த வில்லை போட்ட கண்ணாடியை மாட்டிக் கொண்டு பழைய கட்டுக்களையெல்லாம் வெளியே எடுத்து, தூசி தட்டி, கணக்கையெல்லாம் சரிபார்க்கத் தொடங்கினார். சியாம் சித்தப் பாவை ஒரு நாள் வரவழைத்து, 'உன்னைப் போலக் 'கேப்மாரி வேறு யாரும் இல்லை'யென்று' தட்டுத் தடங்கலில்லாமல் திட்டினார். என்றைக்கோ யாருக்கோ கொடுத்த ஒரு அணா, இரண்டணா கடன்களையெல்லாம் வழக்காடி வசூல் செய்யத் தொடங்கினார். பூசை செய்து கொண்டிருக்கும் போதும் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு அம்மாவை அழைத்து— "ஏண்டி, பாக்கு உரிக்கிறவங்க வந்தாங்களா? மாடில காயும் பாக்கை உரிக்கற பொம்பளைங்க மடியில் கொஞ்சம் கட்டிட்டு போனா தங்கமே போனது போல. கொஞ்சம் கவனம் இருக்கட்டும்" என்று

எப்போதும் கலாட்டா செய்யத் தொடங்கினார். கண்பார்வை குறைந்து கொண்டே வரும்போது, காது செவிடாகிக் கொண்டே வரும்போது, உலகத்தின் மேல் பற்று இன்னும் கொஞ்சம் ஆழமாகத் தொடங்கியது. எந்தக் காலடி ஓசை கேட்டாலும் 'யார் அது' என்று தடவிக் கொண்டே வரத் தொடங்கினார். யார் என்ன பேசினாலும் அது என்ன என்பது உடனே தெரிந்தாக வேண்டும்; மனைவியும் மக்களும் தான் போட்ட கோட்டைத் தாண்டக் கூடாது: தன்னைக் கேட்காமல் எதையும் செய்யக் கூடாது—சாகும்போது அப்பா மிகவும் இரக்கத்துக்குரிய காட்சிப் பொருளானார்.

வைதீக தர்மத்தில் வேர் விட்டிருந்த அப்பா ஏன் இப்படி மாறினார்? அவருடைய வாழ்க்கையை நடத்தி வந்த நம்பிக்கையில் எவ்வளவு பொய் எவ்வளவு உண்மை? தன்னைப் போலவே அவரும் உணர்ச்சிமயமானவரோ, ஒதியமரத்தைப் போல உள்ளே ஒன்றும் இல்லையோ?

அப்பாவின் கதை இப்படியென்றால், சியாம் சித்தப்பாவினுடையது வேறொரு விதம். மோசம், பழி, ஏமாற்று வேலை எல்லாம் செய்து தேடியதையெல்லாம் தாசிகள் மேலே கொட்டினார், கோர்ட்டுகளில் அலைந்து கரியாக்கினார். அவருடைய காமம் சாணி எடுக்கும் புலைச்சியையும் விடவில்லை. மாட்டிக் கொண்டு கலாட்டா ஏற்பட்டாலும் அவர் பின்வாங்கியதில்லை. புடவை சுற்றிய ஒன்று கண்ணெதிரில் பட்டால் போதும் அதன் பின்னாலேயே போகும் சுபாவம் அவருக்கு. அவர் தங்கியிருந்த இடத்திலெல்லாம் வைப்பாட்டிகள்தான். சிவமொக்கவில், சாகரத்தில், பஸரூரில், ஹுத்திலியில், அடிவாரத்தில், தோட்டத்தில். ஆனால் அப்போது அவருடைய தர்பார் எல்லாம் மாயமாய் மறைந்து விட்டது, கையிலிருந்த பணம் கரைந்துவிட்டது; டயபிடிஸ் நோயில் கரைந்து கொண்டு வருகிறார்; வீட்டு மரியாதை என்று எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கிறார்; துர்க்கா பூசை, சத்திய நாராயண விரதம், தீர்த்த யாத்திரை இப்படியாக எப்படியோ காலம் தள்ளுகிறார்.

இவர்கள் இருவரையும் விடக் கேசவனுக்கு மிகவும் விசித்திரமாகப் படுவது அப்பாவின் சின்னததம்பி சுப்பண்ண சித்தப்பாவின் விஷயம்தான். அவர் சிறுவயதிலேயே வீட்டைவிட்டு மடத்தில் போய்ச் சேர்ந்தார். கடுமையான நியமங்களைக் கடைப் பிடிக்கும் பிராமணன் ஆனார். ஒரு நாளைக்கு ஒரு தடவை மட்டுமே சாப்பாடு. வருடத்துக்கு ஒரு தடவை கேட்டு இரண்டு வேட்டிகளைப் பெற்று, ஒன்றைத் துவைத்துப்போட்டால் மற்றொன்றை உடுத்துவது. ஒரு தடவை கேசவனின் கண் எதிரிலேயே யாரோ ஒரு பைத்தியக்காரன் வந்து சுப்பண்ண சித்தப்பாவிடம் 'எனக்குக் கட்டிக்கொள்ள ஒரு வேஷ்டியைக் கொடு' என்று கேட்டான். கட்டிக் கொண்டதைக் கொடுக்கக் கூடாது' என்றார் சுப்பண்ண சித்தப்பா. 'பரவாயில்லை, கொடு' என்று அந்தப் பைத்தியக்காரன் கெஞ்சினான். சித்தப்பா கட்டியிருந்த வேட்டியை அவிழ்த்துக் கொடுத்துவிட்டு வெறும் கோவணத்துடன் இருந்து விட்டார். அந்த வருடம் பூராவும் இன்னொரு வேட்டியை அவர் கேட்கவில்லை. அவருடைய நாள் காலை நான்கு மணிக்குத் தொடங்கிவிடும். ஆற்றில் குளித்து விட்டு, மூன்று மணி நேரம் நின்றபடியே ஜெபம் செய்து, கொஞ்ச நேரம் படித்துக் கொண்டிருந்து விட்டு, நடுப்பகலில் மறுபடியும் குளித்து, சுடுகிற வெயிலில் நின்று ஜெபம் செய்து, எல்லாரும் சாப்பிட உட்கார்ந்திருக்கும்போது தன்னுடைய சிறிய பாத்திரத்தைக் கையில் ஏந்திக் கொண்டு, 'பவதி பிட்சாந்தேஹி' என்று எல்லாரையும் கேட்டுப் பிடிப்பிடியாகப் பெற்று இதைச் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் படிக்க உட்காருவது.

சாயங்காலம் மறுபடியும் ஆற்றில் குளித்து, ஜபம். ஜபம் முடிந்தபிறகு மடத்துச் சுவரில் மாடத்தில் ஏற்றி வைத்த அகல்விளக்கு எதிரிலே நின்று அது அணையும் வரையில் படிப்பு. விளக்கு சின்னதாக எரிந்தால் அதைப் பெரியதாக எரியவைப்பதில்லை. கிடைக்கும் வெளிச் சத்தில் விளக்கு இருக்கும் வரையில் படித்து, அங்கேயே நிலத்தில் படுத்துத் தூக்கம். பணத்தைக் கையால் தொடுவதில்லை. வருடத்தில் ஒரு மாதம் முழுவதும் ஒரு நாளைக்கு ஒரு வேளை சாப்பாடு என்பதையும் விட்டு, வெறும் செம்பருத்திப் பூவையே தின்று வாழ்க்கை. வயிறு முதுகில் ஒட்டி நெஞ்சில் எலும்புக் கூடாகி, யாக குண்டத்தில் எரியும் அரசஞ்சுள்ளிகளைப் போலத் தவத்தில் எரிந்து கொண்டிருந்த அவருடைய உடம்பில் இரண்டு கண்களும் ஒளிவீசும் சுவாலைகளைப் போல இருந்தன.

தன் அப்பா அம்மா சிராத்தத்துக்கென்று மாத்திரம் வீட்டுக்கு வந்து கொண்டிருந்த சுப்பண்ண சித்தப்பா ஒரு நாள் திடீரென்று வீட்டுக்கு வந்தார். அப்பாவின் காலில் சாஷ்டாங்கமாக விழுந்தார். அப்பா, "தீர்க்காயுசாக இரு" என்று அவரை வாழ்த்தினார். சித்தப்பா எழுந்து நின்று தலை குனிந்து கை குவித்துச் சொன்னார்: "இன்றைக்குக் காலையில் ஜபத்தைத் தொடங்கு வதற்கு முன்னால் தெய்வத்தில் ஆணை போலப்பட்டது—நீ இனி சுதந்திரமானவனாக ஆகும் காலம் வந்திருக்கிறது, அந்த அதிகாரத்தை நீ பெற்று விட்டாய் என்று. ஜபம் முடிந்த பிறகு யோசனையா யிருந்தது; தெய்வத்தின் ஆணை என்று நான் நினைத்துக் கொண்டது தூக்கக் கண்ணிலிருந்த என்னுடைய பிரமையோ, அல்லது என் உடம்பில் அழியாமல் இருக்கும் என் ஆணவத்தின் மோசடியோ விளங்கவில்லை. வெளியே வந்து ஓர் அரச இலையைப் பிடித்து காற்றிலே நீட்டி, கண்ணை மூடிக் கொண்டு தெய்வத்தைக் பிரார்த்தித்துக்கொண்டு சொன்னேன்; தெய்வத்தின் கட்டளை என்று நான் முடிவு செய்தது உண்மையானால் இது மல்லாந்து விழட்டும்—இல்லையென்றால் குப்புற விழட்டும். காற்றில் இலை சுற்றிச் சுற்றி மல்லாந்து விழுந்தது. தெய்வத்தின் கட்ட ளைக்குப் பிறகு அண்ணனின் கட்டளைக்காக உங்களிடம் வந்திருக்கிறேன். நான் சந்நியாசத்தை மேற்கொண்டால் ஆத்ம சிராத்தம் செய்து கொண்டு எல்லா சம்பந்தங் களையும்விட வேண்டியிருக்கும். பித்துருக்களின் கடன், குருவின் கடன், தெய்வத்தின் கடன் முதலிய எல்லா குணங்களின் சுமையையும் உங்கள் ஒருவரின் தலைமேல் ஏற்ற வேண்டிவரும். எனக்கு அந்த அதிகாரம் இருக்கிறதா என்று உங்களுடைய அநுமதிக் காகக் காத்திருக்கிறேன்."

பேச்சை முடித்து சுப்பண்ண சித்தப்பா அப்படியே கை குவித்துச் சிலைபோல நின்றார். அப்பாவின் கண்ணிலிருந்து நீர் வடிந்தது. யாரும் பேசவில்லை. கடைசியில் தழுதழுத்த குரலில் அப்பா சொன்னார்:

"நீ மகாத்மா. தெய்வத்தின் கட்டளையைத் தடுக்கும் அதிகாரம் எனக்கு ஏது? உன் தவத்தினால் மிருகங்கள் பறவைகள் எல்லாருக்கும் நல்லது நடக்கட்டும்" அப்பா எங்கள் எல்லாரையும் அழைத்து சுப்பண்ண சித்தப்பா காலில் விழும்படி சொன்னார். "நீ சந்நியாசியாக வா தம்பி. அப்போது உன் காலில் நானும் விழுந்து என் கர்மாவிலிருந்து விடுதலை பெறுவேன். இப்போது நான் உன் காலில் விழுந்தால் உனக்கு ஆயுள் குறையும்" என்று அப்பா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அம்மாவை அழைத்து 'தெய்வத்துக்கு இன்னொரு விளக்கு ஏற்றி வைத்துவிட்டு வா' என்றார். சுப்பண்ண சித்தப்பா மறுபடியும் அண்ணனையும் மன்னியையும் விழுந்து

வணங்கி, படியிறங்கி, திரும்பிப்பார்க்காமல் நடந்தபோது, அப்பா, 'உன் மூச்சுக் காற்றைக் காப்பாற்றும் உடம்பை ஒரேயடியாக அலட்சியம் செய்து விடாதே' என்றார்.

சுப்பண்ண சித்தப்பா காவி உடுத்தி, பையில் ஒரு தண்டத்தையும் கமண்டலத்தையும் தாங்கிக் கொண்டு பத்ரசாசிரமத்துக்குப் போனார்.

ஸ்டூவர்ட்டும் கேசவனும் மோசமாகத் தோற்றமளித்த ஐந்து மாடிக் கட்டிடத்தின் எதிரில் வந்து நின்றார்கள். கீழே, 'ரோலிங் ட்வெண்டீஸ்' என்று போர்டு இருந்தது. ஆனால் இன்னும் கதவு திறக்கவில்லை. திறக்கும் நேரம் இரவு பத்தரை என்று எழுதியிருந்தது. 'இப்போது மணி எட்டரைதான் ஆகிறது' என்றான் ஸ்டூவர்ட். என்ன செய்யலாம் என்றுகேசவனைக் கேட்டான். "நீ சொன்னது போல் வேறே எங்கேயாவது போகலாம்" என்றான் கேசவன். வழியில் ஆங்கிலத்தில் மிகவும் கஷ்டப்பட்டுச் சொற்களைத் தேடி அப்பா, சித்தப்பா கதைகளைச் சொன்னான். சொல்லி முடித்த பிறகு ஒரு கேள்வி அவனை வாட்டியது. அம்மா, தங்கைகள், மாது, அப்பா, சியாம் சித்தப்பா, சுப்பண்ண சித்தப்பா, ஸ்டூவர்ட், தான், உணர்ச்சி மிக்கவர்கள், துறவிகள், நாகரீகமுடையவர்கள், அன்புடையவர்கள். அன்பில்லாதவர்கள், அம்மாவைப் போல் எந்தச் சுயநலமும் இல்லாமல் கல்யாணம் காட்சி என்று வாழ்க்கை நடத்துபவர்கள்...லட்சியம் என்ன, போகும் வழி எது? ஒன்றும் விளங்கவில்லை. அப்பா, சியாம் சித்தப்பா, தான், ஒரு வேளை மாது தெரியாமல் மறைவாக நினைப்புக்கு எட்டாமல் வேர் விட்ட ஒன்று எங்கள் நால்வரின் சுபாவத்தில் இல்லாமல் இருக்கலாம்; தெளிவில் சூனியமிருக்கலாம்; எங்கள் சுபாவம் மற்றும் எங்களைச் சூழ்ந்திருக்கிற உலகத்தின் மேல் எங்களுக்கு இருக்கிற பிடிமானமும், குலைந்து போகும் நேரத்தில், கருப்பும் சூனியமும் எங்களைச் சுற்றிக் கொள்ளலாம். ஏதாவது ஒன்றைப் பிடித்துக் கொண்டேயிருக்க வேண்டும் நாங்கள். பயங்கரமான ஓட்டை, சூனியம் உள்ளே. சுபாவம் என்னும் வெள்ளத்தில் வாழப் புறப்பட்ட எங்கள் வாழ்க்கையில் திடம் இல்லை, அழகில்லை—வெறி, கொதிப்பு எரிப்பு, ஸ்டூவர்ட்டைப் போலவோ, சுப்பண்ண சித்தப்பாவைப் போலவோ உலையில் இட்டு வேண்டிய இடத்தில் கொட்டி, திருத்தி, உள்ளேயிருந்து ஒரு சிலையை உருவாக்கும் அழகு இல்லை. என் வாழ்க்கை அப்படி ஒரு முன்னமே முடிவான சிலையாவதில் நம்பிக்கையும் இல்லை. பற்றிக் கொண்டது முழுவதும் எரிந்து சாம்பலாக வேண்டும். அதுதான் தூய்மை; இல்லாவிட்டால் கரியாகிவிடும்.

## V

சுற்றிச் சுற்றிப் போகிற துருப்பிடித்த இரும்பு மாடிப் படிகளின்மேல் கூடு போன்ற இடம். அங்கே அட்டையைப் பிடித்துக் கொண்டு நீக்ரோ:

STRIP TEASE

ON THE FLOOR SHOW

தலைக்குப் பத்து ஷில்லிங் கொடுத்து, கேசவன் இரண்டு டிக்கெட்டுகளை வாங்கினான். தன் பங்கான பத்து ஷில்லிங்கை ஸ்டூவர்ட் கொடுக்க வந்தபோது 'வேணாம். இன்று நீ என் விருந்தாளி' என்றான். சிறிய படிகளைக் கேசவன் முன்னும் ஸ்டூவர்ட் பின்னுமாக ஏறிப்போய், கருப்புத்திரை போட்டிருந்த ஓர் அறைக்குள் நுழையும்போது எல்லா விளக்குகளும் டக்கென்று அணைந்து,

மினுமினு என்று ஒருவிளக்கு மட்டும் சிவப்பாக எங்கிருந்தோ எரிய, கேசவனுக்கு திக்பிரமை ஏற்பட்டது.

'ஸ்டூவர்ட்' என்று அழைத்து நண்பனுக்காகக் கையை நீட்டியபோது ஒரு பெண் எங்கிருந்தோ வந்து அவன் கையைப் பிடித்து மெதுவாக இழுத்தாள். அடுத்த கணம் கேசவன் மெத் தென்ற ஒரு சோபாவின் மேல் உட்கார்ந்திருந்தான்.பக்கத்தில் அந்தப் பெண். சிவப்பு விளக்கின் மங்கலில் 'ஸ்டூவர்ட்' என்று வாய் உலர்ந்த குரலில் அழைத்துக் கொண்டே தேடினான்.

'உன் நண்பன் எங்கே என்று தேடுகிறாய் அல்லவா? இங்கே வருபவர்களெல்லாம் முதலில் அப்படித்தான் செய்வார்கள். பிறகு சரியாகிவிடுவார்கள்...'

'ஆ' என்று கேசவன் சுதாரித்துக் கொண்டான்.

"இது எல்லா ஸ்ட்ரிப் டீஸ் கிளப்புகளைப் போல் அல்ல. இங்கே உனக்கு விசேஷமான அநுபவம் ஏற்படும். எல்லா தேசத்து, எல்லாவிதமான பெண்களையும் நீ இங்கே நிர்வாண மாகப் பார்க்க முடியும்..ஓ! பேச்சில்அறிமுகம் செய்து கொள்ள மறந்து விட்டேன். நான் ஜேனட், நீ?"

"நான் கேசவன்..."

"கேசவ்! அழகான பெயர்...இங்கே பருவநிலை உனக்கு ஒத்துப் போகிறதா?"

"இந்தத் தடவை குளிர்காலம் போன வருஷத்தைப் போலப் பயங்கரமாக இல்லையென்று சொல்லுகிறார்கள். உண்மையா?"

"ஜீஸஸ். போன குளிர்காலத்தை மறுபடியும் ஞாபகப்படுத்த வேண்டாம்"

சிறிது நேரம் மௌனம். கேசவன் பேச்சைத் தொடங்குவதற்காகச் சொற்களைத் தேடினான். ஆனால் ஜேனட் தானே பேச்சைத் தொடங்கினாள்:

"எங்களோடு ஒரு சிலோன் பெண் இருக்கிறாள். நாங்கள் வெட்கப்படும்படி இங்கிலீஷ் பேசுகிறாள். உன்னுடைய இங்கிலீஷ் எவ்வளவு நன்றாக இருக்கிறது!"

"உன் முகம் எனக்குத் தெரியவில்லை. இப்படி இருட்டில் முகத்தைப் பார்க்காமல் பேசுவது கஷ்டமாக இல்லையா? விளக்கைப் போடட்டுமா?" கேசவன் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டான். அவனுக்கு ஸ்டூவர்ட் எங்கே உட்கார்ந் திருக்கிறானோ என்ற கவலை, அச்சம். இன்னும் இரண்டு பேர் உள்ளே வந்த சத்தம். சோபாவின் மீது உட்கார்ந்த சத்தம். குசுகுசு பேச்சு.

"இங்கே வருபவர்களெல்லாம் இருட்டைத்தான் விரும்புகிறார்கள். உன் ஆசை விசித்திரமாக இருக்கிறது. கொஞ்சம் பொறு. வெளிச்சம் வரும்."

ஜேனட் நிர்வாணமாக இருக்கலாமோ என்று கேசவனுக்கு ஆசை. அப்படி இருப்பாளோ என்று பயமாகவும் இருந்தது. மெல்ல அவளைத் தடவினான். இல்லை. உடை அணிந்திருந்தாள். ஒருவித சமாதானமும் ஏமாற்றமும் ஏற்பட்டது.

"இங்கே குடிக்கலாம், கே...இன்னொரு தடவை உன் பெயரைச் சொல்லு...ஸாரி"

"கேசவன்"

தானே முதலில் கேட்டிருக்கலாமே. தப்பாகிவிட்டது என்று கேசவன் 'இரண்டு ரம்' என்றான்.இரண்டு ஷெர்ரியைக் கொண்டு வந்து வைத்தவளுடைய முகமும் தெரியவில்லை. இன்னும் இரண்டு பேர் உள்ளே வந்த சத்தம்...குசுகுசு பேச்சு... யாரோ இரண்டு பேர், ஒரு பெரிய பெட்டியை சுமந்து கொண்டு உள்ளே சென்ற ஓசை...களைப்பின் மூச்சு. அறையிலிருந்த தெளிவற்ற உருவங்கள்...

'உட்கார்ந்திருந்த எல்லாருமே ஷெர்ரிக்கு ஆர்டர் கொடுத்திருக்க வேண்டும். ஒரு தட்டை எடுத்துக் கொண்டு ஒருத்தி 'தேங்க்ஸ்' என்று சொல்லிக் கொண்டே ஷெர்ரியை கொடுத்த சத்தம். எல்லாருமே தன்னைப் போல ஷெர்ரிக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள். ஸ்டூவர்ட்டும் கூட என்று திருப்தி. தீக்குச்சியை உரசிய வெளிச்சம். அங்கொன்றும் இங்கொன்றமாக முகம், மறுபடியும் இருட்டு... சுற்றிலும் சிவப்புமுனையுடன் சிகரெட்டுகள். கேசவன் தானும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். ஜேனட்டுக்கு ஒன்றைக் கொடுத்து மறுபடியும் தீக்குச்சியை உரசப் போனான். 'வேண்டாம் உன் சிகரெட்டிலேயே லிங்க் கொடு' என்றாள். 'தேங்க்ஸ்' என்றாள்.

மினுமினுவென்று மின்னிக் கொண்டிருந்த சிவப்பு விளக்கும் அணைந்து போய் இருள் சூழ்ந்தது. எதிரில் ஒரு திரை விலகிய ஓசை. அதற்குள் 'டக்'கென்று ஒளிவிட்ட விளக்கு, மெதுவாகப் பியானோ இசையின் ரெக்கார்டு தொடங்கியது. விளக்கு, இசையின் வட்டத்தில் ஒரு பெண் நடனமாடிக் கொண்டே வந்தாள்—முழு ஆடையணிந்து கொண்டு.

"பெண் நன்றாய் இருக்கிறாள் அல்லவா?"

ஜேனட்டின் கேள்விக்குக் கேசவன் 'ஆம்' என்றான் விளக்கு எரிந்ததும் கேசவனுக்கு மறுபடியும் ஏற்பட்ட பயமும் ஆசையும் ஆடை உடுத்தியவளைக் கண்டதும் மறைந்து ஏமாற்றம் ஏற்பட்டது

ஒளிவட்டத்திலிருந்து இருட்டுக்கும் மறுபடி வெளிச்சத்துக்கும் அவள் இசையின் ஒலிக்கு ஏற்பக் கையை நீட்டி, ஆட்டி, உடலை வளைதது, பெல்ட்டை அவிழ்த்து திரைக்குப் பின்னாலிருந்து நீண்ட கையில் இட்டாள். பியானோ இசையோடு இப்போது ஒரு வயோலாவின் ஒலி இணைநதது. வாயில் சூயிங்கம் மென்று கொண்டே, உதட்டில் புன்னகையுடன் அவள் தன் உடையின் ஜிப்பை இழுத்தாள். கடிக்கும், உறிஞ்சும், விழுங்கும் இன்னும் அபிநயங்களில் தாடையை அசைத்துக் கொண்டே தோளில இருந்து ஆடையைச் சரித்துக் கீழே நழுவுமாறு தள்ளி, சட்டென்று இழுத்து அதை மறுபடியும் அணிந்து கொண்டு வெட்கத்தில் முகத்தை மூடிக் கொண்டாள். பிறகு முதுகைக் காட்டி டிரஸ்ஸை இடுப்புவரை தள்ளி, ஏற்றிக் கொண்டாள்.

"அவள் பெயர் ரோஸீ—பாரிஸிலிருநது ஸ்ட்ரீப் டீஸ் கற்றுக் கொண்டு வந்திருக்கிறாள். இங்கிருக்கும் எல்லாரையும் மிஞ்சியவள்" என்று ஜேனட் கிசுகிசுத்தாள்.

இசையின் வேகம் அதிகமாகிக் கொண்டே போனது கேசவனுக்குத் தெரியாத இன்னும் இரண்டு வாத்தியங்கள் இணைந்து கொண்டன. பயத்தில் கேசவனுடைய நெஞ்சு அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. தோளும், அக்குளும் வெறுமையாகின. ஒளி வட்டத்தில் இருந்தவள் பயந்தவளைப் போல இருட்டுக்குப் போனாள், இசையின் பின்னணியில் வெளிச்சத்துக்கு மறுபடியும் வந்தாள்.—பிரேசியர், மற்றும் பாண்டீஸ் மட்டும் அணிந்தபடி. ஒரு கணம்...இரண்டு கணம்...கருப்புத் திரை விழுந்தது.

அறையில் கண்ணைக் குருடாக்கும் படியான விளக்குகள் எரிந்தன. அந்த வெளிச்சத்தைப் பார்க்க முடியாமல் தூக்கத்தில் இருந்து எழுந்தவனைப் போலக் கேசவன் கண்களைத் தேய்த்துக் கொண்டான். கையால் கண்ணை மறைத்து ஸ்டூவர்ட்டைத் தேடினான். இன்னொரு மூலையில் சேலை அணிந்திருந்த சிலோன் பெண்

ஒருத்தியுடன் உட்கார்ந்து ஸ்டூவர்ட் ஷெர்ரி குடித்துக் கொண்டிருந்தான். நடுத்தர வயதுள்ள Three Piece Suit அணிந்தவன் தொடையின் மேல் தொப்பியை வைதது்க் கொண்டு ஒரு நீக்ரோ பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்தான். மற்ற வர்கள் தன்னைப் போலவே வெவ்வேறு நிறத்தில் கூந்தலையுடைய பெண்களோடு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் இரண்டு நீக்ரோப் பையன்களும் இருந்தார்கள்.

தாங்கள் உட்கார்ந்திருந்த இடத்தைப் பார்த்துக் கேசவனுக்கு அச்சமாயிருந்தது. இரண்டு கருப்புத் திரைகளைத் தவிர அந்த அறை சிவப்பு நிறத்தில் எப்படியோ இணைத்து வைத்த செங்கல்களாலான ஒரு குகையைப் போலிருந்தது. சுவர்கள் கூடும் இடங்களில் சோபாக்கள். ஒரு மூலையில் குவிந்திருந்த சிவப்புச் செங்கல் மாடத்தில் சீசாக்கள்: அங்கே ஒரு மேஜை, நாற்காலி; நாற்காலியின் மேல் அந்தக் கண்ணாடி அணிந்த, பார்ப்பதற்கு ஆசிரியை போலிருந்த ஒரு பெண்மணி. கேசவன் இன்னொரு தடவை தான் உட்கார்ந்திருந்த இடத்தைப் பார்த்தான். இப்போது அதனுடைய முழு உருவம் குகையைப் போல் காணப்படவில்லை. 'டக்'கென்று மனத்தில் பட்டது: மாமிசத் துண்டுகளைப் போன்ற சிவந்த பல்வேறு வடிவங்களில் அலங்கரித்த இந்தச் செங்கல் பகுதி கருப்பையைப் போலத் தனக்குத் தோன்றவில்லையா?

"இந்த அறை உனக்குப் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டாள் ஜேனட், கேசவன் உற்று நோக்குவதைப் பார்த்து.

"ஆமாம்" என்று சொல்லி கேசவன் ஜேனட்டைப் பார்த்துச் சிரித்தான்.

"இதன் அமைப்பு உனக்கு எப்படித் தோன்றியது?"

"முதலில் குகையைப் போலத் தோன்றியது. இப்போது கர்ப்பப்பையைப் போல் இருப்பது போலத் தோன்றுகிறது."

"ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரி தோன்றுகிறது. நான் இங்கே சந்தித்த ஒவ்வொரு நண்பனும் வேறு வேறு வகையில் இதை வர்ணித்திருக்கிறான்"

மூலையில் எழுதிக் கொண்டிருந்த எஜமானி சிறுசிறு தட்டுகளில் பில்களைக் கொண்டு வந்தாள். கேசவன் தன் பில்லை எடுத்து அதில் முப்பது ஷில்லிங் என்ற எழுதியிருந்ததைப் பார்த்து நடுங்கிப் போனான். எவ்வளவுதான் அதிகம் என்றாலும் அவன் குடித்த ஷெர்ரியின் விலை ஆறு அல்லது எட்டு ஷில்லிங்குக்கு மேல்போகாது. 'ஸ்டூவர்ட்' என்று அழைத்தான். பில் கொண்டு வந்த எஜமானி 'உன் நண்பனின் பெயர் ஸ்டூவர்ட் என்றா சொன்னாய், எவ்வளவு அழகான பெயர், இல்லையா ஜேனட்?" என்றாள்.

ஸ்டூவர்ட்க்குக் கேசவன் அழைத்தது கேட்கவில்லை. ஜேனட் சொன்னாள்: "இவன் பெயர் கேசவ்! இவனுடையதும் அழகான பெயர் இல்லையா, பார்பரா?" எஜமானி பார்பரா சொன்னாள்: "சில்லறை இல்லாவிட்டால் கவலைப்படாதே. இரண்டு பவுண்டுகளைக் கொடு. நான் சில்லரை தருகிறேன்"

கேசவன் பரவாயில்லை என்று பையிலிருந்து முப்பது ஷில்லிங்கைத் தட்டில் வைத்தான். 'ஸர்வீஸ் சார்ஜ்' இரண்டரை ஷில்லிங்" என்றாள் பார்பரா. இன்னும் இரண்டரை ஷில்லிங்கைக் கேசவன் தட்டில் போட்டான். பார்பரா 'தேங்க்ஸ்' என்று சொல்லி மேலே போனாள். ஜேனட் கேசவனின் கையைப் பிடித்துக் கொண்டு,

“இங்கே வருபவர்களெல்லாம் உன்னைப் போலவே பில்லைப் பார்த்துப் பயந்து போகிறார்கள். நான் இங்கே ஹோஸ்டஸ். எனக்கு ஷெர்ரி வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று என்று உனக்கு அதிகமாகச் சார்ஜ் போட்டிருக்கிறார்கள். அவ்வளவுதான். சியர் அப், டார்லிங்” என்றாள்.

“ஆல்ரைட். இன்னொரு சிகரெட்?” என்று கேசவ் தன் வியர்வையைத் துடைத்துக் கொண்டு ஜேனட்டுக்கு சிகரெட்டை நீட்டினான். அவள் இரண்டை எடுத்துக் கொண்டு “என் சிநேகிதிக்கு ஒன்று, பரவாயில்லைதானே?” என்றாள். ‘ஓகே’ என்றான் கேசவன்.

...விளக்கு அணைந்து இருள் சூழ்ந்தது. திரை விலகியது. உள்விளக்கு எரிந்தது. ஸ்டூவர்ட் இருட்டிலேயே கேசவன் அருகே வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டு காதில் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தபோதே வெளிச்சத்தில் பாதி நிர்வாணமாக ரோஸீ வந்துவிட்டாள். என்ன என்று அவசரமாகக் கேசவன் கேட்டான் பியானோ இசை தொடங்கியது.

“இது கிளிப் ஜாயிண்ட் கேசவ். இங்கே இருக்கும் பெண்கள் சுறாமீன்கள். சட்டைப் பையைக் கத்தரித்து அனுப்புவார்கள். அநுபவமில்லாமல் இங்கே உன்னை அழைத்துக் கொண்டு வந்தேன். மன்னித்துவிடு. இங்கே இனி ஒரு நிமிடம் கூட இருப்பது வேண்டாம், வா” என்று ஸ்டூவர்ட் கேசவனை இழுத்தான்.

கேசவன் தடுமாறிப் போனான். ரோஸியிடமிருந்து தன் கண்களை அவனால் விலக்கிக் கொள்ள முடியவில்லை.

“ஸ்டூவர்ட் டார்லிங்! இனி உங்களிடமிருந்து பணம் ஏதும் வாங்கிக் கொள்ளப் போவதில்லை. டிரிங்க் ஆர்டர் பண்ணாமல் இருந்தால் இந்தப் பணத்தையும் கொடுத் திருக்க வேண்டி இராது. உன் நண்பன் இருந்து போகட்டும்” என்று ஜேனட் மெதுவாகச் சொன்னாள்.

கேசவன் யாசிக்கிற குரலில்,

“கொஞ்ச நேரம் இருந்துவிட்டுப் போகலாம்—ஸ்டூவர்ட். என்ன அவசரம்?” என்றான். “ஓ! ஐ ஆம் சாரி” என்று ஸ்டூவர்ட் மறுபடியும் தான் உட்கார்ந்திருந்த இடத்துக்கே போனான். அரை நிர்வாணமாகயிருந்த ரோஸி ஒவ்வொன்றாக பிரேசியரில் சொருகி இருந்த மெல்லிய மஸ்லின் துணிகளைச் சரித்துக் கொண்டே நடனமாடினாள். பிறகு ஒவ்வொன்றாக அவிழ்த்தவற்றை நீட்டிய கைகளில் வைத்தபடி வெளிச்சத்தில் இருந்து இருட்டுக்கும், இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கும் மாறித் தோன்றி மாயமாக, கடைசியில் அவிழ்த்த பிரேசியரை மார்பின் மீது அணைத்தபடி நாணத்தோடு நின்றாள். குளித்துவிட்டு மடி உடுத்தி வந்த பிராமணப் பெண்களின், கொட்டகையில் சாணி எடுக்கும் பெண்களின் வெறும் மார்பகங் களைப் பார்த்தபோது எந்த விதமான எண்ணமும் தோன்றியதில்லை. என்றாலும் இப்போது மட்டும் கேசவனுக்குச் சூடேறி பயமாயிருந்தது. வெட்கி நின்றவள் முகத்தை உயர்த்தித் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு பிரேசியரை நீட்டிய கையிலிட்டு நின்றாள். மறுபடியும் தாடையைச் சாப்பிடுவது போல அசைத்துக் கொண்டே இடுப்பில் சொருகியிருந்த மஸ்லின் துணிகளை ஒவ்வொன்றாக இழுத்து நீட்டிய கையில் எறிந்தாள். கடைசியில் வெறும் பாண்டியுடன் நின்று அங்கே விரித் திருந்த படுக்கையின் மீது படுத்து, அங்கிருப்பவர்களுக்கு முதுகைக் காட்டி,

பாண்டிஸைச் சரித்து அவிழ்த்தாள். பிறகு மெல்ல மெல்லத் திரும்புவதைப் போல நடித்து முகத்தை மட்டும் திருப்பி வெட்கத்தில் கண்ணை மூடினாள்.

கேசவனின் கண் பார்க்கும் ஆசையினால் சூடேறியது; உடம்பைத் தொடும் காமத்தினால் சூடேறியது, காது அவள் துடிப்பதைக் கேட்கும் ஆசையால் சூடேறியது; நாக்கு அவள் முத்தத்தின் சுவையை அநுபவிக்க வேண்டும் என்னும் ஆசையால் சூடேறியது; இன்னும் என்ன முழுவதும் திரும்பி விடுவாள் என்று சொல்லும் அளவு திரும்புவாளா? பயமாய் இருந்த நெருப்புச் சுவாலைகளின் நடுவில் நின்று கொண்டு பார்த்தான். மின் விசை நிரம்பிய பாதாளத்துச் சங்கிலிகளைப் போல கையில் எடுத்த கோபமான பாம்பைப் போல, எல்லாக் கதவுகளும் திடீரென்று மூடிக் கொண்டதைப் போல—அல்ல, சட்டென்று வெட்கியவளைப் போல, கோபித்தவளைப் போல, முதுகைத் திருப்பினாள்.

திரை விழுந்தது.

மறுபடியும் எல்லா விளக்குகளும் எரிந்து, பொறுத்துக் கொள்ள முடியாத வெளிச்சம் ஏற்பட்டது.

கண்களை மூடி, கேசவன், "நான் உள்ளே போகலாமா? என்றான். ஜேனட் 'பார்பரா' என்று எஜமானியை அழைத்து 'கேசவ் உள்ளே போக வேண்டுமாம்' என்றாள். ஸ்டூவர்ட் எழுந்து வந்து, "வா,கேசவ்" என்றான். கேசவன் "இல்லை—நான் உள்ளே போகவே வேண்டும்" என்றான். "வேண்டாம், கேசவ். அவளுடைய மார்பு தொங்கிப் போய் இருக்கிறது. இதைவிட அழகானதைப் பார்க்கலாம்— வேறே எங்கேயாவது போகலாம்" என்று ஸ்டூவர்ட் யாசிக்கும் குரலில் கேசவனை வற்புறுத்தினான். "முடியாது—நான் போகவே வேண்டும்" என்று கேசவன் ஸ்டூவர்ட்டிடமிருந்து கையை இழுத்துக் கொண்டான். பார்பரா மெல்லக் கேசவனை இழுத்து உள்ளே அழைத்துக் கொண்டு போனாள்.

உள்ளே மூன்று அறைகள் இருந்தன. ஒன்றில் மேல் Mystery by your side என்று எழுதியிருந்தது. மற்றொன்றின்மேல் Mystery Revealed in darkness என்று எழுதியிருந்தது. மூன்றாவது அறையின் மேல் அழுக்கான எழுத்துக்களில் Mystery fully revealed என்று எழுதி யிருந்தது. பார்பரா கண்ணாடியை எடுத்துக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே விளக்கினாள்:— "முதல் அறைக்கு இரண்டு பவுண்டு, இரண்டாவதற்கு மூன்று பவுண்டு பத்து ஷில்லிங், மூன்றாவதற்கு ஐந்து பவுண்டு. முதல் அறையில் ரோஸி அரை நிர்வாணமாகப் பக்கத்தில் உட்கார்ந்து ஷெர்ரி குடித்து பிரேசியரை மட்டும் அவிழ்ப்பாள்; இரண்டாம் அறையில் இருட்டில் உன் பக்கத்தில் நிற்பாள்; மூன்றாம் அறையில் வெளிச்சத்தில் முழு நிர்வாணமாக நிற்பாள்."

"நான்காவது அறை என்று ஒனறு இல்லையா?"

உலர்ந்த குரலில் கேசவன் கேட்ட கேள்விக்கு, பார்பரா தப்பான விடை சொன்ன மாணவனைப் பார்க்கும் ஆசிரியையைப் போலக் கேசவனைப் பார்த்து "Mystery fully possessed" என்று கேள்வி கேட்பதைப் போலக் கேட்டு, "இங்கே வரும் ஜனங்கள் இவ்வளவிலேயே திருப்தியடைந்து வரம் பெற்றவர்களைப் போல, நன்றியுடையவர்களாகத் திரும்பி விடுகிறார்கள். அதுவும் அல்லாமல் அதற்கும் அடுத்த அநுபவத்தை உனக்குக் கொடுப்பதற்கு எங்களுக்கு லைசென்சு இல்லை."

"நான் ஐந்து பவுண்டு அறைக்குப் போகிறேன்" என்று ஐந்து பவுண்டு பார்பராவுக்குக் கொடுத்தான்.

"அழைத்துக் கொண்டு வந்த சார்ஜ் பத்து ஷில்லிங்—ப்ளீஸ்" என்று பார்பரா கையை நீட்டினாள்.

இன்னொரு பத்து ஷில்லிங்கை எடுத்துக் கேசவன் அவள் கையில் இட்டான். பார்பரா 'தேங்க்ஸ்' என்று சொல்லி அறையினுள் கேசவனை விட்டுக் கதவை மூடிக் கொண்டு போனாள்.

***

அறையின் வால்பேப்பர் கிழிந்து அசிங்கமாகத் தோற்றமளித்தது. கணப்பில் குளிர் காலத்தில் எரித்த கரியின் சாம்பல் இன்னும் எடுக்கப்படவில்லை. அறையின் நடுவில் ஷேட் இல்லாத பல்பு எரிந்து கொண்டிருந்தது ஒரு மூலையில் சுவரோடு ஒட்டிய மூன்றுகால் நாற்காலி. இன்னொரு மூலையில் காலியான பீர் சீசாக்கள். மண்தரையின் மேல் கார்பெட் இல்லாவிட்டாலும் போகிறது. லினோலியம் கூட இல்லை. ஆனால் அந்த அறையின் இழிநிலையைவிட கேசவனுக்குக் காத்திருப்பது தான் அசிங்கமாக இருந்தது. கடைசியில் கதவைத் தட்டி விட்டுத் திறந்து கொண்டு ரோஸி பிரேசியர்ஸ் மற்றும் பாண்டீஸில் நின்றாள். கதவை மூடினாள்.

கேசவனுக்கு அச்சம் ஏற்பட்டுக் கண்ணை மூடிக் கொண்டான். தான் பார்த்ததை எல்லாம் நினைத்து, தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, கண்ணைத் திறந்து தனது கோட்டை அவிழ்க்கப் போனான்

ரோஸி "நீ ஸ்ட்ரிப் செய்து கொள்ள வேண்டியதில்லை" என்றாள்.

கேசவன் பேச்சில்லாமல் நின்றான். ரோஸி பிரேஸியரை அவிழ்த்துக் கொட்டாவி விட்டாள்.

கேசவன் அவள் அருகே போய் முத்தமிடுவதற்காக வாயைத் தொட்டான்.

"ஸாரி, நான் முத்தங்களைப் பெற்றுக் கொள்வதில்லை" என்ற ரோஸி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

கேசவன் அவள் முகத்தைத் தடவி மெல்ல அவள் மார்பைத் தொட்டான்.

"நான் மார்பையும் தொட விடுவதில்லை. மன்னித்துவிடு" என்று ரோஸி அழுத்தமாகச் சொன்னாள்.கேசவனுக்குக் கால் துவண்டு, தரையில் உட்கார்ந்து விட்டான். மியூசியத்தில் தொடக் கூடாத நிர்வாணச் சிலையைத் திருட்டுத்தனமாகத் தொடுபவனைப் போல மெல்லக் கால்களையும் தொடைகளையும் தடவிக் கொண்டே தைரியத்தை வருவித்துக் கொண்டு மேலே போனான். அவள் அவனுக்கு முதுகைக் காட்டி பேண்டீஸை அவிழ்த்துவிட்டுத் திரும்பினாள்.

கேசவனது கண்கள் நிதானமாக மூடிக் கொண்டன. உடம்பு நடுங்கியது. மிகவும் களைத்துப் போய்த் தரையின் மேல் உட்கார்ந்து விட்டான். கண்ணைத் திறந்து பார்க்கும்போது மறு படியும் அவள் பாண்டிஸை அணிந்து கொண்டு கொட்டாவி விட்டபடி "ஸாரி" என்றாள். சீறியெழுந்து படம் எடுத்த பாம்பு துவண்டு மண்புழு ஆனது.

பெரிய ஒரு அண்டாவில் சிறிய எலியைப் போலே, எண்ணெய் வழுக்கும் பாத்திரத்தில் தவழ்ந்து, ஏறித் திண்டாடுவது போல—இதைக் கனவில் பார்த்துக்

கொண்டிருப்பதைப் போல, பார்க்கும் கண்ணாக, வழுக்கும் எலியாக, நீட்ட முடியாத கையாக அதிர்ச்சியடைந்ததைப் போல—

கனவு முடிந்து உருவமற்ற அலைச்சல் மட்டும் மிஞ்சி, கலவரத்தின் காரணத்தைத் தேடி, பார்த்த கனவை மீண்டும் நினைவு படுத்திக் கொள்வதற்காக அகழ்ந்து அகழ்ந்து அகழ்ந்து உள்ளே போவது போல—

அகழும்போது முதலில்—மண், மணல், மண், மண்புழு, களிம்பேறிய நாண யத்தின் துண்டு, கலப்பையின் பகுதி, துருப்பிடித்த இரும்புப்பாறை.

இன்னும் கீழே தன்னுடைய அலைச்சல் கனவுக்காக அகழ்ந்ததுபோல, அங்கே வெறும் சூன்யம் இருந்ததைப் போல—

சூன்யத்தில் ஓர் அறை. அறையில் நிர்வாணமாக நின்ற பெண்...இருட்டு... சூன்யம்...புழு..

சுப்பண்ண சித்தப்பாவிற்கும் ஒரு வேளை கடைசியில் இந்தச் சூன்யத்தின் அநுபவம் கிடைத்திருக்கலாமோ. உபவாசத்தில் ஒடுங்கி, கடவுளைத் தேடி, மலையும் குகையும் அலைந்து, கடைசியில் தன்னைப் போலவே. ஒடுங்கிய ஒரு மேல நிலையைப் பார்த்திருக்கலாமோ? இந்த கிளிப் ஜாயிண்ட்டிலிருந்து முதலில் எழுந்து ஸ்டுவர்ட் இருக்கும் இடத்துக்குப்போக வேண்டும்...பைத்தியக்காரனானேன்.

"என் பிளாட்டில் நீ ராத்திரியைக் கழிக்க விரும்பினால் பத்து பவுண்டு. பார்பராவுக்கு மட்டும் தெரிவிக்காதே. ஹாம்ப்ஸ் டேட்டில் இஸ்லிங்டன் தெருவில் 10ஆம் நம்பர் வீடு. இப்போது ஐந்து பவுண்டு கொடு. அங்கே வந்த பிறகு மிச்சம். " என்று ரோஸி சொன்னாள். 'வேண்டாம்' என்று கேசவன் தலையை ஆட்டினான்.

ஒருவேளை கடைசியில், மிக உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்ட கமிட்டி களின் மேல் ஒரு கமிட்டியின், அளவற்ற அபாரமான சுத்தமான அறைகளில் அறை களுக்கும்மேலான அளவு களில் முடிவில்லாத Centrally heated உலகமாக, ஸ்டுவர்ட டுக்கு இந்தச் சூன்யத்தின் அநுபவம் தோன்றலாம்.

முதலில் இந்த கிளிப் ஜாயிண்ட்டிலிருந்து எழுந்து வெளியே போக வேண்டும். "இங்கே இருந்ததைப் போல அங்கு நான் உன்னிடம் நடந்து கொள்ள மாட்டேன். இப்போது பணம் இல்லாவிட்டால் வேண்டாம். வரும்போது கொண்டு வா. போதும். இங்கே எனக்கு அதிக சுதந்திரம் இல்லை. பார்பராவிற்குத் தெரிவிக்க வேண்டாம். ஒரு முத்தம் கொடுக்கிறேன். எழுந்திரு."

அவசரமாய்ப் பேசிக் கொண்டே ரோஸி குனிந்தாள்.

வேண்டாம், எதுவும் வேண்டாம். பூசை, ஜபம் விரதங்களில் தொடங்கிய அப்பாவைக் கழுகுக் கண்ணால் இந்தச் சூன்யம் முதலில் இருந்தே தாக்கி இருக்குமோ? வேண்டாம் என்று பட்ட பிறகு முத்தம் கொடுக்கும், அந்த முத்தத்தையும் இன்னும் கொஞ்சம் உறிஞ்சலாம் என்று கொடுக்கும் இந்த கிளிப் ஜாயிண்டிலிருந்து வேகமாக வெளியேற வேண்டும்.

பார்பரா வந்து கதவைத் தட்டி, 'ரோஸி' என்று அழைத்தாள். 'வந்தேன்' என்று ரோஸி கேசவனுக்கு முத்தம் கொடுத்து, ' பிறகு பார்க்கிறேன், பை' என்று கண் ணடித்துவிட்டுப் புறப்பட்டுப் போனாள். கேசவன் மண்பட்ட கையை உதறினான். தோளால் வாயைத் துடைத்துக் கொண்டான். பேண்ட்டிலிருந்து தூசியைத் தட்டி, மிகவும் களைப்போடு மூன்று கால் நாற்காலியின் மேல் போய் உட்கார்ந்தான். சிகரெட் பற்ற வைத்தான்.

இந்த ஐந்து பவுண்டு பத்து ஷில்லிங், மற்றும் இரண்டு பத்து ஷில்லிங் மற்றும் மூபபது பிளஸ் இரண்டரை ஷில்லிங், பீர் முதலியன பத்து ஷில்லிங், லண்டனுக்கு வந்து போன பிரயாணச் செலவு நான்கு பவுண்டு, தங்கியிருந்த இடத்துக்கு இரண்டு பவுண்டு, மற்றச் செலவு இரண்டு பவுண்டு—மொத்தம் பதினாறு பவுண்டுக்கு மேல்—பைத்தியக்காரன்—அம்மாவுக்கு அனுப்பி யிருந்தால் இரண்டு மாதங்கள் சம்சாரம் நடந்திருக்கும். மறுபடியும் பழைய நினைவுகள், இந்த கிளிப் ஜாயிண்டி லிருந்து முதலில் தொலைய வேண்டும்.

மாது தற்கொலை செய்து கொண்டால்...

ஸ்டூவர்ட் அழைத்ததைக் கேட்டு கேசவன் மூன்று கால் நாற்காலியில் இருந்து எழுந்து நின்றான்.

# அநாதைகள்

## ராகவேந்திர காஸநீஸ

அதிகமாகப் போனால் அந்தப் பள்ளத்தில் பாதம் முழுவதும் மூழ்கும் அளவுக்குத் தண்ணீர் இருக்க வேண்டும். கொஞ்சம் இறங்கி மேலே சென்று ஆற்றில் கலந்து கொள்வதால் அந்தத் தண்ணீருக்குப் போதுமான இழுப்பும் இருந்தது. ஆனால் தண்ணீரின் நடுவில் பஸ்ஸின் சக்கரங்கள் சிக்கிக் கொள்ளும் அளவு சேறு இருக்கு மென்னும் எண்ணம் டிரைவருக்குக் கூட இருக்கவில்லை. எஞ்சினை முழுவேகத்தில் மீண்டும் மீண்டும் ஸ்டார்ட் செய்து ஸ்டீயரிங்கைத் திருப்பித் திருப்பி டிரைவர் களைத்துப் போனாலும் பஸ் முன்னாலே போகவில்லை பின்னாலும் வரமுடிய வில்லை. வெளியே தண்ணீர் ஒவ்வொரு நிமிஷமும் ஏறத் தொடங்கியது. டிரைவர் செயலற்ற கோபத்தில் ஸ்டியரிங்கை ஒரு தடவை முழுவதும் திருப்பிக் கைவிட்டான். பஸ் திடீரென்ற வேகத்தில் மேலே பாய்ந்து டக்கென்று நின்று விட்டது.

தங்கை வீறிட்டாள். சீட்டுக் கம்பியில் தலை இடித்தது. பாதி திறந்திருந்த கதவு வழியாகத் தண்ணீர் உள்ளே நுழைந்தது. உள்ளே நின்றிருந்தவர்களெல்லாம் பேலன்ஸ் தவறி ஒருவர் மேல் ஒருவர் விழுந்தார்கள். தங்கைக்கு இந்தக் கலாட்டா வெல்லாம் புரியவே இல்லை. ஜன்னல்வழியே தொலைவில் பெரிய பெரிய பாறைகள் தெரிந்தன. பார்த்துக் கொண்டிருக்கும்போதே தண்ணீர் ஏறிவந்து பஸ்ஸையெல்லாம் சுற்றிக் கொண்டது போல அவளுக்குத் தோன்றியது.

அவள் முகத்தை மூடிக் கொண்டு மறுபடியும் வீறிட்டாள்.

தந்தை பின் வரிசையில் தூங்கிக் கொண்டே இருந்தவர், திடீரென்று பஸ் நின்று போன கலவரத்தில் விழித்தார். விழித்துச் சுற்றிலும் ஒரு தடவை பார்த்து வீறிட்டதைக் கேட்டுக் கலவரமடைந்து மறுபடியும் எழுந்து உட்கார்ந்தார். சுற்றிலும் ஏதோ விபத்து நடந்திருக்கிறது என்பது அவருக்குக் கொஞ்சம்கொஞ்சமாகப் புரியத் தொடங்கியது.

தாய் அதிகமாகக் கலவரமடையவில்லை. தங்கையின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த வர்கள் அவள் வீறிட்டதைப் பார்த்து அவள் தோள்களைக் கெட்டியாகப் பிடிப் பதற்கு முயற்சி செய்தார்கள். அவளது வயிற்றில் கலக்கம் ஏற்பட்டது போல் இருந்தது. தங்கைக்குப் பைத்தியம் மறுபடியும் பிடித்துக் கொண்டது என்று அவர் களுக்குத் தோன்றியது. இல்லாவிட்டால் அவள் ஏன் அப்படி அவ்வளவு அசிங்கமாக வீறிட்டாள்?

வேண்டுமென்றே முயற்சி செய்து இவர்களையெல்லாம் விட்டுத் தப்பி முன் சீட்டில் போய் உட்கார்ந்திருந்த தம்பிக்கும் தங்கை வீறிட்டது கேட்கவில்லை. அவன் பக்கத்தில் அழுத்தமாக உட்கார்ந்திருந்த வாசனை அவனுக்கு அந்த விபத்தை மறக்கச் செய்து விட்டது. எத்தனையோ நாட்களுக்குப் பிறகு ஒரு பெண்ணின் உடம்பு அவன் உடம்பில் அவ்வளவு அழுத்தமாகத் தொட்டுக் கொண்டிருந்தது. இந்தத் தொடல்,

வாசனை இவை இரண்டின் அநுபவமும் ஒன்றில் ஒன்று கலந்து அவளுடைய ஸ்பரிசத்துக்கே மல்லிகையின் வாசனை இருந்ததோ என்று அவனுக்குத் தோன்றியது. அடுத்த கணமே தாய் பின் சீட்டிலிருந்து உற்றுப் பார்த்துக் கொண்டிருக் கலாம் என்ற பயம் ஏற்பட்டது. வேறு வழியில்லாமல் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து கொண்டான்.

பஸ் நின்ற இடத்திலேயே இருந்தது. டிரைவர் சலித்துப் போய் பீடியை வாயில் வைத்து, தீக்குச்சியைக் கிழித்து முகத்தை மேலே பார்த்தபடி குப்பென்று புகையை விட்டான். முன்பக்கத்துக் கதவருகில் நின்றிருந்த கண்டக்டர் இந்த விபத்தெல்லாம் ஒரு ரொட்டீன் என்பதைப் போல, ஒரு தடவை பஸ்ஸில் இருந்தவர்களை நோக்கிச் சிரித்தான்.

"பஸ்ஸைத் தண்ணியிலேயே விட்டுட்டு எங்களையெல்லாம் இங்கயே கை கழுவிடலாம்னு நினைச்சிட்டிருக்கயா," அருகில் உட்கார்ந்திருந்த முதிய விதவை ஒருத்தி கண்டக்டர் பக்கம் முகத்தைத் திருப்பி டிரைவர் பக்கம் கண்ணை ஒட்டி கோபித்துக் கொண்டாள். கையிலிருந்த மூட்டையை, அது ஒரு குழந்தை என்பதைப் போல அணைத்துப் பிடித்துக் கொண்டு அங்குமிங்கும் பார்த்தாள்; தான் தகராறு செய்வதை யாராவது ஆதரிக்கிறார்களா என்று. ஆனால் எல்லோரும் சும்மா இருந்ததைப் பார்த்து கடைசியில் தானே மேலும் பேசத் தொடங்கினாள்; "காசி யிலிருந்து ராமேசுவரம் வரை எல்லாத் தீர்த்த யாத்திரைகளையும் முடிச்சிட்டு வந்திருக்கேன். திருப்பதி மலைக்கு பஸ்ஸிலேயே ஏறியிருக்கறேன், பத்ரிக்கும் கூட பஸ்ஸிலேயே போய் வந்திருக்கேன். அனால் இப்படியொரு அநியாயம் எங்கேயும் பார்க்கலையம்மா. இந்த பிரைவேட் பஸ் சர்வீஸ்களின் தலையெழுத்தே இவ்வளவு தான். ஜட்கா ஒட்டும் ஆள்களையெல்லாம் பஸ் ஒட்டறதுக்குப் போடறாங்க."

அப்படியே தான் சொன்னதை நிரூபிப்பதைப் போல அவள் மூட்டையிலிருந்த ஜபமாலையை எடுத்து உருட்டத் தொடங்கினாள். அவளுக்குப் பதில் சொல்வ தென்பதோ முடியாது; அவளுடைய பேச்சு முடியும் வரை கூட கண்டக்டர் அங்கே நிற்கவில்லை. எப்போதோ தொலைவாகப் போய்விட்டான். டிரைவருக்குப் பின்னால் இருந்த சீட்டில் உட்கார்ந்திருந்த கருத்த வியாபாரி ஒருவன் உரத்த குரலில் இருமத் தொடங்கினான்

கடைசி முயற்சியாக, கண்டக்டர் கீழே இறங்கி, பஸ்ஸில் இருந்தவர்களின் துணை யோடு அதைத் தள்ளிக் கரைக்குக் கொண்டு வருவதற்கு முயற்சி செய்தார். சேற்றில் புதைந்திருந்த சக்கரங்கள் வெளிவந்தன. நுரைநுரையாகத் தண்ணீர் சக்கரத்தை ஒட்டிப் பெருகுவதைத் தங்கை ஜன்னல் வழியே பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். தண்ணீரில் மிதந்தபடி புறப்பட்ட பஸ் சுழலின் நடுவில் சிக்கி பம்பரத்தைப் போல விறுவிறு என்று சுற்றியதைப் போல அவளுக்குத் தோன்றியது.

பஸ்ஸைக் கரையில் ஏற்றியபிறகு, கண்டக்டரை ஒட்டி எல்லோரும் ஒவ்வொரு வராக பஸ்ஸில் ஏறுவதற்கு நெடு நேரம் ஆகிவிட்டது. பஸ் வேகமாக தொடர்ந்து சென்றது.

"நீங்க எவ்வளவோ தீர்த்த யாத்திரையை முடிச்சிட்டு வந்திருக்கீங்க. ரொம்ப புண்ணியம் செஞ்சிருக்கணும் நீங்க. இப்ப மந்திராயலயத்துக்குத்தான் கௌம்பிட் டிங்களா?" ஜபமாலையை உருட்டுவதில் மூழ்கி இருந்த அந்தக் கிழ விதவையைப் பார்த்தபடி ஆச்சரியத்தோடு கேட்டாள் அந்தப் பெண்மணி. அவள் முகத்தில் களை இல்லை. நெற்றியில் மிகவும் பெரியதாகக் குங்குமம் இருந்தது. அவளுக்கு ஏதோ

நோயாக இருக்க வேண்டும். உடம்பு வற்றி கையின் மேல் நரம்புகளெல்லாம் திரண்டு நின்றிருக்கின்றன. கண்கள் ஆழ்ந்து, கீழே கரிய வட்டம் படிந்திருக்கிறது. அவளுடைய உடம்போடு உடம்பை ஒட்டி பலவீனமான இரண்டு பையன்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

விதவை சொன்னாள்: "ரெண்டு வருஷமா வீட்டுப்பக்கமே போகலை. தீர்த்த யாத்திரையிலேயே இருக்கறேன். ஆனா போய்ப் பார்க்க வேண்டியது இன்னும் ஏராளமாக இருக்கிறது. நீங்கள் என்ன இப்ப..."

அதற்குள், நடுரோட்டில் தடையில்லாமல் போய்க் கொண்டிருந்த எருமையை ஓரத்தில் விரட்டுவதற்காக டிரைவர் விடாமல் ஹார்ன் அடித்ததால், ஹாரனின் அந்த ஓசையில் அவளுடைய வார்த்தைகள் எல்லாம் மூழ்கிப் போயின. ஹார்ன் ஓசை நின்ற போது அந்தப் பெண்மணி விதவைக்குச் சொல்லிக் கொண்டிருந்தாள்: "பெரிய பெரிய டாக்டர்களுக்கெல்லாம் காட்டியாச்சு. பத்தியம் இருந்து பார்த்தாச்சு. கோயில் குளம் எல்லாம் சுத்தியாச்சு. ஒன்னும் பிரயோசனமில்லை. யாரோ புண்ணியவான்கள் சொன்னாங்க. மந்திராலயத்திற்குப்போய் ராயருக்குச் சேவை செய்ங்க. நிச்சயம் குணம் ஆகும்ன்னாங்க.* அதனால மந்திரா லயத்துக்குப் புறப்பட்டிருக்கிறேன். என்ன குறையுமோ, என்ன கதையோ? வேறொரு பயமும் இல்லை எனக்கு. ஆனால் பாவம், இவ்வளவு சின்னப் பையன்கள்! நாளைக்கு நான் போயிட்டா இந்தப் பையன்களின் கதி என்ன?" தாயும் அந்த இரண்டு பையன்களைப் பார்த்தாள். தாயின் கையைப் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அந்தப் பையன்கள் இரண்டு பேரும் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தவர்கள் போலத் தாயைப் பார்த்தார்கள்.

"நம்பிக்கையோட இருங்கம்மா. ராயர் மிகப் பெரிய மகிமை உடையவர். எல்லாம் நல்லதா நடக்கும். இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளை நானே நேரில் பார்த்திருக்கேன்" யார் இப்படிச் சொன்னது என்பதைப் பார்ப்பதற்காக அந்தப் பெண்மணி திரும்பினாள். நடுத்தர வயதுடைய ஒரு சுமங்கலி இருந்தாள். அவள் கழுத்து நிறைய மஞ்சள் பூசியிருந்தது. அவளுடைய சிறிய மூக்கின் அழகைப் பார்க்கும்போது மூக்குத்தி மிகப் பெரியதாக இருந்தது. அவள் அந்தப் பெண்மணியைப் பார்த்துச் சிரித்தாள். இவள் என்ன பேசுவது என்று மனத்தில் நினைத்துப் பார்ப்பதற்குள் அந்தச் சுமங்கலியே பேசத் தொடங்கினாள்:

"மந்திராலயம் பெரிய புண்ணிய க்ஷேத்திரம், அம்மா. எப்படிப்பட்ட அற்புதங்களெல்லாமோ இங்கே நடந்திருக்குது! மடத்தில், ராயருக்குக் கற்பூர ஆரத்தி ஆன பிறகு பக்தர்களுக்குக் கற்பூரத்தைக் காட்டுவதற்காக ஒரு பையன் இருக்கிறான். அவனை நீங்கள் அங்கே போன பிறகு பார்க்கத்தான் போகிறீர்கள். அந்தப் பையன் வருடங்களுக்கு முன்னால இங்க வந்தப்போ அவனால நாக்கைப் புரட்டக்கூட முடியாது. பிறவி ஊமை. ஆனால் இப்ப சேவை செய்து, குழறிக் குழறிப் பேசறான். ஒன்றா, இரண்டா, இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளை நான் கண்ணாரக் கண்டிருக்கேன். ஒரு மாசத்துக்கு முன்னால் ஒரு அற்புதம் நடந்தது. மூளை கலங்கி இருக்கிறது என்று ஒரு ஆளைப் பூசைக்கென்று அழைச் சிட்டு வந்தாங்க. அந்த ஆள் தினமும் ராயருக்கு முன்னால் பொல பொலவென்று கண்ணீர் பொழிந்தபடி

---

*மந்திராலயத்தில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளின் சமாதி இருக்கிறது. சுவாமிகளை 'ராயர்' என்று குறிப்பிடுவர். அங்கே தங்கியிருந்து வழிபாடு செய்வதை 'சேவை' என்பர்

நின்னுடுவான். ஒரு நாள் என்ன தோன்றியதோ என்னவோ, யாருக்குத் தெரியும். ராத்திரி ஆற்றுக்குப் போனான். உயிரைக் கொடுப்பதற்காகவும் இருக்கலாம். தண்ணீரில் இறங்கிக் கொண்டிருந்த போது அவனை யாரோ அழைத்தது போல் இருந்தது. திரும்பிப் பார்த்தான். தேஜஸ் நிரம்பிய ஆசாரியார் நின்றிருந்தார். "குளியல் முடிந்தது, சுத்தமாகிவிட்டாய். மேலே வா இனி" என்று அவனை மேலே அழைத்துச் சொன்னார். "இதோ, இந்தக் கோபிசந்தனத்தை இட்டுக் கொள். உள்ளே அனுமாரைத் தரிசித்து விட்டு வீட்டுக்குப் போ" மந்திரவயப்பட்டவடன் போல மேலே வந்து கோபி சந்தனத்தை வாங்கிக் கொண்டு அவன் கோவில் பக்கம் போனான். அவனுக்கு அப்போது ஒன்றுமே தோணலை. யாரோ ஒரு ஆசாரியராக இருக்கணும்ன்னு நெனைச்சான். ஆனால முன்னால் போனவன் தற்செயலாகப் பின்னால் திரும்பிப் பார்த்தான். அவர் அங்க இல்லை. அதுவும் அப்போது அவனுடைய மனத்திற்கு எட்டலை. நடுராத்திரியில் நேராகக் கோவில் மதிலில் நுழைந்து அனுமார் தரிசனத்தை முடிச்சிட்டு ராயரின் பிருந்தாவனத்தைத் தரிசிக்கப் போனவன் அங்கயே நினைவு இழந்து வாயிற்படியருகில் விழுந்துட்டான். அவனுக்கு விழிப்பு வந்தபோது விடிஞ்சிட்டுது. மடத்துப் பூசாரிகளெல்லாம் ஆச்சரியத்தில் நின்னுட்டாங்க. ஏனென்றால் ராத்திரி பத்து மணிக்குக் கோவில் கதவுகளையெல்லாம் பத்திரமாகச் சாத்திப் பூட்டுப் போடுவாங்க. உள்ள போக வேற வழியே இல்ல. பார்த்தா கதவுகளெல்லாம் பத்திரமாக இருந்தபடியே இருக்கு. அவனக் கேட்டா அவனால எதுவுமே சொல்லற நிலையில இல்ல. அடுத்த மூன்று நான்கு நாட்கள் விடாப்பிடியாக ராத்திரியில் கண்ட அந்த ஆசாரியரை அவன் ஊரெல்லாம் தேடி அலைந்தான். அவர் எங்கே இருக்கிறார்? ராயரே பிரத்தியட்சமாகிப் பலன் கொடுத்து விட்டுப் போயிருந்தார். அந்த ஆள் இப்போது எல்லாவற்றையும் விட்டு விட்டுத் தொண்டனாக இருக்கிறான்.

மந்திராலயமும் நெருங்கியது. பஸ்ஸின் ஜன்னல் வழியே வெளியே பார்த்தால் பக்கத்திலேயே துங்கபத்திரா நதி மௌனமாகக் கிளைகிளையாகப் பாய்வது தெரிந்தது. சுண்ணாம்பு பூசிய மடத்தின் பெரும் சுவர்கள் நகர்ந்து அருகில் வருவது போல் தோன்றியது.

நோயாளிப் பெண்மணியின் முகம் கொஞ்சமாக மலர்ந்தது. நடுங்கும் குரலில் அவள் சொன்னாள்: "அப்படியானா எனக்கும் குறையுமா? யார் தாயே நீங்க? இவ்வளவெல்லாம் கண்ணாரக் கண்டிருக்கீங்க. நீங்களும் இங்க சேவை செய்ய வந்திருக்கிறீர்களா?"

சுமங்கலி சிரித்தாள், காரணமில்லாமல். அப்படியே கீழே வைத்திருந்த பையைக் கையில் எடுத்தபடி சொன்னாள்: "நான் வெளியூர்அல்ல. இங்கே இருக்கிறவள் தான். எங்கள் வீட்டுக்காரர் இங்கேயே வைதீகம் செய்கிறார். நீங்க இங்கே வருவது இது தான் முதல் தடவைன்னு நெனைக்கிறேன். அதோ,வந்து விட்டது மந்திராலயம். நீங்கள் அங்கே இங்கே இறங்க வேண்டாம். மடத்துச் சத்திரத்திலேயே தங்குங்க. வேற இடத்துக்குப் போனால் வீணாகப் பணத்தை அழவேண்டியிருக்கும்." பஸ் டக்கென்று நகர்ந்தது. எழ முயன்ற அந்த சுமங்கலி மறுபடியும் சீட்டிலேயே உட்கார்ந்தாள். "போய் வரேன் அம்மா! நான் உங்களை ஆற்றங் கரையில் சந்திக்கிறேன்"

---

சுமங்கலிகளுக்கு வெற்றிலை, பாக்கு, மஞ்சள் முதலியவற்றை முறத்தில் வைத்து மற்றொரு முறத்தால் மூடிக் கொடுப்பது

"மரத பாகிண"* கொடுக்கறதா இருந்தா எனக்கே கொடுத் துடுங்க. வேற யாருக்கும் தர வேண்டாம். என் பெயர் கலாவதி. இங்கே எல்லாரும் என்னைக் கல்லம்மா என்பார்கள். வேறு யாராவது கேட்ட, கல்லம்மாவுக்குக் கொடுக்கிறேன்னு சொல்லி விடுங்க." அந்தப் பெண்மணிக்கு யோசிப்பதற்கும் வாய்ப்புக் கொடுக்காமல் கல்லம்மா அவளிடமிருந்து வாக்குத்தானம் பெற்றுக் கொண்டு விட்டாள்.

வெளியே ஆற்று நீர், சிறு பையன்கள் வெய்யிலில் பிடித்துக் கொண்டு நின்ற கண்ணாடித் துண்டுகளைப் போலப் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தது. பிரயாணத்தில் களைத்துப் போயிருந்த ஜனங்களின்சோர்ந்த முகங்கள் வெளிக் காட்சிக்காக ஆசைப்பட்டு ஜன்னல் அருகில் கூடின. பஸ் நிலையத்தை அடையும் போது தம்பி மல்லிகை வாசனையின் தப்பு வழியில் கடந்த கால வாழ்க்கையின் நினைவுகள் என்னும் பெருங்காட்டில் காணாமல் போயிருந்தான். தங்கை சக்க ரத்தின் கீழ் நுரை நுரையாக மேலேறி வந்து கொண்டிருந்த தண்ணீரை நினைத்து தடதடவென்று நடுங்கிக் கொண்டிருந்தாள். தாயும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ஏதும் எண்ணாமல் உட்கார்ந்திருந்தாள். தந்தை இன்னும் அரைத் தூக்கத்தில் ஆடிக் கொண்டிருந்தார்.

***

விடிவதற்கு இன்னும் ஒரு நாழிகை இருந்தாலும் ஜனங்கள் ஆற்றங்கரையில் நிறைந்திருக்கிறாகள். அப்படிப் பார்த்தால் கருக்கலிலேயே குளியல் முடிந்து சேவை தொடங்கியிருக்க வேண்டும்.

பாறைகளின் மீது யோசனைகளோடு நடந்து அந்த நான்கு பேரும் நீரை நெருங்கினார்கள். தந்தைக்கு உண்மையிலேயே மிகுந்த கோபம் வந்திருந்தது. இந்தக் குளிரில் போய் ஆற்றில் முழுக்குப் போட்டு ஊருக்கு முன்னால் சாமியிடம்போய் நிற்க வேண்டும் என்று எங்கே வேண்டியிருக்கிறது. வெயில் ஏறிய பிறகு குளித்து விட்டுப் போனால் போதாதா? எழுந்த உடனே சத்திரத்திலேயே தம்பிக்குத் திட்ட வட்டமாகச் சொல்லிவிட்டார்: "நீங்கள் எல்லாம் முன்னால் போங்கள். நான் அப்புறம் வருகிறேன்" என்று. இது தாயின் காதில் விழுந்தது. அது தாய்க்குச் சரிப்பட வில்லை என்பது அவளுடைய முகத்தைப் பார்த்த பொழுதே தெரிந்தது. "எப்பவும் இவர் இப்படித்தான். இங்கேயும் எனக்காக வந்தது போலச் செய்றார். மகள் நோய் சரியாக வேண்டுமென்று..." இன்னும் என்ன சொல்வதாக இருந்தாளோ, அதற்குள் தங்கை ஓடி வந்ததனால் பேச்சு பாதியில் நின்று விட்டது.

"ஓ, ராயரே, அந்தப் பக்கம் போகாதீங்க. தண்ணீரில் இழுப்பு அதிகம் அங்கே. கொஞ்சம் இந்தப் பக்கம் வாங்க. ஆமாம், அப்புறம் அங்கேயும் நீந்தாதீங்க. தண்ணீரில் எல்லா இடத்திலும் பாறைகள் மூழ்கி இருக்கின்றன" அப்படி அடித்துச் சொல்கிறவர் யார் என்பது தந்தைக்குத் தெரியவில்லை. யாருக்கு அவர் சொன்னார் என்பதும் புரியவில்லை. ஆற்றின் கரையில் ஒரு சந்தைக் கூட்டமே நிரம்பி இருக்கிறது. இரைச்சலில் ஒருவர் பேச்சு இன்னொருவருக்கு சாதாரணமாகக் கேட்கவில்லை. தங்கையின் குளியலை முடித்துத் தாயார் வரும் வரையில் அவர் அங்கேயே பாறையின் மீது உட்கார்ந்தார். "கொஞ்சம் வழிவிட்டு உட்காருப்பா. பெண்களும் குழந்தைகளும் போய் வரும் வழி இது. மடியான பெண்கள் போகும் வழியில் இப்படி உட்கார்ந்துட்டா..." தந்தை திரும்பிப் பார்த்தார். அதே பெண்மணி. இன்னும் அதே போல வில்லைப் போல் வளைந்து நடக்கிறாள். இத்தனை

ஆண்டுகளாகியும் எந்த மாறுதலும் இல்லை. அப்போதிருந்ததை விடக் கொஞ்சம் தளர்ந்து கருத்திருக்கிறாள். அவ்வளவுதான். கையில் சொம்பு இருக்கிறது. சொம்பு கீழே விழுந்து நெளிந்திருந்தது. ஒருவேளை அதே சொம்பாக இருக்க வேண்டும்—பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பே...அப்போது தம்பி ஹைஸ் கூலுக்குப் போய்க் கொண்டிருந்தான். தங்கை அப்போது தான் பள்ளிக்கூடத்தை விட்டிருந்தாள். மனைவி சண்டை போட்டுக் கொண்டு பிறந்த வீட்டுக்குப் போயிருந்ததால், இரண்டு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு மந்திராலயத்துக்கு வந்திருந்தார். அப்போது அவர் வந்திருந்தது முக்கியமாக ரயில் பாஸ் இருந்ததால். அதேபோல் குழந்தைகளுக்கும் ஆசை இருந்தது. ஆனால் மனைவி திரும்பி வரவேண்டும் என்று வேண்டிக் கொள் வதற்காக மட்டும்நிச்சயமாக அவர் வரவில்லை. அவள் சுபாவமே அப்படித் தான். அவர் அவளுக்கு எதிலும் எந்தக் குறையும் வைக்கவில்லை ஆனாலும் எப்படி எப்படியோ சாமர்த்தியமாகப் பணம் சேர்த்து நூறு ரூபாய் வரை கள்ளத்தனமாக முடிந்து வைத்திருந்தாள். ஊருக்குப் போகும்போது புடவைக்குள் மறைத்து வைத்துப் பெட்டியில் இட்டுப் புறப்பட்டாள். இது அப்போது அவருக்குத் தெரியவந்தது. அப்படிக் கணவனிடமிருந்து மறைத்துப் பணம் கொண்டு போவது நல்லதில்லை என்று சொன்னதற்கு அவள் கோபம் கொண்டு தாய் வீட்டுக்குப் போயிருந்தாள்.

...அப்போது அவர் மந்திராலயத்துக்கு வந்திருந்தார்.

அந்தக் கூனல் பெண்மணி அன்றிலிருந்து இங்கேயே இருக்கிறாள். தங்கை அவளை அப்போது பார்த்ததும் பயம் நிறைந்த வெறுப்புடன் அவளிடமிருந்து விலகித் தூரப் போய் நின்றிருந்தாள். தம்பி அவள் கையில் எப்போதும் இருக்கும் செம்பைப் பார்த்து அவளுககு 'செம்புக் கூனல் கிழவி' என்று அழைத்துக் கொண்டிருந்தான்.

.. தங்கைக்கோ இப்போது அதை நினைவு வைத்திருப்பது முடியாது.

...ஆனால் தம்பியும் அதை மறந்து விட்டான் என்றால்..

தம்பிக்கு நினைவு படுத்தலாம் என்று தந்தை சுற்றுமுற்றும் பார்த்தார். ஆனால் தம்பி எங்கே இருந்தான்? அநதப பக்கம் நீலமான ஆகாயம். இந்தப் பக்கம் தாறு மாறாக விழுந்து கிடந்த பாறைகள். தம்பியை எங்கேயும் காணோம். தூரத்தில் இன்னொரு பாறையின் மறைவில் பெண்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். பாறையின் மேல் துணிகைளப் பரப்பி விடடிருந்தார்கள், உலர்வதற்காக.

தந்தை மறுபடியும் மறுபடியும் சுற்றிலும் உற்றுப் பார்த்தார். ஆனால் தம்பி எங்கேயும் தட்டுப்படவில்லை. தம்பியினிடத்தில் அவருக்கு அளவில்லாத கருணை தோன்றியது. இரக்கம் ஏற்பட்டது. அவனை அழைத்து கற்களில் உட்கார்த்தி, முதுகைத் தடவி மீண்டும் மீண்டும் இன்புற வேண்டும் என்று அவருக்குத் தோன் றியது. அவன் வயதில் தமக்குத் திருமணம்கூட ஆகியிருக்க வில்லை. ஆனால் தம்பி இப்போது மனைவியை இழந்துவிட்டு வருந்திக் கொண்டிருக்கிறான்.

தந்தைக்கு தம்பியின் மனைவி நினைவிற்கு வந்தாள். தாங்கள் இருந்த ஸ்டேஷன் நினைவுக்கு வந்தது. ரயில் தண்ட வாளங்கள் மனத்தில் தெரிந்தன. கொஞ்ச நாள் முன்னால் தான் தன் கண்முன்னாலேயே வளர்ந்த பெண், மனைவியாகி, இப்போது கதையாகிப்போய் விட்டாள். சாவின் பொருள் கூடப் புரியாத இளவயதில் அவள் செத்துப் போனாள். செத்த அன்றே மீண்டும் அவளை யாராவது எழுப்பியிருந்தால் கண்ணைத் தேய்த்துக் கொண்டே நேராக அவள் வீட்டுக்கு நடந்து வந்து விட்டிருக்கலாம்.

படிப்படியாகத் தந்தைக்குத் தெரிய வந்தது, வெயிலில் தம் தலை காய்ந்து கொண்டிருக்கிறது என்பது. கீழே வைத்திருந்த ஈர வேட்டியைத் தலையின் மேல் வைத்துக் கொண்டார். கருத்த பெரிய பெரிய பாறைகள் இரும்புத் துண்டுகளைப் போலக் கிடக்கின்றன. ஆற்றிலிருந்து மடத்துக்குப்போகும் வழியும் அந்தப் பாறை களின் மேலேயே பரவியிருக்கிறது. பாதை முடியும் இடத்தில் உயரமான அழகான சுவர் இருக்கிறது. சுவரைத் தாண்டியதும் மடம் வரும். சுவருக்கெல்லாம் சுண்ணாம்பு அடித்து, பட்டையாகக் காவி பூசியிருக்கிறார்கள்.

தாயும் தங்கையும் குளித்து முடித்து ஈரத் துணியோடு கரைக்கு வந்து கொண்டிருந் தார்கள். தாய்க்கு அப்படி வருவது வெட்கமாக இருந்தது போலத் தெரிந்தது. தண்ணீரிலிருந்து 'டக்'கென்று எழுந்து வெளியே வருவது மனத்துக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது. துணி உடம்போடு 'டப்'பென்று ஒட்டிக் கொண்டிருக்கும். தான் வயதான பெண்மணி. தனக்கு இன்னும் வெட்கமாக இருக்கிறது. ஆனால் தங்கைக்கு இதைப் பற்றித் தெரிவதெங்கே? குளித்து விட்டு, குளிய லறையிலிருந்து சிறு குழந்தைகளைப்போல தடதடவென்று கரைக்கு ஓடுகிறாள்.

ஆற்றங்கரையில் கூச்சல் வரவரக் குறையத் தொடங்கியது. ஜனங்களெல்லாம் அவசரமாக மடத்துப் பக்கம் போகத் தயாரானார்கள். உலாவதற்காகப் பாறை களின் மீது போட்டிருந்த துணிகளெல்லாம் படிப்படியாக மறையத் தொடங்கின

அங்கேயே துணி துவைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த கோமுட்டிப் பெண் மணி சொன்னாள்: "மெதுவா வாம்மா. கல் பாசி பிடிச்சிருக்கும் கால் வழுக்கப் போறது. முந்தா நாள் நான் இவ்வளவு சொன்னதற்கு ஒர் அம்மா எப்படிச் கோபிச சிட்டா தெரியுமா? நான் என்ன கெட்டதா சொன்னேன்? கடைசியில் நான் சொன்னது போலவே ஆயிற்று. கோபத்தோடு முன்னால நடந்தபோது அந்த அம்மாள் வழுக்கி விழுந்து தன் காலை முறிச்சிகிட்டா."

தாய்க்கும் மிகவும் கோபம் வந்தது. மற்றவர்களைப் பற்றிய கவலையை விட்டு விட்டு உன் வேலையை முடித்துக் கொண்டு போ என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது. ஆனால் காலையில் எழுந்து இல்லாத வழக்கை வளர்த்துக் கொள்வதில் அர்த்தமில்லை என்று சும்மாயிருந்தாள். மெல்ல மெல்லக் காலிட்டுத் தங்கையை மேலே ஏற்றி, ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள்.

தங்கையும் இங்கே வந்தது முதல் மிகவும் அமைதியாக இருக்கிறாள். முகத்தில் ஒரு களை வந்திருக்கிறது. எப்போதும் ஏதோ ஒரு கவலையில் மூழ்கி வெறி பிடித்த வளைப் போல் இருப்பாள். ஸ்டேஷனில் இருந்த போது எவ்வளவு கலாட்டா செய்தாள். வண்டியின் சத்தம்கேட்டதும் ரயில் தண்ட வாளத்தை நோக்கி மறுபடியும் மறுபடியும் கண்ணை மூடி ஓடிக் கொண்டிருந்தாள். அப்போது அவளைப் பிடித்து வைப்பதே எல்லாருக்கும் ஒரு பெரிய வேலையாய் இருந்தது. தண்டவாளத்தின் மேல் எப்போதும் ரயில் வராது என்றாலும்கூட, தண்டவாளத்தைத் தாண்டி அந்தச் சரிவில் இறங்கினால் தீர்ந்தது, அங்கே பாழும் கிணறு இருக்கிறது.

தாய் புடவை உடுத்திக் கொண்டே ஒரு தடவை எல்லாப் பக்கமும் பார்வையைச் செலுத்தினாள், தன் பக்கம் யாராவது பார்த்துக் கொண்டிருக்கிறார்களா என்று. அதே நேரத்தில் காற்றின் வேகம் அதிகமாயிற்று. கையில் கெட்டியாகப் பிடித்திருந்த முந்தானையில் காற்று நிரம்பி, படகின் பாய்மரத் துணியைப் போல் உப்பி, படபடத்தது. அவள் திடீரென்று பயந்தாள். புடவையை எல்லாம் மொத்தமாக அணைத்துப் பிடித்தாள். ஆனால் தங்கை உட்கார்ந்திருந்த இடத்தில் இன்னும்

யாராவது இருந்திருந்தால் அவர்களுக்கு அவளுடைய காலின் பின்பகுதி கெட்டியாக வெண்மையாக சதைப்பற்று உடையதாகக் கண்ணில் பட்டிருக்கும்.

தூரத்தில் தந்தை யாரோ இருவருடன் பேசிக் கொண்டிருந்தார். கையை ஆட்டி ஏதோ சொல்வதைப் போல இருந்தது யாருடைய முகமும் அங்கே இருந்து தெளிவாகத் தெரியவில்லை. தாய்க்குத் திடீரென்று நினைவு வந்தது. சுற்றுமுற்றும் பார்த்தாள்; தங்கை இதுவரை உங்கே உட்கார்ந்திருந்தாள். இதற்குள்எங்கே போனாள்?

உண்மையிலேயே தந்தைக்கு அவரை எங்கேயும் பார்த்த நினைவு இல்லை. அவர் கறுப்பாகக் குள்ளமாக இருந்தார். ஐம்பத்தைந்தைத் தாண்டியிருக்கலாம். சிரிக்கும் போது அவருடைய தேயாத பல் ஒளிவீசியது. பெரும்பாலும்அவை அவருடையதாக இருக்காது. அவரோடு கூடவந்த இன்னொருவரை அவருக்குத் தெரியவே தெரியாது. அந்தக் கறுப்புக் கிழவர் சொன்னார்: "உங்களை அடையாளமே முதலில் தெரியலை எனக்கு. இப்போது எவ்வளவு மாறியிருக்கீங்க" தந்தைக்கு அவர்கள் பேச்சின் போக்கே மர்மமாய் இருந்தது. அடையாளம் தெரியவில்லை என்ற சொல்லிக் கொண்டே அடையாளம் கண்டு பேசிக் கொண்டிருக்கிறாய். நான் எங்கே மாறியிருக்கிறேன்? வாழ்க்கை எல்லாம் கழிந்தாலும் நான் அப்படியே இருக்கிறேன். எந்த மாறுதலும் ஏற்படவில்லை. இனிமேல் ஏதாவது மாற வேண்டும். என் அடையாளத்தை நானே மறக்க வேண்டும் எல்லாரையும் மறப்பிக்க வேண்டும்...யாரும் அடையாளம் கண்டுபிடிக்க முடியாத இடத்தைத் தேடிக் கொண்டு தான் ஒருவனே தூரம் போக வேண்டும்... தந்தை அப்படியே பேசாமல் மௌனமாய் இருப்பதைப் பார்த்துக் கிழவர் கெட்டியாகச் சொன்னார்,

"நீங்க முன்னால ஒரு தடவை ஷோலாப்பூரில் குட்ஸ் கிளார்க்காக இருந்தப்போ நான் அங்க சிக்னலரா வந்திருக்கேன். முப்பது வருஷத்துக்கு முன்னால இருக்கும். சமீபத்தில் தான் தக்காரியில் ஸ்டேஷன் மாஸ்டராக இருந்து ரிடையரானேன். இப்ப நீங்க ரொம்ப தளர்ந்திருக்கீங்க.

"வயதாகிக் கொண்டே வருது. மனிதன் அப்படியே எப்படி இருக்க முடியும்? எனக்கும் இப்போது உங்களைக் கொஞ்சம் அடையாளம் தெரியுது போலிருக்கிறது. நீங்களும் இப்போது அன்று இருந்ததைப் போலில்லை."

தந்தைக்கு இன்னும் அடையாளம் தெரியவில்லை. தெரிவதாகவும் இல்லை. உபசாரத்திற்காகச் சொன்னார். அவ்வளவு தான்.

கிழவர் கேட்டார்: "இப்போது நீங்கள் தனியாக வந்திருக்கிறீர்களா? அல்லது..."

"எல்லாரும் சேர்ந்து வந்திருக்கிறோம். மகளுக்கு உடம்பு சரியில்லை. ராயரின் தரிசனத்துக்கென்று..."

"ஏன்? என்ன ஆயிற்று?"

"அப்படி ஒன்றும் விசேஷமாக இல்லை. ஏதோ நடுநடுவே ஞாபகமறதி வந்தவளைப் போல் நடந்து கொள்ளுகிறாள். அவ்வளவுதான்."

தாய் தண்ணீரை நோக்கி ஓடிக்கொண்டிருந்த தங்கையைப் பிடித்துக் கொண்டு வந்து, செயலிழந்து, தந்தையின் பாதையை நோக்கியபடி நின்றிருந்தாள்.

"ஆகட்டும் மறுபடியும் பார்ப்போம். உற்சவம் வரையில் இருப்பீங்களா? சீக்கிரம் சேவையை முடிச்சிட்டு புறப்பட்டுடுவீங்களா?"

"ராயர் எப்படிச் செய்றாரோ பார்க்கணும். இருக்கணுமின்னுதான் நினைச்சிட்டிருக்கேன். அது நடக்கணும். அவ்வளவுதான்."

மடத்தின் மணி ஓசை கேட்டது. ஆற்றங்கரையின் மேலெல்லாம் மஞ்சள், குங்குமம்,

கோபி, சந்தனம் ஆகியவற்றின் மணம் பரவியிருக்கிறது. தந்தை புறப்பட்டுப் போன பிறகு அந்தக் கறுப்புக் கிழவர், கூட இருந்தவரிடம் சொன்னார்:

"ஒரு லட்சம் சமாச்சாரம் அப்பா, இது. குட்ஸ் மாஸ்ட்டரா ரிடையர் ஆனார். ரொம்பப் பணம் சேர்த்துட்டான். அதனால என்ன? வெறும் பணம் சுகத்தைக் கொண்டு வந்து கொட்டுமா? இவருடையமனைவி ராட்சசியைப் போல இருப்பா. ரெண்டு பேரும் கடைசி வரையில் ஒத்துமையா இருந்ததே இல்ல. அவருடைய இஷ்டத்துக்கு விரோதமாக பிறந்த வீட்டிலிருந்து ஒரு பெண்ணைக் கொண்டு வந்து மகனுக்குக் கல்யாணம் செய்து வச்சா. அவனால அந்தப் பெண்ணையும் நல்ல விதமாக வச்சிக்க முடியலை. இந்தத் தொல்லை தாளமுடியாமல் அந்தப் பெண் ரயிலின் கீழே விழுந்து உயிரை விட்டா. சமீபத்தில் நடந்த கதை இது. அப்புறம் மூன்று மாதங்கள் ஆவதற்குள் இவளுக்குப் பைத்தியம் பிடித்தது. மருமகள்தான் வந்து பிடிச்சிட்டிருக்கான்னு பேசிக்கறாங்க ஞாபகமறதி அது இது என்பதெல்லாம் பொய். அந்தப் பெண்ணுக்கு பைத்தியமே பிடிச்சிருக்கிறது."

தந்தையின் தலைமேல் ஈரவேட்டி இருக்கிறது. தாய் புடவையை மேலே தூக்கிக் கட்டியிருக்கிறாள். ஈரமாயிருந்த கூந்தலை அடிக்கடி ஆற்றிக் கொண்டிருந்தாள். தங்கை அகலமாகக் காலிட்டு ஒடுபவர்களைப் போல நடந்து கொண்டிருந்தாள். மடத்தின் மணி ஒசை கேட்டுக் கொண்டிருந்தது.

***

தந்தை உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து வடக்குப் பக்கத்து வெள்ளைச சுவர் தெரிந்தது. சுவரின் உள் ஜன்னல் வடிவில் ஒருசிறிய கதவு இருக்கிறது. ஆற்றில் குளித்து விட்டு ஒவ்வொருவராக அந்தக் கதவு வழியாக உள்ளே வருகிறார்கள். கதவுக்கு வெளியே பெரிய வேப்ப மரம் இருக்கிறது. சின்ன வயதில் அவர் கேள்விப் பட்டதுண்டு. அந்த வேப்ப மரத்தில் பிரம்ம ராட்சசர்கள் இருப்பதாக. சுவரைக் கடந்து வந்து அந்த மரத்தின் கிளையைப் பார்த்துக் கொண்டே தந்தை உட்கார்ந் திருந்தார். ஒரு தடவை ராத்திரியில் பக்தன் ஒருவன் அந்தக் கதவுக்கு வெளியே வந்த போது பிரம்ம ராட்சசன் அவனைப் பிடித்துக் கொண்டான். பயந்தாலும், தைரியத் தோடு அந்த பக்தன் ராயருடைய ஸ்தோத்திரங்களைச் சொல்லத் தொடங்கியதும் அந்தப் பிரம்ம ராட்சசன் விட்டுவிட்டானாம்.

எதிரில் தாயும் தங்கையும் தெரிந்தார்கள். இரண்டு பேரும் பிரதட்சிணம் செய்து கொண்டிருந்தார்கள். தங்கையின் நெற்றியில் மணல் ஒட்டியிருந்தது. கண் இமைகள் ஈரமாய் இருந்தன. தாய் மெல்ல நடந்து கொண்டிருந்தாள். அவர்களைப் பார்த்த போது தந்தைக்கு என்றைக்கும் இல்லாத விசித்திர உணர்வு ஏற்பட்டது. அவர்கள் இருவரும் முன்பின் அறிமுகம் இல்லாதவர்களாக அந்த வட்டத்தில் இரண்டு துளிகளாக அவருக்குத் தோன்றியது. யார் அவர்கள்? இத்தனை நாள் நாங்கள் சேர்ந்து இராமல் இருந்தால் அவர்கள் இருவருக்கும் எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்று நாள் சொல்லியிருக்க முடியுமோ? இத்தனை நாட்கள் நாங்கள் ஏன் சேர்ந்து வாழ்ந்தோம்? எப்படிச் சேர்ந்து இருந்தோம்? தந்தைக்கு எந்தக் கேள்விக்கும் பதில் தெரியவில்லை.

மடத்தில் சாப்பாட்டுக்கு ரொம்ப நேரம் ஆகும். சாப்பாட்டு வேளை நெருங்க நெருங்கக் கூட்டம் பெருகும். தந்தைக்கு இப்போதே பசியாக இருக்கிறது. எப்போதுமே அவரால் பசியைத் தாங்கிக் கொள்ள முடியாது. பசி ஏற்பட்டால் மனம்

சூடேறிவிடும். பிறகு எதுவும் தெரிவதில்லை. மருமகள் செத்த போதும் இப்படியே ஆயிற்று. தனக்கு விரோதமாக யாரோ புகார் கொடுத்தார்கள் என்று அன்றைக்குத் திடீரென்று ஸ்டேஷன் இன்ஸ்பெக்ஷன் வந்திருந்தது. அவசரத்தில் சாப்பிட்ட தாகப் பேர் பண்ணிவிட்டு அவர் கூட்ஸ் ஷெட்டிற்கு ஓடினார். அப்புறம் ராத்திரி சாப்பிட உட்காரும் நேரத்துக்கு இதெல்லாம் நடந்தது. பயங்கரமான சாவு இவ்வளவு சகஜமாக மருமகளைத் தூக்கிக் கொண்டு போகும் என்பது கற்பனைக்கும் எட்டாத விஷயம். மருமகள் அரிவாள் மனையில் வெங்காயத்தை அரிந்து கொண்டு உட்கார்ந் திருந்தாள். எதிரில் அடுப்பின் மேல் இருந்த பால் பொங்கி வருவதைப் பற்றிக் கூடக் கவலைப் படாமல் அவள் உட்கார்ந்திருந்ததற்காகத் தாய் திட்டினாள். ஓடி ஓடி மாலை எக்ஸ்பரஸின் தடதட ஓசையில் கண் இமைப்பதற்குள் காணாமல் போய் விட்டாள். எல்லாக் கலாட்டாவும் முடிந்து வீடு திரும்புவதற்குள் இரவு நாலு மணி ஆகிவிட்டது. அன்றைக்கும் அவருக்கு இதே போல பசியாக இருந்தது

தந்தைக்குத் தம்பியைப் பார்த்து ஆச்சரியமாக இருந்தது. திடீரென்று எப்போதி லிருந்து அவனுக்குத் தெய்வத்திடம் பக்தி ஏற்பட்டது என்று தெரியவில்லை. மனைவியின் மரணம் அவனுக்குத் தெய்வத்திடம் நம்பிக்கையை உண்டாக்கி இருக்குமோ? தம்பி கண்ணை மூடிப் பக்தியோடு பிரதட்சிணம் செய்து கொண்டிருக் கிறான். பூர்த்தியாகாத எந்த ஆசை நிறைவேறுவதற்காக அவன் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பான்?

பிரதட்சிணம் செய்து செய்து தம்பிக்கு அலுத்துவிட்டது இதற்குள் காலும் வலிக கிறது மனைவி இருந்தால இப்போது அவள் திட்டியிருப்பாள் "ஊரில் இருந்தால் ஊரெல்லாம் அவிழ்த்து விட்ட கழுதை மாதிரி திரிந்து விட்டு வருவீர்கள் கோவில் பிரட்சிணம் என்றால் கால் நோகிறதா உங்களுக்கு? தெய்வத்தின் சேவையில் இப்படி அலுத்துக் கொள்ளக் கூடாது" இந்த நினைவு வந்ததும் அவனுக்கு மறுபடியும் பிரதட்சிணம் செய்யத் தொடங்க வேண்டும் என்று தோன்றியது அவனுக்குச் சொந்தமாக என்றைக்குமே தெய்வத்திடம நம்பிக்கை இல்லை. இப்போதும் இல்லை. ஆனாலும் இப்போது பிரதட்சிணம் செய்து கொண்டிருக்கிறான். இதனால் அவளுக்குச் சந்தோஷம் ஏற்படும் என்றா? இருந்தபோது அவளைச் சுகமாக வைத்துக் கொள்வதற்கு முயற்சி செய்ய வேண்டும் என்பது கூட அவனுடைய கவனத் துக்கு வந்ததில்லை. இப்போது அவளுக்கு எதனால் சந்தோஷம் ஏற்படும்? வாழ்ந்த போது அவளுடைய ஒரு சின்ன ஆசையைக் கூட நிறைவேற்ற முடியவில்லை. கல்யாணம் ஆன புதிதில் ஒரு தடவை மந்திராலயத்துக்குப் போய் வர வேண்டும் என்னும் ஆசை அவள் மனத்தில் நிறைய இருந்தது. தாய்தான் அதற்குத் தடை போட்டாள். "இப்ப அவளுக்கென்ன வயசாயிடுச்சி? இன்றைக்கு இல்லாட்டாலும் நாளைக்குப் போகத்தான் போறா. கல்யாணச் செலவே நிறைய ஆகி இருக்குது. இன்னும் புதிய செலவு வேறயா?" அது நின்றது நின்றே போயிற்று. அவ னென்னவோ மந்திராலயம் பார்க்கவில்லை. இப்போது அவள் செத்து ஆறு மாதம் கூட ஆகவில்லை, எல்லாரும் மந்திராலயத்துக்கு வந்திருக்கிறார்கள்.

நடக்கும்போது தம்பியின் வேட்டி காலில் சிக்கியது. தடுக்கி விழ இருந்தவன் பக்கத்திலிருந்த சுற்றுச் சுவரை பிடித்துக் கொண்டு நின்றான். தூரத்தில் தாய் யாருடனேயோ பேசிக் கொண்டிருந்தது போலத் தெரிந்தது. பிரதட்சிணத்தைப் பாதியில் நிறுத்தி அம்மா ஏதோ சைகை செய்து அவர்களுக்குச் சொல்லிக் கொண் டிருக்கிறாள். அவள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாள் என்பது தம்பிக்கு

நிச்சயமாகத் தெரிந்தது. மனைவிக்குத் துர்மரணம் ஏற்பட்டது என்றும் அவள் பிசாசாகித் தங்கையைப் பிடித்து ஆட்டுகிறாள் என்றும் எல்லாரிடமும் சொல்லிக் கொண்டு திரிகிறாள். "இருந்த போது மருமகளுக்கு எவ்வளவோ செய்திருந்தும் எனக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொடுத்துப் போய் விட்டாள்" என்று எல்லா ரிடமும் முறையிட்டு அழுகிறாள்.

தாயின் அலாதியான சுபாவத்தினால் வீட்டில் எல்லாருக்குமே கசப்பு. தந்தை இல்லற வாழ்க்கைக்கு என்றைக்கோ விடை கொடுத்து விட்டார் என்பது தம்பிக்கு வயது வந்த பிறகு தெரிந்தது. முதலில் இருந்தே அம்மாவின் நடத்தை விசித்திரமாக இருந்தது. தந்தை அதிகமாகச் சாப்பிட்டாலும் சந்தேகப்படுவாள், சாப்பிடா விட்டாலும் சந்தேகப்படுவாள். அதுவும் அவர் தவறிப் போய் பெண்களிடம் சிரித்துப் பேசினாரோ அவ்வளவுதான். அப்போது அம்மாவின் அவதாரம் பார்க்க முடியாது. இதெல்லாம் தம்பி வளர்ந்து பெரியவனான பிறகு தெரியத் தொடங்கியது ஏதாவது அம்மாவின் எண்ணத்துக்கு விரோதமாக நடந்தால் தீர்ந்தது: உடனே மார்பில் அடித்துக் கொள்வாள். வாயைத் திறந்தாலே கோபம், வசை, சண்டை, வெறுப்பு. தான் சிறுவனாக இருந்த போது ஏதோ அற்ப காரணத்துக்காகத் தந்தை யிடம் சண்டை போட்டுக் கொண்டு பகலெல்லாம் கணமப்பன் கோவில் திண்ணை மேல் உட்கார்ந்திருந்துவிட்டு, சாயங்காலமானதும் வீட்டுக்கு வந்தாள். இன்னொரு தடவை வேறொரு காரணத்துக்காக செத்துப் போகிறேன் என்று சொல்லிக் கிணற்றுச் சுவரின் மேல் உட்கார்ந்திருந்துவிட்டு வந்தாள்.

அம்மாவின் வாயில் சாவு அன்றாடப் பேச்சு. கோபம் வந்தால் செத்துப் போகிறேன் என்று புறப்பட்டுப் போய், கோபம் இறங்கியவுடனே வீட்டுக்குத் திரும்புவாள்.

தம்பிக்கு இப்போது மிகவும் கால் வலிக்கத் தொடங்கியது. மிகவும் களைப்பாய் இருந்தது. பிரதட்சிணம் செய்து அலுத்து விட்டது. வெயில் ஏறி காலில் ஒட்டிய மணல் காய்ந்து போயிற்று. தனக்குத் தாகமாக இருப்பதாக இப்போது அவனுக்குத் தோன் றியது. ஆற்றிலிருந்து நிரப்பிக் கொண்டு வந்திருந்த செம்பை நினைத்துக் கொண்டு மேடைப்பக்கம் போனான்.

தம்பி உட்கார்ந்திருந்த அந்த மேடையிலிருந்து ராயரின் பிருந்தாவனம் தெரிந்தது. கீழே கம்பத்தில் சாய்ந்து கொண்டு நல்ல சிவப்பு நிறத்தில் பட்டாடை உடுத்திக் கொண்டு ஒரு கிழவர் உட்கார்ந்திருக்கிறார். அவருடைய உடம்பில் ஒரு பாதி அசை வில்லாமல் நின்று விட்டதைப் போல் இருக்கிறது. அவருடைய தோளைப் பிடித்துக் கொண்டு பக்கத்தில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண்மணி அவர் மனைவியாக இருக்க வேண்டும். அவர்களுக்குப் பக்கத்தில் இரண்டு பெண்கள் மல்லிகை தொடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். ஒருத்தி நெற்றி பாழாகி இருக்கிறது. உடம்பில் ஒரு துளி அலங்காரம் இல்லை. சுத்தமான வெள்ளைப் புடவை உடுத்தியிருக்கிறாள். இன்னொருத்தியின் நெற்றியில் குங்குமம் இருக்கிறது. அவளுக்கு இன்னும் கல் யாணம் ஆகவில்லை. தம்பியின் பார்வை அவள் பக்கம் அதிகமாகப் போகவில்லை.

பாழும் நெற்றிக்காரியையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். எவ்வளவோ நேரத்திற்குப் பிறகு அவனுடைய கவனத்துக்கு வந்தது, தான் ஏன் அவளையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும் என்று தோன்றியது என்பது. பக்க வாட்டில் பார்த்தால் அவள் அச்சாகத் தன் மனைவியைப் போலவே

தோற்றமளித்தார்கள். எவ்வளவு நேரமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் சிரிக்கும் விதம்கூட முற்றிலும் அப்படியே இருக்கிறது. பிறகு இவன் பார்த்துக் கொண்டிருந்தது அவள் கவனத்துக்கு வந்து அவள் அந்தப் பக்கம் முகத்தைத் திருப்பினாள். தம்பி திடீரென்று நடுங்கி அப்படியும் இப்படியும் திரும்பிப் பார்த்துக் கடைசியில் அருகில் இருந்த அரசமரத்தின் கீழ் தன் பார்வையை மாற்ற முயற்சி செய்தான்.

அவனுடைய உடம்பு ஜிவ்வென்று இருந்தது எவ்வளவு நேரமாக அவள் அங்கே நின்றிருந்தாளோ யாருக்குத் தெரியும். உணர்ச்சி இல்லை என்று பிரமை ஏற்படுத்தும் ஆடாத பார்வையில் தாய் அவனைப் பார்த்தபடி நின்றிருந்தாள். தம்பிக்கு அச்சம் ஏற்பட்டது. அவன் நினைத்தான். அம்மா என்றால் ஏன் அவ்வளவு பயம் ஏற்பட வேண்டும்? அந்தப் பெண்ணைத் தான் பார்த்தால என்ன தப்பு? அம்மா எந்த ஆணையும் பார்ப்பதே இல்லையா? ஆனால..ஆனால்? அம்மாவைப் பார்த்தால் நாங்கள் எல்லாரும் ஏன் பயப்படுகிறோம்? அப்பா கூடப் பயப்படுகிறார். தஙகையே அம்மாவின் பயத்தில் சுருஙகிப போய் வளராமல் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து போய்க் கொண்டிருந்தாள். தனக்கும் அம்மா என்றால் பயம்தான் ஆனால் இந்த அச்சத்துக்குக் கொஞ்சமும் கலங்காத ஒரே ஒரு உயிர் நாலு நாள் வாழ்ந்து விட்டுப் போய்விட்டது. தம்பிக்குத தன் மனைவியின் மீது அன்பு தோன்றியது அம்மாவின் தொல்லையினால் அவள் அலுத்துப் போனாள் அழுதாள் வாழ்ந்தவரை எல்லா வற்றையும் ஊமையாகச் சகித்துக் கொண்டாள். ஆனால் அவள் அம்மாவிடம் என்றைககுமே அஞ்சியதில்லை கல்யாணம் ஆன புதிதில் அம்மாவுககுத் தெரியாமல் நண்பன் வீட்டுககு போய வருகிறோம் என்று பொய சொல்லி அவர்கள் இருவரும் சர்க்கஸுக்குப் போயிருநதார்கள். மறுநாளே அது எப்படியோ அம்மாவுக்குத் தெரிந்து விடடது. கோபத்தில் வெறிபிடித்தது போல ஆனாள் தங்கையை விட்டு விட்டுப் போவதற்கு இந்த ஆட்டம் ஆடினீர்கள் என்று கத்தி அடம் பிடித்து அன்றைக்கே பக்கத்துவீட்டுப் பெண்ணைத் துணையாக்கித் தங்கையைச் சர்க் கஸுக்கு அனுப்பி வைததாள். இவ்வளவு ரகளை நடந்தாலும் மனைவி கவலைப் படாமல் அமைதியாகத் தன் பாட்டுக்குத்தான் இருநதாள். மற்றொரு தடவை அம்மா விடம் சொல்லாமல் கொள்ளாமல் தாங்கள் இருவரும் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொண்டு வந்தபோது அம்மாவின் ஆவேசத்துக்கு அளவே இருக்கவில்லை. பேச்சுக்குப் பேச்சு வளர்ந்து அம்மா எல்லாரையும் வாய்க்கு வந்தபடி திட்டித் தான் கிணற்றில் விழுவேன் என்று புறப்பட்டபோது அதே அளவு கோபத்தில் மனைவி தைரியமாகச் சொன்னாள்: "போய் விழுங்க, தைரியம் இருக்குதா பார்க்கலாம்? சாகப் போறவங்க தண்டோராப் போட்டுட்டு சாவாங்களா என்ன?" கடைசியில் அவள் தன் பேச்சை நிரூபித்து விட்டுப் போனாள், அல்லது அந்தப் பேச்சை நிரூபிப்பதற் காகவே அவள் அன்றைக்கு அப்படி ஓடினாளோ...அம்மாவின் கையில் சாவு சிரிக்கத் தகுந்த மணல் கயிறாக இருந்தது. வாழ்ந்திருக்கும் போதெல்லாம் சாவின் அமைதியும் கிடைக்கவில்லை. இருக்கும்போது சாவு, சாவு என்று அடித்துக் கொள்ளும் அம்மா சாகும்போது வாழ்வதற்காக ஆசைப்படுவாள்.

தம்பி இருந்த இடத்திலேயே கணக்குப் போட்டுப் பார்க்கத் தொடங்கினான். ஸ்டேஷனில் தங்கள் வீட்டிலிருந்து ரயில் தண்டவாளம் வரை ஓடுவதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும். அன்று அவள் ஓடுவதற்கும் வண்டி வருவதற்கும் வேளை எப்படி

ஒத்துப் போயிற்று. அம்மா திட்டிய போது அவள் கண்ணில் நீர் நிறைந்திருக்க வேண்டும். கண்பார்வை மறைந்து அன்றைக்கு ஏன் வழி தப்பவில்லை? பகல் நேரத்திலே கூட தண்டவாளத்தைத் தாண்டும் போதுதான் சிக்னல் கம்பியில் எத்தனை தடவை தடுக்கி விழுந்தாள். அந்தக் கம்பி அன்றைக்கு அவளுடைய வேகத்தை ஏன் தடுக்கவில்லை? இருட்டு என்றாலே பயப்படுகிறவள் அன்று தான் ஒருத்தியே போவதற்கு எப்படித் தைரியம் வந்தது...? எந்தக் கேள்விக்கும் பதில் இல்லை. ஆனால் எல்லாமே நடந்து போய் விட்டது.

மனைவியின் நினைவினால் தம்பிக்குக் கலக்கம் உண்டாயிற்று. ஆனால் அழுகை வரவில்லை. எரிந்து போன மனைவியின் சிதையில் அவன் அழுகை சாம்பலாகிப் போனதுபோல் இருந்தது. தந்தை தாய் இவர்களில் யாருக்கும் பரஸ்பரம் சம்பந்தமே இல்லை. கட்டாயத்துக்காக ஒருவர் மற்றொருவரை நம்பி, சார்ந்து ஒன்றாக இருக்கிறோம். அவனுக்குச் சர்க்கஸில் ஆகாயத்தில் தொங்குகிற ஊஞ்சலிலிருந்து இன்னொரு ஊஞ்சலுக்குப் பாய்கிற ஆட்டக்காரர்கள் நினைவிற்கு வந்தார்கள். அதைப் போலவே தாங்களும் ஒருவரையொருவர் நம்பிக் கொண்டிருப்பது அவசியமானது. ஒருவர் வாழ்க்கை மற்றொருவர் மேலே, அப்படியே எல்லார் வாழ்க்கையும் ஒருவர்மேல் ஒட்டியிருந்தது. இந்தச் சூட்சுமத்தைத் தெரிந்து கொள்ளாமல் ஒரு கணம் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்று விரும்பிய மனைவி அடிதவறிக் கீழே விழுந்து விட்டாள். இப்போது தங்கை ஆடிக் கொண்டிருக்கிறாள் அவளும் கைவிட்டு விட்டால் ஒவ்வொருவராக எல்லாரும் தரையில் விழுந்து விடுவோம். ஆனால் தங்கைக்குத் தெரியவே தெரியாது. எல்லாருடைய வாழ்க்கைக் கயிறும் இப்படித் தன் கையிலேயே இருக்கிறது. நாளைக்கு அவள் மறுபடியும் முன்னால் இருந்ததைப் போல் ஆனால், எல்லாரும் தம்தம் வழியிலே போய் விடுவார்கள் தந்தை இன்னும் ரொம்ப நாளைக்கு வீட்டை நம்பி இருக்கப் போவதில்லை. தனக்கும் தான் வீட்டில் என்ன கவர்ச்சி இருக்கிறது. அவளுடைய நோய் குறையாமல் இருப்பதில்தான் வீட்டின் மானமே இருக்கிறது. அவளுக்குக் குறைந்தால் அது நொறுங்கி நூறாகிப் போகும், எல்லாரும் சிதறிப் போவார்கள்.

வெயிலின் கொடுமை அதிகமாயிற்று உடம்பில் வியர்வை வடிகிறது. பசியின் களைப்பில் தம்பிக்குத் தூக்கம் வருவதைப் போல் இருந்தது. ஆனால் உண்மையில் தூக்கம் வரவில்லை. உட்கார்ந்திருந்தவன் அப்படியே சுவரில் தலையைச் சாய்த்தான். பக்கத்தில் இருந்தவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்: "ராயரே, நீங்கள் என்னதான் சொல்லுங்க, மடத்தின் பழைய பெருமை இப்ப இல்ல. மடத்தின் கவுரவம் வரவரக் குறைஞ்சிட்டே போறது."

"இதென்ன சுவாமி, இப்படிச் சொல்றீங்க நீங்க? நம் தெய்வத்தின் மகிமை இப்போது எல்லா இடத்திலும் பரவியிருக்குது. எல்லாப் பகுதிகளிலிருந்தும் வெவ்வேறு மொழி பேசுற பக்தர்கள் பெரும் கூட்டமாக வந்துட்டிருக்காங்க"

"ராயருடைய மகிமையைப் பற்றிச் சொல்லலை நான். மடத்துப் பெருமையைப் பற்றிச் சொன்னேன். சுவாமிகள் இங்கே இருந்தபோது ஒரு வேளை நீங்க வந்ததில்லை போல. அந்த மகாநுபாவர் போட்ட சந்தர்ப்பணை எப்படிப்பட்டது! மாசக் கணக்கா மடத்தில் சாப்பிட்டாலும் யாருக்கும் அதைப் பற்றி பேசும் தைரியம் இருந்ததில்லை அப்போது. இப்போது, நாலு நாள் சாப்பிட்டா, பரிமாறுகிறவங்க கூட உங்கள உறுத்துப் பார்க்கத் ஆரம்பிச்சிடறான். அப்ப சாப்பாடு எவ்வளவு ருசியா இருக்கும் தெரியுமா? ராயர் மடத்துச் சாம்பார்னா எங்கள் பக்கத்தில் அதைத் தவிர

வேறு பேச்சே இல்லை. காலையில் சாப்பிட்டுட்டுப் போனா சாயங்காலம் வரை அந்த வாசனை போகாது. இப்ப அந்தக் கணக்குப்படி பார்த்தால் மடத்தின் நிர்வாகம் கெட்டுப் போய் இருக்கிறது. முக்கியமாகச் சாம்பார் முதலில் இருந்ததைப் போல நன்றாக இல்லை."

"அப்படியானால் ராயரின் மகிமைக்கும் சாப்பாட்டுக்கும் என்ன சம்பந்தம், சுவாமி?"

"நான் சொல்வது உங்களுக்கு அவ்வளவு சரியாகப் புரியலை போலிருக்குது. ஜனங்கள் ஒரு மடத்தின் தகுதியை முடிவு செய்வது அந்த மடத்தில் போடப்படும் சாப்பாட்டை வைத்துத்தான். உடுப்பியில் கிருஷ்ணன் சந்நிதியில் இரண்டு வேளையும் சாப்பாடு உண்டாம். எவ்வளவு புண்ணியம் செஞ்சவங்க அவுங்க. முக்கியமாகக் கலிகாலம் வந்துட்டுது. எல்லா இடத்திலும் சாப்பாடு போடுவது குறைஞ்சிட்டுது."

கற்பூர ஆரத்தியின் ஒசை எல்லாரையும் அடித்து எழுப்பியது. தம்பி அங்கேயே எழுந்து நின்றான். தூரத்தில் தந்தை ஒடிவந்து கூட்டத்தில் கலந்து கொண்டது அவனுக்கு அங்கிருந்து தெரிந்தது. ஆச்சாரியரின் மந்திரகோஷம் கோவிலில் எதிரொலிக்கிறது. கற்பூர ஆரத்தியின் போது கணக்கில்லாத ஜோதிகளின் வெளிச்சத்தில் கண் 'டக்'கென்று பனி படர்ந்தது போலாகி அந்த ஒளியின் வீச்சில் தம்பியின் உடம்பு வேர்த்துக் கொட்டியது. மனைவியின் சிதை அருகில் நின்ற போதும் காற்றின் வேகத்துக்கு இப்படித்தான் உடம்பில் ஏற்பட்டது. ஆரத்தியின் திரிகளெல்லாம் சுட்டுத் தீய்ந்து போன வாசனை வந்தது. நெருப்பில் தர்ப்பை, நெய், சாதம் ஆகியவற்றைப் போட்டால் இதே போல் வாசனை வரும். தம்பி கண்ணை விரித்துப் பிருந்தாவனத்தின் எதிரில் வட்ட வடிவில் அசைகிற சோதிகளைச் சலனமில்லாமல் உற்றுப் பார்த்தான். சேகண்டிகள் கரகர ஒசையை எழுப்பின.

ஜனங்கள் உள்ளே போனார்கள். தள்ளினார்கள். பிருந்தாவனத்தின் மேல் கடல் போல் சாய்ந்தார்கள். தம்பி சலனமில்லாமல் அப்படியே நினறிருந்தான்.

கற்பூர ஆரத்தி சமயத்தில் பெண்கள் கூட்டத்தில் தாய் மாட்டிக் கொண்டிருந்தாள். சொல்ல முடியாத கூட்டம். இந்த நெருக்கலில் யாரோ காலை மிதித்தார்கள். வைசியப் பெண்ணொருத்தி சட்டென்று பாய்ந்து அவளைத் தொட்டு விட்டாள். இதுவரையில் மடியாகி இருந்து தீர்த்தம் பெற்றுக் கொள்ளும் வேளையில் அப்படி இல்லாமல் போவது என்ன தலையெழுத்து? தலையோடு தலை மோதியது. தாய் கழுத்து முறியும் அளவுக்குத் தலையை நிமிர்த்தினாள். ஆனால் ராயரின் தரிசனம் கிடைக்க வில்லை. கருத்த தலைகள் கண்ணெதிரில் வந்து கண்ணை இருட்டாக்கிவிட்டன. மணியின் ஒசை கேட்டது. தூரத்திலிருந்தே மங்கலாக வெளிச்சம் நுழைவது போலத் தோன்றியது. ஆனால் பிருந்தாவனமே கண்ணில் படவில்லை.

இந்தக் கலாட்டாவில் தங்கை எப்போதோ தாயின் கையை உதறிவிட்டுப் போய் விட்டிருந்தாள். வெளியே வேப்ப மரத்தின் கீழ் கும்பல் கும்பலாக விழுந்த உலர்ந்த இலைகளைக் கலைத்து எறிந்து கொண்டே உட்கார்ந்து விட்டாள். கொஞ்சம் கூடக் கருணை இல்லாத மேகம் வெயிலின் கடுமையில் உலர்ந்து போய் விட்டது. இதைச் சலனமில்லாமல் பார்த்துக் கொண்டே உட்கார்ந் திருந்தாள். எதிரில் சூடேறியிருந்த பாறைகளின் நடுவே அந்த வழிநேராக ஆற்றுக்குப் போனது. காற்று ஆடாமல், வெயிலில் காய்ந்த ஆறும் சூடேறி இருந்தது. தங்கை சட்டென்று எழுந்தாள். அருகில் விழுந்திருந்த உலர்ந்த வாழைப்பழத் தோல்களையும் எடுத்துக் கொண்டு கொஞ்ச தூரத்தில் நிழலில் படுத்திருந்த நாய்க்குத் தின்னக் கொடுப்பதற்காகப் போனாள்.

நாயும் அந்த வாசனையைப் பார்த்துத் தும்மி, அங்கிருந்து புறப்பட்டுப் போய் விட்டது. அப்போது தங்கைக்குத் திடீரென்று தோன்றியது போலிருந்தது—தனக்கும் பசியாய் இருக்கிறது என்று. தோலை எடுத்துத் தான் தின்ன வேண்டும் என்று முடிவுக்கு வருவதற்குள் மறந்து விட்டாள்.

தங்கைக்கு இப்போதெல்லாம் எதுவும் நினைவில் இருப்ப தில்லை. ஒரே நேரத்தில் இரண்டு உலகங்களில் சஞ்சரிப்பது போல அவளுக்குத் தோன்றியது. சுற்றிலும் உள்ள உண்மையான உலகத்தின் நடவடிக்கைகள் ஒரு தடவை அலுப்பூட்டின என்றால் மற்றொரு தடவை விகாரமாகத் தோன்றின. இந்த உலகத்திலிருந்து இன்னொரு உலகத்துக்குத்தான் மிதந்து போய்க் கடைசியில் நட்ட நடுவில தான் படபடவென்று துடிப்பதைப் போலப் பயங்கரக் கற்பனை வந்து கொண்டிருந்தது. கும்மிருட்டில் விளக்கைத் தொங்கவிட்டது போலக் கண்ணெதிரில் இருட்டு பரவியது அதில் ஒளியின் தூவல்கள் பலவடிவம் பெற்று வரிசையாகக் கூடி முங்கிய படியே மாயமாய்க் கொண்டிருந்தன. ஆயிரம் நிகழ்ச்சிகள் ஆயிரம் முகங்கள் தள்ளுவதில் தட்டுத் தடுமாறி விழுந்து, தொடர்பில்லாமல் நிறைந்து அவளைக் கிறங்க வைத்தன. அப்படி திடீரென்று என்று முதல் ஆயிற்று, ஏன் ஆயிற்று என்பது அவளுக்குத் தெரியாது. சிந்திக்கும் செயல் அவளுடைய வசத்தில் இல்லை. கண்ணெதிரில் நடப்ப தெல்லாம் மனத் திரையில் வருவதெல்லாம், சிறு பிள்ளைகள் சினிமாப் பார்க்க உட்கார்ந்து விட்டதைப் போல—பொருள் தெரியாவிட்டாலும், சுரணை இல்லாத வளைப் போலப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்து விடுவாள்

மன்னி செத்தபோது அம்மா அப்பா அண்ணன் எலலாரும் அழுதார்கள். அது நினைவிற்கு வந்தால் அவளுக்கு இப்போதும் சிரிப்பு வருகிறது பெரியவர்கள் அழுவது இவ்வளவு விசித்திரமாக இருக்கும் என்பது அவள் அனுபவத்துக்கு வந்தது அதுவே முதல் தடவை. தாய்க்குக் குரல் எழும்பாமல் பெருமூச்சு விடடுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அப்பாவின் குரல் அழுவதற்குப் பொருந்தாது. அப்படி அழு தாலும் முகம் மிகவும் கோரமாகக் காட்சியளிக்கும். அன்று அப்பாவிடம் அழ வேண்டாம் என்று தெளிவாகச் சொல்லி விடவேண்டும் என்று தோன்றியது. ஆனால் துண்டு துண்டாக விழுந்திருந்த மன்னியின் உடம்புக்குப் பக்கத்தில் போவ தற்குத் தைரியம் வரவில்லை. கார்டின் கை விளக்கு ஒளியில் மன்னியைச் சின்னா பின்னப்படுத்திய இஞ்சினின் பெரிய சக்கரம் மிஞ்சியிருந்தது. சாக வேண்டிய சகாயமற்ற அந்த நேரத்தில் மன்னிக்கு வேகமாகச் சுற்றும் அந்தச் சக்கரத்தை அணைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆசை ஏற்பட்டிருக்க வேண்டும்.

கம்பிகளின் மேல் நட்ட நடுவில் வேகமாகச் செல்லும் பெரிய சக்கரம் தங்கையின் கண்ணெதிரில் வந்தது. தான் பார்த்த சர்க்கஸ் நினைவுக்கு வந்தது. அந்த ஒற்றைச் சக்கர சைக்கிளை ஓட்டும் அந்தப் பெண் கொஞ்சம் பேலன்ஸ் தவறினால் கம்பியி லிருந்து சரிந்து நிலத்தில் விழுந்திருப்பாள். பல நிறங்களின் வெளிச்சத்தில் பாண்டு வாத்தியத்தின் துணையில் தாளத்துக்குத் தகுந்தவாறு குதிரைகள் சக்கர வட்டமாக-அக்கறையில்லாமல் சலிப்பும் இல்லாமல்-சுற்றிக் கொண்டிருந்தன. சர்க்கஸில் சிங் கத்தைப் பார்த்தபோது தங்கைக்குப் பயம் ஏற்படவில்லை. ஆட்டத் தின் காரணமாக அதற்குக் கொடுத்த சித்திரவதையினால் சிங்கம் மிகவும் கோபம் கொண்டிருந்தது; சவுக்கடியால் தடுமாறி, கூண்டின் பக்கம் செல்லப் புறப்பட்டது. மறுபடியும் திரும்பிப் பார்வையாளர்களின் நடுவே வந்தபோது மட்டும் அவள் பயந்து சில்லிட்டுப் போனாள்.

இப்படி நிகழ்ச்சிகள் எல்லாம் இஷ்டப்படி நிரம்பி, கண்ணா மூச்சி ஆட்டத்தில் பையன்கள் பொது இடத்தில் நின்று தொடுவதற்குக் கூப்பிட்டது போல—நான்கு பக்கத்திலிருந்தும் அவளை அழைத்தன! மடம் தூரத்தில் பின்னால் இருந்தது. மந்திரித்த விபூதியைக் கொடுத்துவிட்டுப் புறப்பட்ட சந்நியாசியைப் பின்தொடர் வதைப் போலத் தங்கையும் நிகழ்ச்சிகளைப் பின் தொடர்ந்து புறப்பட்டாள். பாதிவழி தாண்டி வந்து ஆற்றின் அருகில் வந்திருந்தாள். கற்பாறைகள் தோசைக் கல்லைப் போலச் சூடேறி இருந்தன. தங்கை அதில் கால் வைக்க முடியாமல் தக்க தை என்ற குதித்து, கொல்லென்று சிரித்தாள். ஆனால் கால் சுடுவதைச் சகித்துக் கொள்ள முடியாமல் வாய் திறந்து சிறு குழந்தைகளைப போல ஓவென்று அழத் தொடங்கினாள். தான் மேலே எங்கே போக வேண்டும் என்பது அவளுக்குத் தெரியவில்லை. எதிரில் ஆறு குறுக்காக நின்றிருந்தது. பின்னால் தொலைவில் மடத்தின் சுவர்கள் அடக்கமாக உயர்வாக நின்று சிறைச்சாலைச் சுவர்களைப் போலத் தோன்றி அவளைப் பின்னால போக விடவில்லை இந்த இடைப்பட்ட நேரத்தில் தாறுமாறாக விழுநதிருந்த கற்கள் ஒன்று சேர்ந்து திடீரென்று அவள் மேல் ஏறி வந்ததைப் போல் இருந்தது. படபடவென்று வீறிட்டபடி நீரை நோக்கி ஓடினாள். பின்னால் நான்கு பக்கமும் கற்பாறைகள் கையைக் கட்டிக் கொண்டு அவளைத் தடுத்து நிற்கும் கோலத்தில் நின்றிருந்தன. அவற்றிலிருந்து விடுபட்டு முன்னால் போக வேண்டு மென்றால் தண்ணீர் தங்கை பயந்து போனாள். இரண்டு கை களாலும் கரையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வானத்தை நோக்கி நிமிர்த்திக் கத்த ஆரம்பித்தாள்.

மடத்தில் தீர்த்தப் பிரசாதம் நடந்து சாப்பாட்டுக்கு தயார் செய்து கொண் டிருந்தார்கள். பெண்களும் குழந்தைகளும் தங்களுக்கென்று இலை பிடித்து வைப்ப தற்காகப் பாய்ந்து கொண்டிருந்தார்கள். சாம்பார் வாசனை கம்மென்று மட மெல்லாம் பாய்ந்திருந்தது. வரிசைவரிசையாக இலைகளைப் போட்டிருந் தார்கள். இலையில் சாதம், பாயசம், சாம்பார், பூசணிக்காய் கறி பரிமாறி இருக்கிறார்கள்.

அப்பாவும் தம்பியும் ஆண்களின் பந்தியில் உட்கார்ந்திருந்தார்கள். அப்பா சந்தனைத்தைப் பூசிக் கொண்டார். இனி சாப்பாடு தொடங்குவதற்கு ஆசாரியர் 'கிருஷ்ணார்ப்பண மஸ்து' என் சொல்லுவது ஒன்றுதான் பாக்கி. அட்சதையை வைத்துக் கொள்வதற்காகத் தந்தை முகத்தை நிமிர்த்தினார். எதிரில் தாய் வந்து நின்றிருக்கிறாள். முகம் வெளுத்திருக்கிறது. பேச முடியாமல் ஒரேயடியாகத் தேம்பு கிறாள். மூச்சைப் பிடித்துத் தாய் மெல்லச் சொன்னாள்: "தங்கை மடத்தில இல்ல. எங்கயோ போய்ட்டிருக்கிறா."

தந்தை சாப்பாட்டைவிட்டு எழுந்தார். தம்பியும் தாயும் அவளைப் பின் தொடர்ந்தார்கள். எல்லாரும் ஓடிஓடி ஆற்றை அடைந்தார்கள். தங்கை பாறையில் தலையை மோதிக்கொண்டு அசைவில்லாமல் விழுந்து கிடந்தாள். வெயில் ரண மாக்கியது. காற்றுக்கும் மூச்சு நின்றிவிட்டிருந்தது. ஆனால் தங்கை இன்னும் மூச்சு விட்டுக் கொண்டிருந்தாள்.

***

"தங்கச்சி, கையை விடாதே! கெட்டியாகப் பிடிச்சிக்கோ. இந்தக் கும்பலில் எங்கயாவது தவறிப் போயிடுவே" மகளின் கையை இன்னும் கெட்டியாகப் பிடித்த படி தாய் சொன்னாள். தங்கையும் விழாவுக்கென்று கூடியிருந்த ஜனசமுத்திரத்தை

ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். மடத்தின் எதிரில் திறந்த வெளியில் வரிசையாகக் கடைகளைப் போட்டிருந்தார்கள். வாங்குவது ஒன்றும் இல்லா விட்டாலும் சும்மா ஏதாவது ஒரு கடை முன்னால் போய் நிற்க வேண்டும் என்று அவளுக்குத் தோன் றியது. தங்கை இன்று சுறுசுறுப்பாய் இருந்தாள். பழைய சோகம் குறைந்து உடம்பெல்லாம் அளவுக்கு மீறிய உற்சாகத்தில் துடித்தது. தந்தையும் தம்பியும் இவர்கள் பின்னால் நடந்து போனார்கள். தந்தைக்குத் தாங்கள் எல்லாம் புறப்பட்டுச் செல்லும் விதம் புதிதாக இருந்தது. கொஞ்சம் வெட்கமாகவும் இருந்தது. அவ்வளவு நெருக்கத்தில் ஒருவருக்கொருவர் உடம்பை உரசிக் கொண்டு முழுக் குடும்பத்துடன் தான் அப்படி வெளியே போவது மிகவும் அபூர்வம். ஒரு கணம் தந்தைக்கு அபிமானம் ஏற்பட்டது. திருப்தியாக இருந்தது. நாமெல்லாம் வாழ்க்கையில் இப்படியே சேர்ந்திருந்தால் நம் எல்லாருடைய வாழ்க்கையும் எப்படி இருந்திருக்கும் என்று கனவு கண்டு கொண்டே அவர் முன்னால் நடந்தார். தம்பி கூட்டத்தில் பின்னால் நின்று விட்டான். அவன் வரும் வரையில் நின்று அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தந்தை முன்னே போனார். ஆனால் மிகவும் அசதி ஏற்பட்டிருந்தது. கூட்டத்தில் சமநிலையில் நிற்கும் சக்தி இப்போது தன்னில் இல்லை என்பது அவருக்குப் புரிந்தது. ஏனென்றால் ஜனங்கள் வெள்ளத்தைப் போலப் பாய்ந்து வந்து அவரை முன்னுக்குத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். தாயின் முகம் கோபத்தாலோ, வெறுப்பாலோ கடுமையாக இருந்தது. கூட்டத்தில் ஜனங்கள் வந்து மேலே விழுவது அவளுக்குப் பிடிக்கவில்லை ஒட்டிக் கொண்டு மகளை அழைத்துக் கொண்டு எவ்வளவு ஒதுங்கி நடந் தாலும் ஜனங்கள் பாய்ந்து வந்தார்கள்.

வானத்தில் எல்லாம் மேகம் கவிந்திருந்தது. ஆயிரக்கணக் கான மக்கள் சாப்பிட்டு எழுந்த இலைகள் எடுப்பவர்கள் இல்லாமல் ஆற்றங்கரையின் வழியில் அப்படியே கிடந்தன. தேர்த் திருவிழாவைப் பார்ப்பதற்காக ஆசைப்பட்டு ஜனங்களெல்லாம் மடத்துப் பக்கத்தில் நெருங்கத் தொடங்கினார்கள்.

இந்த நான்கு பேரும் தள்ளப்பட்டுத் தள்ளப்பட்டு வழி செய்து கொண்டு எப்படியோ கோவிலின் பெரிய கதவுவரை வந்து சேர்ந்தார்கள். தம்பிக்கு இரண்டு நாட்களாக இந்தக் கூட்டத்தைப் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து கடைசியாக இப்போது சலிப்பு வந்து விட்டது. அடுத்திருப்பவர்களின் வியர்வை நாற்றம் வெறுப்பை உண்டாக்கியது. கதவின் பக்கத்துத் திண்ணை மேலிருந்து பார்த்தால் சுற்றிலும் வெறும் தலைகளே தம்பியின் கண்ணில் பட்டன. இந்தக் கோலாகலத்தில் கையை உதறிவிட்டு அப்பாவை அவர் பாட்டுக்கு இருக்க விட்டு வெளியே ஓடிப் போக வேண்டுமென்று தம்பிக்கு ஒரு வேகம் ஏற்படத் தொடங்கியது. முன்னால் போகப் போக, பிரகாரத்தில் இடம் சிறியதாகி வந்தது. இன்னும் கொஞ்சம் முன்னே போனால் நெருக்கடியில் சிக்கி, கூட்டத்தின் நெரிசலில் தான் நசுங்கிப் போய் விடக்கூடும் என்று அவனுக்கு அச்சம் ஏற்பட்டது. திரும்பிப் பார்த்தால், அங்கிருந்து பின்னால் இருந்த கடைகளின் வரிசை தெரிந்தது. ஜனங்களெல்லாம் கடைகளைத் தாண்டி வந்து இந்தக் கூட்டத்தில் சேர்ந்து கொண்டிருந்தார்கள். தம்பிக்கு இந்த விழாவில் எந்த ஆசையும் இல்லை. இப்போது அவனது மனைவி நினைவுக்கு வந்தாள். அவளுக்கு சாதாரண பண்டிகை, விரதம் என்றாலும் கூட ஒரே மகிழ்ச்சி. அந்த மகிழ்ச்சியில் அவளுக்கு எதுவும் கண்ணில் படாது. ஒரு தடவை நவ ராத்திரியில் வெங்கடேச தேவர் கோயிலுக்குப் போன போது கூட்டத்தில் ஒரு தோட்டை தவற விட்டு வந்திருந்தாள். அது அம்மாவின் பார்வைக்கு வர நேரம்

பிடிக்கவில்லை. இதன்விளைவாக அவள் உடம்பில் இருந்த நகைகளெல்லாம் மறைந்து விட்டன. ஆனால் அவள் கையில் இருந்த ஒரு மோதிரம் மட்டும் கடைசி வரை அவளிடமே இருந்தது. அவள் செத்த அன்று அம்மா ஒரேயடியாக மருமகளின் கையைப் பிடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்தாள். அவள் சிறுவிரலுக் கான மோதிரத்தைப் பெரிய விரலில் போட்டிருந்ததால் அது இறுகிப் போய் அம்மாவின் சாமர்த்தியத்தை எல்லாம் பயனற்றுப் போகச் செய்து கடைசியில் வேறு வழி யில்லாமல் அங்கிருந்தவர்கள் கண்ணெதிரே அந்த மோதிரத்தைப் பற்றி இழுத்து எடுத்தாள்.

மேகம் கவிந்த வானத்தில் சூரியனின் கிரணம் நுழைந்து வந்து விழுந்திருந்தது. அதன் ஒளியில் முதலிலேயே அழகாக நின்றிருந்த தேர் இன்னும் அதிகமாக மின்னியது. தேருக்கு முன்னால் தீவட்டிகள் எரிந்தன. சிவப்பு நிறத்துக் குடைக்குப் பச்சை நிறமாலை போட்டிருந்தார்கள்.

கூடியிருந்த ஆயிரம் ஆயிரம் குரல்கள் பூமி நடுங்கும் வகையில் ஜெய ஜெய்வென்று முழங்கின. தேர் உலாப்புறப்பட்டது. தேர் இழுக்கிற புண்ணியத்தைப் பெறுவ தற்காக ஜனங்கள் விழுவதையும் எழுவதையும் கூட லட்சியம் பண்ணாமல் சண்டை போட்டு ஒருவரையொருவர் பலமாகத் தள்ளித் தேர்ப் பக்கம் பாய்ந்தார்கள். மறு படியும் ஜெய ஜெய கோஷம்.

இதற்குள் தம்பியின் கை தந்தையின் கையிலிருந்து விடுதலை பெற்றிருந்தது. கூட்டம் திடீரென்று கலையத் தொடங்கியது. அந்தத் தள்ளல்களில் படிப்படியாகத் தந்தையும் மகனும் தூரத்தில் நகர்த்தப்பட்டு கடைசியில் ஒருவரையொருவர் பிரிந்து விட்டார்கள். தாயும் தங்கையும் எப்போதோ அந்தக் கட்டுக்கு அடங்காத மக்கள் வெள்ளத்தில் கலந்து விட்டிருந்தார்கள். தந்தை துணையில்லாத நிலையில தம்பியைத் தேடத் தொடங்கினார். ஆனால் தம்பியை மக்கள் வெள்ளத்தின் அலை தூக்கித் தூர எறிந்திருந்தது. தந்தை பயந்து போனார், அவருக்குக் கால் இற்றுப் போவது போல் இருந்தது. உடம்பின் மேல் இருந்த கட்டுப்பாடு தளர்ந்து தன்னைத் தானே முழு வதுமாக அந்த மக்கள் வெள்ளத்தின் இழுப்புக்கு ஒப்படைத்துச் செயலற்று நின்று விட்டார். தம்பி இனி என்னைத் தேடிக் கொண்டு வரப் போவதில்லை. இந்த சக்கர வியூகத்திலிருந்து வெளியே போக எனக்கு வழி தெரியவில்லை. தம்பிக்காவது இங்கிருந்து வெளியே போகும் ரகசியம் தெரிந்திருந்ததோ என்னவோ, ஆனால் தம்பி இது வரை தன் கூட இருந்தும் அதைக் கேட்கும் நினைப்பே வரவில்லை. இந்தக் கும்பலில் இவர்கள் இருவரும் எங்கே கரைந்து போவார்களோ யாருக்குத் தெரியும். தங்கையின் ஆவேசம் இன்று மறுபடியும் அதிகமாகியிருக்கிறது. கையை உதறி விட்டுப் போனாள். அவள் இந்தத் தடவை கண்டிப்பாகத் திரும்பி வருவாள் என்ற நம்பிக்கையே இல்லை. அன்றைக்குப் போல அவள் மறுபடியும் ஆற்றுக்கு ஓடினால்...

'டம டம டம' நகார் ஓசை கேட்டது. தேர் முன்னேறியது. தம்பிக்குப் பாய்ந்து வரும் மக்கள் வெள்ளத்துக்கு எதிராக நீந்தி வெளியே வர வேண்டியிருந்தது. அதிலிருந்து வெளியே வருவதும், அதே அளவு முடியாத கதைதான் என்பது தம்பிக்குத் தெரிந்தே இருந்தது. தாயும் தங்கையும் சுழலில் சிக்கிவிட்டிருந்தார்கள். தந்தை நட்டாற்றை அடைந்தபோது கை தூக்க முடியாமல் பலம் இழந்து அங்கேயே தெய்வத்தின் மேல் பாரத்தைப் போட்டு நின்று விட்டார். இவர்களையெல்லாம் இந்த நிலையில் விட்டுத் தான் மட்டும் வெளியேறுவது சரிதானா என்று அவன் நினைத்தான். ஜனங்களின்

நடையின் வேகம் அதிகரித்துக் கொண்டே வந்தது. இந்த இழுப்பில் யாரையும் வெளியே கொண்டு வருவது சாத்தியமில்லை என்ற முடிவுக்கு வந்து, தம்பி எல்லாரையும் அவரவர் பாட்டுக்கு விட்டுவிட்டு தான் அங்கேயிருந்து வெளி யேறினான்.

மேகம் அடர்த்தியாகக் கவிந்து, எங்கிருந்தோ ஒரு சூறாவளிக்காற்று சுற்றி சுற்றி வந்து மண்ணைத் தூற்றி மடத்தின் மேலே சொரிந்தது. எல்லாரும் போட்டா போட்டி போட்டுக் கொண்டு தேரை வேகமாக இழுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஜனங்க ளெல்லாம் திசை தெரியாமல் கண்களைத் தேய்த்துக் கொண்டு சிதறிப் போகும் பயத்தில் இருந்தார்கள்.

தேர் அருகில் வந்ததும் தாய் தங்கையை அழைத்துக் கொண்டு முன்னால் சென்றாள். தங்கையின் நெற்றியில் வியர்வை துளித் துளியாகக் கோத்து வைத்ததைப் போல நின்றிருந்தது. அவளுடைய பெரிய கண்கள் மந்திரவயப்பட்டது போல தேரையே பார்த்துக் கொண்டிருந்தன. உடம்பு கடகடவென்று நடுங்கியது. ஏதோ வெறியில் பயந்த எல்லாவற்றையும் மறந்து தேரைப் பார்த்துக் கொண்டே நின்று விட்டிருந்தாள். தேரின் பிரதட்சிணம் முடியப் போனது. ஜனங்கள் நின்ற இடத்திலேயே தலை குனிந்து வணங்கினார்கள். அலங்காரம் செய்து வைத்த உற்சவ விக்கிரகங்கள் எல்லாம் தேரின் அலைப்பில் தள்ளாடின.

தங்கை தேரை நோக்கிக் கையை நீட்டித் திடீரென்று ஓவென்று கத்தினாள்: "ஐயோ நெருப்பு! நெருப்பு அம்மா தேரெல்லாம் நெருப்பில் எரியுது. அம்மா நெருப்பு...!" தங்கை தாயின் கையிலிருந்து விடுபட்டுத் தேர்ப்பக்கம் பாய்ந்தாள். அவள் கால் நரம்புகளெல்லாம் சடசடவென்று அறுந்து உயிரில்லாதது போல் ஆயின. தேரைப் போலவே தானும் ஒரே கொழுந்தாய் நின்ற இடத்திலேயே அளவில்லாமல் எரிந்து கொண்டிருப்பதைப் போல் அவளுக்கு வேதனை உண்டா யிற்று. அவள் நின்ற இடம் இடைவிடாமல் அவளைச் சுற்றி சுழன்றது. நேராக நிற்க முடியாமல் விழுந்தும் எழுந்தும் முன்னால் பாய்ந்தாள். எதிரில் தேர் ஜொலித்தது. ஒளியில் கண் கூசியது. அதன் சூட்டில் உடம்பெல்லாம் கரைந்து படிப்படியாக நான் இல்லாமல் போய்விடுவேன். காற்றைப் போல் லேசாகிவிடுவேன். லட்சியம் இல்லாமல் எல்லாரையும் தள்ளிக் கொண்டு தேரை நோக்கி ஓடினாள்.

தாய் ஒன்றும் தோன்றாமல் அப்படியே நின்று விட்டாள். பக்கத்திலிருந்த பெண் களெல்லாம் அவளை வாய்க்கு வந்தபடி திட்டினார்கள். பைத்தியக்கார மகள் அபச குனமாகப் பேசி தேரைத் தொட்டு தீட்டாக்கிக் கொண்டிருந்தால் தாயானவள் அவளைத் தடுக்கக் கூடாதா? பைத்தியக்கார மகளைக் கட்டிக் கொண்டு இங்கே ஏன் வரவேண்டும்? மடத்து ஆச்சாரியருக்கும் இதனால் மிகவும் மன வருத்தம் ஏற்பட்டது. தேர்த் திருவிழா நேரத்தில் எவ்வளவு அசுபமான பேச்சு, பைத்தியக்காரி ஆனால் தான் என்ன? இப்படிப்பட்ட சுபமான நேரத்தில் தேரில் நெருப்புப் பிடித்திருக்கிறது என்று கூறுவது என்றால்? 'அந்தப் பைத்தியத்தைத் தடுத்து நிறுத்துங்கள்' என்று அவர் தீர்மானமாகச் சொல்லுவதற்குள் தங்கை ஓடிப் போய் தேர்ச்சக்கரத்தை அணைத்துக் கொண்டு நின்றிருந்தாள்.

சுற்றிலும் ஒரே புழுதி. ஒருவர் முகம் இன்னொருவருக்குத் தெரியவில்லை. வானமே கிழிந்து விழுவதைப் போலத் தாரை தாரையாக மழை பொழியத் தொடங்கியது. ஜனங்களெல்லாம் சின்னாபின்னமாகச் சிதறி ஓடினார்கள். இன்னும் கொஞ்சம் முன்னால்போனால் தேர் தன் இடத்தை எட்டிவிடும். தங்கை சக்கரத்தைக்

கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நினைவிழந்தது போல் இருக்கிறாள். கண்ணி லிருந்து விடாமல் நீர் பொழிந்தது. மிஞ்சியிருந்த ஜனங்கள் ஜெய ஜெய கோஷம் போட்டார்கள். தேரை இழுக்க மறுபடியும் திரண்டார்கள்.

தாய் தங்கையைத் தேடிக் கொண்டிருந்தாள். தம்பி, தந்தை இவர்களில் இப்போது யார் இருந்தாலும் அளவில்லாத அமைதி ஏற்படக் கூடும். ஆனால் எல்லாரும் எங் கெங்கோ தவறிப் போய் விட்டார்கள். இனி யாரை எங்கே என்று தேட வேண்டும்?. .. தேர்ச் சக்கரத்தின் கீழ் சிக்கிக் கொண்டால் தங்கையும் நொறுங்கிக் கூழாகிப் போயிருப்பாள்....மழையில் இந்தப் புழுதியில் ஒன்றும் கண்ணில் படவில்லை.

தந்தையும் மதில் சுவரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தார். மழை தாரைதாரையாகத் தரையில் விழுந்தாலும் அவர் அங்கிருந்து போவதைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை. சுவரில் தலையைச் சாய்த்து முகம் சேர்த்துச் சுவரோடு ஆகா யத்தைப் பார்த்தார் அந்தச் சுவர் உயர்ந்து கொண்டே, மெலிந்து கொண்டே போய் வானத்தில் குத்திட்டதைப் போலக் காட்சி யளித்தது. சுவரிலிருந்து வழியும் மழைநீரில் சுவரின் காவி கரைந்து சிகப்பாகத் துளித்துளியாக வழிகிறது. சுவரெல்லாம் நனைந்து பச்சை மண்ணின் வாசனை வந்தது. தந்தை அடுத்தடுத்து நாவினால் சுவரை நக்கத் தொடங்கினார்.

பசித்தது. வாய் உலர்ந்து விட்டது. இடைவிடாமல் தண்ணீர் தலையின் மேல் விழுந்து கொண்டிருந்தது. சுவரின் அப்புறத்தில் பாதையில் ஆயிரக் கணக்கான பேர் பாதி சாப்பிட்டு எழுந்த இலைகள் சாப்பிடுபவர்கள் இல்லாமல் பிரிந்து கிடந்தன. தந்தைக்குக் களைப்பினாலோ அல்லது சலிப்பினாலோ இமைகள் மெல்ல மூடத் தொடங்கின. மெல்ல மெல்லச் சாய்ந்து நின்ற சுவரும் கரைந்து, அவரும் கீழே குலைந்து வீழ்ந்தார்.

தேர் இழுககிறவர்களின் கை ஓங்கியது. புறப்பட்ட தேர் திடீரென்று சேற்றில் சிக்கியதைப் போல நின்று விட்டது. எல்லாரும் ஜெய ஜெய கோஷம் போட்டு மறு படியும் தயாரானார்கள். எதிர் மழை வேகமாக முகத்திலும் கண்ணிலும் அடித்தது. பிறவிக் குருடர்களைப் போல ஜனங்கள் தேரைநேராகப் பிடித்து இழுத்தது இழுத்தது தான். மிருகங்களைப் போல எல்லாச் சக்தியையும் சேர்த்து வைத்து முயன்றார்கள். தேர் கொஞ்சம் கூட நகரவில்லை. சக்கரத்தின் கீழ் ஏதாவது மாட்டிக்கொண்டிருக்க வேண்டும் அல்லது சக்கரமே நிலத்தில் புதைந்து போய் இருக்க வேண்டும்.

தாயின் உடம்பு தெப்பலாக நனைந்திருந்தது.நெடு நேரம் அவள் சுற்று முற்றும் பார்த்தாள். ஆனால் தங்கையை எங்கேயும் காணோம். தேர் மேலே போகாமல் எப்போதோ நின்று விட்டிருந்தது. விடாமல் ஒரேயடியாகப் பெய்யும் மழையில் ஆறும் நிரம்பியிருக்க வேண்டும். தாய் ஆற்றுக்கு ஓடினாள்.

ஆடையெல்லாம் உடம்பில் டப்பென்று ஒட்டிக் கொண்டிருந்தன. ஆளே இல்லாத அந்தத் தெருவில் அது யார் கவனத்தையும் கவர்வதற்கில்லை. வேகமாக நடக்க வேண்டுமென்றால் கால் நிமிஷத்துக்கு நிமிஷம் தளர்ந்து போனது. பள்ளங்கள் நிரம்பி தண்ணீர் ஆற்றின் பக்கம் ஓடியது. எச்சில் இலைகளெல்லாம் அப்படி அப்படியே விழுந்து கிடந்தன. தொன்னைகள் தோணிகளைப் போல் மிதந்து கொண்டே ஆற்றின் பக்கம் போய்க்கொண்டிருந்தன.

எச்சிலையும், எச்சில் இலைகளையும் மிதித்துக் கொண்டே தாய் ஆற்றை நோக்கி ஓடிக் கொண்டிருந்தாள்.

# ராமன் சந்தைக்குப்போனது

கே. சதாசிவ்

"கேள் பார்வதி, வேகமாய் வந்து கொஞ்சம் காப்பிக் கஷாயம் போடு, பார்க்கலாம். சந்தை என்ற சாக்கில் இப்போ வந்திருக்கார். பண லேவாதேவி பற்றிப் பேசாட்டாலும் வேறு பேச்சுப் பேசலாமே. இந்தத் தடவை அவர்கள் சகவாசமே வேணாம் என்று சொன்னவன் நான். ஆனால் அச்சுதையா விட்டால்தானே. மத்தியஸ்தம் செய்து பணம் வாங்கிக் கொடுத்தான். இப்போது அதே அச்சுதையா..."

தாத்தா சந்தையைப் பற்றிச் சொன்னதைக் கேட்டதுமே ராமன் குதித்தான். அப்போதே அவனுடைய பிடிவாதம் தொடங்கியது. பார்வதியின் முந்தானையைப் பிடித்துக் கொண்டே ஓடினான். 'அம்மா', 'அம்மா' என்று அடிக்கடி குரலை உயர்த்திக் கேட்டான். 'என்னடா காலையிலிருந்து உன் தொல்லை? உஸ், அப்பா' என்று கோபித்துக் கொண்டே அடுப்பின் மேல் காப்பிக்கு நீர் வைத்தாள்.

உள் அறையிலிருந்து பார்வதியின் தாய்—கல்யாணி— இருமல் குரலில் "என்ன பார்வதி, குழந்தைக்கு என்னவாம்? ஏன் திட்டறே? இன்னைக்குச் சந்தை இல்லையா! அனுப்பக் கூடாதா? கடைக்காரர் வீட்டுப் பிள்ளைங்க எப்படியும் கடை வைப்பதற் காகப் போவாங்க. அவுங்ககூட போகலாமே. இவரும் அந்தப் பக்கம் போவார். வரும் போது குழந்தையை அழைத்துக் கொண்டு வாங்கன்னு சொன்னா முடியா துன்னு சொல்ல மாட்டார்" என்றாள்.

ராமனுக்கு ஒரே மகிழ்ச்சி. வேகமாகப் பாட்டியின் அறைக்குள் ஓடினான். அவள் அவனைச்சமாதானப்படுத்தி, "ஆகட்டும்டா குழந்தை, கொஞ்ச நேரம் சும்மா இருக்கக் கூடாதா? கொஞ்சம் குளிப்பாட்டி அனுப்பி வைன்னு அவகிட்ட சொல்றேன்" என்று சொல்வது பார்வதிக்கும் கேட்டது. அங்கிருந்து மறுபடியும் அம்மாவிடமே ஓடி வந்தான். அம்மா அம்மா என்று நச்சரித்தான். "சரி, காப்பி போடுகிற வரையிலாவது என்னைக் கொஞ்சம் விடு. அப்புறம் அப்பா நேரமாயிட்டுதுன்னு கோவிச்சிக் குவார்" என்றாள். கோபத்தோடு ராமன் படுக்கை அறைக்குள் பாய்ந்தான். முக்கா லியைச் சுவர் ஓரமாகத் தள்ளி அதன் மேலே நின்று கையையும் காலையும் கழுத் தையும் நீட்டி மேலே கொடியில் இருந்த தன்னுடைய துணிகளை இழுக்க முயன்றான். முக்காலி சரிந்து மல்லாந்து விழுந்தான். மேலே இருந்த துணிமணியெல்லாம் அவன் மேல் விழுந்து மூடிவிட்டன. ஓ என்று வீறிட்ட கூச்சலில் பார்வதியும் மஞ்சய்யாவும் ஓடி வந்தார்கள். கல்யாணி படுத்த இடத்திலிருந்தே குழந்தைக்கு என்ன ஆயிற்று என்று விடாமல் மெலிந்த குரலில் விசாரித்தாள். "எனக்குச் சாவாவது வரலையே. இந்தப் பையனை வச்சிகிட்டு என்னால முடியாது" என்று கத்திக் கொண்டே பார்வதி அவனைத் தூக்கினாள். முதுகில் இரண்டு அடியும் வைத்தாள். "ஏன் பார்வதி, அப்படி அடிக்கிறே அவனுக்கு என்ன தெரியும்" என்று தாத்தா அம்மா

விடம் சொன்னதில் வேகம் கொண்டு ராமன்இன்னும் கொஞ்சம் ஜோராக ராகம் பிடித்தான். அறையிலிருந்து கல்யாணி என்ன ஆயிற்று என்ன ஆயிற்று என்று கேட்டபடியே இருந்தாள். "எதுவும் ஆகவில்லை. நீ சும்மா படுத்திருக்கக் கூடாதா?" என்றார் மஞ்சய்யா.

ராமனுக்குப் பேருக்காகக் குளியலும் ஆயிற்று. பசி என்று ராகமாலிகை தொடங்கியது. முதல்நாள் செய்த களி மிச்சமிருந்தது தான் செய்த புண்ணியம் என்று நினைத்துக் கொண்டாள் பார்வதி. இரண்டு மூன்று பிடி அவன் கையில் இட்டாள். முழுவதையும் தின்கிற அளவுக்கு அவனுக்கு நேரமில்லை. கொஞ்சம் வயிற்றில் போனால் மிச்சம் முகத்தில். அம்மாவிடம் பேச்சையும் வாங்கிக் கட்டிக் கொண்டான்.

ஊரின் பாறையின் மேலிருந்த பள்ளிக் கூடத்துக்கு வாரத்துக்கு ஒருநாள் விடு முறை. அதுவும் ஞாயிற்றுக் கிழமை. ஆகையால் பள்ளிக் கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போகும் சுட்ட மூஞ்சி சீக்குவின் தொல்லையும் இல்லை மேலும் அதே நாளில் சந்தைத் திடலில் சந்தை. பள்ளிக்கூடத்தின் பலகையின் மேல் உட்கார்ந்து அ ஆ இ ஈ என்று கிறுக்குவதை விட இது எவ்வளவு நன்றாய் இருக்கிறது என்று தோன்றாமலிருக்குமா ராமனுக்கு?

மஞ்சையா பார்வதி கொடுத்த கஷாயத்தைக் குடித்து விட்டு வாசலைத் தாண்டிப் போனார்.

பார்வதி மீண்டும் மீண்டும் ராமனுடைய உடையைச் சரிப்படுத்தினாள். ராம னுக்கு ஏதோ நினைவு வந்து அவளிடமிருந்து விடுவித்துக் கொண்டு பாட்டியின் அறைக்கு ஓடினான். "என்னடா குழந்தை, என்ன வேண்டும்? என் தலைகாணிக்குக் கீழ் என்ன இருக்கிறதென்று கையை விடுகிறாய்?" என்பது வெளியே கேட்டது. "வருகிறாயா இல்லயா, நான் மாட்டுக்குக் கழுநீர் வைக்க வேண்டும், சந்தைக்காவது போ, எங்காவது போ, போய்த் தொலை" என்று பார்வதி கூவி அழைத்தாள். முகத்தை முழநீளம் வைத்துக் கொண்டு ஓடி வந்தான் அவன். கால் சட்டையின் பை புடைத்துக் கொண்டிருந்தது. சின்னத் தவளையை முழுங்கிய பெரிய தவளையின் வயிற்றைப் போல. "பையில் என்ன?" என்று கையை விட்டாள் பார்வதி. சிரிப்பு வந்தது. இரண்டொரு சோழிகள், தாததாவின் காலிப் பொடி டப்பி, அதற்குள் சிலேட்டுக் குச்சித் துண்டுகள், ஆணியில்லாத பம்பரம், பீப்பீ. இது ஏது? என்றாள். "அப்பு கொடுத்தது" என்றான். "ஆமாம், அப்பு கொடுத்தானா? நீயே எடுத்துட்டு வந்துட்டியா?" என்று திட்டினாள்.

"இல்லைம்மா, அவனே மறுபடியும் கொடுத்தது" என்று ஒரு தடவை ஊதி, பையில் போட்டுக் கொண்டான். 'என்ன இழவோ' என்று முணுமுணுத்து அவனுடைய நெற்றியிலிருந்து தலை முடியைச் சரிப்படுத்துவதற்குள் கடைக்காரர் வீட்டு அப்பு வாசலில் வந்தான். "சந்தைக்கு அழைச்சிட்டுப் போறயா" என்று கேட்டாள். "அதற் காகவே வந்தேன்" என்றான் அப்பு.

இரண்டு பேரும் புறப்படத் தயாரானார்கள். பார்வதி இடுப்பு மடிப்பில் சொருகியிருந்த சில்லரையை எடுத்து ஒவ்வொருவர் கையிலும் இரண்டு இரண்டு காலணா கொடுத்தாள். "ராம னுக்கு எண்ணெய்ப் பண்டம் வாங்கித் தரவேண்டாம்" என்றாள். சரி என்றான் அப்பு. ராமன் கையைப் பிடித்துக் கொண்டு திண்ணைக்கு வந்தான்.

அப்படியும் இப்படியுமாகச் சுமார் பத்து மணிக்கு ராமனின் சவாரி மூத்த நண்பன் அப்புவுடன் சந்தைக்குப் புறப்பட்டது. கொஞ்ச நாளைக்கு முன்புதான் பெரமூரி லிருந்து வந்திருந்த காவேரி அக்கா வாங்கிக் கொடுத்த ரப்பர் பம்ப் ஷூவைக் காலில் போட்டிருந்தான். மைசூரின் மக்மல் கோட்டு, கோட்டின் காலரை மூடும் சர்ட்டின் காலர், தலையில் அழுத்திப் பிடிக்கும் மக்மல் தொப்பி. பையில் இரண்டு கால் அணா. வேறென்ன வேண்டும் ராமனின் சந்தோஷத்துக்கு?

சந்தைத் திடலை நெருங்க நெருங்க இருவருடைய உற்சாகத்திற்கும் இணை யில்லாமல் போயிற்று. "ராமா, சந்தையில் உனக்கு என்னவெல்லாம் வேணும்? எல்லாவற்றையும் இப்பவே சொல்லிடு. அப்பும் அங்கே ரகளை செய்யக்கூடாது, போன தடவை மாதிரி" என்று அப்பு எச்சரித்தான். என்ன வேண்டாம் ராம னுக்கு? இனிப்புச் சேவை, ஓமப்பொடி, முறுக்கு—இவையெல்லாம் வேண்டியே தீரும். முடிந தால் காமத் கடையில் இனிப்பு போண்டா. அம்மாவுக்குத் தெரிந்தால்? தெரிந்தால் என்னவாம்? அப்பு வாங்கியே தருவான். போன தடவையும் வாங்கிக் கொடுத் தான். காமத் கடையில் அவனைக் கவரும் இன்னொன்றும் இருந்தது. பெரியதொரு பாத்தி ரத்தில் 'டண்டண்' என்று சத்தம் வருகிறதல்லவா? அதைக் கேட்பதே ஆனந்தம். ஆனால் அந்தப் பாத்திரம் ஏன் அப்படிச் சத்தம் போடுகிறது என்னும் ஆச்சரியமும் உண்டு. ஒரு தடவை அப்புவிடம் அந்தக் கேள்வியைக் கேட்டே விட்டான் "பாத்தி ரத்தில் தண்ணீர் இருக்கிறதல்லவா? அதற்குள் வட்டத் துண்டுகளைப் போட்டிருப் பார்கள்" என்றான் அப்பு. "அந்தத் துண்டுகளை ஏன் போடுகிறார்கள்" என்பது இவ னுடைய மறு கேள்வி. "ஏன் என்றால்?" அது அப்புவிற்கும் தெரியாது. ஆனால் ராமனிடம் தன்னுடைய அறியாமையை வெளிப்படுத்திக் கொள்வது சரியில்லையே. "நீ இன்னும் சிறியவன். பெரியவன் ஆன பிறகு உனக்கே புரியும்" என்று அவன் தன்னைவிடச் சிறியவன் என்பதைக் காட்டி அவன் வாயை மூடுவதற்கு முயற் சித்தான். "பெரியவன் என்றால் உன்னைப் போலேயா?" என்று கேட்டான். "ஆமாம். நீ வாயை மூடு" என்று பெரியவனைப் போல் நடந்து கொண்டான் அப்பு. வாயை மூடினால் என்ன, மனம் மூடிக் கொள்ளுமா? சந்தையில் கிடைக்கக் கூடிய எல்லாப் பொருட்களையும் பற்றி ராமனின் சிந்தனை சென்றது. கூடவே அது என்ன, இது என்ன, ஏன், எங்கிருந்து, எப்படி முதலிய கேள்விகளைக் கேட்டுக் கொண் டிருப்பான். பெரியவன் ஆனால் என்ன—அப்புவுக்கு எங்கே இருக்கிறது ராமனின் கேள்விகளுக்கு விளக்கம் கொடுக்கும் அளவுக்கு ஞானம். இன்னொரு தடவை மிரட்டியும் ஆயிற்று. அதற்குக் காரணம் இல்லாமலும் இல்லை. ராமனின் தாய் இரண்டு கால் அணா கொடுத்தாள். சரி. ஆனால் ராமனைவிடப் பெரியவனான தனக்கு அது எதற்கு உதவும்? வீட்டிலிருந்து புறப்படும் போதே அக்காவைக் குஷிப் படுத்தி அரையணா இரண்டு பெற்றுக் கொண்டான். அம்மாவிடம் கேட்டு அரை யணா என்றால், கேட்காமலேயே சீரக டப்பாவிலிருந்த ஒன்றிரண்டு நாணயங் களை தேடி எடுத்துக் கொண்டான். கணக்குப் பார்த்தது யார்? மொத்தம் அவ்வளவு பணம் அவனுடைய கால் சட்டைப் பையில் கலகலவென்று ஒலித்துக் கொண் டிருக்கிறது. அதை எப்படி எப்படிச் செலவழிக்கலாம் என்பதே அவனுடைய சிந்தனை. ஒரு காலணாவில் காமத் ஒட்டலில் மோர் கிடைக்கும். கொஞ்சம் பல்லைக் காட்டினால் கடித்துக் கொள்வதற்கு ஒரு பக்கோடாவோ ஏதோ கொடுப்பான். கொடுக்காமல் என்ன? தங்கள் கடையிலிருந்து வெல்லம், சோப் என்று கடன்

வாங்கிக் கொண்டு போவதில்லையா அவன்? லம்பாடிகள் இந்தத் தடவையும் கடை வைத்திருந்தால் சின்ன மகுடி வாங்க வேண்டும். இப்படியே அவனுடைய சிந்தனை அலை பாய்ந்து கொண்டிருக்கும் போது இந்தப் பாழும் ராமன் இதென்ன அதென்ன என்று கேட்டால் அவனுக்குக் கோபம் வராமல் வேறு என்ன வரும்?

எப்படியோ சந்தைத் திடலுக்கு வந்தாயிற்று. வெயில் நெற்றிக்கு ஏறிய போது ராமனுக்கு தாகம் ஏற்பட்டது. அப்புவிடம் சொன்னான்: "அப்படியானால் சர்பத் குடிக்கலாம்" என்று சர்பத் கடைக்கு ராமனை அழைத்துக் கொண்டு போனான். அங்கே பார்த்தால், வெவ்வேறு வண்ணத்தில் சர்பத் பாட்டில்கள் வரிசை வரிசை யாக இருந்தன. மேலே எலுமிச்சம்பழம். ஒரு ஓரத்தில் 'ஒங் டங்' என்று ஓசையை எழுப்பிக் கொண்டிருந்தாள்.கடைக்காரி. "எது வேண்டும்?" என்று அப்பு கேட்டான். எந்தக் கலர் என்று சொல்லுவது? கொடுப்பதாய் இருந்தால் எல்லாக் கலரும் அழகு தான். "எது வேண்டும் வேகமாகச் சொல்லுங்க" என்றாள் கடைக்காரி. நாவல்பழக் கலரின் பக்கம் விரலைச் சுட்டினான் ராமன். அவள் ஒரு கிளாஸ் டம்ளரை எடுத்துப் பானைத் தண்ணீரில் முக்கி எடுத்து அதில் கொஞ்சம் வெல்லப்பாகை ஊற்றினாள். இந்தக் கலரை விடச் சிவப்பு வர்ணமுடைய கலர் நன்றாகயிருக்கும் என்று தோன்றியது ராமனுக்கு. உடனே "அது வேண்டும்" என்றான். 'நல்ல குழந்தைகளப்பா நீங்க' என்று முணு முணுத்து, சிவப்பு நிறத் தண்ணீரை அந்தப் பாகில் ஊற்றினாள். சப்ஜா விதையை ஒரு ஸ்பூன் போட்டாள். ஸ்பூனால் கண்ணாடி டம்ளரை 'டங்' 'டங்' என்று தட்டி எடுத்துக் கொடுத்தாள். அந்தப் பக்கத்தில் மெலிந்த ஒருவன் வயிற்றின் மேல் சோடாப் பாட்டிலை வைத்துக் கட்டை விரலால் கோலியை அழுத்தி டொய் என்ற ஓசை எழுப்பியது ராமனின் கவனித்தை ஈர்த்ததா? பாட்டிலிலிருந்து நுரை பொங்கிப் பொங்கி வந்தபோது, 'இது எதுவும் வேணாம். அது தான்வேணும்' என்று பிடிவாதம் பிடித்தான். "குடிடா வேகமா. உன்ன அழைச்சிட்டு வந்ததே தப்பாயிடுச்சி" என்று அப்பு குரலை உயர்த்திச் சொன்னபோது வேறு வழியில்லாமல்அவள் கொடுத்ததைக் குடித்தான். குடித்தான் என்றால் என்ன? பாதிக் கோட்டின் மேல் சிந்தியது. கொஞ்சம் மட்டும் வயிற்றுக்குள்போயிற்று. வாய் கழுத்து கோட்டின் முன்பகுதி எல்லாம் சிவப்புமயம். 'காலணா எடு' என்றாள். 'கொடு' என்றான் அப்பு. ராமனுக்கு அழுகையாக வந்தது, அப்புக்கு கோபம் வராமல் இருக்குமா? 'இவன் ஒருத்தன்...' என்று ஏதோ முணுமுணுத்துக் கொண்டே தன் பையிலிருந்த பணத்தை எடுத்துக் கொடுத்து, ராமனைத் தடதடவென்று இழுத்துக் கொண்டு போனான். அப்போது ராமன் "பாட்டிலில் கோலியை எப்படிப் போடுறாங்க?" என்று கேட்டான். "கொஞ்சம் வாயை மூடிக்கொண்டு வா" என்றான் அப்பு.

இனி வேறொரு உலகமே எதிர்ப்பட்டது இந்தக் குழந்தைகளுக்கு. 'பம்பாய் பட்டணம் பார்', 'பட்டணத்து தேவடியாள் பார்' என்று சலங்கை ஒலிக்கு ஏற்ப ராகத்தை இழுத்துப் பாடிக் கொண்டிருந்தவனைச் சுற்றிப் பத்துப் பன்னிரண்டு குழந்தைகள் நின்றிருந்தார்கள். குழந்தைகள் என்ன, சில ஆண்களும் பெண்களும் அவன் சொன்ன சொல்லைக் கேட்டு வெட்கப்பட்டவர்களைப் போல நின்று கொண்டிருந்தார்கள். இப்படியெல்லாம் ஒரு திருவிழாவே அங்கே இருக்கும்போது அது என்ன என்று கேட்கும் ஆர்வம் ராமனுக்கு இல்லாமல் இருக்குமா? ஆர்வம் பிடி வாதமாக மாறுவ தற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்? அது நிறைவேறாமல் போனால் கடைப்பிடிக்கக் கூடிய ஒரே வழி அழுகைதான். அப்பு ராமனை—ராமன் என்ன!

ராமன் பரம்பரையையே சபித்தான்.அப்படிப் பார்த்தால், அவனுக்கும் அதைப் பார்க்கும் ஆசை உண்டு. முன்னால் ஒரு தடவை பார்த்தும் இருக்கிறான். அதனால் இன்னொரு தடவை பார்க்கக் கூடாது என்பதில்லையே? 'சரி, ஆகட்டும் பார்' என்றான் ராமனிடம். ராமன் இரண்டு கண்களுக்கும் கையை மறைத்து கண்ணைச் சுருக்கி பூதக் கண்ணாடியில் பார்த்த போது அந்தச் சிறிய டப்பாவுக்குள் அதிசய உலகத்தையே கண்டான். ஒகோ என்று சிரித்தான். 'முடிந்தது வா' என்றால் வருவானா? 'இன்னும் கொஞ்சம், இன்னும் கொஞ்சம்' என்று குதித்தான். 'நட நட' என்று அவனை இழுத்து விட்டு விட்டுத் தானும் ஒரு தடவை பார்த்தான் அப்பு.

டப்பாவுக்குள் பார்த்த பிறகு ஒரே கேள்வி— பம்பாய் என்றால் என்ன, தேவடியாள் என்றால் என்ன—இப்படி நிறைய கேள்விகள். பாழும் தொல்லை என்று பட்டது அப்புவிற்கு.

இனிப்புச் சேவைக் கடையைத் தூரத்திலிருந்தே பார்த்து விட்டான் அப்பு. "ராமா, இப்போது என் பேச்சைக் கேட்கணும். நீ; உங்க அம்மா கொடுத்த காலணா இருக்கிறதல்லவா,அதை இங்கே கொடு. உனக்கு எது வேண்டுமோ இனிப்புச் சேவையோ, முறுக்கோ வாங்கித் தருகிறேன். நீ காலணா கொடுக்காட்டா உனக்கு எதுவும் இல்லை. புரியுதா?" என்று அப்பு எச்சரித்தான். சரி என்றான் ராமன். பையில் கையை விட்டான். அங்கே இந்த உலகமே நிரம்பி இருக்கிறது—கோலி, குண்டு என்று. அந்த உலகத்தில் காலணா சுலபமாகக் கிடைக்குமா? சாலையின் பக்கத்தில் ஒரு கல்லின் அருகே நின்றார்கள். ராமன் என்னென்னமோ பண்ணி னான்—காலணாவை எடுப் பதற்கு. அது கிடைக்காததால் காசு இல்லை என்று முறையிட்டான். "போச்சுடா. இவ்வளவு சீக்கிரம் அது எங்கடா போச்சு?" என்று தலையில் அடித்துக் கொண்டான் அப்பு. ஒருவழி சொன்னான்— "பையில் என்னென்னவோ இருக்கிறதல்லவா? அதையெல்லாம் வெளியே எடுத்தால் காசு கிடைக்கும்" ராமனுக்குச் சரி என்று பட்டது. ஒவ்வொன்றாகப் பையில் இருந்த சரக்கையெல்லாம் வெளியே எடுத்துக் கல்லின் மேல் பரப்பினான். ஆணி இல்லாத பம்பரம் ரொம்பக் கஷ்டத்திற்குப் பிறகு வெளியே வந்தது முதலில். அடுத்து வந்தது பொடி டப்பி, டங டங் என்று. அதற்கப்புறம் வந்தது...

மோசம் போனது இங்கேதான். சரியான நேரத்தில் ரகசியம் வெளியாக வேண்டுமா? "ஒ, இது என்னுடையதுதானே, திருடிக் கொண்டாயா நீ" என்று சொல்லிக் கொண்டே அப்பு 'கபக்' என்று பீப்பீயை, ராமனிடமிருந்து பிடுங்கிக் கொண்டான். "ஐயோ, அது என்னுது" என்ற கதறினான் ராமன். "எப்படி உன்னுது ஆகும்? நேற்று எங்கள் வீட்டுக்கு வந்த நீ ஒரு தடவை ஊதிட்டுத் தரேன்னு வாங்கினியே, நீ திருப்பித்தந்தியா?" என்பது அப்புவின் கேள்வி. "அய்யோ அது என்னுது. அம்மா வாங்கிக் கொடுத்தது" என்று அழுதபடியே சொன்னான். "அது என்னுதுதான்" என்று பையிலிட்டுக் கொண்டான் அப்பு. அழுகை பொங்கி வந்து கை கால் உதறினான் ராமு. நான்கு பிள்ளைகள் வந்து சேர்ந்தார்கள். இரண்டொரு பெரியவர்களும் வந்தார்கள். பெரியவனைத் திட்டினார் ஒருவர். சின்னவனை மிரட்டினார் இன்னொருவர். ராமன் அப்புவின் கையைப் பிடித்து இழுத்தான். அப்பு கையை உதறினான். இந்தக் கலாட்டாவில் அப்புவிற்கு எப்படியோ ஒரு அடி விழுந்தது. கோபத்தில் அவன் ராமனின் முதுகில் குத்தினான். ராமன் பெரிய கல் ஒன்றை எடுத்துக் கொண்டான். அதற்குள் யாரோ புண்ணியவான் அவன் கையைப்

பிடித்துக் கல்லைக் கீழே போட வைத்தார். சண்டைக்குக் காரணம் என்ன என்று கேட்டார். அப்பு விவரமாக பீப்பியின் கதையைச் சொன்னான். "இல்லை, அது என்னுடையது" என்று இடையிடையே ராமன் வாயைத் திறந்தான். அழுதான். குழந் தைகள் சண்டையில் நியாயம் சொல்வது எப்படி? அழுதவர்கள் வெல்வதுதான் நியாயம். பெரியவர்களும் சிறியவர்களும் சண்டை போட்டால் சிறியவர்கள் பக்கமே அனுதாபம். ஆணும் பெண்ணும் சண்டை போட்டால் பெண்ணுக்கல்லாமல் ஆணுக்கு யார் நியாயம் காட்டுகிறார்கள்? அப்புவின் பேச்சே பொய் என்று முடிவு செய்தார் அந்தப் பெரியவர். ராமனுக்குப் பீப்பி கிடைத்தது அப்புக்கு நாலு வசவும் கிடைத்தது உண்மையே பொய் ஆனால் உடம்பை ரணப்படுத்திக் கொள்வதன்றி வேறு என்ன செய்ய முடியும்? பெரியவர் வழக்கைப் பைசல் செய்துவிட்டுப் போய்விட்டார். அப்புவின் முகத்தில ராமன் பீபபி ஊதினான் மறுபடியும் சண்டை ஆரம்பம் "வீட்டுக்கு வா. அப்பாவிடம் சொல்கிறேன்" என்றான் அப்பு. ராமன் சும்மாயிருப் பானா? "நானும் என் அப்பாவிடம் சொல்வேன்" என்றான், அவனை அடக்கும் வகையில் அப்புவுக்கு சிரிப்பு வந்தது "உனக்கு ஏது அப்பா" என்று உரக்கச் சிரித்தான்.

அதே நேரத்தில்—

"உன் அப்பா கூப்பிடறார்" என்று வயதான ஒரு பெண்மணி அவன் தோளைத் தொட்டுக் கூப்பிட்டாள். முன்பின் தெரியாத அந்தப் பெண்மணியை திரும்பி, தலையை நிமிர்த்திப் பார்த்தான் ராமன் ஒருநிமிஷம் பயந்து போனான்

"உன் பெயர் ராமன்தானே?" என்று கேட்டு உறுதிப் படுத்திக் கொண்டாள். எங்கே என்று கேட்டான் ராமன் "அதோ அந்தத் துணிக் கடையில்" என்றாள். எந்தத் துணிக்கடை என்று கேட்டான். "அதோ அங்க. வா போகலாம்" என்றாள் துணிக் கடை என்றால் அங்கே நமக்கு லாபம்தான். அப்புவிடம் போட்ட சண்டை மறந்தே போயிற்று. அவ்வளவு ஏன் அப்பு அங்கே நின்றிருக்கிறான் என்பது கூட மறந்திருக்கலாம். அவள் முந்தானையை ஒட்டிப் புறப்பட்டான். "தொலைந்தது சனியன், இனி அவனாயிற்று, அவனுடைய தாத்தாவாயிற்று" என்று அப்பு தன் தந்தையின் கடையைப் பார்க்க ஓடினான். "அப்பா எங்கே?" என்று விடாமல் கேட்டான் ராமன். "இதோ இங்கதான் வா" என்று சொல்லிக் கொண்டே அவன் தோளைப் பிடித்துக் கொண்டு மேலே நடந்தாள் அவள். அவள் இங்கே இங்கே என்று காட்டிய கடையும் வந்தது. கடையில் காலிட்டதும் ராமனின் கண்கள் பத்துப் பன்னிரெண்டு கிராக்கிகளுக்கு நடுவே அப்பாவைத் தேடின. ஆனால் அவர் எங்கே இருக்கிறார் அங்கே. கடையின் ஒடிந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்திருந்த ஒருவனைக் காட்டி 'அதோ பார் உன் அப்பா' என்று சொன்னாள். அது எப்படி அப்பா ஆக முடியும்? ஒரு நிமிஷத்துக்கு ஏதோ கலக்கமாய் இருந்தது. பயம் கலந்த சிரிப்பு. "ஐயோ அப்பா அவரில்லை, சீ" என்று அழகாகச் சிரித்தான், அந்தப் பெண்ணுக்கு எதுவும் தெரியவில்லை என்னும் வகையில். அவன் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஆள் சட்டென்று எழுந்தார். தலையில் ஒரு அழுக்குப் பிடித்த வெள்ளைத் தொப்பி. அதற்குப் பின்னால் தெரிகிற குடுமியின் முடிச்சு. காதில் கடுக்கன். காதின் மேல் பூ. கையில் ஒரு குடை. முழங்கால் மட்டுமே இருந்த கச்சம் வைத்துக் கட்டிய அகலக் கரை வேட்டி. ஒரு காலில் வெள்ளிக் கம்பி. தடித்த தோல் செருப்பு. "வா, குழந்தை" என்று அவன் அழைத்தான். அவன்

பக்கத்திலிருந்த புதிய துணிகளின் குவியலைப் பார்த்தான். இது உனக்குத்தான் என்று சொன்னவன், வா என்று மூன்று தடவை அழைத்தான். "போப்பா" என்று அந்தப் பெண்மணி முதுகுப் பக்கம் இருந்து தள்ளினாள். மந்திரத்துக்குப் கட்டுப்பட்டவனைப் போல ஆமை போல அடியெடுத்து வைத்துச் சென்றான் ராமன். கண்ணை இமைத்தபடி அவன் முன்னால் நின்றான். அவனே முன்னுக்கு வந்து ராமனுடைய கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய்நாற்காலியில் உட்கார வைத்தான். "இந்தத் துணியெல்லாம் உனக்குத்தான் தெரியுமா?" என்றான். "நல்லா இருக்குதா?" என்று கேட்டான். ஆமாம் என்பதைப் போலத் தலையை ஆட்டினான் ராமன். "என்மகனே" என்று அணைத்துக் கொண்டான் அவன். ராமன் தலையை நிமிர்த்தி அவன் கண்களையே பார்த்தான். முரட்டுக் கை என்று தோன்றி னாலும் ராமனுக்கு ஏனோ மகிழ்ச்சியாய் இருந்தது. அப்படியானால் அவ்வளவு பெரியவர் கண்ணில் தண்ணீர் வருகிறதே என்று ஆச்சரியமும் உண்டாயிற்று, அழுகையும் வந்தது. தொலைவில் நின்றிருந்த அந்தப் பெண்மணியின் கண்ணிலும் நீர் கசிய வேண்டுமா?

இவையெல்லாம் ஐந்து பத்து நிமிஷங்களுக்குள் நடந்து முடிந்த சங்கதி. அந்தப் பெண்மணி துணி மூட்டையைக் கட்டி எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லியாயிற்று. ராமனைத் தூக்கித் தோள் மேல் ஏற்றிக் கொண்டு கடையை விட்டு வெளியே நடந்தான். அந்தப் பக்கத்திலிருந்த இனிப்புக் கடையில் அது இது என்று ஒரு பெரிய பொட்டலமே தயாராயிற்று—ராமனின் பால்வடியும் முகம் பூரிக்காமல் இருக்குமா? 'எனக்கா' என்று தோளின் மேல் இருந்து கொண்டே அந்தப் பெரியவனின் முகத்தருகே கையை நீட்டினான். "இது உனக்கல்லாமல் வேறு யாருக்கு, குழந்தை?" என்று சொல்லிக் கொண்டே பொட்டலத்தின் ஒரு பக்கத்தில் துளை போட்டு இரண்டிரண்டாக காராச்சேவு இழுத்து அவன் தின்னக் கொடுத்தான். ஒருகால் மார்புப் பக்கமும் ஒரு கால் முதுகுப் பக்கமும் போட்டு அவன் தலையைப் பிடித்துக் கொண்டு புறப்பட்ட ராமனுக்குக் குதிரைச் சவாரி போலத் தோன்றாம லிருக்குமா? அப்படியே சொல்லியும் விட்டான். "நீ தான் குதிரையாம், நான் உன் மேலே உட்கார்ந்திருக்கேனாம்" என்று. 'ஹை ஹை' என்று தன் காலினால் இடை யிடையே முதுகையும் மார்பையும் உதைத்தும் வந்தான். சிறிய அழகுக் காலின் உதை அவனுக்கு இதமாக இருந்தது. கொஞ்ச தூரம் போன பிறகு அவன் அந்தப் பெண்மணியிடம் ஏதோ சொன்னான். அவள் சரியென்று சொல்லி வேக வேகமாக முன்னால் நடந்தாள். நம் வீடு இருப்பது அந்தப் பக்கம் அல்லவா? அப்படி இருக்கப் போய்க் கொண்டிருப்பது எங்கே என்ற தோன்றியது ராமனுக்கு. வீட்டிற்குப் போகலாம் என்றான். "வீட்டுக்குத் தானே போய்க் கொண்டிருக்கிறோம்" என்றான் அந்தப் பெரியவன். சந்தைத் திடலில் ஒரு பக்கத்துக்குப்போய் ஒரு பெரிய மரத் தடியில் ராமனை இறக்குவதற்கும், அவன் இருந்த இடத்துக்குக் கூண்டு போட்ட இரட்டை மாட்டு வண்டி வருவதற்கும் சரியாயிருந்தது. பெண்மணி உள்ளே இழுத்துக் கொண்டாள். ராமனுக்கு இப்போது உண்மையாகவே பெருத்த அழுகை வந்தது. பெரியவன் வண்டியில் ஏறி, 'வேகமாய்' என்றான். மாடுகள் கழுத்து மணியை ஒலித்துக் கொண்டே முசுரெ ஹள்ளி வழியாக சீத்தூர் பக்கம் பாய்ந்தன. சிவப்புப் புழுதி கிளம்பியது.

வண்டியில் உட்கார்ந்திருப்பது சந்தோஷமாக இருந்தாலும் அன்னியர்களுடன்

எங்கே போவது என்று நினைத்து ராமன் விக்கி விக்கி அழுதான்—'அம்மா அப்பா' என்று. அந்தப் பெண்மணி தொடையின் மேல் அவனை உட்கார்த்தி, 'அழ வேண்டாம் ஐயா' என்று சமாதானப் படுத்தி, பொட்டலத்திலிருந்து தின்பண்டங்களை எடுத்துக் கொடுத்தாள். அதைக் கண்டதும் அவனுடைய அழுகை நின்றாலும் கேவல் நிற்கவில்லை. அவனுடைய கோட்டின் மேலும் உதட்டுப் பக்கத்திலும் சிவப்பைப் பார்த்து இது என்ன என்று கேட்டாள். "அங்க சர்பத் குடிச்சது" என்றான் ராமன். "எவ்வளவு நல்லா இருக்குது தெரியுமா, நீ குடிச் சிருக்கியா?" என்றும் கேட்டான். அவள் சிரித்தாள். அந்தப் பெரியவனும் சிரித்தான். வண்டியின் ஆட்டத்தில் கூண்டு முதுகில் இடித்து வலித்தது. "எனக்கு அடிபட்டது" என்று கூக்குரல் எழுப்பினான். எங்கே போகிறோம் என்று கேட்டான். எங்க வீடு இங்க இல்லை என்றும் சொன்னான். "உங்க வீட்டுக்குத்தான் போய்ட்டிருக்கோம். இவர் யார் தெரியுதா? உங்க அப்பா தானே?" என்றாள். அவன் முகத்தைப் பார்த்தான் ராமன். "இது என் அப்பா அல்லவே அல்ல" என்றான். "நான்தான் உன் அப்பா"என்றான் அவன். "ஊகூம், வீட்டில் இருக்காரு என் அப்பா, நான், வீட்டுக்குப் போகணும்" என்று பிடிவாதம் பிடித்தான். "ஏம்பா அழறே, நான்தான் உன் அப்பா, அங்கே இருப்பது உன் அம்மாவுக்கு அப்பா" என்றான் அவன். ராமனுக்கு மறுபடியும் கலக்கம் ஏற்பட்டது.

"எனக்கு அப்பா இல்லயாம். அப்பு சொன்னான." பெரியவன் அந்தப் பெண்மணியையும் அந்தப் பெண்மணி அவனையும் பார்த்தார்கள். "அவனை அடிக்கலாம், சும்மாயிரு." ராமனுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது.

அவர்கள் இருவரும் என்னென்னவோ பேசிக் கொண்டார்கள். நடு நடுவே பார்வதி, மஞ்சய்யா, பாட்டி முதலிய சொற்கள் வந்ததால் அது தன் வீட்டாரையே குறிக்கிறது என்று தோன்றினாலும் மொத்தப் பேச்சின் பொருள் விளங்கவில்லை. கண்ணை அகல விரித்து ஒரு தடவை அவனையும் மற்றொரு தடவை அந்தப் பெண்மணியையும் மாறி மாறிப் பார்த்தான். கூடவே அந்தத் தின்பண்டப் பொட்டலத்தின் பக்கமும் பார்வையை ஓட்டினான்

பால்கடையைத் தாண்டி வண்டி இடப்பக்கம் திரும்பியது. வண்டியின் ஆட்டத்தில் ராமனுக்குத் தூக்கம் வந்தது. அந்தப் பெண்மணியின் தொடையின் மேல் படுத்துக் கொண்டான். இனிப்புச் சேவையின் துண்டு வாயிலேயே இருந்ததால் ஒரு பக்கத்தில் எச்சில் கம்பியாக வழிந்தது. அவனுக்குத் தூக்கம் கலைந்து போகும் என்ற பயத்தில் அவள் அதைத் துடைக் காமலேயே விட்டாள். சொட்டு உதட்டிலிருந்து வடிந்து அவள் புடவையையும் நனைத்தது. "எவ்வளவு அழகான குழந்தை, முதலாளி" என்றாள் அவனைப் பார்த்து, ராமனின் தலையை மெதுவாகத் தடவிக் கொண்டே. வண்டி இப்படியும் அப்படியும் ஆடிக் கொண்டே போக மாடுகளின் கழுத்தில் கட்டியிருந்த மணிகள் தாலாட்டுப் பாடின.

வண்டி ஒருதடவை ஒரு பெரிய கல்லின்மேல் ஏறி இறங்கியதில் ராமனுக்கு உடனே விழிப்பு ஏற்பட்டது. டக்கென்று கண்ணைத் திறந்து "அம்மா" என்று கத்தி, அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்தான். அந்தப் பெரியவன் முகத்தைப் பார்த்தான். ஏதோ புதிய உலகத்தில் இருப்பதைப் போலத் தோன்றி "அம்மா எங்க, அம்மா" என்று அலறி அழுதான். அவனுக்கு மறுபடியும் தின்னக் கொடுத்து அழுகையை நிறுத்துவதற்குள் இருவருக்கும் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

"எனக்குப் பயமாய் இருக்கிறது, முதலாளி" என்று அவனைப் பார்த்துச் சொன்னாள் அவள்.

ராமனுக்கு விழிப்பு வந்த பிறகு ஒன்று அல்லது இரண்டு பர்லாங் தூரம் போயிருக்கலாம் வண்டி. பின்னாலிருந்து 'பாம் பாம்' என்று ஒலித்துக் கொண்டே ஒரு கார் வந்தது. ராமன் அதையே பார்த்துக் கொண்டிருக்கிறான். கார் வண்டியைக் கடந்து பாதையின் குறுக்காக நின்றது. வண்டிக்காரன் கயிற்றைப் பலமாக இழுத்தான். மாடுகள் நின்றன, புஸ்புஸ் என்று மூச்சுவிட்டபடி. கழுத்து மணிகள் கணகண வென்றன. ராமனுக்குத் தாத்தாவின் முகம் கண்ணில் பட்டது. டக்கென்று எழுந்து நின்றான். "அப்பா நான் இங்கே இருக்கிறேன்" என்று கத்தினான் ஜம்பமாக. "என்ன செய்யப் போகிறீர்கள், முதலாளி, இப்போது?" என்றாள் அந்தப் பெண்மணி. அவனுக்கு இந்த நேரத்தில் கோபம் வராமல் இருக்குமா? "உன் வாயைக் கொஞ்சம் மூடிக் கொண்டிரு, தாயே" என்று கத்திவிட்டுப் பேசாமல் உட்கார்ந்தான். ராமன் "நான் இறங்குறேன்" என்று வண்டியின் கோடிக்குப் போனான். அந்தப் பெண்மணி அவனை இழுத்துக் கொண்டாள்.

மஞ்சய்யா, சீதாராமன், கடை முதலாளி சதானந்த பட்டர், கார் முதலாளி சீனப்ப பட்டரின் ஆள் ஜம்பு—எல்லாம் தெரிந்த முகங்கள், ராமனுக்கு ஒரே சந்தோஷம். "அப்பா, நான் இங்க இருக்கறேன்" என்று கத்தினான், இனிப்புச் சேவையை மென்று கொண்டே.

"இறக்கு அவனை" என்று கர்ச்சித்தார் மஞ்சய்யா.

"அது முடியவே முடியாது" வண்டிக்குள் இருந்தபடியே பதில் சொன்னான் பெரியவன்.

"எவ்வளவு கொழுப்பு உனக்கு! உன் கழுத்தை நெரிச்சிடுவேன், தெரியுமா? இறக்கு அவனை முதலில்"

"எப்படி அவனை அழைத்துக் கொண்டு போறீங்கன்னு நானும் பாக்கறேன்" என்று சொன்னான், டக்கென்று வண்டியிலிருந்தவன் கீழே குதித்தான்.

"என்ன, என்னை அடிக்க வருகிறாயா? என்னைத் தொட்டால் உன் பிணம் விழுவது நிச்சயம்" என்றார் மஞ்சய்யா.

இருவரும் ஒருவருக்கொருவர் எதிராக நின்றார்கள். சதானந்த பட்டர் உடனே இருவருக்கும் நடுவே நின்றார்.

"அப்பா நான் வரேன்" என்று ராமன் அந்தப் பெண்மணியின் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு முயற்சி செய்தான். அவளுக்கு என்ன செய்ய வேண்டுமென்று தெரிந்தால்தானே. மனத்தில் தோன்றிய தெய்வங்களையெல்லாம் நினைத்துக் கொண்டே அவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் அவள். ராமன் ஒரேயடியாகத் திமிறினான். "விடு என்னை, விடு நான் போறேன்" என்று கத்தினான். அவள் சமாதானம் செய்ய முயற்சித்தாள். பொட்டலத்திலிருந்து இரண்டிரண்டு பீசாக அவன் முகத்தின் அருகே பிடிக்கிறாள். அவன் அதைப் பறித்துக் கொண்டான். "விடு நான் போறேன்" என்னும் ராகம் மட்டும் நிற்கவில்லை.

"வழியில் உங்க சண்டை வேண்டாம். எப்படியானாலும் உன்னுடைய மாமனார் அல்லவா அவர்? உனக்குத்தான் சொல்றேன், சிவராமா" என்றார் சதானந்த பட்டர்.

"யார்? இவரா என் மாமனார், சீ" என்று பல்லைக் கடித்தான் சிவராமன்.

"இவர், அந்தத் தேவடியாள் பார்வதியின் அப்பா. அதற்காகத்தானே அவளை வைத்துக் கொண்டது வீட்டில். அவள் உங்கள் மகள்தான். இவன் என் மகன். அவன்

மேல் உனக்கு என்ன உரிமை? என் உயிர் போனாலும் சரி. அவன் எப்படி உங்க ளுடன் வருகிறான் என்று பார்க்கிறேன்" ராமனுக்கு இந்தப் பெரியவர்களின் சண்டை தலையும் புரியவில்லை காலும் புரிய வில்லை. பையில் பம்பரம் உறுத்திக் கொண்டிருந்ததால் அதை எடுப்பதற்குக் கையை விட்டான். பீப்பி கையில் பட்டது. முகம் மலர்ந்தது. "இதோ பார், பீப்பி என்னுடையது இது—தெரியுமா?" என்று சொல்லிக் கொண்டடே அந்தப் பெண்மணியின் முகத் தருகே நீட்டினான். 'ஊது' என்று கட்டாயப் படுத்தினான். பயத்திலேயும் அவளுக்குச் சிரிப்பு வராமல் இருக்குமா. "என்னால் முடியாது நீயே ஊது" என்றாள்.

"ஐய, உனக்கு வராதா? பார், நான் ஊதுறேன்" என்றபடி கழுத்து நரம்பைப் புடைத்து கன்னத்தை உப்பிக் கொண்டு கெட்டியாக ஊதினான். பீப்பி என்று ஊதிக் கொண்டிருந்த போதே மான் கூட்டம் ஒன்று மேலிருந்து இறங்கி சாலையின் மேல் காதை நிமிர்த்திக் கொண்டு சிலையைப் போல் நின்று, ராமனின் கவனத்தை ஈர்த்தது. "ஐயோ, அங்கே பார், அங்கே பார்" என்று அந்தப் பெண்மணியின் முகத்தை திருப்பிக் காட்டினான். ஒரே ஒரு நிமிஷம். அடுத்த கணம் மான் கூட்டம் மாயமாய் மறைந்தது. எதிர்ப் பக்கத்துச் சரிவில் மூங்கில் காட்டுக்குள் நுழைந்தது. "மான் உங்க வீட்டில் இருக்குதா" என்று கேட்டான். அவள் நெஞ்சில் சம்மட்டி அடிப்பது போல அடித்துக் கொண்டிருக்கும் போது அவனுடைய இந்த மழலைக் கேள்விக்கு என்ன பதில் சொல்ல முடியும்?

ஒருதடவை குரலை உயர்த்திக் கத்தினான் சிவராமன். "என் பிணம் இங்கே விழுந்த பிறகு தான் அவனை அழைத்துக் கொண்டு போகலாம் நீங்கள்." மறுபடியும் சதானந்த பட்டர், சீனப்பா எல்லாரும் முன்னே வந்தார்கள். மஞ்சய்யா தடதட வென்று வண்டியின் பின்னால் வந்து அவனை இங்கே கொடு—என்றார். அதிகாரத் தோரணையில். "நீ கொடுத்தால் உன் பிணம் விழும். தெரிந்ததா?" என்றான் சிவ ராமன். பாவம் அந்தப் பெண்மணி என்னதான் செய்வாள்?இந்தக் கலவரத்துக்கு இடையில் ராமன் டக்கென்று பாய்ந்தான். அவள் சரக்கென்று திரும்பி அவன் கையைப் பிடித்தாள். கீழேயிருந்து மஞ்சய்யா அவனுடைய மற் றொரு தோளைப் பிடித்து இழுத்தார். இப்போது ராமனுக்கு உண்மையாகவே வலித்தது. "அப்பா வலிக்குது" என்று அழுதான். சிவராமன் ஓடி வந்து மாமன் கையைப் பிடித்து இழுத்தான். மற்றவர்களும் ஓடி வந்தார்கள். யார் இழுத்தார்களோ என்ன ஆயிற்றோ ஒன்றும் புரியவில்லை ராமனுக்கு, எப்படியோ தரையில் ராமன் அந்தப் பெரியவன் கால்களுக்கு இடையில் சிக்கிக் கொண்டான். தலையை நிமிர்த்திப் பார்த்தால், பெரிய பெரிய தொடைகள், தாடைகள் தெரிகின்றன அவனுக்கு. அம்மா சொன்ன ராட்சசர்கள் துண்டு துண்டாகப் பயப்படுத்தினார்கள். அம்மா அம்மா என்று நடுங் கினான். அப்பா என்று நடுங்கினான். ஜம்பு அவனை வெளியே இழுத்துத் தூரமாய்க் கொண்டு போய் சமாதானப்படுத்துவதற்கு முயற்சி செய்தான். ராமன் உண்மை யிலேயே கிடுகிடுவென்று நடுங்கத் தொடங்கினான். அவர்கள் ஏன் அப்படிச் செய்கிறார்கள் என்று கேட்கிறான்.

ஒரு பத்து நிமிஷம் கழிந்திருக்கலாம். மஞ்சய்யா வந்தவர் ஜம்புவின் தோளிலிருந்து ராமனைப் பறித்துக் கொண்டு நேராகக் காருக்குப் போனார். அவனை உள்ளே தள்ளினார். வண்டியின் பக்கத்திலிருந்து சிவராமன் ஏதேதோ கத்தினான். இடம் மாறியதில் ராமன் பயந்து போனான்.

காரில் எல்லாரும் உட்கார்ந்தார்கள். அது மீண்டும் ஊர்ப் பக்கம் புறப்பட்டது. காரில் மெத்தென்ற இருக்கை, வண்டியின் புல்படுக்கையை விட இதமாயிருந்தது ராமனுக்கு. ராமன் பின் கண்ணாடி வழியாகப் பார்த்தான். வண்டி, பெண்மணி, பெரியவன் எல்லாரும் தூரம் தூரமாகப் போனார்கள். சிறியதாக ஆனார்கள். ஒரு திருப்பத்தில் எல்லாரும் மறைந்து போனார்கள். வண்டி மறைந்த பிறகுதான் ராமனுக்கு பொட்டலத்தின் நினைவு வர வேண்டுமா? "ஐயோ அங்கே சேவைப் பொட்டலம் இருக்கிறது" என்றான். 'சும்மா உட்கார்' என்றார் தாத்தா. "சந்தையில் வாங்கிக் கொடுக்கிறாயா?" என்று கேட்டான்.

"ஆகட்டும், நீ புத்திசாலி. சும்மா இரு" என்றார் சதானந்த பட்டர். 'நாம் எங்கே போகிறோம்' என்று கேட்டான். "வீட்டுக்கு" என்று பதில் வந்தது யாரிடமிருந்தோ. "அப்பா, அப்பா, அவுங்க வீட்டில் மான் இருக்குதாம். அப்பா, எனக்கும் வாங்கிக் கொடுக் கிறாயா?" என்று கேட்டான் அவர் தாடையைப் பிடித்துக் கொண்டு. "சும்மா இரு" என்றார் மஞ்சய்யா, கோபத்தில். துவண்டு போனான் ராமன். "வண்டியை விட இதுவே நன்றாய் இருக்கிறது" என்றான். இன்னும் என்னென்னவோ சொன்னான். யார் மனத்தில் அமைதி இருந்தது, அவன் பேச்சைக் கேட்க.

"ஆமாம், மஞ்சய்யா இந்தத் தடவை என்னவோ நீ ஜெயிச்சுட்டே. இனிமேல்...?" என்றார் பட்டர். காலையிலிருந்து நடந்த நிகழ்ச்சிகள், அதைத் தொடர்ந்து பின்னாலே நடந்தது, இனி நடக்கக் கூடியது இந்த எல்லாமே மஞ்சய்யனை ஒரே நிமி ஷத்தில் குலையச் செய்து விட்டன. கூடவே "கல்யாணம் பண்ணிக் கொடுத்த பெண்ணை வீட்டிலேயே வச்சிருப்பது உங்களுக்கே சரியாகத் தோணுகிறதா? அப்பா, அந்த பெண்ணுக்கு என்ன கர்வம்!" என்றார். அப்பா, அப்பா, என்று ஏதோ புதிய விஷயத்தை சொல்லத் தொடங்கினான் ராமன். அவர் அதில் கவனம் செலுத்தினால் தானே? அவர் மனம் சஞ்சலப்பட்டுத் திரிந்தது. பீப்பி நினைவிற்கு வந்தது. பையிலிருந்து எடுத்துக் கெட்டியாக ஊதினான். "என்னடா இது தொல்லை" என்றார் மஞ்சய்யா. ராமன் பயந்து விட்டான். ஆனால் சொல்கிற பேச்சைக் கேட்கிற வயதா? மெல்ல ஊதிக் கொண்டிருந்தான். சிவராமன் தங்கள் கடைக்கு வந்தது, ராமனைத் தூக்கிக் கொண்டு போனது, தான் அவனைப் பின்பற்றியது முதல் எல்லா வற்றையும் சொன்னார் சதானந்த பட்டர். "எவ்வளவு உபகாரம் செய்திருக்கிறாய் நீ, சதானந்தா" என்றார் மஞ்சய்யா, கார் சந்தையைத் தாண்டிப் போகும்போது ராமன், "அப்பா அப்பா" என்று கிசுகிசுத்தான், அது தாண்டிப் போகிறதே என்ற கவலை.

கார் 'பாம்பாம்' என்றபடி வீட்டுக்கு முன்னால் நின்றது. ராமன் பார்த்தான் ஒரு திருவிழாக் கூட்டமே சேர்ந்திருக்கிறது. எல்லாரும் ஒட்டு மொத்தமாக 'வந்துட்டாங்க, வந்துட்டாங்க' என்று கத்தினார்கள். காரிலிருந்து ஒவ்வொருவராக இறங்கினார்கள். "இறங்குடா குழந்தை" என்றார் மஞ்சய்யா. அவ்வளவு அழகான காரை விட்டு வருவதற்கு மனம் வருமா? ஆனால் அவ்வளவு பேர் தன் பக்கமே பார்த்துக் கொண் டிருக்கிறார்கள் என்னும் பெருமையில் இறங்கினான். கூட்டத்தை விலக்கிக் கொண்டு பார்வதி ஓடிவந்து அவனைத் தூக்கி முத்தமிட்டு இறுக்கி அழுதாள். "எங்க போனே என் தங்கமே, என் உயிர் போகாம இருந்ததே" என்று சொல்லிக் கொண்டே. அம்மாவைப் பார்ப்பதில் மகிழ்ச்சி ஏற்பட் டாலும் அவள் தனக்குச் செய்கிற இம்சையில் வலி உண்டாகி 'விடுவிடு' என்று திமிறினான். தாயும் மகனும் முன்னால் மற்றவர்கள் பின்னாலும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். உள் அறையிலிருந்து கல்யாணி

"வந்துட்டதா, குழந்தை வந்துட்டதா? அவர் வந்தாரா?" என்று என்னென்னவோ புலம்பினாள். ஜனங்களின் நடுவே நின்றிருந்த அப்பு ராமனை அழைத்தான், அவனிடம் போக வேண்டும் என்று தோன்றியது. ஆனால் பீப்பி விஷயம் நினைவிற்கு வந்து 'போடா நீ ஒருத்தன்' என்றான்—முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, தாயின் இருப்பில் இருந்தபடி.

"அப்பா, எங்க கிடைச்சான் இவன்? நீ எங்கதான் போயிருந்தே?" என்று பத்துப் பன்னிரண்டு கேள்விகளைப் போட்டாள் பார்வதி—சுவரில் சாய்ந்து உட்கார்ந்தபடி. "போயிருந்தேன், சுடு காட்டுக்கு" என்றார் மஞ்சய்யா. துணியை வீசிவிட்டு ஊஞ்சலின் மேல் உட்கார்ந்தபடி.

அங்கே நின்றிருந்தவர்கள் ஒவ்வொருவராகத் தம்முடைய வேலை நினைவிற்கு வர நடந்தார்கள், அங்கிருந்து. மிச்சமிருந்தது சதானந்த பட்டர் ஒருவரே. நடந்ததையெல்லாம் ஒரிரண்டு வார்த்தைகளில் சொல்லி முடித்தார். தொடையின் மேல் சுருண்டு படுத்திருந்த குழந்தையின் பயந்த முகத்தைப் பார்த்துப் பார்த்து "ஐயோ குழந்தையே" என்று அழுதாள். ராமனும் கேவினான்.

தாய், குழந்தையின் அழுகை கொஞ்சம் குறைந்தபோது சதானந்த பட்டர் சொன்னார். "ஒரு தடவை இப்படிச் செய்தவன் இனிமேல் எதை வேண்டுமானாலும் செய்வான், உன் மருமகன். அதற்காகத்தான் சொல்கிறேன். உங்கள் பிடிவாதத்தில்..."

மஞ்சய்யா குறுக்கே பேசினார் "ஆமாம். அந்தத் தேவடியாளும் அதேதான் சொன்னாள். இப்போது நீ அதே முறையில் பேசுகிறாய். நான் என்ன செய்யணும். அதையாவது சொல்லலாம் இல்லையா?" அவர் குரலில சலிப்பு இருந்தது. கோபம் இருந்தது. ஆனால் அதனால் பட்டருக்குச் சலிப்பும் ஏற்படவில்லை, கோபமும் வரவில்லை. மாறாக, எப்படியும் பார்வதி எதிரில் இருக்கிறாள்; படுக்கை அறையில் அவள் தாயும் இருக்கிறாள்; தன் பேச்சு அவளுக்கும் கேட்கும், கேட்பது நல்லது என்று எண்ணி—

"தப்பு உன்னுடையதுதான் என்று நான் சொன்னேன், மஞ்சய்யா. உன் குடும்பத்தைப் பற்றி என்றைக்குமே பார்வதியின் எதிரில் நான்பேசியவன் அல்ல. இன்றைக்கு நான் விரும்பாததெல்லாம் நடந்துவிட்டது. அதனால் நாலு பேச்சுப் பேசலாம் என்று நினைத்தேன். பார்வதி என்னைத் தப்பாக நினைக்க மாட்டாள். என்ன இருந்தாலும் நான் எடுத்துக் கொஞ்சிய குழந்தை யல்லவா அவ? உண்மையைச் சொல்ல வேண்டுமானால் அவளுடைய கல்யாணத்துக்குப் பிறகு அவளை நான் சரியாகப் பார்ப்பது இன்றைக்குத்தான், இல்லையா? எவ்வளவு நன்றாக இருந்தவ இப்படி ஆகியிருக்கிறாளேன்ன எனக்கு உண்மையில் வேதனையாக இருக்குது" என்று சொல்லும்போது பார்வதி விக்கி விக்கி அழுதாள். "என் தலை எழுத்து. என் தலை எழுத்து" என்று. "ஏனம்மா" என்று பயத்தில் ராமனும் அழுதான்.

"வாடா, குழந்தை உன்னை ஒரு தடவை பார்க்கலாம்" என்று உள்ளேயிருந்து பாட்டி அழைத்துக் கொண்டே இருக்கிறாள். ஆனால் ராமனுக்கு இப்போது அந்த இருட்டு அறையை நினைத் தாலே ஏதோ அச்சம் ஏற்பட்டு 'ஊஹூம்' என்றபடியே தாயின் தொடைமேல் அழுத்தமாக உட்கார்ந்திருக்கிறான். சதானந்த பட்டர் தன்னுடைய பேச்சின் தொடர்பை விடாமல் சொன்னார். "மஞ்சய்யா, உன்னுடைய இந்த வீட்டில் இன்றைக்கு யார் சுகமாக இருக்கிறார்கள். சொல் பார்க்கலாம். உன்

மனைவி படுத்த படுக்கையாக கிடக்கிறா. பார்வதியின் கதியும் இப்படி இருக்குது. இதையெல்லாம் பார்த்தும் உன் மனம் என்ன கல்லா, சந்தோஷப் படுவதற்கு? வேணாம், நம்முடைய பேச்சே வேணாம். எனக்கும் உனக்கும் இன்னும் நேரம் வரலை, அவ்வளவுதான். எமராசன் வா என்னும் போது நாம் புறப்படத் தயாராக இருக்கணும். அப்புறம் என்ன என்பதை யோசித்துப் பார். பார்வதியின் கதி என்ன? இந்த ராமனின் எதிர்காலம் என்ன ஆகும்? நாளை அவன் பெரியவன் ஆகும்போது உங்களையும் தன் தாயையும் அவன் திட்டக் கூடாது" அவர் ராமனைச் சுட்டிக் காட்டி இதைச் சொல்லும்போது அவ னுக்குத் தன்னைப் பற்றியே அவர்களெல்லாம் ஏதோ பேசுகிறார்கள் என்ற தோன்றி பட்டரிடமிருந்து தாத்தாவிடமும், தாத்தாவிடமிருந்து அம்மாவின் பக்கமும் ஆழமாகப் பார்வையைச் செலுத்துகிறான்.

உள்ளேயிருந்து ராமனின் பாட்டி இருமல் குரலில் குறுக்கிட்டு "யார் அது சதானந்தனா? குரலைக் கேட்டு அப்படித்தான் இருக்கணுமின்னு நினைச்சேன். ஆமாம் சதானந்தா—உன் தம்பி வெங்கடேசனின் மக, அந்த ஹோட்டல் பையனோடு மலையைத் தாண்டி ஒடிப் போனான்னு சொன்னாங்களே! உண்மைதானா?" என்று கேட்க வேண்டுமா?

அம்மா சொன்னது சரியாகிவிட்டது என்று மகிழ்ச்சியோடு பல்லைக் காட்டினாள் பார்வதி.

மஞ்சய்யனுக்குத் தலை சூடேறியது. "நீ சும்மா விழுந்து கிடக்கக் கூடாதா அங்க. உன் பேச்சைக் கேட்டுத்தான் இப்படி ஆச்சு" என்றார்.

"என் பேச்சைக் கேட்டு நடந்ததுதான் என்ன" என்றாள் கல்யாணி. உள்ளே இருந்து கோபத்துடன்.

"வாயை நீட்டாதே, தெரியுதா" என்று அதட்டினார் மஞ்சய்யா.

"ஏ பாட்டி, சும்மாயிரு. ஒகோ" என்றான் ராமன் பெரிய ஆண்பிள்ளையைப் போல் நடித்து, தாயின் முகத்தைப் பார்த்துச் சிரித்தபடி.

பாட்டி உள்ளே இருந்து இன்னும் ஏதோ சொன்னாள். மஞ்சய்யா பாய்ந்தார். அவர்கள் இருவரும் இப்படிச் சண்டை போடும் போது ராமனுக்குத் தாய்தான் தஞ்சம். ஏனோ அச்சப்பட்டு இன்னும் உடம்பைக் குறுக்கிக் கொண்டு உட்கார்ந்தான். தாயின் மடியின் மீது. பையில் மிச்சமிருந்த தின்பண்டம் தொடையை உறுத்திய போது, அதன் நினைவு வந்து டக்கென்று எழுந்து பையிலிருந்து அதை எடுத்து "அம்மா இங்கே பார், யார் வாங்கிக் கொடுத்தது தெரியுமா?" என்று கேட்டபடி அவளுக்குக் காட்டி னான். "உனக்கு வேணுமா" என்றே கேட்டான். வேண்டாம் வேண்டாம் என்றாலும் அவள் வாயில் ஒரு துண்டைத் திணித் தான். "உன்னோடு பெரிய தொல்லை" என்று அவளும் அதை விழுங்கினாள், வேறு வழியில்லாமல்.

மஞ்சய்யா முழங்கினார்— "இதோ பார் சதானந்தா, எனக்கு இதெல்லாம் இஷ்டம் என்று நினைக்கிறாயா, இதெல்லாம் தெரியாது என்று நினைக்கிறாயா, இந்தத் தேவடியா கல்யாணம் ஆன மூணாவது நாளே என்னால முடியாதுன்னு அவன் வீட்டிலிருந்து ஓடிவந்தாளே, அன்னைக்கே இது சரியில்லை, இது கூடாதுன்னு நான் ஆயிரம் தடவை சொன்னேன்— இங்கே என் பேச்சைக் கேட்கிறவங்க யார் இருக்கிறாங்க. அம்மா அம்மான்னு இவ அழுதா. அவ அங்கே படுத்திருக்கிறாளே இவளுடைய அம்மா! இவ சொன்னதற்கு ஏற்றபடி தைதைன்னு கூத்தாடினா. ஒரு தடவை இப்படி ஆனது தொடர்ந்தது, அவ்வளவுதான். இந்த ராமன் வயிற்றில்

இருக்கும்போதே வந்துட்டா. மறுபடியும் அங்கே போவதில்லை என்று. என் மகள் எனக்குச் சுமையில்லைன்னு சொல்லிட்டா அவ. தெருவில் நடமாட வேண்டியவன் நான் தானே. இந்தப் பொட்டைக் கழுதைகளுக்கு என்ன?"

ராமனைச் சட்டென்று பக்கத்தில் உருட்டிவிட்டு எழுந்தாள். பார்வதி. "அப்பா, நீங்க அப்படியெல்லாம் ஏன் சொல்கிறீர்கள்? அவருடன் இருக்கக் கூடாதுன்னா வந்தேன்? அவர் கொடுத்த வேதனை ஒன்றா இரண்டா? நான் என்ன எந்தப் பெண்ணுமே அவருடன் இருக்க முடியாது. இப்போது என்ன காலம் வந்தது. அவர வர்கள் செய்த தப்பு அவரவர்களுக்குத் தெரிகிறது" ஒ என்று அழுதாள். அவளுக்கு மேலும் அங்கே இருக்க முடியலை.

"வாடா சனியனே" என்று ராமனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு தாயின் அறையை நோக்கிப் போனாள். "யாருககும் நான் சுமையாக இருக்க வேண்டாம். எங்கேயாவது பாழாய்ப் போகலாம்" என்று சொல்லிக் கொண்டே.

"ஐயோ விடும்மா, விடும்மா" என்று கத்திக் கொண்டே இருந்தான் ராமன். தாயும் மகளும் என்னென்னவோ பேசிக் கொண்டார்கள் உள்ளே. ஒரு தடவை பார்வதி உரத்த குரலில் தாயை என்னவோ திட்டினாள். கல்யாணி அழுவதும் கேட்டது. ராமன் பயந்து போய் வெளியே ஓடிவந்து தாத்தாவின் மடியில் ஏறிக் கொண்டான்

"என்னதான் சொல்லு, மஞ்சய்யா, உன் மருமகன் நீங்க ளெல்லாம் நினைத்திருக்கும் அளவுக்குக் கெட்டவன், கொடுமைக்காரன் என்று நான எப்போதுமே நினைக்க மாட்டேன். இன்றைக்கு நானே பாாத்தேனே. ஏன் நீயும்தான பார்ததாய், மகன் மேல் இவ்வளவு ஆசை இராவிட்டால், அவன் அப்படிச் செய்திருபபானான்னு தோனுது எனக்கு ராமனைத் திருப்பிக் கொடுப்பதானால் பிணம் விழ வேண்டும் என்றான். பெண்டாட்டி, பிள்ளை என்னும் ஆசையில்லாமல் அநதப் பேசசு அவன் வாயி லிருந்து வந்திருக்குமா? ஏன்? அவன் பணத்தைப் பார்த்து யாரும் இன்னொரு பெண்ணைக் கொடுக்க மாட்டார்கள் என்பது இல்லையல்லவா."

எதுவும் ஞாபகத்துக்கு வராவிட்டாலும் தனக்காக, அந்தப் பெரியவனும் தாத்தாவும் கையைப் பிடித்து இழுத்தது இன்னும் ராமனின் மனத்தில் பசுமையாகவே இருந்ததால் அந்தப் பெரிய மனிதருடைய நினைவும் அந்தப் பெண்ணின் நினைவும், மானின் நினைவும், வண்டியின் நினைவும் எல்லாமாகச் சேர்ந்து கொண்டான். "ஆமாம் அப்பா, அந்த வண்டி எவ்வளவு அழகு தெரியுமா அங்கே, அவுங்க வீட்டில் மான் இருக்கிறதாம். அப்பா, எனக்கு மான் வாங்கித தருவியா?" என்று அவன் கழுத்தைப் பிடித்துக் கொண்டு கேட்டான். அந்த நேரத்துக்கு, பார்வதி தாயின் அறையிலிருந்து வெளியே வந்து, "குழந்தை மாத்திரம் அவருக்கு வேணும். நான் தேவையில்லாம போயிட்டேன் இல்லையா?" என்றாள் கோபத்துடன்.

"இப்போது இப்படியெல்லாம் சொல்லுற நீ, அவன் எத்தனையோ தடவை வந்து உன் அப்பாவைக் கேட்டபோது இவன் என்ன பதில் சொன்னானாம், சொல் பார்க்கலாம். நீ மட்டும் என்னவாம்? வாசலுக்கு வந்த கணவனை எந்த ஊர் உனக்கு என்று கேட்டிருக்கிறாய். இதே உன் அம்மா அவன் முகத்துக்கு நேராக என்னென்ன சொன்னாள். சிவராமன் என்னிடம் எல்லாம் சொல்லியிருக்கிறான். கண்ணீர் விட்டு அழுதிருக்கிறான்" என்று சதானந்த பட்டர் சொன்னபோது பார்வதிக்கு அவமானமாய் இருந்தது.

"பாருங்க, நீங்க என்னை என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். ஆனா ஜீவனில்லாமல் கிடக்கும் என் அம்மாவைப் பற்றி ஏதாவது சொன்னால் நான் சும்மா

இருக்க மாட்டேன்" என்று சொல்லியபடி தந்தையின் தொடைமீது இருந்த மகனை இழுத்து இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு அம்மாவின் அறைக்குள் போனாள். அங்கேயிருந்து இங்கேயும், இங்கேயிருந்து அங்குமாக பந்தைப் போல தன்னைப் பிடித்து ஆட்டி வைக்கும் பெரியவர்களைக் கண்டு பயமாக இருந்தது ராமனுக்கு.

"வாயை மூடு பார்வதி, பெரியவர்கள் என்னும் மரியாதை யாவது கொடுப்பதற்குக் கற்றுக் கொள்" என்று கர்ச்சித்தார் மஞ்சய்யா. "பெரியவர்கள் பெரியவர்களாகவே இருந்தால் கிடைக்கிற மரியாதை கிடைக்கவே செய்யும்" என்றாள் தந்தையைப் பார்த்து. "உன் கொழுப்புக்கு..." என்று கத்தினார் மஞ்சய்யா. அவளுக்கு அழுகை வந்தது. "ஆமாம் எனக்குக் கொழுப்பு. ஏன்? எனக்கு வேண்டியதெல்லாம் இங்கே இருக்கிறது என்றா? ஐயோ எந்தச் சுகத்துக்காக வாழ வேண்டும்" என்று ராமனைத் தரையில் வீசித் தலையை முட்டிக் கொண்டாள் கதவில். சதான்ந்தபட்டர் ஓடிப் போய் அவளைத் தடுக்க முயற்சி செய்தார். "விடுங்க. என்னைத் தொட வேணாம். நான் செத்துப் போறேன். என்னால் தானே இதெல்லாம்" என்று திமிறினாள். ராமன் கிடுகிடுவென்று நடுங்கினான். 'அம்மா அம்மா' என்று அலறினான். ஆனால் அவள் அருகே போகும் தைரியம் மட்டும் வரவில்லை. மஞ்சய்யனுக்கு இந்தக் காட்சியே வெறுப்பூட்டியது. தலை சூடேறியது. "சாகப் போகிறாயா முண்டை, சாகப் போகிறாயா" என்று சொல்லிக் கொண்டே சடாரென்று அவள் கன்னத்தில் அறைந்தார்.

"ஐயோ, நான் செத்தேன்" என்று அலறினாள்.

"மஞ்சய்யா, என்ன செய்கிறாய் நீ" என்று சதானந்த பட்டர் கோபித்துக் கொண்டார். எல்லாரும் ராட்சதர்களைப் போலத் தோற்றமளித்தார்கள் ராமனுக்கு. "அப்பா" என்று கூவினான். ஆனால் யார் அருகிலும் போவதற்குத் தைரியமில்லை. "போதாதற்கு நீ ஒருத்தன். வாடா ஏரியிலோ குளத்திலோ விழுந்து சாகலாம், இந்த நரகம் யாருக்கு வேணும்" என்று ராமனைப் பிடிக்கப் போனாள். ராமனுக்கு எல்லாமே பயங்கரமாகத் தோன்றியது. புதியதொரு ராஜ்ஜியத்தில் இருப்பதைப் போலத் தோன் றியது. விரித்த கூந்தலும் முந்தானை விலகிய தோற்றமுமாக அம்மா கதையில் வருகிற ராட்சசியைப் போலத் தோன்றினாள். அவன் பின்னாலே போனான். அழுது கொண்டே வாசல் வரைக்கும் வந்தான். படியைத் தாண்டினான். பையில் கை விட்டான். பீப்பி கிடைக்க வேண்டுமா அங்கே? அப்புவின் நினைவு வந்தது. திருடினால் ராட்சசர்கள் வந்து... தாய் சொன்ன கதை ஞாபகத்துக்கு வந்து, அவனிடம் பீப்பியைத் திருப்பிக் கொடுப்பதே சரி என்று நினைத்து, அங்கே நிற்காமல் அப்புவின் வீட்டை நோக்கி ஓடினான் ராமன்.

# சிராத்தம்

டி.ஜி. ராகவ்

நேற்று சனிக்கிழமை. ஆபீஸில் சீனிவாசன் "நாளைக் காலை சினிமாவுக்குப் போகலாமா" என்ற போது, "நாளைக்கு முடியாது, எங்கள் அம்மா, அப்பாவின் திதி என்று ஏதோ சொன்னது போல் இருந்தது," என்றேன். இதென்ன இப்படிப் பேசுறீங்க என்று அவர் கண்ணில் வியப்பு சந்தேகம், கிண்டல், வெறுப்பு எல்லாம் நிரம்பி என் முகத்தைப் பார்த்தபோது நான் சொன்ன முறை தப்பு என்று தோன்றி, உடனே 'இல்லை, தமாஷுக்கு சொன்னேன்' என்றேன். "எனக்கு இதென்ன இப்படிச் சொல்கிறீங்களேன்னு ஆச்சர்யமாக இருந்தது" என்றபடி பெருமூச்சுவிட்டவரைப் போல அமைதியடைந்து, 'பாருங்க, எங்க அப்பா திதி கார்த்திகை மாதம் வளர் பிறை நவமியன்று வருது, கார்த்திகை மாதம் தொடக்கத்திலேயே புரோகிதர் வீட்டுக்குப் போய் விசாரித்துத் தேதியைத் தெரிந்து கொண்டு வந்துடுவேன், சிரத்தையோடு செய்வதுதானே சிராத்தம்" என்றார். ஆமாம், என்றேன். "அப்படியானால் நாளை வரவில்லை" என்றார். இல்லை, என்றேன்.

காலையில் குளிக்கப் புறப்பட்டபோது அம்மா முதல் நாள் இரவில் மடியாகப் போட்டிருந்த வேட்டியைத் தரட்டுமா என்று கேட்டார். வேண்டாம், என்று முரட்டுத்தனமாகப் பதில் சொன்னேன். ஒன்றும் பேசாமல் போய விட்டார். குளித்து விட்டுத் துவைத்த துணிகளை அணிந்து கொண்டு வந்தேன். தலை வாரிக் கொண்ட பிறகு வெளியே போகலாம் என்று தோன்றியது. உடுத்திக் கொண்டிருந்த போதே அம்மா வந்து "பதினொரு மணிக்குள் வந்துடு," என்றார். "நான் அந்த நெருப்புக்கு முன்னால் உட்கார மாட்டேன், எனக்கு இஷ்டம் இல்ல" என்று கத்தி பதிலுக்குக் காத்திராமல் ஷு போட்டுக் கொள்ளத் தொடங்கினேன். சட்டென்று தோன்றியது. நம்பிக்கை இல்லையென்று சொல்லியிருக்க வேண்டும். இஷ்டத்துக்கும் நம்பிக் கைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள தூரம். எனக்கு நம்பிக்கை இல்லையா அல்லது இஷ்டமில்லையா? எது உண்மை! ஆனால் சொல்லிவிட்ட பேச்சைத் திரும்ப எடுத்துக் கொள்ள முடியாதல்லவா? அம்மா தம்பியிடம் 'கொஞ்சம் காப்பி குடிக்கிறாயாடா, காப்பிக்குத் தோஷம் இல்லை' என்ற போது அவன் சீறினான்.

வீட்டிலிருந்து புறப்பட்டேன். இஷ்டமில்லை என்று ஏன் சொன்னேன்—இப்படி எண்ணி அதுவும் சரிதான் என்று நினைத்துக் கொண்டேன். உண்மையில் எனக்கு இஷ்டமில்லாத, நான் அன்பு செலுத்தாத பித்ருக்கள். அப்பாவைப் பற்றி என் மனத்தில் இருப்பதெல்லாம் கசப்பான நினைவுகள்—தான்பிடித்து வைத்த தண்ணீரைக் கொடுப்பதில்லை என்று கூச்சல் போட்ட போது கக்கூசுக்குப்போய் காகிதத்தில் துடைத்துப் போட்டது; படுக்கையிலிருந்து சீக்கிரம் எழுந்திருக்கவில்லை யென்று உதை வாங்கிக் கொண்டது; நெற்றியில் ஏதும் வைக்காமல் சாப்பிட

உட்கார்ந்து விட்டேன் என்பதற்காக முகம் நிறைய எச்சிலைத் துப்பியதில் சாப்பிடாமல் எழுந்தது; ஆனால் அப்பாவின் தர்மாஸ் பிளாஸ்கை உடைத்த போது அப்பா ஏதும் சொல்லாமல் இருந்தது—மறந்துவிட வேண்டும், துடைத்து விட வேண்டும் என்றும் தோன்றினாலும் பிசாசாக வந்து தொல்லைப் படுத்தும் அப்பா வின் நினைவு. என் மனத்தில் அழியாமல் நின்றுவிட்ட இந்தப் பித்ருப் பேயிடமிருந்து எனக்கு விடுதலையே இல்லையோ என்று தோன்றி, என் இயலாமையைப் பற்றி நெற்றியில் சிந்தனை கவிந்து மறைந்து போயிற்று. பெருமூச்சுவிட்டேன். ஓட்டலில் சிற்றுண்டி தின்ன வேண்டும் என்று தோன்றினாலும், தின்னாமல் காப்பி குடித்து இரண்டு சிகரெட்டைப் பிடித்தேன்.

வீட்டுக்கு வந்த போது, "செத்தவர்கள் மேலும் ஏதோ வெறுப்பு, எனக்குத் தெரிய வில்லை", என்று சொல்லிக் கொண்டிருந்த அம்மா, என்னைப் பார்த்த உடனே சும்மாயிருந்து விட்டாள். இன்னும் புரோகிதர் வந்திருக்கவில்லை. என் தம்பி குளித்து விட்டு மடி உடுத்திக் கொண்டு உட்கார்ந்திருந்தான். சமையல் செய்ய வந்திருந்த பிராமணன் மந்திரம் சொல்லி அவனுக்குப் புதிய பூணூல் போட்டான். நான் பூணூல் போட்டது ஒரே நாள்தான். உபநயனம் ஆன மறுநாள், அது உடம்பில் உறுத்துகிறது என்று அம்மாவிடம் சொல்லி ஆணியில் மாட்டிவிட்டவன் போன வருஷம் திதியன்று போட்டுக் கொண்டேன்.

"மனிதன் செத்ததும் ஜனங்க ஏன் அவனை மன்னிச் சிடறாங்க? இப்படியெல்லாம் நம்மீது வெறுப்புக் காட்டும் அவருக்குச் சாகும்போது வாயில் ஒரு சொட்டுத் தண்ணீர் விடக்கூட யாரும் இருக்கப் போறதில்லை, பார்த்துக் கொண்டேயிரு" என்று சொல்லிய அம்மா, மூன்று நாட்களுக்கு முன்னாலிருந்ததே சிராத்தத்தைப் பற்றிச் சிரத்தையாகப் பேசுவது எனக்குப் புரியவில்லை. செத்தவன் பேயாகி வந்து தொல்லைப்படுத்துவான் என்றா? நரகத்தில் கிடந்து உழல்கிறான் என்றா? இல்லை. தான் நகரத்தில் உழல வேண்டி வரும் என்றா? ஏன்? அவிழ்க்க முடியாத முடிச்சாகத் தோன்றியது எனக்கு மனிதனின் சுபாவம்.

எனக்கென்னவோ அப்பா செத்த செய்தி கேட்டபோது அப்படியொன்றும் வருத்தம் ஏற்படவில்லை; கண்ணில் நீர் வரலாம் என்று நினைத்திருந்தேன், வர வில்லை. ஆனால் பிணத்தை எடுக்கும்போது எல்லாரும் அழுது கொண்டிருக்க, நான் அழுகையை அடக்க முயற்சி செய்து கொண்டிருக்க யாரோ என் பக்கம் பார்த்து, "இந்த அநாதைப் பிள்ளைகளைப் பார்த்தா தாங்கலைம்மா," என்று சொன்னபோது என் கண்ணிலும் நீர் வரத் தொடங்கியது. இது என்னுடைய சொந்தத் துக்கம் அல்ல, இன்னொருவர் அழுவதைப் பார்த்தால் எப்படிப் பட்டவர்களுக்கும் கண்ணில் கண்ணீர் வரும். நான் உணர்ச்சி வசப்படக் கூடாது என்று மனத்திலேயே சமா தானம் செய்து கொண்டேன். அப்பாவைச் சுட்டெரித்துவிட்டு வந்த அன்று இரவு கண்ணை மூடினால் கண் எதிரில் சிதை எரிவது தெரிந்தது.

பன்னிரண்டு மணி அளவில் புரோகிதர் வந்தார். அக்காவின் குழந்தையுடன் ஆடிக் கொண்டிருந்த நான் என் அறைக்குள் போய்க் கதவைத் தாழ் போட்டுக் கொண்டு ஜன்னலில் தெரிந்த ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தேன். பைஜாமா ஷர்ட்டுகளுடன் அவர்கள் முன்னால் திரிவதற்கு வெட்கம், கூச்சம், கூடவே தப்பு செய்த உணர்ச்சி. ஆனால் புரோகிதரின் ஏன், என்ன என்பதற் கெல்லாம் முரட்டுத் தனமாகப் பதில் சொல்லி அவருடைய, வீட்டாருடைய மனத்தை

நோகச் செய்வதில் விருப்பமில்லாததால் அறைக்குள் போய் கதவை மூடிக் கொண்டேன் என்று மனத்துக்குச் சமாதானம் சொல்லிக் கொண்டேன்.

அறையின் பக்கத்து ஹாலிலேயே புரோகிதர் உட்கார்ந்திருந்தார். அவருடைய எதிரில் என் தம்பி வந்தான் என்று தோன்றுகிறது. இன்னொருவர் எங்கே என்று கேட்டார். இல்லை, நான் ஒருவன் மட்டுமே என்றான் தம்பி. சரி, என்றார். ஓம், பூர்புஸ்வ—மந்திரம் தொடங்கியது. மந்திரத்தின் பொருளைத் தொடர முயன்றேன். புரோகிதர் வேகமாகவும் ராகமாகவும் சொல்லிக் கொண்டிருந்ததால், கஷ்டமான சொற்கள் வேறு இருந்ததால் அது கஷ்டமாக இருந்தது ராகமாக வந்து கொண்டிருந்த மந்திரம் மூளையில் ஒருவகை மயக்கத்தை உண்டாக்குகிறது என்றெண்ணி, சம்ஸ்கிருத சுலோகங்களை ராகத்தோடு சொலலி ஜனங்களை முட்டாளாக்குவது சுலபம் என்று தோன்றியது. புரோகிதர் மந்திரத்தை நிறுத்தி டக்கென்று சொனனார்— "நீ ஒருவனாவது ஆசாரம், சீசாரம் வைத்துக் கொண்டிருக்கிறாயே, எனக்கு ரொம்பச் சந்தோஷம், ரொம்பச் சந்தோஷம, விட்டுடாதே, உனக்கு நல்லது நடக்கும்."

சட்டென்று என் மனத்தில் பயம் ஏற்படடது பிராமணார்த்தத்துக்கு வந்திருந்த வர்களில் ஒருவன் மெதுவாக, "எல்லாவற்றையும் குறைவில்லாம செய்யுங்க, புரோகிதரே! நமக்கும சௌகர்யமாக இருக்கும்" என்றான் தம்பி ஏன் என்று கேட்டான். "ராத்திரி சாப்பிடக் கூடாது இல்லையா, அதனால் லேட்டாகிற அள வுக்குச் சௌகர்யமதான்" என்று சொல்லிச் சிரிததான். சிரத்தையில்லாத அப் பிராமணன் என்று என் அறிவுக்கு அப்பாலிருந்து சட்டென்று பொங்கி வந்த கோபததுக்காக நானே வெட்கி, எனக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் எனக்கு ஏன் கோபம் வர வேண்டும் எனறு நினைத்துக் கொண்டேன்.

புரோகிதர் பித்ருபிதாமகர்களை ஆசனங்களில் அமரும்படி, இதமாசனம், இதமர்ச் சனம் என்று அழைத்துக் கொண்டிருந்தார். தம்பியின்சார்பாக நான்கு தர்ப்பை களைப் போட்டு, நெருப்பில் ஊற்றிக் கொண்டிருந்த நெய்யின் மணம், சுள்ளிகள் எரிகின்ற புகையோடு கலந்து வநது கொண்டிருந்தது. நெய்யில்லாமல் சாப்பிடு கிறவர்கள் இருக்கும்போது, என்னும் உணர்ச்சி வேகம், அந்த வகைப் புத்தகங்களின் கெட்ட பாதிப்பு என்று நினைத்துக் கொண்டேன், மனத்தின் எந்த மூலையில் உட்கார்ந்து இதே போல இன்னும் எத்தனைக் குப்பைகள் காத்துக் கொண்டிருக்கின் றனவோ, எந்தக் கெட்ட வேளையில் எட்டிப் பாாக்குமோ?

புரோகிதர் தம்பியுடன் தெருப்பக்கம் வந்தார். வந்திருந்த பிராமணர்களுக்கு தர்ப்பை போட்டு (நெய், சாணம் அல்லது சாணம், நெய்?) நெய், சாணம், நெய் காலில் ஊற்றிக் காலைக் கழுவி உள்ளே அழைத்துக் கொண்டு போவதற்காக. புரோகிதர் சட்டென்று ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து, 'என்ன செய்கிறீங்க? வாங்க வெளியே' என்பாரோ என்ற பயம் வந்து— ஆச்சர்யம், பன்னிரண்டு மணி வேளைக்கு இருக்கக் கூடாத பயம்—அப்படியெல்லாம் ஜன்னல் வழியாக மரியாதை தெரிந்தவர்கள் என்று மதிக்கப்படும் யாரும் எட்டிப் பார்க்க மாட்டார்கள் என்று சமாதானம் செய்து கொண்டேன்.

அப்போதே மணி ஒன்றாகிவிட்டது. காலையிலிருந்து இரண்டு லோட்டாக் காப்பியைக் குடித்துவிட்டு உட்கார்ந் திருந்தேன். தம்பி அதையும் குடித்திருக்க வில்லை. அவனுக்கு தலைவலி வருவது நிச்சயம். சிரத்தையோடு செய்வதுதான்

சிராத்தம். புரோகிதரின் மந்திர ராகம் நிதானமாக இழுத்துக் கொண்டிருந்தது. ஒருவேளை சாப்பிட்டு விட்டே வந்திருப்பாரோ என்று தோன்றியது. துவாதசி வேறு. பிராமணார்த்தத்துக்கு வந்தவர்கள் குறைந்தது டிபனாவது தின்றுவிட்டு வந்திருக்க வேண்டும் என்று தோன்றியபோது, ஏன் ஜனங்களிடத்தில் எனக்கு இவ்வளவு அவநம்பிக்கை, ஆசாரம், நியமங்களைக் கடைப் பிடித்து நடப்பவர்கள் சிலராவது இருக்க முடியாதா என்று நினைக்கும்பொழுதே அப்படிப்பட்டவர்கள் இருப்பதனாலேயே இவ்வளவாவது மழை பெய்கிறது, பயிர் விளைகிறது என்று சொல்லும் பொருளற்ற பழமொழி ஒன்று நினைவுக்கு வந்தது.

அடிவயிற்றை வேகமாகச் சொறிந்து கொண்டேன். அக்காவின் குழந்தையை முத்தம் கொடுத்தால் வரும் வாசனை வந்தது. காலையில் அக்கா நாப்கின் இல்லாமல் ஒரு துண்டுத் துணியைக் குழந்தையின் அரைஞானில் சொருகியிருந்தாள், 'தூ அசிங்கம்' என்று சொல்லிக் கொண்டே. முந்தா நாள் மாலையில் வீட்டாரெல்லாம் பேசிக் கொண்டே உட்கார்ந்திருந்த போது பக்கத்து வீட்டுப் பையன், "குழந்தையை யார் செய்றாங்க" என்று கேட்ட போது, "கடவுள்," என்றாள் அக்கா. "குழந்தை எங்கிருந்து வருது" என்று கேட்ட போது, "நான் சொல்றேன் வாடா இங்கே", என்று அருகில் அழைத்தேன். அக்கா, தங்கை, அம்மா எல்லாரும் 'சும்மாயிருடா' என்று கத்தினார்கள். ஆனாலும் கருப்பை என்னும் சொல் அவனுக்குப் புரியாது என்று நினைத்து, 'வயிற்றிலிருந்து' என்று சொன்னேன். 'அப்படியானால் எங்க அம்மா காட்டிலிருந்து வருதுன்னு சொல்றாளே' என்றான். 'பொய்' என்றேன். 'நீங்கதான் பொய் சொல்றீங்க' என்றான் 'போடா, சீ' என்று சும்மாயி ருந்தேன். அம்மா என்னைத் திட்டத் தொடங்கினார். என்னென்ன சொல்லித் திட்டினார்கள் என்பது மறந்து போனாலும், "நீ ரௌடியாகத் திரிவது போதாதென்று சின்னப் பையன்களையும் கெடுக்கறே" என்று சொன்னது மட்டும் நினைவிருக்கிறது.

எச்சிலை விழுங்கி, அறையைச் சுற்றிலும் பார்வையைச் செலுத்தினேன்-புத்தகம், மேஜை, நாற்காலி, குடை, கறுப்பு ஷூ, துணி, உல்லன் பேண்ட், கோட், படுக்கை. என்ன செய்யலாம் இப்போது என்று நினைத்துக் கொண்டிருக்கும் போதே துணி யில்லாமல் இருக்க வேண்டும் என்று தோன்றியது. எழுந்து ஜன்னலை மூடி நிர்வாணமாக நிற்க வேண்டும் என்னும் என்னுடைய பலநாள் ஆசையை நிறைவேற்றுவதற்காக உடம்பிலிருந்த ஆடைகளை ஒவ்வொன்றாக அவிழ்த்தேன். சுற்றிலும் பார்த் தேன். என்னை நானே பார்த்துக் கொண்டேன். அவிழ்ந்து கிடந்த துணிகளைப் பார்த்தேன். ஒரு நிமிடம் கண்ணை மூடிக்கொண்டு நின்றேன். நிர்வாணமானால் எல்லாவற்றுக்கும் புதிய அர்த்தம் வருகிறது என எட்டிப் பார்க்கும் உணர்விற்கும், இதற்கும் சம்பந்தமில்லை என்று எண்ணி, அர்த்தமில்லை என்று நினைத்து மறுபடியும் ஆடைகளை அணிந்து கொண்டேன் துணி கொஞ்சம் குளிர்ந்திருந்தது, உடம்பைத் தழுவிய போது, ஜன்னலைத் திறந் தேன். முகத்தில் மெல்லிய காற்றுப் பட்டது. வானத்தில் வெண் மேகம் ஒன்று மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. படுக்கையின் மேல் உட்கார்ந்தேன்.

மந்திரம் நின்று போயிருந்தது. நெருப்பின் சடசட என்னும் ஒலி. என்ன செய்து கொண்டிருப்பார்கள் இப்போது என்னும் ஆர்வத்தில் ஆராய்ந்தேன். பிராமணர்கள் சாப்பாட்டுக்கு உட்கார்ந்திருப்பார்கள் என்று தோன்றியது. அவர்கள் சாப்பிடு வதற்கு அரை மணி நேரம் என்று வைத்துக் கொண்டாலும், முடிவதற்கு இரண்டு

மணி ஆகும். அதன்பிறகு அரைமணி நேரம் ஆகும் அவர்களை மந்திரபூர்வமாக அனுப்பி வைப்பதற்கு. அப்புறம் என்னைச் சாப்படக் கூப்பிட மணி மூன்றாகி விடும். பெரிதாக வந்திருந்த பசி அதற்குள்ளேயே மங்கத் தொடங்கியது. வெளியே போயிருந்தபோது ஏதாவது சிற்றுண்டியாவது சாப்பிட்டு வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் அப்போது அது நினைவுக்கு வந்தாலும், சாப்பிட மனம் வரவில்லை.

அப்படியே உற்றுக் கேட்டேன். கொஞ்ச நேரம் ஒன்றும் புரியவில்லை. மெல்லப் பேசும் சத்தமும் பேச்சும் கலந்ததனால் ஒன்றும் விளங்கவில்லை. உழுந்து வடையின் வாசனையோடு, 'சாதம் பார்' என்று சமையல்காரன் பேச்சுக் காதில் விழுந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைத்தேன். யாரோ கதவைத் திறந்து மூக்கைச் சிந்தும் சத்தம் புரோகிதனாகத்தான் இருக்க 'வேண்டும்-அழுக்குப் பிடித்தவன். முற்றத்திலேயே மூக்கைச் சிந்தி வேட்டியின் நுனியில் துடைக்கும் அழுக்கன். "நிதானமா, அங்க பித்ருக்களுக்குத் திருப்தியாக வேணும்", என்றான் சமையல்காரன்.

பசியினால் ஒரு மாதிரியான களைப்பு ஏற்பட்டது. படுக்கையை விரித்து மல்லாந்து படுத்தேன். தலையின் கீழ் கைகளை வைத்துக் கொண்டு. எங்கேயோ துணி துவைக்கும் சத்தம், சாத்துக் குடிக் கூவல, கண்ணைத் திறந்து அனுபவித்துக் கொண்டிருந்த பகல் வேளையின் அமைதியில பாயசம் உறிஞ்சும் சத்தம், கரகர வென்று தின்னும் சதநம் பல நூற்றாண்டுகளாகப் பசியோடு இருப்பார்களோ என்னவோ என்று தோன்றியது வாயில் ஊறிய எச்சிலை விழுங்கினேன். நரசிம்மன் இந்த நேரத்துக்குச சாப்பிட்டு விட்டு ஒரு தூக்கம் போட்டு இருக்கலாம். மூன்று வருடங்களுக்கு முன்னால் தநதையை இழந்த நரசிம்மன் சில நாட்களுக்கு முன்னால் முதல் தடவையாக அப்பாவின் சிராத்தம் செய்யப் போகிறான் என்று தெரிந்ததும், எல்லாரும் சிரித்தாாகள் கடவுள் அவனுக்குச் சரியான பாடம் கற்பித்தார் என்று சொல்லியிருந்தாள் அக்கா, போன வருஷம்—அப்பாவின் சிராத்த தினத்தன்று ராத்திரி பூனை ஒன்று, இவன் படுக்கையில் மலம் கழித்து விட்டது. அது அப்பாவின் கோபத்தினுடைய அடையாளமாகவே இருக்க வேண்டும் என்று நினைத்து, நான் செய்தது தப்பு என்று ஒப்புக் கொண்டு அடுத்த வருஷத்திலிருந்து சிரத்தையாகச் சிராத்தம் செய்கிறேன் என்ற நேர்ந்து கொண்டான்.

பசி. பெருமூச்சுவிட்டு பக்கத்தில் புரண்டேன். தோள் எலும்பு பட்டென்றது. கண்ணை மூடி மார்பின் மேலிருந்த முடியில் கையைத் துழாவினேன். தொடையில் நமைச்சல் ஏற்பட்டது, சொறிந்தேன், முடியின் சரசர சத்தத்தை உற்றுக் கேட்டபடி, ஏதும் செய்ய முடியாமல் சும்மா விழுந்து கிடக்கும் என்மீது எனக்கே கோபம் வந்தது. தொடைகளுக்குள் கை போட்டு உட்கார்ந்திருக்கும் அலி ராஜாக்கள் நாங்கள். அலிக்கு ஏன் அவ்வளவு அழுத்தம்? சிறிய உயிரல்லவா அலி? புரோகிதன் அலியாக இருப்பானோ? எங்கள் தந்தை அலியாக இருந்தால் சிராத்தம் இல்லை, நானும் இல்லை. நமைச்சல் ஏற்பட்டது. மற்றொரு தடவை தொடை இடுக்கில் சொறிந்தேன், இதமாக இருந்தது. இதமும் அளவான சந்தோஷமும் கொடுத்தது. இந்தச் சொறியலை அடுத்து ஒன்றும் செய்ய முடியாமல் கண் செருகியது. நெற்றியைத் தேய்த்துக் கொண்டேன், தூங்கக் கூடாது என்னும் முயற்சியில் கண்ணை விழித்துப் பார்த்தேன். புருவத்தை மேலே உயர்த்தி ஒரிரு தடவை நெற்றியில் சுருக்கத்தை

உண்டாக்கினேன். பெருமூச்சு விட்டேன். எழுந்திருக்கவோ, புரளவோ சலிப்பு. சிறுநீர் கழிக்க வேண்டும் என்ற அவசரம் வேறு தொல்லை கொடுத்தது. அவர் களெல்லாம் போகும்வரையில் இப்படியே திண்டாட வேண்டும், கழுத்தில் சங்கிலி கட்டிய நாயைப் போல: எனக்குக் கல்யாணமாகியிருந்து, என் மனைவியும் இந்த அறை யிலேயே இப்போது இருந்திருந்தால் என்னுடைய சிராத்தத்திற்கும் தயார் செய் திருக்கலாம். இப்போது நான் செத்தால் எனக்குச் சிராத்தம் இல்லை. புரோகி தர்களுக்கும், பிராமணர்களுக்கும் இரண்டு ரூபாய் நஷ்டம், எல்லாமே நஷ்டம். கண்ணை மூடிப் படுத்தவனுக்கு, அறையின் வாயிலில் நின்று நெருப்பில் சிறுநீர் கழிப்பதைப் போலவும் தம்பி கோபத்தில் வம்சவிருத்தி இல்லாமல் போ என்று சபித்ததைப் போலவும், கனவு கண்டு பயந்து கண்ணை விழித்தேன்.

மறுபடியும் மந்திரம் தொடங்கியிருக்கிறது. அன்னம்பிரம்ம முதலியன. முன்கதவு திறந்த ஓசை. 'பின்னால வச்சிடுங்கோ' என்ற அம்மாவின் குரல். பிண்டத்தைக் காக்காய்க்கு இடுகிறார்கள் போலும். பின்னாலே வையுங்கள் என்று அம்மா சொன்னது ஒருவேளை அவர்கள் காம்பவுண்டின் மேல் ஏறியபோது என்னைப் பார்த்து விடுவார்களோ என்றோ என்னவோ. நான் அதே எண்ணத்தில்தான் இந்த நேரத்துக்குப் படுக்கையை விரித்துப் படுத்திருந்தேன். முன் கதவை தாள் போட்ட சத்தம். காலடி ஓசை குறைந்து வரும்போதே தோட்டத்திலிருந்து, ஹாய், ஹாய் ஹாய் என்ற கூவல். காக்காய் வராவிட்டால் அப்பாவுக்குத் திருப்தியே இல்லை. கோபம் வந்திருக்கிறது என்பார்கள். சொன்னால் சொல்லட்டும். காக்கை வருமோ, வராதோ என்று கவலைப்படுவது முட்டாள்தனம் என்று படடது. பிராமணார்த்தத்துககு வந்த வனாக இருக்க வேண்டும். பித்ருக்களெல்லாம் திருப்தியாயிற்று, பார், ஒன்று, இரண்டு, நாலைந்து காக்கைகள் வந்து திருப்தியோடு தின்று கொண்டிருக்கின்றன, என்றான். காக்கைகள் வராமல் எங்கே போகப்போகின்றன என்று நினைத்துக் கொண்டேன்.

மந்திரம், மேலும் மந்திரம், மந்திரம், பிராச்சீனா மேலே மந்திரம்,[1] உபவீலே[2] மந்திரம். பிராச்சீனா மந்திரம், உபவீலே மந்திரம். இது முடிகிற வழியே இல்லையோ என்று நினைத்துக் கொண்டிருக்கும் பொழுதே, "நமஸ்காரம் பண்ணுகிறவர் களெல்லாம் பண்ணிவிடுங்கள்" என்றார் புரோகிதர். ஒருவர் விழுந்து எழுந்த பிறகு இன்னொருவர் அதைச் செய்து கொண் டிருக்க வேண்டும். பித்ரு பிதாமாகக் கூட்டத் திற்கு நமஸ்காரம், 'போ அபிவாதயே—அஹம் ராகவ் சர்மம், போ அபிவாதையே' புரோகிதர் சொல்லிக் கொண்டிருக்கிறார். பித்ரு—பிராமக உத்திஷ்டட. அதன்பிறகு இன்னும் ஏதோ சொல்லி உத்திஷ்டட என்றார். சரியாகக் காதில் விழவில்லை; நண்பர்கள் அடிக்கடி நீ செவிடா என்பார்கள், என்ன என்று மறுபடியும் கேட்டால். காயேன வாசா மனஸேந்திரியைவம்- மந்திரம், மந்திரம்.

"ஸர்வம் ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து" என்றார் புரோகிதர். எல்லாம் முடிந்தது என்று நினைத்துக் கொண்டேன். இல்லை, மந்திரம் மேலே போய்க் கொண்டிருக் கிறது. சதமானம் பவதி சதாயு, புருஷேந்த்ரியா—முதலியன. அப்படியானால் இப்போது எல்லாரும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களோ? மந்திரம் நின்று விட்டது.

1. பூணூலை வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கம் மாற்றுவது
2. இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கம் மாற்றுவது

நிசப்தம். கண்ணை மூடினேன். ஒருவகையான மயக்கம். அசையாமல் எரிந்து கொண்டிருந்த அகல்விளக்கைப் போல. அப்பா செத்த அந்தக் காலிக் கட்டிலின் கீழ் ஏற்றி வைத்த அகலைப் போல. கண்ணைத் திறந்தேன். அமைதியாக எரியும் அந்த அகல் அவ்வப்போது கண் முன்னால் வருகிறது. ஒருவேளை யாராவது மனத் தத்துவம் படித்தவன் கேட்டால் அப்பாவோடு தொடர்புபடுத்தி ஏதேனும் சொல்வான்.

தம்பியும் தங்கையும் ஏதோ பேசிக் கொண்டிருக்கிறார்கள். புரோகிதர் புறப் பட்டுப் போயிருக்க வேண்டும். பித்ரு— பிதா மகர்கள் புறப்பட்டுப் போனார்களா? கச்ச கச்ச பித்ரு பிதாமக த்ரூப் தோஸ்மி பாவேன. பதினோராம் நாளோ, பன்னி ரண்டாம் நாளோ நினைவில்லை. பிரேதஸ்தானத்தில் உட்கார்ந்திருந்தவனுக்கு சாப்பாட்டுக்குப் பிறகு ஹேபிரேத கச்ச கச்ச—கச்சனி கச்ச என்று பெருங்குரலில் கத்த வேண்டும் போல் இருந்தது, காலடிச் சத்தம் கேட்டது ஒரு வேளை இப்போது அம்மா வந்து கதவைத் தட்டலாம். யாரோ கதவைத் தட்டிக் கொண்டிருந்தார்கள். உற்றுக் கேட்டேன் இல்லை, யாரும் இல்லை. மனத்தின் பிரமை அவ்வளவுதான். யாரோ எதையோ தின்கிற சத்தம், தம்பியாக இருக்க வேண்டும். வாசலில் தண்ணீர் தெளித்துக் கோலம் போடும்படி அம்மா சொன்னது கேட்டது.

நடுராத்திரியில் டக்கென்று விழிப்பும் அல்லாத தூக்கமும் அல்லாத நிலையில் எதற்கோ மனமும் உடம்பும் ஆசைப்பட்டது போல் ஆகி மறுபடியும் தூக்க நிலைக்குத் திரும்பினேன். பிறகு எப்போதோ தெரியவில்லை, ஜன்னல் வழியாக தடித்த, நீண்ட பெரிய, முன்பகுதி சிவந்த இரும்பு உலக்கையைப் போல? ஆண் குறியைப் போல? ஏதோ ஒன்று நுழைந்து மார்பில் குத்தியது போலத் தோன்றியது. வீறிட்டு எழுந்தேன். அம்மா ஏதோ சொல்லிக்கொண்டிருந்தாள். வெட்கமாக இருந்ததால் நான் பேசவில்லை. நான் விழித்துக் கொண்டேன் என்பதைக் காட்டிக் கொள்ளத் தொண் டையைக் கனைத்து இருமினேன். சீ, எல்லாம் இருக்க இன்றைக்கு இப்படி வீறிட் டேனே என்று வருத்தம் உண்டாயிற்று. தங்கை 'என்னம்மா?' என்று கேட்டாள். 'ஏதோ கெட்ட சொப்பனம், அலறினான்' என்று சொல்லி அம்மா சும்மா இருந்தாள்.

# ஓய்வு பெற்றவர்கள்

பி. லங்கேச

அச்சேறாமல் செத்த என்னுடைய முதல் நாவலை எழுதிக் கொண்டிருந்தபோது நான் லால்பாகின் ஒரு மூலையில் கல்லைக் கையில் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து என் அனுபவங்களை அசை போட்டுக் கொண்டிருந்த நாட்கள் அவை. எழுதுகிறவன் ஒரு வகையான விசித்திரப் பிராணி; அதனாலேயே பல சமயங்களில் தன் வாலின் நிழலைப் பிடிக்க முயன்று, தளர்ந்து போகும். அடர்த்தியான காட்டு வழியே குறிக் கோள் என்பதே இல்லாமல் சும்மா நடந்து கொண்டே போகும். உடம்பில் கொழுப்பை வளர்த்துக் கொண்டு இந்த மிருகம் தாவரம், மாமிசம், பாவம், புண்ணியம் எல்லாவற்றையும் செரித்துக் கொண்டு, பால் சொரிந்து சுமை குறைந்த எருமையைப் போல கலங்கிய நீரில் விழுந்து பத்து வட்டமடிக்கும்.

எனக்கு, உண்மையைச் சொல்லப் போனால் சட்டதிட்டங்களிலும், சிக்கலான உண்மைகளிலும் நம்பிக்கை குறைவு. பணம் ஏராளமான சுகத்தைக் கொடுக்கக் கூடியது என்பது தெரிந்திருந்தாலும் பணக்காரர்கள் விஷயத்தில் மதிப்புக் குறைவு. அதிகாரம் என்னைச் சலிப்புக்குள்ளாக்கியிருக்கிறது; என்னுடைய மேலதிகாரி களைத் தொலைவிலேயே அடையாளம் கண்டு வேறு வழியில் திரும்பிவிடுவது என் வழக்கம். என்னைத் தெரிந்த பலர் இதை ஜம்பம் என்கிறார்கள். சிலர் முட்டாள்தனம் என்கிறார்கள். என் தப்புகளையும் மறைத்து மன்னித்து அன்பு காட்டும் நண்பர்கள் தான் என் சொத்து. நான் ஒரேயடியாய் முட்டாளாகவோ கெட்டவனாகவோ நடந்து கொண்டாலும் பொறுத்துக் கொண்டு என்னை விரும்பும் என் மனைவி மகள்தான் என் உயிர்.

எழுத்தாளன் சில குணங்களை வளர்த்துக் கொள்ள வேண்டுமாம். எல்லா வற்றுக்கும் மேலாக உணர்ச்சிகளை. அதுவே அவன் தன் உயிரைத் தக்க வைத்துக் கொள்ளும் வழி. முப்பதில் ராட்சதன் வந்து நம்முடைய இதயத்தைத் தட்டி கோரைப் பற்களைத் தீட்டிக் கொள்கிறான். உயிர்ப்புடைய மனிதனின் வியர்வை நாற்றத்துக்கு அவன் தோற்று ஓடிப் போகிறான். இல்லாவிட்டால் அந்த ராட்சதன் நம்முடைய உயிரை மாத்திரம் எடுத்துக் கொண்டு போன பிறகு நாம் வெறும் உடம்புகளாக நடமாட வேண்டியிருக்கிறது. அந்த ராட்சதனை விரட்டி, ஏட்ஸ் என்ற கவிஞன் தன் வாழ்நாளில் பல ஆண்டுகளைப் பசுமையாகக் கழிப்பதற்கு முயன்று வெற்றி பெற்றான்.

லால்பாக் புல்லின் மேல் தலையில் பல குரங்குகளை (எண்ணங்களை) நிரப்பிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தேன். மகிழ்ச்சி நிரம்பிய பத்து வயதுப் பாவாடை அணிந்த பெண்கள் நடக்க முடியாமல் குதித்துக் கொண்டே ஓடினார்கள். பையன்கள், சேட்டுக்கள், சிந்திகள், பெங்களூர் பார்ப்பதற்கு வந்த தாரவாடா

பக்கத்து ஜனங்கள், ஆசிரியர்கள், தனிமையை விரும்பி அலையும் காதலர்கள், நான்கு வயதுப் பையன்கள் கையைப் பிடித்துக் கொள்ள, ஒரு வயதுக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாகப் போகும் குமாஸ்தாக்கள், நான் துணைக்கு யாரும் இல்லாமல் தனியாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்து சிரித்து கேலி செய்து கொண்டு போகும் பெண்கள்; கவலைப்படுகிறவர்கள். மனிதன் தனியாக இருக்கும்போது உண்மையிலேயே கண்ணைத் திறந்து வைத்திருக்கிறான்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை இரண்டு கிழவர்கள் நான் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகில் வந்தார்கள். அதில் ஒருவன் கொஞ்சம் தடிப்பாக உயரமாக இருந்தான். குண்டு முகம், நன்றாகச் சவரம் செய்து கொண்டு நாமம் போட்டுக்கொண்டு இருந் தான். பனியன் போடாமல் சுத்தமான வெள்ளைச் சட்டை போட்டிருந்ததால் அவன் மார்பின் மீதிருந்த வெளுத்த முடியும் வயிற்றின் அளவும் தொப்பையும், அவன் உடம்பில் ஜீவன் அதிகமாக மிஞ்சியிருக்கவில்லை என்று காட்டிக் கொண்டிருந்தன. இன்னொருவனுக்கு அதே வயது; ஒல்லியாக, நாய் அடிக்கிற கோலைப் போல இருந்தான். அவன் தலையில் முடி அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தது; அங்கங்கே கறுப்பு முடியும் கூட., அவன் முகத்திலிருந்த கணக்கில்லாத சுருக்கங் களைப் பார்த்துக் கொண்டே இருந்தால் அவனுடைய முழுவடிவமும் மறந்து போகும் அளவுக்குச் சுருக்கம் நிறைந்த முகம். அவன் கண்ணில் கொஞ்சம் ஒளி இருந்தது. எனக்கு யாருடனும் பேசும் விருப்பமாவது, பேசக் கூடாதென்ற பிடிவாதமாவது இருக்கவில்லை.

தடித்த கிழவன் எந்தத் தயக்கமும் இல்லாமல் ஆங்கிலத்தில் "நாங்களும் இங்கே உட்காரலாமா?" என்று கேட்டான். 'ஒ' என்றேன். கிழவர் பெருமையோடும் கர்வத் தோடும் வாக்கிங் தடியைக் கீழே வைத்து உட்கார்ந்து கொண்டே "வாங்க பிரகலாத ராயரே, உட்காருங்க" என்றார். மெலிந்த ஆசாமி கூச்சத்தினால் தயங்கியபோது, நான் "வாங்க சார், உட்காருங்க" என்று சொன்ன பிறகு வந்து உட்கார்ந்தார். அதற் குள்ளேயே அவர்கள் இருவரிடையே பேச்சு நிறைய நடந்திருக்க வேண்டும்; இரண்டு பேரே இருக்கும் போது பேச்சு நீண்ட நேரம் நடப்பதில்லை; மூன்றாவது ஆளிடம் அரட்டை அடிக்க இருவரும் தயாராக இருந்தார்கள். தடித்த கிழவர் ஒரிரண்டு நிமிஷம் பொருளில்லாமலே பேசினார். லால்பாக் மிகவும் அழகாக இருக் கிறது, என்றார். காற்று குளிர்ச்சியாக வீசுகிறது, என்றார். உயர்ந்த மரங்களை கண்ணால் அளந்த பிறகு என் பக்கம் திரும்பி "உங்க பெயரைக் கேட்கலாமா, சுவாமி?" என்றார்.

அவனிடமிருந்து அதிகமாகக் கேள்விகளுக்கு இடம் கொடுக்காத வகையில், "லங்கேசப்பா என்று பெயர். இங்க சென்ட்ரல் காலேஜிலதான் வேலை பார்க் கிறேன். கல்யாணம் ஆகிவிட்டது" என்று சொல்லிச் சிரித்தேன்.

கிழவர் ஒவென்று சிரித்தார் (பாசி பிடித்த பற்கள்). "ஆ ஆ"! உங்கள் பதில் சுவாரசியமா இருக்குது! நான் ஏதோ உங்களுக்குப் பெண் கொடுக்க வந்தேன்னு நினைச்சிக்காதீங்க! பாருங்கள்? பிரகலாத ராவ்! இந்தக் காலத்துல எப்படி பதில் சொல்றாங்க பாத் தீங்களா? நீங்க மகளுக்கு வரன் கிடைக்கலைன்னு சொன்னப்போ நான் அதைச் சீரியஸாகவே எடுத்துக்கலை. உங்க பெண்ணுக்கு என்ன, பொம்மை—பொம்மையைப் போல இருக்கிறா! அவளுக்கு வரன் தேடற வேலைய எங்கிட்ட விடுங்கன்னு சொன்னேன். நீங்கதான் கேக்கவே இல்லை" என்றான். அந்த தடித்த மனிதன் சொன்னபோது பிரகலாத ராவ் என்கிற அந்த மனிதன் தன் சொந்த

விஷயத்தை மேலே பேச விரும்பாமல் என்னிடம் "நாங்க ரெண்டு பேரும் இங்கயே ரெவினியூ ஆபீஸில் இருந்தோம். இப்போ ரிட்டயர் ஆகிவிட்டோம். சார் என்னுடைய பாஸ், அவர் பெயர் நரசிங்கராயர்" என்றார்.

"பாஸ் ஆக இருந்தார்ன்னு சொல்லுங்க, பிரகலாத ராயரே. இப்போ வெறும் நண்பர்கள்தான். எல்லாம் அந்தக் கடவுளின் விளையாட்டு" என்று கூறி நரசிங்க ராயர் பொடி டப்பியை எடுத்தார். பேச்சு வளர இருப்பதற்குக் குறிப்பு. எனக்கு வயது என்றால் கொஞ்சம் மரியாதை. அந்த மரியாதையில் அச்சம் கூட இருக்கலாம்—நானும் முதுமையை எதிர்கொள்ள வேண்டும் என்னும் அச்சம். அதனால் அவர்கள் கதையில் ஆர்வத்தை உண்டாக்கிக் கொண்டேன். நரசிங்கராயர் தம்முடைய கவுரவம், தர்பார் பற்றிப் பேசினார். அவர் சிகாரிபுரத்தில் அமல் தாரராக இருந்தபோது பெரிய ரௌடி என்று பெயர் வாங்கியிருந்த உக்ர என்னும் மனிதனின் வீட்டை ஜப்தி செய்து அறுபது மூட்டை அரிசியை வெளியே கொண்டு வந்தது; தங்கள் ஆபீஸில் யாரையும் மதிக்காதிருந்த கோவிந்தராஜு என்னும் குமாஸ் தாவைச் சஸ்பெண்டு செய்து தன் காலைப்பிடிக்கும் நிலைக்குக் கொண்டு வந்தது; எந்த அதிகாரிக்கும் தலை வணங்காத டைப் பிஸ்டு மீரா தன் வீட்டுக்கு அலையும்படி ரிமார்க் எழுதுவேன் என்று பயப்படுத்தியது. இப்படித் தம்முடைய கதையைச் சொல்லிக் கொண்டே பிரகலாத ராயர் பக்கம் திரும்பினார். அப்போது அவர் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி "இல்லையா?" "பின்னே" "அவனுக்குப் புத்தி இருக்க வேணாமா?" என்றார். நான் இந்த இரண்டு கிழவர்களின் இலவச நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த நாடகத்தின் பின்னணி மிகவும் சாதாரண மானது. நரசிங்க ராயன் தனது ஆபீஸ் வாழ்க்கையைத் தோண்டி எடுத்துக் காட்டிப் பிரகலாதராயனுக்குத் தனது மேல்நிலையை நினைவுபடுத்தினார். பிரகலாதராயன் இயந்திரம் போல "இல்லையா" "பின்னே" என்ற வார்த்தைகளைச் சேர்த்தார்.

ஒருவரிடம் இப்போது அதிகாரம் இல்லை; இன்னொரு வரிடம் பணிவு இல்லை. சிநேகிதர்களாக இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறார்கள், தோல்வி யடைந்தார்கள்.

உலகத்துக்கு தான் இருப்பதைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்னும் நரசிங்கராயனின் ஆசையை நான் அவன் கதையைக் கேட்டு நிறைவேற்றியது போலிருந்தது. கேட்பதில் நான் கெட்டிக்காரன். நரசிங்கராயர் சொல்ல வேண்டியது நிறைய இருந்தது என்று தோன்றியது. நிறையப்பேசினார். இந்தக் காலத்து ஆபீஸர்களைத் திட்டினார். இப்போதைய ஆபீஸர்களை நாய் கூட மதிப்பதில்லை என்று சொல்லித்தனக்குப் பின்னால் வந்த அதிகாரியை உதாரணமாகக் காட்டி னார். "இப்போதைக்கெல்லாம் லஞ்சம் தலைகால் தெரியாமல் வளர்ந்திருக்குது. அப்ப இல்லன்னு நினைக்காதீங்க. இருந்தது. மேல் அதிகாரிங்க கொஞ்சம் கட்டுப் பாட்டில் வச்சிருந்தாங்க. இப்ப இருக்க மாதிரி அலட்சியம் இருக்கவில்லை. இல்லையா பிரகலாதராயரே? நீங்கள் கட்டினீங்களே அந்த வீட்டுக்கு எவ்வளவு வாடகை வருது? கிரகப் பிரவேசத்தின் ஆடம்பரத்தை இன்னைக்கும் மறக்க முடியலை. குமாஸ்தாவாக இருந்துட்டு இவ்வளவு செஞ்சிருக்கீங்க. பாருங்கள், சரியான ஆள்தான்" என்றார்.

கிழவரின் கீழ்த்தரமான சுவையைக் கண்டு எனக்கு ரத்தம் கொதித்தது. அதனால் கேட்டேன்: "நீங்க எதுவும் சேர்த்துக்கலை போல. அல்லது உங்களுக்கு வாய்ப்புக் கிடைக்கலையோ?"

"இங்க பாருங்க, நான் நினைச்சிருந்தா லட்சம்லட்சமாக சேர்த்திருக்கலாம். அப்படி எச்சிலுக்கு நாக்கை நீட்டும் குணம் அல்ல என்னுடையது. அப்படிச் சேர்த்திருந்தால் இன்றைக்கு ஏன் வாடகை வீட்டில் குடியிருக்கணும்? சில பேர் இருக்கிறாங்க, சேற்றில் விழுந்த நயாபைசாவை நாக்கில எடுப்பாங்க. அவுங் களைக் கடவுள் சும்மா விடுவானா, வெறும் பெண் குழந்தைகளையே கொடுத்து மனைவியை வேறொருவரிடம் சேர்த்து நோய் கொடுத்துத் துன்புறுத்துவான், கடவுள் பெரியவன்."

கிழவர் உடம்பு முழுவதும் வெளியே வரக் காத்திருக்கும் கெட்ட எண்ணங்கள். அவருக்குத் தெரியாமலோ தெரிந்தோ பிரகலாதராயரைத் திட்டிக் கொண்டிருந்தார். இருவரும் ஏழு சமுத்திரங்களுக்கு அப்பாலும் இப்பாலும் நிழலின் உருவத்தில் பைத்தியம் பிடித்து அலையும் உயிர்கள். நட்பு வளர்கின்ற காலத்திலே, பூதம் துளிர்த்து வரும் கொம்புகளைக் கத்தரித்தது. மொட்டுக்களைத் தீய்த்தது. என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அந்த இரண்டு உடல்களைச் சுற்றிலும் புற்று வளர்ந்து உயிர் எங்கோ ஆழத்தில் துடித்துக் கொண்டிருந்தது. அவர்களின் வாயிலிருந்து தப்பித்துக் கொண்டு வெளியே வந்த பேச்சுக்கள், துருப்பிடித்துச் செலவாணியை இழந்திருந்தன.

* * *

நான் பையனாக இருந்த போது சர்க்கரைக்காக அழுவேன். பெரியவனானால் உயரத்தில் பலகையின் மேல் இருக்கும் சர்க்கரையை எல்லாம் தின்னலாமே என்னும் ஆசையில் தினமும் என் வளர்ச்சியைக் கவனித்துக் கொண்டு வந்தேன்.

ஆனால் பெரியவனாகிற காலத்தில் சர்க்கரையின் மேல் இருந்த ஆசை பறந்து விட்டிருக்கிறது. வளர்ச்சியைப் பற்றிய ஆர்வம் குறைந்து விட்டது. புதிய ஆர்வங்கள் வாழ்க்கையைப் பசுமையாக்கத் தொடங்கின.

ஆர்வம் மிக நல்ல குணமாக இருக்கலாம்.

மறுநாள் லால்பாகுக்கு முதலில் வந்தவர் பிரகலாதராயர். நான் அப்போது நிதானமாக நகம் வெட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். அந்த ஆள் இன்று, நேற்றை விடத் தைரியமாக இருப்பதுபோலத் தெரிந்தார். நரசிங்கராயர் பக்கத்தில் இல்லாததினால் இப்படி இருக்கலாம். 'குட் ஈவினிங்' என்று மிதப்போடு சொல்லிக் கொண்டே வந்து உட்கார்ந்தார். "நரசிங்கராயர் இன்னும் வரலையா? வந்திருக்க வேணுமே?" என்றார்.

நான் தமாஷாகத் தன்னுடைய நேர்மையையும் தர்பாரையும் பற்றி யாருக்காவது லெக்சர் கொடுத்துக் கொண்டிருப்பார் என்று சொல்லிச் சிரித்தேன்.

அவர்: "அய்யோ விடுங்க. அவருடைய நேர்மை யாருக்குத்தான் தெரியாது?" என்றார்.

"அப்படியானா அவர் சொன்னதெல்லாம் பொய்யா?"

"அய்யா விடுங்க" என்றார் பிரகலாதராயர். "கண்டவளிடம் போகும் இந்த மனிதன் உழைத்ததையெல்லாம் பெண்கள் விஷயத்தில் தீர்த்தான். மூன்று பெண்டாட்டிகளைத் தின்று ஏப்பமிட்டான். ஆபீஸில் மீரா என்ற ஒரு டைப்பிஸ்ட் இருந்தா. அவளைச் சனி பிடிப்பதைப் போலத் தொடர்ந்து சுற்றி வந்தான். கடைசியில் அவள் கையில் செருப்பை எடுத்துக்க வேண்டியதாச்சு."

"அப்புறம், அப்புறம்?"

"அய்யோ விடுங்க. அது ஒரு வாழ்க்கையா? இப்ப மறுபடியும் கல்யாணம் செய்துக் கணும் என்கிறது கழுதை."

பிரகலாதராயர் நேற்றைய அவமானத்துக்குப் பழி தீர்த்துக் கொண்டிருந்தார். தூரத்தில் நரசிங்கராயர் கண்ணில் பட்டவுடன் இவர் வேக வேகமாகக் கதையைச் சொல்லி நடுநடுவே ஜோராகச் சிரித்து முடிப்பதற்கும் நரசிங்கராயர் வருவதற்கும் சரியாக இருந்தது. அவர் முதலிலேயே சந்தேகப் பேர்வழி. "எதற்கோ சிரிச்சீங்களே" என்றார். பிரகலாதராயர் ஏதோ பொய்யைச் சொல்லி வாயைமூட முயன்றார். நரசிங்ககராயர் நம்பியதைப் போல நடித்தாலும் கோபத்தை மறைத்து வைத்துக் கொண்டார். எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமல் அரட்டையடித்தார். பெண் களுக்குப் பையன் தேடுவதிலிருந்து லஞ்ச ஒழிப்பு வரையில் பேசினார். பிரகலாத ராயரை உதாரணத்துக்கு எடுத்துக் கொண்டார். எனக்குச் சலிப்பாக இருந்தது. இனிமேல் இங்கே உட்காரக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டேன். நரசிங்க ராயரின் வாயை மூட வேண்டும் என்று எண்ணிக் கொஞ்சம் கோபமாகவே "சுவாமி உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?" என்று கேட்டேன்.

"இல்லை"

"இருந்திருந்தால் அவன் என் வயசில் இருப்பான். தப்பாக நினைச்சிக்காதீங்க. சிநேகம் என்பது பெரிய விஷயம். நீங்க இப்படிப் பேசக் கூடாது. பிரகலாத ராயருக்கு வருத்தம் ஏற்படும்" என்றேன்.

அவர் பெரியதாகச் சிரித்தார். வயிறு குலுங்கியது.

"ஹா ஹா ஹா! எனக்குத் தெரியாதவனா பிரகலாதராயன்! என் எதிரில் கண்ணை மூடிக்கொண்டு பால் குடித்தவன்!" என்று உரிமையைக் காட்டுவதற்குப் பிரகலாத ராயரின் முதுகில் தட்டிக் கண்ணில் குறும்பு மின்ன (பிரகலாதராயர் இல்லாதபோது கொஞ்சம் பேச வேண்டும் என்னும் ஆசை இருக்கலாம்) "ராயரே அதோ அங்கே வேர்க்கடலை விற்பவன் இருக்கிறான். போய் ரெண்டணாவுக்கு வேர்க்கடலை வாங்கி வாங்க. இதோ ரெண்டணா, சீக்கிரம் போங்க" என்றார்.

பிரகலாதராயர் எழுந்திருக்கவில்லை. தான் இல்லாத போது இன்னும் மோசமாக நரசிங்கராயர் பேசலாம் என்று அவருக்கு அச்சம். அதைவிட அதிகமாகத் தன் வாழ்க்கையில் முதல் தடவையாகத் தனக்கு மேல் இருந்தவரின் பேச்சை எதிர்க்கும் தீவிரம். மிகுந்த தைரியத்தோடு இருந்த இடத்திலேயே இருந்தார். முகத்தைக் கடுமை யாக வைத்துக்கொண்டு "நீங்களே போய் வாங்கிட்டு வாங்க" என்றார்.

என் எதிரில் தன்னுடைய சூரத்தனத்தை இழந்துவிட்ட நரசிங்கராயருக்குத் தனக்குக் கீழானவனுடைய பேச்சை விழுங்க முடியவில்லை. எதிர்பாராத பதிலில் பயந்து, அதிலும் தைரியத்தைச் சேர்த்துக் கொண்டு பழைய மிடுக்கை ஒவ்வொரு சொல்லிலும் நிறைத்து; "போங்க இவரே, எவ்வளவு கொழுப்பு உங்களுக்கு?" என்றார். "நீங்களே போங்க இவரே, உங்களுக்கு எவ்வளவு கொழுப்பு?" என்றார் பிரகலாதராயர். அவருடைய மாநிறத்து முகத்தில் சிரிப்பை மீறிக் கோபம் வெளி வந்தது. "சுவாமி, நரசிங்கராயரே! உங்கள் ஜபர்தஸ்தெலாம் இனிமேல் சாயாது. காட்டிக் கொள்கிறான்—ரொம்ப! யாருக்கும் தெரியாது உன் வண்டவாளம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா—மீரா செருப்பால் அடித்தது? கோவிந்தராஜு பைலினால் தலையில் குட்டியது?" நரசிங்கராயன் கோபத்தில் கோலைக் கையில்

எடுத்துக் கொண்டு எழுந்தார். "டேய் படவா—வாயை மூடுகிறாயா, பூசை வேண்டுமா?"

இரண்டு கிழவர்களும் எழுந்து நின்று வெறிநாய்களைப் போலக் குலைத்தார்கள். தாட்சண்யத்துக்காகவோ கூச்சத்துக்காகவோ இதுவரை அடக்கி வைத்திருந்த பூதங்கள் எழுந்து ஆடத் தொடங்கின. எனக்குப் பயமாக இருந்தது. வாழ்க்கையின் ஆழத்துக்கு என்னை இந்த இருவரும் இழுக்கிறார்கள். சின்னச் சின்ன சாக்குளைச் சொல்லிக் கொண்டு நரசிங்கராயர் பிரகலா தராயரின் வீட்டுக்குப் போய் மகள்மேல் கண் வைத்திருக்கலாம்.

பிரகலாதராயர் கண்டித்துச் சொல்வதற்கு இதுவரை காத்தி ருக்கலாம். இப்படிப் பட்ட வாழ்க்கை இருவருக்குமே சுமையாக இருந்திருக்கும்.

கை கலப்பு ஏற்பட்டு விடுமோ என்று நான் எழுந்து நின்றேன். (ஒல்லியாக இருந்ததால்) பிரகலாதராயனை அழைத்துக் கொண்டு தூரப் போனேன். "சார், நரசிங்கராயரே, இந்த வயதில் சண்டை கவுரவம் அல்ல, போங்க, வீட்டுக்குப் போங்க" என்றேன்.

பிரகலாதராயர்: வீடு வேறு இருக்கிறதா அந்தத் தெரு நாய்க்கு?

நரசிங்கராயன்: "அதற்காகத் தானே உன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தது. உன் மகளும் பெண்டாட்டியும் இருக்கும் வரையில் எனக்கு எதற்குக் கல்யாணம்?"

அந்த வயதில் பெண்ணென்றும் கல்யாணம் என்றும் சொல்வதைப் பார்த்து எனக்குச் சிரிப்புக்குப் பதிலாக மிகுந்த வலி ஏற்பட்டது. பெண் அவருள்ளே பல வகையான கற்பனைகளை ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால் அவர் எந்தச் சம்பந்தத் துக்கும் தகுதி இல்லாதவராக வளர்ந்து என்றைக்கோ ராட்சசனிடம் உயிரை விற்று விட்டிருந்தார்; கூட்டத்தை விட்ட பறவையைப் போலப் படிப்படியாகக் குறைந்து கொண்டிருந்தார்.

***

ஆபீசிலிருந்து தங்களுடைய தனித்தன்மையை வெளிப் படுத்திக் கொண்ட அந்த இரண்டு பேரும் கழிந்து போன காலத்தின் சுமையின் அடியில் அசிங்கமாகத் துடிப்பதைக் கண்டு விரிந்து ஆகாயத்தைத் தொடுவது போல் உயர்ந்த மரங்களின் அழகை மெச்சித் தலையை நிமிர்த்தினேன்.

இலையுதிர் காலத்தில் இலைகளை உதிர்த்து மொட்டையாக நின்ற மரங்கள் வசந்த காலத்தில் பசுமையைப் போர்த்திக் கொண்டு கம்பீரமாக நிற்கின்றன. மகிழ்ச்சிக் குரல் எழுப்புகின்றன. உரிய காலத்தில் உற்சாகத்தினால் துள்ளிக் குதிக்கும் ஆண் மான்களும் பெண்மான்களும் மற்ற நேரத்தில் தங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கின்றன. உணவுக்கும் மகிழ்ச்சிக்கும் தடையில்லாதபோது எவ்வளவு நல்ல எண்ணங்கள், நற்புத்தி அவற்றிடம்!

இதெல்லாம் என்னுடைய வெறும் உணர்ச்சி வேகமாகவும் இருக்கலாம். காலத்தை மீறிய பிறகு பூவைக் காயாக்க முடியாத நிழல்தர முடியாத விறகாகவும் பயன்பட முடியாத மரங்கள் இல்லையா? குட்டிகளைப் போட்ட, யாருக்கும் உபயோகமில்லாத மிருகங்கள் இல்லையா?

ஒப்புமையை மீறி வலி, ஆசை, என்னைச் சூழ்ந்தது. சுற்றிலும் சிறு குழந்தைகள் பாவாடையைக் கிர்ரென்று சுற்றிக் கைகளை வீசி ஆடின. கூச்சலிட்டன.

அந்தப் பக்கத்தில் அண்மையில் கல்யாணம் ஆனவர்கள் கை கோர்த்துக் கொண்டு கம்பீரமாக நடமாடிக் கொண்டிருந்தார்கள். நான் உட்கார்ந்திருந்த பக்கம் வந்து கொண்டிருந்த என் மாணவ மாணவியர்கள் என்னைப் பார்த்து இன்னொரு வழியில் திரும்பிப் போனார்கள். மிகுந்த வலி. வலிக்குப் பதிலாக அன்பு வரக் கூடாதா? என்னில் மகிழ்ச்சி நிரம்பி வெளிவரக் கூடாதா? நாட்கள் என்னிடம் ரகசியமாக பேசுவதோடு கொஞ்சம் ஜீவரசத்தை ஊற்றக் கூடாதா? மரத்தைப் போல நின்று பட்சபாதம் இல்லாமல், சிறுமையில்லாமல் நிழலைத் தரவும், மலரைப் பூக்கவும் சாத்தியமாகக் கூடாதா?

# அபச்சூர் போஸ்டாபீஸ்

## கே.பி. பூர்ணசந்திர தேஜஸ்வி

புதிதாகத் தொடங்கியிருந்த அபச்சூரின் போஸ்டாபீஸில் தற்காலிகமாகப் போஸ்ட் மாஸ்டராக இருந்த போபண்ணனுக்கு இன்று மிகுந்த திருப்தியின்மையும் கவலைகளும் ஏற்பட்டிருந்தன. முதலில் அபச்சூரின் பணக்காரரான அல்லிஜான் சாகிப்பின் தோட்டத்தில் ரைட்டர் வேலை செய்து கொண்டிருந்தான் போஸ்டாபீஸ் அபச்சூரில் புதிதாகத் திறந்தபோது போபண்ணா சாயங்காலம் ஒரு மணி நேரம் காலையில் ஒரு மணி நேரம் தற்காலிகமாகப் போஸ்ட்மாஸ்டர் வேலை செய்ய ஒப்புக் கொண்டான். போபண்ணன ஒப்புக கொள்ளாதிருந்தால் அபச்சூருக்குப் போஸ்டாபீஸ் வருவதற்கு வழியே இல்லை. ஏனென்றால் அங்கே இன்னும் யாருக்கும் இங்கிலீஷ் எழுத்துக்கள் தெரியாது. அதேபோல் இங்கிலீஷ் தெரிந்தவர்கள் யாரும் அந்த நாட்டுப் புறத்துக்கு அவ்வளவு குறைந்த சம்பளத்துக்கு வேலை செய்யத் தயாராக இல்லை. போபண்ணன் ஒப்புக் கொண்ட பிறகு அவனுடைய மாமியார் வீடே போஸ்டாபீசுமாகத் தற்காலிகமாக உருமாறியது. இப்படியாகப் போஸ்டாபீஸ் திறந்த சில நாட்களிலேயே போபண்ணனும் போஸ்டாபீசும் பிரிக்க முடியாத அங்கங்கள் என்று சொல்லும்படி ஆயிற்று.

போஸ்டாபீஸ் தொடங்கியது. எல்லாரும் போபண்ணனைப் போஸ்ட்மாஸ்டர் என்று கௌரவமாக அழைத்தார்கள். போபண்ணனுக்கு, டெல்லியுடன் தொடர்பு கொண்டிருந்த ஒரு பாரதக் குடிமகன் தான் என்னும் பெருமை ஏற்படத் தொடங்கியது. போபண்ணனின் எஸ்.எஸ்.எல். சி வரையிலான இங்கிலீஷே அவனுடைய எவ்வளவோ போஸ்டாபீஸ் வேலைகளுக்குப் போதாததாக இருந்தது. அதற்காக அவன் ஒரு பழைய இங்கிலீஷ்—கன்னட அகராதியை வைத்துக் கொண்டிருந்தான். போபண்ணன் தன்னுடைய மாமியார் வீட்டிலேயே தங்கியிருந்தான். அவன் மாமியாரும் மனைவியும் சாகிப் தோட்டத் திலேயே நெடுநாட்களாக வேலை செய்து கொண்டு வந்தார்கள். போபண்ண சகலேசபுரத்துக்கு அருகில் கூடலிபேட்டை என்னும் ஒரு கிராமத்தைச் சேர்ந்தவன். அவன் அங்கே வேலையில்லாமல் சோம் பேறியாகத் திரிந்து கொண்டிருந்த போது அவனது மாமியார் மாச்சம்மாவே அவனை அழைத்து வந்து மகளைக் கல்யாணம் செய்த வைத்து வீட்டிலேயே வைத்துக் கொண்டாள். படித்த பையன் என்று அல்லிஜான் சாகிப்பிடம் கேட்டு ஒரு வேலையும் வாங்கிக் கொடுத்திருந்தாள். போபண்ணனுக்குத் தந்தை, தாய் யாரும் இல்லை. இரண்டு அண்ணன்மார்கள் மட்டும் இருந்தார்கள். போபண்ண மாமியார் வீட்டுக்குப் போவதாகச் சொன்னபோது அவர்கள் மகிழ்ச்சியுடன் வேறு பேச்சுப் பேசாமல் ஏற்றுக் கொண்டு ஒப்புதலைத் தந்தார்கள். நல்லவனான போபண்ணன் வேலையில்லாமல் இருந்ததால் கூடலி பேட்டையில் சோம்பேறியாகத் திரிந்து

கொண்டிருந்தான். திருமணம் ஆகி வேலை கிடைத்ததால் இப்போது சோம்பேறியாகத் திரிவது முழுவதும் நின்று போய் விட்டது. இப்படியாகச் சுமார் மூன்று நான்கு ஆண்டுகள் வரை நிம்மதியாகக் காலம் கழித்த போபண்ணன் இன்று மிகுந்த அதிருப்திக்கும் கவலைக்கும் ஆளாகியிருந்தான்.

ஏன் இப்படிக் கவலைப்படுகிறோம் என்று அவனுக்கு விளங்கவில்லை. இந்தத் தொல்லைக்கு அவன் காரணம் கண்டு பிடிக்க முயன்றதில் அவனுக்குச் சங்கடங்களே என்னவென்று புரியவில்லை.

போபண்ணன் வேலை தொடங்கியபோது அல்லிஜான் சாகிப் மகனுக்கு வந்த ஒரு கடிதத்தைத் திருடிவிட்டான். சில சமயங்களில் தன்னுடைய இந்தச் செயலால் போஸ்டாபீசுக்குத் தொடர்புடைய ஏதாவது பேயோ பிசாசோ கோபித்துக் கொள்ளுமோ என்று எண்ணினான்.

மங்களூரில் படித்துக் கொண்டிருந்த அல்லிஜான் சாகிப்பின் மகன் அஜீஸ் விடுமுறையில் ஊருக்கு வந்திருந்தபோது அவனுக்கு யாரோ ஒரு நண்பர் ஒரு கவர் அனுப்பியிருந்தார். அது என்னவாக இருக்கும் என்று போபண்ணனுக்கு ஆர்வம் ஏற்பட்டது. முதலில் பணம் இருக்கலாம் என்று சந்தேகப்பட்டான். ஆனால் கடைசியில் அது ஒரு காதல்கடிதமாக இருக்கலாம் என்று ஓர் ஊகம். அவன் அது வரையில் காதல் பேச்சு எதையும் கேட்டதே இல்லை. அதுமட்டுமல்லாமல் திருமணம் ஆனபிறகும் கூட ஒரு நாளாவது மனைவியுடன் அப்படி நடந்து கொள்ளவில்லை. மாமியாரும் கூடவே இருந்த அந்த வீட்டில் அதற்கு வாய்ப்பு மிகக் குறைவாகவே இருந்தது. போபண்ணனுக்கு அவன் மனைவியின் நிர்வாண ஸ்பரிசம் தெரியுமே யொழிய என்றைக்கும் வெளிச்சத்தில் கண்டதே இல்லை. அஜீஸுக்கு வந்தது காதல் கடிதமாக இருக்கலாம் என்னும் சந்தேகம் ஏற்பட்ட உடனேயே போபண் ணனுக்கு ஆர்வம் தலைக்கேறியது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. அந்தக் கடிதத்தைத் திருடிப் பையில் போட்டுக் கொண்டான். அன்றைக்கெல்லாம் போபண் ணனின் நடவடிக்கையே ஒருமாதிரியாக இருந்தது. பல தடவை அதைத் திருப்பி வைத்துவிட வேண்டும் என்று நினைத்தான். அதை உடைத்துப் பார்த்து விட்டால் அதை என்றைக்குமே திரும்ப வைக்க முடியாதென்று பயந்து அதைத் திறந்து பார்க் கவும் இல்லை, திருப்பி வைக்கவும் இல்லை.

போபண்ணனின் மனைவி பெயர் காவேரி. காவேரிக்கு ஒரு பெண் குழந்தையும் ஒரு ஆண் குழந்தையும் இருந்தது. இரண்டாவது பிரசவத்துக்குப் பிறகு காவேரி ஓய்வு கிடைத்த நாளில் மட்டும் வேலைக்குப் போய்க்கொண்டிருந்தாள். இல்லா விட்டால் மாமியார் மட்டுமே வேலைக்குப் போய்க் கொண்டிருந்தாள். போபண்ணனின் இத்தகைய நட வடிக்கை அவளுக்கு ஏதோ ஒரு சந்தேகத்தை ஏற்படுத்தி, மணி யார்டர் பணம் எதையாவது சொந்த உபயோகத்திற்கு எடுத்துக் கொண்டானோ என்று பயந்தாள். ஒரு தடவை போபண்ணன் ஒரு மணியார்டரிலிருந்து ஒரு ரூபாயை சொந்தச் செலவுக்கு எடுத்துக் கொண்டதில் பெரிய ரகளையே நடந்தது. போபண்ணன் சொந்தச் சம்பளத்தில் அதைக்கட்டி எல்லார் முன்னும் அவமானப் பட்டான். அதனால் போபண்ணன் வேலைக்காகத் தோட்டத்துக்குப் போயிருக்கும் போது போஸ்டாபீஸ் பக்கத்தில் யாராவது வந்தால், "உங்களுக்கு ஏதாவது மணியார்டர் வரவேண்டியிருக்கிறதா" என்று எல்லோரையும் கேட்டுக் கொண் டிருந்தாள் காவேரி.

போபண்ணன் நாலைந்து நாட்கள் கழிந்த பிறகு இனிமேல் இதைக் கொடுத்தால் அதுவும் சந்தேகத்துக்கு இடமாகும் என்று தீர்மானித்து அதைக் கிழித்துப் படித்து விடுவது என்று முடிவு செய்தான். அன்று தோட்டத்துக்குப் போனவன் எதையோ பார்ப்பவனைப் போல ஆட்கள் கண்ணில்படாமல் மறைவாகச் சென்று அதை உடைத்துப் பார்த்தான். அந்தக் கவரில் ஒரு கார்டு மட்டுமே இருந்தது. அதில் உருதுமொழியில் ஏதோ எழுதி இருந்தது. போபண்ணனுக்கு ஒரே ஏமாற்றம். அதைப் பற்றி இது வரையில் ஏதேதோ கற்பனை செய்து கொண்டதற்காக அவனுக்குத் தன் மேலேயே கோபம் வந்தது. அநதக் கடிதத்தைப் படித்துக் கொண் டிருந்தவன் அதன் இன்னொரு பக்கத்தைத் திருப்பினான். போபண்ணனுக்கு அந்தப் பக்கத்தில் இடுப்பு வரை ஆடை யில்லாமல் இருந்த ஒரு பெண்ணின் படம் கண்ணில் பட்டது. அவளுயை சிவந்த உடம்பு, திரண்ட மார்பு, வெள்ளைக்காரியைப் போன்ற முகம் எல்லாவற்றையும் பார்த்து, போபண்ணன் ஆச்சர்யப்பட்டு ஊமையாக நின்று விட்டான். கொஞ்ச நேரம் அதிலேயே ஆழ்ந்திருந்தவன் சட்டென்று உணர்வு பெற்று அதைப் பையில் வைத்துக் கொண்டு வேலைகுத் திரும்பினான் வேலை செய்கிற இடத்துக்குத் திரும்பி வந்த போபண்ண்ணனின் வெடகம் நிரம்பிய முகத்தைப் பார்த்து ஆட்களெல்லாம் சிரித் தார்கள். ஆனால் போபண்ணன் அந்தக் கவரில் இருந்த ரகசியம் வெளிவந்துவிட்டதாலோ என்னவோ நிதானமாகத் தன் கோபத்தை ஒரு கட்டுக்குள் கொண்டு வந்தான். வேலை செய்யும் மும்மரத்தில் அதை மறக்கவே முயன்றான்.

போஸ்டாபீஸில் போதுமான அளவு வேலை இல்லை. அதனால் ஹெட் போஸ்டாபீஸிலிருந்து போதுமான அளவு கடிதப் போக்குவரத்து இல்லாவிட்டால் அதை மூடிவிட வேண்டி வரும் என்று போபண்ணனுக்கு எச்சரிக்கைக் கடிதம் வந்தி ருந்தது. போபண்ணன் அதற்காக விசேஷ அக்கறை காட்டி அக்கம்பக்கத்துக் கிரா மங்களுக்கெல்லாம் போய்த் தன்னுடைய போஸ்டாபீஸ் மூலமாகவே எல்லாவற் றையும் நடத்த வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். இந்தப் பிரச்சாரத்தின் விளைவாக அவன் சுற்றுமுற்றும் இருந்த அநேக எழுத்தறிவில்லாதவர்களின் சார்பாகக் கடிதம் எழுத வேண்டி வந்தது. மற்றும் அவர்களுக்கு வந்த காகிதங்களைப் படித்துச் சொல்ல வேண்டியிருந்தது. இதனால் அவனுக்குச் சுற்றுமுற்றிலும் இருந்த வர்களின் எல்லா விவகாரங்களும் அதேபோல் உள்விஷயங்களும் தெரியத் தொடங்கின. கடிதம் எழுதும் போதும் அதைப் படித்து விளக்கும் போதும் சுற்று முற்றும் இருந்த விவகாரங் களைக் கவனித்துக் கொண்டே இருந்தான். இப்படியாகப் போஸ்டாபீஸில் விவகாரங்கள் அதிகமாகிக் கொண்டே வரப் போபண்ணனின் மன அமைதி குன்றிக் கொண்டே வந்தது.

போபண்ணன் தன் மனத்தின் குறுகுறுப்புக்கும் அமைதியின்மைக்கும் என்ன காரணம் என்று பலதடவை சிந்தித்துப் பார்த்தான். இந்தப் பாழும் போஸ்டாபீசு தான் அதற்குக் காரணமோ? அல்லது அஜீஸுக்கு வந்த அந்த நிர்வாணப் படமோ? என்று நினைத்தான். அது வேண்டத் தகாதது என்றும் அந்தப் படத்தைக் கிழித்து எறிய வேண்டும் என்றும் நினைத்தான். அதை வைத்துக் கொண்ட நாளிலிருந்து அவ்வப்போது அதை எடுத்துப் பார்த்துக் கொண்டு வந்தான். அந்த நிர்வாண அழகியின் மார்பும் மனத்தை மயக்கும் கண்களும் பார்த்தபோதெல்லாம் அதைக் கிழித்து எறிய வேண்டும் என்னும்—போபண்ணனின் நினைவு பறந்து போய்க்

கொண்டிருந்தது. இதற்கும் தன் சலிப்புக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும் என்று வாதிட்டு அதை மடித்து வைத்துக் கொள்வான்.

போபண்ணன் கெட்டவனல்ல. அவன் ஒன்றும் அந்தப் படத்தைப் பார்த்து உணர்ச்சி வசப்பட்டு தாசிகள் வீட்டுக்குப் போகவும் இல்லை. எந்த ஒரு பெண் ணிடமும் மானத்தை இழக்கவும் இல்லை. ஆனால் தன் மனைவி காவேரியைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவனுக்கு உண்மையிலேயே சூடேறியது. பெண்ணின் நிர்வாணத்தில் கிடைக்கும் அளவற்ற இன்பங்களை அவள் முகத்தில் கண்டு ரசித்தான்.

இரண்டு குழந்தைகளின் தாயாகியிருந்த காவேரிக்குப் போபண்ணனின் சேட்டைகளும் நடவடிக்கைகளும் அவளை வெட்கும்படி செய்தன. மகள் வேறு கொஞ்சம் பெரியவளாய் இருந்ததால் வெட்கத்தோடு பயமும் சேர்ந்து கொண்டது. ஒரு தடவை போபண்ணன் அவளை முத்தமிடுவதற்காகப் பிடித்துக் கொண்ட போது அவள் பயத்தில் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் கதவுகளைத் திரும்பித் திரும்பிப் பார்த்து அவன் பிடியிலிருந்து திமிறினாள். போபண்ணன் அவளை விட்டபோது அவள் கொஞ்சம் கோபத்தோடேயே "ஏன் இப்படித் தொல்லை கொடுக்கிறீங்க" என்று கத்தினாள். என்னவென்று சொல்வான் போபண்ணன். மொத்தத்தில் கடந்த காலத்து விடலைப் போக்கு போபண்ணனுக்குத் திரும்பி இருக் கிறது என்று காவேரி உண்மையாகவே சந்தேகப்படத் தொடங்கினாள்.

மாச்சம்மா பலதடவை சூட்சுமமாகப் போபண்ணனின் இத்தகைய நடவடிக்கை களைக் கவனித்திருந்தாள். தான் வயதானவள், போபண்ணன் தன்னை மதிக்க வேண்டும் என்ற ஆசை. அவளுக்கிருந்தது. அவள் தன் கணவன் இறந்த பிறகு தனியாகவே உழைத்துக் காவேரியை வளர்த்தாள். அதை விட அதிகமாகக் காவேரி கல்யாணம் செய்து கொண்டபிறகு கணவன் பேச்சைக் கேட்டு இவன் மீது உள்ள ஆசையில் தனியாகப் போய்விட்டால் இந்த மூப்புக் காலத்தில் தான் என்ன செய்வது என்ற பயமும் இருந்தது. அதனால் காவேரிக்குக் கல்யாணம் செய்து வைக்கவே அவளுக்கு விருப்பமில்லை. ஆனால் அக்கம்பக்கத்தவர்கள் பேச்சுக்குப் பயந்தும் காவேரியே குறுக்கு வழியில் போய்விடுவாளோ என்று அஞ்சியும் காவேரிக்கு மாப்பிள்ளை தேடத் தொடங்கினாள். போபண்ணனுக்குத் தாய் தந்தை யாரும் இல்லாததாலும், அவன் மாச்சம்மாவின் வீட்டுக்கே வந்து இருக்க ஒப்புக் கொண்ட தாலும் அவன் காவேரிக்கு ஏற்ற கணவனாகத் தெரிந்தான். ஆனால் அவள் மறை முகமாகக் காவேரியின் மேல் அன்பும், தன்மேல் மரியாதையும் இரண்டும் ஒன்றாகவே வளரும்படி பார்த்துக் கொண்டாள். தன்வீடு எப்போதும் ஒரு வகைக் கம்பீரத்துடன் இருக்கும்படி பார்த்துக் கொண்டு பூஜை புனஸ்காரங்களைத் தொடங்கி, போபண்ணன் கேலி, விளையாட்டுக்கள் இல்லாமல் கௌரவமாக இருக்கும்படி பார்த்துக் கொண்டாள். இந்த நிலையில் போபண்ணனின் சேட்டை களும், அவனுடைய காமுகனைப் போன்ற நடவடிக்கைகளும் மாச்சம்மாவுக்கு மிகவும் அதிகப் பிரசங்கித்தனமாகப் பட்டன. இது இப்படியே வளர்ந்தால் போபண்ணன் தன் வீட்டிலேயே இருந்தாலும் கூடத் தன்னுடைய எஜமானத் துவத்துக்கு அழிவு வரும், அல்லது போபண்ணன் காவேரியை அழைத்துக் கொண்டு போய்த் தன்னை அனாதையாக்கி விடுவான், இந்த இரண்டில் ஒன்று நடக்கும் என்று நினைத்தாள். காவேரிக்கு சமீபத்தில் ஒரு ஆண் குழந்தை பிறக்கிற வரையும் கூட போபண்ணன்

காவேரியைக் கைவிட்டால் என்ன செய்வது என்ற கவலை ஏற்பட்ட துண்டு—ஆனால் இப்போது கைவிட்டாலும் பரவாயில்லை என்ற தைரியம் வந்தி ருந்தது. தான் கணவன் இல்லாமல் காவேரியை வளர்த்து ஆளாக்கவில்லையா, இவளும் அப்படியே வாழட்டும் என்று நினைத்துக் கொண்டாள். அதனாலேயே ஒரு நாள்,

“காவேரி, உன்னிடம் ரொம்ப நாளா சொல்லணுமின்னு நினைச்சேன். போபண்ணன் ஏன் இப்படி இப்போதெல்லாம் சில்லறைத்தனமாக நடக்கறான்? குழந்தையின் முன்னாலும் தெய்வத்தின் முன்னாலும் தப்பு செய்யலாமா? உனக்கு நான் ஒன்றும் சொல்லத் தேவையில்லை. நீ கஷ்ட சுகத்தைப் பார்த்தவள். அவர் போன பிறகு, நான் என்ன, எப்படியெல்லாம் கஷ்டப்பட்டேன். உன்னை எப்படி யெல்லாம் வளர்த்தேன் என்பதை நீயே பார்த்திருக்கே. அப்படியே நீயும் உன் குழந் தைகளை முன்னுக்குக் கொண்டு வரணுமே” என்றாள்.

“ஆமாம்மா, நீயே என்னை வளர்த்தவள், நீயே எனக்குக் கல்யாணம் செய்து வைத்தவள். நீயே ஒரு வார்த்தை சொல்லிடு. சொல்றதுக்கு எனக்கு எப்படியோ இருக்குது” என்றாள் காவேரி.

“அப்படியில்லை, உடம்பில் கொழுப்பு ஏறியதும் நமக்கு யாரும் சமமில்லைங்கற மாதிரி ஆடக் கூடாது” என்றாள் மாச்சம்மா.

காவேரிக்கு அளவுக்கு மீறி கூச்சம் ஏற்பட்டது. மாச்சம்மா என்னென்ன பார்த் தாளோ என்று போபண்ணனின் மேல் கோபமும் வந்தது ஆண்கள் இனமே இப்படித்தான், எனக் குமுறினாள். குழந்தைகள் அழுதாலும் எழுந்து போவதற்கு விடாத போபண் ணனின் சிங்காரச் சேட்டைகள் நினைவிற்கு வந்தன. கோபம் இன்னும் கொஞ்சம் ஏறியது.

“எனக்கென்னமோ நம்வீடு போஸ்டாபீஸா ஆனதே சரியாகப்படலை. அவ ருக்குத் தான் ஒரு பெரிய ஆபீஸர்ங்கற ஜம்பம் வந்திட்டுது. இந்த மாசச சம்பளத்தில் ஒரு கறுப்பு கண்ணாடி வாங்கப்போறேன்னு சொல்லிட்டிருந்தார்” என்று போபண் ணனைத் திட்டினாள்.

போபண்ணனுக்கு இந்த வகையில் மற்றவர்களுடைய கார்டுகளைப் படிப்பது; யாருக்காகவாவது ஏதாவது புத்தகம் வந்தால் அதை உபாயமாகத் திறந்து படிப்பது, பிறகு அதை அவர் களிடம் சேர்ப்பிப்பது முதலிய நடவடிக்கைகள், உப்புசப்பில்லாத போஸ்டாபீஸ் வேலையில் ஒருவகையான மனக் கிளர்ச்சியை உண்டாக்கித் தந்தன. அஜீஸுக்கு வந்த நிர்வாணப்படத்தைப் பார்த்த பிறகு கவரில் சுற்றி வருவதெல்லாம் நிர்வாணப் படங்களே என்று நினைத்துக் கொண்டான். மாதப் பத்திரிகைகளோ, வாரப்பத்திரிகைகளோ யாருக்காவது வந்தால் அவற்றின் மூலை முடுக்களி லெல்லாம் நிர்வாணப் படங்களைத் தேடினான்.

இந்த நிலையில் எங்கிருந்தோ ஒரு கார்டு வேலாயுதன் என்னும் ஒருவனின் பெயருக்கு வந்தது. வேலாயுதன் கள்ளுக் கடை மரசப்பனிடம் வேலை செய்து வந்தான். வேலாயுதனின் வேலை காலையில் எழுந்து மரசப்பா காண்டிராக்ட் எடுத் திருந்த கள்மரத்துப் பானைகளை இறக்கிப் புதிய பானைகளைக் கட்டுவது. அவன் கிழவனாக இருந்ததால் அவனுக்கு மரம் ஏறும் வேலை வேண்டாம் என்று எல்லாரும் சொல்லிக் கொண்டிருந் தார்கள். அவன் இதுவே தன் குலத்தொழில் என்றும் உயிர் போவதாயிருந்தால் இதிலேயே போக வேண்டும் என்றும் சொன்னான். அவன்

மனைவியும் மகள் பத்மியும் அபச்சூரை அடுத்த மற்றொரு ஊரான மூகூரின் முதலாளி தோட்டத்தில் வேலை செய்து வந்தார்கள். அதற்கும் அபச்சூருக்கும் மூன்று மைல் தூரம்தான் என்பதால் வேலாயுதன் சமயம் கிடைத்த போதெல்லாம் மனைவி வீட்டுக்குப் போனான். போகும்போது ஒரு குடம் கள் கொண்டு போய்க் கொடுத்து, தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளித்து ஓய்வு எடுத்துக் கொண்டு திரும்பினான்.

வேலாயுதனுக்கு வந்த கடிதத்தை வழக்கம் போல போபண்ணன் படித்தான். வேலாயுதன் மகள் பத்மி வழிதவறிப் போய்க் கொண்டிருக்கிறாள் என்றும், உடனே வந்து பத்மியைக் கட்டுக்குள் வைக்க வேண்டும் என்றும்வேலாயுதன் ஊருக்கு வந்து நீண்ட நாட்கள் ஆனதால் இந்தக் கடிதம் எழுத வேண்டி வந்தது என்றும் மூகூர் முதலாளி தோட்டத்து மேஸ்திரி பத்மியை ஒரு மாதம் தன் வீட்டில் விட வேண்டும் என்று பத்மியின் தாய்க்கு நூறு ரூபாய் கொடுத்திருக்கிறான் என்றும் எழுதியிருந்தது. போபண்ணன் எந்தச் சலனமும் இல்லாமல் படித்து அதை ஒரு பெரிய கள்ளிப் பெட்டியில் போட்டான். வந்த கடிதங்களை யெல்லாம் அதற்குள் போடுவது அவன் வழக்கம். அவ்ரவர்கள் தங்களுக்கு ஓய்வு கிடைத்த போது வந்து தேடி அதிலிருந்து தம்முடைய கடிதங்களை எடுத்துக் கொண்டு போவார்கள். அந்தச் சமயத்தில் முகவரியைப் பார்க்கும் சாக்கில் மற்றவர்களின் கடிதங்களைப் படித்தார்கள். சிலரோ தமக்கு வந்த கடிதங்களில் தமக்கும் பெருமை சேர்க்கும்படி ஏதாவது இருந்தால் அது முடிந்தவரை மற்றவர்களுக்குப் பிரச்சாரமாகட்டும் என்று படித்து விட்டு அங்கேயே போட்டுவிட்டுப் போய் விடுவார்கள். செங்கல் அறுக்கும் ஜிம்பண்ணனுக்கு மூடிகெரெயில் ராஜ்யோத்சவ நாளில் பாட வேண்டும் என்ற அழைப்பு வந்திருந்தது. அதைப் படித்த பிறகு ஜிம்பண்ண அதை இன்னும் பலர் படிக்கட்டும் என்று அங்கேயே போட்டு வைத்தான் யாரோ ஒருவர் அவனுக்கு வந்த அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு போய் மூன்றாம் நாள் கொடுத்தபோது ஜிம்பண்ண உள்ளுக்குள்ளேயே அலுத்துக் கொண்டு தனக்கு ஏதாவது கடிதம் இருக்கிறதா என்று பார்க்கும் சாக்கில் போஸ்டாபீசுக்குப் போய் அந்தக் கடிதத்தை மறுபடியும் அதே பெட்டியினுள் போட்டு வந்தான். இன்னும் சிலர் யாராவது வந்து 'உங்களுக்கு ஒரு காகிதம் இருக்கிறது போஸ்டாபீசில்' என்று சொன்னால் கவலைப் படாமல் "யாரிடமிருந்து, என்ன சமாச்சாரம்?" என்றெல்லாம் அவரிடமிருந்தே கடிதத்தின் சாராம்சம் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள்.

அப்படிப்பட்ட அந்தப் பெட்டியினுள் வேலாயுதனின் கடிதத்தைப் போட்டான். வேறு கடிதம் ஏதும் அதிகமாக இல்லை. தோட்ட வேலைக்கு நேரமாகிவிட்டது என்று அனுப்ப வேண்டிய கடிதங்களுக்கு முத்திரை குத்தித் தபால் பையில் போட்டுச் சீல்வைத்தான். அதைப் பஸ்ஸிற்கு அனுப்பும்படி மனைவிக்குச் சொல்லிவிட்டுச் சர சரவென்று போனான். அவன் மனத்தில் பத்மியின் தாய்க்கு நூறு ரூபாய் கொடுத்த மேஸ்திரி எவ்வளவு ரசிகனாக இருப்பான் என்று அறிவதில் ஆர்வம் ஏற்பட்டது. அவனுக்குக் கல்யாணம் ஆகி இருக்கிறதா இல்லையா என்று சிந்தித்தான்.

தோட்டத்துக்குப் போனவன் சாகிப் தோட்டத்து குளுப மேஸ்திரியிடம் மூகூர் முதலாளியிடம் இருக்கும் மேஸ்திரி யார், எப்படி என்று விசாரித்தான். குளுபன் தனக்குத் தெரியாது என்றும் வேண்டுமானால் சந்தையன்று விசாரித்துத் தெரிவிப்பதாகவும் சொன்னான். கூடவே "என்ன சமாச்சாரம் எதற்காகக் கேட்டீங்க" என்றும் விசாரித்தான். அதற்கு போபண்ணன் எல்லா விஷயங்களையும் விளக்கமாகச்

சொன்னான். ஆனால் போபண்ணன் இந்த விஷயத்தை வெளியிடுவதற்கு முன்னாலேயே பலர் பெட்டியின் எதிரிலேயே இதையறிந்து புல்லரித்தார்கள். மொத்தத்தில் அந்தப் போஸ்டாபீஸ், நகரத்தில் காபரே ஹோட்டல் ஏற்படுத்தும் கலவரத்தை உண்டாக்கி விட்டது.

வேலாயுதன் ஊரில் இருக்கவே இல்லை. கடிதத்தை வாங்கிக் கொள்ளவும் அவன் வரவே இல்லை. மனைவி வீட்டிலேயே இருக்க வேண்டும் என்று சிலரும், ஊருக்குப் போய் விட்டான் என்று சிலரும், அவனுக்கு உடம்பு சரியில்லை, செத்துகித்துப் போய்விட்டானோ என்று பலரும் சந்தேகப்பட்டார்கள். அவனுடைய கடிதம் பெற்றுக் கொள்பவர் இல்லாமல் போஸ்டாபீஸின் கள்ளிப் பெட்டியைப் போன்ற மிகவும் அபாயகரமான பொது மக்கள் கூடும் இடத்தில் கிடந்தது.

மாலை நேரமானதும் தினமும் போபண்ணன் யாருக்காவது கடிதம் எழுத வேண்டியிருந்தால் அவர்களுக்கு எழுதிக் கொடுக்கும் வேலையையோ, படித்துச் சொல்ல வேண்டியவர்கள் இருந்தால் அவர்களுக்குப் படித்துச் சொல்லும் வேலையையோ செய்வான். நான்கு ஐந்து பேர் உட்கார்ந்து எல்லாரும் ஒவ்வொரு வகையிலும் அபிப்பிராயம் தெரிவித்த பிறகு அவையெல்லாம் விடாமல் ஒன்று சேர்த்து அப்படியானால் இப்படி எழுதலாமா என்று கேட்டு எல்லாரும் சரி சரி என்று தலையாட்டிய பிறகு எழுதிக் கொடுப்பான். வந்தவர்களிடம் அந்தக் கடிதத்தை எழுதுவதற்கே காரணமாக இருந்த கடிதங்கள் முதலிய தஸ்தாஜேஜுகளெல்லாம் இருக்கும். போபண்ணன் அவசியம் நேர்ந்தபோதெல்லாம் இவற்றைப் பிரித்துப் பார்ப்பான்.

இப்படிப்பட்ட ஆலோசனைக் கூட்டம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. அப்போது மூகூரில் ஆரம்பப்பள்ளி ஆசிரியர் தாசண்ணன் ஆஜரானான்.

"என்ன போஸ்ட்மாஸ்டரே எங்க ஊருக்கு ஏதாவது காகிதம் இருக்குதா?" என்று போபண்ணனைக் கேட்டான்.

"இல்லீங்க. உங்க ஊரிலிருந்து வந்த ஒரு காகிதம் இருக்கிறது"

"எப்படிப்பட்டது, என்ன சமாச்சாரம்?"

"என்னவென்று சொல்வது, போய்ப் பாருங்க நீங்களே. அப்புறம் சொல்றேன்"

"ஐயோ கடவுளே, இது என்ன கிரகச்சாரம்?" என்று தாசண்ணன் ஆர்வத்தோடு கள்ளிப் பெட்டியில் கையை விட்டான்.

"அதோ பாருங்க. ஆம், இதுதான், இதுதான்" என்று போபண்ணன் வழிகாட்டினான். தாசண்ணன் பிரம்மச்சாரி. மூகூரில் அவனுடைய பள்ளிக்கூடம் ஆரம்பப் பள்ளியாக இருந் தாலும் கொஞ்சம் பெரிய பெண்களும் வந்து கொண்டிருந் தார்கள். தாசண்ணன் வேறெதுவும் செய்திராவிட்டாலும் அவர்களுடைய உடம்பின் பல இடங்களிலும் தன்னிச்சையாகக் கையை அலையவிட்டு தன் பிரம்மச்சாரி சபலத்தைத் தீர்த்துக் கொண்டிருந்தான் என்று பெரிய கெட்ட பேருக்கு ஆளாகியிருந்தான் அவன் நரியைப் போல் முகத்தை வைத்துக் கொண்டு வெளியே புறப்பட்டானானால் பெண்கள் முகத்தைச் சுளித்துக் கொள்வார்கள்.

தாசண்ணன் கடிதத்தைப் படித்து விட்டு "நல்ல கதை இந்த பத்மியினுடையது" என்று சொல்லிக் கடிதத்தை மறுபடியும் கள்ளிப் பெட்டியினுள் போட்டான். திரும்பி வந்து போபண்ணனின் அரட்டைக் கச்சேரியில் சேர்ந்து கொண்டான்.

"அதில்லை தாசண்ணா, மூகூரில் காகிதம் எழுத உங்களை விட்டா வேறு யார் இருக்கிறாங்க? நீங்களே எழுதிட்டு ஒன்றும் தெரியாதவரைப் போல் நடிக்கிறீங்களே?" என்று கேட்டான்.

"சீச்சீ. நான் எழுதினா இங்கதானே போஸ்ட் செய்ய வேண்டும். நீங்க கொஞ்ச நாளைக்கு முன்னால் ஊருக்கு வந்து இங்கேயே காகிதத்தைப் போட வேண்டும் என்று சொன்னீங்க இல்லையா? எல்லாருக்கும் நான் சொல்லி வைத்திருக்கிறேன். இருக்கட்டும், அந்தக் காகித்தை எடுத்து முத்திரையைப் பாருங்க எங்கிருந்து வந்திருக்கு துன்னு தெரியும்" என்றான். போபண்ணனுக்கு இதுவரை அது தோன்றவில்லை. உடனே பெட்டியில் இருந்த அதை எடுத்து எங்கிருந்து வந்தது என்று ஆராயத் தொடங்கினான். போஸ்டாபீஸ் முத்திரையில் தேதியைத் தவிர வேறு எதுவும் புலனாகவில்லை.

அந்தக் கடிதத்தின் முத்திரையை ஆராயும் சாக்கில் அந்தக் கடிதத்தைக் கூட்டத்தின் எல்லா உறுப்பினர்களும் அதைப் படித்துச் சுவைத்தார்கள். அவர்களில் ஒருவன் "வேலாயுதன் மனைவிக்கு என்னவோ இந்த நடவடிக்கை உண்டு. அதனால் தான் வேலாயுதன் தன் மனைவியை விட்டுப் பிரிந்திருக்கிறான் என்று பேசிக்கறாங்க" என்று முணுமுணுத்தான்.

தாசண்ணன் "சீச்சிப் போங்கடா. வயசாகி நோயாகி இருக்கும் கிழடு. அதற்கு என்ன திராணி இருக்கும். யாருமே இதை ஒப்புக் கொள்ள மாட்டாங்க" என்றான். அதற்கு முதல் ஆள், "உம், உம், உனக்குத் தெரியாது. கிழவர்களுக்கு இருக்கும் அநுபவம்" என்று விழுந்து விழுந்து சிரித்தான். அந்தக் கூட்டத்திலிருந்த கொஞ்சம் வயதான ஆள் ஒருவன் இந்தப் பேச்சுத் தன்னையை குறிக்கிறது என்று எண்ணி அதை ஒரு புகழுரையாக நினைத்துப் பெருமிதத்தோடு சிரித்தான்.

அதற்கு முன்னால் பேசிய ஆள், "அப்படியல்ல, போஸ்ட் மாஸ்டரே! கிழவர் களுக்குக் கிழவர்கள் மேலேயே சபலம் இருந்தால் சரியாக இருக்கும். கிழவர்களுக்கு இளம்வயதுக் காரர்களைக் கண்டால் கொழுப்பு அதிகம்" என்றான்.

"அப்படியென்றால் கிழவர்களின் சகவாசம் கெட்டது. இவர்கள் மீது கொஞ்சம் கண் வைத்திருக்க வேண்டும்" என்றான் போபண்ணன். அவன் பேச்சைக் கேட்டு எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

அவர்களுடைய கூட்டம் கலைந்தது. ஆனால் அன்றைக்கு போபண்ணனின் வீட்டில் மட்டும் ஒரு புயலே வீசியது. கிழவர்கள் பற்றியும் கிழவிகள் பற்றியும் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு பேசிய பேச்சுக்கள் போபண்ணனின் மாமியார் காதுக்கு எட்டியது.

வீட்டைப் போஸ்டாபீசாக மாற்றிய பிறகு கடிதம் எழுதுவது முதலிய வேலை களுக்காகச் சேர்ந்து கொண்டிருந்த அந்தக் கூட்டம் படிப்படியாக கிளப்புகளில் கூடும் உல்லாசக் குழுவினரைப் போல நடந்து கொள்வதை மாச்சம்மாள் கவனித் திருந்தாள். முதலில் காகிதத்தை மட்டுமே எழுதிக் கொடுத்துக் கொண்டிருந்த போபண்ணன் வரவரக் கடிதம் எழுதுவதற்காக வந்தவர்களுடன் கடிதத்தின் உள்ளுறைகளைப் பற்றி அரட்டையடிக்கத் தொடங்கினான். பிறகு இந்த வேலை அப்படியே வளர்ந்து வளர்ந்து இரண்டு பேர் பேசிக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தது மாறி, இப்போது பலருடைய ஆலோசனைகளையும் கேட்டு எழுதுவதாக மாறியது. மாச்சம்மாவும் காவேரியும் பல தடவை இதைப் போன்ற கூட்டத்தினருடன் அரட்டை யடிக்கக்கூடாது என்று எச்சரித்தபோது, போஸ்டாபீஸ் நடவடிக்கைகள் குறைந்தால் போஸ்டாபீசை மூடிவிடுவார்கள் என்றும், அதற்காகவே தான் காகிதம் பத்திரங்கள் முதலியவற்றை அதிகமாகப் பழக்கப்படுத்த உற்சாகமூட்ட வேண்டியிருக்கிறது

என்றும் போபண்ணன் சமாதானம் சொல்லியிருந்தான். அது இப்போது இன்னும் முன்னேறி மற்றவருடைய கடிதங்களைப் பற்றி அரட்டையடிக்கும் மட்டத்தை எட்டி இருந்தது. மாச்சம்மாவால் இதை மட்டும் பொறுத்துக் கொள்ள முடிய வில்லை. காவேரியிடம் வந்து, “பார், அந்தப் போக்கிரி தாசப்பனை உட்கார வைத்துக் கொண்டு அரட்டையடிக்கிறானே. எப்படியாகிவிட்டது நம் வீட்டின் நிலைமை” என்று பல்லைக் கடித்தாள். காவேரிக்கும் அடக்க முடியாத கோபம் வந்தது.

போபண்ணன் வீட்டுக்குள் வந்தான். யாரும் எதுவும் பேசவில்லை. சில நாட்க ளாகவே இப்படிப்பட்ட ஓர் இறுக்கமான சூழ்நிலை வளர்ந்து கொண்டே வந்தி ருந்தது. போபண்ணன் அந்த நிலையிலும் கொஞ்சம் வளர்ந்து பெரியவளாகியிருந்த தன் மகளுடன் பேசி விளையாடிக் கொண்டிருப்பான். காவேரி மாச்சம்மாவின் எதிரில் இன்னும் கொஞ்சம் இறுகிப் போவாள். தன் தாயின் விருப்பத்துக்காகவே இப்படி இருக்கிறாள் என்று தெரிந்தபிறகு போபண்ணனுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. போபண்ணன் வீட்டுக்குள் இருந்த இந்த அமைதியற்ற சூழ் நிலையைக் கொஞ்சம் குறைப்பதற்கு முயற்சி செய்தாலோ அது இன்னும் அதிகமான தொந்தர வுக்கும் சச்சரவுக்குமே வழி செய்தது.

போபண்ணன் வீட்டுக்குள் வந்தபோது எல்லாரும் வேறு எதைப்பற்றியும் சிந்திக்காமல் தம் வேலையைப் பார்த்துக் கொண்டு மௌனமாக இருந்தார்கள். போபண்ணனின் மகள் சீதா ஓடிவந்து “அப்பா, அப்பா, பார் இங்கே” என்று பாவா டையைத் தூக்கி போஸ்டாபீஸ் முத்திரையை வயிற்றின் மேல் குத்திக் கொண் டிருந்ததைக் காட்டினாள். “ஐயோ பெண்ணே, நீயும் போஸ்டாபீஸ் வேலையிலேயே இறங்கியிருக்கிறாயா” என்று போபண்ணன் அவளைக் கேட்டான்.

அதற்குள் மாச்சம்மா பெண்கள் அப்படிப் பாவாடையைத் தூக்குவது அநாகரீகம் என்று சொல்வதைப் போல தூத்தூ என்று அவளுடைய பாவாடையைப் பிடித்து வேகமாகக் கீழே இழுத் தாள். “போதும், இதோடு நிறுத்து இந்த வேலையை” என்று முணுமுணுத்துக் கொண்டே உள்ளே போனாள்.

போபண்ணனுக்குச் சாப்பிட எழுந்திருக்கவும் வெட்கமாக இருந்தது. இதுவரை தனது தோட்டச் சம்பளத்தையும் போஸ்டாபீஸ் வேலையில் கிடைத்த சம்பளத் தையும் வீட்டுச் செலவுக்குக் கொடுத்து வந்தாலும் அவனுக்கு அன்று அதெல்லாம் தான் உழைத்துத் தேடிய பணம் என்பதாகத் தோன்றவில்லை.

ஆனால் போபண்ணன் ரௌடியோ முன்கோபியோ துடுக்கான சுபாவம் உடை யவனோ அல்ல. தன் வாழ்க்கையில் எந்தவிதமான புரட்சிகரமான மாற்றத்தையும் அவன் கண்டதில்லை, விரும்பியதும் இல்லை. அதனால்தானோ என்னவோ பேசாமலே சாப்பிட்டான்.

போபண்ணன் தன் தாய்க்கு வருத்தம் ஏற்படுத்துகிறான் என்று காவேரி வருந் தினாள். போபண்ணன் மேல் ஒரு வகையான பலாத்காரமான கோபத்தையே வளர்த்துக் கொள்ளத் தொடங்கினாள். போபண்ணன் ஆசையோடு அவளை அணைத்துக் கொண்டால் அது அவளுக்கு அம்மாவுக்குச் செய்த துரோகம் போலத் தெரிந்தது. தினமும் இரவில் ஏதாவதொரு சண்டையைத் தொடங்கி முகத்தைத் திருப்பிக் கொண்டு படுக்கத் தொடங்கினாள். போபண்ணன் தினமும் எப்படி யிருந்தாலும் தன்னுடைய காமவேட்கை தீர்ந்தால் போதும் என்று நினைக்கும் மிருகம் அல்ல. ஆகையால் காவேரியுடன் ஆசையோடு இருக்கவும், அன்பான

சூழ்நிலையை ஏற்படுத்தவும் முயன்றான். ஒரு நாள் தூக்கக் கலக்கத்தில் போபண்ணனைக் தழுவிக் கொண் டிருந்த காவேரி திடீரென்று விழித்துப் போபண்ணனைத் திட்டி விட்டு அந்தப் பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டாள்.

காவேரி அன்றைக்கு "அந்தப் பொறுக்கி தாசண்ணனுடன் நீங்கள் அவ்வளவு சந்தோஷமாகப் பேசும் விஷயம் என்ன?" என்று சண்டை போட்டு அந்தப் பக்கம் திரும்பிப் படுத்தாள். போபண்ணன் வருத்தத்துடன் கூரையைப் பார்த்தபடி பெரு மூச்சு விட்டுத் தூங்க முயற்சி செய்தான். அஜீஸுக்கு வந்த நிர்வாணப் பெண்ணின் படம் ஒரு தேவதை போல ஏதோ ஒரு அடங்காத ஆசைகளின் குறியீடாகப் போபண்ணனின் கற்பனையில் தெரிந்தது. தான் இவ்வளவு வருத்தமாக இருப்ப தற்காக காரணம் மட்டும் போபண்ணனுக்குப் புரியவே இல்லை.

வேலாயுதன் மட்டும் கடிதத்தை வாங்கிக் கொண்டு போவதற்கு வரவே இல்லை. யாரோ அவன் உஜிரெக்குப் போயிருக்கிறான் என்று சொன்னான். இன்னொரு பக்கம் ஊர் ஜனங்களெல்லாம் வேலாயுதன் மகள் விஷயத்தை ஊறுகாய் போலத் தொட்டுச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். வெற்றிலை பாக்குக்கு இடையில் அதை வாயில் வைத்து நன்றாக மென்றார்கள். போபண்ணனின் போஸ்டாபீஸ் கோஷ்டியில் தினமும் பத்மியின் விஷயம் வந்து கொண்டிருந்தது. கேள்விப்பட்ட வர்கள் எல்லாம் அந்தக் கடிதத்தைக் கள்ளிப்பெட்டியில் இருந்து எடுத்து விவாதித தார்கள். இதனால் அந்தக் கடிதம் நைந்து போய் அழுக்காகி அதன் எழுத்துக களெல்லாம் அழிந்து போகிற நிலைக்கு வந்தது. ஒரு நாள் சாயங்காலம் போபண் ணனின் போஸ் டாபீஸில் நாலைந்து பேர் உட்கார்ந்து அந்தக் கடிதத்தின் சிதைந்த நிலையைப் பற்றி விவாதித்தார்கள்.

ஒருவன் சொன்னான்: "அந்தக் கடிதத்தை அப்படியே கிழித்துப் போட்டுவிட்டால் இந்தத் தொல்லை மிஞ்சும். வேலாயுதன் வந்தப்புறம் நாமே இப்படியோரு காகிதம் வந்ததுன்னு சொன்னால் போதும்..."

இதற்கு அந்தக் கூட்டத்தில் இருந்தவர்களெல்லாம் ஒரேயடியாகத் தம்முடைய அதிருப்தியையும் இதை ஒப்புக் கொள்ளவில்லை என்பதையும் தெரிவித்தார்கள்.

"என்ன போஸ்ட்மாஸ்டர் வேலைன்னா என்னமோ பீடிக் கடை வேலைன்னு நீங்க நினைச்சிட்டிருக்கற மாதிரி தெரியுது. போஸ்டாபீஸ் ஆரம்பிச்ச அன்னைக்கு நீங்க யாரும் வரலைன்னு நெனைக்கறன். இது கவர்ன்மெண்ட் வேலை. கொஞ்சம் ஏறக்குறைய ஆனாலும் டில்லியிலிருந்து பட்டாளம் வந்துவிடும். ஊராரையெல்லாம் சங்கிலி போட்டுக் கட்டி இழுத்துக் கொண்டு போவாங்க. சர்க்கார் அப்படியொரு வேலையைச் செய்யக் கூடாது" என்று சொன்னான். அவன் பேச்சினால் போபண்ணனுக்கு நல்ல தெம்பு வந்தது. கள்ளச் சாமான் அல்லது கள்ளச் சாராயம் இவற்றில் ஈடுபட்டிருப்பவர்களைப் போலீசார் பிடித்தால் வழக்குப் பதிவதற்குப் போபண்ணனையே கூப்பிடுவார்கள். இதனாலெல்லாம் போபண்ணனுக்குப் போஸ்ட் மாஸ்டர் விஷயத்தில் ஒரு நல்ல கௌரவமும் பெருமையும் ஏற்பட்டிருந்தது. அதனால்—"பார்க்கவில்லையா ஆயிரக்கணக்கான ரூபாய் சரக்கை என்வசம் ஒப்படைத்திருக்கிறார்கள். யார் கொடுப்பார்கள் இப்படி, சொல் பார்க்கலாம்!" என்று ஜம்பமாகச் சொன்னான்.

"பின்னே! பின்னே இல்லையா?" முதலிய குரல்கள் கூட்டத்திலிருந்து எழுந்தன. "யார் யாருக்கு வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் காகிதம் எழுதட்டும்,

போஸ்ட்மாஸ்டர் டூட்டி அவன் செய்ய வேண்டும். டூட்டி என்றால் டூட்டிதான். போஸ்ட் மாஸ்டர் என்றால் என்ன ஸ்கூல் மாஸ்டா போலவா?" என்றான் இன்னொருவன். "போஸ்ட்மாஸ்டர் என்றால் மந்திரி மாதிரி. போலீசார் கூட அவனைத் தொட முடியாது" என்றான் மற்றொருவன்.

இப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் போஸ்ட் மாஸ்டர் வேலையைப் புகழ்ந்தார்கள். கடைசியில் வேலாயுதன் கடிதத்தை என்ன செய்வது என்பது பற்றி யாருக்கும் எந்த ஒரு நல்ல கருத்தும் இருந்ததாக தெரியவில்லை.

போபண்ணனுக்கும் என்ன செய்ய வேண்டும் என்று தெரியவில்லை என்றாலும் அந்தக் கடிதத்தைக் கிழித்து எறிந்து விட்டு அதைப் பழங்கால நினைவாகப் புதைத்து விட அவன் தயாராக இல்லை. நிர்வாணப்படம்; பத்மி; எல்லாமே ஏதோ திருப்தி யின்மை என்னும் கடலிலிருந்து தெளித்த துளிகளாகவே தெரிந்தன.

அன்று போபண்ணன் வேலாயுதனின் கடிதத்தை இன்னொரு கார்டில் நகல் எடுத்து, வேலாயுதனின் உஜிரெ முகவரியைத் தெரிந்து கொண்டு வந்து அதைப் போஸ்ட் செய்து விட்டான். ஏதோ ஒரு அத்தியாயம் முடிந்தது என்று கவலைக் குள்ளாகியிருந்த போபண்ணன் ஓர் கணம் கடமையைச் செய்து முடித்தவன் போல நிம்மதி அடைந்தான். மாமியார் மாச்சம்மா அன்றைக்கு காபுர் என்றபோது "டியூட்டி என்றால் டியூட்டி. என் டியூட்டி எனக்கு, உன் டியூட்டி உனக்கு. என் டியூட் டியில் நீ குறுக்கே வராதே. உன் டியூட்டியில் நான் குறுக்கிட மாட்டேன்." என்று திருப்பிக் கத்தினான்.

காவேரிக்கு அன்றைக்கு என்றுமில்லாத கோபம் வந்தது. ஆனால் போபண்ணன் அன்றைய பேச்சை மறந்து விட்டிருந்தான். இரவு படுத்துக் கொண்ட போது பழக்கம் காரணமாகவோ, ஆசையினாலோ, சபலத்தினாலோ போபண்ணனின் கை காவேரியின் மேல் போயிற்று. காவேரி அளவில்லாத கோபத்தில் போபண் ணனின் கையை உதறித் தள்ளினாள்.

போபண்ணனுக்கு எத்தனையோ நாட்களாக அடக்கி வைத்திருந்த கோபம் எல்லாம் வாய்க்கு வந்ததைப் போல ஆயிற்று. தன்னைக் கோபத்துள்ளாக்கி உயிரை எடுக்கிறாள், சனி இவள் என்ற நினைத்தான். எல்லார் வீட்டிலும் எல்லாப் பெண் களுமே இப்படித்தான் இருப்பார்களோ என்று ஒரு கேள்வியும் எழுப்பினான். ஆசையினால் இல்லாவிட்டாலும் கோபத்திலாவது அவள் மேல் வெறியுடன்பாய வேண்டும் என்று நினைத்தான். ஒரு காலத்தில் அணைத்து முத்தமிட்ட அந்த உடம்பை எப்படித் தண்டிப்பது என்று அவன் மனம் போராடத் தொடங்கியது.

"தூதெதெறி. தரித்திரம் பிடிச்சவளே. உனக்குக் கொழுப்பு அதிகமானபோது கிழவிக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாக வந்துட்டிருந்தே. இப்போது இப்படிச் சொல்றே. தாசிகளே உன்னைவிட மேல். சிடுசிடுன்னு எரிஞ்சி விழாம பணத்தை வாங்கிக்கொண்டு ரவிக்கையை அவிழ்ப்பாளுங்க" என்று கத்தினான். போபண்ணன் தாசி வீட்டுக்குப் போனதில்லை. காவேரியின் மனத்தைப் புண் படுத்து வதற்காக ஒரு ஊகத்தின் மேல் சொன்னான். காவேரிக்கும் இது தெரியும்.

காவேரிக்கும் கோபம் வந்தது. "அப்படிப் பத்து இடங்களில் தீர்த்துக் கொண்டி ருந்தால் வீட்டில் இப்படித்தான் ஆகும்" என்றாள்.

போபண்ணன் கோபத்தில் இன்னும் ஏதோ சொன்னான். சொல் அம்புகளும் எதிர்த்து வந்த சொல் அம்புகளும் மழையாகப் பொழிந்தன. காவேரி வாய் திறக் காமல் மௌனமாக அழத் தொடங்கினாள்.

அதற்கப்புறம் ஒவ்வொரு நாளும் நிலைமை தறிகெட்டுப் போயிற்று. காவேரி போபண்ணனுடன் அதிகம் பேசவில்லை. போஸ்டாபீஸ் ஒருவகைத் துயர மாளிகை யாக ஆயிற்று. எல்லாரும் இழவு வீட்டைப் போல துக்கம் நிறைந்த முகத்தோடு இருந்தார்கள்.

போபண்ணன் மீதிருந்த அன்பு எல்லாம் போனபிறகு அவனுடன் சேர்ந் திருப்பதும் சரசம், சல்லாபம், சம்போகம் எதற்குமே பொருளில்லாமல் போய் விட்டது. போபண்ணனின் காதல் விளையாட்டுக்கள் எங்கெங்கோ கைவைத்து கிசுகிசு மூட்டியதைப் போல இருந்தது. அணைத்துக் கொண்டால் உடம்பில் புழு நெளிவதைப் போல இருந்தது. உதறிக் கொண்டு எழுந்து விடலாம் போல இருந்தது. அவையே ஒரு காலத்தில் காவேரியை காமத்தின் எரிமலையாக ஆக்கியிருந்தன.

போபண்ணனுக்கு ஏதும் செய்யத் தோன்றவில்லை. தான் என்றைக்குமே இவளுக்கு உணர்ச்சியையோ பூரிப்பையோ கொடுக்க முடியாதவன் என்று நினைத்தபோது பைத்தியம் பிடித்தது போல ஆயிற்று.

அந்த ஆண்டு முடிந்து கொண்டு வந்தது. தோட்டத்துக்குப் புதிய ஆள்களைச் சேர்க்கும், பழைய ஆண்களுக்குக் கணக்குத் தீர்த்து மிச்சத்தைக் கொடுக்கும் வேலை தொடங்கியது.

இதே சமயத்தில் மாச்சம்மா போபண்ணனின் கல்யாணத்துக்காக வாங்கிய கடனை அவனே தீர்க்க வேண்டும் என்று தோட்ட முதலாளியான சாகிப்பிடம் விண்ணப்பித்தாள். அவளுடைய வாதம் இதுதான்: அவள் அந்தப் பணத்தைப் போபண்ணனின் கல்யாணத்துக்காகச் செலவழித்தாளே தவிர தன் சொந்தத் துக்காக அல்ல. காவேரி கல்யாணமானதிலிருந்து அவள் வேலைக்கு வருவதும் குறைந்து போய்த் தன் வருமானமும் குறைந்திருக்கிறது. போபண்ணனுக்குப் போஸ்ட் மாஸ்டர் சம்பளம், போஸ்டாபீஸ் வாடகை ஆகிய புது வருமானம் இருக்கிறது...

போபண்ணன் என்னதான் எடுத்துச் சொன்னாலும் அதைப் போபண்ணனின் கணக்கிலேயே சேர்க்க வேண்டும் என்று முடிவாயிற்று. அவள் தன் மகளின் கல்யாணத்துக்காக வாங்கிய கடனுக்குத் தான் எப்படிப் பொறுப்பாக முடியும் என்று போபண்ணன் கேட்டதற்கு, சாகிப், "அவள் மகள் யார், உன் பெண்சாதி இல்லையாடா?" என்று மடக்கி விட்டார்.

போபண்ணனுக்கு கோபத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அப்படி யானால் தான் வேறு வீடு பார்த்துக் கொள்வ தாக முதலாளியின் எதிரில் கத்தினான்.

மாச்சம்மா, "இத்தனை நாள் வளர்த்தது அவளை உன் பின்னால் தெருவில் அலையவிடறதுக்கா?" என்று விதண்டவாதம் பேசினாள். காவேரி அங்கேயே இருந்தாள். மாச்சம்மா இப்படிச் சொன்னபோது போபண்ணன் காவேரியின் பக்கம் பார்த்தான். காவேரியோ போபண்ணன் யாரோ என்பதைப் போல அவன் பக்கம் வெற்றுப் பார்வை வீசினாள்.

போபண்ணனுக்குத் தான் மட்டும் பிரிந்து போவதானாலும் அதற்கும் அவர்கள் தயாராக இருப்பதைப் பார்த்து ஏமாற்றம் உண்டாயிற்று. தன் குழந்தையையும் மகளையும் நினைத்துப் பார்த்தான். தன் போஸ்மாஸ்டர் வேலையை நினைத்துப் பார்த்தான். "ஆகட்டும், நானே தீர்க்கிறேன்" என்று சொன்னான். அப்படிச் சொல்லும்பேரது அவன் குரல் தழுதழுத்தது.

அன்றைக்கு மாலை வரையில் போபண்ணன் சும்மா உட்கார்ந்திருந்தான். வாழ்க்கையில் தான் எந்த வழியைப் பின் பற்றுவது என்பது அவனுக்குப் புலப்பட வில்லை. எல்லா வற்றுக்கும் "உம், ஊகூம்" என்ற இரண்டே பதில்களைச் சொன் னான். யாரோ கடிதம் எழுதித் தர வேண்டும் என்று கேட்டார்கள் வெறும் இயந் திரத்தைப் போல எழுதிக் கொடுத்தான். மாலை மறைந்து இருள் கவிழ்ந்து கொண்டு வந்தது. வீட்டுக்குள் போகலாமா வேண்டாமா என்பதைப் போலச் சிந்தித்துக் கொண்டே எழுந்தான். அந்த நேரத்துக்குச் சரியாகத் தூரத்தில் யாரோ பேசிக் கொண்டே வருவதைப் போல் தெரிந்தது. பத்துப் பன்னிரண்டு பேர் கொண்ட ஒரு கூட்டம் சாலையின் திருப்பத்தில் கண்ணில்பட்டது. போபண்ணன் அவர் களெல்லாம் யார் என்று பார்த்துக் கொண்டே நின்றான். கூட்டம் மெதுவாகப் போஸ்டாபீஸ் பக்கமே வந்தது. போபண்ணன் பார்த்துக் கொண்டே இருந்தான். இருட்டிக்கொண்டே வந்ததால் தூரத்திலிருந்து யாரும் சரியாகத் தெரியவில்லை. யாரோ ஒரு பெண் அழுது கொண்டிருப்பது மாத்திரம் கேட்டது. போபண்ணன் கண்ணில் பட்டதும் யாரோ ஒருவன் "இந்த தறுதலைப் பயல்களுக்கெல்லாம் போஸ்ட்மாஸ்டர் வேலை கொடுத்தால் வேறென்ன நடக்கும்?" என்று கத்திக் கொண்டே வந்தான். போபண்ணனின் நொந்த மனத்தில் இது கொதிநீர் கொட்டி யதைப் போல ஆயிற்று. கூட்டம் அருகில் வந்து கொண்டிருக்கும் போது மூகூர் தோட்டத்து மேஸ்திரி "யாருடா அந்தத்தேவடியாள் மகன், என்னைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் சொன்னவன்? அவன் ஆண்பிள்ளையாக இருந்தா இப்பொழுது சொல்லட்டும்" என்று கத்தினான். போபண்ணன் கண்ணுக்கு அந்தக் கூட்டத்திலிருந்த வேலாயுதன், அவன் மனைவி, மகள் முதலியவர்களெல்லாம் ஒவ்வொருவராகக் கண்ணுக்குப் புலப்பட்டார்கள்.

எல்லாரும் சாராயம் குடித்துவிட்டு வீச்சமடிக்க வந்து கொண்டிருந்தார்கள். வந்த வர்கள் கண்டபடி போபண்ணனை ஏசினார்கள். மூகூர் தோட்டத்து மேஸ்திரியைப் பார்த்து "நாக்கை அடக்கிப் பேசடா மகனே, உன்னைப் போல் பத்துப் பேர் என் கீழே வேலை செய்கிறார்கள் தெரியுமா" என்று திட்டினான்.

"நீ அவ்வளவு பெரிய மனிதனாய் இருந்தால் இந்தக் காகிதம் எழுதி ஒரு பெண்ணின் மானத்தை வாங்கும் வேலையில் ஏனடா இறங்கினாய்?" என்றது ஏதோ ஒரு குரல். "யார் எழுதினானோ அவனைப் போய்க் கேள், என்னிடம் ஏன் வாலாட்டுகிறாய்?" என்று போபண்ணன் அந்தக் கூட்டத்திலிருந்து வந்த அசரீரிக் குரலுக்குப் பதில் சொன்னான். போபண்ணன் அப்படிச் சொன்னதும், "வேறு யாருடா எழுதினவன், உன் அப்பன்; பொய் வேறே சொல்கிறாயா?" என்று வேலா யுதன் ஒரு கார்டைப் போபண்ணனின் எதிரில் காட்டினான். போபண்ணன் பார்த்தான்.அது வேலாயுதனுக்கு வந்த கடிதத்தைப் போபண்ணன் நகல் எடுத்துப் போட்டது. போபண்ண அதை எழுதியது நான்தான் என்றும் ஆனால் அது வேலாயுதனுக்கு வந்த கடிதத்தை நகல் எழுதிப் போட்டது என்றும் சொன்னான். கூட்டத்தில் அதை யாரும் கேட்கத் தயாராக இல்லை.

அவர்கள் இந்த விஷயத்தைப் பற்றிய பொய்யை நிரூபிப்பது, அந்தக் கடிதம் எழுதியவனை எப்படித் தண்டிப்பார்கள் என்பதையே பொறுத்திருந்தது. அதுவும் அல்லாமல் மூகூர் மேஸ்திரியும் இன்னும் சிலரும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி வேலாயுதன் மகள் பத்மியின் மேல் செல்வாக்கை உண்டாக்கிக் கொள்ள முயற்சி செய்தார்கள்.

இந்தக் கலாட்டாவைக் கேட்டுக் காவேரி, மாச்சம்மா, எல்லாரும் வெளியே வந்து நின்றார்கள். வேலாயுதன் நடந்ததை யெல்லாம் விவரமாகச் சொல்லத் தொடங்கினான். தன் மகளை மூகூர் மேஸ்திரி வைத்துக் கொண்டிருந்தான் என்று ஊரெல்லாம் பரப்பியது மட்டுமல்லாமல் கடிதத்தையும் உஜிரேக்கு எழுதினான் என்றும், தான் உஜிரேயில் இல்லாமல் பௌதங் கடிக்குப் போயிருந்ததால் அந்தக் கடிதத்தை அங்கே அனுப்பினார்கள் என்றும், ஆனால் அது வருவதற்குள் தான் அங்கேயும் இல்லாமல் பண்ட வால போயிருந்ததாகவும் அதனால் அந்தக் கடிதம் பண்ட வாலத்துக்கு வந்தது என்றும், போன இடங்களிலெல்லாம் எல்லாரும் அந்தக் கார்டைப் படித்துவிட்டு அனுப்பியதால் தனது சொந்தக்காரர்களுக்கிடையில் தன் மானமும் மரியாதையும் ஒரேயடியாகப் போய்விட்டன என்றும் வேலாயுதன் மாச்சம்மாவுக்குச் சொன்னான்.

அவன் தன் மகளுக்குப் பையன் தேடுவதற்காகப் போயிருந்ததாகவும், ஆனால் இப்போது இன்னும் கொஞ்ச காலத்துக்கு யாரும் கல்யாணம் செய்து கொள்ளும் வழியே இல்லையென்றும் தன் ஜாதியில் பையன் கிடைக்காமல் எத்தனையோ பெண்கள் வழிதப்பிப் போயிருக்கிறார்கள் என்றும் சொல்லி ஓவென்று அழுதான்.

கூடவே மூகூர் மேஸ்திரியும் வேலாயுதன் மகளை அடித்துக் கொன்றே விடுவதாக இருந்தான் என்றும் நல்ல வேளையாக அதற்குள் தனக்கு விஷயம் தெரிந்து ஓடிப்போய் ஒரு பெண்ணின் உயிரைக் காப்பாற்றினேன் என்றும் தன்னையே புகழ்ந்து கொண்டு பழி கூறினான்.

மாச்சம்மாவும் அவனிடம் "ஊர்ப் பஞ்சாயத்தில் இவன் ஏன் தலையிடணும், என் வீட்டைப் போஸ்டாபீஸ் ஆக்கி என் மானம் மரியாதையை வாங்குறான். இந்தப் போஸ்டாபீஸ் வந்ததில் ஊருக்கே தரித்திரம் பிடித்திருக்கு" என்று கூச்சல் போடத் தொடங்கினாள்.

போபண்ணனுக்காகப் பேசுகிறவர்கள் யாருமே கண்ணில் படவில்லை. இரண்டொரு ஆட்கள் வேலாயுதனுக்கு வந்த அசல் கடிதத்தைப் படித்தவர்களும் இருந்தார்கள். போபண்ணனே அதை ஏன் எழுதியிருக்கக் கூடாது என்ற சந்தேகம் வந்ததோ என்னவோ அவர்கள் யாரும் நடுவில் வாய் திறக்கவே இல்லை. அப்படியாக அங்கே வந்திருந்தவர்கள் எல்லோருமே போபண்ணனை மனம் போனபடி திட்டத் தொடங்கினார்கள்.

போபண்ணனுக்குத் தன் தப்பு என்ன என்பதே விளங்காமல் சும்மா மாடு மாதிரி நின்று கொண்டிருந்தான். எல்லாரும் திட்டித் திட்டி ஓய்ந்து போகலாம் என்று நினைத்து, எல்லாவற்றுக்கும் முடிவு என்று ஒன்று இருக்கிறது என்று நினைத்து. எல்லாவற்றையும் விட அதிகமாக வருத்தம் தந்தது எதுவென்றால் காவேரியின் மௌனம்தான். வாயே திறக்காமல் அவள் சும்மாயிருந்தாள். அவமானத்தைத் தாங்கிக் கொள்வதைவிடக் கொடிய நரகம் வேறு இல்லை என்ற தோன்றியது போபண்ணனுக்கு.

"பார், வேலாயுதா, என் டியூட்டியை நான் செய்தேன். உன் காகிதம் இங்கே பாழாகிக் கொண்டிருந்தது. அதை நகல் எடுத்து அனுப்பினேன். உன் மகள் எப்படிப்பட்டவளோ நீ எப்படிப் பட்டவனோ எனக்கென்ன தெரியும்" என்று வேலாயுதனிடம் சொன்னான்.

"ஆமா, ஆமா நீதான் மகாத்மா, ஊராரெல்லாம் போக்கிரி. உன் வீட்டையும் உன்

பெண்டாட்டியையும் சரியாக வைத்துக் கொண்டு அப்புறம் ஊரைப் பற்றிப் பேசு. உன் கைப்பிடித்தவள் எத்தனைபேர் வீட்டில் இருந்துட்டு வந்தவளோ தெரிஞ்சிக்கோ." என்று மூகூர் மேஸ்திரி போபண்ணனின் மனத்தை ரணப்படுத்து வதற்காகவே சொன்னான்.

அதுவரை பொறுமையுடன் பேசிக் கொண்டிருந்த போபண்ணனுக்குக் கிரென்று கோபம் தலைக்கு ஏறியது.

மூகூரின் மேஸ்திரி சொன்னதைக் கேட்டு அங்கிருந்தவர்களெல்லாம் அதிர்ந்து போனார்கள். அங்கே மௌனம் நிரம்பியது. எல்லாரும் போபண்ணன் என்ன செய்தான் என்று பழி சூட்டி அங்கே வந்திருந்தார்களோ அதே மாதிரியான இழிந்த செயலில் மூகூர் மேஸ்திரி இறங்கி இருந்தான். ஆனால் அதற்கு எதிராக யாரும் பேசவில்லை. ஏனென்றால் மூகூர் மேஸ்திரி யாரைப் பார்த்துச் சொன்னானோ அவனிடமிருந்து முதலில் எதிர்விளைவை எதிர்பார்த்தார்கள். போபண்ணன் காவேரியின் பக்கம் பார்த்தான். காவேரியின் கண்ணில் ஒரு திக்பிரமை பரவி யிருந்தது. அவள் எதுவும் பேசாமல் தன் தாயின் பக்கம் திரும்பினாள். மாச்சம்மா போபண்ணன் மேலிருந்த பகைமையில் பேசாமல் நின்றாள்.

இவர்களெல்லாம் தன் மேல் உள்ள வெறுப்பினால் இந்தப் பழியைத் தாங்கிக் கொள்ளத் தயாரானதைக் கண்டு போபண்ண னுக்குக் கண்ணில் கனல் பறந்தது. "என்னடா சொன்னே, தேவடியா மகனே" என்று விரல்களை மடக்கி மூகூர் மேஸ்திரியின் முகத்தில் பலமாகக் குத்தினான். மேஸ்திரி விகாரமாகத் தள்ளாடிப் பட்டென்று தரையில் வீழ்ந்தான் அவன் விழுந்த நிலையைப் பார்த்துப் போபண்ணன் அவன் கதை முடிந்தது என்றே நினைத்தான். கூட்டத்தில் இருந்தவன் எவனும் மூகூர் மேஸ்திரிக்கு உதவி செய்ய முன் வரவில்லை. அவனுக்காக இன்னும் யார் வருகிறார்களோ வரட்டும் என்று கையைத் தயாராக வைத்துக் கொண்டு போபண்ணன் ஆவேசத்துடன் நின்று கொண்டிருந்தான்.

மாச்சம்மா பார்த்தாள், போபண்ணனின் கை ஓங்குவதைப் போல் இருந்தது. கூட்டத்தில் போபண்ணன் பெரிய வீரனாக வளர்ந்து வருகிறான் என்ற சந்தேகமும் ஏற்பட்டது. காவேரியின் மனம் எங்கே திரும்பி விடுமோ என்று பயமும் உண்டாயிற்று. மௌனமாக நின்றிருந்த கூட்டத்தின் உள்ளே நுழைந்து கீழே விழுந்து கிடந்த மேஸ்திரியின் பக்கத்தில் உட்கார்ந்து, "அய் யய்யோ கொன்றே விட்டானே, உன் வீடு நாசமாய்ப் போக; உன்னைப் போலக் குடும்பத்தைக் கலைப்பவனுக்கு மகளைக் கொடுத்து அவள் வாயில் மண்ணைப் போட்டேனே" என்று புரண்டு ஊளையிடத் தொடங்கினாள். அவளோடு இன்னும் இரண்டு பேர் திடீரென்று மூகூர் மேஸ்திரிக்குத் தாங்கள் மிகவும் வேண்டியவர்கள் என்பது போல நினைத்துக் கொண்டு "அய்யய்யோ போய் விட்டாயாடா? நாளைக்கு போலீஸ் வந்துரும்" என்று புரளத் தொடங்கினார்கள்.

போபண்ணன் பார்த்தான். நிலைமை விபரீதமாகப் போய்க் கொண்டிருப்பது தெரிந்தது. மூகூர் மேஸ்திரிக்கு மூச்சே நின்று விட்டதோ என்னவோ என்று சந்தேகம் ஏற்பட்டது. எதிர்பாராத விரும்பாத தாக்குதலுக்கு ஆளாகி நிலைகுலைந் திருந்த போபண்ணின் மூடியிருந்த விரல்கள் விரியத் தொடங்கின.

காவேரி தண்ணீர் கொண்டு வருவதற்காக உள்ளே போயிருந்தாள். "செத்துப் போங்க தேவடியா பசங்களா" என்று கொஞ்சம் பேரைத் தள்ளிவிட்டு கூட்டத்தி லிருந்து புறப்பட்டான்.

"அடே எங்கே போறீங்க?"

"அட, தடுத்து நிறுத்துங்க! நில்லய்யா."

"ஏ, நிறுத்துங்க அவரை"

இப்படியான பேச்சுக்கள் கூட்டத்திலிருந்து வந்து கொண்டிருந்போதே போபண்ணன் எல்லாரையும் தள்ளிக் கொண்டு வேகமாகப் புறப்பட்டுப் போனான். "ஏ ஏ ஏ பிடி, பிடி அவரை" என்று யாரோ யாருக்கோ கத்திச் சொன்னார்கள். யாரோ வழியில் வந்து கொண்டிருந்தவன் வேகமாகப் போய்க் கொண் டிருந்த போபண்ணனைத் தடுப்பதற்காகக் குறுக்கே வந்தான். போபண்ணன் துள்ளி அவன் வயிற்றில் உதைத்துக் கையால் முகத்தில் அறைந்தான். அவன் ஏறக் குறைய மூச்சே இல்லாமல் தரையில் வீழ்ந்தான். அவனுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த இன்னொருவன் முதலாமவனுக்கு ஏற்பட்ட கதியைப் பார்த்துத் தயங்கி நின்றான். இரண்டு மூன்று பேர் சாலையில் ஓடிக் கொண்டிருப்பதைப் பார்த்து யாரைப் பிடிக்க வேண்டுமோ என்ன கதையோ தெரியாமல் சுற்றி இருந்தவர்கள் பயந்து நின்று விட்டார்கள். கோபத்தில் நெருப்பாகியிருந்த போபண்ணன் குறுக்கே வந்த நுகத் தடிபூட்டிய இரண்டு எருதுகளில் ஒன்றை வயிற்றில் இருப்பதையெல்லாம் கக்கி விடும்படி உதைத்தான். அவை தடுமாறி நுகத்தடியோடே கூட்டத்தின் மேல் பாய நாலைந்து பேர் அப்படியே தரையில் சாய்ந்தார்கள். போபண்ணன் திரும்பிப் பார்க்காமல் ஓடி ஓடி இருளில் மறைந்து போனான்.

அடுத்த நாள் போஸ்டாபீஸைச் சட்டப்படி மூடிவிட்டார்கள். காவேரி மாச்சம்மாவோடு தோட்டவேலைக்குப் போகத் தொடங்கினாள்.

# ஹாங் ஓவர்*

## ஜி.எஸ். சதாசிவ

சோமு, சிங்கார் ஷாப்பிங் சென்டர் எதிரில் தன்னைத் தானே இழந்து விட்டவனைப் போல் நின்றிருந்தான். மகாத்மா காந்தி சாலையில் நடந்து வந்து கொண்டிருந்த எனக்கு இந்தச் சோமு திடீரென்று கண்ணில் பட்டான். புஸ்புஸ் என்று சிகரெட்' புகையை விட்டபடி தொளதொளவென்று இருந்த பேண்டின் ஒரு பையில் ஒரு கையை நுழைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்த அவனுடைய தோற்றம் கவலை தருவதாக இருந்தது. 'ஹலோ' என்றேன். 'ஓ' வென்று பயந்தான். என்னைப் பார்த்து முகம் மலர்ந்தான்.

"எந்த பெண்ணுக்காவது காத்துக் கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டேன். தனது சிறிய நெற்றியின் மேல் இருந்த விர்வையைத் துடைத்தபடி 'சீச்சீ' என்றான்.

'பாரடா கிட்டு' என்று எதையோ சொல்லப் போய், "கொஞ்ச நாளா உன்னைக் காணவே இல்லையே" என்று பேச்சைத் திருப்பி, "எனக்கு ஏரோனாட்டிக்ஸில் வேலை கிடைச்சிருக்கு. கைக்கு ஆறுநூறு ரூபாய் வருது" என்று அவசர அவசர மாகச் சிகரெட் புகையை விட்டான்.

இவனைப் பார்த்தால், ஒரு சில்லறை வேலையும் போய் வீட்டில் மூக்கு ஒழுக நிற்கும் ஒன்பது குழந்தைகள் சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்னும் கவலையில் இருக்கும் குமாஸ்தாவைப் போல் நின்று கொண்டிருந்தான். கொஞ்சம் நாடக பாணியில் அதை அவனுக்குச் சொன்னேன்.

"இல்லப்பா...எனக்கு...போகட்டும்விடு. நீ வந்தது நல்லதாயிற்று. நான் கொஞ்சம் நல்லதாகத் துணி வாங்கணும். ஒரு சூட் வேணும். ஆனா தேர்ந்தெடுப்பது கஷ்டமாக இருக்குது. ஒரு கடையில பார்த்தேன். எல்லாமே நல்லாயிருந்தமாதிரி இருந்தது. ஆனால் எதை வாங்கறதுன்னு புரியல, ஒரே குழப்பமா இருந்தது. அரை மணி நேரம் என் அவஸ்தையைப் பார்த்துக் கடைக்காரன் ரொம்பவும் சலிச்சிட்டான். புறப்பட்டு வந்துட்டேன்" என்று தன் கவலையைக் கொட்டினான்.

துணி தேர்ந்தெடுப்பதில் நான் நிபுணன் என்று சோமுவுக்குத் தெரியும். அதை நிரூபிப்பதைப் போல் அவனுக்காகக் கலர்கலராக இரண்டு பாம்பே டையிங் சர்ட் பொறுக்கி எடுத்தேன்.

குவாலியர், டெரிவுல், சூட்டிங் வாங்கலாம் என்றேன். முழுவதும் அழுத்தமான நிறத்தில் துணியை வாங்குவதற்கு அவன் விரும்பாவிட்டாலும் ஷோக்காக நடமாடும் என்னிடம் சொன்னால் எங்கே கேலி செய்வேனோ அவனை என்ற வெட்கம் அவனைத் தாக்கி இருக்கலாம். மூச்சுவிடாமல் பையிலிருந்து நூறு ரூபாய்

---

* Hang Over

நோட்டுக்களைக் கவுண்டரில் கொடுத்தான். துணியைக் கை இடுக்கில் வைத்துக் கொண்டு பணம் செலுத்திய போது அவன் முகத்தில் வெற்றிக் களை தோன்றியது. என் செலக்ஷன் அவனுக்குப் பிடித்திருந்தது என்று எனக்கு மகிழ்ச்சி.

"பாரடா கிட்டு, இவ்வளவு பணத்தை ஒரே தடவை செலவு செய்தது இதுதான் முதல் தடவை" என்று சொன்னான், பெருமையோடு. அப்போது எனக்கு அவனுடைய வெற்றிக்குப் பொருள் வேறுவிதமாகத் தெரிந்தது.

"அது சரி. இவ்வளவு பணம் எப்படிக் கிடைத்தது."

"நீயொரு முட்டாள். வேலை கிடைத்தது என்றேன் அல்லவா?" என்றான்.

முதலில் சோர்ந்திருந்த சோமுவின் குதல் இப்போது வெற்றிக் கும்மாளமிட்டது. அவன் இப்படி இருப்பதை நான் இதற்கு முன்னால் பார்த்ததில்லை.

"அதென்ன வேலை கொடுத்த உடனே சம்பளம் கொடுத் தார்களா?"

"உனக்குச் சொல்லவே இல்லை, இல்லையா? வேலை கிடைச்சி ரெண்டு மாசம் ஆயிடுச்சி. இப்போ இருநூற்றி ஐம்பது போய் விட்டது. கையில் இன்னும் இரு நூற்றி ஐம்பது இருக்குது. மாதச் செலவிற்கென்று தனியா எடுத்து வச்சிருக்கேன். இப்போ கையில் வச்சிருப்பது எதற்கு தெரியுமா?" அவன் குரலில் ஏற்பட்டுக் கொண்டிருந்த சூட்சுமமான வேறுபாட்டைக் கவனித்துக் கொண்டே வந்த எனக்கு இது கேவலம் வேலை கிடைத்த களிப்பில் வந்தது என்ற தோன்றவில்லை. கண்ணைச் சிறிதாக மூடி, சிகரெட்டை அளவுக்கு மீறி இழுத்து இருமியபடி, நடுங்கிய குரலில் பேசிக் கொண்டிருந்த சோமு யார் மேலோ பழி தீர்த்துக் கொண்டிருக்கிறான் என்று தோன்றியது. அவனுடைய போக்கைக் கண்டு எனக்குக் கலவரம் ஏற்பட்டது.

"ஏ கிட்டு, இந்தப் பணம் நானே சம்பாதித்தது, ஒன்றும் யோசனை செய்ய வேணாம்.அது எங்கப்பாவினுடையதும் அல்ல, உங்கப்பாவினுடையதும் அல்ல. வாடா, தண்ணி போடலாம்" என்றான்.

அவனுடைய பேச்சின் போக்கு சாயங்காலம் மகிழ்ச்சியாக இருப்பவர்களின் கவனத்தை ஈர்க்க என் கவலை அதிகமாகியது. இத்தனை நாள் நான் பார்த்த சோமு வேறு. அவன் அதிகம் பேச மாட்டான். தன்பாட்டுக்குத்தான் இருந்து எப்போதும் ஆமையைப் போல் ஒடுங்கிக் கொள்வான். எனக்குத் தெரிந்தவரையும் அவன் என்னைத் தவிர வேறு யாருடனும் அதிகமாகத் தொடர்பு வைத்துக் கொண்டதைப் பார்த்ததில்லை. நான் 'தண்ணி' போடுவது அவனுக்குத் தெரியும். அவன் விஷயம் எனக்குத் தெரிந்திருக்கவில்லை. வியப்பில் கண்களை விழித்துப் பார்த்தேன். "எனக்குக் கொஞ்சம் ப்ழக்கம் இருக்குது" என்று கொஞ்சம் வெட்கத்தோடு சொன்னான்.

'தண்ணி' போடுவதற்கு எனக்குத் தடையேதும் இல்லை. கான்டினென்டல் ஒட்டலில் ஒரு மூலையில் உட்கார்ந்து இரண்டு பீர் கேட்டபோது சோமு கண்ணை உருட்டி 'எனக்கு இன்றைக்கு மது மாமிசம் இரண்டும் வேண்டும்' என்றான். சரி யென்றேன். துணியைத் தேர்ந்தெடுக்கும்போது என்னிடம் வேண்டிக் கொள்ளும் குரலில் பேசிக்கொண்டிருந்த சோமு இப்போது கட்டளை இடுவதைப்போலப் பேசினான். "என்னென்ன வேண்டும் சொல்" என்று கேட்டேன். "அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீயே சொல்ல வேண்டும்" என்றான். பேரரை அழைத்து "ஒரு பிளேட்—" என்று சொல்வதற்குள் 'நீயும் சாப்பிட வேண்டும்' என்றான். ஏனோ இது மூச்சு முட்டுகிற நிலைமைக்கு வந்தது என்று கொஞ்சம் அச்சம் ஏற்பட்டது. "நான்

சாப்பிடுவதில்லை என்று உனக்குத் தெரியும், பின் ஏன் இந்தப் பிடிவாதம்?" ஏனோ பாவம் என்றுபட்டது. 'ஒகே. இரண்டு பிளேட் மட்டன்புலாவ்' என்றேன்.

எரிந்து சாம்பலாகிக் கொண்டிருந்த சிகரெட்டின் நுனியில் மற்றொன்றை எடுத்துப் பற்ற வைத்தான். உடனே இவன் ஒரு நியூரோட்டிக் என்று பட்டது. இரண்டு மிடறு பீர் குடித்து முகத்தைக் கோணலாக்கி சோர்ந்து உட்கார்ந்தான். கொஞ்ச நேரம் ஆன பிறகு "ஏண்டா இதைத் தொடவேயில்லை" என்றேன். "உனக்குத் தமாஷாக இருக்கிறது அல்லவா—மட்டனும் வரட்டும் இரு" என்று என் பேச்சைக் கேட்டு தனக்கேதும் வெறுப்பில்லை என்பதைப் போலச் சொன்னான்.

அரைமணி. சோமுவின் கிளாஸில் இன்னும் பாதி பீர் இருந்தது. அவன் பிளேட்டில் மட்டனும், ஆறிக் குளிர்ந்து கொண்டு வந்தது. இன்னும் கொஞ்சம் நேரம் போனால் அதைச் சாப்பிட்டால் வாந்தி வரும் என்று தோன்றியது. சோமுவுக்கு பீர் குடிப்பதிலோ, மட்டன் சாப்பிடுவதிலோ மனம் இல்லை என்று எனக்குத் தெரிந்தது. சாயுங்காலம் பார்த்ததிலிருந்து இதுவரை அவன் அமைதியில்லாமல், கொதித்துக் கொண்டிருந்தான். வலுக் கட்டாயமாக மகிழ்ச்சியை வரவழைத்துக் கொண்டான். சுகத்தை விலைக்கு வாங்குவதற்காகப் 'பாரு'க்கும் வந்திருந்தான். அவனுக்குச் சுகத்தைத் தேடித்தரும் ஏஜண்டாக ஆனதில் எனக்கொன்றும் வருத்தம் இல்லை. மெல்ல மடியில் குண்டு வைத்திருக்கும் பாவனையில் உட்கார்ந்திருந்த சோமுவைப் பார்த்து சீண்ட வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

"ஷிட்" என்றேன். அமெரிக்காவில் பிரபலமான நாவல் களில் வரும் பிளேபாய் ஹீரோவின் ரீதியில். ஆனால் எஞ்சினியரிங் புத்தகங்களை மட்டுமே படிக்கும் சோமு தடுமாறிப் போனான். "என்ன, சொல்?" என்று கேட்டேன். "எதை?"

"அதுதான் எதையோ அடக்கிக் கொண்டிருக்கிறாயே, அதை"

கோபம் வந்தவனைப் போல கிளாஸிலிருந்த பீரைக் கடகட வென்று குடித்தான். ஒரு துண்டு மாமிசத்தைக் களக்கென்று விழுங்கினான். அதற்குப் பிராயச்சித்தம், செய்பவனைப் போல இரண்டு தடவை புகையை இழுத்து ஐந்து நிமிஷம் சும்மா உட்கார்ந்திருந்தான். ஒவ்வொருவராகவும் இருவராகவும் சிரித்துக் கொண்டே, சிரித்த முகத்தில் கவலைத் திரையை இழுத்துக் கொண்டு, கத்திக் கொண்டு, பேசாமல், வெறும் சைகை காட்டிக் கொண்டு வந்து நிறைந்து கொண்டிருந்த ஜனங்களை வியப்பு நிறைந்த கண்களால் பார்த்துக் கொண்டே பொழுதைப் போக்கினான்.

"என் பணத்தில் நான் சுகம் தேடிக்கறது தப்பா?" என்று கேட்டான். "அது ஒன்றும் தப்பில்லை, ஆனால் நீ இப்போது சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாயா?" என்றேன்.

"அதுதான் கஷ்டம், கிட்டு. சுகம் என்பதே நான் அறிந்ததில்லை. இப்போது நல்ல வேலை கிடைத்திருக்கிறது. கையில் காசு இருக்கிறது. போன மாசம் எல்லாம் அறையிலேயே உட்கார்ந்து பணத்தைச் சேர்த்தேன். நூறு ரூபாய் நோட்டுகள் ஆறு கையில் வந்தவுடன் செலவு செய்வதற்கே மனம் வரவில்லை அதுவும் அல்லாமல் நூற்றுக்கணக்கான கனவுகளை வளர்த்துக் கொண்டிருந்த எனக்கு எந்தக் கனவுக்கு முதலில் பணம் செலவழிப்பது என்ற சங்கடம் ஏற்பட்டது. இன்றைக்குச் சாயங்காலம் திடீரென்று அவையெல்லாம் என் சுகத்துக்காகச் செலவு செய்ய வேண்டும் என்று தோன்றியது. உடனே மனத்தில் பட்டது இரண்டுதான். ஒன்று துணி வாங்குவது, இரண்டாவது குடிப்பது. ஆனால் சுகத்தை அடைவது எப்படி?... ஒரு வேளை நீ

கிடைக்காமல் இருந் திருந்தால் நான் இரண்டு பாக்கெட் சிகரெட் வாங்கிக் கொண்டு பேசாமல் அறைக்குத் திரும்பிப் போயிருப்பேன். இப்போது ஒன்றும் கவலை யில்லைதான் என்றாலும் மனம் ஒரு மாதிரி..."

சோமு தன்னைப் பற்றி என்றைக்குமே சொல்லிக் கொண்டவன் அல்ல. நானாகத் துருவிக் கேட்கும் ஆர்வத்தையும் அவன் ஏற்படுத்தியது இல்லை. என்ஜினியரிங்கில் இரண்டொரு தடவை பெயில் ஆனான். அதற்கப்புறம் ராங்குகளே வாங்கினான். இவ்வளவுதான் தெரியும். என்ஜினியரிங் படிக்கும்போது அவன் இருந்த அறைக்குப் பக்கத்திலேயே நான் இருந்தது அவனோடு அறிமுகமும், பிறகு ஒரு மாதிரியான சிநேகிதம் ஏற்படவும் காரணமாயிற்று. ஆனால் இவன் தன் மனத்தின் இருட்டில் எதையாவது மறைத்துக் கொண்டிருப்பான் என்பது புதிய விஷயம்.

"இன்னொரு பீர் சொல்லலாமா?" நான் கேட்டேன். "விஸ்கி வேண்டும்" என்றான்—ஓட்டலில் இருந்த எல்லா வகைப் பண்டங்களையும் சுவைத்துப் பார்க்க வேண்டும் என்று நினைக்கும் சாப்பாட்டு ராமனைப் போல.

"நான் விஸ்கி குடிப்பதில்லை" என்றேன்.

அவனுக்குக் கோபம் வந்தது. "தூத்தேரி. பீர் குடித்தால் பரவாயில்லை, விஸ்கி குடிச்சா உன் பூணூல் தீட்டாகி விடுமா?" என்றான். "ஷட் அப்" என்றேன்.

படக்கென்று ஒரு துண்டு மாமிசத்தை வாயில் போட்டுக் கொண்டான். அது தொண்டையில் சிக்கிக் கொண்டது. பீரைக் குடித்து அதைக் கீழே தள்ளினான். நான் திட்டியதை மறந்தே போய்விட்டவனைப் போலச் சிரித்தான்.

"கிராமத்தில் என் அப்பா எல்லாருக்கும் தீர்த்தம் கொடுப்பார். தட்சணை வாங்கி இடுப்பில் சொருகிக்குவார். இங்கே, அந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு சிவப்பு முகமுடைய அந்த ஆள் நமக்கு இந்தத் தீர்த்தத்தைக் கொடுக்கிறான். அவனை பாதர் இமேஜ் என்று சொல்லலாமா?" அவன் கேட்டான்.

"ஏண்டா தடியனே, குடிக்கக் குடிக்கப் புத்திசாலியாக மாறி வருகிறாய்?" என்றேன்.

"நானும் சைக்காலஜி படித்திருக்கிறேன், கண்ணா, உன்னைப் போல சீப்ஃ பிக்ஷன் அல்ல. என்னுடையது ஸைண்டிபிக் மைண்ட். இரண்டொரு தடவை நான் பெயிலானதால் நான் ஒரு முட்டாள்னு நினைச்சிட்டயா? என்னுடைய பூஜாரித் தந்தையும் அப்படித்தான் நினைச்சார். இதில் தமாஷ் என்னவென்றால் நானும் அப்படியே நினைத்துக் கொண்டிருந்தேன். அப்பா மாதிரி மடிவேட்டி கட்டிக் கொண்டு, சின்னக் குடுமியுடன் பூசை செய்து கொண்டு காலையில் எழுந்ததும் சாணம் எடுத்துப் போட்டு, அப்பா சொன்னதையும் அப்பாவின் மனைவி சொன்ன தையும் கேட்டுக் கொண்டு இருப்பதே நல்லது என்று அப்போதெல்லாம் தோன்றியது. ஒருவேளை அப்படியே செய்திருப்பேனோ என்னவோ. ஆனால் ஒருநாள் என் சித்திக்கு முன்னால் என் அப்பா என்னை அடித்தார். நான் பெங்களூரில் படிச்சிட்டிருந்தேன் என்று சொல்வதே பொய் என்றார். ஊரெல் லாம் அதையே கேட்டு ஜனங்களெல்லாம் என்னைக் கேலி செய்தார்கள். பணம் கொடுக்க மாட்டேன் என்றார். நிலத்தில் ஒரு அடியும் கிடைக்காது என்றார். அன்றைக்கே, இனிமேல் உன் முகத்தைப் பார்க்க மாட்டேன் என்று வீட்டை விட்டு வெளியே வந்தேன்."

யாருடையதாவது வாழ்க்கை வரலாற்றைக் கேட்பதென்றால் எனக்குச் சலிப்பு. ஏதோ அழுகை, இல்லாவிட்டால் ஒரே ஜம்பம். இப்படி என்னைப் பொறுத்த

வரையில் அர்த்தமில்லாமல்போகிற வேறு ஒருவனுடைய வாழ்க்கையைப் பற்றிக் கேட்பதில் எனக்கு எப்போதுமே வெறுப்பும் இருந்தது. இன்னும் கொஞ்சம் பீர் குடித்தேன். சோமுவின் கதையைக் கேட்கக் கேட்கக் கொடுமைக் கார.ச் சித்தியின் பழைய கதையைப் படிப்பது போல் இருந்தது. பீர் குடித்து நாக்கு தடைப்பட்டது. ஓரிரு சமயம் குரலை ஏற்றி இறக்கித் தன் கதையை நல்ல மெலோடிராமா ஆக்குகிறான் என்று தோன்றியது. ஆனால் அதே சமயம் இன்னொரு பக்கத்தில் அவன் இன்று மாலை நடந்து கொண்டதைப் பற்றி ஏதோ ஒரு தெளிவு ஏற்பட்டது போலத் தோன்றி, காது கொடுத்துக் கேட்டேன்.

"கிட்டு, நீ அதிர்ஷ்டம் செஞ்சவன்டா" என்றான். அது என்னப்பா என்று கேட்கத் தோன்றினாலும் சும்மாயிருந்தேன். ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரம் ஆனாலும் தட்டில் புலாவ் அப்படியே இருப்பது சரியாகப்படவில்லை. "ஐயா சோம சேகரா, உன் கதை இருக்கட்டும், முதலில் அதை முடி" என்றேன்.

மற்றொரு துண்டை முள்கரண்டியால் குத்தி எடுத்து வாயில் போட்டான். முதலில் இருந்தே அவன் அதைக் கடிக்காமலே விழுங்கிக் கொண்டிருந்தான். மாத்திரை விழுங்குவதைப் போல. பிராமண குருக்கள் மகன் மாமிசம் தின்கிறான் என்றால் அந்தக் காட்சியே விநோதமாக இருந்தது. கத்தியையும் முள்கரண்டியையும் பயன் படுத்த அவனுக்குத் தெரியவில்லை. பீர் குடிக்கும் போது ஒரே சத்தம்.

"நீ கிண்டல் பண்ணினாலும் உண்மையான ஃப்ரெண்ட் நீ ஒருவன்தான். அதில்லை, தமாஷ் என்னவென்றால் நான் என் தாய்மாமன் வீட்டில் பள்ளிக்கூடத்துச் சம்பளத்துக்காக வேலை செய்தேன். சாணி எடுத்தேன. வயல்வேலை செய்து காலேஜுக்குப் பணம் கட்டினேன். அதன்பிறகு எங்கேயும் பெயில் ஆகவில்லை. எங்கள் அப்பாவின் நினைவும் வரவில்லை" என்ற சொல்லி உட்கார்ந்தான்.

"அது சரி, இப்போது எதற்கு உன் அப்பாவின் நினைப்பு? திஸ் இஸ் தி டைம் டு ஃபர்கெட் எவ்ரிதிங்."

"இன்றைக்குச் சாயங்காலமெல்லாம் என்னைத் துளைத்துக் கொண்டிருந்த பிரச்சனையே அதுதான். இத்தனை நாள் வேண்டாம் என்று இருந்த அப்பா இன்று காலையில் ஏன் வர வேண்டும் என்று மனம் கபகபவென்று எரிய, அறையிலிருந்து ஓடினேன். நான் வேலையில் சேர்ந்த ஒரு வாரத்தில் என் அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. முதலில் ஆச்சரியமாயிருந்தது. 'வேலையில் சேர்ந்திருக்கிறாயாமே, மாசத்துக்குக் கொஞ்சம் பணம் அனுப்பிக் கொண்டேயிரு' என்று. அவ்வளவுதான் இருந்தது. ஒரு மாதரி அசிங்கமாய் இருந்தது. கோபத்தில் ஒரு தம்படி கொடுக்க மாட்டேன் என்று பதில் எழுதினேன்.- அதற்கப் புறம் எனக்கு வேலை கிடைத்த சந்தோஷமே போய்விட்டது..." என்றான். "அம்மாவின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்டு கிணற்றில் விழும்படிச் செய்தார். ஆறு வயதான என் தலையில் சாணிக் கூடையைத் தூக்க வைத்தார். மந்திரம் சொல்லிக் கொடுக்கும் போது இடை இடையே புளியமிலாறினால் அடித்தார்" என்றெல்லாம் நடுவில் அவசர அவசரமாகக் கிளாஸிலிருந்ததைக் குடித்துக் கொண்டு சொன்னான்.

"நான் பணம் அனுப்பாமல் இருந்தது சரியா?" என்று கேட்டான்.

"நீ தான் முடிவுசெய்ய வேண்டும் அதை" என்றேன்.

அவனுக்கு ஏமாற்றம் உண்டாயிற்று. அவன் உண்மையில் தடுமாறிக் கொண் டிருந்தான். அப்பாவை எதிர்த்து வாழத் தெரிந்து கொண்ட ஆளுக்கு இப்போது

அப்பா பணம் கேட்டது ஒரு பெரிய சவாலாகப்பட்டது. எனக்கு வியப்பாக இருந்தது. நியாயமாக அவன் இந்தக் குழப்பத்தில் தவிப்பது எனக்குப் புரியவில்லை.

"நீ சொல்றதைப் பார்த்தா உன் அப்பாவுக்கு உன்னிடம் பணம் கேட்க உரிமையே இல்லை" என்று அவன் திருப்திக்காகச் சொன்னேன். அப்போதும் அவனுக்குச் சமாதானம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

"கிட்டு ஒரு வேலை செய்யலாம்" என்றான்.

"என்ன?"

""ஒரு பாட்டில் விஸ்கி வாங்கிக் கொண்டு உன் வீட்டுக்குப் போவலாம். எப்படியும் நீ ஒருவனே தனியாக சுகமா இருக்கிறே. ஒரு நாளைக்கு நானும் அங்கேயே படுத்துக்கறேன். சுய நினைவு மறக்கும் வரையில் குடிக்கலாம்" என்றான். உடனேயே, "ஒருவனே ஒரு வீட்டை எடுத்து வச்சிருக்கயே அது ஏன்" என்று கேட்டான்.

"சமயம் கிடைத்தபோதெல்லாம் பெண்களை அழைத்துக் கொண்டு வருவதற்குச் சௌகரியமா இருக்கும் என்றுதான்"

சோமு நம்பி விட்டான். "அதாவது நீ எந்தக் கவலையும் இல்லாத லக்கி பாய்" என்றான். எவ்வளவு ஏமாளி இந்த இன்ஜினியர் என்று நினைத்துக் கொண்டேன்.

விஸ்கி பாட்டிலை பேக் செய்து கொண்டு காண்டினென்டலைவிட்டுப் புறப் பட்டபோது மணி பதினொன்று.

ஹாலில் டீப்பாய் மீது இரண்டு கிளாஸ் கொண்டு வந்து வைத்தேன். வீட்டைச் சுற்றிலும் சோமு நோட்டமிட்டு "உண்மையில் உனக்கு கேர்ல் பிரண்ட்ஸ் இருக் கிறார்களா?" என்றான். குடியில் அவன் குரல் கம்மியிருந்தது. சொற்கள் மிக விசித்திரமாக, சிறிது முயற்சிக்குப் பிறகு நாக்கில் புரண்டன.

கிளாஸில் விஸ்கியை ஊற்றிக் கொண்டே "வேண்டிய அளவு இருக்கிறாங்க, அனுராதா, அனுபமா, அனார்கலி, அலகநந்தா, ரீட்டா, ஜோஸப்பின், சொர்ணா, சுயம்பிரபா..." என்று சொல்லிக் கொண்டே போனேன்.

"அவ்வளவு பேர் இல்லாட்டாலும் இருப்பதா நினைச்சிக் கறது ஈகோவுக்கு நல்லது அல்லவா?" என்றான்.

குடிபோதையில் இருந்தாலும் சோமு சிலசமயங்களில் ஆச்சர்யமாகத் தர்க்க ரீதியில் பேசினான். "போகட்டும், உன் அப்பா சமாச்சாரத்தைச் சொல்". "அது முடிந்து விட்டது. விடு. இப்போது நினைவு மறக்க வேண்டும்" என்று சொல்லி இரண்டு மூன்று அவுன்ஸ் விஸ்கி கடக் என்று குடித்தான்.

யாரோ கதவைத் தட்டியதைப் போலிருந்தது. சோமு அச்சத்தில் தடுமாறினான். நான் நிதானமாகக் கிளாஸை வைத்தேன்.

கதவைத் திறந்த போது எதிர்வீட்டுச் சங்கரையா, பீர், விஸ்கி வாசனை மூக்கில் அறைந்ததில் கொஞ்சம் தடுமாறிப் போனார். ஒரு அடி பின்னால் தள்ளி நின்று "ஸாரி ஸார், டிஸ்டர்ப் செய் துட்டேன். என்னவோ தூக்கமே வரலை. வீட்டில் யாரும் இல்லை. உங்களுக்கு அந்த அனுபவம் இல்லை. இருந்தால் ஒரு மாதிரி. இல்லாட்டா ஒரு மாதிரி. உங்க வீட்டில் விளக்கு தெரிந்தது. இந்த வாரத்து பிளிட்ஸ் ஏதாவது கொண்டு வந்திருப்பீர்களோ என்று வந்தேன். யாரோ பிரண்ட்ஸ் வந்திருக்கற மாதிரி இருக்குது..." என்று சொல்லிக் கொண்டே போனார்.

என் தலை நிமிஷத்துக்குப் பத்து தடவை என்ற வேகத்தில் சுற்றிக் கொண்டிருந்தது கால் கொஞ்சம் தளர்ந்திருந்தது. அவன் பேச்சை நிறுத்துகிறமாதிரி தெரிய

வில்லையே என்று திட்டிக் கொண்டிருந்தேன். அங்கிருந்த பழைய பேப்பரை அவன் கையில் இட்டு "இதுதான் ரொம்ப லேட்டஸ்ட். டில்லியில் கூட இன்னும் ரிலீஸ் ஆகல" என்று அவன் முகத்திலேயே கதவை அறைந்து உள்ளே வந்தேன்.

சோமுவைக் காணோம். எனக்கு உண்மையில் குடிபோதை தலைக்கு ஏறி யிருக்கிறதா அல்லது சோமு இங்கே வரவேயில்லையா அல்லது சோமு என் நினைவில் மாத்திரம்தான் இருக்கிறானா அல்லது கதவைத் தட்டியது தன் தந்தை என்று நினைத்துக் கொண்டு எங்கேயாவது மறைந்திருக்கிறானா என்று சிந்தித்துக் கொண்டே கடைசி எண்ணந்தான் சரியானது என்று தீர்மானித்து கொஞ்சம் தள்ளாடிக் கொண்டே மேஜையின் கீழ், கட்டிலின் கீழ், திரைக்குப் பின்னால் சமையல் அறை, குளியலறை எல்லா இடங்களையும் ஒவ்வொன்றாகத் தேடினேன். சோமு இல்லை. எனக்கு உண்மையிலேயே போதை தலைக்கு ஏறியிருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன். சோமு எங்காவது ஓடிப்போய் விட்டானா தெரு வாயிலில் நான் நின்று கொண்டே இருந்தேன். சந்தேகம் வந்து தோட்டத்துக் கதவை திறந்தேன்.

குத்துக் காலிட்டுச் சாக்கடை ஓரத்தில் உட்கார்ந்து இடது கையில் விஸ்கி கிளாஸைப் பிடித்துக் கொண்டு வலக்கையை வயிற்றில் அமுக்கிக் கொண்டு சோமு உவா, உவா என்று விடாமல் வாந்தி எடுத்துக் கொண்டிருந்தான். வாந்தியில் உருண்டை உருண்டையாக மாமிசத் துண்டுகள் சாக்கடையில் விழுந்து கொண் டிருந்தன.

சோமு காலையில் பத்து மணிக்கு எழுந்தான். சந்தோஷமாக இருப்பதைப் போல் நடித்தான். வேகமாக எழுந்து குளியலறைக்குப்போய் முகம் கழுவினான்.

"மிகவும் நன்றாய் இருந்தது, நேற்று" என்றான். நான் நெஸ் காபி போட்டுக் கொடுத்தேன். குடித்துக் கொண்டே—

"கொஞ்சம் தலைவலி இருக்குது. வாய் வறண்டு விட்டது" என்றான்.

"அப்பா விஷயத்தில் என்ன முடிவுக்கு வந்தாய்?" 'ஒ' என்றான். பேசாமல் ஒரு நிமிஷம் கண்ணைத் திறந்து மூடினான். "உண்மை என்ன தெரியுமா? நேற்று ஊருக்கு நூற்றி ஐம்பது ரூபாய் மணியார்டர் செய்தேன். பேண்ட் பையில் அந்த ரசீது இருக்குது, பார். அப்படிப் பணம் அனுப்பிய பிறகு வருத்தமாக இருந்தது. ஒன்றரை மாதம் அனுப்பக் கூடாது என்று போராடினேன். நேற்று அனுப்பியபிறகு அது நின்றுவிடும் என்று இருந்தேன். பொய்யாகிப் போய்விட்டது. பணம் அனுப்பியது தப்பு என்று உனக்குத் தோணலையே?"

என் பேச்சு உறைந்து விட்டது.

நான் ஆச்சரியத்தில் நின்றுவிட்டேன்.

# அன்புச் சிறைக்கு வெளியே

ராஜசேகர நீரமான்வி

வலி அதிகமாகி அதே மயக்கத்திலிருந்த எனக்கு விழிப்பு வந்தது. கண்ணைத் திறந்து பார்த்தேன். யாரும் இருக்கவில்லை. பக்க வாட்டில் திரும்பிக் கண்ணை மூடினேன். அப்பா வெளியே யாருடனோ உரத்த குரலில் பேசுவதைப் போல் இருந்தது.

"என்ன வேண்டுமானாலும் சொல்லுங்க. இந்த நோய் இவ்வளவு முத்திப்போகற மட்டும் விட்டிருக்கக் கூடாது" கேட்டுக் கொண்டிருந்தான் அந்த ஆள். "நான் இன்னும் என்ன செய்வது சொல்லுங்கள். தன் வலி தனக்கேதெரியாமல் இருக்கும் ஆளுக்கு நாம் என்ன செய்ய முடியும்? படித்தவர்கள் நம்மைவிட புத்திசாலிகள் என்கிற எண்ணமே மனசை அடைச்சிட்டிருக்கவங்களுக்கு நாம என்ன சொல்ல முடியும்? இவன் காலேஜில் இப்போதெல்லாம் தூக்கமும் இல்லை. சாப்பாடும் இல்லை..."

அப்பாவின் பேச்சைக்கேட்டு அவர் மேல் இருந்த கோபம் இன்னும் கொஞ்சம் அதிகமாயிற்று. "அப்பா இந்த நிலமைக்கு என்னைக் கொண்டு வந்ததே நீதான்" என்று உரக்கக் கத்த வேண்டும் போல் இருந்தது. எப்போதும் தன் பெருமையையே காட்டிக் கொள்ளும் அப்பா, நான் படுக்கையில் கிடக்கும் இப்போதும் அதையே செய்து கொண்டிருக்கிறார். பிறந்ததிலிருந்து இதுவரை என்னைத் தூசியைவிடக் கேவலமாகப் பார்த்த அப்பா இந்தக் கடைசிக்காட்சியை நன்றாக நடித்து எல்லா ரிடமும் பாராட்டைப் பெற்றுக் கொண்டிருக்கிறார். எதனாலோ தெரியவில்லை. அப்பாவுக்கும் எனக்கும் முதலிலிருந்தே சரிப்பட்டு வரவில்லை. பையனாக இருக்கும் போது பிரம்பால் அடித்து காதைத் திருகி, முதுகில் அறைந்து எழுத்துச் சொல்லிக் கொடுத்த வாத்தியாரின் உருவம் என் கண்ணில் மாறிவிட்டது என்றாலும் அப்பாவின் உருவம் மட்டும் மாறவில்லை. காரணமில்லாத கோபம், எதைச் செய்தால் சரி எதைச் செய்தால் தப்பு என்று ஒவ்வொரு வேலையையும் ஆலோசித்துச் செய்து முடித்தாலும் அது இவருக்கு எப்படிப்படும் என்று சொல்லவே முடியாது. சில சமயங்களில் புகழ்ந்து கொண்டாடினாலும் பெரும்பாலும் திட்டிக் கோபித்துக் கொள்வதுதான். கொஞ்ச காலமாக அதில் ஏற்பட் டுள்ள மாறுதல் என்னவென்றால் முதலில் அடித்துக் கொண்டிருந்தார். பெரியவனாகி விட்டதால் இப்போது திட்டுகிறார், அவ்வளவுதான்.

இப்படி அப்பாவைப் பற்றி நினைப்பது கீழ்த்தரமானது என்று தோன்றுகிறது. இப்போதெல்லாம் அறிவு வளர்ந்த பிறகு இந்தக் கீழ்த்தனத்தோடு போராடுகிறேன். நான் வெல்லவும் இல்லை. அது தோற்கவும் இல்லை. "அப்பா, நேற்றுக் கனவில் உன் பிணத்தைப் பார்த்தேன்!" என்று யாரோ எழுதிய கவிதையைப் படித்தபோது, 'இப்படிப் போராட்டம் நடத்திக் கொண்டிருப்பவன் நான் ஒருவன் மட்டுமே அல்ல',

என்று நினைத்துத் திருப்தியடைந்தேன். நான் வளர்ந்து வந்த போதெல்லாம், என்னுள் இருக்கும் நான் வளர்ந்து வந்தபோதெல்லாம், ஏதாவது பெரியது ஒன்றைக் காட்டி என்னை, என்னுள் இருப்பவனைச் சிறியவனாக்குகிறார் அப்பா. அப்படி யேதும் கிடைக்காவிட்டால் ஏதோ ஒரு தப்பைத் தேடி "படித்துத் தேர்ந்து எங்களை விடப் புத்திசாலி நீங்கள்" என்று பழிப்பது. அவரைவிட நான் அதிகமாகப் படித்தது தப்பா? இருப்பதைப் பார்த்துச் சந்தோஷப்படுவதை விட இல்லாததைத் தேடிப் பிடித்து வருத்துவதே அதிகமாகிவிட்டது...ஜெனரல் வார்டில் இருந்த யாரோ ஒருவன் வலி அதிகமாகிக் கத்தத் தொடங்கினான்...நர்ஸ் வந்து டெம்ப்பரேசர் பார்த்துச் சார்ட்டில் எழுதி ஒரு புன்னகையை வீசிவிட்டுப் போனாள். இந்தப் புன்னகையும் அவள் டியூட்டியில் ஒரு பகுதி.

அவளுடைய சிரிப்பு ஏதோ ஒரு உணர்ச்சியை அடித்து எழுபபியது. எல்லாமே ஒரு வகை வியாபாரம். ஏனோ மயக்கம் தெளிந்ததிலிருந்து தினமும் கொஞ்சம் கோழைத்தனம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. நான் இன்னும் இரண்டாரு நூற்றாண்டுகள் கழித்துப் பிறந்திருந்தால் சரியாய் இருக்குமோ என்னவோ.

சுதந்திரம் இல்லாத வாழ்க்கை வாழ்ந்தால் என்ன, விட்டாலென்ன? ஒரு ஆளைச் சுற்றி ஏன் இவ்வளவு சங்கிலிகள்? தான், தன்னுடையது, தன்னவர்கள், தன்னவர்கள் என்று சொல்லிக் கொண்டிருப்பவர்கள், ஒன்றா...இரண்டா...

வெளியே ஜனங்களின் சத்தம் அதிகமாயிற்று. நான்கு மணி ஆகி இருக்க வேண்டும். இன்னும் இரண்டு மணி நேரம் வழக்கம் போலத்திருவிழாதான். வந்த வர்கள் தங்கள் தகுதிக்கு ஏற்றபடி கண்ணீர் சொரிந்து, அனுதாபம் காட்டித் தங்க ளுடைய நல்ல குணத்துக்குத் தாமே பூதக் கண்ணாடியைக் காட்டி சந்தோஷப் படும் நல்ல நேரம்.

அம்மா தம்பியோடு வந்தாள். தம்பி பிளாஸ்க் பழங்களை வைத்து விட்டு சார்ட்டைப் பார்த்து "எல்லாம் நார்மலாக இருக்கிறது, அண்ணா" என்று பாராட்டும் குரலில் சொன்னான். அவன் ஃபைனல் எம்.பி.பி.எஸ்.

அம்மா வழக்கம் போல் ஒரு வாளிக் கண்ணீர் சொரிந்தாள். அப்பா அதையே சாக்காக வைத்துக் கொண்டு ஒவ்வொரு நாளையும் போலவே உள்ளே வந்து—

"ஆபரேஷனுக்கு இவ்வளவு பயப்படுவாங்களா என்ன? இப்போதெல்லாம் இதய ஆபரேஷனே நடக்கிறதாம். இதெல்லாம் என்ன" என்று சொல்லிச் சமாதானம் செய்ய முயன்றார். அவருள் தன் மகன் சாக மாட்டான் என்னும் உணர்வு இருந்தது.

"நாளைக் காலை எட்டு மணிக்குத்தானே அண்ணா ஆபரேஷன்?" தம்பி கேட்டான். ஆமாம் என்று தலையை ஆட்டினேன். அம்மாவின் கண்ணீர் ஊற்று இன்னும் தொடர்ந்தது. டாக்டர் வழக்கம்போலப் பார்ப்பதற்கு உள்ளே வந்த போது, தண்ணீர் தெளித்ததும் அடங்கிப் போகும் பால் கொதிப்பைப் போல அம்மாவின் அழுகை குறைந்துவிட்டது. டாக்டர் சார்ட்டைப் பார்த்து, நெஞ்சு, வயிறு, முதுகு களின் மேல் வைத்துத் தமது ஸ்டெ தாஸ் கோப் சரியாக வேலை செய்கிறது என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு, "டுமாரோ பை திஸ் டைம், யூ வில் பி ஆல்ரைட் மிஸ்டர்." என்று சொல்லி அம்மாவுக்குத் தைரியம் ஊட்டிப் புறப்பட்டுப் போனார்.

அம்மாவின் அழுகை அதிகமானதாலோ, நீண்ட நேரம் ஆஸ்பத்திரியில் இருந்த சலிப்பினாலோ அப்பா வீட்டுக்குப் போவதாகச் சொல்லி, தம்பியிடம் கொஞ்ச நேரம் இருக்கும்படி குறிப்பிட்டுவிட்டு அம்மாவை அழைத்துக் கொண்டு போனார்.

"அண்ணா! அண்ணி வந்திருக்காங்க", புதிய செய்தியைத் தெரிவிப்பதைப் போலத் தம்பி சொன்னான்.

"இப்போ ஏன் வந்தா?"

"என்ன அண்ணா இப்படிக் கேட்கிறே? இந்த நேரத்தில இல்லாட்டா வேறு எப்ப வருவது?"

"மனைவி, நண்பர்கள், உறவினர்கள் என்றால் சாகும்போது வந்து பார்ப்பதற் காகவே இருக்கிறார்களா என்ன? நான் செத்ததை உறுதிப்படுத்திக் கொண்டு போக வேண்டும் என்று..." தம்பி வாய் மேல் கைவைத்துப் பேச்சை நிறுத்தினான். அவ னுக்கும் பழசெல்லாம் நினைவுக்கு வந்திருக்க வேண்டும்; வெளியே போய்விட்டான்.

ஏனோ ஒரு வகையான சந்தோஷ உணர்வு மனத்தில் வந்து போயிற்று. தம்பியின் மனத்தைப் புண்படுத்தினாலும், "பார்த் தாயா, எப்படிப் பழி தீர்த்துக் கொண்டேன்?" என்னும் ஒருவகை விசித்திரமான மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். அவள்மேல் இருந்த கோபத்தால் தம்பியின் மனத்தைப் புண்படுத்த வேண்டி இருந்ததே என்று ஒரு மனம் சொல்லியது.

ஆமாம், இதில் என்னுடைய தப்பு என்ன? மனத்தில் பட்டதை இப்படி முகத்தில் அடித்தாற்போல் சொல்லக் கூடாது என்று எவ்வளவு முயற்சி செய்தாலும் எப்படியோ நழுவி பேச்சாக வெளியே வந்துவிடுகின்றன என் உணர்ச்சிகள். நான் வாழ்ந்து வருகிற சூழ்நிலையில் எனக்குத் தோன்றியதைப் போலச் சொல்லவும் நடக்கவும் வாழவும் முடியாது என்று நன்றாகத் தெரிந்து கொண்டே நான் இந்தச் சமூகத்தில், உலகத்தில், வாழத் தகுதியற்றவன் என்னும் தீர்மானத்துக்கு வந்திருந்தேன்.

மனத்தில் இதயத்தில் தோன்றுபவைகளுக்கு இடம் கொடாமல் யாரோ ஒரு வருடைய தடைக்கோ, யாரோ ஒருவருடைய தாட்சண்யத்துக்கோ கட்டுப்பட்டு தன்னுடைய தன் மையை அடக்கி வைத்துக் கொண்டு; யாரோ ஒருவருடைய நாக்கு, கண், காது ஆக மாறி, மனிதன் தன்னுடைய இயல்பைப் பகிர்ந்து கொண்டு வாழும் இடமான இந்த உலகமும் சமூகமும் என்னைப் பொறுத்த வரையில் என்றைக்கோ செத்துவிட்டன. அதனால்தான் இந்த செத்துப் போன ஜனக் கூட்டத்தில் வாழ்கிற வனாக இருப்பதை விட இனி வாழப்போகும் சமூகத்தை உருவாக்குவதற்காகச் செத்துப் போவது மேல்...

"அண்ணி வராங்க. என்னிடம் பேசியது போல அவளிடமும் பேசிடப்போறே. பார்த்து..." என்று உள்ளே வந்து தம்பி சொன்னான். புன்சிரிப்போடு அவன் முகத்தைப் பார்த்தேன். நம் அண்ணன் எந்தச் சூழ்நிலையிலும் அப்படிச் செய்ய மாட்டான் என்னும் நம்பிக்கை அந்தப் பார்வையின் மூலம் மேலும் உறுதியாகி இருக்க வேண்டும். எதோ மருந்து கொண்டு வருவதாகச் சொல்லிப் போய்விட்டான்.

***

என்னைச் சாக அனுப்பும் சிறைச்சாலையில் இந்த மனைவி ஒரு முக்கிய பாத்திரம். விரும்பியவளைக் கைவிட்டாலும், இருக்கிறவளையாவது விரும்ப வேண்டும் என்று நினைத்துக் கொண்டு மணம் முடிந்த உடனே என் பழங்கதையைச் சொன்னேன். பின்னால் அதுவே ஒரு பெரும் பள்ளமாக எங்கள் இருவருக்கு மிடையே அமைந்து விடக் கூடாது என்று நினைத்து, அதுவே போதுமானதாய் இருந்தது அவளுக்கு. அப்போது மயிரிழையை விடச் சிறியதாக ஆரம்பித்த பிளவு

வரவரப் பெரிதாகி, பெரிய அருவியாகவே மாறி அவள் அந்தக் கரையிலும் நான் இந்தக் கரையிலும் இருக்கும்படி செய்துவிட்டது. இப்போது ஆஸ்பத்திரியில் படுத் திருக்கையில் என் சாவின் நிழல் பாலமாக அமைந்து அவளை இங்கே வர வழைத்திருக்கிறது...பார்க்க வேண்டும், இவள் எப்படித் தன் பாத்திரத்தைச் செய்து காட்டப் போகிறாளோ!

இப்போது அவளிடம் கடைசி தடவையாகச் சொல்லிவிடுகிறேன். முதலில் சொல்லக் கூடாததைச் சொல்லிவிட்டபிறகு இப்போது சொல்லித் தீர வேண்டி யதைச் சொல்லாமல் விட்டால் எப்படி? கடைசியில் உண்மை தெரிந்து தன்னுடைய மதிப்பு எவ்வளவு என்பது தெரியட்டும் அவளுக்கு.

"ஏ பெண்ணே! உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது, உன் முகத்தையும் அந்தஸ்தையும் பார்த்து அல்ல. உன் மேல் அன்பினால் அல்ல. நீ இந்த வீட்டில் கால் வைத்தது வீட்டில் மூத்த மருமகளாகவா அல்லது என் மனைவியாகவா என்பதை உன் மாமனாரிடமே கேட்டுப் பார். கணவனாக என் கடமைகள் எல்லாவற்றையும் வஞ்சனை இல்லாமல் செஞ்சிருக்கேன். முன்னால் அவளைக் காதலித்தான், இவளை விரும்பினான் என்று நினைத்துக் கொண்டு, மணி ஓசை கேட்டதும் வாயில் எச்சில் ஒழுக நிற்கும் பாப்புலோவின் நாயைப் போல, நீயாகவே கூக்குரலிட்டு உன்னை வருத்திக் கொண்டால் நான் என்ன செய்யட்டும்?..."

அவள் வந்தாள். தனியாக வந்தால் என்ன ஆகுமோ என்னும் அச்சத்தில் தோழி களின் கூட்டத்தையே அழைத்துக் கொண்டு வந்திருந்தாள். அதில் என்னுடன் கூடப் படித்த சிலரும் இருந் தார்கள். வழக்கம் போல எல்லாரும் தங்கள் சக்திக்கு ஏற்ற படி இரக்கத்தையும் வருத்தத்தையும் காட்டி, அவளை மட்டும் தனியாக விட்டுவிட்டு வெளியே போனார்கள். அவளும் தன் கடமையை நிறைவேற்றுவதைப் போலப் பக்கத்தில் உட்கார்ந்து, நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் காய்ச்சலை அளவிட்டாள். வயிற்றின் மேல் கைவைத்துத் தடவியபடி "ரொம்ப வலிக்குதா?" என்றாள். கர்ப் பிணிகளைக் கேட்பதைப் போல. "அவ்வளவு இல்லை" நான் சுருக்கமாகவே பதில் தந்தேன்.

படுத்திருந்த என் தலைமுடியைத் தடவிக் கொண்டிருந்தவள், கொஞ்ச நேரம் கழித்து மார்பின் மீது தலையை வைத்து அழத் தொடங்கினாள். எனக்குச் சிரிப்பு வந்தது.

"ரொம்ப அழாதே. வீட்டுக்குப் போக வேண்டுமானால் மறுபடியும், ஸ்நோ, பவுடர் எல்லாம் போட்டுக் கொள்ள வேண்டி வரும்" என்று சொல்ல வேண்டும் போல இருந்தது. முகம் நிறைய வண்ணத்தைப் பூசிக் கொண்டு சினிமாவில் அழுகிற மீனா குமாரியின் நினைவு வந்தது.

இந்த அழுகை பெண்ணுக்குத் தெய்வம் தந்த கலை. சிலருக்கு அது ஒரு ஃபாஷன். மற்றவர்களுக்கு அது ஒரு நோய்.

அம்மா இரண்டாவது இனத்தைச் சேர்ந்தவள். அழுது, கண்ணீரிலேயே எல்லாவற்றையும் கரைத்து விடுவாள். சில சமயங்களில் அப்பாவும் கரைந்து என்னைத் தண்டிக்காமல் விட்டதும் உண்டு. இந்த அம்மா ஒரு தலைவலி. எதிலும் ஒரு பிடிவாதம். அவள் என்னை அவ்வளவு அன்போடு சீராட்டி வளர்க்காமல் இருந்திருந்தால் என்னுள் இவ்வளவு முரட்டுத்தனம் வளர்ந்திருக்காது. அப்பாவின் அன்பு, அம்மாவின் அன்பு, இரண்டையும் கூட்டிச் சராசரி பார்த்தால், ஒரு மணி

தனுள் எவ்வளவு இருக்க வேண்டுமோ அதைவிட அதிகமாக வரும் இருவருக்கும். ஆனால் அம்மா இந்த விஷயத்தில் ஒரு காப்பிட்டலிஸ்ட். அவள் எல்லாவற்றையும் தன் பங்குக்கு எடுத்துக்கொண்டதாலோ என்னவோ அப்பா எப்போதும் கம்யூ னிஸ்ட்டைப் போல வீட்டில் எல்லாருக்கும் எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்.

மார்பின் மேலிருந்த தலையைத் தூக்கி என் நெஞ்சின் பாரத்தைக் குறைத்தாள். அழுகை ஸ்டாக் தீர்ந்திருக்க வேண்டும். சிந்தனைச் சுடரில் அவள் நிலை தளர்ந் திருந்தது. இவளுக்குள் அன்பின் கவர்ச்சி என் மதிப்பீட்டையும் மிஞ்சிக் குறைவாக இருக்கிறது என்று தோன்றியது. இந்த அழுகை முகம் இவளுக்கு எவ்வளவு களையை ஊட்டியிருக்கிறது என்று நினைத்தேன். அவள் தலையைத் தடவிக் கொடுத்துக் கண்ணீரைத் துடைத்தேன்.

இன்றைக்கு ஒருநாள்தான். நாளைக் காலையில் ஆபரேஷன் ஆகிவிட்டால் எல்லாம் சரியாகிவிடும். "இந்த எல்லாவற்றுக்கும் நான்தான் காரணம். நான் உங்கள விட்டுப் போ்காமல் இருந்திருந்தா உங்களுக்கு இந்த நிலைமை வந்திருக்காது" என்றாள், அழுது கொண்டே.

சபாஷ் பெண்ணே! உன்னை அவ்வளவு தூரம் விரும்புகிறேன் என்னும் பிரமை எப்படி உன் தலைக்குள் ஏறியது? அவ்வளவு விரும்புவதற்குத் தகுதி உடையவள் நீ என்னும் ஆணவமாவது இருக்கிறதே உன்னிடம். இப்போது உன்னுள் இருக்கும் உணர்ச்சிகளெல்லாம் நெஞ்சிலிருந்து வந்தன என்று நினைத்துக் கொண்டிருக் கிறாயா என்ன? அது உண்மையானால், சாவு என்னும் சொல் எல்லாரையும் இல்லா விட்டாலும் சிலரையாவது வழிக்குக் கொண்டு வரும் என்பது போல் ஆயிற்று. ஒரு வேளை ஆப்ரேஷன் வெற்றியடைந்து நான் பிழைச்சப்புறமும் இந்த ஆசையும் விசு வாசமும் தொடர்ந்து இருக்கும்ன்னா நான் வாழ்வதற்குத் தடை இல்லை. இந்தச் சிந்தனைகளெல்லாம் என் நிர்மலமான மனத்திலிருந்து வெளிவந்தனவோ, அல்லது வாழவேண்டும் என்னும் ஆசை உள்ள நான் வெறுக்கும் இந்த உலகத்தின் ஒற்றனாக வேலை செய்யும் என் மனத்தின் இன்னொரு முகமோ, என்னும் சிந்தனை என் தலையைப் பிய்க்க ஆரம்பித்தது.

"உங்களைப் பிரிந்து இந்த இரண்டு வருஷங்களை எப்படிக் கழித்தேன்ங்கறது கடவுளுக்குத்தான் தெரியும். நீங்க அழைச்சிட்டுப் போக வருவீங்கன்னு எதிர் பார்க்காத நாளே இல்லை. என் கஷ்டம் எந்த எதிரிக்கும் வரக்கூடாது" என்றாள், அழுது கொண்டே.

இந்தப் பெண் இனமே இப்படித்தான். அதிலும் இதோ, இருக்கிறாளே! இவ ளுக்குத் தன் கண்ணீரின் மதிப்பு நன்றாகத் தெரியும். கஞ்சத்தனம் மிகுந்த கோமுட்டியைப் போல மிக மிக அவசியம் ஏற்படும்போது மட்டுமே இவள் தன் கண்ணீரைச் செலவிடுவாள். சந்தர்ப்பத்துக்குத் தகுந்த நடிப்பு. அந்த நடிப்பில் வரும் பேச்சுக்களெல்லாம் தன் நெஞ்சிலிருந்தே வந்தன என்னும் அளவுக்கு நடிப்புத் திலகம். இதெல்லாம் எனக்குத் தெரியும்.

ஆனாலும் இதற்கெல்லாம் விலக்காக ஒருத்தி இருந்தாள். அழவேண்டிய நேரம் வரும்போது சிரிப்பவள். வாழ்க்கையில் ஒரு திட்டில் சந்தித்து, சில நாட்கள் என் அடியில் அடிவைத்து நடந்தவள். அப்போது என்னைச் சேர்ந்தவர்களுக்காக என் அந்தஸ்து கௌரவங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பவர்களின் வற்புறுத்தலுக்குக் கட்டுப்பட்டு அவளை நடுவழியில் கைவிட்டு, தலைமறைவாகிப்

போனவன் நான், இந்த உலகம் இந்த ஒரு விஷயத்தில் வழிகாட்டியிருந்தால் நான் என்றைக்கோ அதன் அடிமையாகித் தொண்டு செய்து கொண்டு இருந்திருப்பேன்.

தம்பி வந்தான். இதுவரை நடிப்பில் கலைந்து போய் இருந்த தன் மேக்கப்பை ஓரளவுக்குச் சரிப்படுத்திக் கொண்டு அவனு டைய அண்ணி நகர்ந்து உட்கார்ந்தாள்.

"அண்ணி, உங்கள் தோழிகள் கூப்பிடுகிறாங்க. பார்வை நேரம் முடிஞ்சிட்டுது. நீங்க வீட்டுக்குப் போங்க. நான் வரேன்" என்றான். அவள் எழுந்து நின்று "காலையில வரேன்" என்று சொல்லி, போனாள்.

அவள் புறப்பட்டுப் போன பிறகு அவள் இந்த இரண்டு வருஷங்கள் என்னைப் பிரிந்து இருந்த சமாசாரத்தை எடுத்துக் கொண்டு அவளைத் திட்டினான்.

அவன் எப்போதுமே தன் அண்ணனுக்கு யாரிடமிருந்து அநியாயம் ஏற்பட்டாலும் பொறுத்துக் கொள்ள மாட்டான். தான் அவர்களிடத்தில் நின்று கொண்டு நினைத்துப் பார்த்து, அவர்கள் செய்ததைத் தானாயிருந்தால் செய்திருப் பேனா இல்லையா என்று சிந்தித்துப் பார்க்கும் வம்புக்கே அவன் என்றும்போன தில்லை. எத்தனையோ தடவை இதைப் பற்றி அவனுக்கு எடுத்துச் சொன்னபோது "உனக்கு என்ன அண்ணா, கடல் மாதிரி இருக்கறே. எதை எவ்வளவு போட்டாலும் காணாமல் போகிறதே தவிர அதன் அடையாளமே தெரிவதில்லை. பொறுத்துக் கொள்வது என்றாலும் அதற்கும் ஒரு அளவு இருக்கணும். என்னால் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மாயிருக்க முடியாது" என்று சொல்வான்.

என்னிடம் எதைக் கண்டானோ? வீட்டில் அப்பா முதல் கொண்டு எல்லார் மேலும் அதிகாரம் செலுத்தும் இவன் என்னிடம் மிகவும் அன்பாக நடந்து கொள்வான். தம்பியின் பேச்சு நீண்டு கொண்டே இருந்தது. பேச்சை மாற்ற வேண்டும் என்று,

"ரவி எப்போ வருவானோ? இன்றைக்கும் நேரமாகி விட்டதே" என்றேன்.

"ஆமாம், சொல்ல மறந்துட்டேன். அவர்கள் வீட்டுக்கு யாரோ வந்திருக்காங களாம். அதனால் நேரமாகும்ன்னு சொல் என்று சொல்லியிருந்தான்." இரவில் என் னுடன் ரவி, அல்லது தம்பி, தங்கியிருப்பார்கள்.

"அண்ணா, கொஞ்சம் வேலை இருக்குது. போய் எட்டு எட்டரை மணிக்கு வந் துடறேன்" என்று என் ஒப்புதலைப் பெற்றுக் கொண்டு தம்பி புறப்பட்டுப் போனான்.

* * *

என்னுடைய இத்தனை நாள் வாழ்க்கையில் யாராவது என்னைப் புரிந்து கொண்டு என் அந்தரங்கத்தைப் பகிர்ந்து கொள்கிறவர்கள் இருந்தார்களென்றால் அவர்கள் இந்த ரவியும், மற்றவர்களுக்குப் பயந்து நான் தலைமறைவாகிப் போய் பரதேசியாக்கியிருந்த இன்னொருத்தியும் தான்.

இந்த ரவி என்னைப் போலவே வாழ்க்கையில் ஏராளமான கஷ்டங்களை அனுப வித்தவன். ஏதோ பேச்சுக்காக வீட்டாருடன் வேறுபட்டு, வீட்டை விட்டு வந்து, என்னுடன், தன் சொந்த முயற்சியில் படிப்பை முடித்தான். இப்போது அவன் ஒரு கல்லூரியில் விரிவுரையாளர்.

அவனுடைய கஷ்ட நஷ்டங்களையும் வருத்தங்களையும் பார்த்தால் என்னுடைய தெல்லாம் துரும்புக்குச் சமம். ஆனால் அதையெல்லாம் தன் மனத்தில் ஏற்றிக் கொள்வதில்லை. எப்போதும் எல்லாவற்றிலும் நல்லதையே பார்ப்பானே தவிர

கெட்டது அவன் மனத்தில் படவே படாது. வாழ்க்கையின் கசப்பை இனிப்பாகவே மனமார ஏற்றுக் கொள்வான்.

ஒருவகையில் அவன் மகிழ்ச்சி நிரம்பியவன். அவன் கருத்துப்படி இங்கே நடக்கும் எல்லாச் சங்கதிகளும் நடந்தே தீர வேண்டியவை. ஆகையினால் அவைகளிடமிருந்து நமக்கு விடுதலை இல்லை. இங்கேதான் எங்கள் இருவருக்குமிடையே கருத்து வேற்றுமை.

நான் செய்கிற நல்லது கெட்டது ஆகியவற்றுக்கு நானே பொறுப்பு. நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் மற்றவர்கள் எதை எதையோ கொண்டு வந்து போட்டு நம்மை ஏன் பொறுப்பாக்க வேண்டும் என்பது என் கேள்வி. அதற்கு ஏதேதோ புராணங்களைச் சொல்லி எனக்கு விருப்பம் இல்லாவிட்டாலும் தன் வாதத்தை ஒப்புக் கொள்ளும்படி செய்துவிடுவான்.

வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் எங்களிடையே ஒரு ஒப்புமையைக் காட்டினாலும், மனோபாவத்தைப் பொறுத்த வரையில் நாங்கள் இருவரும் இரண்டு துருவங்கள். என்றாலும் ஏதோ ஒரு ஆகர்ஷண சக்தி எங்கள் இருவரையும் கட்டிப் போட்டு இருக்கிறது. அவன் போக்கே வேறு. என் போக்கே வேறு என்று எத்தனையோ முறை தோன்றினாலும், டாக்டரின் மருந்தைப் போல என் ஒவ்வொரு அணுவிலும் தன் செல்வாக்கைச் செலுத்தி என்னுள் இருக்கும் கோட்டையை நான் அறியாமலேயே தன் வசப்படுத்திக் கொண்டிருக்கிறான். கடைசியில் ஒரு நாளைக்கு எங்கே அவனுடைய கருத்துச் சுழலில் சிக்கி நான் காணாமல் போய் விடுவேனோ என்று அஞ்சுகிறேன்.

என்றாலும் ஏனோ சில சமயங்களில் அவனிடமும் உறுதியின்மை தலை தூக்கும். அப்போது நானே; இவனும் என்னைப் போலத்தான் என்றாலும் என்னை இந்தச் சறுக்கு மரத்திலிருந்து காப்பாற்றுகிறவர்கள் வேறு யார் என்னும் இனம் தெரியாத பயத்தாலோ என்னவோ; அவனுக்குத் தைரியமூட்டி, தவிர்க்க முடியாத இந்த வாழ்க்கையை இருக்கிறவரையில் சரியாக நடித்துப் பிறகு கண்ணை மூடலாம் என்று சொல்லியிருந்தேன். என்னதான் இருந்தாலும்...

வெளியே நடமாட்டம் அதிகமாயிற்று. என் அறையைக் கடந்து போய்க் கொண்டிருந்த நர்சைக் கூப்பிட்டுக் கேட்டேன். யாரோ ஒரு பெண் டிக்-20 குடித்துவிட்டாள் என்று சொன்னாள்.

"யார் அந்தப் பெண்?"

"...அவருடைய மகள். காலேஜில் படிச்சிட்டிருந்தாளாம்."

"அவ்வளவு பணக்காரருடைய பெண்ணுக்கு என்ன ஆயிற்று சாவதற்கு?"

"என்ன ஆயிற்று என்பது என்ன சார்? இந்தக் காலத்தில் சாவதற்குக் காரணம் ஏதாவது வேண்டுமா? அதுவும் காலேஜில்..."

"சிஸ்டர், டாக்டர் கூப்பிடறார்" வேலைக்காரன் அழைத்தான். நர்ஸ் புறப்பட்டுப்போனாள்."

காலேஜ் பெண்கள் என்றால் வேறு என்ன இருக்கும்? பரிட்சையில் பெயில் ஆகி இருக்கலாம். மாணவர்கள் தற்கொலை செய்து கொள்வது அதிகமாகி விட்டதென்று யுனிவர்சிட்டிக் காரர்களே கொஞ்சம் எழுதினாலும் பாஸ் செய்ய வைத்து, செத்துப் போக இருப்பவர்களின் எண்ணிக்கையைக் குறைக்க முயலும் இந்தக் காலத்திலும் சாகிறவர்கள் இருக்கிறார்களா? அவ்வளவு பணக்காரர் வீட்டுப்பெண்! பெயில்

ஆனால்தான் என்னவாம்? என்ன குறை இருந்திருக்கும்? அதுவுமல்லாமல் பெயில் ஆவதற்குக் காரணமாக இருக்கும் அவர்களே சாவதானால்?

இல்லாவிட்டால் இப்படி இருக்கலாம். இவள் பணக்கார வீட்டுப் பெண். அதற்கு விலக்காக அழகும் இருக்கலாம். ஒரு பையன். அவன் ஏழை, புத்திசாலி, பேச்சுப் போட்டி, நாடகம், படிப்பு, எல்லாவற்றிலும் முதல். இவளுடைய மந்தபுத்திக்கு அவன் உயர்ந்தவனாகத் தோன்றியிருக்க வேண்டும். அடுத்து என்ன என்பதைச் சொல்ல வேண்டியதில்லையல்லவா?

காதல்

இவள் தந்தை வில்லன்.

யாருடனோ இவளுடைய கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. தற்கொலைக்கு இதை விடப் பெரிதாக வேறு என்ன வேண்டும்?

அல்லது இவள் ஏதாவது...

தாயாக மாற இருந்தாளோ என்னவோ...

சீ, அதுவும் அல்ல.

ஏனென்றால் இது இதற்கு மாறான சூழ்நிலையில்தான் ஆக முடியும். பணக்காரப் பையன், ஏழைப் பெண்; இவர்கள் இருவருக்கும் காதல். அப்போது அந்தப் பெண் தாயாகிறாள். கல்யாணமே இல்லை. அப்போது தற்கொலை. இது சரி.

அப்படியானால் எங்களில் இருவரில் ஒருவரும் அதை நினைத்தே பார்க்க வில்லையே. நான் அவளை இப்படிக் கை விட்டால் அவள் தற்கொலை செய்து கொண்டால் என்ன ஆகும் என்னும் எண்ணம் எனக்கு ஏன் வரவில்லை, ஆனால் அவள் தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குப் பேடியல்ல. அந்த விஷயமே வேறே.

எனக்கு அறிவு தோன்றிய நாளிலிருந்து இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள் என்னைத் தூக்கி நிறுத்திச் செயல்படும்படி செய்திருக்கின்றன. இவ்வளவு முன்னேறிய உலகத்தில் இன்னும் கற்காலத்தைப் போலவே, மனிதனின் ஒவ்வொரு நடவடிக்கையும் பொம்மையைப் போல் கயிற்றில் கட்டியிருக்க வாழவும், அவன் தன் மனத்துக்குத் தோன்றியபடி இருக்கவும் உலகின் எந்த விஷயமும் குறுக்கே வரக்கூடாது. அப்படிக் குறுக்கே வந்து, கிருமிகளின் மீது விஷத்தைப் பாய்ச்சுவதைவிட அதிகமாக மனிதன் தன் மேல் தானே பாய்ச்சிக் கொள்ளும்படி கட்டாயப் படுத்தக் கூடாது.

இவள் அவனை மணந்து கொண்டால் வாழ்க்கையை ஏழ்மையிலேயே கழிப்பாள். இவன் அவளை மணந்து கொண்டால் நம் கௌரவம் அந்தஸ்து பணம் ஆகியவற்றிற்குப் பங்கம். நம்மில் குற்றம் குறைகள் இருக்கின்றன என்று நமக்குத் தெரியவந்தால் நமக்கே அவமானம். இன்னொருவனிடம் புத்திசாலித்தனம் இருக்கிறது என்று ஒத்துக் கொண்டால் நம்முயை வளர்ச்சிக்குத் தடை. இப்படி எத்தனையோ எண்ணங்களால் கெட்டுப் போன மனம் ஒவ்வொரு விஷயத்திலும் பாப்புலோவின் நாயைப் போல் கண்டிஷண்ட் ரிஃப்ளெக்ஸில் வாழ்கிறது.

உண்மையைச் சொல்லப் போனால் என் எதிர்ப்பு இத்தகைய பாப்புலோவின் நாய்களுக்கு விரோதமாகவே தவிர, உலகத்திற்கு எதிராக அல்ல. நான் ஒரு மனிதன். எனக்குத் தனித் தன்மை இருக்கிறது. என்னை நானாகவே வாழ விடுங்கள். நான் நல்லவனாக, காந்தி, லிங்கன்களை விடப் பெரியவனாக ஆக வேண்டியதில்லை. கெட்ட

வனாக கோட்ஸேயாகவும் தேவையில்லை. அவர்கள் அப்படியானார்கள், இவர்கள் இப்படியானார்கள். எனக்கு இது ஒன்றும் தேவையில்லை. நான் நானாகவே ஆக வேண்டும். அதற்காக ஊரில் எனக்கு எவ்வளவு விலை உண்மையில் வர வேண்டுமோ அவ்வளவு மதிப்பைக் கொடுங்கள். அதையெல்லாம் விட்டு நாங்கள் சொல்வதுதான் உயர்ந்தது என்று என் மனிதத்தன்மையை அடக்கி, மணி ஓசை கேட்டதும் வாய் ஊறும் நாய்களாக மாறுவது எங்களுக்குப் பொருந்தாது. ஏனென்றால் இப்படிப்பட்ட உலகத்தில் வாழ எனக்கு விருப்பமில்லை. நான் மனிதர்கள் இருக்கும் உலகில் வாழ வேண்டும். அதற்காகத்தான் நீங்களும் மனிதர்கள் ஆகுங்கள் என்று சொல்லிக் கொண்டிருப்பது. மேலும்....

"அந்தப் பெண் செத்துப் போச்சு சார், பாவம்" அதே நர்ஸ் வந்து சொன்னாள்.

"ஏன் சிஸடர்? ஏன் செத்தாள்? ஏதாவது லவ் கிவ்" என் ஊகம் பொய்யாக வேண்டும் என்று கேட்டு வைத்தேன்.

"அப்படிதான்னு சொல்றாங்க, சார். அவனுக்கு வேறு எங்கேயோ கல்யாணம் ஆயிட்டதாம். அதுக்காக..."

"ஏன் அந்தப் பையன் இவுங்களைவிடப் பணக்காரனா?"

"இல்லையாம் சார் பரம ஏழையாம்."

"அதனால் இந்தப் பெண்ணின் அப்பா கல்யாணம் நடக்காதுன்னு சொன்னாங்களா?"

"அதுவும் அல்ல, சார். பெண் வீட்டார்க்கும் சம்மதம்தானாம்"

"வேறு என்ன வந்தது அவளுக்கு?"

"ஆனால் இந்த விஷயம் அந்தப் பையனுக்குத் தெரியாதாம், சார். இவள் அவனுக்குத் தெரியாமல் வீட்டாரை ஒப்பச் செய்தாளாம். அதைத் தெரிவிப்பதற்குள் அவன் கல்யாணம் முடிந்து விட்டது." "அப்படி என்ன அவசரம் அவனுக்கு?"

"ரகசியக் காதல் என்கிறார்களே, சார், அது. ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொள்ள முடியவில்லை. கல்யாணம் முடிஞ்சப்புறம் அவன் கடிதம் எழுதினான். அதைப் பார்த்து இவள் விஷம் குடித்து விட்டாள்."

"அப்படியா சமாசாரம்!"

மனிதன் எப்போதும் உணர்ச்சிகளின் பிடியில் புத்தியை விடக் கூடாது. அதன் விளைவே இந்தத் தற்கொலைகள், போர்கள். எப்போதும் அறிவின் பிடியில் இதயம் இருக்க வேண்டும். இந்த உலகம் தரும் இடிகளைத் தாங்கிக் கொள்ளும் பொருள் மட்டுமே, அந்த இடிகளைத் தாங்கிக் கொண்டு அவைகளுக்கு அடிபணியாமல் மிஞ்சி நிற்பது மட்டுமே வாழும். அதையே டார்வின் சர்வைவல் ஆஃப் தி ஃபிட்டஸ்ட் (survival of the fittest) என்று சொன்னான்.

* * *

நர்ஸ் எப்போதோ விளக்கைப் போட்டுவிட்டுப் போயிருந்தாள். நீண்ட நேரம் படுக்கையிலேயே கிடந்ததால் சலிப்பாய் இருந்தது. வெளியே நின்றிருந்த வேலைக்காரனை அழைத்து அவன் உதவியுடன் கக்கூஸுக்கு நடந்தேன். அறையிலேயே பேன் இருந்தாலும் அதில் சிறுநீர் கழிக்க மனம் விரும்பவில்லை. கக்கூஸிலிருந்து திரும்பி வந்து ஸ்டூலின் மேல் உட்கார்ந்து, வேலைக்காரனுக்குச் சொல்லி, படுக்கையைத் திருப்பிப் போடவைத்தேன். அவன் அதைச் செய்து முடித்து என்னைக் கட்டிலின் மேல் உட்கார வைத்து விட்டுப்போனான்.

இவ்வளவு நேரமாகியும் ரவி ஏன் வரவில்லை? அவன் வீட்டுக்கு அப்படிப்பட்ட உறவினர்கள் யார் வந்திருப்பார்கள், சிந்தித்து, சிந்தித்து தலை சூடேறத் தொடங்கியது.

வேலைக்காரன் யாருடனோ பேசத் தொடங்கினான். ரவி வந்தது போல் தெரிகிறது. இங்கே வருகிற அளவுக்குப் பொறுமையும் அவனுக்கு இல்லை. என் உடம்பைப் பற்றி எல்லா விவரங்களையும் சேகரித்துக் கொண்டே இங்கே வருவான். இன்னும் எவ்வளவு நேரம் பேசிக் கொண்டே நிற்பானோ இந்தப் புண்ணியவான்.

இந்த வேலைக்காரன் ஏன் வழியிலேயே நிற்க வேண்டும்.

பேச்சு முடிந்தது போல் தெரிகிறது. இங்கே வருவதாகத் தெரிகிறது.

"ஒருவழியாக வந்து சேர்ந்தாயே. அவனுடன் பேசிட்டு அப்படியே போய்டுவேன்னு நினைச்சேன்."

"என்றைக்கும் இல்லாத அவநம்பிக்கை இன்றைக்கு ஏன்?" சிரித்துக் கொண்டே கேட்டான்.

"என்ன செய்வது? இப்போது கடைசியாக என்மேல் இருக்கும் என் நம்பிக்கையே எங்கே நழுவி விடுமோ என்று இருக்கிறது. ஏன் இவ்வளவு நேரம்! வீட்டுக்கு யாரோ வந்திருக்காங்கன்னு தம்பி சொன்னான். அவுங்களால்தானா?"

"அவர்களால் அல்ல, உன்னால்தான்"

"என்னாலா, எப்படி?"

"வந்தவங்க யார் தெரியுமா? கிரணா வந்ததும் வராததுமா உன்னைப் பாக்கணுமான்னு அடம்புடிச்சா, அவளுக்கு எதை எதையோ சொல்லி வற்புறுத்தி ஓய்வு எடுத்துக் கொள்ளட்டும்ன்னு விட்டுட்டு வருவதற்குள் போதும் போதும்ன்னு ஆய்ட்டுது."

அவன் சொன்னதைக் கேட்டு என்ன பேச வேண்டும் என்பது தெரியவில்லை. எவளை இத்தனைநாள் பரதேசியாகச் செய்து, மறந்து விட்டிருந்தேனோ, அவளே இன்றைக்கு வந்த செய்தியைக் கேட்டு இடி விழுந்ததைப் போல ஆயிற்று என் நிலைமை.

"ஏன் பேசாமல் இருக்கிறே? அவள் வந்திருக்கக் கூடாதோ?"

"அப்படியல்ல, ரவி. அவளைப் பற்றி நினைக்க எனக்கு அதிகாரம் இல்லை. முன்னால் நான் செய்ததே இன்று என்னை மிக இழிந்த நிலைக்குத் தள்ளி, கை கொட்டிச் சிரிப்பதைப் போல் ஆகிவிட்டது. அவள் என்னை மன்னிச்சிருக்கலாம். ஆனா நான் தகுதியானவனா என்று என் மனமே கேட்டா நான் என்ன சொல்வேன்? உனக்குத்தான் தெரியுமே! என்னைக் கண்டு நான் அஞ்சுவதைப் போல் வேறு யாருக்கும் அஞ்சுவதில்லை என்று."

"அதில் உன் ஒருவனுடையதுதான் தப்புன்னு நினைச்சதுதான் அச்சத்துக்குக் காரணம். எப்போதும் எல்லாமே உன்னால்தான் நடக்கிறது என்று நினைத்துக் கொள்கிறாய்? இந்த அளவுக்கு மீறிய 'நான்' என்பதுதான் நல்லதல்ல என்று சொன்னேன்."

"உனக்குத் தெரியுமே, ரவி; நான் அதைப் பழக்கத்தில் கொண்டு வருவதற்கு எவ்வளவு முயற்சி செய்யவில்லை? சம நிலையில் இருப்பது என்பது எல்லோருக்கும் வரக்கூடிய குணம் - அல்ல. அதை அடைவது என்பது என்னால் முடியவே முடியாது..."

மாலையிலிருந்து இதுவரை நடந்த என் சிந்தனைப் போராட்டத்தை விவரித்தேன். அதற்கு "வாழ்க்கையில் ஒவ்வொரு கணத்தையும் நிறைந்த மனத்தோடு அனுபவிக்க வேண்டும் என்பது என் கொள்கை. என்னைச் சுற்றி இத்தனை பேர் இருந்தும் நீ பரதேசி என்றும், கஷ்டப்படுகிறவன் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறாய் அல்லவா? கணக்கிலடங்காத எத்தனையோ பரதேசிகள் எப்படி வாழ்கிறார்கள் என்று என்றைக்காவது சிந்திக்க நினைத்திருக்கிறாயா?"

"பார் எப்போதுமே என்னிடம் இல்லாததை இருப்பதாக நினைத்துக் கொள்ளும் முட்டாள்தனத்தை நான் என்றுமே செய்ததில்லை. நீ இவ்வளவு பேசுகிறாயே, உன் அப்பாவிடம் போய் இருந்து ஏன் அந்த அன்பை அனுபவிக்கக் கூடாது?"

"உனக்குத் தெரியுமோ தெரியாதோ, ஒரு கையால் தட்டி ஓசை எழுப்ப முடியாது நான் வேறு ஜாதிப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டதிலிருந்து அப்பா வுக்கு என்மேல் இருந்த கோபம் அதிகமாகி, தனக்கு ரவின்னு ஒரு மகன் இருக்கான்ங் கறதையே மறந்து விட்டார்."

"இருக்கட்டும். விடு. எவ்வளவு பேசினாலும் அதேதானே. இப்போது கிரணா எங்கிருந்து வந்தாள்? நாலைந்து வருஷங்களாக அவள் பேச்சே இல்லை. அவளுக்குக் கல்யாணமாகி விட்டது என்பது மாத்திரம் தெரியும்."

அதற்கு ரவி தெரிவித்த விஷயம் எவ்வளவு! அவளுக்குத் திருமணமாகி மூன்று வருடங்கள் ஆயின. கணவனுக்கு அவளுடைய பழைய கதை தெரிந்து, வெறுப்பு அதிகமாகி, இப்போது ஒரு வருஷமாகக் கணவனை விட்டுப் பிரிந்து வந்து ஏதோ ஒரு ஊரில் ஒரு ஹைஸ்கூலில் ஆசிரியை வேலை பார்க்கிறாளாம் என் நோயைப் பற்றிக் கேள்விப்பட்டு இங்கே வந்திருக்கிறாள்.

தம்பி வந்தான். இன்று இரவு ரவியே இங்கே இருப்பான் என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டேன். கிரணாவைப் பார்க்க வேண்டும் என்று என் மனம் ஏங்கியது. ரவி என் மனத்தை அறிந்தவனைப் போல அவளை அனுப்புவதாகச் சொல்லிப் புறப்பட்டுப் போனான்.

இந்தக் கிரணா இப்போது வருவதற்குப் பதில் ஏழெட்டு மாதங்களுக்கு முன்னாலாவது வந்திருந்தால் என்னுள் வாழ வேண்டும் என்னும் ஆசை வலுத்து என் உயிர் பிழைக்கும் சாத்தியம் இருக்குமோ என்னவோ. நாடகத்தைப் பார்ப்பவர் களைப் போல திரை மறைவிலிருந்து எல்லாரும் இப்போது ஒன்றாகக் கண்ணில் படுகிறார்கள்; என்னுடைய நாடகச் சாமான் களை எல்லாம் கட்டி எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போகத் தயாராக இருக்கும்போது.

ஒரு வருடத்துக்கு முன்னாலேயே தெரிந்து விட்டது, என்னுள் இந்த நோய் வளர்ந்து இனிப் பிழைக்க முடியாது என்று. அப்போதே ரேடியோதெரபி சிகிச்சை செய்து கொண்டிருந்தால் என் குடல் அழுகிப் போவதிலிருந்து தப்பி இருந்திருக் கலாம். வாழ்க்கையில் வெறுத்துப் போன மனம், இந்த ராட்சஸப் புண் வளர்ந்து அதன் முழு வளர்ச்சியோடேயே என் வாழ்க்கையின் முழுமையையும் வாங்கிக் கொள்ளத் தயாராகிவிட்டது.

தன் கணவனிடமிருந்து விடுதலை பெற்றவுடனேயே கிரணாவைப் பற்றிச் செய்தி தெரிந்திருந்தால் எந்தக் கஷ்டமும் இல்லை. இப்போதெல்லாம் எனக்குச் சரியென்று தோன்றியதை, அது பொருந்தாதது என்று தோன்றினாலும், சாதிக்க வேண்டும் என்னும் தைரியம் என்னில் வளர்ந்திருக்கிறது என்று அடிக்கடி தோன்று

கிறது. அப்போதே இந்த உலகத்தைக் கால் பந்தைப் போல உதைத்து விட்டு அவளுடன் வாழ்க்கை நடத்தியிருப்பேன்.

ஒரு வேளை ரவி சொல்வதும் உண்மையாக இருக்கலாம். இங்கே ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஆழமான வேர்களுடனேயே நிகழ்கின்றன. கிரணாவுடன் வாழ்க்கை நடத்தும் நல்ல நேரம் வந்தபோது, இந்த உலகத்தை எதிர்த்து நிற்கும் தைரியம் எனக்கு இல்லை. அந்தத் தைரியம் வந்தபோது கிரணா இல்லை.

கிரணாவை எப்படிப் பார்ப்பேன்? என்னைப் போன்றவனின் முகத்தைப் பார்ப் பதற்கு அவளுக்கு எப்படித்தான் மனம் வந்ததோ? மோகித்துக் காதலித்துக் கனவு காட்டி கடைசியில் அந்தக் கனவு வீட்டுக்குத் தீ வைத்து, அது சாம்பலாகும் போது அவளைத் தனியாக விட்டு ஓடிப் போன எனக்குப் பிராயச்சித்தம் என்று ஏதாவது இருக்கிறதா? அந்தத் தீயினால் அவள் முந்தானையில் பற்றிய கறை இப்படி வாழ்க்கை முழுதும் அவளைத் தாக்கி வாழ்க்கையையே நாசப்படுத்திவிட்டது.

* * *

விழிப்பு வந்தபோது கிரணா மெதுவாகத் தலையைத் தடவிக் கொண்டிருந்தாள். ரவி காலையில் சீக்கிரம் வருவதாகச் சொல்லிப் போய்விட்டான். நெடுநேரம் யாரும் பேசவில்லை. கடைசியில் தைரியத்துடன், "நீ வந்திருக்கக் கூடாது கிரணா" என்று நானே அந்த மௌனத்தை உடைத்தேன்.

"ஏன், இந்த நோயில் உங்களுக்கு ஏதாவது ஆனால் அதையும் என் தலை மேலேயே சுமத்திடலாம்னு நினைச்சிட்டிருக் கீங்களா?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

"பார்.எல்லாத்தையும் சிரிப்பிலே மறைச்சிட வேணாம். வாழ்க்கையில் இவ்வளவு கெட்டதைச் செய்தபிறகும் ஒருவனை மன்னிப்பது என்றால்..." மேலே பேச்சு வர வில்லை.

"தப்பித்துக் கொள்வதில் இதுவும் ஒரு வகை. எனக்கும் முன்னதாகவே நீங்க உங்களையே திட்டிக் கொண்டால் தப்பிச்சிக்கலாம்னு நினைக்கிறீங்களா?" மறு படியும் அதே சிரிப்பு.

"நீ இப்படியெல்லாம் சிரிச்சி என்னைக் கொல்லாதே. என்னைத் திட்டு, என்னோடு சண்டை போடு, ஏதாவது செய்து என்மேல் உள்ள கோபத்தைத் தீர்த்துக் கொள்."

"அது தான் சிறுபிள்ளைத்தனம். அதுதான் மூக்குக்கு மேல் வருகிற கோபம். இந்த நாலைந்து வருஷங்களில் ஏதாவது மாறியிருப்பீர்கள் என்று நினைத்தேன். அதிக உணர்ச்சிப்படுவது நல்லதல்ல. கொஞ்சம் பழத்தைத் தின்று அமைதி அடை யுங்கள்."

இவளும் இப்படித்தான். எத்தனை வருடங்கள் ஆனாலும் மாறுகிறவள் அல்ல. இவளிடம் வாதிப்பது, ஒரு பாறையின் முன்னால் நின்று கத்துவதைப் போலத்தான் கேட்கிறவரையில் கேட்டுவிட்டுத் தனக்குப் பட்டதையே செய்வாள், கடைசியில்.

வலி குறைந்திருப்பதாகத் தோன்றி சாய்ந்து உட்கார்ந்தேன். தண்ணீரும் தட்டும் எடுத்து வந்தாள். வாயைக் கொப்பளித்த பிறகு துணியால் வாயைத் துடைத்தாள். தானே பழத்தை ஊட்டி பிளாஸ்கிலிருந்த பாலைக் கொடுத்தாள். குடித்தேன்.

மோசம், வஞ்சனை, ஏமாற்று, நிலையற்ற புத்தி, பொறாமை இப்படி எவ்வளவோ குணங்களைப் பெண்ணின் மேல் ஏற்றிச் சொல்லுகிறார்கள் கவிஞர்கள். ஆனால்

பிரம்மா இவளைப் படைக்கும்போது பெண்ணின் அந்த மூலப் பொருட்களை வைத்து நிரப்ப மறந்திருக்க வேண்டும்?

"ஏன் அப்படி உற்றுப் பார்க்கிறீங்க?"

"பெண்ணின் மன நிலையையும் குதிரையின் நிலையையும் அறிய முடியாது என்று பழமொழி. உன்னில் அதைத் தேடினேன்."

"கிடைத்ததா?"

"அதென்னவோ உனக்குத்தான் தெரியும். மணி என்ன?"

"ஒன்று" கடிகாரத்தைப் பார்த்துச் சொன்னாள்.

"என்னவோ வலி அதிகமாக ஆகி மூச்சு முட்டுவதைப் போல் இருக்கிறது. வெளியே அழைச்சிட்டுப்போறயா?"

"இந்த இருட்டில வெளியே போலாங்களா, அதுவும் இந்த நோவுடன்?"

"இன்னும் என்மேல் அவநம்பிக்கையா?"

"உங்களுக்கும் விளையாடவரும்ன்னு காட்டிக்கறீங்களா?"

கட்டிலிலிருந்து மெதுவாக எழுப்பினாள். பிடிப்புக்காக அவள் தோள்மேல் கை போட்டு நின்றிருந்தேன். அலமாரியில் இருந்த டார்ச்சை எடுத்துக் கொண்டாள். மெதுவாக்க் கதவு வரையில் வந்தோம். டார்ச்சை என் கையில் கொடுத்து, கதவைத் திறந்தாள். அறைக்குப் பின்னால் வயல்வெளி. டார்ச் வெளிச்சத்தில் வெளியே முற்றத்தில் வந்து உட்கார்ந்தோம்.

அமாவாசை கழிந்து இரண்டு மூன்று நாட்கள் ஆகி இருக்கலாம். எங்கும் ஒரே இருட்டு. வானம் நிறைய நட்சத்திரங்கள். வானத்தில் வெளிச்சம் உலாப் புறப் பட்டதைப் போல இருந்தது.

"ஹா! என்ன நோய் இது?" வயிற்றில் ஈட்டியைப் போட்டுத் திருகியதைப் போல.

"வலி அதிகமாகி இருக்குதா? கொஞ்சம் சௌகர்யமா உட்காருங்க" என்று சொல்லிக் கிரணா என்னைத் தன் மார்பின் மீது சாய்த்துக் கொண்டாள். அவள் நெஞ்சில் தலைவைத்து அப்படியே வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

பைத்தியம் பிடிக்கச் செய்யும் அளவுக்கு நட்சத்திரங்கள். அதோ பாண்டவர்கள் வழி, வோர்ட்ஸ்வொர்த் கவிஞன் கண்ட மில்க்கி வே அதுவாகவே இருக்க வேண்டும். ஒவ்வொரு இரவிலும் எத்தனை நட்சத்திரங்கள் தோன்றி மறை கின்றனவோ.இருட்டும் கூட இவ்வளவு அழகாக அலங்கரித்துக் கொண்டு இருக்கும் என்பது தெரிந்திருக்கவில்லை. இதுவரை வாழ்க்கையில் எல்லா இரவுகளையும் வீணாகக் கழித்து விட்டேனே! உண்மை. ரவி சொன்னதைப் போல வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் வாழவில்லை. நான் ஒவ்வொன்றுக்கும் எதிராக மனத் திலேயே செயல்படுவதிலேயே ஆயுள் கழிந்துவிட்டது. கோடானு கோடி வருடங் களாக ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு புதுமையைக் காட்டி ஒளிவீசும் இந்த நட்சத்திரங்களைப் போல நானும் ஒவ்வொரு கணத்திலும் புதுமையைக் கண்டிருக்க வேண்டும்.

"நட்சத்திரங்களைப் பார்த்தாயா, கிரணா?"

"அவற்றை பார்த்துக் கொண்டே இருந்தேன். செத்துப் போனவங்க."

"நாளைக்குச் செத்துப் போனா நானும் ஒரு நட்சத்திரம் ஆவேன்னு சொல்."

"நான் என்று சொல்லாதீர்கள். நாம் என்று சொல்லுங்க. நீங்க போய்ட்டா நான் உயிர்வாழ முடியும் என்று இன்னமும் தோணுதா உங்களுக்கு?"

"எவ்வளவெல்லாம் கஷ்டத்தைக் கொடுத்தாலும், என்னிடம் எதைப் பார்த்து இவ்வளவு இது இருக்கிறது என்மேல்?"

"அது என்ன பார்த்தேனோ எனக்குத் தெரியாது. எல்லாத்தையும் அடிவரைக்கும் சோதிச்சிட்டே போனா கடைசியில் கிடைப்பது சூன்யம்தான். எனக்கு என் வாழ்க்கையில் எதுவும் தெரியாது. ஏதாவது தெரியும் என்றால், அது நீங்க ஒருவர்தான்."

"கிரணா"

"உம்"

"..."

"..."

* * *

விழிப்பு வந்து கண் திறந்து பார்த்தேன். அவள் நெஞ்சின் மீது முகம் வைத்து எவ்வளவு நேரம் படுத்திருந்தேனோ.

"குளிர் தொடங்கிவிட்டது, உள்ளே போகலாம் வாங்க" என்று சொல்லி என்னை மெதுவாக நடத்திக்கொண்டு உள்ளே வந்து படுக்கையின் மேல் உட்கார வைத்தாள்.

"படுப்பதற்கு ரவியின் படுக்கை இருக்கிறது. எடுத்துக் கொள்"

பதில் சொல்லாமல் என்னைப் படுக்க வைத்து, ஸ்டூலின் மேல் உட்கார்ந்து, "தூக்கம் வந்தா படுத்துக்கறேன்" என்றாள்.

வாழ்க்கை என்னுடன் ஏன் இப்படிக் கண்ணாமூச்சி ஆடுகிறது? பேடித்தனமாகத் தாக்கி, கிரணாவின் வாழ்க்கையைப் பாழாக்கியது. அதே பேடித்தனம் பெண்ணாக வந்து என் மனைவியாகி என்னைத் தாக்குகிறது. நடந்து போன இந்தத் தவறுகளையெல்லாம் திருத்திக் கொண்ட வாழ்க்கையைப் புதிதாகத் தொடங்க முடியுமானால்...

"ஒரு வேளை நாளை ஆபரேஷன் வெற்றி அடைந்து நான் பிழைத்தால் என் எதிர்காலப் பாதை எதுவாயிருக்கும்? கடைசியாகக் கிரணா கிடைத்து விட்டாள் என்பதற்குள் மனைவி என்பவள் கழுகைப் போல வந்து என் வாழ்க்கையின் மேல் பாய்ந்திருக்கிறாள். இல்லை ..இந்தத் தடவை அவளை நிரந்தரமாக அனுப்பி வைத்து விட வேண்டும். மனைவியின் எந்தக் கடமையை அவள் நிறைவேற்றியிருக்கிறாள் என்று அவளை மனைவியாக ஏற்றுக் கொள்வேன்...?"

நான், கிரணா இருவரே புறப்பட்டோம். எவ்வளவு நேரமாக நடந்து கொண்டிருக்கிறோமோ தெரியவில்லை. ஒரு காடு வந்தது. ஒரு பாம்பு படமெடுத்து என்னைக் கடிக்க வருவதற்குள் கிரணா அதன் படத்தையே பிடித்து விட்டாள். அது திமிறத் தொடங்கியது. நான் அதன் வாலைப் பிடித்தேன். ஓங்கித் தரையில் அடிப்பதற்குள் என் பையிலிருந்து நழுவிப்புலியாக மாறிக் கிரணாவின் மேல் பாய்ந்தது. அந்தப் புலிக்கு என் மனைவியைப் போலவே முகம் இருந்ததைப் போல் தோன்றியது. அதனுடன் போராட வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். எவ்வளவு முயன்றாலும் கை கால்களைக் கொஞ்சம் கூட அசைக்க முடிய வில்லை செயலற்றுக் கத்தினேன்.

திடீரென்று விழிப்பு வந்தது. பயத்தில் உடம்பெல்லாம் வேர்த்திருந்தது. கண்ணைத் திறந்து சுற்றிலும் பார்த்தேன். அதே அறை ஸ்டூலின் மேல் உட்கார்ந்து கட்டிலின் மேல் தலைவைத்து அப்படியே தூங்கிவிட்டிருந்தாள். கிரணா. அவ

ளுடைய ஒரு கை என் மார்பின் மேல் கிடந்தது. ஒரு தடவைக்கு இரண்டு தடவை யாகத் தொட்டுப்பார்த்து அவள்தான் என்று உறுதி செய்து கொண்டேன். சோர்ந்திருந்தாலும் முகத்தில் அமைதி நடமாடிக் கொண்டிருந்தது. எத்தனையோ பேர் என்னவர்கள் என்று இருந்தாலும், வாழ்க்கை முழுதும் நீயேதான் என்று என்னை அணைத்துக் கொண்ட உயிர் இது ஒன்றுதான். உனக்குள்ளும் மனிதத் தன்மை இருக்கிறது. நீயும் ஒரு மனிதன் என்று எனக்கு என் னையே அறிமுகம் செய்து வைத்தவள் இவள். அருகிலிருக்கும் போது என் மறைந்து கிடக்கும் உயிர்ப்பை மனத்தின் ஆழத்திலிருந்து பிடித்து எடுத்து மனத்தின் அடியிலிருந்து வானத்துக்குப் பறக்க விடுகிறாள் இவள். என்னுடன் இருந்து விட்டால் இந்த உலகத்தையும் வானத் தையும் அண்டத்தையும் அதற்கப்புறமும் அளந்துபார்க்க விரும்புவாள். மன வீணை ரீங்கரித்து ஆயிரம் ராகங்களை ஒரே நேரத்தில் இசைக்க நினைக்கிறது. நூறு ஆசைகளின் கொப்பளங்களைப் படைத்து மனத்தைப் பொங்க வைக்கும் இவள், உண்மை என்னும் நீரைத் தெளித்துப் பொங்கி வெளியில் வழியாதபடியும் செய்வாள்.

ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன். விடிவெள்ளி மேலேறிக் கொண்டிருந்தது. அது ஒவ்வொரு நாளும் என்னைப் போன்ற எத்தனை கைதிகளைப் பார்க்குமோ? நான்கு சுவர்களின் சிறையிலிருந்து வெளியே போனால் பத்துத் திசைகளின் சிறை காத்திருக் கிறது. பூமியில் பிறந்த யாருக்கும் இந்த (தாட்சண்ய) சிறை தப்புவதில்லை. இந்தச் சிறைக்கு வெளியே அடிவானத்துக்கப்பால் என்ன இருக்கிறது என்று பார்க்கும் ஆசை, பார்க்க முடியாவிட்டாலும், பார்த்தவர்களையாவது கேட்க வேண்டும் என்னும் ஆசை. பூமி என்னும் சமாதியின் மேல் போர்த்தி இருக்கும் வானப் படுதாவைப் பிடித்து ஓங்கி வளர்ந்து நிற்கிறேன் சில நேரங்களில். மறு கணமே தூசியின் துகள் ஆகிறது என் நிலை. சென்னம்மாவின் மாலையை* என்னுடைய இந்த இவளின் முந்தானையில் முடிச்சிட நினைக்கிறேன். கையை நீட்டி. கைக்குச் சிக்காத அதைப் பறித்துக் கொடுக்க வேண்டுமென்று சப்தரிஷி மண்டலத் திடம் முறையிடுகிறேன்.

எதற்காகவோ, இவள் திரும்பி வந்ததிலிருந்து உயிர் வாழ வேண்டும் என்னும் ஆசை வலுத்து வருகிறதோ என்னும் சந்தேகம் வரத் தொடங்கியிருக்கிறது. அதே அமைதி, அதே தெளிவு, அதே கபடமின்மை. இருக்கிறதோ இல்லையோ என்னும் அளவுக்குப் புன்னகை மின்னல், உதடுகளில் கர்வம் பொங்கி வந்தது. அவள் கையை மெதுவாக என் மார்பின் மேலிருந்து எடுத்து, எழுந்து, குனிந்து மெதுவாக முத்தமிட்டேன். விழிப்பு வந்து சுதாரித்துக் கொண்டு எழுந்தாள். கடியாரத்தைப் பார்த்து, "மணி ஐந்தாகிறது. இன்னும் தூக்கம் வரவில்லையா உங்களுக்கு?" என்று கேட்டு என்னைப் படுக்க வைத்துக் காவலாக உட்கார்ந்தாள். எனக்குத் தெரியாம லேயே தூக்கம் என்னைத் தழுவியது. கண் திறந்து பார்த்தபோது ஜன்னல் வழியாக வெயில் உள்ளே வந்து கொண்டிருந்தது. எதிரில் கிரணா நின்றிருந்தாள். நான் விழித்ததைப் பார்த்து முகம் கழுவிக் கொள்வதற்குத் தயார் செய்தாள். வெளியே ரவி தம்பியுடன் பேசுவதைப் போல் இருந்தது. முகத்தைக் கழுவிக் கொண்ட சிறிது நேரத்துக்கெல்லாம் அம்மாவும் அப்பாவும், என் மனைவி தன் தோழிகளுடனும்

* நட்சத்திர கூட்டம்

ஆஜரானார்கள். ஒவ்வொருவராக வந்து பேச்சுக் கொடுத்தார்கள். இவர்களை யெல்லாம் புதிதாகப் பார்க்கிறேன் என்று தோன்றியது. யார் மீதும் எந்த உணர்ச்சியும் ஏற்படவில்லை.

எந்த உணர்ச்சியைக் காட்டினால்தான் என்ன. செத்துப் போனாலாவது என் ஆசை நிறைவேறியதாகும். பிழைத்துக் கொண்டால்...இவ்வளவுதான், வாழ்க்கையை இன்னும் அர்த்தமுள்ளதாக வாழ வேண்டும். வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் வாழ வேண்டும். அதாவது என்னில் பிழைத்துக் கொள்ள வேண்டும் என்னும் பிடி வாதம் இல்லை. சாவைக் குறித்து உயிர் வாழ்ந்த இத்தனை நாட்களும் சிந்தித்தேன். இப்போது மிஞ்சியிருக்கும் ஒரு கண வாழ்க்கையைப் பற்றி யோசிப்பதால் ஆகப் போவதுதான் என்ன?...

டாக்டர் நர்சுடன் வந்து என்னைத் தள்ளுவண்டியின் மேல் படுக்க வைத்தார். எல்லாரும் வரிசையாக நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். அம்மாவின் கண்ணில் நீர் தளும்பியது. அப்பா சமாதானப்படுத்துகிறார். மனைவி ஏதோ உணர்ச்சிகளை முகத்தில் வலுக்கட்டாயமாகக் கொண்டு வருவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறாள். கிரணா, ரவி, தம்பி மூவரும் ஆபரேஷன் தியேட்டரின் கதவு வரையிலும் வந்தனர். ஆயிற்று; இன்னும் ஒரு கணத்தில் இவர்கள் எல்லாரிட மிருந்தும் மறைந்து சாவு-வாழ்வு என்னும் சக்கர வியூகத்தில் இந்தத் தள்ளுவண்டி என்னைச் செலுத்தி விடும்.

# கடைசி வழி

## வீணா

**24 ஜூலை 1958**

இன்று நாள் முழுதும் திரிந்து போதும் போதும் என்று ஆகி விட்டது. அப்பா, எவ்வளவு பசி அந்த கோவிந்த மூர்த்திக்கு! எவ்வளவு தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறான் அவன் இந்த விஷயத்தைப்பற்றி! டாக்டரல்லவா? சீ, இந்த டாக்டர்கள் எல்லாமே மோசமான ஜனங்கள். மனித உடம்பை அறுத்து...அறுத்து எல்லாவற்றையும் அனலைஸ் செய்து எல்லாம் பார்த்தவர்கள் இவர்கள். அதனால்தான் கோவிந்தமூர்த்திக்கு இதைப் பற்றி எதைப் பேசுவதற்கும் வெட்கமில்லை, இது இப்படி, அது அப்படி என்று எனக்கே விவரமாகச் சொல்கிறான். 'லில்லி, யூ ஆர் எ பெர்ஃபெக்ட் உமன்' —என்று ஏரிக்கரை மதகின் மேல் இன்று உட்கார்ந்திருந்த போது என்னிடம் சொன்னான். என்னைப் பற்றி எனக்கே கர்வம் ஏற்பட்டதா? ஆமாம் என்றுதான் தோன்றுகிறது. ஏன் தோன்றக்கூடாது? 'உன் உடம்புவாகு நன்றாக இருக்கிறது, முழுமையாக இருக்கிறது' என்று சொல்லும்போது எந்தப் பெண்ணுக்குத்தான் கர்வம் ஏற்படாது?

ஆனால், சீ, கோவிந்தமூர்த்தியுடன் நாள் முழுதும் திரிந்து, உட்கார்ந்து, படுத்து என்ன செய்தாலும் ஒரு தடவையாவது உடம்பு ஜுரம் எனவில்லை. எனக்கு இப்படிப்பட்டவர்களின் சிநேகிதம் இப்போது தேவைப்படவில்லை. இவர்களால் எந்த உபயோகமும் இல்லை. பயங்கர மனிதன் இந்தக் கோவிந்தமூர்த்தி. என்றைக்கும் தீராத தாகம் அவனுடையது. வேறே பேச்சுக்கு இடமே கொடுப்பதில்லை அவன். 'வாழ்க்கை இருப்பதே சுகம் அனுபவிப்பதற்குத்தான். லில்லி. இப்போது இல்லாவிட்டால் இனி எப்போதுதான் நாம் சந்தோஷமாக இருப்பது? கிழவர்கள் ஆன பிறகா? பாவம்? பாவம் வரும் என்கிறாயா?' என்று சொல்லி அவன் பயங்கரமாகச் சிரித்தது இன்னும் ஞாபகத்தில் இருக்கிறது எனக்கு. 'இதோ பார், லில்லி, பாவம், புண்ணியம் எல்லாம் பொய். என்னைப் பொறுத்தவரை இது ஒன்றே உண்மை—இது ஒன்றே உண்மை' என்கிறான் அவன். அவன் சொன்னது உண்மை என்று எனக்கும் பட்டதே!

இந்தக் கோவிந்தமூர்த்திக்கும் அந்த விநய்சாலகருக்கும் ஏது ஒற்றுமை! வாயைத் திறந்தாலே பாவம், புண்ணியம், மொராலிட்டி, எதிக்ஸ் என்ற மூட்டையையே அவிழ்த்து விடுகிறான் அவன். காலேஜில் பையன்களுக்கு பிலாஸபி சொல்லிக் கொடுத்துப் பழக்கம் அவனுக்கு. எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்று ஆராய்வதிலேயே வாழ்க்கையைத் தேய்க்கிறான் விநய். ஒரு தடவை எப்படியாவது முயற்சி செய்து அவனை வழிக்குக் கொண்டு வரவேண்டும்.

வழி? டாக்டர் கோவிந்தமூர்த்தியின் வழிக்கா? ஊஹூம். விநயனுடன் ஒழுக்கம், சீலம், வாழ்க்கையின் குறிக்கோள்கள் முதலியவை பற்றி மணிக்கணக்காக சீரியஸாக விவாதிக்கும் போது ஏற்படும்—ஏதோ ஒரு வகைகாற்றிலே மிதக்கும் பாவனையை பாழடித்துக் கொள்ள மனம் இல்லை எனக்கு.

தூக்கம் வருகிறது. உடம்பு கைகால் எல்லாம் வலி...சீ, இனி மேல் இந்தக் கோவிந்தமூர்த்தியுடன் அவுட்டிங் போகக் கூடாது. அவன் சகவாசமே வேண்டாம். அவன் என்றைக்குமே எனக்கு வேண்டியதைத் தர மாட்டான்.

'நாளை பாஸுக்குப் போன மாதத்து அக்கவுண்ட்ஸ் தர வேண்டும். ஆபீஸ் விட்ட பிறகு சாயங்காலம் வீட்டுக்கு வா' என்று சொல்லியிருந்தார் நேற்று. ஏன் வரவில்லை என்று கேட்கலாம் நாளைக்கு. சொல்லிவிடுகிறேன் தெளிவாக-உங்கள் மனைவி ஊருக்குப் போயிருக்கும்போது இனிமேல் உங்கள் வீட்டுக்கு வர மாட்டேன் என்று. இவருக்கு, தம்முடைய அந்த டி.பி. மனைவி புர்க்கா போட்டுக் கொண்டு ஏழு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு தாய் வீட்டுக்குப் போகும்பொதெல்லாம் ஆபீஸ் வேலைக்காக என்னை வீட்டுக்கு வா என்று சொல்லும் குஷி வந்து விடும். ஐயோ, அவருடைய அந்தத் தாடி. நீண்ட தொப்பி, வாய்க்கு 'வாய், 'அல்லா கே கஸம்' பல்லவி—இது எதையும் நான் லைக் செய்வதில்லை. அந்த புஷ்பா குல்கர்னி எப்படித் தான் சகித்துக் கொள்கிறாளோ? டைப்பெல்லாம்அவர் வீட்டிலேயே உட்கார்ந்து செய்கிறாள்.

என்னால் முடியாது என்று சொல்லி விடுகிறேன் நாளைக்கு, மெமோ அனுப்பினால் அனுப்பட்டும். வேண்டுமானால் வேலையில் இருந்தும் நீக்கி விடடடும். 'உனக்குத் தேவை என்று தோன்றும்போது வந்துவிடு. என் எஸ்டேட்டைப் பார்த்துக் கொண்டு இருந்துவிடு. எனக்கு யார் இருக்கிறாரகள்?' என்றார் சங்கர கவுடர் முந்தாநாள். தேவூர் சின்ன கிராமமாக இருந்தாலும் பரவாயில்லை. இந்த பாஸின் 'அல்லா கே கஸம்' நான் தாங்க மாட்டேன்.

**ஜுலை 28 1958**

சலிப்பு...சலிப்பு. இந்த 'பாஸ்' ரொம்பத்தான் உயிரெடுக்கிறார். இன்றைக்குச் சாயங்காலம் அந்த எல்லா அக்கவுண்ட்ஸையும் எழுதி முடிக்கும் வரையில் என் தோள் மேல் போட்ட கையை எடுக்கவேயில்லை. கிழவனாயிருந்தாலும் சபலம். அதை விட அதிகமாக ஏதும் இல்லை. நான் எதிர்ப்பேன் என்று நினைத்திருந்தானோ என்னவோ, நான் ஏதும் எதிர்ப்புத் தெரிவிக்காமல் இருந்தபோது எவ்வளவு ஆச்சர்யம் அவனுக்கு...கோவிந்தமூர்த்தியிடமிருந்து கிடைக்காதது இவனிடமிருந்தாவதுகிடைக்கும் என்று 'உம்' என்று சொன்னேன். ஆனால் சீ, இவனும் பேடிதான். "என்ன சொன்னாய், லில்லி? குழந்தை வேண்டுமா உனக்கு? தோபா தோபா. நீ இன்னும் கல்யாணம் ஆகாத பெண். நம்மால் இந்தப் பாவமெல்லாம் செய்ய முடியாது. அல்லா கே கஸம்"—என்று தடுமாறினான்.

அவன் தாடிக்கு நெருப்பு வைக்க வேண்டும். கல்யாணம் ஆகாத பெண்ணுடன் படுக்க வேண்டும் இந்த சாயபுவுக்கு. ஆனால்அவளுக்கு இவ்வளவு தேவையாய் இருக்கிற ஒரு சின்ன ஃபேவர் செய்வதென்றால் வேண்டாம் அவனுக்கு. பாவமாம். தூ...

கோவிந்தமூர்த்திடமிருந்தே ஆகியிருக்க வேண்டும் இந்த வேலை. அவன்

என்னவோ பாவ புண்ணியத்தைப் பற்றி கேர் செய்வதில்லை. ஆனால் அவன் எப்போதும் ஜாக்கிரதையாக இருக்கிறவன். நான் விரும்புவதை இரக்கத்தோடு கொடுத்துவிட்டு விலங்கில் மாட்டிக் கொள்ளும் விருப்பம் இல்லை அவனுக்கு. இந்தத் தொடர்பு அணு அளவு கூட அவனைத் தாக்க விட மாட்டேன் என்றும், இப்போதைப் போலவே அப்புறமும் அவன் ஃப்ரீயாக இருக்கலாம் என்றும் நான் எவ்வளவு சொன்னாலும் கேட்பதில்லை அவன். 'லில்லி, எக்ஸ்கியூஸ் மி. என்னை இப்படிப்பட்ட சங்கடத்தில் மாட்டிவிட வேணாம். நானும் மனிதன் தானே? நீ என்னைக் கட்டிப் போடாட்டாலும் என் மூலம் உனக்குப் பிறந்த குழந்தையிடம் தானாகவே என் மனத்தில் அன்பு கின்பு ஏற்பட்டால்? அப்போது? என் வாழ்க் கையின் மஜா எல்லாம் குளோஸ்' என்கிறான். இவர்கள் எல்லாம் உபயோகம் இல்லாதவர்கள்...விநய் சாலகரையே சரிப்படுத்த வேண்டும்.

**31 ஜூலை, 1958**

ஆபீஸிலிருந்து திரும்பும்போது கொண்டு வந்த சாக்லெட்டைக் கதவருகில் நின்றிருந்த முன்னிக்குக் கொடுத்த போது முன்னியின் அம்மா கேட்டாள்: "குழந் தைகள் என்றால் உங்களுக்கு எவ்வளவு ஆசை! சீக்கிரம் கல்யாணம் செய்து கொள்ளுங்களேன்?"

உம். கல்யாணம். கல்யாணம் என்றதும் நினைவுக்கு வரும் அந்தக் கதையெல்லாம். அந்தச் சந்தடி, நாயனம், மஞ்சள், அப்புறம் அந்த மனிதன்—என்னைக் கைப்பிடித்த அந்த மிருகம். கணவன் என்னும் 'தெய்வம்'! அவனுடன் சேர்ந்தே நினைவிற்கு வருவது அவனுடைய அந்தக் கலாட்டா, அவனுடைய அந்தக் குடி, அவனுடைய வைப்பாட்டிகள், அவன் எனக்குக் கொடுத்த இம்சை..

தூ, கெட்ட கனவு. எல்லாவற்றையும் அறுத்துக் கொண்டு விடுதலை பெற்று எப்படி இவ்வளவு தூரம் வந்தேன். எப்படிக் காலத்தைக் கழித்தேன், எப்படிப் புதிய பெண்ணாக மாறி னேன்— இதையெல்லாம் என்றைக்காவது மறக்க முடியுமா? கல் யாணமாம் கல்யாணம். இன்னொரு மிருகத்துடன் சீ..

'எல்லா ஆண்களும் கெட்டவர்கள் அல்ல லீலா. நீ சின்னப் பெண். தனியாக இருக்கக் கூடாது. இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள். நீ உம் என்றால் நான் அதற்கு ஏற்பாடு செய்கிறேன்'—என்கிறார் சங்கரகவுடர்.

ஆமாம். சங்கர கவுடரைப் போல நல்ல மனிதர்கள் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். எப்படிப்பட்ட மனிதர்! கல்யாணம் செய்து கொண்டு இருபத் தைந்து வருஷங்களானாலும் குழந்தை பிறக்காமல் இருந்தும் கொஞ்சமும் சலித்துக் கொள் ளாமல் ஒழுங்காக வாழ்கிற மனிதர். யார் எதைக் கேட்டாலும் இல்லை என்று சொன்னவரல்ல. எப்படிப்பட்ட மனம்! அவருடைய அன்பும் இரக்கமும் என்றோ செத்துப் போன அப்பாவின் நினைவைக் கொண்டு வருகிறது.

ஆனால் அதற்காக நான் அவர் உபதேசத்தின்படி மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா? ஒரு தடவை விழுந்து எழுந்த கிணற்றில் மறுபடியும் விழ முடியாது என்னால்.

அப்படியானால் முன்னி? எவ்வளவு அழகான குழந்தை! எனக்கு வேண்டும் அப்படியொரு குழந்தை. குழந்தை மட்டும் யாரிடமிருந்து கிடைத்தாலும் சரிதான். எப்படியென்றாலும் சரிதான். ஆனால் எப்படி?

பகலில் ஆபீஸில் கணக்கு எழுதிக் கொண்டே இதை யோசித்துக் கொண்டிருக்கும் போது எதிர்சீட்டில் உட்கார்ந்திருந்த வில்லியம்ஸ் கண்ணில் பட்டான். இனியும் வில்லியம்ஸைப் பார்த்துப் பிரயோசனம் இல்லை. கொஞ்ச நாளுக்கு முன்னால் தெளிவாகச் சொல்லிவிட்டான்—இனிமேல என்னை சந்திக்கப் போவதில்லை என்று. அப்படிச் சந்தித்தால் அவனுடைய பெருத்த தொந்தி ஆண்ட்டி தன் ஆஸ்தியில் ஒரு காசும் கொடுக்க மாட்டாள் என்று அது மட்டுமல்ல, அந்த ஆண்ட்டியின் மகள், சிறிய இடையுடைய இவனுடைய கஸின், இவனுடன் செய்து கொண்ட தன் என்கேஜ்மெண்டைப் பிரேக் செய்துவிடுவாள் என்று. இவ்வளவு நஷ்டங்களையெல்லாம் எதிர்த்து அவன் ஏன் என்னை ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் பிக்சருக்குக் கூட்டிக் கொண்டு போக வேண்டும்? ராத்திரியை என்னுடன் கழிக்க வேண்டும்?

"உன்னுடன் கழித்த அந்தச் சுகமான நாட்களை நான் என்றைக்கும் மறக்க மாட்டேன், லில்லி. தினமும் உனக்காக உன் நன்மைக்காக நான் ஜீஸஸிடம் பிரார்த்தனை செய்கிறேன். காட் ப்ளெஸ் யூ" என்று சொல்லி என் கையை அழுத்தி மிகவும் கவலைப்படுபவனைப் போலத் தலைகுனிந்து புறப்பட்டுப்போயிருந்தான் இந்த வில்லியம்ஸ் இன்று தலை குனிந்து உட்கார்ந்து ஏதோ டிராப்ட் தயாரித்துக் கொண்டிருக்கிறான் அவன் நெற்றியின் மேல் சுருண்டு விழுந்த அலை அலையான கிராப்பைப் பார்த்துக் கொண்டே இருந்தேன் நெடுநேரம்.

வில்லியம்ஸின் இந்தச் சுருண்ட கிராப்புதானே அவன் வா என்ற போது நான் உம் என்பதற்குக் காரணமாய இருந்தது? கோவிந்தமூர்த்தியைப் போலக் காட்டுமிராண்டி அல்ல வில்லியம்ஸ். மிகவும் மென்மையான சுபாவம். மிகவும் ஜென்டில், ஆமாம் எல்லா விஷயத்திலும்...அவனைப் போலவே ஜென்டில் ஆன நீலக் கண்களும் சுருட்டை முடியும் கொண்ட ஒரு குழந்தை அவன் மூலம் எனக்குக் கிடைத்தே விடும் என்று எவ்வளவு ஆசை வளர்த்துக் கொண்டிருந்தேன். மூன்று மாதக் கஷ்டம் பயனில்லாமல் போய்விட்டது. வில்லியம்ஸின் தொடர்பு பலன் தருவதற்கு முன்னாலேயே அவன் விலகிப் போய்விட்டான். அவனுடைய கஸின், அவனுடைய ஆண்ட்டி, எல்லாவற்றையும் விட முக்கியமாக அந்த ஆண்ட்டியின் ஆஸ்தி அவனை விலக்கிக் கொண்டு போய்விட்டது.

முன்னி. முன்னியின் நினைவு என்னைத் தடுமாறச் செய்கிறது. விநய் சாலகருடன் அப்பாய்ண்ட்மெண்ட் நாளை மாலை ஐந்து மணிக்கு ஆப்பேராவில்.

**4, ஆகஸ்ட் 1958**

சங்கர கவுடர் ஏனோ அதிகக் கவலையில் இருந்தது போல் தெரிந்தது. அரை மணி நேரம் கூட நிற்கவில்லை. "ஹைபிரிட் பருப்புக்கு உரம் வாங்கலாம்ன்னு வந்தேன். அப்படியே உன்னைப் பார்த்துட்டுப் போலாம்ன்னு இந்தப் பக்கம் வந்தேன். வரேம்மா, இருட்டுவதற்குள் தேவூர் போய்ச் சேரணும். எப்படி இருக்கிறே?"

அவர் பேச்சில் மனம் செல்லவில்லை எனக்கு. அவருடைய புதிய இம்பாலாக் காரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆறு அடி உயரம், ஆறடி உயரமான விரிந்த மார்புடைய பெரிய மீசை வைத்திருக்கும் சங்கர கவுடருக்கு முதலில் இருந்த அந்த பியட்டை விட இதுவே மிகவும் பொருத்தமாக இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

காலம், துக்கம், வெய்யில் இதில் எதுவுமே பாறைகளையும மரங்களையும் தாண்டி தேவூரை அடைந்து இந்தக் கவுடரை என்றைக்குமே போய்ச் சேரவில்லையோ என்று தோன்றுகிறது. ரொம்ப நாளைக்கு முன்னால், நான் கன்னடப் பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது முதல் தடவை அப்பா அவரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து அம்மாவைக் கூவி அழைத்து, "பார், சங்கர்—என் உயிர் நண்பன் வந்திருக்கிறான், டீ போடு"—என்று சொன்னபோது அந்த உயர்ந்த மனிதர் என்னைத் தோள் மேல் வைத்து மூன்று சுற்றுச் சுற்றிக் குதித்தபோது எப்படி இருந்தாரோ இன்னும் அப்படியே இருக்கிறார். அவர் வாழ்க்கையில் என்றைக்கும் எதுவுமே மாறவில்லை. பக்கவாதத்தில் விழுந்து படுக்கையில் கிடக்கும்அந்த மனைவி, வீட்டில் அவளுக்குச் செய்யும் தினப்படிச் சேவை, நூற்றுக்கணக்கான கமிட்டிகளில் மெம்பர்ஷிப், தோட்டத்துக்குப் புதிய கிணறு, வயலுக்கு டிராக்டர், அந்த இரட்டைக் குழல் துப்பாக்கி எல்லாம் அப்படியே இருக்கின்றன. அவை களோடு இந்தக் கவுடரின் உயரம், அகலம், மீசையின் கூர்மை கூட அப்படியே இருக்கின்றன.

"உன் வாழ்க்கை சுகமாக அமைவதற்கு என் உயிரையும் கொடுக்கத் தயார்" என்று எத்தனை தடவை சொல்லவில்லை இந்தக் கவுடர்...

அப்படிப்பட்ட மனிதருக்கு என்ன கவலையோ. இன்று முதல் தடவையாக அந்தப் பரந்த நெற்றியில் சுருக்கத்தைப் பார்த்தேன். அவர் பேசாமல் உட்கார்ந்திருந்தபோது ஓடிப் போய் அவருடைய தலையை என் நெஞ்சில் அழுத்திக் கொண்டு குழந்தையை அணைத்துக் கொள்வதைப் போல் அணைத்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

புழுதியைக் கிளப்பிக் கொண்டு அந்த இம்பாலா மறைந்த பிறகு அறையை நோக்கித் திரும்பி வரும் வழியில் மறுபடியும் முன்னி—"ஆண்ட்டி சாக்லேட் கொண்டு வரவில்லையா?"

**14 ஆகஸ்ட் 1958**

எத்தனை நாட்களுக்குப் பிறகு இன்று விநய்சாலகரைச் சந்திக்கிறேன். சோகத்தில் முடியும் சினிமாவின் ஹீரோவைப் போல் தழுதழுத்த குரலில் என்னைத் திட்டி, சபித்து விட்டு அவன் புறப்பட்டுப் போய் ஆறு மாதங்கள் கழிந்திருக்கின்றன.

"உன்னைத் தேவியைப் போலப் பூஜித்து வந்தேன், லில்லி. எத்தனையோ பிறவிகளாக என் அந்தராத்மா தேடின ஆள் நீதான்னு நம்பி இருந்தேன். உன்னை விட்டா எனக்கு வாழ்க்கையே இல்லைன்னு நினைச்சிட்டிருந்தேன்"— விநய் சிவந்த கண்களோடு சொன்னான்—"நீ என் இதயத்தைக் கசக்கி எறிந்து விட்டாய். என் கனவுகளை மண்ணில் எறிந்து விட்டாய். என் வாழ்க்கையில் தீ மூட்டிவிட்டாய்..."

நான் சும்மாவே இருந்தேன். விநய் சொல்லிக் கொண் டிருந்ததில் உண்மை இருந்ததோ என்னவோ? எத்தனையோ தடவை அவன் என் காலருகில் உட்கார்ந்து என் பாதங்களை முத்தமிட்டு விட்டு—'நீயே எனக்கு எல்லாம்' என்று சொன்னதும் உண்டு. காலேஜ் விட்டதும் தினமும் வீட்டில் இரண்டு குழந்தை களுடன் வழிபார்த்துக் கொண்டிருக்கும் மனைவியிடம் திரும்பாமல் நேராக என்னைப் பார்க்க வந்ததுண்டு. எல்லாம் சரியாக நடந்து வந்தது. இன்னும் கொஞ்ச நாள் அப்படியே நடந்து மிருந்தால் அவனுடைய ஒழுக்க சிந்தனைகளையெல்லாம் படித்துப் படித்து சொட்டை

விழத் தொடங்கியிருந்த அந்தத் தலையிலிருந்து வெளியேற்றி விட்டு அவனை என் வழிக்குக் கொண்டு வர என்னால் முடிந்திருக்கும். ஆனால் அதற்குள் அவனே சொல்வது போல, நான் அவன் இதயத்தைப் பிசைந்து எறிந்து விட்டேன்.

காரணம்—டாக்டர் கோவிந்த மூர்த்தியுடன் எனக்கிருந்த நட்பைப் பற்றி நான் அவனுக்கு ஒன்றும் சொல்லவில்லை என்பதுதான்.

விநயை ஏமாற்ற வேண்டும் என்று நான் என்றைக்குமே நினைத்ததில்லை என்றாலும் அவனுக்கு நான் யாரைப் பற்றியும் சொல்லவில்லையே, ஏன்?

விநய் ஒதெல்லோவைப் போல் ஆழ்ந்த பாவனை உடையவன். அன்பு, ஆத்மா, பிறவிகளில் தொடர்ந்து வரும் உறவு முதலியவற்றைப் பற்றி அவன் லெக்சர் கொடுக்கும் போதெல்லாம் எனக்கு அது நன்றாகத் தெரிந்தது. பேசசிலேயே கேவலம் பேச்சிலேயே. அதுவும் எப்போதும் ஒன்றரை அடி தூரத்தில் உட்கார்ந்து பேசும் பேச்சிலேயே—அவனுக்கு என்னை வானத்தில மிதக்க விடும் சாமர்த்தியம் இருந்தது. இப்படிப்பட்ட விநயை சும்மாவே இழந்து விடலாமா? அவனுக்குக் கோவிந்தமூர்த்தியைப் போன்ற மெட்டீரியலிஸ்டிக் மனிதனைப் பற்றிச் சொல்வதா?

"சரி, நான் போய் வருகிறேன். நல்ல பாடம் கற்றுக் கொடுத் தாய். உன்னால் என் வாழ்க்கையில் ஏற்பட்ட இந்தக் காயம் நான் சாகும வரையில் என்னைக் கொன்று கொண்டே இருக்கும் என்பதை மறக்காதே. தப்பு என்னுடையதுதான். நானே எல்லாம் என்று நம்பியிருக்கும் மனைவியை விட்டு உன் பின்னால் வந்தேன். கடவுள் நல்ல தண்டனை கொடுத்து விட்டான்"—இதைச் சொல்லிவிட்டுத் தாவித் தாவி ஒடிப் போனான் விநய். அவனே சொர்க்கம் என்று நினைத்துக் கொண்டிருக்கும் மனைவியிடம், "நீயே எல்லாம்"— என்று என்னிடம் சொல்லும்போது மறந்து போயிருந்த அந்த மனைவியிடம்.

இன்றைக்கு எத்தனையோ நாட்களுக்குப் பிறகு அவனைச் சந்தித்தேன். "லில்லி, உன்னை என்னால் மறக்க முடியலை. நான் வாழ்க்கையில ஒரே ஒரு தடவைதான் காதல் செய்தேன். அது உன்னை. நீ எப்படி வேண்டுமானாலும் இரு. அது மாறாது" என்றான். "இதுவே உண்மையான அன்பின் லட்சணம்" என்று விளக்கமும் கொடுத்தான்.

விநய்யால் உபயோகம் உண்டென்று தோன்றுகிறது...

**14 ஆகஸ்ட் 1958**

இன்று பகலில் எவ்வளவு நிம்மதியாகத் தூக்கம் வந்தது. எத்தனையோ நாட்களாகப் பகலில் படுத்ததில்லை. இன்று செத்துப்போனதைப் போல் தூங்கினேன். ஆபீஸ் வேலை இல்லை. மேலும் ஆ!, முக்கியமாக அந்தத் தாடிக்கார பாஸ் பற்றிக் கவலை இல்லை.

நான் மன்னிப்புக் கேட்பேன்; அவன் சொன்னபடியே கேட்பேன் என்று நினைத திருந்தான் அந்த சாயபு. "இதோ பார் லில்லி, உன்னை வேலையிலிருந்து டிஸ்மிஸ் செய்யும் ஆர்டர் வந்திருக்கிறது, ஜெனரல் மேனேஜரிடமிருந்து" என்றான், என்னையே பார்த்தபடி.

எனக்குத் தெரியாதா அதன் கதை? யார் என் பொறுப்பற்ற தன்மை பற்றி, நடத்தையைப் பற்றிப் புகார் கொடுத்தார்கள், ஏன் கொடுத்தார்கள் என்பதையெல்லாம் புஷ்பா குல்கர்னி சொல்லியிருந்தாள். இந்தப் பாஸின் பி.ஏ. அல்லவா அவள்?

"யோசித்துப் பார் லில்லி. உன் வேலையை தக்க வைக் கிறேன் வேண்டுமானால். அல்லா கே கஸம்"—எனக்கு வேண்டி யிருக்கவில்லை. இந்தப் பாஸின் டி.பி மனைவி ஊருக்குப் போன போதெல்லாம் அவன் படுக்கையைப் பங்கிட்டுக் கொள்வது. அதுவும் அதனால் எந்தப் பயனும் இல்லாதபோது, வெறும் இந்த வேலைக்காக அவனுடைய குச்சித் தாடியையும் அவனுடைய 'அல்லா கே கஸத்'தையும் பொறுத்துக் கொள்வது எனக்கு வேண்டியிருக்கவில்லை.

வீட்டுக்கு வந்தபோது உடம்பும் மனமும் சுமையாக இருந்தது. ஆழ்ந்த தூக்கம்... கனவில் யாரோ என்னைக் கெட்டியாக அணைத்துக் கொண்டது போல. 'நான் உன்னுடன் இருக்கிறேன் என்றைக்கும் உன்னைக் கை விட மாட்டேன். உனக்கு வேண்டிய தெல்லாம் கொடுக்கிறேன். ஆமாம்.குழந்தை கூட. எத்தனை வேண்டும் சொல்? ஒன்று? நான்கு? என்று சொன்னதுபோல.

யாருடையது அந்த அழுத்தமான அணைப்பு? அந்த நீண்ட தோள்கள்?

எவ்வளவு நேரம் கண்டேனோ இதே கனவை! என்னைச் சுற்றிலும் சின்னச் சின்னக் குழந்தைகள். எவ்வளவு அழகான குழந்தைகள்... எல்லாம் என்னுடையவை. எல்லாம் என்னு டையவை. எல்லாம் என்னுடையவை.

அவற்றுக்கு இடையில் அந்தக் குழந்தைகளை எனக்குக் கொடுத்த அந்த விரிந்த மார்புடைய ஆள்.

யார்?

தடக்கென்று விழிப்பு வந்தது.

**20 ஆகஸ்ட் 1958**

சீ, விநய் சாலகர் ஒரு பேடி. கொஞ்சம் கூட உபயோகம் இல்லாதவன். அவனுடைய பிலாஸபி அவனுடைய பிளேட்டோனிக் லவ், அவனுடைய வாதம் எல்லாமே போகஸ்.

எவ்வளவு ஆசையைச் சுமந்து கொண்டு போனேன அவனிடம்! என்மேல் தனக்கிருக்கும் ஆசையைப் பற்றி இவ்வளவெல்லாம் பேசுகிறான், எனக்கொரு சின்ன உபகாரம் செய்ய முடியவில்லை, அவனால். எப்படிப் பயந்து துள்ளினான் என் பேச்சைக் கேட்டு, பாம்பை மிதித்தவர்கள் போல!

"சீ, லில்லி! இப்படிப்பட்ட யோசனைகள் கனவிலும் வரக் கூடாது. உனக்கும் எனக்கும் இருப்பது ஆன்ம உறவு. உடம்பின் மோகத்துக்கு ஆளாகி நாம் நம்முடைய ஆன்ம உறவைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. உடம்பின் மோகம் கண நேரம்தான். அந்தக் கண நேர மோகத்துக்காக நிரந்தரமான ஒன்றை நாம் கெடுத்துக் கொள்ளக் கூடாது..."என்றெல்லாம் லெக்சர் கொடுத்தான்.

விநய் என்னை என்றைக்குமே புரிந்து கொள்ள மாட்டான். என்றைக்கும், என் றைக்கும் அவனால் முடியாது... 'கடவுள் நம் இருவரையும் இந்த ஜென்மத்தில் ஏனோ சேர்த்து வைக்கவில்லை, லில்லி. ஒருவேளை தூர இருந்து, துக்கம் அனுபவித்து இன்னும் கெட்டியாகட்டும் நம்முடைய அன்பு' என்று அவன் நினைத்திருக்கலாம். நான் அவன் விருப்பத்திற்கு எதிராக நடக்க மாட்டேன். நான் தூரத்திலேயே இருக் கிறேன். நம்முயை பிளேட்டோனிக் லவ் இப்படியே இருக்கட்டும், வளரட்டும். அடுத்த ஜென்மத்தில்...

**24 ஆகஸ்ட் 1958**

மாலை ஐந்து மணி.

எல்லாம் தயாராக இருக்கிறது. என் துணிகள், புத்தகங்கள் நிறைந்த சூட்கேஸ். அறையின் வாடகை, பால்காரன் பாக்கி, முன்னிக்குக் கடைசித் தடவையாகச் சாக்லேட்—எல்லாம் கொடுத்தாகிவிட்டது. வெளியே இருப்பது இந்த டைரி ஒன்றுதான்.

காலையில் வாசலில் நின்றிருந்தபோது வேகமாக வந்த சங்கர கவுடரின் இம்பாலா டக்கென்று நின்றது.

"லீலா.."

நான் பேசாமல் இருந்தேன்.

"லீலா, உன் கடிதம் வந்தது"

அப்போதும் நான் சும்மா நின்றிருந்தேன்.

"கொஞ்சம் மார்க்கெட்டில் வேலை இருக்குது. போய முடிச்சிட்டு வந்துடறேன். சாயங்காலம் ஐந்து மணி சுமாருக்கு தயாராக இரு. போகலாம்."

கார் வந்த வேகத்திலேயே திரும்பிப்போய்விட்டது.

எனக்குத் தெரியும்.

என்றைக்கும் எதையும் யாருக்கும் இல்லையென்று சொன்னவரே அல்ல அவர். என் உடம்பு காற்றில் மிதப்பது போல லேசாக இருந்தது. கண் நிறைய முந்தா நாள் பகலில் கண்ட கனவு.

ஓ, ஹார்ன் ..

# சம்பந்தம்

## ஸ்ரீகிருஷ்ண ஆலனஹள்ளி

தலை வெடித்துச் சிதறும் வகையில் காயும் வெயிலில் நடந்து வந்து அறையில் உட்கார்ந்த போது சிறிது நிம்மதியாக இருந்தது. ஏப்ரல் மாதத்துக் கடும் வெயிலில் அனலுக்குத் தடையாக தளிர்த்து நின்று என் அறையின் கூரையின் மேல் குளிர்ந்த நிழலைப் பரப்பும் பெரிய சண்பக மரம் அசையாமல் இருந்தது. அறையின் ஜன்னல் களையெல்லாம் திறந்தேன். காற்று வீசவில்லை. வேர்த்து உடம்பில் ஒட்டிக் கொண்டு ஈரமாயிருந்த ஆடைகளை அவிழ்த்தேன். சிமெண்டுத் தரையில் ஹாயாகக் கொஞ்சம் உருண்டேன். உடம்பு குளிர்ந்தாலும் உள்ளே கொதிப்பு. ஒருவகையான சங்கடம். குளியலறைக்குப் போய்க் குழாயைத் திறந்து அதன் கீழே உட்கார்ந்தேன். போதும் என்கிற வரையில் உட்கார்ந்தேன். வந்து படுத்து சிகரெட் பற்ற வைத்தேன். பரீட்சைக்கு ஒரு மாதம்தான் இருக்கிறது என்னும் நினைப்புக் குத்தியது. மேஜை மேலிருந்த "ப்ராப்ளெம்ஸ் ஆஃப் பிலாஸபி"யைத் திறந்து நான்கு பக்கங்கள் திருப் பினேன். போரடித்தது. தூக்கி எறிந்தேன். இன்று ஏன் இப்படி? சுருள் சுருளாகப் புகை விட்டேன். முடிந்தது. இன்னொன்றைப் பற்ற வைத்தேன். புகையை உமிழ்ந்தேன். உள்ளே நெருப்பு அணையவில்லை. கூஜாவிலிருந்த தண்ணீரைக் கடகட வென்று குடித்தேன். குளிர்ச்சி ஏற்படவில்லை. ஏன் இப்படி? வெயிலின் கொதிப்பா? லலிதாவை எதிர்பாராமல் சந்தித்ததா? எட்டு வருஷங்களுக்கு அப்புறம் திடீரென்று கண் முன்னால் வந்து நின்ற லலிதா—இப்படி மனம் தடுமாறுவதற்கு காரணமா? சிந்தித்தேன்.

இவ்வளவுக்கும் லலிதா எனக்கு என்ன ஆக வேண்டும்? சிறுவயதில் விளையாடிப் படித்து வளர்ந்திருந்தாலும் ஒரு நாளும் அவள் வீட்டு முற்றத்தைத் தாண்டி நடு வீட்டுக்குள் போனதில்லை. என் தாத்தா பாட்டியும் கூட அவள் வீட்டு முற்றத்தைக் கடந்து அடியிட்டதாக ஞாபகம் இல்லை. சுற்றுமுற்றும் மற்றவர்கள் வீடுகளே இருந் தாலும் ஊருக்கு ஒரே பிராமணர் வீடான லலிதா அப்பாவின் பிராமணத் துவத்துக்குக் கொஞ்சமும் குந்தகம் ஏற் படவில்லை. காட்டுக்குப் போன மாடு மேய்ந்து விட்டு இருட்டிய பிறகும் வீட்டுக்கு வராவிட்டால் தாத்தா என்னை அழைத்து லலிதாவின் வீட்டுக்குப் போய் அவள் அப்பாவிடம் 'வாய்க்கட்டு' செய்து கொண்டு வருவதற்கு அனுப்புவார். அவர் வாய்க்கட்டு போட்டுவிட்டால் தப்பிப் போன எங்கள் மாட்டைத் தன் வீட்டுக்கு எதிரிலே வந்து நின்றாலும் புலியோ சிறுத்தையோ தின்னாது. மாடு வீட்டுக்கு வந்த பிறகு அவர் கட்டை அவிழ்த்து விடுவாராம். இதோடு எங்கள் வீட்டுக் குழந்தைகளுக்குக் காய்ச்சல் வந்தால் விபூதி மந்திரித்துக் கொடுப்பதும் அவருடைய வேலை. நான் போனபோது அவர் குளித்துவிட்டு வந்து

சிவப்புப் பட்டு உடுத்தி நடு வீட்டுக்குப் போய் மணி அடித்து மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தார். தன் தந்தை வாய்க்கட்டு போடும்போது கடவுளிடம் பேசுவார் என்று லலிதா சொல்லியிருந்தாள். எப்போதாவது ஒரு தடவை திருட்டுத்தனமாக அதைப் பார்த்து விட வேண்டும் என்னம் ஆர்வம் என்னைத் தின்று கொண்டிருந்தது. மாரியம்மன் திருவிழாவின்போது எங்கள் கீழ்விட்டுச் சித்தே கவுடன் மீது தெய்வம் வந்தது என்று எல்லாரும் தூபம் போடுவார்கள். கண் சிவந்து அவன், கொளுத்திக் கொடுத்த கற்பூரக் கட்டிகளை வாழைப்பழம் விழுங்குவது போலக் 'களக்' கென்று விழுங்கி விடுவான். எனக்கு ஆச்சர்யம். லலிதா மட்டும் "உங்கள் சித்தே கவுடன் மீது வந்தது தெய்வம் அல்ல. அது ஒரு காற்றாம். தெய்வம் கவுட சாதிக்காரன் மேல் வராதாம். எங்கள் அப்பா சொன்னார்" என்று சொல்லிக் கொண்டிருப்பாள். அப்படியானால் லலிதா வீட்டுத் தெய்வம் எப்படி இருக்கும்? பார்க்கவே வேண்டும். லலிதாவின் வீட்டில் அதிகம் பேர் இல்லை. அவளுடைய சித்தி, அம்மா, அப்பா மற்றும் எப்போதும் முணுமுணுத்துக் கொண் டிருக்கும் ஒரு பாட்டி. ஒரு நாள் விபூதி மந்திரித்துக் கொண்டு வருவதற்காகப் போயிருந்தபோது அந்தப் பாட்டி, லலிதா யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. லலிதாவின் அப்பா உள்ளே பூஜை செய்வ தற்காகப் போனபோது நான் மெதுவாக எழுந்து நின்றேன். மெதுவாக அடி எடுத்து வைத்து இன்றைக்கு எப்படி யாவது இவர்கள் வீட்டுத் தெய்வத்தைப் பார்த்துவிட வேண்டும் என்று வாசற்படியில் காலிட்டபோதே எங்கிருந்தோ பாட்டி "ஐயோ, கீழ் ஜாதி முண்டமே, உள்ளே வந்துட்டயே..." என்று கத்திக் கொண்டே என் பின்னால் வந்து என் தோளில் விறகுச் சுள்ளியால் நன்றாக அடித்தாள். நான் அழுதுகொண்டே முற்றத்தைத் தாண்டி வந்தேன். வீட்டாரெல்லாம் கூடிவிட்டாாகள். எல்லார் முகங் களையும் பார்த்தேன். என்னைக் குற்றவாளியைப் போல் பார்த்துக் கொண்டிருந் தார்கள். வெட்கம், பயம், தடதட வென்ற நடுங்கினேன். லலிதா ஒடிவந்தவள் என் நிலையைக் கண்டு இரக்கப்படுவதைப் போலப் பார்த்தாள். அவளுடைய தாய் "போகட்டும் விடு? பாவம். அறியாத பையன்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே கிழவி "உங்களுக்கு எல்லாம் கட்டுத் திட்டமே இல்லை. நாளைக்கு உன் தாத்தாவிடம் சொல்லிச் சரிப்படுத்துறேன்" என்றதும் எனக்கு முழங்கால்கள் 'இற்று விட்டதைப் போல ஆயிற்று. முகத்தைக் தூக்கிக் கொண்டு புறப் பட்டேன். லலிதா வின் அப்பா 'நில்லுடா' என்று விபூதியைக் கொண்டு வந்து முகத்தில் போட்டார். தூக்கிக் கொண்ட முகத்தைத் திருப்பிக் கொண்டு அவர்கள் வீட்டுப் படியை விட்டு இறங்கும்போது திரும்பிப் பார்த்தேன். என் பின்னாலேயே வந்து நின்ற லலிதா என் பாட்டைப் பார்த்துத் தானும் அழுத முகத்துடன் நின்று கொண்டிருந்தாள். அவள் கண்ணிலும் நீர் நிறைந்திருந்தது.

அதே முகத்தைத்தான் இன்று காலையில் ஆஸ்பத்திரியில் பார்த்தது. கழுத்தில் பெரியதாகிக் கொண்டு வந்த படையை டாக்டரிடம் காட்டுவதற்காகப் போன போது லலிதா எதிர்ப்பட்டாள். முதல் பார்வைக்கு அடையாளமே தெரியவில்லை. கலவரமடைந்த என் முன்னால் நின்று "நான்தான் லலிதா, ஞாபகமில்லையா" என்ற போது, என் தலையில் அடித்தது போல் இருந்தது. மூன்று வயதான தன் மகளை இடுப்பில் சுமந்து நின்ற லலிதா மாறியிருந்தாள். என் சிறுவயதுச் சிநேகிதி- திருத்தமாகச் செய்த சிலையைப் போல் இருந்த லலிதா. எவ்வளவு கெட்ட மறதி. எட்டே எட்டு வருஷங்கள் எங்கள் இருவரின் நடுவே எவ்வளவு இடைவெளி?

லலிதாவைக் கடைசியாகப் பார்த்தது எட்டு வருஷங்களுக்கு முன்னால், எங்கள் வீட்டில் தானம் கொடுத்துப் பூசை செய்த அந்த இரவு இன்றும் என் கண்ணில் தெரிகிறது. எங்கள் வீட்டுக்கு அன்று வேண்டியவர்களெல்லாம் வந்திருந்தார்கள். மைசூரிலிருந்து நானும் போயிருந்தேன். லலிதாவின் அப்பா, அம்மா, பாட்டி கூட வந்து உட்கார்ந்திருந்தார்கள். லலிதா மாத்திரம் இல்லை. எங்கள் சிறுவயதுப் படிப்பு முடிந்து நான் மைசூருக்கு வந்து, லலிதா வீட்டிலேயே இருந்தாலும், நான் அவ்வப்போது ஊருக்குப் போனபோதெல்லாம் ஏதாவது ஒருசாக்கைக் வைத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்து என்னுடன் பேசிவிட்டுப் போவாள். இன்று ஏன் வரவில்லை? அவர்கள் வீட்டுக்குப் போனேன். தோட்டத்துக் கதவைத் தள்ளி 'லலிதா' என்றேன். லலிதா கூடத்தில் சின்னத் தம்பியின் தொட்டிலை ஆட்டிக் கொண்டிருந்ததை நிறுத்தி 'யாரது?' என்றாள்.

ஏற்றி வைத்திருந்த அகல்விளக்கின் ஒளியில், அதுதான் முதல் தடவை லலிதா புடவை உடுத்திக் கொண்டு நின்றதை நான் பார்த்தது. மிகவும் பெரிய பெண்ணாகி விட்டிருந்தாள். அவளிடம் என்னென்னவோ சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். லலிதா முன்பு போல என்னைக் கண்டதும் தாவி வந்து பேச்சுக் கொடுக்காமல் அமைதியாக நின்றிருந்தாள். அருகில் போய் "எங்க வீட்டுக்கு ஏன் வரலை, லலிதா?" என்றேன்.

லலிதா, "இனிமேல் எங்கயும் போகக் கூடாதாம். எனக்குக் கல்யாணம் செய்யப் போறாங்களாம்" என்றாள். இன்னும் தொடர்ந்து "அதனால் யாருடனும் வீட்டுக்கு வந்தாலும்கூட பேசக் கூடாதாம்" என்றாள். அவள் பேச்சின் பொருள் புரியவில்லை. புறப்பட்டேன். இன்னொரு தடவை பார்க்க வேண்டும் போல் இருந்தது. லலிதா மிகவும் அழகாகத் தெரிந்தாள். பெரிய கண் களால் மொண்டு குடிப்பதைப் போலப் பார்த்தாள். நல்ல வளர்ச்சி பெற்றிருந்த அவள், "அப்பாவும் அம்மாவும் வந்தா" என்று சொல்லி, நான் சிரித்துவிட்டு வெளியே வந்ததும் கதவைச் சாத்தி உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள். வீட்டுக்கு வந்தேன். கதை கேட்டபடியே தூங்கி விட்டேன். காலையில் மைசூருக்கு வந்து விட்டேன். கொஞ்ச நாளில் என் மாமாவின் மகன் வந்திருந்தபோது லலிதாவுக்குக் கல்யாணம் ஆன செய்தியைச் சொன்னான். அவன் அதைச் சொன்னதும் என் உள்ளே இருந்து ஏதோ பிரிந்து போய் விட்டதைப் போல இருந்தது.

லலிதாவுடன் ஆஸ்பத்திரியின் முன்னால் பெரிய மரங்களின் கீழ் இருந்த கல் பலகையின் மேல் உட்கார்ந்தேன். லலிதா வின் கண்ணைச் சுற்றிலும் கோடுகள். ஒளி இழந்த முகம். மகிழ்ச்சி ததும்பிக் கொண்டிருந்த லலிதா உலர்ந்து போயிருந்தாள். பக்கத்தில் மகளை உட்கார்த்தி வைத்து 'இவள் என் மூன்றாவது மகள்' என்றாள். 'இவளை அடுத்து ஒரு குழந்தை இருக்கிறது' என்றாள். கணக்குப் போட்டேன். 'இன்னொரு ஆண் குழந்தை பிறந்து செத்துவிட்டது' என்றாள். திடுக்கிட்டேன். குறிப்பாகத் தன் கதையைச் சொன்னாள். நெருக்கத்தில் பார்த்தேன். அன்றைக்குக் கடைசியாக அவள் வீட்டுக் கூடத்தில் பார்த்த புடவை உடுத்தி நின்ற அழகிய உடம்பு கடித்துத் துப்பிய கரும்புச் சக்கையைப் போல மெலிந்து இருந்தது. கிழிசல் புடவை. குழந்தைக்கும் கிழிசல் பாவாடை, சட்டை. மிகவும் வருத்தமாக இருந்தது. எட்டே எட்டு வருடங்களில் அவளுடைய வாழ்வின் வசந்தம் முடிந்து போய்விட்டது. அவள் வயதில் ஆயிரக்கணக்கான பெண்கள் இன்னும் கல்யாணம் ஆகாமல் சுகமான

கனவுகளின் இருப்பிடமான கல்லூரிகளில் என்னோடு படிக்கவில்லையா? லலிதா எவ்வளவு சீக்கிரம் குடும்பப் பெண்ணாகிவிட்டாள்? குமாஸ்தாவாகி இருந்த கணவனுடன், மாற்றல் கிடைத்த இடத்திலெல்லாம் அடுப்பை மூட்டி, கருதரித்து, பெற்ற பிறகு மறுபடியும் வீடு அமைத்து, கருதரித்து, பிள்ளை பெறும் லலிதா. லலிதா மீண்டும் மீண்டும் ஆழத்தில் இறங்கிக் கொண்டிருக்கிறாள்.

லலிதாவைப் போலவே அழகாய் இருந்த, அதே போல் வாடியிருந்த மகளின் பாவாடையை இழுத்து விட்டு, 'பாருங்கள், ஒரு வாரத்துக்கு முன்னால் இவள் எங்கேயோ விளையாடிக் கொண்டிருந்தப்போ நாய் கடிச்சிருக்குது. அது வெறி பிடிச்ச நாயோ என்னமோன்னு பயம்' என்றாள். கடித்த இடம் வீங்கி யிருந்தது. 'இன்றைக்கும் ஊசி போடுவாங்க' என்ற அந்தப் பெண்ணின் கண்ணில் நீர் நிரம்பி இருந்தது.

"டாக்டர் இன்னும்ரெண்டு நாள் பார்க்கலாம், அப்புறம் பெங்களூர் போக வேண்டி வரும் என்று சொல்லியிருக்கார்" என்றாள். "இப்போதெல்லாம் நாய் கடிப்பது பெரிய விஷயம் அல்ல. சரியாகிவிடும்" என்றேன். "எல்லாம் என் தலையெழுத்து" என்று வேதாந்தம் பேசினாள். அவளோடு நானும் போய் டாக்டரை விசாரித்தேன். அவர் "வெறி நாயாகவே தெரிகிறது. பெண்ணின் பேச்சில் மாற்றம் ஏதும் தெரியவில்லை, பார்க்கலாம்" என்றார்.

வெளியே வந்து லலிதா பிடிவாதம் கேட்காமல் வண்டி அமர்த்திக் கொடுத்தேன். நடந்தே போகிறேன் என்ற லலிதாவைப் பார்த்தேன். இன்ஜெக்ஷன் நோவுக்கு விசும்பிக் கொண்டிருந்த குழந்தையைத் தோள் மேல் போட்டிருந்தாள். வண்டியில் ஏறி உட்கார்ந்த பிறகு சாமுண்டிபுரத்திலிருந்த வாடகை வீட்டுக்கு அடையாளம் சொன்னாள். ஒய்வு இருக்கும்போது வாருங்கள் என்றாள். அவள் குழந்தைக்கு எதுவும் வாங்கித் தரவில்லையே என்று பையிலிருந்து பணத்தை எடுத்து அந்தக் குழந்தையின் மடியில் வைத்து, "குழந்தைகளுக்கு ஏதாவது சாப்பிடுவதற்கு வாங்கிக் கொண்டு போ லலிதா" என்றேன். லலிதா வேண்டாம், வேண்டாம் என்றாலும் நான் ஒப்புக் கொள்ளவில்லை. "நாளைக்கு இங்கேயே வந்து பார்க்கிறேன் லலிதா" என்று சொன்னனே. லலிதா என் பக்கமே பார்த்துக் கொண்டிருந்தாள். வண்டிக்காரன் குதிரையை ஒட்டினான். தளர்ந்த நடையில் அறைக்கு வந்து சேர்ந்தேன். நாய் கடித்த வலியிலும், ஏழ்மையின் பிடியிலும் துவண்டிருந்த குழந்தையை ஜீவனில்லாத லலிதா தூக்கிக் கொண்டு, அதுவும் அவ்வளவு தூரம் வெறும் காலில் இந்தப் பதை பதைக்கும் வெயிலில் எப்படிப் போயிருப்பாள்— என்று யோசித்தேன். குடலில் பிசைவது போலிருந்தது.

கட்டிலின் மேல் மல்லாந்து படுத்து மறுபடியும் சிந்தித்தேன். இவ்வளவுக்கும் எனக்கும் லலிதாவுக்கும் என்ன சம்பந்தம்? எதற்காக நான் இவ்வளவு கவலைப்பட வேண்டும்? ஏன் இப்படிச் சில சமயங்களில் உணர்ச்சி வயப்படுகிறேன்? லலிதாவைக் காலையில் சந்தித்தது முதல் பலவகை உணர்ச்சிகள் என்னை அலைக்கழிக்கின்றன. வெளியே வெயிலின் வேகம் கொஞ்சம் குறைந்தது போல் இருந்தது. காற்று வீசத் தொடங்கியது. கொஞ்சம் நிம்மதி. இமைகள் கனத்துக் கண்ணை மூடினேன். சிறு குட்டித் தூக்கம். தூக்கத்திலெல்லாம் லலிதா, அவளுடைய மகள், வெறி நாய்—இதே கனவுகள்.

***

அடுத்த நாள் காலையில் ஏதோ வேலை காரணமாக ஆஸ்பத்திரிக்குப் போக முடியவில்லை. லலிதாவிடம் வந்து பார்ப்பதாகச் சொல்லியிருந்தேன். என்ன நினைத்துக் கொள்வாளோ? மாலையில் வாக்கிங் போவதற்குப் பதில் அவள் வீட்டைத் தேடிக் கொண்டு போய் வந்தால் ஆயிற்று என்று தீர்மானித்தேன்.

சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்து அறையின் கதவைத் திறந்தேன். மாலை ஆகி இருந்தது. சம்பங்கி மரத்தின் மேல் பலவகைப் பறவைகள் கத்திக் கொண் டிருந்தன. எதிரில் சின்னஞ் சிறு குழந்தைகள் கண்ணைப் பறிக்கும் வண்ணத்தில் உடுத்திக் கொண்டு கும்மாளமிட்டன. முகம் கழுவிக் கொண்டு புறப்பட்டேன். வழி நெடுகிலும் மனத்தில் லலிதாவின் கணவனின் காணாத உருவத்தைப் பற்றி ஏதேதோ கற்பனைகள் தோன்றின. அங்குமிங்கும் சுற்றி சாமுண்டிபுரத்து அந்த அழுக்குச் சந்தில் லலிதாவின் வீட்டையும் கண்டுபிடித்தேன்.

நாலைந்து வீடுகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருந்த லைனில் நுழைந் தேன். அங்கே மூலையில் இருந்த குழாயின் அருகில் நாலைந்து பெண்கள் குடங் களைப் பிடித்து நின்றிருந்தார்கள். எல்லாருடைய பார்வையும் என்பக்கம் திரும் பியது. என்னைப் பார்த்ததும் லலிதா குடத்தை அங்கிருந்த கல்லின் மேல் வைத்து விட்டு "வாங்க வாங்க" என்ற ஒரு சந்து வழியில் இரண்டே அறைகள் இருந்த வீட்டுக்குள் அழைத்துக் கொண்டு போனாள். சமையல் அறை ஒன்று. குடும்பம் முழு வதும் உட்காரும், படுக்கும், சாமான்கள் நிறைந்த அறை மற்றொன்று. சிதறிக் கிடந்த வீட்டுக்குள் காலிட்டதும் லலிதாவின் ரத்தத் துணுக்கள் நான்கும் கண்ணை விரித்துப் பார்க்கத் தொடங்கின. இந்தக் குழந்தைகளுக்குத் தின்பதற்கு ஏதாவது வாங்கி வந்திருந்தால் நன்றாய் இருந்திருக்குமே என்று நினைத்தேன். நின்று கொண்டே இருந்த என்னருகில் மடித்து வைத்த பழைய நாற்காலி ஒன்றைப் பிரித்துப் போட்டு 'உட்காருங்கள்' என்று சொல்லி லலிதா குழாய்ப்பக்கம் போனாள். வீட்டையெல்லாம் நோட்டம் விட்டேன். நான்கு மூலைகளிலும் வறுமை இடம் பிடித்திருந்தது.

நீர் நிரம்பிய குடத்தைச் சமையலறையில் வைத்து விட்டு வந்த லலிதா "வீடெல்லாம் ஒரே அழுக்கு. எவ்வளவு சுத்தமா வச்சிருந்தாலும் குழந்தைகள் அழுக்காக்கிடும்" என்றாள். சிறிய ஜன்ன லுடன் மூச்சு முட்டுவது போல் இருந்த இந்தக் கூட்டில் எப்படி ஆறு ஜீவன்கள் மூச்சு விடுகின்றன என்று யோசித்தேன். வெளியே வெளிச்சம் இருந் தாலும் உள்ளே இருள் நிரம்பி இருந்தது. லலிதா விளக்கைப்போட்டுவிட்டு சமைய லறைக்குப் போனாள். நான் 'காப்பி கீப்பி ஒன்னும் வேணாம், லலிதா' என்றேன். லலிதா கேட்கவில்லை. கொஞ்ச நேரத்தில் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். அவள் திருப்திக்காகக் குடித்தேன். அவள் நாய்க்கடி பட்ட குழந்தையின் அருகில் உட்கார்ந்தபடி "அவரும் வருகிற நேரம்தான் இது" என்றாள். "காலையில ஆஸ்பத் திரிக்கு வந்து பார்க்க முடியலை, லலிதா" என்றேன். "டாக்டர் எதையும் நாளைக்குத் திட்டவட்டமாகச் சொல்றேன்னு சொல்லி இருக்கார்" என்று சொன்னாள். கிழிந்த பாயின் மேல் படுத்திருந்த நாய்க்கடி பட்ட குழந்தை நேற்று இருந்ததைவிட அதிகம் வாடியிருந்தது. அதைவிட கொஞ்சம் பெரிய பெண் கைக் குழந்தையை மடியில் இருத்திக் கொண்டு எங்கள் பேச்சை வாய் திறந்தபடி கேட்டுக் கொண்டு உட்கார்ந் திருந்தது. இன்னொரு பையன் வாய்ப்பாட்டை மனப்பாடம் செய்வதை நிறுத்தி, உட்கார்ந்திருந்தான்.

லலிதாவிடம் அவள் தந்தையைப் பற்றிக் கேட்டேன். கணவனுக்கும் தன்

தந்தைக்கும் ஏதோ ஒரு விஷயத்தில் நடந்த சண்டை; "நீ செத்தாலும் அவளை உன் வீட்டு வாயிற்படியை மிதிக்க விட மாட்டேன்" என்று அப்பாவிடம் தன் கணவன் சொல்லிவிட்டு வந்தது, இப்படிப் பல விஷயங்களைச் சொன்னாள்.

அவள் பேச்சிலிருந்து அவள் கணவனின் சிறுமை அறிமுகமாகியது.

கொஞ்ச நேரத்திலேயே அவள் கணவன் வந்தான். முள் முகம். தொளதொள வென்று பேண்ட்டைத் தோல் பெல்ட்டினால் பிடித்துக் கட்டியிருந்தான். அவன் வந்ததும் எழுந்து நின்ற லலிதா என்னை அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தாள். அவன் லலிதாவைப் போலவோ, அவள் குழந்தைகளைப் போலவோ வற்றி இராமல் கட்டு மஸ்த்தாக இருந்தான். அலட்சியமாக என்னைப் பார்த்து இரண்டொரு வார்த்தை பேசி, பேண்ட்டையும் சட்டையும் அவிழ்த்து ஆணியில், மாட்டி, என் பக்கம் திரும்பாமலே ஒரு டவலைத் தோள் மேல் போட்டுக் கொண்டு வெளியே பாத்ரூம் போனான்.

"போய் வரேன், லலிதா, நாளை ஆஸ்பத்திரிக்கு வருகிறேன்" என்றேன். "தப்பாக நினைக்காதீங்க. அவர் போக்கே அப்படித்தான்" என்றாள். பாவமாக இருந்தது. அவன் திரும்பி வந்தான். முடி நிரம்பிய தொடைகளைத் துடைத்துக் கொண்டே. "எங்க வீடு இங்கே இருக்குதுன்னு எப்படித் தெரிஞ்சது?" என்று கேட்டான். நேற்று ஆஸ்பத்திரியில் லலிதாவைப் பார்த்ததையும் சொன்னதையும் சொன்னேன்.

சமையலறைக்குள் போனான். லலிதாவை ஏதோ திட்டினான். எனக்குத் தெளி வாகக் கேட்கவில்லை. எழுந்து நின்றேன். அவன் வெளியே வந்து முரட்டுக் குரலில் "இவள் அப்பனுக்கு நாங்க இங்க இருக்கிறோம்னு சொல்லாதீங்க" என்றான். "ஆகட்டும்" என்றேன். லலிதா அவனுக்குப் பின்னால் தொய்ந்த முகத் துடன் நின்றிருந்தாள். வருகிறேன் என்ற மட்டும் சொல்லி விட்டுச் சரசரவென்று நடந்தேன்.

* * *

டாக்டர் "இன்னும் இரண்டு நாட்களுக்குள் பெங்களூருக்கு அழைத்துக் கொண்டு போங்கள், இல்லாட்டா கஷ்டம்" என்றார்.லலிதா அழுத முகத்துடன் நின்றிருந்தாள். நான் 'ஆகட்டும், சார்' என்றேன். லலிதாவை, "வெளியே கல் பெஞ்சின் மேல் கொஞ்ச நேரம் உட்கார்ந்திரு, வந்து விடுகிறேன்" என்று சொல்லி, எனக்கு மிகவும் நெருங்கிய டாக்டர் ஒருவரைப் பார்க்கப் போனேன். அவர் கிடைத்தார். அவருக்கு விஷ யத்தைச் சொன்னேன். அவருக்குத் தொந்தரவாக இருந்தாலும் செய்து கொண் டிருந்த வேலையை விட்டு விட்டு வந்து ஆர்.எம்.ஒ.விடமிருந்து ஒரு கடிதம் எழுதி வாங்கிக் கொடுத்தார். அந்தக் கடிதத்தை லலிதாவிடம் கொடுத்து "இன்றைக்கே சாயங்காலமே உன் புருஷன்கூட பெங்களூருக்குப்போய் இந்தக் குழந்தையை அட்மிட் செஞ்சிடு. இந்த கடிதத்தப் பார்த்ததும் அவுங்க அக்கறையோடு கவனிப் பாங்க" என்றேன். லலிதா பேசவில்லை.

இன்ஜெக்ஷன் போட்ட வலியில் துடித்துக் கொண்டு ஜீவனில்லாமல் கிடந்த குழந் தையைத் தோள் மேல் போட்டுக் கொண்டு லலிதா ஆஸ்பத்திரியின் படிகளில் இறங்குவதற்கே கஷ்டப்பட்டாள். நான் அந்தக் குழந்தையை வாங்கிக் கொண்டு 'மெல்ல இறங்கு,லலிதா' என்றேன். லலிதா மெல்ல இறங்கி சோர்ந்து நின்றாள். "ஏதாவது கூல்டிரிங்ஸ் கொஞ்சம் குடிச்சிட்டுப் போகலாம், வா" என்றேன். அவள் சம்மதிக்கவில்லை. "வீட்டில குழந்தைங்க கலாட்டா செஞ்சிட்டிருப்பாங்க" என்று

சொல்லி என்னிடமிருந்து மகளை வாங்கிக் கொண்டாள். "இங்கயே இரு, லலிதா, வண்டி கொண்டு வறேன்" என்று புறப்பட்டேன். 'வேண்டாம்' என்று தடுத்து விட்டாள் அவள். எப்படிப்பட்ட கஷ்டத்திலும் அவ்வளவு சுயகௌரவம்.கெட்ட கணவனாக இருந் தாலும் அவன் மேல் கொஞ்சம் கூடக் கோபம் கொள்ளாத அன்பு.

வண்டியில் ஏறி உட்கார்ந்த லலிதா நேற்றுப் போல் "வீட்டுக் பக்கம் வாங்க" என்று அழைக்கவில்லை. நானே "மூணுநாலு நாள் விட்டு வறேன். அதற்குள் சேர்த்து விடுவாய் அல்லவா?" என்றேன்.

என்ன சொல்ல நினைத்தாளோ சொல்ல முடியாமல் சங்கடப் பட்டுக் கொண்டு என்பக்கம் பார்த்தாள். பொங்கி வந்த துக்கத்தையும் கையால் ஆகாத நிலைமையும் அவள் கண்களில் அடக்கி வைத்ததைப் போல் இருந்தது. வண்டி முன்னால் போய்க் கொண்டே இருந்தது.

நான் நின்று கொண்டே இருந்தேன். என் கண்கள் ஈரத்தோடு வண்டி போன திசையையே பார்த்துக் கொண்டிருந்தன. மனத்தில் சுமை ஏறியது.

* * *

காலேஜுக்கு முன்னால் இருந்த பார்க்கில் உட்கார்ந்தேன். செடி கொடிகள் தளிர்த்து, பச்சை சிவப்பில் உடம்பைக் கழுவி அழகாய் இருந்தன. நிலம் மட்டும் உலர்ந்து கருத்து இருந்தது. இந்த ஏப்ரல் மாதத்தில் கொட்டும் வெயிலின் நெருப்பிலும் செடி கொடிகள் துளிர்த்து அழகாய் இருப்பதைக் கண்டு வியப்பு ஏற்பட்டது. இயற்கை மிகவும் விசித்திரமானது என்று தோன்றியது. அப்படியே மனம் லலிதாவை நோக்கித் திரும்பியது. லலிதாவுக்கு நானும் எனக்கு லலிதாவும் என்ன ஆக வேண்டும் என்னும் பிரச்சனை இப்போது என்னைத் தீண்டவில்லை. வீசிக் கொண்டிருந்த காற்று, நினைவுத்தாழை படபடவென்று திறந்தது.

எட்டு வருஷங்களில் லலிதாவும் நானும் பிரிந்து ஒருவரை ஒருவர் பார்க்காமல் இருந்தாலும், நாங்கள் இருவரும் முற்றிலும் வேறுபட்ட பழக்க வழக்கங்கள் கொண்ட குடும்பங்களில் பிறந்து வளர்ந்தவர்களாக இருந்தாலும் ஏதோ ஒரு கயிறு—எங்கள் இளம் நெஞ்சங்களைப் பிணைத்தது, நாங்கள் ஒன்றாக ஆடிப்பாடிக் கும்மாளம் போட்டது-நினைவுக்கு வரத் தொடங்கியது. தூரத்தி லிருந்த கிராமத்துக்கு லலிதாவும் நானும் படிப்பதற்கு ஒன்றாகவே போய்க் கொண்டிருந்தோம். எங்களைப் போலவே தூரத்துக் கிராமங்களிலிருந்து பள்ளிக்கூடத்திற்கு வந்திருந்த பிள்ளைகளெல்லாம் பகலில் அந்த ஊரில் ஏரிக்கரையின் மேல் வரிசையாக இருந்த புங்கமரங்களின் கீழ் உட்கார்ந்து வீட்டிலிருந்து காலையில் கொண்டு வந்திருந்த சாப்பாட்டைச் சாப்பிடு வார்கள். நானும் லலிதாவும் மாத்திரம் ஒன்றாக. என் சாப்பாட்டை லலிதா தின்ப தில்லை. அவள் வீட்டு ருசியான பண்டங்களை எனக்குக் கொடுக்காமல் லலிதா என்றைக்குமே தான் மட்டுமே தின்றதில்லை. நான் எங்கள் வீட்டில் விசேஷமாகச் செய்து அனுப்பியிருந்த நாட்களில் "கொஞ்சம் சாப்பிடு லலிதா ஒன்னும் ஆகாது" என்பேன். லலிதா "எங்க பாட்டி சொல்றா, நாங்க பிராமணர்களாம், மற்றவங்க வீட்டுப் பண்டங்களைத் தின்னா நரகத்துக்கு போவோமாம்" என்னும்போது தாத்தா விடமிருந்து அவ்வப்போது நரகத்தின் வர்ணனையைக் கேட்டிருந்த நான் சும்மா இருந்துவிடுவேன்.

தீபாவளிப் பண்டிகை வந்தால் போதும்—ஊரில் வேறெங்கும் கிடைக்காத

டேலியாப்பூ எங்கள்தோட்டத்தில் கூடை கூடையாகப் பூத்திருக்கும். எங்கள் மாமா மைசூரிலிருந்து விதை கொண்டு வந்து வளர்த்திருந்தார். பண்டிகையன்று எல்லா ருடைய மாடுகளின் கழுத்திலும் பெண்களின் தலையிலும் வெறும் சாமந்திப்பூ மட்டும் தான் இருக்கும். எங்களுக்கு மட்டும் பல நிறத்தில் டேலியாப்பூக்கள். பண்டிகைக்கு முந்தின நாள் மாலையே என்னோடு வந்து லலிதா சுமக்க முடியாத அளவு பூவைப் பறித்துக் கொண்டு போவாள். எங்களுக்கெல்லாம் புதுத் துணி கிடைப்பது இந்த மாதிரி பண்டிகைகளில் மட்டும்தான். நானும் புதுத்துணி அணிந்து கொண்டு கோவிலுக்கு ஓடுவேன். லலிதாவும் புதுத்துணி உடுத்தித் தலை நிறைய எங்கள் தோட்டத்துப் பூவை முடிந்து கொண்டு துள்ளிக் கொண்டு வருவாள். சாமி புறப்படு வதற்காக அலங்காரம் செய்து கொண்டி ருப்பதையும் எங்கள் வீட்டு ஆட்களெல்லாம் அன்றைக்கு வேலைக்கு வராமல் கோவிலுக்கு முன்னால் ஆவேசத்தோடு தப் பட்டை அடிப்பதையும் திறந்த கண் மூடாமல் பார்த்துக் கொண்டு எங்களையே மறந்து விடுவோம்.

பல்வேறு நினைவுகள் கண்ணில் வட்டமிட்டன. மனம் லேசாகியது. தெரு விளக்கு கள் எப்போதோ எரியத் தொடங்கி யிருந்தன. எழுந்து நடந்தேன்.

மூன்று மணி. நான்கு நாட்கள் ஆகியிருந்தன. லலிதாவின் குழந்தையைப் பற்றித் தெரிந்து கொண்டு வரலாம் என்று அவள் வீட்டுப் பக்கம் போனேன். வெயில் இறங்குமுகமாக இருந்தது. அவள் கணவனின் அன்பற்ற அடக்கமற்ற முகம் நினைவுக்கு வந்தது. லலிதாவுக்கு எந்தப் பாவத்துக்காக இப்படிப்பட்ட கணவன் கிடைத்தான் என்று வருந்தினேன்.

வீட்டு எல்லையில் காலிட்டதுமே நிசப்தத்தைக் கிழிக்கும் வகையில் மெலிந்த குரலில் கத்திக் கொண்டிருந்த அவள் மகளின் ஒலி கேட்டு மூச்சு நின்று விட்டதைப் போல் ஆயிற்று. ஒரு நிமிஷம் நின்று திறந்தே இருந்த கதவு வழியாகப் பார்வையைச் செலுத்தினேன். மூலையில் துடித்துக் கொண்டே அழுது கொண்டிருந்த குழந் தையைப் பார்த்தபடி, கைக் குழந்தைக்குத் தளர்ந்து போன மார்பை ஊட்டிக் கொண்டு திக்கற்ற பரதேசியைப் போல உட்கார்ந்திருந்த லலிதாவைப் பார்த்தேன். நீண்ட பெருமூச்சு விட்டேன். லலிதாவின் கண்கள் ஆழப் புதைந்திருந்தன. "ஏன் லலிதா, பெங்களூருக்குப் போகவில்லையா?" என்று கேட்டேன். லலிதா விக்கி விக்கி அழுதாள். பால் குடிப்பதை விட்டு விட்டுக் குழந்தை பயத்தில் வீறிட்டது. அதைச் சமாதானப்படுத்திக் கொண்டே லலிதா கண்ணைத் துடைத்துக் கொண்டாள். "ஏன் லலிதா என்ன நடந்தது" என்று ஒரே மூச்சில் கேட்டேன். லலிதா சும்மா இருந்தாள். "உன் கணவன் என்ன சொன்னான்?" என்றேன். கொஞ்ச நேரம் கழித்து நிதானமாக விக்கியபடியே நடந்ததெல்லாம் சொன்னாள். அவன் அவ்வளவு பணம் எங்கே இருந்து கொண்டு வருவது, கொஞ்ச நாள் இப்படியே கத்திக் கொண்டே இருந்து அப்படியே நின்று போய் விடும் என்று சொன்னானாம். கிராமத்து எளிய பெண்ணை ராட்சசன் போலக் கசக்கி இன்னும் அவளைப் பிழிந்து கொண்டே இருக்கும் அவனுடைய மிருகத்தனமான செயல் வெறுப்பை உண்டாக்கியது.

அங்கிருந்து நேராக அறைக்கு வந்தேன். பாஸ்புக் எடுத்துக் கொண்டு காலேஜ் சொஸைட்டிக்குப் போனேன். அப்போது தான் அக்கவுண்ட் குளோஸாகி இருந்தது. எனக்குத் தெரிந்த அந்த மேனேஜர் என் நிலைமையைப் புரிந்து கொண்டு "நாளைக்குத் தேதி போட்டு செக் எழுதிக் கொடுங்க சார். என் சொந்தப் பணத்

தையே கொடுக்கிறேன்" என்றார். அவரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு சைக்கிளில் ஏறி லலிதாவின் வீட்டுக்குப் போனேன்.

லலிதாவின் முன்னால் பணத்தை எடுத்தேன். "இன்று சாயங்காலம் பஸ்ஸுக்கே அழைத்துக் கொண்டு போ, லலிதா" என்றேன். கத்திக் கத்தி ஓய்ந்து போய் இருந்த குழந்தை தூங்கி விட்டிருந்தது. லலிதா மௌனமாய் இருந்தாள். துக்கத்தை விழுங்கி விழுங்கி நாளுக்கு நாள் மௌனத்தின் உருவமாக மாறிக் கொண்டு வந்த லலிதாவைப் பார்க்கச் சகிக்கவில்லை. மிகவும் சங்கடமாய் இருந்தது. கண்ணிலிருந்து பட்பட் என்று நான்கு துளிகள் உதிர்ந்தன. அறைக்கு வந்தேன். கண்கள் இருண்டு எல்லாம் சூன்யமாகத் தெரிந்தது.

சில சமயங்களில் இதெல்லாம் யாருக்கு வேண்டும் என்ற தோன்றினாலும் அம்மா சொன்னது சட்டென்று வருகிறது: "மனிதர்கள் என்றாலே ஒருவருக்கொருவர் துக்கத்தில் துணை போகா விட்டால் பிறந்துதான் என்ன பிரயோசனம்? நாம் ஒருவருக்குச் செய்தால் நமக்கு ஒருவர் செய்வார்!" இப்படி இன்னும் எவ்வளவோ சொல்லும் என் தாயின் பேச்சுக்கள் என்னைப் போல் சிந்தித்துப் பேசும், எழுதும் அறிவிலிருந்து பிறந்தவை அல்ல. அவை உள் மனத்திலிருந்து வரும் பேச்சுக்கள்.

என்னைப் பற்றி, இந்த உலகத்தைப் பற்றி ஆழமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். சிந்தனை உள்ளவனாக வாழ வேண்டும் என்னும் பொங்கி வரும் ஆசையினால் பிலாஸபியை என் படிப்புக்குத் தேர்ந்தெடுத்தேன். பல்வேறு தத்துவ ஞானிகளின் நூற்றுக்கணக்கான புத்தகங்களைப் படித்தேன். புரிந்து கொண்டு அவற்றை என்னுடையதாக்கிக் கொள்ளப் பகலும் இரவும் உழைத்தேன்.

கொஞ்ச நாட்களிலேயே வேண்டிய அளவு தெரிந்து கொண்டேன்., சிந்திப்பவனாக மாறி விட்டேன் என்று தோன்றியது. கிராமத்துக்குப் போனேன். என் தாய் கெட்டு வந்த மகளையும் அவள் கணவன் குழந்தைகள் எல்லாரையும் எங்கள் வீட்டுக்கு அழைத்து வந்து வீட்டை நிரப்பியிருந்தாள். எனக்குப் பிடிக்கவில்லை. கோபித்துக் கொண்டேன். அம்மா அன்று சொன்ன பேச்சு இன்னும் என் வயிற்றைக் கிழித்துக் கொண்டிருக்கின்றது. நான் எப்படிப்பட்ட இரக்கம் அற்ற மிருகம் என்று என்னையே சபித்துக் கொள்கிறேன்.

என் அக்காவைப் பற்றி நான் பேசியதைக் கேட்டு என் தாய் அன்று சிந்திய கண்ணீர்த் துளிகள் இன்னும் என்னைச் சுடுகின்றன. மனிதத் தன்மை இல்லாத ஞானமும் கல்வியும் செல்வமும் எவ்வளவு இருந்தாலும் பயனற்றவை என்று இப்போது தெரிகிறது.

* * *

ஆமாம். இன்றைக்குப் பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. லலிதாவின் குழந்தை இதற்குள், தேறி வந்திருக்க வேண்டும். வெறிநாய் கடித்தது குணமாவது அதிகக் கஷ்டம் இல்லை. இனி லலிதாவின் கணவன் என்ன செய்திருப்பானோ என்ற சந்தேகம்.

லலிதாவின் வீட்டுக்குப் புறப்பட்டேன். பொழுது சாயும் நேரம். பெரிய பெரிய மரங்களின் கீழே கருப்பாகப் பாவி இருந்த தார்ச்சாலையின் மீது நடந்தேன். மரங்கள் இருட்டை உமிழ்ந்து கொண்டிருந்தன. கருப்பு நிறம் துக்கத்தின் அறிகுறி அல்லவா? இது வெறும் மனமயக்கம என்று நினைத்துக் கொண்டே லலிதாவின் வீட்டை அடைந்தேன்.

வெளியே கதவருகில் இரண்டொரு பெண்கள் நின்றிருந்தார்கள். இளவயதுப் பெண்ணை நோக்கி "அவள் பெங்களூரிலிருந்து வரலையா?" என்று கேட்டேன். "அவள் பெங்களூருக்கும் போகலை. எங்கயும் போகலை. அந்தக் குழந்தை பகலும் ராத்திரியும் கத்திக் கத்தி நாலு நாளைக்கு முன்னால் செத்துப் போச்சு" என்றாள். வயிற்றில் குத்துப்பட்டது போலாயிற்று எனக்கு. "லலிதாம்மா உங்களுக்கு என்ன ஆக வேண்டும்?" என்று கேட்டாள் இன்னொருத்தி." "அன்றைக்குப் பணம் கொடுத்து விட்டுப் போனவர் நீங்கதானே?" என்று கேட்டபோது "ஆம்" என்றேன். அவள் தொடர்ந்து "நீங்க பெரிய மனிதரைப் போல் இருக்கிறீங்க. அந்த ஆள் அந்த அம்மாவுக்கு ஒரு தலையெழுத்து. தெய்வம் மாதிரி இருக்கிற லலிதம்மாவை உயிர் போகிற மாதிரி அடிச்சான். நாங்க இல்லாதிருந்தா கொலையே செஞ்சிருப்பான். உங்களையும் கெட்ட கெட்ட வார்த்தைகளால் திட்டினான். அவன் வாயில் புழு வைக்க..." அவளுடைய மொழியில் அவள் திட்டிக் கொண்டே இருந்தாள்.

திரும்பிப் போவதற்காகத் திரும்பினேன். அந்தப் பெண்ணே "அவன் இல்ல. அந்த அம்மாவ நீங்க ஒரு தடவை பாருங்க" என்றாள். வயிறு நிறையத் தணலைக் கொட்டியது போலிருந்தாலும் காலை இழுத்துக் கொண்டு லலிதாவின் வீட்டுக் கதவருகில் நின்றேன். கதவு பாதி திறந்திருந்தது. கம்மிய குரலில் 'லலிதா' என்று அழைத்தேன். கொஞ்ச நேரம் கழித்து மெதுவாக 'யார்?' என்று உயிரற்ற குரல் கேட்டது. கதவைத் தள்ளி உள்ளே போய 'நான்தான் லலிதா' என்றேன். லலிதாவின் முகம் வீங்கி இருந்தது. நெற்றியில் ஒரு பக்கத்தில் காயத்துக்குப் பவுடர் அப்பி இருந்தது. எழுந்து உட்காரவும் வலுவில்லை. சிறு குழந்தை அவள் மார்பை அணைத்துக் கொண்டிருந்தது.

லலிதா பேசவில்லை. அவள் கண்ணில் கொஞ்சமும் ஒளி இல்லை. கன்ன எலும்புகள் எழுந்து தோன்றின. அந்த ராட்சசன் அடித்து நொறுக்கியிருக்கிறான். "பேசு, லலிதா" என்றேன் மௌனம். பயமாய் இருந்தது. நடுங்கினேன். லலிதா குச்சியைப் போல் இருந்த கையைத் தூக்கி ஸ்டாண்டு பக்கம் காட்டினாள். பார்த்தேன். நான் கொடுத்த பணம், எழுதிக் கொடுத்த டாக்டரின் கடிதம். லலிதாவை இந்த நிலைக்கு ஆளாவதற்குக் காரணமாயிருந்த நோட்டுக்களை எடுத்துக் கசக்கினேன். லலிதாவின் அருகில் குனிந்து, "உனக்கு அநியாயம் செய்து விட்டேன், லலிதா" என்றேன். லலிதா திராணி இல்லாத குரலில் 'இல்லை' என்று தலையை அசைத்தாள். கண்கள் உள்ளே போயிருந்தாலும் நீர் வழிந்தது. லலிதா எழுந்து உட்கார முயற்சி செய்தாள். "வேணாம். அப்படியே படு லலிதா" என்றேன்.

திசை தெரியவில்லை. இதுவே கடைசித் தடவை என்பதைப் போல லலிதாவை நெஞ்சில் நிறைய நிரப்பிக் கொண்டேன். "நான் இனி வரட்டுமா, லலிதா" என்றேன். லலிதா நெடுநேரம் மௌனமாகவே இருந்தாள். அவள் பதிலுக்காக நானும் காத்து நின்றேன். மௌனம் இறுகத் தொடங்கியது.

# அம்மாசி

## தேவனூர மகாதேவ

அம்மாசி என்பது அமாவாசையின் பெயர். அவன் கருப்பாய் இருந்ததனாலோ அமாவாசை அன்று பிறந்ததனாலோ அவனுக்கு அம்மாசி என்று பெயர் நிலைத்து விட்டது. அம்மாசி என்னும் பெயர் ஏன் வந்தது என்று அவன் அப்பாவும் அம்மாவும் உயிரோடு இருந்தால் கேட்டிருக்கலாம். ஆனால் அவன் பிறந்த பிறகு நடக்கத் தொடங்கும்போது அவனைப் பெற்றவனும் பெற்றவளும் வெவ்வேறு காரணங் களால் மேலே போய்விட்டார்கள். அதனால் இப்போது அம்மாசிக்கு, மாரியம்மன் கோவில் என்றால் அம்மாசி, அம்மாசி என்றால் மாரியம்மன் கோவில் என்று சொல்லும்படி ஆகிவிட்டது. மாரியம்மன் கோவில் என்பதனால் திக்கில்லை என்ப தல்ல. அம்மாசியைப் போல எத்தனையோ பேருக்கு மாரியம்மன் கோவில் நிழல் கொடுத்துக் கொண்டு வந்திருக்கிறது.வெயில் காலத்து அனலுக்கு ஜனங்கள் அங்கே கூடுவார்கள். அது இருக்கட்டும், அம்மாசியைத் தவிர ஒரு பழைய தலை அங்கே குடியிருந்தது. பழைய தலை என்றால் அவனுடைய உடம்பு கை கால்கள் என்று இல்லாமல் முடி ஒரே வெள்ளையாகி அவன் உடம்பெல்லாம் மூடியது. இதுவரையில் அவன் இருந்த இடத்திலிருந்து எழுந்ததை யாரும் பார்த்ததாகத் தெரியவில்லை. மாரியம்மன் கோவிலின் மூலையையொட்டி ஒரு ஓரமாக ஒரு கம்பளி— எந்தக் காலத்ததோ என்று எண்ணும்படி- விரிக்கப் பட்டிருக்கிறது. அதன்மேல் அவன் காலை நீட்டிக் கொண்டோ பக்கத்தில் இருக்கும் கம்பத்தில் சாய்ந்து கொண்டோ அல்லது கைகளைப் பின்னால் ஊன்றிக் கொண்டோ உட்கார்ந்தே இருப்பான். அவனுக்கு இந்த மூன்று நாலு நிலைகளை விட்டால் வேறேதும் இருந்ததாகவும் தெரியவில்லை. அவன் அப்படி உட்காரும் போதெல்லாம் அரைக்கண்ணை மூடி இருப்பது முதலிலிருந்தே எப்படியோ வந்து விட்டிருக்கிறது. அதைவிட்டு அவன் உட்கார்ந்ததும் இல்லை. அவனுடைய அந்த தலையைப் பார்த்தால் எதையோ தியானித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது போலத் தோன்றும். சுருக்கங்களாலேயே செய்த அவன் முகம் பார்ப்பதற்கு அப்படி இருக்கிறது என்பதற்கும் காரணம் இருக் கிறது. அல்லது அந்தச் சுருக்கம் நிறைந்த முகத்துக் கேற்றபடி கழுத்துவரை வெள்ளி யாக இறங்கியிருக்கும் தோள் பருமன் மீசையும் ஒரு காரணம். மொத்தத்தில் அவன் எதையோ தியானித்துக் கொண்டு உட்கார்ந்ததைப் போல் தோன்றுகிறது. அங்கே அவன் பக்கத்திலேயே ஆள் உயர மூங்கில்கள் எப்போதும் இருக்கும். அவன் அங்கே இங்கே போக வேண்டிய போதெல்லாம் அம்மாசி துணையாய் இருப்பதால் அந்த மூங்கில்களுக்கு வேலை அவ்வளவாக இப்போது இல்லை. ஆனால் கோழி, ஆடு, ஆட்டுக்குட்டி இதெல்லாம் கிட்டே நெருங்கினால் விரட்டுவதற்கு அது அவ்வப்போது தேவைப்படும். இவ்வளவு சொல்லியும் அவன் பெயர் விட்டுப் போய் விட்டது. சிறிய

வர்களிலிருந்து பெரியவர்கள் வரை அவனை குரியைய்யா, குரியைய்யா (ஆட்டுக் கார ஐயா) என்பார்கள். அது என்ன அவன் பிறந்தபோது வைத்த பெயரா? அந்தப் பிரச்சனை நமக்கும் வேண்டாம் உங்களுக்கும் வேண்டாம். இது மட்டும் தெரியும். அவன் புத்தி தெரிந்ததிலிருந்து, அவன் கால்கள் நடமாட்டத்தை இழக்கிற வரையில் ஊரில் கவுடர் வீட்டு ஆடுகளை மேய்த்துக் கொண்டு வந்தான். இப்போதும் அவன் பழையபடி அரைக் கண்ணை மூடி உட்காரும்போது விரலை ஒவ்வொன்றாக ஆட்டைக் கணக்கிட்டுக் கொண்டோ என்னவோ- தனக்குத்தானே- எண்ணிக் கொண்டு போவான். நாளும் ஆறேழு தடவை இது தவறுவதில்லை. இது எந்த நாளும் தவறியதும் இல்லை. அம்மாசி இப்படி குரியைய்யனின் கண் பார்வையில் வளரத் தொடங்கினான். இப்போது அவனுக்குப் பத்தோ பன்னிரண்டோ நடக்கிறது. குரியைய்யா 'அம்மாசி' என்னும்போது 'ஆ' என்று குரல் கொடுப்பது அம்மாசியின் பகல்நேர வேலை.

ஊருக்குள் இருட்டு இறங்கத் தொடங்கியவுடனே அம்மாசியும் குரியைய்யனும் மடத்தில் மணி அடிப்பதற்காக காத்துக் கொண்டிருப்பார்கள். மடத்தில் மணி அடித்ததும் அம்மாசி குரியைய்யனின் மாடத்தில் வைத்திருக்கும் தட்டையும் லோட்டா வையும் எடுத்துக் கொண்டு சரசரவென்று ஓடுவான்.அதற்குள் முழுவதுமாக இருள் கவிழ்ந்து கும்மென்று இருப்பதால் அம்மாசி ஓடுவதே கண்ணில் படாது. கண்ணை அகல விரித்துப் பார்த்தால் அவன் ஓடும் ஓட்டத்துக்கு இருட்டு கலங்குவதைப் போலத் தெரியும். அப்படி ஓடியவன் திரும்பி எப்போது வந்தான் என்பதும் தெரியாது. வந்தவன் 'ஐயா' என்று கூப்பிடும்போதுதான் அவன் வந்திருப்பது தெரியும். அப்போது குரியைய்யா படுத்திருந்தால் எழுந்து உட்காருவான். வழக்கம் போல அந்த இருட்டிலேயே மடத்துக் களியையும் குழம்பையும் சாப்பிட்டு விட்டுப் பிறகு அம்மாசி படுத்துவிடுவான். அந்த நேரத்துக்குள் அந்தப் பரந்த இருட்டுக்கு ஊர் தன் ஓசையை அடக்கிக் கொண்டு படுத்து விட்டாலும் அவ்வப்போது அங்கங்கே நாய்களின் குரைப்பும் ஆந்தையின் அலறல்களும் கேட்டுக் கொண்டே யிருக்கும். கிழவன் தூக்கம் வராததால் கண்ணைத் திறந்து கண்ணுக்கெட்டிய தூரம் பார்த்துக் கொண்டோ, விழிப்பு இருக்கும்வரை எதையாவது தனக்குத்தானே பேசிக் கொண்டே இருந்து, அம்மாசி, அம்மாசி என்று இரண்டு மூன்று தடவை கூப்பிட்டு பதில் வராமல் அவனும் படுத்துவிடுவான்.

* * *

அந்தச் சுற்றுப் பக்கத்தில் ஆண்டுக்கு ஒருமுறை எல்லா ஊருக்கும் வருவதைப் போலவே அங்கேயும் மாரியம்மன் திருவிழா வருவதுண்டு. அப்போது மட்டும் குரியைய்யா தன் இடத்தை விட்டு வேறு இடத்துக்கு மாற வேண்டிவரும். அப்போது மாரியம்மன் கோவிலுக்கு தூசி தும்பு போகத் துடைத்துச் சுண்ணாம்பையும் செம்மண்ணையும் அடித்து கண்ணில் வந்து குத்துவதைப் போலச் செய்வார்கள். இப்படிச் சுண்ணாம்பும் செம்மண்ணும் எல்லாப் பக்கத்திலும் பட்டையடித்து முடிக்க, அப்போது வீசும் இளவெயில் அவற்றின் மீது பட்டு அவை அதிக ஒளிவீசும். குரியைய்யனைச் சுற்றி மட்டும் முன்பு இருந்ததைப் போலவே இருக்கும். மற்ற இடங் களெல்லாம் வெள்ளையாய் இருந்ததால் அது இன்னும் கருப்பாகத் தோன்றியது. அந்த இடம் நிறைய எட்டுப் பத்துப் பேர் இங்கும் அங்கும் ஓடியாடித் தோரணம்

கட்டுவது, வண்ண வண்ண காகிதங்களைக் கத்தரித்துக் கட்டி அலங்காரம் செய்வது, மாலை கட்டுவது முதலிய வேலைகளைச் செய்து கொண்டிருந்தார்கள். ஏறக்குறைய எல்லாருமே புதுத் துணி அணிந்திருந்ததால் மாரியம்மன் கோவில் நிறைய வெள்ளை ஒளி வீசியது. அங்கே பஸண்ண என்பவன் பிரெஞ்ச் மீசை வைத்துக் கொண்டு கருப் பாகக் குண்டாக இருந்தான். அவனும் வெள்ளாடை அணிந்திருந்ததால் இன்னும் அதிகக் கருப்பாகத் தெரிந்தான். அவன் வாயைத் திறக்காவிட்டாலும் அவனுடைய நீண்ட பற்கள் வெள்ளை ஆடையினால் ஒளி வீசிக் கொண்டிருந்தன. அவன் கையில் ஒருவிளக்குமாறு இருந்தது. பஸண்ண தபதபவென்று அடியிட்டு குரியைய்யனின் மூலைக்கு வந்து 'ஐயா' என்று உரக்கக் கத்தினான். குரியைய்யனை இரண்டு தடவையாவது கூப்பிட்ட பிறகுதான் 'ஆ' என்று பதில் வரும் என்பதால் எல் லாரும் முதலிலேயே கத்திப் பேசுவார்கள். பஸண்ணன் குரலுக்கு குரியைய்யா மெல்லக் கண் திறந்து மிகவும் நிதானமாகப் பார்த் தான். அவன் தன் எதிரில் வெள்ளையாகத் தெரிந்து நடமாடிக் கொண்டிருந்த உருவங்களைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். அவன் அப்படிப் பார்த்துக் கொண்டே போனபோது அவனுக்குப் பழைய நினைவுகள் தாவி வந்து கண்ணெதிரில் நடமாடத் தொடங்கின. மாரியம்மன் திரு விழா என்றால் புலி வேஷம். அதாவது அவனே. அவனுடைய இளவயதில் அவனில் லாமல் புலிவேஷம் இருந்ததில்லை. புலிவேஷம் கண் முன்னால் குதிக்கத் தொடங் கிற்று. தப்பட்டையின் ஒலியும் வந்து காதில் முழங்கத் தொடங்கியது. அப்போது பெரிய கவுடர் உயிரோடு இருந்தார். குரியைய்யா அம்மாசி அளவு வளர்ந்த பையன். குரியைய்யனின் புலிவேஷத்தைக் கண்டு பெரிய கவுடர் மகிழ்ந்து போனார். சட்டையும் துணியும் இனாம் கொடுத்து, "நீ இருக்கிற வரையில எங்க தோட்டத்தி லேயே இரு. இஷ்டப்படி சாப்பிடு. இஷ்டப்படி உடுத்திகோ. கொஞ்சம் ஆட்டைப் பார்த்துக்கணும். அவ்வளவுதான்" என்றார். அவனுடைய சுருங்கிய முகத்தின் ஒவ் வொரு சுருக்கமும் மாரியம்மன் கோவிலின் வெள்ளை வண்ணத்தினாலோ, அங்கே இருந்தவர்கள் உடுத்தியிருந்த துணியின் வெறுப்பினாலோ வெள்ளையாக அகலமாக விரியத் தொடங்கியது பஸண்ணன் இன்னும் ஒரு தடவை ஜோராக ஐயா என்றான். குரியைய்யா தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்தான். பஸண்ண நின்ற நிலையிலேயே வந்த காரணம் புரிந்தது. குரியைய்யா வலது கையில் மூங்கில் தடிகளைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையை மேலே நீட்டினான். நீட்டிய கையைப் பஸண்ணன் பிடித்துக் கொண்ட பிறகே அதன் மேல் பாரத்தைப் போட் எழுந்து நின்று தடிகளை ஊன்றி நடந்து, இன்னொரு மூலையை அடைந்து உட்கார்ந் தான். அங்கே விரித்திருந்த கம்பளியைப் பஸண்ண இரண்டு மூன்று தடவை நன்றாக உதறி குரியைய்யா உட்கார்ந்திருந்த மூலையில் கொண்டு வந்து விரித்தான். கம்பளியை நன்றாக உதறிய வேகத்தில் கம்பளியில் இருந்த தூசிதும்புகள் இளவெயிலில் பறந்து நீந்தத் தொடங்கின. கம்பளியை முதலில் விரித்திருந்த அந்த அளவுக்கு உள்ளங்கை தடிப்புக்கு சிவப்பு நிறத்துக்கு மாறியிருந்த தூசி தும்பு செத்தை கிடந்தன. அவற்றின் மேலும் அப்போது இளவெயில் விழுந்து அவற்றுக்கும் வெள்ளை நிறம் பிடித்துக் கொண்டதைப் போலத் தோன்றியது.

விளையாடுவதற்காக எங்கெங்கோ போயிருந்த அம்மாசி பிற்பகலில் மாரியம்மன் கோவிலுக்கு வந்து சேர்ந்தான். வந்து பார்த்தான். பார்த்தால் கண்ணில் அடங்காத அளவு அங்கு என் னென்னவோ நிறைந்திருந்தது. ப்சைச் சுண்ணாம்பு,

செம்மண், நிலத்தை மெழுகுவதற்காக வைத்திருந்த சாமான்கள் எல்லாவற்றின் வாசனையும் ஒன்றாகச் சேர்ந்து மூக்கில் வந்து தாக்கி மாரியம்மன்கோவில் முழுவதும் ஒன்றாகி இருந்தது. குரியைய்யா இந்த மூலையிலிருந்து அந்த மூலைக்கு இடத்தை மாற்றி முன்பு போலவே உட்கார்ந்திருந்தான். முற்றத்தின் நடுவே வட்டம் வட்ட மாகச் சிலர் கூட்டமாக எகிறி எகிறி எதையோ பார்த்துக் கொண்டிருந்தார்கள். கூட்டத்தின் நடுவில் ஒருவன் எதோ செய்து கொண்டிருந்தான். டக்கென்று அம்மாசி அங்கே பாய்ந்து சந்தில் நுழைந்தான். அங்கே பார்த்தது— நிறம் நிறமான சரிகைக் காகிதத்தில் கண்டபேருண்ட முதலான வடிவத்தில் மகுடங்களை உருவாக்கிக் கொண்டிருந்தார்கள். அங்கே செய்ததெல்லாம் கண்ணுக்கு மிக அழகாகத் தெரிந்தது. அங்கே அவன் உருவத்தைக் கத்தரித்தபோதெல்லாம் சுற்றி நின்றிருந் தவர்கள் 'அப்படியிருக்க வேண்டும், இப்படியிருக்க வேண்டும், ஆம். அப்படித்தான், இப்படி, பேஷ்' என்றெல்லாம் தலைக்குத் தலை ஒன்றைச் சொல்லிக் கொண்டிருந் தார்கள். பார்த்துப் பார்த்து அவையெல்லாம் கண்ணில் நிறைந்த பிறகு அம்மாசி அங்கிருந்து வெளியேறி குரியைய்யா பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். எதிரில் அந்தப் பக்கத்துச் சுவரில் ஒட்டியதைப் போலப் பெரிய பெரிய சிவப்பு, வெள்ளை நிறத்துச் சாமி குடைகளை வெளியே எடுத்து வெயிலில் உலர்வதற்காக வரிசையாக நிறுத்தி வைத்திருந்தார்கள். அவைகளின் அருகில் இருந்த மூலையில் வானத்தைத் தொடுவது போலத் தென்னை மரம் உயர்ந்து ஆடிக் கொண் டிருந்தது. அதன்மேலே கண்ணை ஏற்றி அம்மாசி கண்ணுக் கெட்டிய தூரம் பார்த்தான். ஆறேழு பெரிய குலைகளின் சுமையால் மரம் வளைந்திருந்தது. அப்படியே கண்ணைக் கீழே இறக்கிப் பார்த்தால் அதன் அடிமரத்தைச் சுற்றிலும் சுண்ணாம்பு செம்மண்ணை யாரோ நிறைப் பூசியிருந்தார்கள். அதைக் கண்ட அம்மாசி குரியைய்யனின் அருகே நகர்ந்து 'ஐயா' என்றதும் என்ன என்பதுபோல அவன் பார்த்தான். "பாரய்யா, உன் தென்னை மரத்துக்கு யாரோ சுண்ணாம்பும் வர்ணமும் அடிச்சிருக்காங்க" என்றான். குரியைய்யா பார்த்தான்; கொஞ்ச தூரம்தான் தெரிந்தது; அதற்கப்புறம் பனிப் படலமாக இருந்தது; ஏதும் தெரியவில்லை. அவன் கண்ணில் பட்டது; யாரோ மந்திரம் செய்து குழி தோண்டிச் சுடுகாட்டில் தேங்காயை வைத்தது, அது முளை விட்டுத் தரையைப் பிளந்து வந்தது, அதை எடுத்துக் கொண்டு வந்து தன்னுடையதாக இருக்கட்டும் என்று மாரியம்மன் கோவில் மூலையில் நட்டது, அது தன் கண்ணெதிரி லேயே மட்டைகளைக் கழற்றிக் கழற்றி அடையாளம் செய்து கொண்டு உடம் பெல்லாம் அடையாளமாக வளர்ந்து வளர்ந்து மேலே மேலே என்று இன்னும் வளர்ந்து நின்றது.

* * *

திருவிழா அன்று பொழுது சாயச்சாய வேறு ஊர்களிலிருந்து உறவினர்களும் நண்பர்களும் ஒவ்வொருவராக ஊருக்கு வருவது அதிகமாகத் தொடங்கியது. வந்த வர்கள் வழக்கம் போல மாரியம்மன் கோவிலுக்கு முகத்தைக் காட்டி, பிறகு தொடர்ந்து நடந்தார்கள். சிலர் அங்கே உட்கார்ந்து எல்லாவற்றையும் மறந்து அரட்டையடிப்பதில் மூழ்கியிருந்தார்கள். அவரவர்கள் ஊரில் நடந்த பழைய சண்டைகளையெல்லாம் தோண்டி எடுத்து எப்படி நடந்தது, என்ன கதை என்பதே அவர்கள் வாய்க்குக் கிடைத்த அவலாக இருந்தது.

அந்த நேரத்தில்தான் வெளியில் சோளத்தட்டை எரித்து பஸண்ணன் தப்பட்டையைச் சூடேற்றிக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் வானர சேனையைப் போல உழவர் குழந்தைகள் இருந்தன. அவர்களுள் அம்மாசியும் ஒருவன். பஸண்ணன் தப்பட்டையை நெஞ்சில் வைத்துக் கொண்டு சடச்சட, நகந, நகந என்று வாசிக்கவும் வெண்கல ஓசையைப் போலத் தப்பட்டையின் ஒலி ஊரின் நான்கு மூலைகளையும் எட்டத் தொடங்கியது. சுற்றி இருந்த குழந்தைகள் சும்மா யிராமல் குதிக்கத் தொடங்கின. பஸண்ணனுக்கும் வெறி ஏறி டங் டங் டங் என்று தட்டிக் கொண்டே அவனும் ஆடினான். அதற்கேற்றபடி ஆடுவதற்கு அந்தக் குழந்தை களும் அடியெடுத்து நடனமாட, பஸண்ணனும் ஆட, போகிறவர்களும் வருகிறவர் களும் சேர்ந்து ஒருவர் மேல் ஒருவர் விழுந்து எழுந்தார்கள். அம்மாசிக்கு யார் சொல்லிக் கொடுத்தார்களோ என்னவோ எல்லாரையும்விட நன்றாக அடி யெடுத்து வைத்து ஆடினான். எல்லாரும் ஆச்சரியத்தோடு இவனை நெருங்கி வந்து இவன் ஆடு வதையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதற்குள் பெண்கள் என்பதையும் நினைத்துப் பாராமல் அந்தக் கூட்டமும் பார்ப்பதற்கு வந்துவிட்டது. பங்காரிக்கு மட்டும் அம்மாசியின் மேலிருந்து கண்ணை விலக்கிக் கொள்ள முடியவில்லை. அம்மாசியைப் பார்க்கப் பார்க்க அவளுள்ளே இடுப்பில் வைத்துக் கொள்ள அப்படி ஒரு குழந்தை வேண்டும் என்னும் ஆழமான ஆசை உண்டாகிறது. அவளுக்குக் கல்யாணமாகி ஆறேழு வருடங்கள் ஆகியும் எந்தப் பலனும் கிட்டவில்லை. பலர் சொல்வதைக் கேட்டு மனம் வெதும்பி அந்தக் கோபத்தில் நாலைந்து பேரிடம் படுத்தும் பார்த்தாள். அப்படியும் பலன் இல்லை. மந்திரம், மாயம், சாமியார் என்று போவதற்கு அவர்கள் ஏழைகள். அவளுக்கு ஈடானவர்கள் முப்பதிலேயே முதுமை பெற்றாலும் அவள் இன்னொரு கல்யாணம் செய்து வைக்கலாம் என்பது போல இருந்தாள். அவளைப் பார்த்தவர்களுக்கு அரை நாழிகையாவது அவள் மேல் ஆசையை உண்டாக்கும் வடிவம் அவளுக்கு இருந்தது. என்றாலும் பலன் ஏதும் இல்லை. ஆனால் அவள் நடவடிக்கை பல நாட்கள் தொடர்ந்து நீடிக்கவில்லை. இரவு ஆனதும் கூரையின்மேல் ஒவ்வொன்றாக கல் வந்து விழத் தொடங்கியது. அவள் கணவன் பங்காரியின் முதுகில் நாலைந்து சாத்தி, முகத்தை மூடிக்கொண்டு வெளியே முகத்தைக் காட்டாமல் இருந்தான். பிறகு கல் விழுவது நின்று இப்போது அது மறந்து போகும் அளவுக்கு நாட்களாகிவிட்டது. அவள் கண்ணின் உள்ளே அம்மாசியின் ஆட்டம் இடம் கொண்டிருந்தது.

அந்த நேரத்தில்தான் இரண்டு பெரிய மனிதர்கள் கொழுத்த இரண்டு ஆட்டுக் குட்டிகளை அங்கே இழுத்துக் கொண்டு வந்தார்கள். அப்போது அங்கே இருந்த கூட்டம் இரண்டாகப் பிளந்து வழிவிட்டது. கூலிக்காரர்களின் குழந்தைகள் அங்கும் இங்குமாகச் சிதறினார்கள். ஆடுகளும் தப்பட்டையின் ஓசைக்கு ஒவ்வொரு பக்கமாக இழுக்கத் தொடங்கின. அந்த வேகத்துக்குப் பிடித்துக் கொண்டிருந்தவர்கள் தடுமாற இன்னும் இரண்டு பேர் சேர்ந்து அவைகளைப் பிடித்துக் கொண்டு கட்டு மீறாமல் செய்து மாரியம்மன் கோவிலின் முன்னால் வந்து நேராக நிறுத்தினார்கள். வெளியே வெறியில் தம்பட்டம் அடித்துக் கொண்டிருந்தது. ஆடுகள் அலுங்காமல் நலுங்காமல் கண்களை மட்டும் சுற்றிலும் சுழற்றிப் பார்த்தன. எதிரில் கோவில் கதவைத் திறந்து வெள்ளித் தெய்வம் ஒளி வீசியது. கோவிலின் உள்ளே இருந்து ஊதுபத்திப் புகை மேகமாக மிதந்து வெளியே வந்து கொண் டிருந்தது. உள்ளே

யிருந்து இடுப்புக்குக் கீழும் முழங்காலுக்கு மேலும் துணி உடுத்தியிருந்த ஒருவன் தீர்த்தம், பூமாலை ஆகியவற்றைக் கொண்டு வந்து ஆடுகளின் முன்னால் நின்று கணநேரம் கண்ணை மூடி உதட்டை அசைத்து முணுமுணுக்கத் தொடங்கினான். அவன் உடம்பு கறுப்பாய் இருந்தது. உடம்பெல்லாம் நரம்பு மேல் எழுந்து இருந்தது. முணுமுணுப்புக்கு ஏற்றபடி அவை ஏறி இறங்கிக் கொண்டிருந்தன. பிறகு அவன் மாலையை இரண்டாக்கி ஆடுகளின் கழுத்தில் கட்டினான். அதன்பிறகு பூக்களை ஆடுகளின் நெற்றியின்மேல் இட்டுத் தீர்த்தத்தை உடம்பெல்லாம் தெளித்துக் கை கூப்பி, "ஏதாவது தப்பு இருந்தால் மனத்திலேயே வைத்துக் கொள், தாயே, சம்மதம் கொடு" என்றான். அவனுடைய அந்த உரத்த குரல் மாரியம்மன் கோவில் முழுவதும் எதிரொலித்தது. தொலைவில் இருந்த கூச்சலைத் தவிர, கோவில் உள்ளே எல்லாரும் மூச்சை அடக்கி நின்றிருந்தார்கள். அவர்கள் அப்படி நின்றிருப்பதும் ஆடுகள் கண் களை மாத்திரம் சுற்றிலும் சுழற்றிப் பார்ப்பதும் கொஞ்சநேரம் நடந்தது. பிறகு ஆடுகள் ஒரே மாதிரியாகத் தலையையும் உடம்பையும உதறின. அது ஆனபிறகு அவற்றைப் பிடித்திருந்தவர்கள் அவற்றைத் தாறுமாறாக இழுத்துக் கொண்டு வெளியே நடந்தார்கள். தப்பட்டையின் ஓசை அங்கே எழுந்த கூச்சல்களை யெல்லாம் விழுங்க ஆரம்பித்தது. அப்படி நடந்தவர்கள் பின்னால் சில குழந்தைகளும் அம்மாசியும் சேர்ந்து நடந்தார்கள். பெரியவர்கள் கோபித்துக் கொண்டாலும் அவர்கள் அந்தப் பக்கம் திரும்பியதும் இவர்கள் பின் தொடர்ந்தார்கள்.

அப்படி நடந்து கடைசியில் ஒரு தோட்டத்தை அடைந்தார்கள். அங்கிருந்த கவைக்கொம்பின் பக்கத்தில் பலசாலியான ஒருவன் கத்தியைப் பிடித்துக் கொண்டு விளையாட்டாக நின்றிருந்தான். எல்லாருடைய கவனமும் ஒரே இடத்தில் சேர்ந்து தொலைவில் இருந்த உழவர் குழந்தைகள் பக்கத்தில் வந்து சூழ்ந்து கொண்டன. யாருக்கும் தெரியவில்லை. இரண்டு பேர் ஆட்டின் முன்னங்கால் பின்னங்காலைப் பிடித்து அதன் கழுத்தைக் கவைக் கொம்பிற்குக் கொண்டு வந்ததும் கத்தியைப் பிடித்துக் காத்துக் கொண்டிருந்தவன் கத்தியால் கழுத்தில் ஒரு போடு போட்டான். துண்டு துண்டாகச் சிதறும் என்பதற்குள் தலையும் உடம்பும் இரண்டாயின. துண்டாகி ஒரு பக்கம் விழுந்த தலையின் வாயில் ஒருவன் தண்ணீர் ஊற்றினான். இரண்டு தடவை பகபகவென்று ஒலித்து மூடிக் கொண்டது. அந்தப் பக்கம் உடம்பு எவ்வளவோ துடித்தது. தலை மட்டும் கண்களை மேலே நோக்கி விரித்து அப்போதே அசையாமல் நின்று விட்டது. துடிக்கும் உடம்பிலிருந்து ரத்தம் சடசடவென்ற பொங்கி வழிந்து சுற்றிலும் தரையில் சிவப்புப் படர்ந்தது. யாரோ ஒரு பையன் சட்டென்று ஓடி ஆடுகளின் கழுத்தில் கட்டியிருந்த ரத்தம் வழியும் பூமாலையைக் கொண்டு வந்து விட்டான். அவன் சும்மாயிராமல் அதை அம்மாசியின் கழுத்தில் சுற்றிவிட்டு 'ஆடு' என்றான். அம்மாசிக்குக் கழுத்தைச் சுற்றிலும் குளிர்ச்சியாக ஆகி அவன் கழுத்திலிருந்தும் ரத்தம் கொட்டி, அம்மாசி பயந்து போய் அங்கிருந்து ஓடினான். அவனைப் போலவே இரண்டொருவர் அப்படியே செய்தார்கள். படுத்துக் கொண்டாலும் எவ்வளவோ நேரம் வரை அதுவே அம்மாசியின் கண்ணில் தெரிந்தது. அதற்குள்ளேயே அவன் பயந்து எத்தனையோ தடவை எழுந்து உட்கார்ந்திருக்கிறான். அன்று இரவெல்லாம் விளக்கு ஏற்றியிருந்தார்கள். வெளி யூர்க்காரர்கள் பெரும்பாலும் வெள்ளைப் போர்வை போர்த்திக் கொண்டு மாரி யம்மன் கோவில் முழுவதும் படுத்திருந்தார்கள். எல்லாமாகச் சேர்ந்து மாரியம்மன் கோவில் வெள்ளை நிறத்தில் ஜொலித்தது.

அன்றிரவு ரயில்வே காங்க்மேன் சித்தப்பா ஓவராக வயிறு நிறைய சோம பானத்தைப் போட்டுக் கொண்டு வந்திருந்தான். அவனுடைய தப்பு அல்ல என்றாலும் அது அவனை அன்றிரவு மிகவும் ஆட்டத் தொடங்கியது. அவனுக்கும் கண்ணை மூடினாலும் பிரளயம் என்று தோன்றியது. அதனாலேயே அவன் கண்ணை மூடாமல் வளைந்து செல்லும் வழியே கையில் பிடித்த கோலை ஊன்றிக் கொண்டு தடுமாறி நடக்கத் தொடங்கினான். அப்படி நடந்து போகும்போது எரியும் விளக்குக் கம்பத்தைப் பார்த்து அவனுக்குக் கோபம் வந்தது. அதை அடித்து உதைத்துக் கோலால் ஜோராக அடித்தான். அங்கே எழுந்த ஓசை சுற்றுப் புறத்தை யெல்லாம் நடுங்க கவைத்தது. அதோடு விடாமல் 'ஆ ஊ' என்று கத்தி அரசாங்கத் தலைவர்களையோ காண்ட்ராக்டர்களையோ, ரயில்வே பாஸையோ, ஒரணா வட்டிக்குக் கடன் கொடுக்கும் ஆதப்பனையோ நினைத்துக் கொண்டு "தூ தேவடி யாள் மகனே, வெள்ளையும் சள்ளையுமாகத் தேசமெல்லாம் சுற்றிப் பெரியவ னாய்ட்டியா, என்னைப் பார்த்து மூக்கை மூடிக்கறியா? நாங்கள் பரதேசிங்க மாதிரி எங்க போனாலும் அங்க தெருவில் வீழ்ந்து கிடப்போம் (ஓ என்று பெரியதாக வாயைத் திறந்து கோவென்று அழுதான். மறுபடியும் உரத்த குரலில் பேச்சைத் தொடர்ந்தான்). உங்க காலை எங்க மேல விடவேணாம். என் பேச்சைக் கேட்டு சிரிச்சிக்கிட்டே பாருங்க! சிரியப்பா சிரி. உனக்குச் சிரிக்கிற காலம்! சிரிக்காம வேற என்ன செய்வே நீ? சிரிடா மகனே, ஏழைகளை வாழ வைக்கறவன் கம்யூ னிஸ்ட்தான். கம்யூனிஸம் வரணும் அப்ப நீ சிரிக்கறது நிக்கணும். அதுவரையில் நீ சிரிச்சிக்கோ. சிரிடா சிரி..."அவ்வளவு அல்லோலகல்லோலத்தை எழுப்பிக் கொண்டு அவன் பேச்சும் அவன் சிரிப்பும் வீதி நிறைய நிறைந்து, வழிந்து அந்தக் குளிர் இரவின் இருளில் மோதின. அந்தப் பேச்சுக்கும் சிரிப்புக்கும் தூக்கம் வராது என்று அம்மாசி பயந்து பயந்து எழுந்து உட்கார்ந்திருந்தான். இப்படி எவ்வளவோ நேரம் நடந்து அப்புறம் சித்தப்பனின் உடம்பு எங்கே விழுந்ததோ எப்படி விழுந்ததோ என்ன கதையோ அவன் பேச்சும் அவன் சிரிப்பும் நின்றன.

* * *

அடுத்த நாள் வந்ததால் அன்று ஊர் கொட்டாவி விட்டபடியே கழிந்தது. எந்தத் திண்ணையைப் பார்த்தாலும் ஜனங்கள் நிரம்பியிருந்தார்கள். அப்படியும் எத்தனையோ பேர் எழுந்திருக்கவேயில்லை. உதாரணம் சித்தப்பா. பகலில் புலி வேஷம் போடுகிறவர்கள் மாரியம்மன் கோவிலுக்கு வந்தார்கள். கவுடரின் வேலை யாள் வந்து, 'கவுடர் வீட்டுக்குத் தேங்காய் வேணுமாம்' என்று சொல்லி, குரியைய்யா 'பறித்துக் கொண்டு போ' என்றதும் அவன் நிமிஷத்தில் மரம் ஏறிப்பறித்துக் கொண்டு போனான். அங்கே வீடுகளில் பெண்கள் நன்றாகத் தலைவாரிக் கொண்டு பூச்சூட்டிக் கொண்டு உள்ளேயும் வெளியேயுமாக நடந்து கொண்டிருந்தார்கள். வயதுப் பையன்கள் அங்கங்கே நடமாடிக் கொண்டிருந்த இளம்பெண்களைச் சீண்டி விட்டு அவர்களிடமிருந்து வசவுகளை வாங்கிக் கட்டிக் கொண்டார்கள்.

மாரியம்மன் கோவிலில் புலிவேஷத்துக்கான தப்பட்டைச் சத்தம் எழுந்து எல்லாரையும் ஒரேயிடத்துக்கு ஈர்த்துக் கொண்டி ருந்தது. எல்லாரும் வரப் போகிற புலிகளை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று புலிவாயில் திறந்து கொண்டது. எல்லாருடைய கண்களும் அங்கேயே மொய்த்தன. ஒரு பெரிய

புலி வாயில் எலும்மிச்சம்பழத்தைக் கவ்விக் கொண்டு உள்ளேயிருந்து வெளியே தாவி வந்தது. வந்ததும் ஜனங்களெல்லாம் ஒவென்று சிதறி நகர்ந்து நகர்ந்து அங்கே ஒரு பெரிய வட்டம் ஏற்பட்டது. அதன் பிறகு நாலைந்து பெரிய புலிகள், கழுதைப்புலி, சிரிக்க வைக்கும் கோடங்கி எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. வந்தவைகளில் ஒரு குட்டிப் புலியும் இருந்தது. எல்லாரும் வந்தபிறகு ஒரு தடவை வரிசையாக நின்று சாமிக்குக் கை கூப்பித் தீர்த்தம் பெற்றுக் கொண்டார்கள். பிறகு அங்கிருந்தே ஆட்டம் ஆரம்பமாயிற்று. கழுதைப்புலி எல்லாரையும் விட ஜோராக பலசாலியாக இருந்தான். அவனுடைய ஆட்டம் சிறந்து இருந்தது. ஆடு வெட்டும்போது விளையாட்டாகக் கத்தி பிடித்துக் கொண்டு நின்றிருந்தானே அவன் தான் அது. அவன் தப்பட்டை ஒலிக்கு ஏற்றபடி கால்அடியெடுத்து வைத்து வந்தான். எல்லாரும் ஒரு பர்லாங் தூரம் நடந்தார்கள். ஆட்டம் தெருவுக்கு வந்தபோது பெண் களும் குழந்தைகளும் திண்ணையிலிருந்து இறங்காமல் உயிரைப் பிடித்துக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஏதாவது புலி அவர்கள் பக்கம் வந்தால் டக்கென்று உள்ளே போய்க் கதவைத்தாள் போட்டுக் கொண்டார்கள். சின்னப் பையன்கள் மட்டும் கொஞ்சம் தொலைவில் இருந்து ஆட்டம் போன இடத்துக்கெல்லாம் தாமும் போனார்கள். அப்படி ஆட்டம் மேலே போய் குடியிருப்புப் பகுதிக்கு வந்து அங்கே சாவடியின் முன்னால் ஆட்டம் நடந்தது. ஆட்டத்தைப் பார்க்க கவுடர், மணியக்காரர் என்றில்லாமல் மேல் ஜாதி முக்கியமானவர்களும் கூடியிருந்தார்கள். அவர் களெல்லாம் ஆட்டக்காரர்களுக்குத் தங்கள் தகுதி அந்தஸ்துக்கு ஏற்ப இனாம் கொடுத்துப் பாராட்டைப் பெற்றார்கள். ஊர் மீது இருள் கவிந்து ஆட்டம் முடிந தாலும் ஊரார் கண்கள் எங்கே போனாலும்—தூங்குவதற்காகக் கண்ணை மூடி னாலும் அல்லது மனைவியின் புடவையை அவிழ்த்து நிர்வாணமாக்கிப் பார்த் தாலும் அந்தப் புலி ஆட்டமே 'டங் டங் டங்கு சக்' தப்பட்டை ஒலியோடு கண்ணில் தெரிந்தது.

தூக்கம் வராததால் நடக்கலாம் என்று வெளியே வந்தார் கவுடர். அவர்கள் வீட்டு வேலையாள் விழித்தே இருந்ததால் கவுடர் வந்ததும் எழுந்து உட்கார்ந்தான். கவுடர் பீடியை வாயில் செருகி தீக்குச்சியைக் கிழித்தார். அந்த வெளிச்சத்துக்கும் அந்த இருட்டுக்கும் அவர் முகம் அவ்வளவு சிகப்பாகத் தெரிந்து மறைந்தது. கவுடர் புகையை இழுத்தபடியே இருந்து பிறகு வேலைக்காரன் பக்கம் திரும்பி "அந்தக் குட்டிப்புலி வேஷம் போட்டானே அந்தப் பையன் யார்?" என்று கேட்டார். வேலைக்காரன், "அதுதான் முதலாளி, அம்மாசி" என்றான். "அம்மாசின்னா?" என்று மறு படியும் கேட்டார். அதற்கு அவன் "அதுதான் முதலாளி, அந்தக் குரியைய்யன் கூடவே அம்மா அப்பா இல்லாம அனாதைப் பையன் ஒருத்தன் இருந்தானே, அவன்தான்" என்றான். கவுடர் அதைக் கேட்டு மிகவும் வியப்படைந்தார். "அவனா? அதற்குள் அவ்வளவு வளர்ந்து விட்டிருக்கிறான்" என்றார். கவுடரின் கண் முன்னால் அம்மாசியின் புலிவேஷம் விதம் விதமாக ஆடிக் கொண்டே வந்தது.

# கதையாசிரியர்களின் அறிமுகம்

**பஞ்செ மங்கேசராவ் (கவி சிஷ்ய)** பிறப்பு: பிப்ரவரி 22, 1874; மறைவு: அக்டோப 25, 1937. தென் கர்நாடக மாவட்டத்தில் சுப்பிரமணிய என்னும் ஊருக்கருகில் உள்ள பஞ்செ முன்னோர்கள் வாழ்ந்த ஊர். மங்களூர் வட்டத்து பண்ட்டவாள பிறந்த ஊர். பி.ஏ., (1904); எல்.டி (1905) பட்டங்கள் பெற்றவர். கன்னடப் பண்டித ராகவும், கல்வித் துறையில் இன்ஸ்பெக்டராகவும், ஆசிரியர் பயிற்சிப் பள்ளியின் தலைமையாசிரியராகவும், கடைசியில் மடிகேரி உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராகவும் பணியாற்றி ஒய்வு பெற்றார். புதுக் கன்ன டத்தை உருவாக்கிய முன்னோடிகளில் ஒருவர்; புதுக் கன்னடத்தில் சிறு கதையின் தந்தை. ராய்ச்சூரில் நடந்த கன்னட சாகித்திய சம்மேளத்தின் தலைவர் (1934). பஞ்செயவர்களின் நூற்றாண்டு விழாவின் போது (1973) ஒரியண்ட் லாங்மன் லிமிடெட் பதிப்பகம், அவருடைய எழுத்துக்கள் அனைத்தையும் தொகுத்து நான்கு பகுதிகளாக வெளியிட்டது

**டாக்டர் மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் (ஸ்ரீநிவாச)** பிறப்பு: ஜூன் 6, 1891, கோலார் மாவட்டம் மாலூர் வட்டத்து மாஸ்தி. இப்போது பெங்களூரில் கவிபுரம் விரிவில் வாழ்ந்து வருகிறார். சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று அங்கேயே சிறிது காலம் ஆங்கில ஆசிரியராக இருந்தார். பிறகு சிவில் சர்வீஸ் தேர்வில் முதன்மையாகத் தேறி, துணைக் கமிஷனர் ஆனார். பெல்காமில் நடந்த கன்னட சாகித்திய சம்மேளத்தின் தலைமை (1929). கர்நாடகப் பல்கலைக்கழகம் வழங்கிய கௌரவ டாக்டர் பட்டம்; சாகித்திய அகாடமியின் பரிசு, சிறுகதைத் தொகுப்புக்காக (1968ம்) ஆண்டின் பரிசு, 1970ல் வழங்கப்பட்டது. அகாடமியின் 'ஃபெலோஷிப்' (1974) அவர் பெற்ற சிறப்புக்களாகும். காவியம், நாடகம், நாவல், விமரிசனம், வாழ்க்கை வரலாறு முதலிய இலக்கிய வகைகளிலும் அவர் தொண்டாற்றியிருக்கிறார்.

**டாக்டர் ஏ.ஆர். கிருஷ்ண சாஸ்திரி (ஸ்ரீபதி)** பிறப்பு: பிப்ரவரி 12, 1890; மைசூர். மறைவு: பிப்ரவரி 1,1968. மைசூர்ப் பல்கலைக் கழகத்தின் பி.ஏ., சென்னைப் பல்கலைக்கழகத்தின் எம்.ஏ., மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் கன்னடத் துறை யின் பேராசிரியர் தலைவராக இருந்து ஒய்வு பெற்றார் (1939-1946). ஐதரா பாத்தில் நடைபெற்ற கன்னட சாகித்திய சம்மேளத்தின் தலைமை (1941), மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் கௌரவ டாக்டர் பட்டம் (1960) சாகித்திய அகாடமியி லிருந்து 'பங்கிம் சந்திர' என்னும் விமரிசன நூலுக்குப் பரிசு (1961) முதலியவை அவர் அடைந்த சிறப்புக்கள். வசன பாரதம், பாஸ கவி, வடமொழி நாடகம், பங்கிம் சந்திர-சில நூல்கள். ஸ்ரீபதியின் கதைகள், அவருடைய ஒரே கதைத் தொகுப்பு.

**அஜ்ஜம்புர சீதாராம் (ஆனந்த)** பிறப்பு: ஆகஸ்ட், 22, 1902; மறைவு: நவம்பர் 17, 1963. அஜ்ஜம்புர முன்னோர்களின் ஊர்; சிவ மொக்க மாவட்டத்து ஸொரப வட்டத்தில் ஆளவட்டியில் பிறந்தார். விலங்கியல் தாவரவியலில் பி.எஸ்ஸி பட்டம்; நெடு நாள் மைசூர் அரசின் பட்டு உற்பத்தித் துறையில் இருந்து, அதைவிட்டு, பிறகு எழுத்தையே தமது தொழிலாகக் கொண்டார். சந்திரக்கிரகண, ஸம்ஸார சில்ப, மாட்டகாதி, ஸ்வப்னஜீவி, ஜோயிரை சௌடி முதலிய கதைத் தொகுப்புக்கள். நாடகம், கட்டுரை, மொழி பெயர்ப்பு முதலிய இலக்கியத் துறையில் பணிபுரிந்திருக்கிறார்.

**டாக்டர் கே.வி. புட்டப்ப (குவெம்பு)** பிறப்பு: டிசம்பர் 29, 1904. சமீபத்தில் மறைந்தார். ஊர்: சிவமொக்க மாவட்டத்துத் தீர்த்தஹள்ளி வட்டத்து குப்பளி. மைசூரின் வாணி விலாசபுரம் 'உதயாவி'யில் வாசம், கன்னடப்பேராசிரிய ராகவும் துறைத் தலைவராகவும் இருந்தார் (1946). பிறகு மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகி (1956-60) ஓய்வு பெற்றார். "ஸ்ரீராமாயணதரிசனம்" என்ற காப்பிய நூலுக்கு சாகித்திய அகாடமிப் பரிசு (1958), பிறகு 1967க்கான ஞான பீடப் பரிசு (1968), ஜனாதிபதியிடமிரந்து 'பத்மபூஷண்' பட்டம் (1958). மாநில அரசிடமிருந்து 'அரசுக்கவி' (1964). கர்நாடகத்தின் மூன்று பல்கலைக் கழகங்களிலிருந்து கௌரவ டாக்டர் பட்டம். மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் 'புரொ பஸர் எமரிடஸ்' பதவி. தாரவாடாவில் நடந்த கன்னட சாகித்திய சம்மேள னத்தின் தலைமை (1959)— அவர் பெற்ற பரிசுகளும் பெருமைகளும். காவியம், நாடகம், நாவல், சிறுகதை, விமரிசனம், வாழ்க்கை வரலாறு முதலிய இலக்கியத் துறைகளில் சுமார் அறுபது நூல்கள் வெளியாகியிருக்கின்றன. சந்நியாசி, நன்னதேவரு—சிறுகதைத் தொகுப் புக்கள்.

**கூதவள்ளி அச்வத்த நாராயண ராவ் (அச்வத்த)** பிறப்பு: ஜூன் 16, 1912, சமீபத்தில் மறைந்தார். சிக்மகளூர் மாவட்டத்து கூதவள்ளி; முன்னோர் சிவமொக்க மாவட்டத்துத் தீர்த்தஹள்ளியைச் சேர்ந்தவர்கள். சிம்லாவில் மிலிடரி என்ஜினீ யரிங்கில் இருந்து, பிறகு மிலிடரி பாக்டரீஸ் எக்ஸ்டென்ஷன் டைரக்டராகி, அப்புறம் காசி இந்துப் பல்கலைக்கழகத்தில் சிவில் என்ஜீனிரிங் 'ரீடர்' ஆக இருந்து ஒய்வு பெற்றார். ஜீவன, ஜயந்தி, நோவு நலிவு; அக்னி சாட்சி, ஹுச்சன ஹெண்டதி, தூரத் காசியல்லி, அபிநயஜகத்து முதலிய 13 கதைத் தொகுப் புக்கள். நாவல், நாடகம், கட்டுரை, சிறுகாப்பியம்-ஆகிய துறைகளிலும் நூல் களை வெளியிட்டிருக்கிறார்.

**எம். சுப்பிரமணியராஜ அரஸு (சதுரங்க)** பிறப்பு: ஜனவரி 1, 1916; மைசூர் மாவட்டத்து ஹுணசூர் வட்டத்துக் கல்லஹள்ளி. அரச குடும்பத்தைச் சேர்ந்தவ ரானாலும் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டார். ஸ்வப்னசுந்தரி, இணிகுநோட்ட, சவதமனெ, மீனின ஹெஜ்ஜே, பங்காரத கெஜ்ஜே, முதலியன சிறுக்தைத் தொகுப்புக்கள். குமார ராம, இலிபோனு- நாடகங்கள். ஸர்வ மங்களா, உய்யாலெ- நாவல்கள். இரண்டு நாவல்களும் திரைப்படமாயின. முதலாவதை அவரே இயக்கினார்.

**பசவராஜ கட்டீமணி** பிறப்பு: அக்டோபர் 5, 1919; சமீபத்தில் மறைந்தார். பெல்காம் மாவட்டத்து கோகாக. தந்தையின் ஊர் அதே வட்டத்து சிரூர். பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டு, ஏழெட்டு தினசரி, வார, மாத இதழ்களில் உழைத்தவர். உஷா, மாத இதழ், முற்போக்கு இலக்கியம் மற்றும் இலக்கியவாதிகளுக்கு முக்கியமான இடம் தந்தது. 1942-போராட்டத்தில் சேர்ந்து 9 மாத சிறைவாசம். மாநில அரசு சட்டமன்ற (எம்எல்சி) பதவியளித்து, இவரது இலக்கியத் தொண்டைக் கௌரவித்தது (1968-73); ஏறக்குறைய 35 நாவல்கள். 'ஜ்வாலா முகிய மேலே' (1951) நாவலுக்கு சோவியத் லாண்ட் நேரு பரிசு (1968) கிடைத்தது. காரவான், ஆகஸ்ட் ஒம்பத்து, ஜோளத பெளெய நடுவே, கலாபிஹூ, ஸைனிகன ஹெண்டதி முதலியன சிறுகதைத் தொகுப்புக்கள். சோவியத் நாட்டுப் பயணம் (1969).

**தளுகின ராமஸ்வாமய்ய சுப்பராவ் (த.ரா.சு.)** பிறப்பு: ஏப்ரல் 4, 1920; சமீபத்தில் மறைந்தார். ஊர்: சித்ரதுர்க்க மாவட்டத்துச் சள்ள கரெ வட்டத்துத் தளகு. சுதந்திரப் போராட்டத்தில் பங்கேற்றுச் சிறைவாசம். ஏறக்குறைய நூறு நூல்கள். அவற்றில் சுமார் எழுபது நாவல்கள் தொட்டில தூகிது, ரூபஸி, கிரிமல்லிகெய நந்தனதல்லி முதலியன கதைத் தொகுப்புக்கள். நாடகம், வாழ்க்கை வரலாறு, மொழி பெயர்ப்பு-பிற நூல்கள். ஒரு குழுவில் ஜெர்மனி சென்று வந்தார்.

**கே.எஸ். நிரஞ்சன (நிரஞ்சன)** பிறப்பு: 1923. சமீபத்தில் மறைந்தார். ஊர்: தென்கர்நாடக மாவட்டத்துக் குளகுந்த. அவருடைய முதல் நாவலான 'விமோசன' ரஷிய மொழியில் பெயர்க்கப் பட்டு வெளியான முதல் கன்னட நூல். 1974ஆம் ஆண்டுக்கான சோவியத் லாண்ட் நேரு பரிசு 'சிரஸ்மரணெ' நாவலுக்குக் கிடைத்தது. ஏழு தொகுதிகளாக வெளியான "ஞா கங்கோத்ரி" (குழந்தைகள் கலைக் களஞ்சியம்)யின் முதன்மை ஆசிரியராக இருந்தார். நூல்கள்: நாஸ்திக கோட்டதேவரு, ஒன்டி நட்சத்திர நக்கிது, அன்னபூர்ணா, ரத்தசரே வாரத ஹூடுக முதலியவை கதைத் தொகுப்புக்கள். அபயாச்ரம, சிரஸ்மரணெ தூரத நட்சத்ர, ரங்கம்மவ வடார முதலியவை நாவல்கள்.

**டாக்டர் பி.ஸி. ராமச்சந்திர சர்மா** பிறப்பு: 1925. பெங்களூர். இளமைக்காலம் பம்பாயிலும் பெங்களூரிலும். பெங்களூரின் சென்ட்ரல் கல்லூரி, லண்டன் பல்கலைக்கழகத்துக் கல்லூரிகளில் கல்விப் பயிற்சி. நூல்கள்: மந்தாரகுஸும, ஏளனே ஜீவ, பௌகாயிது (கதைத் தொகுப்புக்கள்); ஏளு சுத்தின கோட்டெ, ஹ்ருதய கீதே, ஹேஸரகத்தே (கவிதைத் தொகுப்புக்கள்); ஸெரகின கெண்ட, நெரளு (நாடகங்கள்)

**யசவந்த சித்தால** பிறப்பு: ஆகஸ்ட் 3, 1928; வடகர்நாடக மாவட்டத்து ஹனேஹள்ளி. இப்போது பம்பாய், மார்க்கெட்டிங் பகிலாயிட் ஹைலாம் லிமிடெட் நிறுவனத்தின் ஜெனரல் மானேஜர். பி.எஸ்.ஸி (ஆனர்ஸ்) பி.எஸ்.ஸி (டெக்), அமெரிக்க எம்.இ.(கெம்) பட்டங்கள் பெற்றவர். நூல்கள்: ஸந்தர்சன, அபோலின, ஆட்ட (கதைத் தொகுப்புக்கள்); மூருதாரிகளு (நாவல்).

**டாக்டர் ஏ.கே. ராமானுஜன்** பிறப்பு: 1929; சமீபத்தில் மறைந்தார். மைசூர். மைசூர்ப் பல்கலைக்கழகம், புனாவின் டெக்கான் கல்லூரிகளின் கல்விப் பயிற்சி. இந்தியானா பல்கலைக் கழகத்துப் பி.எச்.டி (1963); சிகாகோ பல்கலைக் கழகத்துத் திராவிட இயல் பேராசிரியர். ஹொக்குளல்லி ஹூலில்ல (கவிதைத் தொகுப்பு). ஹளதி மீனு (மொழி பெயர்ப்பு நாவல்); காதெகளு-ஆகியவை கன்னட நூல்கள். The Striders, Relation (கவிதைத் தொகுப்புக்கள்); Speaking of Shiva, The Interior Landscape இன்னும் பிற ஆங்கில வெளியீடுகள்.

**டாக்டர் சாந்திநாத தேசாய்** பிறப்பு ஜூலை 22, 1929. வடகர்நாடக மாவட்டத்து ஹளியாள. பம்பாய் பல்கலைக் கழகத்து எம்.ஏ., பி. எச்.டி பட்டங்கள். நூல்கள்: மஞ்சுகட்டெ, க்ஷிதிஜ, தண்டெ (கதைத் தொகுப்புக்கள்); முக்தி, விக்ஷேப (நாவல்கள்) Experimentation with Language in Indian Writing in English (Fiction) பதிப்புநூல்: Critical Essays in Indian Writing in English, The image of Indian in Western Creative Writing.

**டாக்டர் யூ.ஆர். அனந்தமூர்த்தி** பிறப்பு: டிஸம்பர் 21, 1932. ஊர்: சிவமொக்க மாவட்டத்து தீர்த்தஹள்ளி வட்டத்து பேகுவள்ளி. மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் எம்.ஏ (ஆங்கிலம்), பர்மிங் ஹாமில் ரிச்சர்டு ஹாகர்ப் தலைமையில் பி.எச்.டி. மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் மாநஸகங்கோத்தி பட்ட மேற்படிப்புத் துறையில் ரீடர் (ஆங்கிலம்). ஹோமி பாபா ஃபெலோஷிப் பெற்றார் (1972-74). அயோவாவில் நடந்த World Writers Meet, இல் பேராசிரியராக 6 மாத காலம் அழைப்பின் பேரில் சென்றிருந்தார். நூல்கள், எந்தெந்து முகியதகதெ, பிரச்னெ, மௌனி (கதைத்தொகுப்புகள்), ஸம்ஸ்கார (ஜனாதிபதியின் பரிசு பெற்ற திரைப்படக் கதை), பாரதீபுர (நாவல்கள்), பிரக்ஞெ மத்து பரிஸர, ஸன்னிவேச (விமரிசன நூல்) உள்ளிட்ட பல. சாகித்திய அகாடமியின் தற்போதைய தலைவர். ஞானபீட விருது பெற்றுள்ளார்.

**ராகவேந்திர நாராயண காஸநீஸ** பிறப்பு: மார்ச் 2, 1933; பீஜாப்பூர் மாவட்டத்து இண்டி. பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ (ஆங்கிலம்), டிப்ளமா இன் லைப்ரரியன்ஷிப்

**கே. சதாசிவ** பிறப்பு: மே 1934 சிக்மகளூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர். மைசூர்ப் பல்கலைக்கழகத்தில் எம்.எஸ்.ஸி (விலங் கியல்). நல்லியல்லி நீரு பந்திது (1957), அபரிசிதரு (1971) கதைத் தொகுப்புக்கள். கடைசித் தொகுப்புப்கு 1972ல் மாநிலப் பரிசு கிடைத்தது. நல்லியல்லி நீரு பந்திது- இதனை பூனா ஃபிலிம் இன்ஸ்டியூட் திரைப்படமாக்கியிருக்கிறது.

**டி.ஜி. ராகவ** பிறப்பு: மார்ச் 28, 1935. கர்நாடகப் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ., (ஆங்கிலம்-மொழியியல்) 1967. 'விஸ்வ கர்நாடக' தினசரியில் துணையாசிரியராகவும் (1955) மைசூரில் ஜே.எஸ்.எஸ் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகவும் இருந்தார் (1967-71). ஜ்வாலெ ஆரிது-கதைத் தொகுப்பு.

**பி.லங்கேஷ்** பிறப்பு: 1935. சிவமொக்க மாவட்டத்து கொனசு ஹள்ளி. மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் எம்.ஏ. (ஆங்கிலம்). நூல்கள்: செரயநீரலு கெரெகெ

செல்லி, நானல்ல, உமாபதிய ஸ்காலர்ஷிப் யாத்ரெ (கதைத் தொகுப்புக்கள்), பிச்சு, தலமாறு (கவிதைத் தொகுப்புகள்). பிருகு (நாவல்), ஏளு நாடககளு, ஸங்க்ராந்தி (நாடகங்கள்), ப்ரஸ்துத (விமர்சன நூல்) முதலியன.

**பூர்ண சந்திர தேஜஸ்வி** பிறப்பு: 1939 மைசூர். மைசூர்ப் பல்கலைக் கழகத்தின் எம்.ஏ., (கன்னடம்) பட்டம் (1961). நூல்கள்: ஹுலியூரின ஸரிஹத்து, அபசூரின பேர்ஸ்ட் ஆபீஸ் (கதைத் தொகுப்புக்கள்); ஸ்வரூப (நாவல்), எமன ப்ரஸ்னெ (நாடகம்), ப்ருஹன்னளெ சோமுவின் ஸ்வகத லஹரி (கவிதைத் தொகுப்பு), வியக்தி விஸிஷ்ட சித்தாந்த (தத்துவம்)

**ஜி.எஸ். சதாசிவ** பிறப்பு: 1940: சிவமொக்க மாவட்டத்து ஸாகர வட்டத்தின் குண்டு மென. மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் எம்.ஏ (அரசியல்) பட்டம். முகுவி காகி பந்தவனு, துணுதுகளு கதைத் தொகுப்புகள்

**ராஜசேகர நீரமான்வி** பிறப்பு: மார்ச் 5, 1942. ஊர்: ராய்ச்சூர் மாவட் டத்து நீரமான்வி. கர்நாடகப் பல்கலைக்கழகத்தின் எம்.எஸ்.ஸி. (அப்ளையட் ஜியாலஜி)

**வீணா எலபுர்கி** பிறப்பு: பிப்ரவரி 22, 1945; தாரவாடா. கர்நாடகப் பல்கலைக் கழகத்தின் எம்.ஏ, (ஆங்கிலம்), டிப்ளமா இன் டீச்சிங் பட்டம். இப்போது தார்வாடா கர்நாடகக் கல்லூரியில் ஆங்கிலத்தில் ஸீனியர் லெக்சரர். முள்ளுகளு, கொனயதாரி— கதைத் தொகுப்புகள்.

**ஸ்ரீகிருஷ்ண ஆலனஹள்ளி** பிறப்பு: 1945; சமீபத்தில் மறைந்தார். மைசூர் மாவட்டத்து ஹெக்கடதேவன கோட்டெ வட்டத்து ஆலன ஹள்ளி. மைசூர்ப் பல்கலைக் கழகத்தின் எம்.ஏ (கன்னடம்) பட்டம். மாநில அளவில் 1973ல் இரண்டாம் பரிசு பெற்ற, கிரீஷ் கர்நாட் இயக்கிய 'காடு' திரைப்படம் இவருடைய 'காடு' நாவலைத் தழுவியது. மண்ணினகாடு (கவிதைத் தொகுப்பு) மாநிலப் பரிசு பெற்றிருக் கின்றது. தப்த, ஃபீனிக்ஸ்- கதைத் தொகுப்புகள். அவலோகன, கிராமாயண சமீட்செ- பதிப்பித்த நூல்கள். இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வெளியான 'சமீட்சக' இலக்கியப் பத்திரிகையின் ஆசிரியராகவும் வெளியிடுபவராகவும் பணிபுரிந்தார் (1965-66)

**தேவனூர மஹாதேவ** பிறப்பு: 1949; மைசூர் மாவட்டத்து நஞ்சன்கூடு வட்டத்து தேவனூரு. மைசூர் பல்கலைக்கழகத்து எம். ஏ (கன்னடம்) பட்டம் (1974). 'நர' பத்திரிக்கையின் ஆசிரியர் (1972-74); தியாவனூரு- கதைத் தொகுப்பு (1973). காந்தி மத்து மாஒ—மொழி பெயர்ப்பு.

